# புத்துயிர்

லியோ டால்ஸ்டாய்

மொழிபெயர்ப்பு

"வாணீ சரணன்"

தமிழ்ச்சுடர் நிலையம்

சென்னை-5.

# அறிமுகம்

ருஷ்ய ஆசிரியர்களில் நம்மவருடன் ஆத்மீகத் துறையில் நெருங்கிப் பழகியவர் லியோ டால்ஸ்டாய். (1828—1910) நம் குருநாதர் மகாத்மா காந்தியும், தமது ஐரோப்பிய குருதேவர் என்று மதிக்கத்தக்க இவரை, ருஷ்ய மஹாத்மா என்றே சொல்லலாம். ருஷ்யப் புரட்சித் தலைவர் லெனின், டால்ஸ்டாயைக் குறித்து 'வானத்திற்கும் பூமிக்குமாக வளர்ந்தோங்கிய தலைவர், ருஷ்யப் புரட்சியை பிரதிபிம்பித்த நிலைக்கண்ணாடி! உலகத்தின் கலைச் செல்வமே இவரால் பொங்கி ஒருபடி உயர்ந்தேறி இருக்கிறது' என்றார். இவர் எழுத்துக்களெல்லாம் சக்திப் பெருங் குன்றம். அக்குன்றின் சிகரம் போன்றது 'புத்துயிர்' அவருடைய வாக்கு புடம்போட்ட சொக்கத் தங்கம் என்று விமர்சகர்கள் ஏகமனதாகப் புகழ்ந்திருக்கிறார்கள். மஹான் டால்ஸ்டாயினுடைய வசன நடை அவ்வளவு வேலைப்பாடு கொண்டது. சிற்பியைப்போல அவர் வாக்கியங்களைச் செதுக்கி வைத்து சலாகை வெருகிட்டு வேலைசெய்து வெற்றி பெற்றிருக்கிறார். அவருடைய எழுத்துக்களில் சரியான வார்த்தை, சரியான இடத்தில், உடம்பிசத்தில் கல்போலப் பொருந்தி அமைந்திருக்கும். வார்த்தையின் மூர்ச்சனை ஸ்தானத்தை அறிந்து, அதை முழு அர்த்த புஷ்டியுடன் இடமறிந்து பிரயோகம் செய்வதில் அவர் நிகரற்ற தேர்ச்சி பெற்றவர். டால்ஸ்டாய் பதித்திருக்கும் ஒரு வார்த்தையை எடுத்துவிட்டு மற்றொரு வார்த்தையை அவ்விடத்தில் வைக்க முடியாது. கம்மல் கட்டிடத்தில் வைரம் அமைந்தது போல இருக்கும் சொற்களெல்லாம். ருஷ்ய இலக்கிய மன்னர்களின் 'சாம்ராட்' என்று அவரைப் புகழ்கிறார்கள். அதாவது அவருக்குப் பின் வசன நடையை—பாஷையையே—எவரும் அதற்கு மேற்பட்ட சிறப்புடன் அலங்கரிக்க முடியாது என்றுதான் அர்த்தம்—ஆகையால் அவருடைய நாவல்களும் சிறு கதைகளும் கட்டுரைகளும அதிக நீளமாயினும் வாக்கியச் செட்டு கொண்டவையாகும். நடைவன்மையும் கருத்து உருக்கமும் அவருடைய மேதையின் இரு சிறகுகள். டால்ஸ்டாய் நாவல்கள் எல்லாவற்றிலுமே அடிப்படை ஆதாரமாக நின்று விளங்குவது, முக்கியமாக மனோ தத்துவ ஆராய்ச்சி என்று சொல்லலாம். மனித வர்க்கத்தின் மனோ நெகிழ்ச்சிகளில் உள்ள போக்குகளை நடை உடை பாவனைகளில் பார்த்துப் பார்த்து அதிசயம் கொள்கிறார்—அவைகளின் நுட்பமான நூல் பிரிவுகளைப் பிரித்து அலசி ஆராய்ந்து பார்க்கிறார்; பார்ப்பதுடன், பார்த்ததை பார்த்தவாறே கொஞ்சம்கூட பொருள் குன்றாமல் இலக்கிய மெருகுடன் பிறருக்குச் சொல்கிறார். இந்தச் சொல்லின் வேகம்தான் அவருடைய நாவல்களில் முதலிலிருந்து

முடிவுவரை, வாசகர்களுக்கு ஒரு இடைவிடாத திகைப்பாகவும், தித்திப்பாகவும் இருக்கிறது. இவருடைய முப்பெரும் காப்பிய நவீனங்களில் 'புத்துயிர்' என்ற இந்த நாவலுக்குத்தான் முதன்மை ஸ்தானம் என்று பல விமர்சகர்கள் எழுதியுள்ளார்கள். பொது உடைமைக் கொள்கைகளை விவரிக்கும் எத்தனையோ நவீனங்கள், ருஷ்யாவில், வெளிவந்துள்ளன. அவைகளெல்லாம் வெறும் பிரசார நூல்களாகத்தான் கருதப்படுகிறது. மஹான் டால்ஸ்டாயின் 'புத்துயிர்' தான் மேற்படி நவீனங்களுக்கு மூலக் கரு. கதையின் ஜீவனாக வரும் நிக்லியுடாவ் என்கிற பாத்திரத்தின் மூலம் நிலப்பங்கீட்டு முறையை புகுத்தி இன்றைய ரஷ்ய சமுதாயத்தின் தோற்றத்தை காட்டியிருக்கிறார். கதையைப் படிப்பவர்களுக்கும் அது விளங்கும்.

நன்மை தீமை என்ற இரண்டும் மனித சுபாவத்தின் இரண்டு அம்சங்களான போதிலும் தீமை எக்காலத்திலும் தனித்து நிற்க முடியாது. நன்மை பெரியது! தீமை சிறியது; தீமையை பெரிதாக்கினால் ஆத்ம நாசம்தான் என்பது காடுஷா நிக்லியுடாவ் இவ்விருவருடைய கதையினின்று கண்டறியலாம். காடுஷாவைத் துறந்தபோது நிக்லியுடாவின் மனச்சுமையாய் நின்ற விபசாரப் பிரச்னையும் மடிந்துவிடுகிறது. காடுஷாவின் செய்வினை அவனை விடவில்லை—ஒன்றின் செயல் மற்றொன்றை பாதிக்காமல் விடாது. இரண்டுமே தனியாக்கப்படுவதும் இயலாத காரியம். மனிதன் ஒரு கர்மத்தை செய்தானால் அதன் பயனை அவன் அனுபவிக்காமல் தவிர்க்க இயலாது. நிக்லியுடாவின் தீச்செயல்களின் பயனை காடுஷா அனுபவிக்காமல் தப்ப முடியாது—அதிலிருந்து தப்ப அவன் பலப்பல உருமாற்றத்தை வாழ்க்கையில் ஏற்படுத்திக் கொண்டான். அது மனித வாழ்க்கையில் அவர்கள் தலையில் சுமத்தப்பட்டிருக்கும் நன்மை தீமைகளின் பலன் என்ற சுமையின் இரட்டிப்பு வேகத்துடன் அவனை அமுக்கி நசுக்கியது. ஆனால் நிக்லியுடாவின் வீழ்ச்சி (வெற்றி) மகத்தானது. அது மனித சுபாவத்தின் வீழ்ச்சியாகும். அத்தகைய மாபெரும் வீழ்ச்சிகளை நம் நாட்டின் காவியங்களிலேதான் காணலாம்.

இத்தகைய ஆழ்ந்த உயிர்க்கருத்துக் கொண்ட இந்த (Resurrection) 'புத்துயிரி'ன் கதையை இங்கே சுருக்கிச் சொல்வதென்பது அசம்பாவிதமாகும்—நாவல் முழுவதையுமே மூலநூலின் சுவை பூராவையும் மொழி பெயர்ப்பில் கொண்டுவருவது மிகவும் கஷ்டம். அதிலும் மஹான் டால்ஸ்டாயின் நடையை அதே சாயலுடன் தமிழில் கொடுப்பது எளிதன்று. அவருடைய காவிய ரஸனையுடன் கூடிய வார்த்தைகளுக்கு நிகரான வார்த்தைகளை மற்றொரு பாஷையில் பொறுக்கி பிணைப்பது என்பது மிகவும் சிரமமான காரியம்—ஆயினும் கூடியவரையில் மூல ஆசிரியரின் கருத்து மங்காமலும் நடை சீர் குலையாமலும் 'புத்துயிரி'ன் மொழி

பெயர்ப்பை செய்து முடித்திருக்கிறார் நண்பர் K. M. ரங்கஸ்வாமி—(வாணீசரணன்). ருஷ்ய மூலத்தை தெரிந்துகொள்ள அகராதியின், துணையையும், ஆங்கிலத்தில் வெளிவந்துள்ள மூன்று, நான்கு மொழி பெயர்ப்புகளை ஒட்டும் இம்மொழி பெயர்ப்பு வெளியிடப்பட்டிருக்கிறது. இது அப்பட்டமான மொழி பெயர்ப்பு—மஹான் டால்ஸ்டாயின் நூல்களில் முக்கியமாக அன்னாகரீனா, புத்துயிர், போரும் அமைதியும், ஆகிய மூன்றையும் தமிழில் தந்துவிடவேண்டும் என்பது எங்கள் பேரவா. ஏற்கெனவே 'அன்னாகரீனா'வை படித்து ரஸித்த தமிழன்பர்கள்முன் இந்த புத்துயிரையும் சமர்ப்பிக்கிறோம்,—இந்த வேலையை யாராவது எப்பொழுதாவது செய்யவேண்டியதுதானே? இத்தகைய நூல்கள் தமிழில் இருக்க வேண்டியது அவசியமல்லவா? மொழி பெயர்ப்பே ஒரு முறையில் கடினமான இலக்கிய வேலை. அது முதல் நூல் எழுதுவதைக் காட்டிலும் அதிகமான தொல்லை கொடுப்பது. சீமை ஓட்டை பிரித்துவிட்டு கீற்று வைக்கும் வேலை போன்றது. ஒரு கட்டுக்கோப்பைக் கலைத்து மற்றொரு கட்டுக் கோப்பை ஏற்றுவதில் அடிக்கு அடி நிர்ப்பந்தம். எல்லைக் கோட்டைத் தாண்டினால் மொழி பெயர்ப்பில்லை, வியாக்யானம்! தாண்டாமல் வார்த்தைக்கு வார்த்தை போட்டால் கருத்து விளங்குவதில்லை; இவைகளின் நடுவே நீந்தி கரையேறி பூரண வெற்றி யடைந்திருக்கிறார். எங்கள் மொழி பெயர்ப்பாசிரியர் வாணீசரணன் என்பது இதைப் படிக்கும் ரசிகர்களுக்கு விளங்கும்.

இந்த புத்தகத்து அறிஞர், பேராசிரியர் ரா. ஸ்ரீ. தேசிகன் அவர்கள் ஆராய்ச்சி முன்னுரை ஒன்று மனமுவந்து எழுதி யளித்துள்ளார்கள். அவர்களுக்கு என் நன்றி உரியதாகும்—நவபாரத் அச்சகத்தைச் சேர்ந்த நண்பர் ஸ்ரீ. சீனிவாசமூர்த்தி அவர்கள் புத்துயிரின் அச்சுப் பிழைகளை களைந்துதவியதற்கு எத்தனை நன்றி பாராட்டினாலும் தகும். கடைசியாக ரசிகர்களுக்கும் எங்கள் நன்றி உரியதாகும்.—'அன்னாகரீனா,' 'புத்துயிர்' இரண்டையும் தமிழில் படித்துவிட்டு எழுதப் போகும் நண்பர்களுக்கு ருஷ்ய முனிவரின் மற்றொரு காவிய நவீனமான 'போரும் அமைதியும்' என்ற நூலை அளிக்க காத்திருக்கிறோம்.

அ. கி. கோபாலன்

# முகவுரை

அருகு பருத்தொழுகும் ஓர் அந்திப் பொழுது: செக்கர் வானத்தின் பவளநிறச் செல்வம் எங்கும் சிதறிக் கிடக்கின்றது. அமைதி வெள்ளம் வழிந்தோடும் அந்தப் புனிதமான பொழுதில் ஒரு பெண்—விபசாரக் குற்றஞ் சாட்டப்பட்ட பெண்—அலங்கோலமாய் நடுத்தெருவில் நிற்கின்றாள். இகழ்ச்சியைக் குறிக்கும் விரல்களால் சுட்டிக் காட்டியபடியே பலபேர்கள் அவளைச் சூழ்ந்து நிற்கின்றனர். நிலை தடுமாறி நிற்கும் உலகத்தின் சோக முகில் முகத்தில் படரவும், அதன் பாவச்சுமைகள் உள்ளத்தின்மீது விழவும், அன்பின் வடிவாய் ஒரு பெரியவர் காட்சி அளிக்கின்றனர்.

"பெரியோர்களே! எவர் உள்ளத் தூய்மை உள்ளவரோ, அவர் அந்தப் பெண்ணின்மீது முதற்கல்லை எறியலாம்" என்று மொழிந்தார். ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் உள்ளத்தைத் துருவி ஆராயத் தொடங்கினர். அகமனத்தில் துயின்று கொண்டிருக்கும் நாகமனைய காட்சிகளும்—பேய்க் கூச்சல்களும் மேற்பரப்பைக் கிழித்துக்கொண்டு வந்தன. 'இத்தகைய வெறும் நாகமா எங்கள் மனம்' என்று தங்களுக்குள்ளேயே முணுமுணுத்துக் கொண்டு ஒவ்வொருவரும் அவ்விடம் விட்டு மெல்ல அகன்றனர். இதற்கிடையே விண்ணைக் கணக்கிலா மீன் கணங்கள் போர்த்துவிட்டன. அம்மாசறு காட்சியோனும் அந்த விபசாரியுந் தான் அங்கே எஞ்சி நின்றனர்.

'அம்மணி, இனி அத்தகைய குற்றத்தைச் செய்யாதீர்கள். குற்றஞ் செய்யாதவர்கள் உலகிலில்லை. அக்குற்றங்களுக்கும் பிராயச் சித்தமுண்டு, உய்விடமுண்டு. கவலைப்பட வேண்டாம். அன்பு நீராலும், ஆண்டவன் பேரருள் வெள்ளத்தாலும் உள்ளக் கோயிலைக் கழுவிப் புனிதமாக்கலாம். ஒவ்வொவரும் மலம் நிறைந்த உயிரை வெள்ளுயிராக்க முடியும்' என்று அன்பு ததும்பும் மொழிகளில் ஆறுதல் சொல்லி அனுப்பினார் அவ்வுள்ளத் தூயோன்.

அம்மணி ஒரு பெரிய பாரம் மனத்தைவிட்டு நீங்கினதுபோல மெல்ல அகன்றனள். இருள் சூழ்ந்த அவள் உள்ளத்தில் ஒரு புதிய ஒளி உதயமாயிற்று. வறண்ட அவள் மனத்தில் புதிய

தொரு வாழ்க்கை தளிர்விடத் தொடங்கிற்று. இக்கருத்தைத் தான் டால்ஸ்டாயின் புத்துயிரில் (Resurrection) ஒரு சிறந்த நாவலாக விரியக் காண்கின்றோம்.

தெரிந்தோ, தெரியாமலேயோ, விபசாரக் குற்றம் புரிந்த மனிதர்களுக்கோ, மாதர்களுக்கோ உய்விடமுண்டு என்று ஆதி கவி வால்மீகி கூறிவிட்டார். அகலிகை அறியாது குற்றத்தைச் செய்தாள்; அதனால் அவள் கல்லாய்ச் சமைந்தாள். இராகவன் பாதங்கள் பட்டதும் அவள் உயிர் பெற்றெழுந்தாள் என்று தம் சித்திரத்தைத் தீட்டி முடிக்கின்றார்.

தெரிந்தே குற்றம் புரிந்தவர்கள் உய்ய முடியுமா? என்ற கேள்வியை எழுப்பி அதற்குப் பதிலும் வால்மீகி தருகின்றார் தம் அழியாச் சித்திரத்தில். அகலிகை கல்லாய்ச் சமையவில்லை; ஊண் உறக்கமின்றி கடுந்தவம் புரிகின்றாள். மனத்திலுள்ள மாசெல்லாம் ஞானத்தீயில் வெந்து சாம்பலாய்ப் போகின்றன. உள்ளத்தில் எழுந்த அந்தப் புனித ஞானத் தீ அவள் முகத்தில் ஓர் அமானுஷ்யமான ஒளியாய்ப் பரவுகின்றது. தன் பண்டைய வாழ்க்கையை ஒரு தனித்த நிலையில் நின்று பார்க்கும் ஆற்றலும் அவள் மனத்தில் திரண்டெழக் காண்கின்றாள், இந்த வீர வாழ்க்கையை உணர்ந்த தெய்வமும் அவள் காலில் விழுகின்றது. கௌதமன் புதியதோர் அகலிகையை மீண்டும் மணக்கின்றான். விண்ணில் ஒரு பெருந் திருவிழா நடக்கின்றது. ஓர் ஆத்மா உய்ந்தால் விண்ணில் தேவ துந்துபிகள் முழங்காமல் என்ன செய்யும்! விண்ணவர் மலர் மழையைப் பெய்யாமலிருப்பார்களா? இந்தச் சுருதியில் வால்மீகியின் படம் பேசுகின்றது. எத்தனை நூற்றாண்டுகளுக்குமுன் இப்பெரிய கருத்தை ஒரு காப்பியத்தில் அவர் அமைத்து விட்டார் பாருங்கள்!

டால்ஸ்டாய் தந்த புத்துயிரின் நயங்களை ஆராய்வோம். டால்ஸ்டாய் ருஷிய நாட்டின் இலக்கிய உலகத்தில் ஒரு மகாமேருவின் சிகரத்தைப் போலக்காட்சி அளிக்கிறார். துர்கானிவ், டாஸ்டஎவ்ஸ்கி, டால்ஸ்டாய்—இவர்களை நாம் மறக்க முடியாது. டால்ஸ்டாய் இலக்கிய உலகத்தில் அமைத்திருக்கிற பிரம்மாண்டமான அசுர சிருஷ்டிகளைக் கண்டு வியந்து பேருவை கிளர்ந்தெழக் கைகளை ஆட்டிக் கொண்டு 'எங்கள் டால்ஸ்டாய் கலைக் கடவுள், எங்கள் டால்ஸ்டாய் ஒரு தெய்வத் தச்சன்.' என்று பீட்டர்ஸ்பர்க்கு முழுவதும் மெய்ம்மறந்து டாஸ்டஎவ்ஸ்கி சுற்றித் திரிந்தார் என்றால் டால்ஸ்டாயின் பெருமையை சாற்றவும் வேண்டுமோ?

போரும் அமைதியும் (War and peace) 'அன்னகரினின்ன' புத்துயிர் (Resurrection)—இந்நாவல்கள் டால்ஸ்டாயின் தெய்வச் சக்தியை உலகங் கேட்க முரசடிக்கின்றன. ஒவ்வொரு நாவலிலும் தம் அனுபவமாம் செல்வத்தை அப்படியே அவர் கொட்டியிருக்கிறார். போரும் அமைதியில் தோன்றுகிற ஆண்டிரு, பியரி; அன்னகரினின்னவில் காட்சி அளிக்கிற லெவின்; புத்துயிரில் சோகவடிவாய்த் திகழ்கிற நிக்கிலியுடாவ்—இப்பாத்திரங்கள் யாவும் டால்ஸ்டாயின் உருவங்கள் தாம் என்று இயம்பினல் மிகையாகாது. டால்ஸ்டாய் எழுதின ஒவ்வொரு வரியும் அவருடைய முதிர்ந்த அனுபவ முத்திரை பெற்று விளங்குகின்றது.

நிக்லியுடாவ் மனம் நைந்து உருகுகிற நிலை டால்ஸ்டாயின் மனோநிலையை ஒக்கும் என்பதில் சந்தேகமில்லை. சைபீரியாவுக்குப் போகும்பொழுது உண்மையாகச் சில கைதிகள் கடும் வெப்பந் தாங்காமல் மாண்டனர். இந்தச் செய்தி 'புத்துயிரில்' தக்கதொரு சித்திரமாய் அலர்கின்றது. மேலும் டால்ஸ்டாய் எடுத்துக் கொண்ட விஷயமும் வாழ்க்கையில் நடந்ததொரு விஷயமே. அன்னடோவ் பியபோரவிச்கோவி என்ற நியாய நிபுணர் டால்ஸ்டாயின் குடும்பத்தோடு நெருங்கிப் பழகின ஒரு நண்பர். அவர் பீட்டர்ஸ்பர்க்கில் நீதி மன்றத்தில் நடந்த ஒரு வழக்கைச் சொன்னர். ஒரு விபசாரி திருட்டுத் தனத்திற்காகக் குற்றஞ் சாட்டப்படுகிருள். அவளை முன்பு கெடுத்த ஒரு கனவானே அவளுக்கு முன்பு ஒரு ஜூராராக வருகின்ருன். அவள் மனத்தில் ஒரு பெரும் உணர்ச்சிப் புயல் அடித்திருக்க வேண்டுமென்று அந்த நிபுணர் சொன்னர். இதைக் கேட்ட டால்ஸ்டாய் பெருஞ் சிந்தையில் ஆழ்ந்தார். ஒரு நினைவுப் பாதை அவர் முன் விரிந்தது. தாம் புரிந்த தீச்செயல்கள் கோரமான பாவங்கள் சிற்பறின் பொல்லா ஒழுக்குகள், எல்லாம் அவர் முன் ஒன்றன்பின் ஒன்ருய் எழுந்தன. தம் மனத்தகத்தை விரிந்த ஒரு நரகத்தின் ஆழத்தை அவர் அளந்தார். அம் வெம் நரக வேதனைக்கு உருக்கொடுத்தார். அந்த வேதனையின் விளைவே புத்துயிராகும். வாழ்க்கையில் நடந்த சம்பவத்தில் அந்தப் பெண் உயிர் துறக்கின்ருள். இந்தப் புத்துயிரில் காடுஷாவின் மனம் சுடு துயரால் தூய்மை அடைகின்றது. ஸைமன்ஸன் என்னும் அரசியல் கைதியால் இவர் நல்ல கதிக்கு வரக்கூடும் என்ற நினைப்பில் தான் நிக்லியுடாவ் அவளைப் பின் தொடர்வதை நிறுத்துகின்ருன். தான் செய்த குற்றத்திற்கு அவன் அடைந்த வேதனையும், அவன் பட்ட இன்னல்களும் கல்லையும் கனிவிக்கும் என்பதில் யாதொரு

ஐயமுமில்லை. கண்களில் நீர் மல்கவே அவனைச்சுற்றி யெழும்பல சோகச் சித்திரங்களை நோக்குகின்றோம். கண்ணீரை எழுப்பும் பல சந்தர்ப்பங்களைக் காட்டும் இடங்களுமுண்டு. முதலிலேயே மேல் வரும் விளைவைக் குறித்துவிட்டார்.

இருள் சூழ்ந்த கடுங்குளிர் வேளையைத் தருகிற காடுஷா வாழ் விலும், ஒரு வசந்த கால வைகறையாமும் அமையும் என்றதைச் சுட்டுகிற முறையில் இளவேனிற் காலச்சித்திரம் தோன்று கின்றது. சிறை வாசத்தின் கொடுமையையும் கோரத்தையும் வசந்தகால வனப்பு அதிகப்படுத்துகின்றது. சாதாரணக் கலை ஞன் தன்னுடைய உணர்ச்சிச் சாபத்தை இயற்கைமீது ஏற்றி யிருப்பான்; ஆனால் டால்ஸ்டாய் கையாளுகிற ஆற்றல் வேறு. மனிதனுக்கு நிகழும் எத்தனையோ காட்சிக்கு நடுவிலேயும் இயற்கை அன்னையின். புன்முறுவல் மாறுகிறதில்லை — மாய்கிற தில்லை. புண்பட்ட மனித உள்ளம் அத்தகைய எழிலில் தஞ்சம் புகுகின்றது என்ற பேருண்மையைப் பல இடங்களில் அவர் காட்டி யிருக்கிறார். குற்றம் நிறைந்த ஒரு மனிதன் இன்னொரு மனிதனைக் குற்றவாளியாகக் கருதும் பேதைமையை நன்கு காட்டி யிருக்கிறார். காடுஷா எந்தக் குற்றத்தைப் புரிந்தாளோ, அதே குற்றத்தைப் புரிய வேகமாய் நியாயாதிபதி விரைவாய்த் தீர்ப்புச் சொல்ல முயலுகின்றார். மேலும் இன்னொரு விஷயம் இங்கு நோக்கத் தகுந்தது. நீதித்தலத்தில் காடுஷாவை பார்த்த மாத்திரத்தில் நிக்லியுடாவ் மனத்திரையில் விரிந்த பற்பல காட்சிகளைக் கொண்டு இவர்கள் இருவருடைய பண்டைய வாழ்க்கையை நாம் உணர முடி கின்றது. இது டால்ஸ்டாயின் கலைப்பண்பையும் ஆற்றலையும் காண்பிக்கிற தன்றோ?

ஏழைக் குடியானவர்கள், செல்வம் மிகுந்த மிராசுதார்கள், நியாயத்தைத் திரிக்கும் வக்கீல்மார்கள், நீதிநெறியில் நிற்கத்தகுதி யற்ற நீதிமன்றத் தலைவர்கள், உண்மை ஞான ஒளி அறியாத பாதிரிமார்கள், சுருங்கக்கூறுமிடத்து உலகத்தில் காணப்படுகிற பல திறப்பட்ட மக்கள் யாவரையும் உள்ளபடி சித்தரிக்கிற ஆற்றல் டால்ஸ்டாயிடம் உண்டென்பது உலகம் அறிந்த விஷயமே.

'போரும் அமைதியும்' என்ற நூலில் அளப்பரும் வாழ்க்கைக் கடல் அப்படியே விரிந்து அலை மோதிக் கிடக்கின்றது. அன்னா கரினின்னாவில் தோன்றும் சோகச் சித்திரம் நம் மனத்தைத் தொடாமற் போகாது. இவ்விரு நாவல்களில் காணப்படும் கலைப் பண்பு புத்துயிரிலும் எழுந்து ரீங்காரஞ் செய்யாமலில்லை.

'புத்துயிர்' என்ற நாவல் ஏசுநாதர் அருளிய மலை உபதேசத்தின் விரிவுரையோ என்று சொல்லும்படி அமைந்து கிடக்கின்றது.

திரு. வாணிசரணன் இவ்வரிய நூலை மொழி பெயர்த்துத் தந்திருக்கிறார். ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழியில் மூலத்தின் சுவை, அழகு, காம்பீரியம், சொல்லோவியத்தின் வனப்பு—இவை யாவும் குன்றாதபடி அமைப்பது சாதாரணக் காரியமன்று. ஆசிரியர் பொறுமையோடு இந்தத் துறையில் இறங்கிச் செய்திருக்கும் பெரும் முயற்சியைத் தமிழுலகம் போற்றாமற் போகுமோ? ஆசிரியர் ஓரளவில் மொழிபெயர்ப்பில் வெற்றி பெற்றிருக்கிறார் என்றுதான் சொல்லவேண்டும்.

தமிழ்ச் சுடர் நிலையத்துப் பதிப்பாசிரியர் திரு. அ. கி. கோபாலனவர்கள் அன்னாகரினினாவை உலகத்துக்கு வழங்கினார். 'புத்துயிரை' இப்பொழுது வெளியிடுகின்றார். 'போரும் அமைதியும்' என்ற நூலை வெளியிடுவதற்கான முயற்சிகளையும் செய்து வருவதாகத் தெரிகின்றேன். அவருடைய கனவு, லட்சியம், முயற்சி இவை யாவும் தக்க உருவெடுக்குமாறு எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகின்றேன்.

திருவல்லிக்கேணி
19—10—'52

ரா. ஸ்ரீ தேசிகன்.

# மொழி பெயர்ப்பைப் பற்றி...!

தமிழில் நவரஸமான நாவல்களும் கதைத் தொகுதிகளும் வெளிவந்து கொண்டிருக்கும் இந்த சமயத்தில் இந்த மொழி பெயர்ப்புக்கு அவசியம் இருக்கிறதா? இருக்கிறது என்று தோன்றியதால்தான் தமிழ்ச்சுடர் நிலையத்தாருக்கு இதை மொழி பெயர்த்துக் கொடுக்க ஒப்புக்கொண்டேன்.

மனித உள்ளத்தின் பலத்தையும் பலவீனத்தையும் துருவித் துருவி ஆராய்ந்த மஹான் டால்ஸ்டாய். அவருடைய இலக்கியங்களில் மனித ஜாதி முழுமையின் சுபாவத்தையுமே காண்கிறோமே யன்றி, எந்த குறிப்பிட்ட சமுதாயத்தையும் மட்டும் நாம் காணவில்லை. இதனால் அவருடைய இலக்கியங்கள் தேசிய எல்லைகளைக் கடந்து உலக இலக்கியங்களாக விளங்குகின்றன. ஆத்மிகத் துறையில் உன்னத ஸ்தானத்தை அடைந்துள்ள இந்தியாவுக்கு அவருடைய மனப்போக்கு விசேஷமாகப் புரியும். நம் சிந்தனைகளின் எதிரொலியைத்தான் டால்ஸ்டாயின் எழுத்துக்களில் காண்கிறோம்.

இந்த நாவலில் டால்ஸ்டாய் உருவாக்கியுள்ள கதா நாயகனை நிக்லியுடாவ் ஓர் அற்புதமான சிருஷ்டி. சாதாரண நிலையில் இருந்த அவன் வழுக்கி விழுந்து பாதாளத்திற்குப் போய்விடுகிறான். அவனால் கெட்ட ஒரு பெண்ணுக்கே அவன் நீதி வழங்க வேண்டிய சந்தர்ப்பம் ஏற்படும்பொழுது அவன் சிந்தனை சுடர் விடுகிறது; மனச்சாட்சி வலுப்பெறுகிறது. இதன் பிறகு அவன் வாழ்க்கையில் நிகழும் ஒவ்வொரு சம்பவமும் அவன் ஆத்மாவைப் புடம்போட்டு அதன் ஒளியை அதிகரிக்கிறது. கதையின் முடிவில் அவன் சுயநலமெல்லாம் பொசுங்கிச் சாம்பலாகி மனிதருள் மாணிக்கமாகப் பிரகாசிக்கிறான்.

இக்கதையில் வரும் பாத்திரங்கள் நமக்கு ஏற்கெனவே அறிமுகமானவர்கள் போலவே தோன்றுகின்றனர். இதே போன்ற குணமுள்ளவர்கள் எத்தனையோ பேரை நாம் அன்றாட வாழ்க்கையில் சந்திக்கிறோம். அற்பத்தனம் நிறைந்த "பெரிய மனிதர்"களையும், மிருகத்தனமே உருவான சிறு ஊழியர்களையும் நாம் தினமும் பார்க்கிறோம். மனிதனை தேவனாக்க வேண்டுமென்று லக்ஷியத்தால் உந்தப்பட்டு, இழிகுணங்களை யெல்லாம் இடித்துக் காட்டுகிறார் டால்ஸ்டாய்.

இன்று தமிழ்நாட்டில் மட்டமான சுவையும், கட்டுப்பாடற்ற மனப்பான்மையும் அதிகரித்து வருவதைக் காண்கிறோம். ஆனால் இவற்றைச் சமாளிக்கக் கூடிய இலக்கியம் போதிய

அளவு தமிழில் வெளிவரவில்லை. பிரசுரமாகும் விஷயங்களில் பெரும்பாலானவை ஜனங்களின் கீழ்த்தரமான உணர்ச்சிகளைத் திருப்தி செய்பவையாகவும், வாசகரின் நலத்தை வீணாக்குவதற்கு உதவும் சாதனங்களாகவுமே இருக்கின்றன. தமிழில் நல்ல இலக்கியமே வரவில்லையென்று நான் சொல்லவில்லை. ஆனால் இவை மிகவும் அபூர்வம். மலைமலையாகக் குவிந்துகிடக்கும் குப்பைகளின் மத்தியில் இவை மறைந்து கிடக்கின்றன;

இந்த நிலையைக் கண்டு சகிக்க முடியாமல்தான் டால்ஸ்டாயின் "ரெஸரெக்ஷன்" என்ற நாவலைத் தமிழில் மொழிபெயர்க்க இசைந்தேன். தமிழ்ச்சுடர் நிலைய அதிபர் ஸ்ரீ. அ. கி. கோபாலன் டால்ஸ்டாயின் பக்தர், டால்ஸ்டாயின் நூல்களில் முக்கியமானவற்றை பிரசுரித்தே தீர்வேனென்று அவர் சங்கற்பம் செய்துகொண்டு அவற்றை வெளியிட்டு வருகிறார். இந்த நல்ல விஷயத்தில் அவர் கொண்டுள்ள பிடிவாதத்தைப் பாராட்டுகிறேன். உயர்ந்த இலக்கியத் தேனை நுகர்ந்து களிக்கும் வண்டைப் போன்றவர் ஸ்ரீ ரா. ஸ்ரீ. தேசிகன். இம்மொழிபெயர்ப்புக்கு அவர் முன்னுரை எழுதச் சம்மதித்தது பற்றி நான் பெருமைப்படுவதுடன் அவருக்கும் என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

திருவல்லிக்கேணி,
6—11—52.

"வாணி சரணன்"

# புத்துயிர்

## முதல் பாகம்

### 1

பல்லாயிரக் கணக்கான மக்கள் தாங்கள் குவிந்து கிடக்கும் சிறு பகுதி நிலத்தைக் கெடுக்கத் தங்களால் ஆனதையெல்லாம் செய்தும், அவர்கள் முயற்சி பலிக்கவில்லை. தரையைக் கற்களினால் மூடியும், செடி கொடிகளையெல்லாம் அழிக்கிறார்கள். மரங்களை வெட்டுகிறார்கள். மிருகங்களையும் பட்சிகளையும் விரட்டுகிறார்கள். காற்றில் புகையைக் கலக்கிறார்கள். இருந்தாலும் நகரில் கூட வஸந்த காலம், வஸந்தகாலமாகவேதான் இருக்கிறது.

சூரியன், இதமாக வெப்பம் கொடுத்தது. காற்றில் மணம் பொதிந்திருந்தது. கல் இடுக்குகள், தெரு ஓரங்கள் முதலிய இடங்களில் புல் செழித்து வளர்ந்திருந்தது. பிர்ச், போப்ளார், காட்டுச் செர்ரி முதலிய மரங்களில் மணம் மிகுந்த இலைகள் மண்டிக்கிடந்தன. எலுமிச்சை மரங்களில் அரும்புகள் மலர்ந்து மணத்தை அள்ளி வீசின. காக்கைகளும், ஊக்குருவிகளும், புறாக்களும் வஸந்த காலத்திற்கே உரிய ஆனந்தத்தோடு கூடுகட்டிக் கொண்டிருந்தன. வண்டுகள் வெயிலில் குளிர்காய்ந்து கொண்டே ரீங்காரம் செய்து பறந்துகொண்டிருந்தன. எங்கும் ஆனந்தம். செடிகள், பறவைகள், பூச்சிகள், குழந்தைகள் எல்லாம் சந்தோஷத்தில் ஆழ்ந்திருந்தன. ஆனால் மனிதர்கள் மாத்திரம்—முதிர்ந்த ஆண்களும் பெண்களும் மாத்திரம்—தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்வதையும், ஒருவரை ஒருவர் ஏமாற்றுவதையும் விடவில்லை. இந்த வஸந்த காலக் காலை நேரத்தை அவர்கள் புனிதமாகவோ முக்கியமாகவோ கருதவில்லை. சகல ஜீவராசிகளுக்கும் இன்பத்தை கொடுப்பதற்காக ஏற்பட்ட இந்த ஸ்வர்க்கலோக செளந்தரியம் அவர்களுக்கு ஒரு பொருட்டாகவே இல்லை. மனத்திற்குச் சாந்தி அளித்து அன்பைப் பொழியும் இந்த அழகில் அவர்களுடைய மனம் லயிக்கவில்லை. ஒருவரை ஒருவர் அடிமைப் படுத்துவதற்கான வழிகளில்தான் கவனம்சென்றது.

ஆகையால் நகர சிறைக் காரியாலயத்தில் மனிதர்களோ, மற்ற பிராணிகளோ புனிதமான வஸந்தத்தின் இனிமையை அனுபவித்தார்களென்று நினைப்பது தவறு. "இந்தச் சிறையில் காவலில் வைக்கப்பட்டிருக்கும் ஒரு புருஷனும் இரண்டு ஸ்திரீகளும் உள்பட மூவர் ஏப்ரல் இருபத்தெட்டாம் தேதியாகிய இன்று கோர்ட்டில் ஆஜர்படுத்தப்பட வேண்டும்" என்ற நோட்டீஸ் தான் அங்கு அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. (அவர்களில் முக்கிய எதிரியாகிய ஒரு ஸ்திரீ தனியாக கோர்ட்டுக்கு அழைத்துச் செல்லப்பட வேண்டும்) ஆகையால் ஏப்ரல் இருபத்தெட்டாந் தேதி காலை எட்டு மணிக்கு பெண்கள் சிறையில், இருள் சூழ்ந்து நாற்றமடிக்கும் சிறைக்கூட்டத்திற்குள் ஜெய்லர் பிரவேசித்தான். உடனே சாம்பல் நிறமான சுருண்ட கூந்தலுடன் கூடிய ஒரு ஸ்திரீ அங்கு வந்தாள். அவள் முகத்தில் துயரத்தின் களை படர்ந்திருந்தது. கை நுனியில் ஜரிகைப் பேட்டுடன் கூடிய சட்டையும், இடுப்பில் நீலக் கச்சையும் அணிந்திருந்தாள்.

ஜெய்லர் அறையின் இரும்புப் பாட்லாக்கைக் குலுக்கி கதவைத் திறந்தான். கூடத்தில் இருந்ததைக் காட்டிலும் அதிக நாற்றத்தோடு கூடிய காற்று உள்ளிருந்து வீசியது. ஜெய்லர், "மாஸ்லோவா, கோர்ட்டுக்குப் போகவேண்டும்" என்று சொல்லிவிட்டுக் கதவை மூடினான்.

சிறையின் தாழ்வாரத்தில் கூட சுத்தமான காற்று வயல் வெளியிலிருந்து வீசியது. ஆனால் சிறைக் கூடத்தில் டைபாய்டு கிருமிகளும், அழுகிக்கொண்டிருந்த குப்பை, தார் இவற்றின் நாற்றமும் காற்றில் நிறைந்திருந்தன. அங்கு புதிதாக வருபவர்கள் அருவருப்படைந்தனர். ஸ்திரீ வார்டர் இந்தக் காற்றை சுவாசித்துப் பழகியிருந்தபோதிலும், அவளுக்குக் கூட இந்த உணர்ச்சி ஏற்பட்டது. அவள் அப்பொழுதுதான் வெளியிலிருந்து வந்தாள்.

சிறைக்குள்ளிருந்து பெண்களின் குரலும் காலடிச் சத்தமும் கேட்டுக் கொண்டிருந்தது.

"சீக்கிரம் கிளம்பு" என்றான் ஜெயிலர். இரண்டொரு நிமிஷங்களுக்குள் வாளிப்பான தேக்கட்டுடன் கூடிய ஓர் இளம் பெண் சுருசுருப்பாக வெளியே வந்தாள். அவள் வெள்ளை ஜாகெட்டின்மீது சாம்பல் நிறப்போர்வையும் பாவாடையும் அணிந்திருந்தாள். காலில் கம்பளி மேஜோடும் சிறைபூட்ஸூம் இருந்தன. தலையைச் சுற்றி ஒரு வெள்ளைக் கைக்குட்டையைக் கட்டிக் கொண்டிருந்தாள். அதற்குள்ளிருந்து கூந்தல் கொத்துக் கொத்தாக நெற்றியில் வந்து எட்டிப்பார்த்தன. அதிக

காலம் சிறையில் அடைபட்டுக் கிடந்தவர்களுக்கு இருப்பது போலவே அவள் முகமும் வெளுத்திருந்தது. இருட்டு அறையில் கிடக்கும் உருளைக் கிழங்கிலிருந்து கிளம்பும் முளையைப்போ லிருந்தது அவளுடைய முகத்தின் நிறம். ஒளிவீசும் கருவிழிகள் அந்த வெண்முகத்தில் பளிச்செஃப் பிரகாசித்தன. ஒரு கண் சிறிது வக்கரமாக இருந்தது.

அகன்ற மார்புடன் கூடிய அவள் நிமிர்ந்து நடந்தாள்.

தலையைச் சிறிது பின்புறமாகச் சாய்த்து, "எந்த உத்தரவையும் ஏற்கத் தயார்" என்று கூறுவதுபோல் ஜெயிலரின் கண்களை ஊடுருவிப் பார்த்தாள் அவள்.

ஜெயிலர் கதவைப் பூட்டப்போகும் சமயத்தில், சுருக்கங்கள் விழுந்து, கடுமையான முகபாவத்துடன் கூடிய ஒரு கிழவி தன் நரைத்த தலையை வெளியே நீட்டி, மாஸ்லோவாவோடு பேசத்தொடங்கினாள். ஆனால் ஜெயிலர் அவளை உள்ளே தள்ளிக் கதவை மூடினான். சிறைக்குள்ளிருந்து ஒரு ஸ்திரீயின் சிரிப்புக் கேட்டது. மாஸ்லோவாவும், சிறைக்கதவில் இருந்த துவாரத்தின் பக்கம் திரும்பிப் புன்முறுவல் செய்தாள். கதவின் துவாரத்தில் கிழவி தன் முகத்தைப் பதித்துக் கொண்டு, அடித்தொண்டையால் பேசினாள்.

"ஜாக்கிரதை! அவர்கள் உன்னைக் கேள்வி கேட்டால் ஒரே விஷயத்தைத் திருப்பித் திருப்பிச்சொல். அனாவசியமாக ஒன்றும் சொல்லாதே" என்றாள்.

"சரி; அப்படிச் சொன்னால் கூட, இப்பொழுது இருப்பதைவிட மோசமாகப் போய்விடாது. சீக்கிரம் ஏதாவது ஒரு முடிவாகி விட்டால் போதும்" என்றாள் மாஸ்லோவா.

"சரி, வா. நிச்சயமாக ஏதாவது ஒரு முடிவு செய்து விடுவார்கள்" என்று ஜெயிலர், ஏதோ பெரிய அந்தஸ்தில் இருப்பவனைப் போன்ற தோரணையில் கூறினான். ஹாஸ்யமாகப் பேசி விட்டதாக அவனுக்கு எண்ணம்!

கதவின் துவாரத்திலிருந்து கிழவியின் கண்கள் மறைந்து விட்டன. சிறைக் கூடத்தின் மத்தியில் மாஸ்லோவா அடி எடுத்து வைத்தாள். பிரதம ஜெயிலர் முன்னால் செல்ல அவர்கள் கல்படிகளின் வழியாக இறங்கினர். ஆண் கைதிகள் அடைக்கப்பட்டிருந்த வார்டை அவர்கள் கடந்து சென்றபொழுது ஒவ்வொரு அறைக் கதவின் துவாரத்தின் வழியாகவும் கைதிகளின் கண்கள் அவர்களை நோக்கிக்கொண்டிருந்தன. சிறை அதிகாரியின் காரியாலயத்திற்கு அவர்கள் வந்து சேர்

தனர். அவளோடு காவல் செல்ல அங்கு இரு ஸ்திரிகள் காத்திருந்தனர். அங்கு உட்கார்ந்திருந்த ஒரு குமாஸ்தா, புகையிலை நாற்றம் அடிக்கும் ஒரு காகிதத்தை ஒரு சோல்ஜரிடம் கொடுத்து, "அவளை அழைத்துக்கொண்டு போங்கள்" என்று கைதியைச் சுட்டிக் காட்டினான்.

அம்மைப் புள்ளி விழுந்த சிவந்த முகத்தோடு கூடிய அந்த சோல்ஜர், காகிதத்தைத் தன் சட்டைப்பையில் வைத்துக் கொண்டு, கைதியையும் தன் தோழனையும் பார்த்துக் கண்ணடித்தான். பிறகு கைதியும் சோல்ஜர்களும் சிறைவாசலைக் கடந்து கரடுமுரடான தெருக்கள் வழியே சென்றனர்.

வண்டிக்காரர்கள், வியாபாரிகள், சமயல்காரர்கள், கூலியாட்கள் சர்க்கார் குமாஸ்தாக்கள் எல்லாருமே சற்று நின்று கைதியை விசித்திரமாகப் பார்க்காமல் போகவில்லை. சிலர் தலையை அசைத்துக்கொண்டு, "கெட்ட நடத்தைக்கு நம்மைப் போலில்லாமல் வேறுவிதமாக நடந்துகொள்வதற்கு பலன் இதுதான்" என்று நினைத்தனர். சிறுவர்கள் நின்று அவளை பயத்துடன் பார்த்தனர். ஆனால் அவள் ஒரு தீங்கும் செய்யாதபடி பார்த்துக்கொள்ள சோல்ஜர்கள் இருந்ததால் அவர்கள் தைரியமடைந்தனர். மற்றவர்கள் தன்னைக் கவனிப்பதை உணர்ந்து அவள் தன் பார்வையை அவர்கள் மீது அலக்ஷியமாக வீசினாள். மற்றவர்களுடைய கவனத்தைத் தான் கவர்ந்தது பற்றி அவள் திருப்தியடைந்தாள். நல்ல காற்றின் ஸ்பரிசம் அவளுக்குச் சந்தோஷம் அளித்தது. அவளுடைய கால்களுக்கு நடைப்பழக்கம் குறைந்துவிட்டது. பொருத்தமில்லாத சிறைச் செருப்போடு அந்தக் கல்லில் நடப்பது அவளுக்குக் கஷ்டமாக இருந்தது. அவள் ஒரு தானியக் கடையைக் கடந்து சென்று கொண்டிருந்தாள். எதிரே சில புறுக்கள் பிறருடைய தொந்தரவு இல்லாமல் மேய்ந்துகொண்டிருந்தன. மங்கலான நீலப் புறு ஒன்றின்மீது அவளுடைய கால் இலேசாகப்பட்டது. அது இறகை அடித்துக்கொண்டு அவளுடைய காதுக்கருகே பறந்து சென்றது. அதன் இறக்கையின் காற்று அவள்மீது வீசியது. அவள் புன்முறுவல் புரிந்தாள். உடனே தன்னுடைய நிலைமையை நினைத்து ஆழ்ந்த பெருமூச்சு விட்டாள்.

## 2

**அ**ந்தக் கைதி, மாஸ்லோவாவின் வாழ்க்கையைப் பற்றிய கதை சர்வ சாதாரணமானது.

அவள், விவாகமாகாத ஒரு ஸ்திரீயின் பெண். கன்னிகைகளாகவே இருந்த இரு பணக்கார ஸ்திரீகளின் பண்ணையில்

அவளுடைய தாய் வேலை செய்து வந்தாள். கல்யாணம் செய்து கொள்ளாத அவளுக்கு வருஷத்தில் ஒரு குழந்தை பிறந்தது. கிராம ஜனங்களிடையே வழக்கமாக நடப்பது போல, ஞானஸ்நானத்திற்குப் பின் வேண்டாத இந்தக் குழந்தைகளைப் புறக்கணித்துப் பட்டினிபோட்டுக் கொன்று விடுவாள். தாயின் வேலைக்கு இவை இடையூறாக இருந்தன. இவ்விதம் ஐந்து குழந்தைகள் மாண்டு போயின. குழந்தைகளுக்கு ஒழுங்காக ஞானஸ்நானம் நாமகரணம் எல்லாம் நடக்கும். பிறகு போதிய ஆகாரம்கொடுக்காமல் சாக அடிக்கப்படும். பண்ணை எஜமானிகளில் ஒருத்தி தற்செயலாக அங்கு வராமலிருந்தால் ஊர் சுற்றும் சோம்பேறி ஒருவனுக்குப் பிறந்த இந்த ஆறுவது குழந்தையும் அதே கதியைத்தான் அடைந்திருக்கும். கெட்டுப் போன 'கிரீம்' அனுப்பியதற்காக வேலைக்காரியைத் திட்டும் பொருட்டு எஜமானி அங்கு வந்தாள். கொட்டகையில் அந்த இளம் வேலைக்காரப் பெண் பக்கத்தில் அழகான குழந்தை ஒன்றை விட்டுக்கொண்டு படுத்திருந்தாள். அவளை அங்கு படுக்க அனுமதித்ததற்காக வேலைக்காரிகளை மீண்டும் ஒரு முறை திட்டி விட்டுப் போக விருந்தாள் எஜமானி. ஆனால் குழந்தையைப் பார்த்தவுடன் அவள் மனம் இளகிவிட்டது. அதன் ஸ்விகாரத் தாயாக இருக்க அவள் தீர்மானித்து விட்டாள். அந்த ஸ்விகாரப் புத்திரியின் மீது ஏற்பட்ட அனுதாபத்தினால், அதைத் தான் வளர்க்க வேண்டுமென்பதற்காக அதன் தாய்க்கு அவள் பாலும் கொஞ்சம் பணமும் கொடுத்தாள். இதன் விளைவாகக் குழந்தை பிழைத்தது. அது தப்பிப் பிழைத்ததாக எஜமானக் கிழவிகள் பேசிக் கொள்வார்கள். குழந்தைக்கு மூன்று வயது ஆன பொழுது அதன் தாய் நோய் கண்டு இறந்தாள். குழந்தையின் சொந்தப் பாட்டிக்கு அதுவெறும் பயங்கரமாகத்தான் இருந்தது. ஆகையால் பண்ணை எஜமானிகள் அதைத் தாங்களே வளர்க்க எடுத்துக் கொண்டு போய் விட்டார்கள்.

சிறுமி ரொம்பவும் அழகாக வளர்ந்தாள். உற்சாகம் பொங்கும் அவள் கிழவிகளுக்கு பொழுது போக்காக இருந்தாள்.

குழந்தையைத் தன் ஸ்விகாரப் புத்திரியாகக் கொண்ட சிறிய கிழவி ஸோபியா ஐவனேவ்வுக்குக் குழந்தையிடம் அபாரப் பிரியம். மூத்தவளான மேரி ஐவானேவ்னு கொஞ்சம் கடுமையாகவே இருப்பாள். சிறுமிக்கு சோபியா நல்ல உடைகள் அணிவித்து அழகு பார்ப்பாள். உயர் குடும்பப் பெண்களைப் போல் படிக்க வைக்க வேண்டும் என்றநோக்கத்தோடு எழுதப் படிக்கக் கற்றுக் கொடுத்தாள். இந்த நிலைமையில் வளர்ந்த அந்தப் பெண்ணிடம் வேலைக்காரியின் குணங்கள் பாதியும் சீமாட்டியின் குணங்கள் பாதியுமாகக் கலந்திருந்தன. "காடுஷா" என்ற பெயர் கொஞ்சம் கரடு முரடாக இருந்த

போதிலும் சிறுமிக்கு அந்தப் பெயரை இட்டே அழைத்தார்கள். அவள் தையல் வேலை செய்வாள். வீட்டைச் சுத்தம் செய்து ஒழுங்கு படுத்துவாள். பித்தளை சாமான்களுக்கு மெருகு போடுவாள். இன்னும் இது போன்ற சுலபமான மற்ற வேலைகளையும் கவனிப்பாள். சில சமயங்களில் உட்கார்ந்து கிழவிகளுக்குப் புத்தகங்களைப் படித்துக் காட்டுவாள்.

பலர் அவளை மணக்க முன் வந்த போதிலும் அவள் விவாகம் செய்து கொள்ள விரும்பவில்லை. சுக வாழ்க்கையில் அவள் ரொம்பவும் செல்லமாக வளர்ந்து விட்டாள். தொழில் செய்யும் ஒருவனோடு வாழ்க்கை நடத்துவது கஷ்டமாக இருக்கும் போல் அவளுக்குத் தோன்றியது.

பதினாறு வயது வரை இப்படியே வளர்ந்தாள். அந்த சீமாட்டிகளின் மருமானை ஒரு இளம் பிரபு வந்து அவர்களுடன் தங்கினான். காடுஷா தன்னையு மறியாமல் அவன் மீது மோகங் கொண்டு விட்டாள்.

இரண்டு வருஷங்களுக்குப் பின் அவன் மறுபடியும் தன் அத்தைகள் வீட்டுக்கு வந்து, ராணுவத்தில் சேர்வதற்கு முன்னால் நான்கு தினங்கள் தங்கி விட்டுப் போனான். அவன் புறப்படுவதற்கு முதல் நாள் இரவு காடுஷாவைக் கெடுத்து விட்டு, நூறு 'ரூபிள்' நோட் ஒன்றைக் கொடுத்துவிட்டுப் போனான். தான்கருத்தரித்திருப்பது, ஐந்து மாதங்களுக்குப்பின் அவளுக்கு நிச்சயமாகத் தெரிந்தது. பிறகு மாலை நேரங்கள் கூட அவளுக்கு வெறுப்பைத் தந்தன. இந்த அவமானத்திலிருந்து எப்படித் தப்புவது என்பது ஒன்று தான் அவளுடைய சிந்தனை. தன் எஜமானிகளுக்கு அலக்ஷிய புத்தியுடன் வேலை செய்து வந்தது மாத்திரமில்லாமல், ஒரு சமயம் அவர்களிடம் ரொம்பவும் கடுமையாகவும் நடந்து கொண்டு விட்டாள். ஆனால், பிறகு அவர்களிடம் அவள் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு தான் வெளியே போய் விட அனுமதி கோரினாள். அவர்கள் அதிருப்தியோடு அவளைப்போக அனுமதித்தனர். பிறகு அவள் ஒரு போலீஸ் அதிகாரியின் வீட்டில் வேலைக்கு அமர்ந்தாள். ஆனால் அங்கு மூன்று மாதம் தான் இருந்தாள். ஐம்பது வயதான போலீஸ் அதிகாரி அவளைத் துன்புறுத்தினான். ஒரு சமயம் அவனை அவள், "முட்டாள்" "கிழப்பிசாசே" என்று திட்டி, கீழே தள்ளினாள். இந்த முரட்டுத் தனத்திற்காக அந்த அதிகாரி அவளை வீட்டை விட்டு விரட்டி விட்டான். பிரசவ காலம் நெருங்கிக்கொண்டிருந்ததால் மற்றொரு வீட்டுக்கு வேலைக்குப் போவதில் பயனில்லை. ஆகையால் கள்ளத்தனமாக சாராய வியாபாரம் செய்யும் ஒரு கிராம மருத்துவச்சி வீட்டுக்குச் சென்றாள். பிரசவம் சுகமாக நடந்துவிட்டது.

கிராமத்தில் ஜுரத்தோடு இருந்த ஒருவருக்குச் சிகிச்சை செய்து கொண்டிருந்த மருத்துவச்சி காடுஷாவுக்கும் ஜுரத்தைத் தொத்த வைத்து விட்டாள். ஆஸ்பத்திரிக்குக் குழந்தையை அனுப்பவேண்டியிருந்தது. அங்கு போனவுடனேயே குழந்தை இறந்து விட்டதாக, அதை எடுத்துக் கொண்டு போன கிழவி சொன்னாள். காடுஷா மருத்துவச்சியின் வீட்டுக்குப் போன பொழுது அவளிடம் மொத்தம் நூற்று இருபத்தேழு ரூபிள் இருந்தது. அவளைக் கெடுத்தவன் நூறு ரூபிள் கொடுத்திருந்தான். அவளாகச் சம்பாதித்தது இருபத்தேழு ரூபிள். அவளுக்குப் பணத்தை வைத்துக்கொள்ளத் தெரியாது. தன் சௌகர்யத்திற்காக தாராளமாகச் செலவழித்துக் கொண்டாள். கேட்டவர்களுக்கெல்லாமும் கொடுத்தாள். இரண்டு மாதம் அவளுக்குச் சிகிச்சை செய்ததற்காக மருத்துவச்சி நாற்பது ரூபிள் எடுத்துக் கொண்டாள். குழந்தையை ஆஸ்பத்திரியில் சேர்ப்பதற்காக இருபத்தைந்து ரூபிள் செலவாகி விட்டது. பசு வாங்குவதற்காக மருத்துவச்சி நாற்பது ரூபிள் கடன் வாங்கிக் கொண்டாள். பிட்டாய்கள், உடைகள் முதலியவை வாங்குவதற்கும் சில்லரைச் செலவுகளுக்கும் இருபது ரூபிள் செலவாகி விட்டது. மேற்கொண்டு ஜீவனம் நடத்துவதற்கு காடுஷாவிடம் ஒன்றுமில்லை. மறுபடியும் எங்காவது வேலைக்குப் போக வேண்டியிருந்தது. காட்டு இலாகா அதிகாரி ஒருவனுடைய வீட்டில் வேலையும் கிடைத்தது. அவன் விவாகமானவன் தான். இருந்தாலும் முதல் நாள் முதலே அவனும் அவளை துன்புறுத்தத் தொடங்கினான். அவள் அவனை வெறுத்தாள். அவன் கண்ணில் படாமல் தப்ப முயன்றாள். ஆனால் அவன் எஜமானனாகையால், அவளை எந்த இடத்திற்கு வேண்டுமானாலும் வேலைக்கு அனுப்பலாம். அவன் ரொம்பவும் தந்திரசாலி. அனுபவம் உள்ளவன். அவளை எப்படியாவது மடக்கி விடுவான். அவன் மனைவி இதைக் கண்டு பிடித்துவிட்டாள். ஒருநாள் காடுஷாவும் தன் கணவனும் ஒரே அறையில் தனியாக இருந்தபோது பார்த்துவிட்டாள். உடனே அவளை அடித்தாள். காடுஷா தன்னைப் பாதுகாத்துக் கொண்டாள். இருவருக்குமிடையில் அடிதடி சண்டை நடந்தது. காடுஷாவுக்கு சம்பளம் கொடுக்காமலே வீட்டை விட்டுத் துரத்தி விட்டான்.

பிறகு அவள் பட்டணத்தில் தன் அத்தையோடு வசிக்கத் தொடங்கினாள். அவளுடைய அத்தை புருஷன் ஒரு புத்தக பைண்டர். அவனுக்கு ஒரு காலத்தில் நல்ல வருமானம் வந்து கொண்டிருந்தது. ஆனால் இப்பொழுது அவன் குடிப் பழக்கத்தில் இறங்கி, எல்லா வாடிக்கைக்காரர்களையும் இழந்து விட்டான். தனக்குக் கிடைத்த பணத்தையெல்லாம் சாராயக் கடையில் தொலைத்துக் கொண்டிருந்தான். அவளுடைய அத்தை ஒரு சிறிய சலவைக்கடை வைத்து அதிலிருந்து

கிடைத்த வருவாயைக் கொண்டு தன்னையும் தன் குழந்தைகளையும் பொறுப்பற்ற தன் கணவனையும் காப்பாற்றி வந்தாள். அவள் காடுஷாவுக்குத் தன் சலவைக் கடையில் வேலை கொடுத்தாள். ஆனால் அந்த வேலை செய்தவர்கள் பட்ட கஷ்டங்களைப் பார்த்த காடுஷா அந்த வேலையை ஏற்கச் சிறிது தயங்கி, வேலை தேடிக் கொடுக்கும் காரியாலயத்துக்கு மனு செய்தாள். இரு பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்து படிக்க வைத்துக் கொண்டிருந்த ஒரு ஸ்திரியின் வீட்டில் அவளுக்கு வேலை கிடைத்தது. காடுஷா அங்கு போன ஒரு வாரத்திற்குள், மீசை முளைத்த பெரிய பையன் தன் படிப்பை மூட்டை கட்டி வைத்துவிட்டு அவள் பின்னாலேயே வட்டம் போடத் தொடங்கினான். அவன் தாய் காடுஷாவின்மீது பழியைச் சுமத்தி, அவள் வேலையிலிருந்து போக நோட்டீஸ் கொடுத்து விட்டாள்.

வேலை தேடிக்கொள்ள காடுஷாசெய்த முயற்சிகள் ஒன்றும் பயன்படவில்லை. மறுபடியும் அவள் வேலை தேடிக் கொடுக்கும் ஆபீஸுக்கே போகவேண்டி யிருந்தது. கையில் காப்பும், விரல்களில் மோதிரமும் அணிந்த ஒரு ஸ்திரியை அங்கு சந்தித்தாள். காடுஷாவுக்கு வேலை வேண்டியிருப்பதாக அறிந்த அவள், அவளிடம் தன் விலாசத்தைக் கொடுத்து தன் வீட்டுக்கு வருமாறு அழைத்தாள். காடுஷா அவ்வீட்டுக்குச் சென்றபொழுது அவளை ரொம்பவும் பிரியமாக வரவேற்று உபசரித்தாள். மிட்டாய்களையும் ஒயினையும் அவள் எதிரே கொண்டு வந்து வைத்து சாப்பிடச் சொன்னாள். பிறகு ஒரு சீட்டு எழுதி வேலைக்காரனிடம் கொடுத்து யாரிடமோ கொடுக்கச் சொன்னாள். மாலையில் நரைத்த தலையுடனும் வெள்ளைதாடியோடும் கூடிய நெட்டையான ஒருவன் வந்து காடுஷாவின் பக்கத்தில் உட்கார்ந்தான். புன்சிரிப்போடும், ஒளி வீசும் கண்களோடும் அவளை உற்று நோக்கினான். பிறகு அவளோடு தமாஷாகப் பேசத் தொடங்கினான். வீட்டுக்காரி அவனை அடுத்த அறைக்கு அழைத்துக் கொண்டுபோய், "கிராமத்திலிருந்து வந்துள்ள புதிய சரக்கு" என்று அவனிடம் சொன்னது காடுஷாவின் காதில் விழுந்தது. பிறகு அவள் காடுஷாவைத் தனியாக அழைத்து, அந்தக் கிழவன் ஒரு பெரிய ஆசிரியரென்றும், அவனிடம் ஏராளமாகப் பணம் இருப்பதாகவும், அவன் விரும்பினால் எதையும் கொடுக்கத் தயங்கமாட்டானென்றும் சொன்னாள். அவனுக்கு காடுஷாவைப் பிடித்துத்தான் இருந்தது. அவளிடம் இருபத்தைந்து ரூபிள் கொடுத்துவிட்டு அவளை அடிக்கடி பார்ப்பதாகச் சொல்லிப் போனான். அந்த இருபத்தைந்து ரூபிளும் சீக்கிரம் செலவாகிவிட்டது. தனக்கு இடம் விட்டு, சாப்பாடுபோட்ட அத்தைக்குக் கொஞ்சம் பணம் கொடுத்தாள். பாக்கிப் பணத்திற்கு தொப்பி, ரிப்பன் முதலியவை வாங்கிவிட்டாள். சில தினங்களுக்குப் பின் அந்த ஆசிரி

யர் அவளை கூப்பிட்டு அனுப்பினான். அவள் போனாள். அப்பொழுது அவன் அவளுக்கு மற்றும் இருபத்தைந்து ரூபிள் கொடுத்து, தனிவீடும் விடுவதாகச் சொன்னான்.

அவன் அவளுக்குப் பார்த்துக் கொடுத்த வீட்டிற்குப் பக்கத்தில் கடைக்கார மைனர் ஒருவன் வசித்து வந்தான். காடுஷா அவன்மீது மோகம் கொண்டுவிட்டாள். அவள் ஆசிரியரிடம் சொல்லிவிட்டு, தானே வேறொரு தனிவீடு பார்த்துக்கொண்டு போய்விட்டாள். அவளை மணந்து கொள்வதாக அந்தக் கடைக்காரன் சொல்லியிருந்தான். அவளிடம் சொல்லாமலே வியாபார சம்பந்தமாக அவன் நிஷ்னி நகருக்குப் போனான். பிறகு அவன் திரும்பி வரவேயில்லை. காடுஷா தனியாக வசித்துவந்தாள். அந்த வீட்டில் அவள் தனியாகவே வசித்துவர விரும்பினாள். அப்படியானால், விபசாரிகளுக்கு வேண்டிய "மஞ்சள் அனுமதிச் சீட்டை" அவள் பெறவேண்டுமென்றும், வைத்தியப் பரிசோதனை செய்துகொள்ள வேண்டுமென்றும் போலீசார் அறிவித்ததன்பேரில், மறுபடியும் தன் அத்தை வீட்டுக்கே திரும்பினாள். அவளுடைய உயர்ந்த உடைகளைப் பார்த்த அத்தை அவளுக்கு சலவை வேலை கொடுக்க விரும்பவில்லை. அதைவிட உயர்ந்த அந்தஸ்துக்குத் தன் மருமகள் வந்துவிட்டதாக அவள் நினைத்தாள். தான் சலவை வேலை செய்வதா வேண்டாமா என்பது பற்றி காடுஷாவும் யோசிக்கவில்லை. அங்கு களைத்துப்போய் கஷ்டப்பட்டு வேலை செய்து கொண்டிருந்தவர்களை அவள் அனுதாபத்தோடு பார்த்தாள். அவர்களில் சிலர் துணிகளைக் கசக்குவதும் சிலர் 'இஸ்திரி' போடுவதுமாக இருந்தனர். அவர்களுடைய கதி தனக்கும் ஏற்பட்டிருக்கக்கூடும் என்பதை நினைத்து அவள் நடுங்கினாள். அவளைக் காப்பாற்றுவதற்கு ஒருவரும் இல்லாத சமயத்தில்தான் அந்தக் காப்புக்காரி அவளைச் சந்தித்தாள்.

சிறிது காலத்திற்கு முன்புதான் காடுஷா புகை பிடிக்கத் தொடங்கியிருந்தாள். கடைக்காரன் அவளைத் துறந்துவிட்டுப் போனபின் குடிக்கவும் ஆரம்பித்துவிட்டாள். சாராயத்தின் வாஸனையைக் கண்டுகூட அவள் மயங்கவில்லை. தன் துயரங்களை யெல்லாம் மறந்து, சுயமதிப்பை உணர அது ஒரு சந்தர்ப்பம் அளித்ததால் தான் அவள் குடித்தாள். சாராயம் இல்லாவிட்டால் அவளைச் சோகமும் அவமானமும் வாட்டும். விபசார விடுதிக்கு ஆள் சேர்த்துக் கொடுக்கும் அந்த ஸ்திரீ காடுஷாவுக்குப் பலவிதமான தின்பண்டங்களைக் கொண்டு வந்து கொடுத்தாள். காடுஷா அவற்றைத் தன் அத்தைக்கும் கொடுத்தாள். அவளுக்கு ஏராளமாகச் சாராயமும் கிடைத்தது. அவள் குடிக்கும் பொழுது, நகரின் மிகப் பெரிய விபசார விடுதியில் அவளைச் சேர்த்து விடுவதாக அந்த விபசார ஏஜெண்டு சொல்வாள். அதனால் ஏற்

விட்டே எழுந்திருக்கவில்லை. தன்னுடைய உயர்ந்த கட்டிலில், ஸ்பிரிங் படுக்கையின்மீது இறகு அடைத்த மெத்தையை விரித்துப் படுத்துக்கொண்டிருந்தான், நன்றாக இஸ்திரி செய்யப்பட்ட கம்பளி ராச்சட்டையோடு, முந்திய தினம் செய்த வேலைகளைப் பற்றியும், அன்று செய்ய வேண்டியவற்றைப்பற்றியும் ஆலோசித்தபடி, ஸிகரெட்டைப் புகைத்துக் கொண்டே படுத்திருந்தான்.

கோர்ச்சாகின் குடும்பத்தினரோடு தான் கழித்த மாலை நேரத்தைப் பற்றி அவன் நினைத்துப் பார்த்தான். அவர்கள் வீட்டுப் பெண்ணைத்தான் அவன் விவாகம் செய்து கொள்ளப் போவதாக எல்லாரும் நினைத்திருந்தார்கள். அதை நினைத்து அவன் பெருமூச்செறிந்து ஸிகரெட் துண்டை வீசி எறிந்து விட்டு வெள்ளிப் பெட்டியிலிருந்து மற்றொரு ஸிகரெட்டை எடுக்கப் போனான். உடனே மனத்தை மாற்றிக் கொண்டு, கீழே இறங்கி காலில் ஸ்லிப்பரை மாட்டிக்கொண்டு, பட்டு கௌனை அணிந்து உடை தரிக்கும் அறைக்கு, பூமி அதிரும்படி நடந்து சென்றான். அங்கு யுடிகொலோன் வாஸனை கம்மென்று வீசிக்கொண்டிருந்தது. பல்பொடியை எடுத்துப் பல்லைத் துலக்கிக் கொண்டு வாஸனைத் தண்ணீரால் வாயைக் கொப்பளித்தான். பிறகு கையை ஸோப் போட்டுத் தேய்த்து அலம்பிக் கொண்டான். நகங்களைக் கழுவுவதில் விசேஷ கவனம் செலுத்தினான். பிறகு முகத்தையும் தன் தடித்த கழுத்தையும் கழுவிக் கொண்டு மற்றோர் அறைக்குள் பிரவேசித்தான். அங்கு ஸ்நானம் செய்வதற்காக 'ஷவர் பாத்' தயாராக இருந்தது. தன் பருத்த உடம்பைத் தேய்த்துக் குளித்து முரட்டுத் துணியால் உடம்பைத் துடைத்துக் கொண்டபின் மெல்லிய உடைகளை அணிந்து ஒரு கண்ணாடியின் முன் உட்கார்ந்து தன் கருத்த தாடியையும், சுருண்ட தலை மயிரையும் ஒழுங்காக வாரிவிட்டுக் கொண்டான். நெற்றிக்கு மேல் தலையில் வழுக்கை விழுந்திருந்த பகுதியை மறைத்து வாரிக் கொண்டான்.

அவன் உபயோகித்த எல்லா சாமான்களும்—வாஸனைப் பொருள்கள், கம்பளிச் சட்டை, உடைகள், பூட்ஸ், டை, பின் எல்லாம்—ரொம்பவும் உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தவை. பகட்டில்லாமலும் உறுதியாகவும் விலை உயர்ந்தவையாகவும் இருந்தன. அங்கு இருந்த பத்து டைகள் ஸ்கார்ப் பின்கள் ஆகியவற்றுள் முதலில் எதன்மீது அவன் கைபட்டதோ அதையே எடுத்துக் கொண்டான். ஒருகாலத்தில் இவை ஒவ்வொன்றும் அவன் மனதைக் கவர்ந்தவை. இப்பொழுது அலக்ஷியம் வந்துவிட்டது.

அவனுக்காகத் தயாராய் வைக்கப்பட்டிருந்த உடைகளை எடுத்து அணிந்து வாஸனை பூசிக்கொண்டு சாப்பாட்டு

அறைக்குள் சென்றான். சிங்கத்தின் கால்போன்ற கால்களுடன் கூடிய அழகான மேஜை அங்கு போடப்பட்டிருந்தது. தரை சுத்தமாகக் கழுவப்பட்டு பளபளவென்றிருந்தது. மேஜைமேல் கஞ்சியிட்டு சலவை செய்த துணி விரிக்கப் பட்டிருந்தது. அதன்மீது ஒரு ஜாடி நிரம்ப காபி டிகாக்ஷனும், ஒரு பாத்திரத்தில் சர்க்கரையும் மற்றொரு பாத்திரத்தில் காய்ச்சிய பாலும் வைக்கப்பட்டிருந்தன. ரொட்டிக் கூடை நிரம்ப புதிய ரொட்டியும் ரஸ்க், பிஸ்கட் முதலியவையும் இருந்தன. பக்கத்தில் அன்றைய பத்திரிகையும், சில கடிதங்களும் கிடந்தன.

நிக்லியுடாவ் கடிதங்களைப் பிரிக்கப்போகும் சமயத்தில் கருப்புச் சட்டை அணிந்த ஒரு ஸ்திரீ உள்ளே பிரவேசித்தாள். இவள்தான் முன்பு நிக்லியுடாவின் தாயாருக்கு வேலைக்காரியாக இருந்த அக்ரபெனு பெட்ரோவ்னு. தன் எஜமானி சமீபத்தில் இறந்துபோய் விட்டதால், அவளுடைய பிள்ளையின் வீட்டு நிர்வாகியாக அக்ரபெனு இருந்து வந்தாள். அவள் நிக்லியுடாவின் தாயாரோடு வெளிநாடுகளிலேயே பத்து வருஷங்களைக் கழித்திருக்கிறாள். ஒரு பெரிய சீமாட்டிக்கு வேண்டிய தோற்றமும் நடையுடை பாவனைகளும் அவளிடம் காணப்பட்டன. அவள் சிறு குழந்தையாக இருந்தது முதலே நிக்லியுடாவ் குடும்பத்தோடு பழகி வந்திருக்கிறாள். நிக்லியுடாவ் சிறு குழந்தையாக இருந்தது முதலே அவனை அவளுக்குத் தெரியும்.

"நமஸ்காரம். தெமித்ரி ஐவானிச்!"

"நமஸ்காரம் அக்ரபெனு பெட்ரோவ்னு, அது என்ன?" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"கோமகனிடமிருந்து வந்த கடிதம்" என்று கூறிவிட்டு, அர்த்தபுஷ்டியுடன் கூடிய புன்சிரிப்போடு கடிதத்தை அவனிடம் கொடுத்தாள்.

"சரி, ஒரு நிமிஷம்" என்று சொல்லிவிட்டு கடிதத்தை வாங்கிக் கொண்டான். அக்ரபெனுவின் சிரிப்பைப் பார்த்தவுடன் அவனுக்கு ஆத்திரம் வந்தது.

சின்ன சீமாட்டி கோர்ச்சாகினுவிடமிருந்து அந்தக் கடிதம் வந்திருக்கிறது என்பதுதான் அந்தச் சிரிப்பின் அர்த்தம். அவளை அவன் மணக்கப் போவதாக அக்ரபெனு நினைத்தாள். அவளுடைய இந்தக் கற்பனைகள் அவனுக்கு எரிச்சலூட்டின.

"அப்படியானால் அவளை இருக்கச் சொல்லுகிறேன்" என்று சொல்லிவிட்டு, வெளியே சென்றாள் அக்ரபெனு பெட்ரோவ்னு.

என்று அவன் தனக்குள் சொல்லிக் கொண்டான். ஒரு வாரத்திற்கு முன்புதான் அவன் அவளுக்கு இறுதியாகக் கடிதம் எழுதியிருந்தான். அதில் தன் குற்றத்தை ஒப்புக்கொண்டு, அதற்கு ஈடு செய்யத் தயாரென்றும், ஆனால், அவளுடைய நன்மையை முன்னிட்டே, தங்களுடைய தொடர்பு துண்டிக்கப்பட்டு விட்டதென்றும் அவன் எழுதியிருந்தான். இந்தக் கடிதத்திற்கு இது வரை பதில் வரவில்லை. இது ஒரு நல்ல சகுனமே. ஏனென்றால், தொடர்பைத் துண்டித்துக்கொள்ள அவள் விரும்பவில்லை என்றால் உடனே பதில் எழுதி விட்டிருப்பாள்; அல்லது அவளே நேரில் வந்து விட்டிருப்பாள். ஏற்கனவே அவள் இப்படித்தான் செய்திருக்கிறாள். வேறு அதிகாரி ஒருவன் அவளைக் கவனித்து வருவதாக நிக்லியுடாவ் கேள்விப்பட்டிருந்தான். இதனால் அவனுக்குப் பொறாமை ஏற்பட்ட போதிலும், தனக்கு விடுதலை கிடைக்கும் என்ற நம்பிக்கை புலப்பட்டது.

மற்றொரு கடிதம் அவனுடைய பண்ணைக்காரனிடமிருந்து வந்திருந்தது. அவனுடைய ஏராளமான நிலங்களை நிர்வகிப்பது சம்பந்தமாக ஆலோசிக்க வருமாறு எழுதியிருந்தான். அதிருப்தி, சந்தோஷம் ஆகிய இரண்டையும் இந்தக் கடிதம் அளித்தது. அவ்வளவு சொத்தின் மீது தனக்கு உரிமை இருக்கிறது என்பதை நினைத்தபொழுது அவனுக்குச் சந்தோஷமாக இருந்தது. ஹெர்பர்ட் ஸ்பென்ஸரிடம் அவன் பக்தி கொண்டவனாகையால் அந்தக் கடிதம் அதிருப்தியளித்தது. "சொந்தத்தில் நிலம் வைத்திருப்பது அநியாயம்" என்று ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் கூறியிருப்பது அவன் மனதைப் பெரிதும் கவர்ந்தது. இந்தக் கொள்கையை ஆதரித்து விவாதம் நடத்தி, கலாசாலையில் கட்டுரைகள் எழுதியதோடு நிற்காமல், செய்கையிலும் அதைக் காட்டினான். தன் தந்தையிடமிருந்து தனக்குக் கிடைத்த ஐநூறு ஏகர் நிலத்தையும் குடியானவர்களுக்கு தானம் செய்து விட்டான். இப்பொழுது அவனுடைய தாயார் இறந்த பின் அவளுடைய ஏராளமான சொத்துக்கள் அவனுக்குக் கிடைத்தன. பத்து வருஷங்களுக்கு முன் தான் செய்தது போல் இந்த நிலங்களையும் விவசாயிகளுக்குப் பிரித்துக் கொடுத்து விடுவதா அல்லது தான்முன்பு கொண்டிருந்த கருத்துக்கள் தவறு என்பதை ஒப்புக்கொள்வதா என்ற இரண்டில் ஒரு முடிவு செய்ய வேண்டியிருந்தது.

முதலில் கூறியபடி முடிவு செய்ய அவனால் இயலவில்லை. அவன் ஜீவனம் நடத்துவதற்கு நிலத்தைத்தவிர வேறு ஒன்றுமில்லை. (சர்க்கார் உத்தியோகம் பார்க்க அவனுக்கு இஷ்டமில்லை) தவிர டாம்பீகமான பல வழக்கங்களையும் ஏற்படுத்திக்கொண்டு விட்டான். அவற்றை எளிதில் விட முடியவில்லை. அவனுடைய தீவிரமான அபிப்பிராயங்கள் இளமையின்

உறுதி, புதிதாக் ஏதாவது செய்ய வேண்டுமென்ற ஆவல் எல்லாம் போய் விட்டன. ஆனால் ஸ்பென்ஸரின் கருத்துக்களை ஹென்றி ஜார்ஜின் கருத்துக்களும் ஊர்ஜிதம் செய்தன. ஆகையால் இரண்டாவதாகக் கூறியபடி தீர்மானம் செய்வதும் அவனுக்கு அசாத்யமாக இருந்தது. இதனால் தான் பண்ணைக் காரனின் கடிதம் அவனுக்கு அதிருப்திகரமாக இருந்தது.

## 4

நிக்லியுடாவ் காப்பியைக் குடித்தானவுடன் தான் எத்தனை மணிக்குக் கோர்ட்டில் ஆஜராகவேண்டும் என்பதை அறிய சம்மனைப் பார்க்கவும், கோமகளுக்குப் பதில் எழுதவும் அறைக்குள் சென்றான். அவன் சித்திரம் தீட்டும் கூடத்தைத் தாண்டிச் செல்லும்பொழுது, பூர்த்தி பெறாமல் நின்றுகொண்டிருந்த ஒரு சித்திரம் அவன் கண்ணில் பட்டது. சுவற்றில் சில சித்திரங்கள் மாட்டப்பட்டிருந்தன. இந்தக் கலையை அபிவிருத்தி செய்ய முடியவில்லையே என்ற ஒரு வருத்த உணர்ச்சி, தனக்குத் திறமையில்லை என்ற ஓர் அபிப்பிராயம் அவனை வந்து கௌவியது. இப்பொழுதெல்லாம் அவனுக்கு இத்தகைய உணர்ச்சி அடிக்கடி வரத் தொடங்கியது. தன்னுடைய கலையுணர்ச்சி ரொம்பவும் அபிவிருத்தியடைந்துவிட்டதால் தான் தனக்கு இப்படித் தோன்றுகிறது என்று நினைத்து தன்னைத்தானே சமாதானப்படுத்திக் கொண்டான். கலையில் தனக்குச் சிறந்த ஞானம் இருப்பதாக நினைத்து ஏழு வருஷங்களுக்கு முன்னால் ராணுவ வேலையை விட்டான். அதே அபிப்பிராயத்துடன் தான் மற்ற வேலைகளையும் அவன் கேவலமாக மதித்தான். அப்படிச் செய்தது தவறு என்பது இப்பொழுது தெரிந்தது. ஆகையால் இதையெல்லாம் ஞாபக மூட்டிய எதுவும் அவனுக்கு அருவருப்பை அளித்தன. உயர்ந்த முறையில் அமைக்கப் பட்டிருந்த தன் சித்திரக் கூடத்தை வருத்தத்தோடு நோக்கினான். உற்சாகமிழந்து தன் அறைக்குள் பிரவேசித்தான். அங்கு எல்லாவிதமான வசதிகளும் அமைக்கப்பட்டு பார்ப்பதற்கு அழகாகக் காட்சியளித்தது. அவனுடைய பெரிய மேஜையின்மீது, "அவசரம்" என்று குறிக்கப்பட்ட ஒரு பொந்தில் சம்மன் கிடந்தது. கோர்ட்டில் பதினோருமணிக்கு ஆஜராக வேண்டும்.

கோமகளின் அழைப்புக்கு நன்றி செலுத்துவதாகவும், விருந்துக்கு வர முயல்வதாக உறுதியளித்தும் அவளுக்குப் பதில் எழுத நிக்லியுடாவ் உட்கார்ந்தான். ஒரு கடிதம் எழுதினான். அதில் அதிக நேசபாவம் தொனித்ததால் அதைக்

கிழித்து எறிந்துவிட்டான். மற்றொன்று எழுதினான். ஆனால் அது ரொம்பவும் கடுமையாக இருந்தது. அது அவளுக்குக் கோப மூட்டக்கூடும் என்று நினைத்து அதையும் கிழித்து எறிந்து விட்டான். ஒரு மின்சாரமணியின் பித்தானை அழுத்தினான். இருதா விட்டு க்ஷவரம்செய்யப்பட்ட முகத்துடனும், சாம்பல் நிறச் சட்டையுடனும் கூடிய தூங்குமூஞ்சி வேலைக்காரக் கிழவன் ஒருவன் உள்ளே வந்தான்.

"ஒரு வண்டி கொண்டுவரச்சொல்" என்றான் நிக்லியுடாவ்.

"சரி எஜமான்"

"கோர்ச்சாகின் வீட்டிலிருந்து வந்து காத்திருக்கும் ஆளிடம், "நான் வருவதாகச் சொன்னே'னென்று சொல்லச் சொல்."

"சரி எஜமான்."

"இப்படிச் சொல்வது மரியாதையில்லைதான். ஆனால் என்னால் எழுத முடியவில்லை. இன்று அவளைப் பார்க்கவே செய்து விடுகிறேன்" என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டு தன்னுடைய கோட்டைக் கொண்டுவருவதற்காகச் சென்றான்.

அவன் வீட்டைவிட்டு வெளியே வந்த பொழுது அவனுக்குத் தெரிந்த வண்டி ஒன்று, ரப்பர் கட்டுப் போட்ட சக்கரங்களோடு நின்றிருந்தது. "நீங்கள் கோர்ச்சாகின் வீட்டிலிருந்து அப்பொழுதுதான் போயிருப்பீர்கள். உடனே நான் அங்கு வந்து பார்த்தேன். 'இப்பொழுதுதான் போனார்' என்று வேலைக்காரன் சொன்னான்" என்றான் வண்டிக்காரன் பாதி திரும்பிக்கொண்டு. நிக்லியுடாவ் கோர்ச்சாகின் வீட்டிற்குப் போயிருந்தான் என்பது வண்டிக்காரனுக்குத் தெரியும். வீடு திரும்புவதற்குத் தன்னைக் கூப்பிடக்கூடும் என்ற அபிப்பிராயத்தோடு அங்கு போய் விசாரித்தான்.

"கோர்ச்சாகின் குடும்பத்தோடு எனக்கு உள்ள தொடர்பு வண்டிக்காரர்களுக்குக் கூடத் தெரிந்திருக்கிறது" என்று தனக்குத் தானே சொல்லிக்கொண்டான். "கோர்ச்சாகினாவை விவாகம் செய்து கொள்ளக் கூடாதா" என்ற பிரச்னை மறுபடியும் எழுந்தது. ஒருவிதமாகவும் முடிவு செய்ய அவனால் முடியவில்லை. இந்த சமயத்தில் அவன் மனத்தில் தோன்றிய எந்தப் பிரச்னையைப் பற்றியுமே அவனால் முடிவு செய்ய முடியவில்லை. விவாகம் செய்து கொள்வதால் ஏற்படும் குடும்ப சுகத்தோடு தார்மிக வாழ்க்கையும் நடத்தலாம் என்று அவனுக்குத் தோன்றியது. குடும்பம், குழந்தைகள் முதலியவை ஏற்பட்டால் இப்பொழுது சூன்யமாக இருக்கும் தன் வாழ்க்கைக்கு ஒரு லக்ஷியம்

ஏற்படும். விவாகத்திற்கு விரோதமான அபிப்பிராயங்களும் தோன்றின. பிரம்மாச்சாரிகளுக்குப் பொதுவாகத் தோன்றும், 'சுதந்திரம் போய்விடும்' என்ற அபிப்பிராயமும், பெண் என்ற விசித்திரப் பிராணியின் மீது ஏற்படும் ஒருவித பிரமிப்பும் அவனைப்பற்றிக் கொண்டன.

இப்பொழுது மிஸியை (கோர்ச்சாகினு கோமகளின் செல்லப் பெயர்) விவாகம் செய்து கொள்வதற்கு, அவள் பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவள் என்ற உண்மை ஆதரவாக இருந்தது. பேச்சு, நடை, சிரிப்பு முதலியவற்றில் பாமர ஜனங்களிலிருந்து அவள் வேறுபட்டிருந்தாள். வேறு விசேஷ காரணங்களினால் இல்லாவிட்டாலும், நல்ல சகவாசத்தினால் அவளுக்கு இந்தக் குணங்கள் படிந்திருந்தன. இந்தத் தன்மையை அவன் பிரமாத மாக மதித்த போதிலும் அதற்கு வேறு பெயர் கண்டுபிடிக்க அவனால் முடியவில்லை. மற்றவர்களைக் காட்டிலும் அவனைப் பற்றித்தான் அவள் அதிகமாகச் சிந்தித்தாள். அவனை நன்றாகத் தெரிந்துகொண்டிருந்தாள். அவனுடைய உயர்வை அவள் தெரிந்துகொண்டிருந்தது அவளுடைய புத்திசாலித் தனத்திற்கும், சரியாக மதிப்பிடும் திறமைக்கும் உதாரண மென்று அவன் கருதினான். ஆனால் வேறு சில விஷயங்களை நினைத்தபொழுது அவளை விவாகம்செய்து கொள்ளத் தோன்ற வில்லை. இவளைக் காட்டிலும் அதிக குணங்களோடு கூடிய பெண் கிடைக்கக்கூடும். இவளுக்கு ஏற்கனவே இருபத்தேழு வயதாகிவிட்டது. தான் அவளுடைய முதல் காதலனாக இருக்க முடியாது! இது அவனுக்கு ரொம்பவும் வேதனையை அளித் தது. அவள் வேறு ஒருவனை ஏற்கனவே காதலித்திருக்கக் கூடும் என்ற எண்ணத்தை அவனால் சகிக்கமுடியவில்லை. அவனைச் சந்திக்கப் போவது அவளுக்கு முதலில் தெரியாமல் இருந்திருக்கலாம். ஆனால் அவள் வேறு ஒருவனைக் காத லிக்க முடியும் என்ற எண்ணம் அவனுக்குத் துன்பத்தை அளித்தது.

அவளை விவாகம் செய்து கொள்வதற்குச் சாதக மாக எவ்வளவு காரணங்கள் இருந்தனவோ அவ்வளவு காரணங்கள் எதிராகவும் இருந்தன. அவை இரண்டும் சமமாக இருப்பதுபோல் நிக்லியுடாவுக்குத் தோன்றியது. தன் நிலைமையைப் பார்த்து அவனே சிரித்துக் கொண்டான். இரண்டு புல் கட்டுகளில் எதன்பக்கம் முதலில் திரும்புவது என்று தீர்மானிக்க முடியாமல் தவித்ததாகக் கதையில் சொல்லப்படும் கழுதையோடு தன்னை ஒப்பிட்டுக் கொண்டான்.

எப்படியிருந்தாலும் மேரி வாஸில்யெவ்னா (ஜில்லா அதிகாரியின் மனைவி)யிடமிருந்து பதில் கிடைத்து அவளுடைய உறவை முற்றிலும் அறுத்துக் கொள்ளும்வரை நான் ஒன்றும் செய்ய முடியாது'' என்று தனக்குத் தானே

சொல்லிக் கொண்டான். தான் ஒரு முடிவுக்கு வருவதை நிறுத்தி வைக்க வேண்டும் என்ற எண்ணம் அவனுக்கு இத மாக இருந்தது. வண்டி கோர்ட்டுக்கு அருகே போய்க்கொண் டிருந்தபொழுது, "இதையெல்லாம் பிறகு யோசித்துக் கொள் கிறேன்" என்று நினைத்தான்.

"இப்பொழுது என் பொதுக் கடமையை, வழக்கம்போல் மனப்பூர்வமாகச் செய்ய வேண்டும். அப்படிச் செய்வதுதான் சரியென்று எனக்குத் தோன்றுகிறது. அப்படிச் செய்வது ஸ்வாரஸ்யமாகவும் இருக்கிறது" என்றெல்லாம் யோசித்துக் கொண்டே கோர்ட் ஹாலுக்குள் பிரவேசித்தான் நிக்லியுடாவ்.

## 5

கோர்ட்டில் ஒரே பரபரப்பு. வேலைக்காரர்கள் ஏதோ காகிதங்களை எடுத்துக் கொண்டு அவசர அவசரமாகக் குறுக் கும் நெடுக்குமாகப் போய்க்கொண் டிருந்தார்கள். காவலில் இல்லாத வர்திகளும் பிரதிவாதிகளும் துயரத்தோடு அங்கு மிங்கும் அலைந்துகொண்டிருந்தார்கள். சிலர் முகத்தைத் தொங்கப்போட்டுக் கொண்டு ஒரு பக்கமாக உட்கார்ந்திருந் தனர்.

"கோர்ட் எது?" என்று நிக்லியுட்டாவ் ஒரு வேலைக்கார னைப் பார்த்துக் கேட்டான்.

"எந்தக் கோர்ட்? ஸிவில் கோர்ட் ஒன்று இருக்கிறது, கிரிமினல் கோர்ட் ஒன்று இருக்கிறது."

"நான் ஒரு ஜூரி."

"கிரிமினல் கோர்ட்டைக் கேட்கிறீர்களா? இப்படி வலப் பக்கம்போய் இடதுபுறம் திரும்புங்கள். இரண்டாவது அறை தான் கிரிமினல் கோர்ட்."

அவன் காட்டியவழியே நிக்லியுடாவ் சென்றான். அவன் சொன்ன வாசற்படியருகே இருவர் நின்றிருந்தனர். அவர் களில் ஒருவன் ஆஜானுபாகுவான, தடித்த தோற்றத்துடன் கூடிய வியாபாரி. அவன் அப்பொழுதுதான் ஏதோ சிற்றுண்டி சாப்பிட்டுவிட்டுக் குடித்துவிட்டு வந்திருந்தான் போலிருக் கிறது. ரொம்பவும் குஷியாக இருந்தான். மற்றவன் ஒரு யூத கடைக்காரன். நிக்லியுடாவ், அவர்கள் அருகே சென்று, "இதுதான் ஜூரிகளின் அறையா?" என்று கேட்டபொழுது அவர்கள் கம்பளத்தின் விலையைப் பற்றிப் பேசிக்கொண்டிருந் தார்கள்.

"ஆமாம். இதுதான். நீங்களும் ஒரு ஜூரிதானு ?" என்று உற்சாகத்துடன் கண்ணைச் சிமிட்டிக் கொண்டே கேட்டான் அந்த வியாபாரி.

"ஆமாம்" என்று நிக்லியுடாவ் பதிலளித்தவுடன், "நாம் சேர்ந்தே வேலைக்குப் போவோம். என் பெயர் பாலஸ்கோவ். நான் ஒரு வர்த்தகன். தங்களோடு சேர்ந்து வேலை செய்யும் பாக்கியம் எனக்குக் கிடைத்திருக்கிறது. தாங்கள் யார் ?' என்ருன் வியர்பாரி.

நிக்லியுடாவ் தன் பெயரை அறிவித்துவிட்டு ஜூரிகளின் அறைக்குள் பிரவேசித்தான்.

அந்த அறையில் பல துறைகளைச்சேர்ந்த பத்துபேர் இருந்தனர். அவர்களும் அப்பொழுதுதான் வந்திருந்தனர் சிலர் உட்கார்ந்திருந்தனர். சிலர் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டே ஒருவரை ஒருவர் அறிமுகம் செய்துகொண் டிருந்தனர். வேலையிலிருந்து ஓய்வு பெற்ற கர்னல் ஒருவன் ராணுவ உடையோடு வந்திருந்தான். சிலர் கோட் அணிந்திருந்தனர். சிலர் கருப்புச்சட்டை அணிந்திருந்தனர். ஒருவன் குடியானவன் உடை அணிந்திருந்தான். பொதுக் கடமையை நிறைவேற்றப் போகிருேம் என்ற பெருமை அனைவ ருடைய முகத்திலும் பிரதிபலித்தது. இதற்காகத் தங்கள் வேலைகளை விட்டுவிட்டு வரவேண்டியிருந்தது பற்றி அவர் களில் சிலர் புகார் செய்துகொண்டிருந்தனர்.

ஜூரிகளாக வந்திருந்தவர்கள் காலநிலை பற்றியும் வியாபா ரத்தைப் பற்றியும் இன்னும் பல விஷயங்களைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்தார்கள். மற்றவர்கள் தங்களுக்குத் தெரியாதவர் களைப் பற்றி ஊகித்துக் கொடிருந்தார்கள். நிக்லியுடாவுடன் அறிமுகம் செய்விக்கப்படாதவர்கள் அறிமுகம் செய்துகொள்ள விரைந்தனர். இது தங்களுக்கு ஒரு பெருமை என்று அவர்கள் நினைத்தனர். தனக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டிய கௌர வமே கிடைப்பதாக அவன் கருதினுன். முகமறியாதவர்கள் உள்ள இட்த்தில் அவன் இப்படித்தான் நடந்து கொள்வது வழக்கம். "மற்றவர்களைக் காட்டிலும் நீ உயர்ந்தவனென்று ஏன் நினைக்கிருய்?" என்று அவனை யாராவது கேட்டிருந்தால் அவ னுல் பதில் சொல்லி யிருக்க முடியாது. சிறிது காலமாக அவன் நடத்தி வந்த வாழ்க்கை புகழ்ச்சிக் குரியதல்ல என்பதை அவன் உணர்ந் திருந்தான். ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன் ஆகிய பாஷைகளை நல்ல உச்சரிப்புடன் பேச அவனுக்கு இருந்த பாண்டித்தியமோ நல்ல உடைகளோ தான் எதிர் பார்த்த கௌரவத்திற்குக் காரணமல்ல என்பதையும் அவன் நன்ருக அறிந்திருந்தான். இருந்தாலும் மற்றவர்களைக் காட்டிலும் தான் உயர்ந்தவனென்று நினைத்தான். மற்றவர்கள் தனக்கு அளித்த

கௌரவத்தை ஏற்றுக் கொண்டான். அது கிடைக்கவில்லையென்றால் ஆத்திர மடைந்தான். ஜூரிகள் அறையில் அவனுக்கு இது போன்ற மரியாதைக் குறைவு ஏற்பட்டால் அவனுக்குக் கோபம் மூண்டது. அவனுக்குத் தெரிந்த ஒருவன் ஜூரியாக வந்தான். நிக்லியுடாவின் சகோதரி குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்த பீட்டர் க்ரானிமோவிச் தான் அவன். அவனுடைய முழுப் பெயர் கூட நிக்லியுடாவுக்குத் தெரியாது. இது பற்றி அவன் பெருமைப் பட்டுக் கொண்டான். தனனுடன் நெருங்கிப் பழகியவன்போல் அவன் நடந்து கொண்டதோரணை, அவனுடைய சிரிப்பு. அவனுடைய அற்பத்தனமான நடவடிக்கைகள் முதலியவற்றை நிக்லியுடாவால் சகிக்க முடியவில்லை.

“நீங்களும் வலையில் சிக்கிக் கொண்டுவிட்டீர்களா? இதிலிருந்து தப்ப முடியவில்லையாக்கும்?” என்று உரக்கச் சிரித்துக் கொண்டே நிக்லியுடாவை வரவேற்றான் பீடர் கிரானிமோவிச்.

“நான் இதிலிருந்து தப்ப முயலவேயில்லை” என்று கடுமையான குரலில் பதிலளித்தான் நிக்லியுடாவ்.

“அதைத்தான் நான் பொது ஜன சேவை என்பது. ஆனால் பசியோ தூக்கமோ வரும்பொழுது உங்களுடைய சுருதியே மாறிவிடும்.”

“அடுத்தபடி என்னை இந்த ரிஷி குமாரன் ‘நீ’ என்று அழைக்கத் தொடங்கி விடுவான் போலிருக்கிறதே!” என்று நினைத்தான். தன்னுடைய பந்துக்களெல்லாம் இறந்து விட்ட செய்தியைக் கேட்டவன்போல் முகத்தில் சோகம் தாண்டவமாட அந்த இடத்தை விட்டு அகன்றான். கண்ணியமான தோற்றத்துடன் கூடிய நெட்டையான ஒருவனைச் சுற்றி நின்று கொண்டிருந்த ஒரு கோஷ்டிக்கருகே நிக்லியுடாவ் வந்தான். ஸிவில் கோர்ட்டில் நடந்து கொண்டிருந்த ஒரு வழக்கை அவன் உற்சாகத்துடன் விவரித்துக் கொண்டிருந்தான். ஒரு ஜட்ஜைப் பற்றியும் பெரிய வக்கீலைப் பற்றியும் நன்றாக அறிந்தவனைப்போல் பேசினான். ஒரு கிழவியின் பக்கம் நியாயம் இருந்தபோதிலும், அந்த வக்கீல் தன் திறமையால் வழக்கை மாற்றி பிரதிவாதிக்கு அவள் ஏராளமான பணம் கொடுக்கும்படி செய்ததை வர்ணித்தான்.

“அந்த வக்கீல் ஒரு பெரிய மேதாவி” என்றான் அவன்.

அவனைச் சுற்றி நின்றிருந்தவர்கள் மிகவும் மரியாதையுடன் அவன் சொன்னவற்றை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தனர். ஆனால் சிலர் நடுநடுவே சில வார்த்தைகள்

சொல்ல முயன்றனர். அவர்களை அடக்கிவிட்டு எல்லா விஷய மும் தனக்குத்தான் தெரியும் போல் பேசினன் அவன்.

நிக்லியுடாவே நேரம் கழித்துதான் வந்திருந்தாலும் அதற் குப் பிறகும் அதிக நேரம் அவன் காத்திருக்க வேண்டி யிருந் தது. நீதிபதிகளில் ஒருவர் வரவில்லை. அவருக்காக எல்லாரும் காக்க வேண்டி யிருந்தது.

## 6

பிரதமநீதிபதி முதலிலேயே வந்து விட்டார். உயரமும் பருமனுமாக, நரைத்த நீண்ட கிருதாக்களுடன் விளங்கினர் அவர். அவருக்கு விவாகமாகி யிருந்தபோதிலும் மோசமான வாழ்க்கை நடத்தி வந்தார். அவருடைய மனைவியும் அப் படியே இருந்ததால் ஒருவருக்கொருவர் இடைஞ்சலாக இல்லை. முன்பு அவர் வீட்டில் நிர்வாக வேலைகளைக் கவனித்து வந்த ஸ்விஸ் பெண்ணிடமிருந்து அன்று காலை அவருக்கு ஒரு கடிதம் வந்திருந்தது. அவள் தென் ரஷ்யாவிலிருந்து பீட்ர்ஸ் பர்க்குக்குச் செல்கிறாள். சாயங்காலம் ஐந்து மணியிலிருந்து ஆறு மணி வரையில் அவருக்காக இடாலியா ஹோட்டலில் காத்திருப்பதாக அவள் எழுதி யிருந்தாள். இதனல் விசாரணை யைச் சீக்கிரம் ஆரம்பித்து எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் முடித்து விட்டால் நல்லதென்று அவர் நினைத்தார். பொன் நிறக் கூந்தலோடு கூடிய அந்த சின்னஞ் சிறு கிளாராவை ஆறு மணிக்கு முன்னல், சந்திக்க அவகாசம் கேட்க வேண்டு மென்பது அவர் ஆவல். சென்ற கோடைக் காலத்தில்தான் அவளுடன் அவருடைய காதல் நாடகம் ஆரம்பமாயிற்று.

அந்தரங்க அறை ஒன்றுக்குள் அவர் சென்று கதவைத் தாளிட்டு, 'டம்பல்'களைக் கையில் பிடித்துக் கொண்டு கைகளை மேலும் கீழும், முன்னும் பின்னும், பக்கவாட்டிலுமாக இரு பது முறை நீட்டி மடக்கினர். பிறகு அவற்றைத் தலைக்கு மேல் பிடித்துக் கொண்டு மூன்று முறை கால்களை லேசாக வளைத்தார்.

"குளிர்ந்த நீரில் ஸ்நானம் செய்வதையும், தேகாப்பியாசத் தையும் போல் ஒருவனை ஆரோக்கியமாக வைத்துக் கொள்ளக் கூடியது ஒன்றுமில்லை" என்று சொல்லிக்கொண்டே வலது புஜத்தின் தசையைத் தடவிக் கொடுத்துக் கொண்டார். மற் ருெரு பயிற்சி பாக்கியிருந்தது. அதைச் செய்வதற்குள் கதவைத் தட்டும் சப்தம் கேட்டது. உடனே அவர் டம்பல்களை வைத்து விட்டு, "உங்களைக் காக்கவைத்து விட்டதற்காக

வருந்துகிறேன்" என்று சொல்லிக் கொண்டே கதவைத் திறந் தார்.

அதிருப்தி தோய்ந்த முகத்துடன், பொன் விளிம்போடு கூடிய மூக்குக் கண்ணாடி யணிந்த ஒரு நீதிபதி உள்ளே வந்தார்.

"மாத்யூ நிகிடிச் இன்னும் வரவில்லை" என்றார் அவர்.

"இன்னுமா வரவில்லை? அவர் எப்பொழுதும் தாமதித்துத் தான் வருகிறார்" என்றார் பிரதம நீதிபதி உடைகளை அணிந்த படியே.

வந்த நீதிபதி உட்கார்ந்து, ஒரு ஸிகரெட்டை எடுத்த படியே, "தம்மைப்பற்றி அவர் வெட்கப்படாமல் எப்படி இருக்கி றார் என்பது தெரியவில்லை" என்றார்.

இவர் அன்று காலை தம் மனைவியோடு சண்டை போட்டு விட்டு வந்திருந்தார். அவளுக்குக் கொடுத்த பணத்தை மாதக் கடைசிக்குள் செலவழித்து விட்டு அதிகப் பணம் கேட்டாள். இவர் அவளுக்கு விட்டுக் கொடுக்கமாட்டார். ஆகையால் ரகளை. இவர் இப்படி நடந்து கொள்வதென்றால் சாப்பாட்டை எதிர்பார்க்க முடியாதென்று மனைவி சொன்னாள். அவள் தன் வாக்கை நிறைவேற்றிவிடப் போகிறாளே என்று பயந்து இவர் அந்த நிலையில் தன் வீட்டைவிட்டுப் புறப்பட்டு விட்டார். அவள் எதையும் செய்யக்கூடியவள். ஆரோக்கியமும் உற்சாக மும் நிறைந்த பிரதம நீதிபதியைப் பார்த்து, சிந்திக்கத்தொடங் கினார். "ஒழுங்கான வாழ்க்கை நடத்தினால் இப்படி ஆகிறது. இவர் எப்பொழுதும் குஷியாகவும் திருப்தியுடனும் இருக்கி றார்" என்று அவர் நினைத்தார்.

அப்பொழுது ஏதோ சில காகிதங்களுடன் குமாஸ்தா உள்ளே வந்தான்.

"இன்று முதலில் எந்த வழக்கை எடுத்துக் கொள்ள லாம்?" என்று கேட்டார் பிரதம நீதிபதி.

"விஷ வழக்கு" என்றான் குமாஸ்தா அலக்ஷியமாக.

"சரி, அதுவே இருக்கட்டும்" என்றார் பிரதம நீதிபதி, இதை நான்கு மணிக்குள் முடித்துவிட்டுப் போய்விடலாம் என்ற அபிப்பிராயத்தோடு. "மாத்யூ நிகிடிச் வந்துவிட்டாரா?" என்று கேட்டார் குமாஸ்தாவை நோக்கி.

"இன்னும் இல்லை,"

"பிரேவே?"

"வந்திருக்கிறார்."

"நீங்கள் அவரைப் பார்த்தால், 'விஷ வழக்கை முதலில் விசாரணைக்கு எடுத்துக்கொள்கிறோம்' என்று சொல்லுங்கள்."

பப்ளிக் பிராஸிக்யூடர் பிரெவே இந்த வழக்கைத் தயாராக வைத்திருந்தார்.

முற்றத்தில் வேகமாகப் போய்க்கொண்டிருந்த பிரெவேயை குமாஸ்தா சந்தித்தான்.

"நீங்கள் தயாராக இருக்கிறீர்களா என்று மைக்கேல் பெட்ரோவிச் அறிய விரும்புகிறார்" என்றான் குமாஸ்தா.

"ஓ, நான் எப்பொழுதுமே தயாராகத்தான் இருக்கிறேன்" என்றார் பப்ளிக் பிராஸிக்யூடர். "முதலில் எதை விசாரணைக்கு எடுத்துக் கொள்கிறார்கள்?"

"விஷ வழக்கு."

"ரொம்ப சரி" என்றார் பப்ளிக் பிராஸிக்யூடர். ஆனால், அது சரியென்று அவர் உண்மையில் நினைக்கவில்லை.

முதல் நாள் இரவு முழுவதும் ஒரு நண்பனோடு ஹோட்டலில் சீட்டாடிக் கொண்டிருந்தார் அவர். காலை ஐந்து மணி வரையில் குடிப்பதும் சீட்டாடுவதுமாக இருந்துவிட்டார். ஆகையால் விஷ வழக்கைப் பற்றிக் கவனிக்க அவருக்கு அவகாசமில்லை. அதை இப்பொழுது கவனிக்க விரும்பினார் அவர் குமாஸ்தா இதை அறிந்துதான் விஷ வழக்கை முதலில் எடுத்துக் கொள்ளும்படி தலைவரிடம் கூறினான். அவன் ஒரு தீவிரவாதி. பிரெவே ஒரு பெரிய "வைதிகன்". அவரைக் கண்டாலே குமாஸ்தாவுக்குப் பிடிக்காது. அவருடைய அந்தஸ்த்தைக் கண்டு பொறாமை.

"ஸ்காப்ட்ஸி ஜாதியின் மீது கொண்டுவரப் பட்டிருக்கும் வழக்கு என்ன ஆவது?" என்றான் குமாஸ்தா.

"சாட்சிகள் இல்லாமல் அந்த வழக்கை நடத்த முடியாதென்று முன்னாலேயே சொல்லிவிட்டேன். அதையே தான் கோர்ட்டில் சொல்லப் போகிறேன்."

"அதனால் என்ன பிரமாதம்?"

"அதை நடத்த முடியாது" என்று உறுதியுடன் கையை ஆட்டிக்கொண்டே சொல்லிவிட்டு பிரெவே தம்முடைய அறைக்குள் விரைந்தார்.

முக்கியமில்லாத ஒரு சாட்சி இல்லை என்ற காரணத்திற்காக ஸ்காப்ட்ஸி ஜாதியாரின் வழக்கை அவர் ஒத்திவைத்தார். கல்வியறிவு படைத்த ஜூரிகளின் முன்னால் அவர்களை

கைக்குட்டை ஒன்று சுற்றப்பட்டிருந்தது. அவள் வயதான வளாகக் காணப்பட்டாள். சிவந்த கண்களோடு, புருவமோ, கண் இமை மயிரோ இல்லாமல் காணப்பட்டாள். அவள் மிகவும் சுத்தமாகவே இருந்தாள். வரும்பொழுது அவளுடைய உடை எதிலோ சிக்கிக்கொண்டு விட்டது. எவ்வித பரபரப்பு மின்றி நிதானமாக அதை விடுவித்துக் கொண்டு வந்து உட்கார்ந்தாள்.

மூன்றுவது கைதி மாஸ்லோவாதான்! அவள் கோர்ட்டில் பிரவேசித்தவுடன் அங்கு இருந்த அனைவருடைய கண்களும் அவள் பக்கம் திரும்பின. அவளுடைய வெண் முகத்திலும், கருவிழிகளிலும், விம்மிய மார்பிலும் அவர்களுடைய பார்வை சென்று நின்று விட்டது. காவல்காரன்கூட அவள் தன்னைக் கடந்து சென்று உட்காரும் வரை அவளையே கவனித்துக் கொண்டிருந்தான். பிறகு ஏதோ குற்றம் செய்து விட்டவனைப்போல் பார்வையை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு, உடம்பைச் சிலிர்த்துக்கொண்டு, எதிரே இருந்த ஜன்னலை வெறித்துப் பார்த்தான்.

கைதிகள் தங்கள் ஸ்தானங்களில் உட்காரும் வரையில் பிரதம நீதிபதி மௌனமாக இருந்தான்! மாஸ்லோவா உட்கார்ந்தபின் குமாஸ்தா பக்கம் திரும்பினுர்.

பிறகு வழக்கமான நடவடிக்கைகள் ஆரம்பமாயின. ஜூரிகளை எண்ணுவது, வராதவர்களைப் பற்றிய புகார்கள். அவர்களிடமிருந்து வசூலிக்க வேண்டிய அபராதத் தொகைகளை நிர்ணயிப்பது, விதி விலக்கு கோரியவர்களைப் பற்றி முடிவுசெய்வது முதலியவை நடந்தன.

பிறகு ஜூரிகளிடமிருந்து பிரமாணம் வாங்கிக் கொள்ளுமாறு லூ—பாதிரியாரைப் பிரதம நீதிபதி கேட்டுக்கொண்டார். வெளிறிய மஞ்சள்நிற முகத்தோடு கூடிய அந்தச் சந்நியாசி, தம் பழுப்புநிற அங்கியோடும், தங்கச் சிலுவையோடும் கஷ்டப்பட்டுக் காலைத்தூக்கிவைத்து நடந்து தம் மேடைக்கு வந்தார், ஜூரிகள் அவரைச்சுற்றிச் சூழ்ந்து கொண்டனா.

அவர் மார்பில் அணிந்திருந்த சிலுவையை இழுத்துப் பிடித்துக்கொண்டு "வாருங்கள்" என்று கூறிவிட்டு. எல்லா ஜூரிகளும் வரும்வரை காத்திருந்தார்.

இந்த சந்நியாசி நாற்பத்தாறு வருஷமாக வேலை பார்த்து வருகிறுர். இன்னும் மூன்று வருஷங்களில் அவர் பொன் விழா கொண்டாட ஏற்பாடு செய்துகொண்டிருந்தார். சிறிது காலத்திற்கு முன்னுல் பெரிய பாதிரியார் கொண்டாடியது

போலவே அவரும் கொண்டாட விரும்பினார். அந்தக் கிரிமினல் கோர்ட் ஆரம்பமானது முதல் அவர் அதில் வேலைசெய்து வருகிறார். ஆயிரக் கணக்கானவர்களிடம் பிரமாணம் வாங்கியிருப்பது பற்றியும், தம்முடைய வயதையும் மீறி சர்ச்சுக்கும், தந்தையர் நாட்டுக்கும், தம் குடும்பத்திற்கும் சேவை செய்து வருவதுபற்றியும் அவர் பெருமையடைந்தார். தம் குடும்பத்திற்கு வட்டிவரக் கூடிய முறையில் முப்பதினாயிரம் ரூபிள்களுக்கு தஸ்தாவேஜிகள் வைத்திருந்தும், யாரும் வேதத்தின் மீது பிரமாணம்செய்வதைக் கேட்பது கேவலம்என்பது அவருக்குத் தோன்றியதேயில்லை. இதைப்பற்றி அவர் கவலைப்பட்டதில்லை. இதற்கு மாறாக இந்த வேலையை அவர் ரஸிக்கக் கூடச் செய்தார். இதன்மூலம் பெரிய மனிதர்களெல்லாம் அவருக்கு அறிமுகமானார்கள். சொத்தை இழந்த கிழவிக்கு எதிராக ஆஜரான பிரபல வக்கீல் தமக்கு அறிமுகமானதுபற்றிக் கூட அவர் சந்தோஷப்படாமலில்லை.

பிறகு அவர் ஜூரிகளை நோக்கி, "உங்கள் வலது கையை இப்படி உயர்த்தி, விரல்களை ஒன்றுசேர்த்து வைத்துக்கொள்ளுங்கள்" என்று நடுங்கும் தம் கிழக்குரலில் கூறினார். தடித்த தம் கையை உயர்த்தி, கட்டைவிரல், ஆள்காட்டி விரல் நடுவிரல் ஆகிய மூன்றினாலும் ஒரு சிட்டிக்கை தூளைப் பிடித்துக்கொண்டிருப்பதுபோல் விரல்களைப் பிடித்துக் காட்டினார். "இப்பொழுது நான் சொல்வதைத் திருப்பிச் சொல்லுங்கள்: 'எல்லாம் வல்ல இறைவன் பெயராலும், அவருடைய புனிதமான வேதங்களின் பெயராலும், ஜீவன் கொடுக்கும் கர்த்தரின் சிலுவையின் பெயராலும் பிரமாணம் செய்கிறேன். இந்த வேலையில்......" தாம் சொன்னதை மற்றவர்கள் திருப்பச் சொல்வதற்காக ஒவ்வொரு வார்த்தைக்குப் பிறகும் சற்று நிறுத்தினார். தன் கையைச் சிறிது தாழ்த்திய ஓர் இளைஞனைப் பார்த்து, "கையைத் தாழ்த்தாதே; இப்படிப் பிடித்துக்கொள்" என்றார். "இந்த வேலையில் ......" என்று மீண்டும் தொடங்கினார்.

கிருதாவோடு கூடிய கம்பீரமான மனிதர், கர்னல், வியாபாரி, ஆகியவர்களும் மற்றவர்களும் தங்கள் கைகளை மற்றவர்களைவிட அதிகமாக உயர்த்திப் பிடித்துக்கொண்டிருந்தனர். அப்படிச் செய்வது தங்களுக்கு ரொம்பவும் பிடித்திருந்தது போல் காட்டிக்கொண்டனர். மற்றவர்கள் இதில் இஷ்டமில்லாமல் அலக்ஷியத்துடன் செய்தனர். சன்னியாசி உச்சரித்த வார்த்தைகளைச் சிலர் உரத்த குரலில் திருப்பிச் சொன்னார்கள் "எல்லோருக்கும் மேலாக நாங்கள் பேசியே தீர்வோம்" என்று அவர்கள் உறுதி கொண்டிருந்ததாகத் தோன்றியது. சிலர் மிகவும் மெதுவாக உச்சரித்தார்கள். பிறகு பயந்துவிட்டவர்கள்போல் சன்னியாசி கூறியவற்றை எட்டிப்பிடிக்க முயன்

ருர்கள். விரல்களுக்கிடையில் பிடித்திருந்த, கண்ணுக்குத் தெரியாத ஏதோ ஒரு பொருளை நழுவ விடுவதற்குப் பயந்தவர்களைப்போல அவர்கள் தங்கள் விரல்களை மிகவும் கெட்டியாகப் பிடித்திருந்தனர். மற்றவர்கள் விரல்களை அகற்றிவைத்துக் கொண்டிருந்தனர். சன்னியாசியைத் தவிர மற்ற எல்லாருக்கும் இது அவலக்ஷணமாகத் தோன்றியது. ஆனால் அந்தச் சன்னியாசி மாத்திரம் மிகவும் உபயோகமான, முக்கியமான ஒரு வேலையைச் செய்வதாகவே நினைத்தார்.

பிரமாணம் வாங்கும் சடங்கு முடிந்த பிறகு போர்மன்னைத் தேர்ந்தெடுக்குமாறு ஜூரிகளை பிரதம நீதிபதி கேட்டுக்கொண்டார். உடனே ஜூரிகள் விவாத அறைக்குள் சென்று சிகரெட்டைப் பற்றவைத்தனர். போர்மன் ஸ்தானத்திற்கு அந்தப் பெரிய மனிதரின் பெயரை ஒருவர் பிரேரேபித்தார். மற்றவர்கள் அனைவரும் அதை அங்கீகரித்தனர். பிறகு ஜூரிகள் தங்கள் சிகரெட்டுகளை அணைத்து எறிந்துவிட்டு கோர்ட்டுக்குத் திரும்பினர். தாம் போர்மனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதாகப் பெரிய மனிதர் பிரதம நீதிபதியிடம் அறிவித்தார். ஜூரிகள் அனைவரும் தங்கள் ஸ்தானங்களில் அமர்ந்தனர்.

எல்லாம் ஒழுங்காகவும், சீக்கிரமாகவும் சிறிது பயபக்தியுடனும் நடைபெற்றன. அதில் கலந்து கொண்டவர்களுக்கு இந்தச் சூழ்நிலை பிடித்திருந்தது. தாங்கள் ஒரு முக்கியமான கடமையைச் செய்வதாக அவர்களுக்கு இருந்த உணர்ச்சியை இது பலப்படுத்தியது. நிக்லியடாவ் கூட இதை உணர்ந்தான்.

ஜூரிகள் தங்கள் ஸ்தர்னங்களில் அமர்ந்தவுடன் அவர்களுடைய உரிமைகள், உதவி, பொறுப்பு ஆகியவற்றைப் பற்றி பிரதம நீதிபதி ஒரு பிரசங்கம் செய்தார். பேசுகையில் அவர் அடிக்கடி மாறிமாறி உட்கார்ந்து கொண்டே பேசினார்.

கைதிகளை அவர்கள் தலைவர் மூலம் கேள்விகள் கேட்கலாமென்றும், காகிதம் பென்ஸில் ஆகியவற்றை உபயோகிக்கலாமென்றும், சாட்சியத்திற்காகக் கொண்டுவரப்படும் பொருள்களைப் பரிசிலனை செய்யலாமென்றும் பிரதம நீதிபதி கூறினார். தவறாக முடிவு செய்யாமல் நியாயமாக முடிவு செய்வதே அவர்களுடைய கடமை என்று கூறினார். அவர்களுடைய விவாதங்கள் ரகசியமாக இருக்கும்படி பார்த்துக் கொள்வது அவர்களுடைய பொறுப்பென்றும் இதை மீறி, ரகசியத்தை வெளியே தெரியப்படுத்தினால் தண்டனை கிடைக்கக் கூடுமென்றும் கூறினார். மிக மரியாதையுடன் எல்லாரும் அப்பிரசங்கத்தைக் கவனித்தனர். பிராந்தி நாற்றத்தைத் தன்னைச் சுற்றிப் பரப்பிக்கொண்டு, உரத்த விக்கல்களை அடக்க முயன்று கொண்டு

உட்கார்ந்திருந்த வியாபாரி நீதிபதி ஒவ்வொரு வாக்கியம் பேசும் பொழுதும் அதை அங்கீகரிப்பதுபோலத் தலையை ஆட்டிக் கொண்டிருந்தான்.

## 9

பிரதம நீதிபதி தன் பிரசங்கத்தை முடித்துக் கொண்டு, கைதிகள் பக்கம் திரும்பி, ''ஸைமன் கார்டின்கின், எழுந்திரு'' என்றார்.

ஸைமன் துள்ளி எழுந்தான். அவன் உதடுகள் அதிக வேகமாக அசைந்தன.

''உன் பெயர்?''

''ஸைமன் பெட்ரோவ் கார்ட்டின்கின்.'' வார்த்தைகள் வேக மாக வந்தன. அவன் பதிலைத் தயாராக வைத்திருந்தான் என்பது தெரிந்தது.

''நீ எந்த வகுப்பைச் சேர்ந்தவன்?''

''விவசாயி.''

''எந்த சர்க்கார், ஜில்லா, பாரிஷ்?''

''துளா சர்க்கார், இரபிவெஸ்கா ஜில்லா, குபியாக்ஸ்கி பாரிஷ், போர்க்கி என்ற கிராமம்.

''உன் வயது?''

''முப்பத்து மூன்று; பிறந்த வருஷம் ஆயிரத்தி—''

''என்ன மதம்?''

''ரஷ்ய மதம், வைதிகம்.''

''விவாகமாகி விட்டதா?''

''இல்லை''

''உன் தொழில்?''

''மாரிடேனியா ஹோட்டலில் இருந்தேன்.''

''இதற்கு முன்னால் ஏதாவது வழக்கில் விசாரிக்கப்பட் டிருக்கிறாயா?''

"விசாரிக்கப்பட்டதில்லை, ஏனென்றால் நாங்கள் முறைப்—"

"அப்படி யென்றால் இதற்கு முன் நீ விசாரிக்கப்பட்டதில்லையா?"

"கடவுள் கிருபையால் இல்லை."

"குற்றச்சாட்டின் நகல் உனக்குக் கிடைத்ததா?"

"கிடைத்தது."

"உட்கார்."

பிறகு பிரதம நீதிபதி அடுத்த கைதியை நோக்கி, "யூபேமியா இவனோவ்னா போச்கோவா" என்று கூப்பிட்டார்.

ஆனால் போச்கோவாவுக்கு முன்னால் ஸைமன் நின்று கொண்டேயிருந்தான்.

"கார்ட்டின்கின், உட்கார்."

கார்ட்டின்கின் நின்றுகொண்டேயிருந்தான்.

"கார்ட்டின்கின், உட்கார்."

ஆனால் கோர்ட் சேவகன் வந்து, "உட்கார், உட்கார்" என்று அதிகார தோரணையுடன் அடங்கிய குரலில் கூறிய பிறகுதான் அவன் உட்கார்ந்தான். அவன் எவ்வளவு வேகமாக எழுந்தானோ அவ்வளவு வேகமாக உட்கார்ந்தான். தன் உடையை இழுத்துப் போர்த்திக் கொண்டு உட்கார்ந்து மறுபடியும் தன் உதடுகளை சப்தமின்றி அசைக்கத் தொடங்கி விட்டான்.

"உன் பெயர்?" என்று கைதியை நிமிர்ந்து பார்க்காமலே, அலுப்புடன் பெருமூச்சு விட்டுக்கொண்டு கேட்டார் பிரதம நீதிபதி. தம்முன் மேஜைமீது கிடந்த ஒரு காகிதத்தைத் அவர் பார்த்துக் கொண்டிருந்தார். இந்த வேலைகளெல்லாம் அவருக்கு ரொம்பவும் பழக்கமானவை. ஆகையால் சீக்கிரம் முடிப்பதற்காக இரண்டு வேலைகளை ஒரே சமயத்தில் கவனித்தார்.

போச்கோவாவுக்கு வயது நாற்பத்து மூன்று. கொலோம்னா நகரைச் சேர்ந்தவள். அவளும் மாரிடானியா ஹோட்டலில் தான் வேலை செய்து கொண்டிருந்தாள்.

"நான் இதற்கு முன்னால் விசாரிக்கப்பட்டதில்லை. குற்றச் சாட்டின் நகல் கிடைத்தது" என்று தைரியமாகப் பதில் அளித்தாள் அவள்.

ஒரு காலத்தில் தான் காதலித்து, உணர்ச்சியில் மதியிழந் திருந்த காலத்தில் கெடுத்து சந்தியில் விட்டு விட்டுப் பிறகு அவளைப் பற்றி சிந்திக்காமலே இருந்தவிட்ட பெண் இவள் தான் என்பதைத் தெரிந்து கொண்டான். தன் பிறப்பைப் பற்றிப் பெருமைப் பட்டுக்கொண்டிருந்த அவன் ஒரு பெண்ணை மிகக் கேவலமாக நடத்தினான் என்ற ஞாபகம் தன்னைப் பெரிதும் துன்புறுத்தி தண்டிக்கும் என்ற எண்ணத்தினால் அவளைப் பற்றி அவன் மறுபடியும் சிந்திக்கவே யில்லை.

அந்தப் பெண்ணேதான் இவள். அந்த விசித்திரமான, ஒருவர் முகஜாடையி லிருந்து மற்றொருவருடைய முகஜாடையைத் தனியாக வேறுபடுத்திக் காட்டும் விவரிக்க முடியாத அந்தத் தனித் தன்மையை இப்பொழுது அவள் முகத்தில் நன்றாகக் கண்டான்.

எல்லா முகத்திலும் காணமுடியாத, அவள் முகத்திற்கே சொந்தமான விசேஷக் களையைக் கண்டான். அசௌக்கியத்தினால் முகம் வெளுத்துப் போயிருந்தாலும் இந்த தனிக்களை காணப்பட்டது. அந்த அதரங்களிலும், சிறிது வக்கரையாக இருந்த அந்தக் கண்களிலும், அந்தக் குரலிலும், விசேஷமாக அவளுடைய புன் சிரிப்பிலும் அவள் முகத்திலும் தோற்றத்திலும் காணப்பட்ட துணிச்சலிலும் அது காணப்பட்டது.

"நீ அப்படிச் சொல்லியிருக்க வேண்டும்" என்று தொடங்கினார் பிரதம நீதிபதி, "உன் தந்தையின் பெயர்?"

"என் தந்தை யாரென்பது தெரியாது."

"உன் வளர்ப்புத் தந்தையின் பெயரை உனக்கு வைக்கவில்லையா?"

"ஆம். மிகெய்லோவ்னா"

"இவள் என்ன குற்றம் செய்திருக்க முடியும்?" என்று தனக்குள்ளேயே தொடர்ந்து கேட்டுக் கொண்டான் நிக்லியுடாவ். அவனால் தாராளமாக மூச்சுவிடக்கூட முடியவில்லை.

"உன் குடும்பப் பெயர்?" என்று கேட்டார் பிரதம நீதிபதி.

"மாஸ்லோவா என்பார்கள்"

"வகுப்பு?"

"தொழிலாளர் வகுப்பு"

"மதம்? வைதிகமா?"

"வைதிக மதம்தான்."

"வேலை? நீ என்ன தொழில் செய்துகொண்டிருந்தாய்?"

மாஸ்லோவா மௌனமாக இருந்தாள்.

"நீ என்ன வேலையில் இருந்தாய்?"

"நான் ஒரு ஸ்தாபனத்தில் இருந்தேன்."

"என்ன ஸ்தாபனம் அது?" என்று கடுமையாகக் கேட்டார் மூக்குக் கண்ணாடி நீதிபதி.

"உங்களுக்கே தெரியும்" என்று சொல்லிவிட்டு அவள் ஒரு புன் சிரிப்புச் சிரித்தாள். பிறகு அறையைச் சுற்றி அவசரமாக ஒரு முறை தன்பார்வையைச் செலுத்திவிட்டு, மறுபடியும் பிரதம நீதிபதியை நோக்கினாள்.

அவளுடைய முகத்தோற்றத்தில் இயற்கைக்கு விரோதமான ஏதோ ஒன்று காணப்பட்டது. அவள் சொன்ன வார்த்தைகளில் ஏதோ ஒரு பயங்கர அர்த்தம் துவனித்தது. அந்தப் புன்முறுவலிலும் அறையைச் சுற்றி அவள் செலுத்திய பார்வையிலும் அதே பயங்கரம் கலந்திருந்தன. ஒரு க்ஷணம் அந்த ஹாலில் நிசப்தம் குடிகொண்டது. யாரோ ஒருவர் சிரித்து அந்த நிசப்தத்தைக் கலைத்தார். பிறகு "ஷ்..." என்று ஒருவர் கூறி அந்தச் சிரிப்பை அடக்கினார். பிறகு பிரதம நீதிபதி நிமிர்ந்து பார்த்து, மீண்டும் விசாரணையைத் தொடர்ந்தார்.

"இதற்கு முன்னால் நீ எப்பொழுதாவது விசாரிக்கப்பட்டிருக்கிறாயா?"

"இல்லை" என்று மிருதுவான குரலில் பதிலளித்துவிட்டு மாஸ்லோவா பெருமூச்சுவிட்டாள்.

"குற்றச் சாட்டின் நகலைப் பெற்றுக்கொண்டாயா?"

"பெற்றுக்கொண்டேன்."

"உட்கார்."

அவள் கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்தாள். அவளுடைய பார்வை இன்னமும் பிரதம நீதிபதியின்மீதே பதிந்திருந்தது.

பிறகு சாட்சிகள் அழைக்கப்பட்டனர். ஒரு டாக்டர் தேர்ந்தெடுக்கப்பட்டு உள்ளே அழைத்து வரப்பட்டார்.

பிறகு குமாஸ்தா குற்றப்பத்திரிகையை உரக்கப் படித்தான். அவன் படித்தபொழுது பதங்களின் உச்சரிப்பு ஒன்றோடு ஒன்று சேர்ந்து ஒரே தொடர்ச்சியான சப்தமாகக் கேட்டது.

நீதிபதிகள் நாற்காலியின் ஒருபக்கத்துக் கையின்மீது சிறிது நேரமும் மற்றொரு பக்கத்துக் கையின்மீது சிறிது நேரமும், மேஜையின்மீது சிறிது நேரமும் சாய்ந்து கொண்டனர். சில சமயங்களில் ஒருவரோடு ஒருவர் முணுமுணுத்துப் பேசிக்கொண்டனர். ஒருவர் அடிக்கடி வந்த கொட்டாவியை அடக்கிக் கொள்ள முயன்றார்.

கார்ட்டின்கின் என்ற கைதி தன் தாடைகளை அசைப்பதை நிறுத்தவில்லை. போகோவா அமைதியாக நிமிர்ந்து உட்கார்ந்திருந்தாள். சற்று நேரத்திற்கு ஒரு முறை அவள் தலையைச் சொரிந்துகொண்டிருந்தாள்.

மாஸ்லோவா, படித்துக்கொண்டிருந்தவனையே உற்றுப் பார்த்துக்கொண்டு அசையாமல் உட்கார்ந்திருந்தாள். சற்று நேரத்திற்கு ஒரு முறை அவள் ஏதோ பதில் சொல்ல விரும்புபவள் போல நிமிர்வாள். அவள் முகம் சிவக்கும். நீண்ட பெருமூச்சுவிடுவாள். கட்டியிருந்த கையை மாற்றிவைத்துக் கொண்டு அறையைச் சுற்றிப் பார்ப்பாள். மறுபடியும் அவள் பார்வை அவன் மீதே பதியும்.

நிக்லியுடாவ் முதல் வரிசையில் உட்கார்ந்திருந்தான். அவன் மூக்குக்கண்ணாடியைக் கழற்றாமலே மாஸ்லோவாவைப் பார்த்தான். அவன் மனத்துள் சிக்கலான கடும்போராட்டம் நடந்துகொண்டிருந்தது.

## 10

குற்றச்சாட்டு :—

"சைபீரியாவைச் சேர்ந்த தொரபண்ட் ஸ்மெல்கோவ் என்ற வியாபாரி, ஹோட்டலில் திடீரென்று இறந்ததாக மாரிடேனியா ஹோட்டல் சொந்தக்காரர் 188–ம் வருஷம் ஜனவரி மாதம் பதினேழாம் தேதி யன்று போலீசாருக்கு அறிவித்தார்.

அதிக மதுவகைகள் உபயோகிக்கப்பட்டதால் ஹிருதயக் கோளாறு ஏற்பட்டு அவர் மாண்டதாக போலீஸ் டாக்டர் அறிவித்தார். மாண்டவரின் உடல் அடக்கம் செய்யப்பட்டது.

ஸ்மெல்கோட் மாண்ட நான்காம் நாள், அவருடைய சகவர்த்தகரான டிமோகின், பீடர்ஸ்பார்க்கி லிருந்து திரும்பி வந்தார். தம் நண்பர் ஸ்மெல்கோவின் மரணம் பற்றி அவர் கேள்விப்பட்டவுடன், அவன் இயற்கையாகச் சாக வில்லை யென்றும், கீழ்க்கண்டவர்கள் அவருக்கு விஷம் கொடுத்திருக்கக் கூடுமென்று தாம் சந்தேகிப்பதாகவும் புகார் செய்தார். அவரிடம் இருந்த சிறிது பணம், வைரமோதிரம் முதலியவற்றை அவர்கள் களவாடிக் கொண்டிருக்கிருர்களென்று அவர் கூறினர். இதுபற்றி விசாரித்ததில் கீழ்க்கண்ட விவரங்கள் வெளியாயின :—

1. காலம் சென்ற ஸ்மெல்கோவிடம் 3800 ரூபிள்கள் இருந்திருக்க வேண்டும். இது பாங்கியிலிருந்து வாங்கிய தொகை. இது மாரிடேனியா ஹோட்டல் முதலாளிக்கும், ஸ்மெல்கோவ் இந்நகருக்கு வந்தவுடன் அவரோடு பேரம்செய்து கொண்டிருந்த ஸ்டாரிகோவ் என்ற வியாபாரியின் குமாஸ்தாவுக்கும் தெரியும். ஆனல் ஸ்மெல்கோவ் மாண்டவுடன் சீல் வைக்கப்பட்ட அவருடைய பெட்டியிலும் பணப் பையிலும் முன்னூற்றுப் பன்னிரண்டு ரூபிள்களும் சிறிது சில்லரையும் தான் இருந்தன.

2. ஸ்மெல்கோவ் இறப்பதற்கு முந்தின நாள் முழுவதும் லுப்கா என்ற விபசாரியின் வீட்டில் இருந்தார், அதற்கு முன் ஹோட்டலில் அவருடைய அறைக்கு அவள் இருமுறை வந்திருக்கிருள்.

3. ஸ்மெல்கோவுக்குச் சொந்தமான ஒரு வைர மோதிரத்தை அவள் தன் எஜமானிக்கு விற்ருள்.

4. யுபேமியா புகோவா என்ற வேலைக்காரி, ஸ்மெல்கோவ் மாண்ட மறு நாள் 1800 ரூபிள்களை பாங்கியில் கட்டிஞள்.

5. ஸைமன் கார்ட்டின்கின் என்ற ஹோட்டல் வேலைக்காரன் லுப்காவிடம் ஏதோ சூர்ணத்தைக் கொடுத்து, அதை பிராந்தியில் கலந்து ஸ்மெல்கோவுக்குக் கொடுத்து விடுமாறு கூறியதாக லுப்காவே ஒப்புக்கொண்டிருக்கிருள். லுப்கா அப்படியே செய்ததாகவும் அவள் ஒப்புக்கொண்டிருக்கிருள்.

"லுப்கா என்று புனைப் பெயர் இடப்பட்டுள்ள விபசாரியைக் குறுக்கு விசாரணை செய்தபொழுது, தான் வேலை செய்யும் விபசாரி விடுதியில் அந்த வியாபாரி இருக்கையில் தன்னை ஹோட்டலுக்கு அனுப்பிக் கொஞ்சம் பணம் எடுத்து வரச் சொன்னதாகவும் அவள் சென்று அவன் கொடுத்த

சாவியைக் கொண்டே அவன் பெட்டியைத் திறந்து அவன் கூறிய படியே நாற்பது ரூபிள்களை எடுத்துக்கொண்டதாகவும், அதற்கு மேல் ஒன்றும் எடுத்துக்கொள்ள வில்லை என்றும் கூறினாள். போச்கோவாவும் கார்ட்டின்கின்னும் இருந்த பொழுது தான் வியாபாரியின் பெட்டியைத்தான் திறந்து பூட்டியதாகவும், தான் கூறுவது உண்மை என்பதை அவர்கள் நிரூபிப்பார்களென்றும் அவள் சொன்னாள்.

அவள் இரண்டாம் முறை அவர் தங்கியிருந்த இடத்திற்கு வந்த பொழுது, ஸைமன் கார்ட்டின்கின்னின் தூண்டுதலின் பேரில் ஒரு டம்ளர் பிராந்தியில் ஏதோ ஒரு சூர்ணத்தைக் கலந்து, ஸ்மெல்கோவுக்குக் கொடுத்தாள். ஸ்மெல்கோவ் தூங்கி விடுவார் என்றும் அப்பொழுது தப்பிச் சென்று விடலாம் என்றும் நினைத்தே அவள் அப்படிச் செய்தாள். மோதிரத்தை மாத்திரம் ஸ்மெல்கோவே தனக்குக் கொடுத்ததாக அவள் கூறினாள். ஸ்மெல்கோவ் தன்னை அடித்ததாகவும், தான் அழுது கொண்டே, போய் விடுவதாக பய முறுத்திய பொழுது ஸ்மெல்கோவ் தன் மோதிரத்தைத் தனக்குக் கொடுத்ததாகவும் அவள் அறிவித்தாள்.

"யுபேமியா போச்கோவாவைக் குறுக்கு விசாரணை செய்த பொழுது காணமற் போனபணத்தைபற்றித்தனக்கு ஒன்றுமே தெரியாதென்று கூறினாள். ஸ்மெல்கோவின் அறைக்குள் அவள் போனதே இல்லையாம். லூப்காதான் அங்கு ஏதோ செய்து கொண்டிருந்தாளாம். ஏதாவது திருட்டுப் போயிருந்தால் அதை லுப்காதான் திருடியிருக்க வேண்டும்" என்று அவள் கூறினாள்.

இந்த சமயத்தில் மாஸ்லோவா நிமிர்ந்து, தன் வாயைச் சிறிது திறந்து போச்கோவாவைப் பார்த்தாள்.

குமாஸ்தா மீண்டும் குற்றப்பத்திரிகையைப் படிக்கத் தொடங்கினார். "ஆயிரத்து எண்ணூறு ரூபிளுக்கான பாங்கி ரசீதை போச்கோவாவிடம் காட்டி அந்தத்தொகை அவளுக்கு எங்கிருந்து கிடைத்ததென்று கேட்ட பொழுது, அது பதினெட்டு வருஷங்களாகத்தான் சம்பாதித்த தொகையும், தான் மணக்க விருந்த ஸைமன் சம்பாதித்த தொகையும் சேர்ந்தது என்று கூறினாள்.

"மாஸ்லோவாவின் தூண்டுதலின்பேரில் தானும் போச்கோவாவும் பணத்தைத் திருடியதாக ஸைமன் கார்ட்டின்கின் முதல் விசாரணையில் ஒப்புக்கொண்டான். தாங்கள் மூவரும் அந்தப் பணத்தைச் சமமாகப் பங்கிட்டுக் கொண்டதாக அவன் சொன்னான். ஸ்மெல்கோவைத் தூங்க வைப்பதற்காக தான் 'சூர்

ணம் கொடுத்ததாகவும் அவன் ஒப்புக்கொண்டான். இரண்டாம் தரம் அவனை விசாரித்த பொழுது பணத்தைத்தான் திருடவில்லை யென்றும் மாஸ்லோவாவுக்கு சூர்ணம் கொடுக்கவில்லை என்றும் மறுத்தான். போச்கோவா பாங்கியில் கட்டிய தொகைபற்றி அவள் சொன்னதையே தான் அவனும் சொன்னான் — அதாவது, தங்களுடைய பதினெட்டு வருஷ வேலைக் காலத்தில் ஹோட்டலுக்கு வந்தவர்கள் சன்மானமாகக் கொடுத்தவற்றைச் சேர்த்து வைத்ததன் மூலம் கிடைத்த தொகையே அது வென்று கார்ட்டின்கின்னும் கூறினான்.

"சந்தர்ப்பத்தை முன்னிட்டு ஸ்மெல்கோவின் உடலைப்பரிசோதிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. புதைக்கப்பட்ட உடலைத் தோண்டி எடுக்குமாறு உத்தரவு பிறந்தது. ஸ்மெல்கோவின் உடலைப் பரிசோதித்ததில் விஷத்தினால் தான் அவர் மாண்டதாகத் தெரிய வந்தது."

பிறகு பிரேத விசாரணை விவரங்களும் சாக்ஷிகள் கூறியவையும் விவரிக்கப்பட்டன. குற்றப் பத்திரிகையின் கடைசிப் பகுதி கூறியதாவது:

"ஸ்மெல்கோவ் என்ற வியாபாரி குடிப் பழக்கமும் விபசாரிகள் வீட்டிற்குச் செல்வதும் வழக்கம். கிடேவா என்பவளின் வீட்டில் லுப்கா என்ற புனைப் பெயர் கொண்டவளோடு அவர் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டார். அவள்மீது ஏற்பட்ட அபிமானத்தினால் 188-ம் வருஷம் ஜனவரி மாதம் 17-ம் தேதியன்று, விபசார விடுதியில் அவர் இருந்தபொழுது, பணம் கொண்டு வருவதற்காக அவளிடம் தன் சாவியைக் கொடுத்து அனுப்பினார். மாரிடேனியா ஹோட்டலுக்கு மாஸ்லோவா வந்த பின், அவளும் பாச்கோவா, கார்ட்டின்கின் ஆகியவர்களும் சேர்ந்து வியாபாரியின் பணம் முழுவதையும், இதர விலை உயர்ந்த பொருள்களையும் திருடிக் கொள்வதென்று முடிவு செய்தனர். அப்படியே செய்தும் விட்டார்கள்."

இந்த சமயத்திலும் மாஸ்லோவா முகம் சிவக்க நிமிர்ந்து எழுந்திருக்கவே எழுந்து விட்டாள்.

குமாஸ்தா படித்துக் கொண்டே போனான்:—

"மாஸ்லோவாவின் பங்குக்கு வைர மோதிரம் கிடைத்தது, சிறிது பணமும் கிடைத்திருக்கக் கூடும். அதை அவள் எங்காவது மறைத்து வைத்திருப்பாள். அல்லது அன்று அவள் குடி மயக்கத்தில் இருந்தபடியால் அதை இழந்து விட்டிருக்கவும் கூடும். இவர்கள் தங்கள் குற்றத்தை மறைப்பதற்காக ஸ்மெல்கோவை அவர் தங்கி யிருந்த ஹோட்டலுக்கு அழைத்து வந்து, ஆர்ஸனிக் விஷம் கொடுக்கத் தீர்மானித்

தனர். மாஸ்லோவா இந்த நோக்கத்தோடு ஸ்மெல்கோவிடம் சென்று அவரை மாரிடேனியா ஹோட்டலுக்கு வரும்படி அழைத்தாள். அவள் ஹோட்டலுக்கு வந்தவுடன், கார்ட்டின்கின்னிடமிருந்து மாஸ்லோவா வாங்கி வைத்திருந்த சூர்ணத்தை பிராந்தியில் கலந்து ஸ்மெல்கோவுக்குக் கொடுத்து விட்டாள். அதனால் ஸ்மெல்கோவ் மாண்டார்.

“மேலே சொன்ன விவரங்களை முன்னிட்டு, ஸைமன் கார்ட்டின்கின், யுபோமியா போச்கோவா, காதரின் மாஸ்லோவா ஆகியவர்கள் 188-, ஜனவரி, 17-ம் தேதியன்று ஒன்று கூடிக்கொண்டு ஸ்மெல்கோவ் என்ற வியாபாரியின் சொத்துக்களைத் திருடி, தங்கள் குற்றத்தை மறைப்பதற்காக அந்த வியாபாரியைக் கொல்லும் நோக்கத்துடன் அவருக்கு விஷம் கொடுத்ததாக இவர்கள் மீது குற்றம் சாட்டப்படுகிறது.

“இந்தக் குற்றம், பீனல் சட்டத்தின் 1455-வது பிரிவின் கீழ் வருகிறது. ஆகையால் ஸைமன் கார்ட்டின்கின், யுபேமியா போச்கோவா, காதரின் மாஸ்லோவா ஆகியவர்கள் ஜூரிகளால் விசாரிக்கப்படுவதற்காக ஜில்லா கோர்ட்டில் கொண்டு வந்து நிறுத்தப்பட்டிருக்கிறார்கள்.”

இவ்விதம் நீண்ட குற்றப் பத்திரிகையைக் குமாஸ்தா படித்து முடித்தான். பிறகு காகிதத்தை மடித்து வைத்து விட்டு, தன்னுடைய தலையைக் கோதி விட்டுக் கொண்டே உட்கார்ந்தான். இனி விசாரணை ஆரம்பமாகி, எல்லாம் சீக்கிரம் முடிந்துவிடும் என்ற நோக்கத்தோடு எல்லாரும் ஆச்வாஸப் பெரு மூச்சு விட்டனர். நிக்லியுடாவ் மாத்திரம் அவ்விதம் நினைக்கவில்லை. பத்து வருஷங்களுக்கு முன்னால், சூது வாது அறியாத மாஸ்லோவா என்ன செய்திருக்கக் கூடும் என்று நினைத்துப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் மனதில் ஒரு விதமான பயங்கரமான உணர்ச்சி தோன்றியது.

## 11

குற்றப்பத்திரிகையைப் படித்து முடித்தபின், பிரதம நீதிபதி,தம் சகாக்களிடம் ஏதோ கேட்டுவிட்டு,“நடந்த விஷயங்களை ஒன்று விடாமல் இப்பொழுது கண்டு பிடித்து விடுகிறோம் பார்” என்று கூறுவது போன்ற முகபாவத்துடன் காட்டின்கின் பக்கம் திரும்பினார்.

“கார்ட்டின்கின்!” என்று இடது பக்கம் திரும்பியபடி அழைத்தார்.

கார்ட்டின்கின் எழுந்து, முன்னால் சாய்ந்தபடி, ஒன்றும் பேசாமல், தன் வாயை மாத்திரம் அசைத்துக் கொண்டு நின்றான்.

"போச்கோவா, மாஸ்லோவா ஆகியவர்களுடன் சேர்ந்து ஸ்மெல்கோவ் என்ற வியாபாரியின் பணத்தைத் திருடியதாகவும், பிறகு அவரைக் கொல்வதற்காக மாஸ்லோவா மூலம் விஷம் கொடுத்ததாகவும் உன் மீது குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது. நீ குற்றத்தை ஒப்புக் கொள்கிறாயா?" என்று பிரதம நீதிபதி வலது பக்கம் திரும்பிக் கொண்டு கேட்டார்.

"இல்லை; ஹோட்டலுக்கு வந்து தங்குபவர்களைக் கவனிப்பது என் வேலை—"

"அவற்றை நீ பிறகு சொல்லலாம். குற்றத்தை ஒப்புக் கொள்கிறாயா?"

"ஓ. இல்லை. நான்--"

"நீ அதை யெல்லாம் பிறகு சொல்லிக்கொள்ளலாம். குற்றத்தை ஒப்புக் கொள்கிறாயா?" என்று பிரதம நீதிபதி சீக்கிரமாகவும் உறுதியுடனும் கேட்டார்.

"நான் அப்படிச் செய்ய முடியாது. ஏனென்றால்—"

ஸைமன் கார்ட்டின்கின்னிடம் கோர்ட் சேவகன் ஓடி ஏதோ ரகசியமாகச் சொல்லித் தடுத்தான்.

பிரதம நீதிபதி சிறிது மாறி உட்கார்ந்து, "இது முடிந்து விட்டது" என்ற தோரணையோடு யுபேமியா போச்கோவா பக்கம் திரும்பினார்.

"யுபேமியா போச்கோவா, 188-,ஜனவரி 17-ம் தேதியன்று மாரிடேனியா ஹோட்டலில், ஸைமன் கார்ட்டின்க்கின், காதரினா மாஸ்லோவா ஆகியவர்களுடன் சேர்ந்து கொண்டு, ஸ்மெல்கோவ் என்ற வியாபாரியின் பணத்தையும் மோதிரத்தையும் திருடியதாகவும், பிறகு அந்த வியாபாரிக்கு விஷம் கொடுத்ததாகவும் உன்மீது குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது. நீ குற்றத்தை ஒப்புக் கொள்கிறாயா?"

"நான் ஒரு குற்றமும் செய்யவில்லை" என்று கைதி தைரியமாகவும் உறுதியுடனும் சொன்னாள். "நான் அந்த அறை அருகில்கூடப் போகவில்லை. ஆனால் இந்தப் பெண் உள்ளே சென்றபொழுது அதைச் செய்திருக்கிறாள்."

"அதையெல்லாம் பிறகு பேசிக்கொள்ளலாம்" என்று பிரதம நீதிபதி கூறிவிட்டு, "நீ குற்றத்தை ஒப்புக் கொள்ள வில்லையா?" என்று உறுதி துவனிக்கும் குரலில் கேட்டார்.

"நான் பணத்தையும் எடுக்கவில்லை; விஷம் கலந்த பானத்தையும் கொடுக்கவில்லை. அந்த அறைக்குள் செல்லவுமில்லை. நான் உள்ளே போயிருந்தால் அவளை உதைத்து வெளியே துரத்தி யிருப்பேன்."

"ஆனால் நீ குற்றத்தை ஒப்புக்கொள்ள வில்லையா?"

"இல்லவே இல்லை"

"சரி"

"காதரினு மாஸ்லோவா?" என்று தொடங்கினுர் பிரதம நீதிபதி மூன்ருவது கைதியை நோக்கி. "வியாபாரியின் பெட்டிச் சாவியோடு நீ விபசார விடுதியிலிருந்து வந்து, பெட்டியில் இருந்த சிறிது பணத்தையும் மோதிரத்தையும் திருடியதாக குற்றம் சாட்டப்பட் டிருக்கிறது" என்ருர் அவர் நெட்டுருச் செய்த பாடத்தை ஒப்பிப்பதுபோல். தம் இடது பக்கத்தில் உட்கார்ந்திருந்த நிக்லியுடாவின் பக்கம் சாய்ந்துகொண்டே, இவற்றை யெல்லாம் கூறினுர். சாட்சியப் பொருள்களின் ஜாபிதாவில் குறிப்பிடப்பட்டுள்ள ஒரு ஜாடியைக் காணவில்லை என்று அந்த நீதிபதி ரகசியமாகச் சொன்னுர்.

"அவருடைய பெட்டியிலிருந்து பணத்தையும் மோதிரத்தையும் திருடியதாகவும், அதை மற்றவர்களோடு பங்கிட்டுக் கொண்டதாகவும், பிறகு ஸ்மெல்கோவுடன் மாரிடேனியா ஹோட்டலுக்குத் திரும்ப வந்து அவருக்கு விஷம் கொடுத்ததாகவும்; அவ்விதம் அவருக்கு மரணம் ஏற்படும்படி செய்ததாகவும் உன் மீது குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது, நீ குற்றத்தை ஒப்புக்கொள்கிருயா?" என்று மறுபடியும் தொடர்ந்து கேட்டார் பிரதம நீதிபதி.

"நான் ஒரு குற்றமும் செய்யவில்லை" என்று பரபரப்புடன் ஆரம்பித்தாள் அவள். "நான் முன்பே சொன்னதுபோல இப்பொழுதும் சொல்கிறேன்—நான் அதை எடுக்கவில்லை. நான் அதை எடுக்கவில்லை. நான் ஒன்றையும் எடுக்கவில்லை. அந்த மோதிரத்தை அவரேதான் எனக்குக் கொடுத்தார்." என்ருள்.

"இரண்டாயிரத்து அறுநூறு ரூபிள்களைத் திருடியதாகச் சாட்டியிருக்கும் குற்றத்தை நீ ஒப்புக்கொள்ள வில்லையா?" என்று கேட்டார் பிரதம நீதிபதி.

"அந்த நாற்பது ரூபிள்களைத் தவிர வேறு ஒன்றையும் நான் எடுத்துக் கொள்ளவில்லை என்று முன்பே சொன்னேனே!"

"சரி, அந்த வியாபாரிக்கு பானத்தில் ஒரு தூளைக் கலந்து கொடுத்ததாக சாட்டியிருக்கும் குற்றத்தை ஒப்புக்கொள்கிறாயா?"

"ஆம். அதைச் செய்தேன். அது தூக்கமருந்து என்றும் அதனால் ஒரு தீமையும் வராது என்றும் அவர்கள் சொன்னதை நான் நம்பினேன். இப்படி நடக்குமென்று நான் நினைக்கவோ விரும்பவோ இல்லை. கடவுள்தான் எனக்குச் சாட்சி."

"ஆகையால், பணத்தையும் மோதிரத்தையும் திருடிய குற்றத்தை நீ ஒப்புக்கொள்ளவில்லை என்றும், ஆனால் அந்தச் சூர்ணத்தை அவருக்குக் கொடுத்ததை ஒப்புக் கொள்வதாகவும் கூறுகிறாயா?"

"ஆமாம் அதை ஒப்புக் கொள்கிறேன். ஆனால் அது ஒரு தூக்கமருந்து என்றுதான் நான் நம்பினேன். அவரைத் தூங்கச் செய்வதற்காகத் தான் நான் அதைக் கொடுத்தேன். வேறு எந்த நோக்கத்தோடும் அல்ல"

"ரொம்ப சரி" என்றார் பிரதம நீதிபதி. இந்த பதில்களைக் கேட்டுத் திருப்தியடைந்தவர்போல. "அவை யெல்லாம் எப்படி நேர்ந்தன என்பதை இப்பொழுது சொல். குற்றங்களை மறைக்காமல் ஒப்புக்கொள்வதில் உனக்குத்தான் நல்லது" என்று நாற்காலியின். பின்புறம் சாய்ந்துகொண்டே கூறினார் பிரதம நீதிபதி.

மாஸ்லோவா நிமிர்ந்து நீதிபதியின் முகத்தையே பார்த்தாள்.

"எப்படி நடந்ததென்று சொல்"

"எப்படி நடந்தது!" என்று பரபரப்புடன் திடீரென்று தொடங்கினாள் மாஸ்லோவா. "நான் ஹோட்டலுக்கு வந்தேன் அந்த அறைக்குள் போகும்படி சொன்னார்கள். அவர் அங்கு இருந்தார். ஏற்கனவே அவர் அதிகம் குடித்து விட்டிருந்தார்" என்றாள். "அவர்" என்ற பதத்தை உச்சரிக்கும் பொழுது அவளுடைய அகன்ற விழிகளில் பயங்கரம் ஒளிவீசியது. "நான் வெளியே போய்விட விரும்பினேன். ஆனால் அவர் விடவில்லை." பேச்சின் தொடர்ச்சியை விட்டுவிட்டவள் போலவோ

அல்லது வேடனைத் தேடிப் பிடித்துக்கொண்டவள் போலவே அவனைச் சுற்றிப் பார்த்திருந்தாள்.

"பிறகு?"

"பிறகு என்ன? நான் சற்று நேரம் அங்கு இருந்தேன். பிறகு வீட்டுக்குத் திரும்பிவிட்டேன்."

இந்த சமயத்தில் சர்க்கார் வக்கீல் எழுந்து முழங்கையை ஊன்றிச் சிறிது சாய்ந்துகொண்டு விநயமான முறையில் நின்றான்.

"நீங்கள் ஏதாவது கேள்வி கேட்க விரும்புகிறீர்களா?" என்றார் பிரதம நீதிபதி. ஆம் என்று சர்க்கார் வக்கீல் பதிலளித்தார். பிறகு சமிக்ஞையின் மூலம் அவரைப் பேச அனுமதித்தார் பிரதம நீதிபதி.

"கைதிக்கு ஸைமன் கார்ட்டின்கினை முன்னாலேயே தெரியுமா என்று நான் கேட்க விரும்புகிறேன்" என்று சர்க்கார் வக்கீல் பிரதம நீதிபதியைப் பார்த்தபடி கேட்டுவிட்டு, வாயை அழுத்தி மூடிக்கொண்டார். பிரதம நீதிபதி அதே கேள்வியைத் திருப்பிக் கேட்டார்.

மாஸ்லோவா பயம் கலந்த கண்களால் சர்க்கார் வக்கீலை நோக்கி, "ஸைமனையா? தெரியும்" என்றாள்.

"எப்படித் தெரியும்? அவர்கள் அடிக்கடி சந்திக்கிறார்களா?"

"எப்படியா?.........ஹோட்டலுக்கு வருகிறவர்களுக்காக அவன் என்னை அழைப்பான். அதை அறிமுகமென்று கூடச் சொல்லமுடியாது" என்று மாஸ்லோவா தன் பார்வையை பிரதம நீதிபதி மீதிருந்து சர்க்கார் வக்கீல் பக்கமும், மீண்டும் அவனிடமிருந்து பிரதம நீதிபதி பக்கமும் செலுத்தியபடி பதிலளித்தாள்.

"ஹோட்டலுக்கு வருபவர்களுக்காக மற்ற பெண்களையெல்லாம் விட்டுவிட்டு மாஸ்லோவாவை மாத்திரம் ஸைமன் ஏன் அழைக்கவேண்டும்?" என்று கண்ணைப் பாதி மூடிக்கொண்டே கேட்டார், சர்க்கார் வக்கீல்.

"எனக்குத் தெரியாது. எனக்கு எப்படித் தெரியும்?" என்று மாஸ்லோவா பதிலளித்துவிட்டு பயம் கலந்த பார்வையை அறையைச் சுற்றிச் செலுத்திவிட்டு, கடைசியாக

நிக்லியுடாவின் மீது தன் பார்வையை நிலை நிறுத்தி, "அவனுக்கு இடைமானவனை அழைத்தான்" என்றாள்.

"அவள் என்னை அடையாளம் கண்டுகொண்டு விட்டிருப்பாளோ?" என்று நிக்லியுடான் தனக்குள் கேட்டுக்கொண்டான். உடனே முகம் சிவந்தது. ஆனால், மாஸ்லோவா தன் பார்வையை வேறு பக்கம் செலுத்தி சர்க்கார் வக்கீலின்மீது பதியச் செய்தாள்.

"ஆகையால் சைமனோடு தனக்கு நெருங்கிய தொடர்பு இல்லை என்று கைதி கூறுகிறாளா? அப்படியானால் நான் மேற்கொண்டு ஒரு கேள்வியும் கேட்கவில்லை."

பிறகு சர்க்கார் வக்கீல் ஏதோ எழுதத் தொடங்கினார். அவர் உண்மையில் ஒன்றும் எழுதவில்லை. பெரிய வக்கீல்கள் கேள்விகளைக் கேட்டுவிட்டு ஏதோ குறித்துக்கொள்வதுபோல் தானும் நடிப்பதற்காக அவர் ஏதோ கிறுக்கினார்.

பிரதம நீதிபதி உடனே கைதியை ஒன்றும் கேட்காமல், மூக்குக்கண்ணாடி நீதிபதியின் பக்கம் திரும்பி, "ஏற்கனவே எழுதி வைத்திருந்த கேள்விகளைக் கேட்க வேண்டுமா?" என்று கேட்டார்.

"பிறகு என்ன நடந்தது?" என்று கேட்டார் பிரதம நீதிபதி.

மாஸ்லோவா முன்னைக்காட்டிலும் அதிக தைரியத்துடன் சொன்னாள்: "நான் வீட்டுக்கு வந்தேன். பணத்தை எஜமானியிடம் கொடுத்துவிட்டு படுக்கப் போய்விட்டேன். நான் நன்றாகத் தூங்குவதற்குள் அங்கு உள்ள பெண்களில் ஒருத்தியான பிரெதா வந்து என்னை எழுப்பினாள். "போ, உங்கள் வியாபாரி மறுபடியும் வந்திருக்கிறான்" என்றாள். நான் போக விரும்பவில்லை. ஆனால் எஜமானி என்னைப் போகும்படி நிர்ப்பந்தித்தாள். அவர்"—மறுபடியும் "அவர்" என்ற பதத்தை அவள் உச்சரித்தபோது அவள் பீதியடைந்தாள்—"அவர் அங்கு இருந்த பெண்களுக்கெல்லாம் விருந்து நடத்தினார். இன்னும் அதிக சாராயம் வாங்கிவா ஆள் அனுப்ப அவர் விரும்பினார். ஆனால் அவர் கையில் இருந்த பணமெல்லாம் செலவாகிவிட்டது. எஜமானி அவரை நம்பவில்லை. அவர் பணம் இருக்கும் இடத்தையும், எவ்வளவு பணம் எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதையும் என்னிடம் சொல்லி தாம் தங்கியிருந்த இடத்திற்கு என்னை அனுப்பினார், ஆகையால் நான்போனேன்.

பிரதம நீதிபதி, தம் இடது பக்கத்தில் உட்கார்ந்திருந்த நீதிபதியோடு ரகசியமாக ஏதோ பேசிக்கொண்டிருந்தார்.

ஆனால் அவன் கூறியவற்றைத் தாம் கவனித்து வந்ததாக நடிப்பதற்காக அவன் கூறிய கடைசி வார்த்தைகளைத் திருப்பிச் சொன்னார்.

"ஆகையால் நீ போனாய். பிறகு என்ன நடந்தது?"

"நான் போய் அவன் சொன்னபடியே செய்தேன். நான் போகும்பொழுது தனியாகப் போகவில்லை. சைமன் கார்ட்டின்கின்னையும் அவளையும் அழைத்துக்கொண்டு போனேன்" என்று போச்கோவாவைச் சுட்டிக்காட்டிக் கூறினாள்.

"அது பொய். நான் உள்ளே போகவில்லை" என்று ஆரம்பித்தாள் போச்கோவா. ஆனால் அவளைத் தடுத்து விட்டார்கள்.

"அவர்களுடைய எதிரிலேயே நான் நான்கு நோட்டுகளை எடுத்துக் கொண்டேன்" என்று தொடங்கினாள் மாஸ்லோவா போச்கோவாவைப் பாராமலே.

"கைதி நாற்பது ரூபிள்களை எடுத்தபொழுது, பெட்டியில் எவ்வளவு பணம் இருக்கிறது என்பதைக் கைதி கவனித்தாளா?" என்று சர்க்கார் வக்கீல் கேட்டார்.

அவர் கேட்டபொழுது மாஸ்லோவா நடுங்கினாள். அது ஏனென்பது அவளுக்கே விளங்கவில்லை. ஆனால் தனக்கு தீமை நேரவேண்டுமென்று அவர் விரும்புகிறார் என்று மாத்திரம் அவளுக்குத் தோன்றியது.

"நான் எண்ணிப் பார்க்கவில்லை. சில நூறு ரூபிள் நோட்டுகள் இருந்ததைப் பார்த்தேன்.

"ஹா! நூறு ரூபிள் நோட்டுகளைக் கைதி பார்த்தாள்! அவ்வளவுதான்!"

"பணத்தை எடுத்துக்கொண்டு வந்தாயா?" என்று பிரதம நீதிபதி கடியாரத்தைப் பார்த்துக்கொண்டே கேட்டார்.

"கொண்டு வந்தேன்"

"பிறகு?"

"பிறகு அவர் என்னைத் திரும்பி அழைத்துக்கொண்டு வந்தார்.

"அந்தச் சூர்ணத்தை அவருக்கு எப்படிக் கொடுத்தாய்? அவருடைய பானத்திலா கலந்து கொடுத்தாய்?"

"எப்படிக் கொடுப்பது? பானத்தில் போட்டேன் கொடுத்தேன்".

"ஏன் கொடுத்தாய்?"

அவள் உடனே பதில் அளிக்கவில்லை. நீண்ட பெருமூச்சுவிட்டாள். "அவர் என்னைப் போகவிடாமல் தடுத்தார்" என்றாள் மாஸ்லோவா. சிறிது மௌனத்திற்குப் பின் அவள் மீண்டும் தொடர்ந்து: நான் ரொம்பவும் களைத்துப் போயிருந்தேன். ஆகையால் நான் வெளியே வந்து, 'அவர் என்னைப் போகவிட்டால் தேவலை, நான் ரொம்பவும் களைத்துப் போயிருக்கிறேன்' என்று ஸைமனிடம் கூறினேன். 'எங்களுக்குக் கூட அவனைப் பிடிக்கவில்லை. அவனுக்குத் தூக்க மருந்து கொடுக்க வேண்டுமென்று நாங்கள் நினைத்திருந்தோம். அவன் தூங்கிவிட்டால் நீ போகலாம்' என்று ஸைமன் கூறினான். 'சரி' என்றேன் நான். அதனால் தீமை ஒன்றும் நேராது என்று நான் நினைத்தேன். அந்தப் பொட்டலத்தை அவன் என்னிடம் கொடுத்தான். நான் உள்ளே சென்றேன். வியாபாரி படுத்துக்கொண்டிருந்தார். பிராந்தி வேண்டுமென்று அவர் கேட்டார். மேஜை மீது இருந்த பிராந்தி பாட்டிலை எடுத்து இரு கிண்ணங்களில் ஊற்றி அவருக்கு ஒரு கிண்ணமும் எனக்கு ஒரு கிண்ணமும் வைத்தேன். அவருடைய கிண்ணத்தில் தூளைப்போட்டு அவருக்குக் கொடுத்தேன். இப்படி நடக்குமென்று தெரிந்திருந்தால் நான் கொடுத்திருப்பேனா?"

"சரி, அந்த மோதிரம் உன்னிடம் எப்படி வந்தது?" என்று கேட்டார் பிரதம நீதிபதி.

"அவரே கொடுத்தார்."

"எப்பொழுது கொடுத்தார்?"

"அவர் தங்கியிருந்த இடத்திற்கு நாங்கள் திரும்பி வந்தவுடனே கொடுத்தார். நான் போகவேண்டுமென்றேன். அவர் என் தலையில் ஒரு அடி கொடுத்தார். நான் கோபித்துக் கொண்டு போய் விடுவதாகக் கூறினேன். நான் போகாமல் இருக்கும்படி செய்வதற்காக அவர் தம் விரலிலிருந்து மோதிரத்தை எடுத்து என்னிடம் கொடுத்தார்" என்றாள்.

மறுபடியும் சர்க்கார் வக்கீல் எழுந்து, ரொம்பவும் எளிமையாக இருப்பவர்போல நடித்து, சில கேள்விகள் கேட்க விரும்புவதாகக் கூறினார். பிரதம நீதிபதி அனுமதி அளித்தார்.

"வியாபாரியின் அறையில் கைதி எவ்வளவு நேரம் இருந்தாள்?" என்று கேட்டார் சர்க்கார் வக்கீல்.

மாஸ்லோவா மீண்டும் நடுங்கினாள். சர்க்கார் வக்கீலிடமிருந்து பிரதம நீதிபதி பக்கம் பார்வையைத் திருப்பி, "எவ

ஆனால் அவள் கூறியவற்றைத் தாம் கவனித்து வந்ததாக நடிப்பதற்காக அவள் கூறிய கடைசி வார்த்தைகளைத் திருப்பிச் சொன்னார்.

" ஆகையால் நீ போனாய். பிறகு என்ன நடந்தது ?"

" நான்போய் அவள் சொன்னபடியே செய்தேன். நான் போகும்பொழுது தனியாகப் போகவில்லை. ஸைமன்கார்ட்டின்கின்னையும் அவளையும் அழைத்துக்கொண்டு போனேன்" என்று போச்கோவாவைச் சுட்டிக்காட்டிக் கூறினாள்.

" அது பொய். நான் உள்ளே போகவில்லை " என்று ஆரம்பித்தாள் போச்கோவா. ஆனால் அவளைத் தடுத்து விட்டார்கள்.

" அவர்களுடைய எதிரிலேயே நான் நான்கு நோட்டுகளை எடுத்துக் கொண்டேன்" என்று தொடங்கினாள் மாஸ்லோவா போச்கோவாவைப் பாராமலே.

" கைதி நாற்பது ரூபிள்களை எடுத்தபொழுது, பெட்டியில் எவ்வளவு பணம் இருக்கிறது என்பதைக் கைதி கவனித்தாளா ?" என்று சர்க்கார் வக்கீல் கேட்டார்.

அவர் கேட்டபொழுது மாஸ்லோவா நடுங்கினாள். அது ஏனென்பது அவளுக்கே விளங்கவில்லை. ஆனால் தனக்கு தீமை நேரவேண்டுமென்று அவர் விரும்புகிறார் என்று மாத்திரம் அவளுக்குத் தோன்றியது.

" நான் எண்ணிப் பார்க்கவில்லை. சில நூறு ரூபிள்க நோட்டுகள் இருந்ததைப் பார்த்தேன்.

" ஹா! நூறு ரூபிள் நோட்டுகளைக் கைதி பார்த்தாள் ! அவ்வளவுதான் !"

" பணத்தை எடுத்துக்கொண்டு வந்தாயா?" என்று பிரதம நீதிபதி கடியாரத்தைப் பார்த்துக்கொண்டே கேட்டார்.

" கொண்டு வந்தேன் "

" பிறகு ?"

" பிறகு அவர் என்னைத் திருப்பி அழைத்துக்கொண்டு வந்தார்.

" அந்தச் சூர்ணத்தை அவருக்கு எப்படிக் கொடுத்தாய் ? அவருடைய பானத்திலா கலந்து கொடுத்தாய் ?"

" எப்படிக் கொடுப்பது ? பானத்தில் போட்டேன் கொடுத்தேன் ".

“ஏன் கொடுத்தாய்?”

அவள் உடனே பதில் அளிக்கவில்லை. நீண்ட பெரு மூச்சுவிட்டாள். “அவர் என்னைப் போகவிடாமல் ஹிம்ஸித்தார்” என்றாள் மாஸ்லோவா. சிறிது மௌனத்திற்குப் பின் அவள் மீண்டும் தொடர்ந்து நான் ரொம்பவும் களைத்துப் போயிருந்தேன். ஆகையால் நான் வெளியே வந்து, ‘அவர் என்னைப் போகவிட்டால் தேவலை. நான் ரொம்பவும் களைத்துப் போயிருக்கிறேன்’ என்று ஸைமனிடம் கூறினேன். ‘எங்களுக்குக் கூட அவனைப் பிடிக்கவில்லை. அவனுக்குத் தூக்க மருந்து கொடுக்க வேண்டுமென்று நாங்கள் நினைத்திருந்தோம். அவன் தூங்கிவிட்டால் நீ போகலாம்’ என்று ஸைமன் கூறினான். ‘சரி’ என்றேன் நான். அதனால் தீமை ஒன்றும் நேராது என்று நான் நினைத்தேன். அந்தப் பொட்டலத்தை அவன் என்னிடம் கொடுத்தான். நான் உள்ளே சென்றேன். வியாபாரி படுத்துக்கொண்டிருந்தார். பிராந்தி வேண்டுமென்று அவர் கேட்டார். மேஜை மீது இருந்த பிராந்தி பாட்டிலை எடுத்து இரு கிண்ணங்களில் ஊற்றி அவருக்கு ஒரு கிண்ணமும் எனக்கு ஒரு கிண்ணமும் வைத்தேன். அவருடைய கிண்ணத்தில் தூளைப்போட்டு அவருக்குக் கொடுத்தேன். இப்படி நடக்குமென்று தெரிந்திருந்தால் நான் கொடுத்திருப்பேனா?”

“சரி, அந்த மோதிரம் உன்னிடம் எப்படி வந்தது?” என்று கேட்டார் பிரதம நீதிபதி.

“அவரே கொடுத்தார்.”

“எப்பொழுது கொடுத்தார்?”

“அவர் தங்கியிருந்த இடத்திற்கு நாங்கள் திரும்பி வந்தவுடனே கொடுத்தார். நான் போகவேண்டுமென்றேன். அவர் என் தலையில் ஒரு அடி கொடுத்தார். நான் கோபித்துக் கொண்டு போய் வருவதாகக் கூறினேன். நான் போகாமல் இருக்கும்படி செய்வதற்காக அவர் தம் விரலிலிருந்து மோதிரத்தை எடுத்து என்னிடம் கொடுத்தார்” என்றாள்.

மறுபடியும் சர்க்கார் வக்கீல் எழுந்து, ரொம்பவும் எளிமையாக இருப்பவர்போல நடித்து, சில கேள்விகள் கேட்க விரும்புவதாகக் கூறினார். பிரதம நீதிபதி அனுமதி அளித்தார்.

“வியாபாரியின் அறையில் கைதி எவ்வளவு நேரம் இருந்தாள்?” என்று கேட்டார் சர்க்கார் வக்கீல்.

மாஸ்லோவா மீண்டும் நடுங்கினாள். சர்க்கார் வக்கீலிடமிருந்து பிரதம நீதிபதி பக்கம் பார்வையைத் திருப்பி, “எவ

வளவு நேரம் இருந்தேன் என்பது எனக்கு நினைவில்லை" என்றாள்.

வியாபாரியின் அறையிலிருந்து "கைதி, வெளியேறிய பிறகு, அந்த ஹோட்டலில் வேறு எந்த இடத்திற்காவது சென்றாளா?"

மாஸ்லோவா சிறிது யோசித்தாள். "போனேன், வியாபாரியின் அறையை அடுத்தாற்போல் உள்ள காலி அறைக்குப் போனேன்" என்றாள்.

"ஏன் அங்கு போனாய்?" என்று சர்க்கார் வக்கீல் தன்னை மறந்து அவளை நோக்கிக் கேட்டார்.

"சிறிது ஓய்வு எடுத்துக்கொண்டு வண்டி வரும்வரை காத்திருப்பதற்காகப் போனேன்."

"கைதியோடு ஸைமனும் அந்த அறையிலிருந்தானா? இல்லையா?"

"அவன் வந்தான்"

"அவன் ஏன் வந்தான்?"

"வியாபாரியின் பிராந்தி கொஞ்சம் பாக்கி இருந்தது. அதை அவன் தீர்த்துவிட்டான்."

"ஓ! தீர்த்துவிட்டானா? அவனோடு கைதி ஏதாவது பேசினாளா? அப்படியானால் எதைப்பற்றிப் பேசினாள்?

மாஸ்லோவா ஆத்திரமடைந்து முகம் சிவக்கப் பெற்று, "நான் ஒன்றைப் பற்றியும் பேசவில்லை. அவ்வளவுதான் எனக்குத் தெரியும். உங்களுக்கு இஷ்டமானதைச் செய்து கொள்ளுங்கள் நான் குற்றவாளியல்ல. அவ்வளவுதான்" என்றாள்.

"இனி வேறு கேட்க ஒன்றுமில்லை" என்று சர்க்கார் வக்கீல் கூறிவிட்டு தன் தோளை விசித்திரமாகக் குலுக்கிக் கொண்டார். கைதி காலி அறையில் ஸைமனோடு தனியாக இருந்ததாக அவர் எழுதிக்கொண்டார். சிறிது நிசப்தம் நிலவியது.

"அதற்கு மேல் நீ ஒன்றும் சொல்ல விரும்பவில்லையா?" என்றார் பிரதம நீதிபதி.

"நான் எல்லாவற்றையும் சொல்லியாகிவிட்டது" என்று கூறிவிட்டு மாஸ்லோவா பெருமூச்சு விட்டுக் கொண்டே உட்கார்ந்தாள்.

பிறகு பிரதம நீதிபதி எதையோ குறித்துக் கொண்டார். தமக்கு இடது பக்கத்தில் இருந்த நீதிபதி ஏதோ முணுமுணுத்ததைக் கேட்டுவிட்டு, கோர்ட் நடவடிக்கைகளைப் பத்து நிமிஷம் ஒத்திவைத்தார். பிறகு நீதிபதிக்குச் சிறிது வயிற்று வலியென்றும், ஆகையால் மாலைத் எடுத்துக்கொள்ள அவர் விரும்புவதாகவும் பிரதம நீதிபதியிடம் அறிவித்தார். ஆகையால்தான் நடவடிக்கைகளை பிரதம நீதிபதி ஒத்திவைத்தார்.

நீதிபதிகள் எழுந்தவுடன், ஜூரிகள், வக்கீல்கள் முதலியவர்களும் எழுந்து பல திசைகளை நோக்கி நடந்தனர்.

நெக்லியுடாவ் ஜூரிகளின் அறைக்குள் சென்று ஒரு ஜன்னல் அருகே உட்கார்ந்தான்.

## 12

"ஆமாம், இவள் காட்யூஷாதான்!"

நெக்லியுடாவின் சிந்தனைகள் ஓடின. அவளைத் தான் கெடுத்த சம்பவங்களை நினைத்துப் பார்த்துக் கொண்டிருந்தான்:

காட்யூஷாவை நெக்லியுடாவ் முதல் முறை சந்தித்தபொழுது அவன் மாணவன். கலாசாலையில் மூன்றாவது வருஷமாகப் படித்துக் கொண்டிருந்தான். கோடை விடுமுறை சமயத்தில் தன் அத்தைகளோடு அவன் தங்கியிருந்த பொழுது நிலவுரிமையைப் பற்றி ஒரு கட்டுரை எழுதிக்கொண்டிருந்தான். அதற்கு முன்னால் கோடை விடுமுறை காலங்களில் அவன், மாஸ்கோவுக்கு அருகே உள்ள தன் தாயின் கிராமத்திற்குச் சென்று தாயோடும் தங்கையோடும் விடுமுறையைக் கழிப்பது வழக்கம். ஆனால் அந்த வருஷம் அவனுடைய தங்கைக்குக் கல்யாணமாகிவிட்டது. தாய் வெளி நாட்டுக்குப் போயிருந்தாள். அவன் கட்டுரையை எழுதி முடிக்கவேண்டியிருந்ததால் தன் அத்தை வீட்டுக்குச் செல்லத் தீர்மானித்தான். அந்தக் கிராமம் அமைதியாக இருந்தது. அவனுடைய கவனத்தை இழுக்கக்கூடிய ஒன்றும் அங்கு இல்லை. அவனுடைய அத்தைகளுக்குத் தங்களுடைய மருமானும் வாரிசுமான அவன்மீது அசாத்திய வாஞ்சை. பழைய முறையில் வாழ்க்கை நடத்தும் அவர்கள்மீது அவனுக்கும் அதிகப் பிரியம்.

வாழ்க்கையின் அழகுகள் அனைத்தையும், பிறர் உதவி இன்றி ஒருவன் தனக்குத்தானே முதல் முறை அறிந்து

பொறுப்பு ஏற்கும்பொழுது அடையும் ஆனந்தத்தை, நிக்லியுடாவ் அந்த வருஷக் கோடை விடுமுறையில், தன் அத்தைகளின் கிராமத்தில் அடைந்தான். ஸ்பென்ஸரின் சமூக தத்துவத்தைப் படித்தான், நில பாத்தியதை பற்றிய அவருடைய கருத்துக்கள் அவனுக்கு மிகவும் பிடித்திருந்தன. அவனுடைய தந்தை பெரிய பணக்காரரல்ல. ஆனால் அவனுடைய தாய்க்கு ஸ்ரீதனமாகப் பதினாயிரம் ஏகரா நிலம் கிடைத்தது. அதற்கு அவன்தான் வாரிசு. அவ்வளவு நிலத்தில் ஒருவனுக்குச் சொந்த பாத்யதை இருப்பதில் உள்ள கொடுமையையும் அதர்மத்தையும் அப்பொழுது அவன் உணர்ந்தான். மனச்சாட்சியின் தூண்டுதலை முன்னிட்டு தியாகம் செய்வதில் ஆத்மானந்தம் அடைகிறவர்களில் அவனும் ஒருவனுகையால், சொத்துக்களின் உரிமையைத் தான் வைத்துக் கொள்ளாமல் தனக்குக் கிடைக்கும் நிலங்களைக் குடியானவர்களுக்கு பிரித்துக் கொடுத்துவிட அவன் தீர்மானித்தான். இந்தப் பிரச்னையைப் பற்றித் தான் அவன் கட்டுரை எழுதிக்கொண்டிருந்தான்.

தன் அத்தையின் கிராமத்தில் அவன் தங்கியிருந்த பொழுது அதிகாலை மூன்று மணிக்கே—சூரிய உதயத்திற்கு முன்னாலேயே எழுந்து பனியில் மலையடிவாரத்தில் உள்ள ஆற்றுக்குப் போய்க் குளிப்பான். புல் நுனிகளிலும் பூவிதழ்களிலும் படிந்திருக்கும் பனித்துளிகள் மறைவதற்கு முன் வீடு திரும்புவான். சில சமயங்களில் காபியைக் குடித்துவிட்டு, தன் கட்டுரைக்கு வேண்டிய புத்தகங்களை ஆராய்வான். ஆனால் பெரும்பாலும் எழுதுவதற்கும் படிப்பதற்கும் பதிலாக மறுபடியும் வீட்டைவிட்டுப் புறப்பட்டு நிலங்களிலும் காடுகளிலும் சுற்றுவான். சாப்பாட்டுக்கு முன்னால் தோட்டத்தின் ஒரு பக்கத்தில் படுத்துத் தூங்குவான். சாப்பாட்டு வேளையில் தன் அத்தைகளைக் குஷிப்படுத்துவான். பிறகு குதிரை சவாரி செய்யவோ அல்லது ஆற்றுக்குச் சென்று நீந்தவோ செய்வான். மாலையில் படிப்பான், அல்லது ஏதாகிலும் விளையாடுவான்.

இராக்காலங்களில்—விசேஷமாக நிலாக்காலங்களில் அவனுக்குத் தூக்கம் பிடிக்காது. வாழ்க்கையின் இன்பலாகிரி அவனிடம் நிறைந்திருக்கும். தன் கருத்துக்களோடும் கனவுகளோடும் தோட்டத்தில் சுற்றித் திரிவான். சில சமயங்களில் உதயமாகும் வரையில் கூடச் சுற்றிக்கொண்டிருப்பான்.

அத்தை வீட்டில் ஒரு மாதம் அமைதியாகவும் ஆனந்தமாகவும் கழிந்தது. அவர்கள் வீட்டில் வேலை செய்துகொண்டிருந்த காடுஷாவைக் கவனிக்கவில்லை. தன் தாயின் பாதுகாப்பில் வளர்ந்த அவன் பத்தொன்பதாவது வயதிலும் பரி

சுத்தமாக்வே இருந்தான். அவன் கனவில் ஒரு ஸ்திரீ தோன்றுவாளாகில் அவள் அவனுடைய மனைவி என்ற முறையிலேயே தோன்றுவாள். அவன் கருத்துப்படி, அவன் மணக்க முடியாத மற்றெல்லா ஸ்திரீகளும் சாதாரண மனிதப் பிறவிகளாகவே அவனுக்குத் தோன்றினர்கள்.

ஆனல் அஸென்ஷன் தினப் பண்டிகையன்று அடுத்த வீட்டுக்காரியும் அவளுடைய இரு பெண்களும் ஒரு பள்ளிக் கூடச் சிறுவனும், அவர்ளோடு தங்கியிருந்த ஒரு இளம்குடியானவச் சைத்திரிகனும் அவனுடைய அத்தை வீட்டுக்கு வந்தார்கள்.

டீ குடித்தபின் வீட்டுக்கு எதிரே இருந்த புல்வெளியில் அவர்கள் விளையாடப் போனர்கள். காடுஷாவும் அவர்களுடன் சேர்ந்துகொண்டாள். அவளை நிக்லியுடாவ் பிடித்துவிட்டான். அவள் அவனேடு சேர்ந்து விளையாட வேண்டியதாயிற்று. அதுவரை காடுஷாவின் பார்வை அவனுக்குப் பிடித்திருந்தது. ஆனல் அவளோடு வேறு நெருங்கிய உறவு பற்றி அவன் சிந்தித்ததில்லை.

“அந்த இரண்டு பேரும் தவறி விழுந்தாலொழிய அவர்களைப் பிடிக்கவே முடியாது” என்ருன் இளம் சைத்திரிகன். அப்பொழுது பிடிக்க வேண்டுவது அவனுடைய முறை. பலம் நிறைந்த கால்களோடு கூடிய அவன், வெகு வேகமாக ஓடுவான்.

“நீயா!... ..எங்களையா பிடிக்க முடியவில்லை?” என்ருள் காடுஷா.

“ஒன்று, இரண்டு, மூன்று,” சைத்திரிகன் கையைத்தட்டினன். காடுஷா சிரிப்பை அடக்க முடியாமல், அவனிடம் பிடிபடாமல் அவனுடைய இடதுபுறமாக ஓடினுள். அவன் திரும்பிப் பார்த்தபொழுது, சைத்திரிகன் அவளைத் துறத்திக் கொண்டு ஓடுவதைக் கண்டான். அவள் அதி வேகமாக முன்னுல் ஓடிக்கொண்டிருந்தாள். அங்கு லிலாக் பூஞ்செடிப் புதர் ஒன்று இருந்தது. அந்த புதருக்குப் பின்னுல் வந்து தன்னுடன் சேர்ந்துகொள்ளும்படி நிக்லியுடாவுக்கு காடுஷா தன் தலையை ஆட்டிச் சமிக்ஞை செய்தாள். அவர்கள் மறுபடியும் கைகோர்த்துக் கொண்டு விட்டால் துரத்துபவன் அவர்களைப் பிடிக்கக்கூடாது என்பது அந்த விளையாட்டின் விதி. அவளுடைய சமிக்ஞையை அவன் புரிந்துகொண்டு புதருக்குப் பின்னுல் ஓடினுன். அங்கு செடி மண்டிய பள்ளம் இருந்தது அவனுக்குத் தெரியாது. அதில் அவன் விழுந்து கையில் காயம்பட்டது. ஆனல் உடனே அவன் சிரித்துக்கொண்டு எழுந்துவிட்டான், காடுஷா தன் கருவிழிகள் பளபளக்க,

முகம் சந்தோஷத்தினால் ஒளிவீச, அவனை நோக்கிப் பறந்து வந்தாள். அவர்கள் கைகோர்த்துக் கொண்டனர்.

"அடிபட்டு விட்டதா?" என்று, காடுஷா தன் தலையைக் கோதிவிட்டுக் கொண்டே மேல் மூச்சு வாங்கக் கேட்டாள். அதரங்களில் இனிய புன்னகையோடு அவளை நிமிர்ந்து பார்த்தான் நிக்லியுடாவ்.

"அங்கு பள்ளம் இருந்தது தெரியாது" என்று அவளுடைய கையைப் பிடித்தபடி, அவனும் புன்சிரிப்புடனேயே கூறினான். அவள் அவன் அருகே வந்தாள். அவனும் தன்னை அறியாமல் அவள் பக்கம் சாய்ந்தான். அவள் பின்னடைய வில்லை. அவன் அவளுடைய கையை அழுத்திப் பிடித்துக் கொண்டு அவளுடைய இதழ்களில் முத்தமிட்டான்.

உடனே அவள் தன் கையை விடுவித்துக் கொண்டு ஓடி விட்டாள்.

மலர்கள் உதிர்ந்துகொண்டிருந்த லைலாக் கிளை ஒன்றை அவள் ஒடித்து, உஷ்ணம் ஏறிய தன் முகத்தை அதனால் வீசிக்கொண்டாள். பிறகு தலையைத் திருப்பி அவனைப் பார்த்துக் கொண்டே, கைகளை வீசி, எதிர்ப்பக்கம் நடந்து சென்று மற்றவர்களோடு சேர்ந்துகொண்டாள்.

இதற்குப் பிறகு, அன்பினால் பிணைக்கப்பட்ட ஓர் இளைஞனுக்கும் பெண்ணுக்கு மிடையில் இருக்கக்கூடிய விசித்திரமான உறவு நிக்லியுடாவுக்கும் காடுஷாவுக்கு மிடையில் ஏற்பட்டது.

நிக்லியுடாவின் அறைக்குள் காடுஷா வந்தாலும், அல்லது அவளுடைய வெள்ளை உடையை எங்காவது அவன் கண்டு விட்டாலும், சூரியன் உதயமானவுடன், பிரபஞ்ச மெல்லாம் ஆனந்தஸாகரத்தில் ஆழ்வது போல அவனுடைய கண்களில் ஒளிவீசும்: அவளுக்கும் அப்படித்தான். காடுஷாவின் தோற்றம் மாத்திரம் அவனை அப்படிச் செய்யவில்லை. காடுஷா இருக்கிறாள் என்ற எண்ணமே (அவளுக்கு நிக்லியுடாவ் இருக்கிறான் என்ற எண்ணமே) இந்த உணர்ச்சியைத் தூண்டியது.

அவன் தாயிடமிருந்து அவனுக்கு வருத்தம் அளிக்கக் கூடிய கடிதம் வந்தாலும், கட்டுரையை எழுத முடியாமல் இருந்தாலும், இளைஞர்களுக்கு வழக்கமாக ஏற்படும் காரணமற்ற சோக உணர்ச்சி தோன்றினாலும் காடுஷாவை நினைத்துக் கொள்ள வேண்டுவது, அல்லது அவளைப் பார்க்க வேண்டுவது தான் பாக்கி. எல்லாம் பறந்துபோய்விடும்.

காடுஷாவுக்கு வீட்டில் அதிக வேலை இருந்தது. ஆனால் படிப்பதற்கும் சிறிது அவகாசம் கிடைக்கும்படி செய்துகொண்டாள். அவன் படித்த டாஸ்டாவஸ்கியின் கதைகளையும், டர்கெனேவின் கதைகளையும் அவளுக்குக் கொடுப்பான். ரேழியிலோ, தாழ்வாரத்திலோ, "வாசலிலோ அவர்கள் சந்திக்கும்பொழுதெல்லாம் அவர்கள் பேசிக்கொள்வார்கள். சில சமயங்களில் அத்தையின் கிழ வேலைக்காரி மாட்ரேனா பாவலோவ்னாவின் அறையிலும் அவர்கள் சந்தித்துப் பேசிக்கொள்வது வழக்கம். மாட்ரேனா பாவலோவ்னாவின் முன் பேசும் விஷயங்கள் ரொம்பவும் ஸ்வாரஸ்யமாக இருக்கும். அவர்கள் தனியாக இருக்கும்பொழுது நிலைமை இன்னும் மோசம். அவர்களுடைய வாய் பேசுவதைக் காட்டிலும் இன்னும் முக்கியமான வேறு ஏதோ ஒரு விஷயத்தைப் பற்றி அவர்களுடைய கண்கள் பேசத் தொடங்கும். அவர்களைச் சீக்கிரம் பிரிந்துபோகும்படி செய்யும் ஏதோ ஒரு பயங்கரத்தை அவர்கள் காண்பார்கள்.

நிக்லியுடாவ் தன் அத்தை வீட்டில் தங்கியிருந்தவரை அவனுக்கும் காடுஷாவுக்குமிடையில் இதே உறவு நீடித்தது. அத்தைகள் இதைக் கவனித்து பயந்துவிட்டார்கள். நிக்லியுடாவின் தாயாரான ஹெலனா ஐவனோவ்னா கோமகளுக்கு இதைப்பற்றிக் கடிதம்கூட எழுதினார். காடுஷாவோடு அவன் முறையற்ற உறவுகொண்டு விடுவானோ என்று அவனுடைய அத்தை, மேரி ஐவனோவ்னா அஞ்சினாள். ஆனால் அவளுடைய பயத்திற்கு ஆதாரமில்லை. காடுஷாவின்மீது நிக்லியுடாவ் பரிசுத்தமான முறையில் அன்பு செலுத்தினான். அவனுடைய நன்மையும் அவளுடைய நன்மையும் இதில்தான் இருந்தன. அவளுடைய உடல்மீது உரிமை செலுத்த வேண்டுமென்ற ஆவல் அவனுக்கு இல்லை. அந்த எண்ணமே அவனுக்கு நடுக்கத்தை ஏற்படுத்தியது. "மிகவும் கண்டிப்பான ஸ்வபாவம் உடைய அவன், காடுஷாவைக் காதலித்து, அவளுடைய பிறப்பையும் அந்தஸ்த்தையும் லக்ஷியம் செய்யாமல் அவளையே மணக்கவேண்டுமென்று பிடிவாதம் செய்தால் என்ன செய்வது?" என்று அவனுடைய மற்றொரு அத்தையான ஸோபியா ஐவனோவ்னா பயந்தாள். முதல் அத்தையின் பயத்தைக் காட்டிலும் இவளுடைய சந்தேகத்திற்கு அதிக ஆதாரம் இருந்தது.

காடுஷா மீது நிக்லியுடாவ் கொண்டிருந்த காதலை அவன் அப்பொழுது அறிந்திருந்தால், காடுஷாபோன்ற கீழான அந்தஸ்த்தில் உள்ள ஒரு பெண்ணின் வாழ்க்கையோடு அவன் தன்னுடைய வாழ்க்கையைப் பிணைத்துக் கொள்ளக்கூடாதென்று அவனிடம் யாராவது சொல்லியிருந்தாலும், அவன் தன்னுடைய வழக்கமான கண்டிப்பு சுபாவத்தினால், தான் காதலிக்கும் பெண் யாராக இருந்தபோதிலும் அவளையே மணப்பதென்று தீர்மானித்து விட்டிருப்பான். ஆனால் அவன்

போகும்வரை அவனுடைய அத்தைகள் தங்களுடைய சந்தேகத்தை அவனிடம் சொல்லவில்லை. காடுஷாமீது தான் கொண்டிருந்த காதலை அவனும் உணரவில்லை. அவள்மீது தான் கொண்டிருந்த அன்பு, வாழ்க்கை ஆனந்தத்தின் ஒரு சாதாரண கூறே என்றும், அவளும் அதைத் தன்னோடு பகிர்ந்து கொண்டாளென்றும் தான் அவன் நினைத்தான். அவன் ஊருக்குப் புறப்படும்பொழுது காடுஷாவும், அவளுடைய கருவிழிகளில் நீர் ததும்ப அத்தைகளின் பக்கத்தில் நின்றிருந்தாள். அப்பொழுது, மிகவும் அழகான, மதிப்பு உயர்ந்த, மீண்டும் கிடைக்கமுடியாத ஏதோ ஒன்றை விட்டுவிட்டுப் போகிறோம் என்ற உணர்ச்சிதான் அவனுக்கு ஏற்பட்டது. அவனுக்கு வருத்தம் மேலிட்டது.

"போய்வருகிறேன் காடுஷா. நீ செய்த உதவிகளுக்கெல்லாம் என் நன்றி" என்று சொல்லிக்கொண்டே அவன் வண்டியில் ஏறினான்.

"போய் வாருங்கள் தெமித்துரி ஐவனிச்," என்று தன் கண்ணீரை அடக்கிக்கொண்டு சொல்லிவிட்டு அவள் ஹாலுக்குள் சென்று தனிமையில் தன் துக்கம் தீர அழுது தீர்த்தாள்.

# 13

பிறகு இரண்டு வருஷம் வரை காடுஷாவை நிக்லியுடாவ் பார்க்கவேயில்லை. பிறகு அவளைச் சந்தித்த பொழுது பெரிய அதிகாரியின் பதவிக்கு அவன் உயர்த்தப் பட்டிருந்தான். தன்னுடைய படையில் போய்ச்சேரப் போகும்பொழுது, தன் அத்தைகளின் வீட்டில் சில தினங்கள் தங்கிவிட்டுப் போகவேண்டும் என்பதற்காக அங்கு வந்தான். மூன்று வருஷங்களுக்கு முன்னால் கோடை விடுமுறைக்காக அவன் வந்திருந்தபோது இருந்ததற்கும் இப்பொழுது இருந்ததற்கும் அதிக வித்தியாசம் இருந்தது. அப்பொழுது சுயநலமற்ற பரம யோக்கியமான இளைஞனாக அவன் இருந்தான். எந்த உயர்ந்த லக்ஷியத்திற்காகவும் தன்னையே தியாகம் செய்ய அவன் தயாராக இருந்தான். இப்பொழுது அவன் குணம்கெட்டு, பழுத்த சுயநலமி யாகிவிட்டிருந்தான். தன்னுடைய சுகத்தைத்தான் அவன் இப்பொழுது முக்கியமாகக் கருதினான். அப்பொழுது கடவுள் சிருஷ்டித்த உலகம் ஒரு புதிராக இருந்தது. அதை விடுவிக்க அவன் உற்சாகத்துடனும் சந்தோஷத்துடனும் முயன்றான். இப்பொழுது வாழ்க்கையில் எல்லாம் சர்வ சாதாரணமாகவும் பட்ட வர்த்தனமாகவும் காணப்பட்டன. அப்பொழுது இயற்கையுடனும், அவனுக்கு முன்வசித்த தத்துவ

ஞானிகள், கவிகள் முதலியவர்களுடனும் ஐக்கியமாகி விடுவது அவசியமென்று தோன்றியது. நண்பர்களுடன் கூடிக்குலாவுவதுதான் முக்கியமென இப்பொழுது தோன்றியது. பெண்கள் ஒரு புதிராகவும், சௌந்தர்ய தேவதைகளாகவும் அப்பொழுது தோன்றினார்கள். இன்பம் அனுபவிப்பதற்கு ஒரு சிறந்த கருவியாகவே அவர்கள் இப்பொழுது தோன்றினர். அப்பொழுது பணத்திற்கு அதிக அவசியமில்லை. அவனுடைய தாயார் அவனுக்கு அனுப்பிய தொகையில் மூன்றில் ஒரு பாகத்திற்குக் கூட அவனுக்குச் செலவு இல்லை. அவனுடைய தந்தையிடமிருந்து பிதிரார்ஜிதமாக வந்த சொத்தை நிராகரித்து அதைக் குடியானவர்களுக்குக் கொடுப்பது சாத்தியமாக இருந்தது. ஆனால் இப்பொழுது மாதாமாதம் அவனுக்குக் கொடுக்கப்பட்ட ஆயிரத்து ஐநூறு ரூபிள்கள் அவனுக்குப் போதவில்லை. இது பற்றித் தன் தாயாருடன் அவன் சண்டை கூடப் போட்டுவிட்டான்.

அப்பொழுது அவன் 'நான்' என்று கூறிக்கொண்டது அவனுடைய ஆத்மாவைக் குறிப்பிட்டது. இப்பொழுது 'நான்' என்று அவன் சொல்லிக்கொண்டது அவனுள் அடங்கியிருந்த மிருக சுபாவத்தைக் குறிப்பிட்டது.

இப்பொழுது அவன் தன்னை நம்பாமல் மற்றவர்களை நம்பத் தொடங்கியதால் தான் அவனிடம் இந்த விபரீத மாறுதல்கள் ஏற்பட்டன. தன்னைத்தானே நம்பி வாழ்வது அவனுக்குக் கஷ்டமாக இருந்ததால் தான் அவன் இப்படிச் செய்தான். ஒருவன் தன்னைத்தானே நம்பியிருப்பதென்றால் எப்பொழுதும சுலபமான வழியையே தேடும் தன்னுடைய மிருக சுபாவத்தின் அஹங்காரத்தைத் திருப்திப்படுத்தாமல் அதற்கு விரோதமாக முடிவுசெய்ய வேண்டியிருக்கிறது. பிறரை நம்புவதென்றால் தான் தீர்மானிக்க வேண்டுவது ஒன்றுமில்லை. எல்லா விஷயங்களைப் பற்றியும் ஏற்கனவே பிறர் முடிவு செய்து வைத்திருக்கின்றனர். எல்லா முடிவும் தன்னுடைய மிருக சுபாவத்திற்குச் சாதகமாக, ஆத்மாவுக்கு விரோதமாகவே இருக்கின்றன. இதோடு நிற்கவில்லை. ஒருவன் தன்னைத்தான் நம்பியிருப்பதென்றால் தன்னைச் சுற்றியுள்ளவர்களின் கண்டனத்திற்கு ஆளாக வேண்டியிருக்கிறது. காற்றையே நம்பியிருந்தால் அவர்களுடைய ஆதரவு கிடைக்கிறது. கடவுள், சத்தியம், செல்வம், வறுமை, முதலிய வாழ்க்கையின் முக்கிய பிரச்னைகளைப் பற்றி அவன் சிந்தித்த பொழுதும், பேசியபொழுதும் அவையெல்லாம் அசந்தர்ப்பமானவை என்றும் கேவலமானவை என்றும் கூட அவனைச் சுற்றி இருந்தவர்கள் நினைத்தார்கள். அவனை ஒரு வேதாந்தி என்று அன்பாகப் பரிகாஸம் செய்வது வழக்கம். அவன் நாவல்களைப் படித்து,

போகும்வரை அவனுடைய அத்தைகள் தங்களுடைய சந்தேகத்தை அவனிடம் சொல்லவில்லை. காடுஷாமீது தான் கொண்டிருந்த காதலை அவனும் உணரவில்லை. அவள்மீது தான் கொண்டிருந்த அன்பு, வாழ்க்கை ஆனந்தத்தின் ஒரு சாதாரண கூறாகவேயும், அவளும் அதைத் தன்னோடு பகிர்ந்து கொண்டாளென்றும் தான் அவன் நினைத்தான். அவன் ஊருக்குப் புறப்படும்பொழுது காடுஷாவும், அவளுடைய கருவிழிகளில் நீர் ததும்ப அத்தைகளின் பக்கத்தில் நின்றிருந்தாள். அப்பொழுது, மிகவும் அழகான, மதிப்பு உயர்ந்த, மீண்டும் கிடைக்கமுடியாத ஏதோ ஒன்றை விட்டுவிட்டுப் போகிறோம் என்ற உணர்ச்சிதான் அவனுக்கு ஏற்பட்டது. அவனுக்கு வருத்தம் மேலிட்டது.

"போய்வருகிறேன் காடுஷா. நீ செய்த உதவிகளுக்கெல்லாம் என் நன்றி" என்று சொல்லிக்கொண்டே அவன் வண்டியில் ஏறினான்.

"போய் வாருங்கள் டிமித்ரி ஐவானிச்," என்று தன் கண்ணீரை அடக்கிக்கொண்டு சொல்லிவிட்டு அவள் அறைக்குள் சென்று தனிமையில் தன் துக்கம் தீர அழுது தீர்த்தாள்.

## 13

பிறகு இரண்டு வருஷம் வரை காடுஷாவை நெக்ளியுடாவ் பார்க்கவேயில்லை. பிறகு அவளைச் சந்தித்தபொழுது பெரிய அதிகாரியின் பதவிக்கு அவன் உயர்த்தப் பட்டிருந்தான். தன்னுடைய படையில் போய்ச்சேரப் போகும்பொழுது, தன் அத்தைகளின் வீட்டில் சில தினங்கள் தங்கிவிட்டுப் போகவேண்டும் என்பதற்காக அங்கு வந்தான். மூன்று வருஷங்களுக்கு முன்னால் கோடை விடுமுறைக்காக அவன் வந்திருந்தபோது இருந்ததற்கும் இப்பொழுது இருந்ததற்கும் அதிக வித்தியாசம் இருந்தது. அப்பொழுது சுயநலமற்ற பரம யோக்கியனான இளைஞனாக அவன் இருந்தான். எந்த உயர்ந்த லக்ஷியத்திற்காகவும் தன்னையே தியாகம் செய்ய அவன் தயாராக இருந்தான். இப்பொழுது அவன் குணங்கெட்டு, பழுத்த சுயநலமியாகிவிட்டிருந்தான். தன்னுடைய சுகத்தைத்தான் அவன் இப்பொழுது முக்கியமாகக் கருதினான். அப்பொழுது கடவுள் சிருஷ்டித்த உலகம் ஒரு புதிராக இருந்தது. அதை விடுவிக்க அவன் உற்சாகத்துடனும் சந்தோஷத்துடனும் முயன்றான். இப்பொழுது வாழ்க்கையில் எல்லாம் சர்வ சாதாரணமாகவும் பட்ட வர்த்தனமாகவும் காணப்பட்டன. அப்பொழுது இயற்கையுடனும், அவனுக்கு முன்வசித்த தத்துவ

ஞானிகள், கவிகள் முதலியவர்களுடனும் ஐக்கியமாகி விடுவது அவசியமென்று தோன்றியது. நண்பர்களுடன் கூடிக்குலாவு வதுதான் முக்கியமென இப்பொழுது தோன்றியது. பெண் கள் ஒரு புதிராகவும், சௌந்தர்ய தேவதைகளாகவும் அப் பொழுது தோன்றினார்கள். இன்பம் அநுபவிப்பதற்கு ஒரு சிறந்த கருவியாகவே அவர்கள் இப்பொழுது தோன்றினர். அப்பொழுது பணத்திற்கு அதிக அவசியமில்லை. அவனுடைய தாயார் அவனுக்கு அனுப்பிய தொகையில் மூன்றில் ஒரு பாகத்திற்குக் கூட அவனுக்குச் செலவு இல்லை. அவனுடைய தந்தையிடமிருந்து பிதிரார்ஜிதமாக வந்த சொத்தை நிரா கரித்து அதைக் குடியானவர்களுக்குக் கொடுப்பது சாத்திய மாக இருந்தது. ஆனால் இப்பொழுது மாதாமாதம் அவனுக்குக் கொடுக்கப்பட்ட ஆயிரத்து ஐநூறு ரூபிள்கள் அவனுக்குப் போதவில்லை. இது பற்றித் தன் தாயாருடன் அவன் சண்டை கூடப் போட்டுவிட்டான்.

அப்பொழுது அவன் 'நான்' என்று கூறிக்கொண்டது அவனுடைய ஆத்மாவைக் குறிப்பிட்டது. இப்பொழுது 'நான்' என்று அவன் சொல்லிக்கொண்டது அவனுள் அடங்கி யிருந்த மிருக சுபாவத்தைக் குறிப்பிட்டது.

இப்பொழுது அவன் தன்னை நம்பாமல் மற்றவர்களை நம்பத் தொடங்கியதால் தான் அவனிடம் இந்த விபரீத மாறு தல்கள் ஏற்பட்டன. தன்னைத்தானே நம்பி வாழ்வது அவ னுக்குக் கஷ்டமாக இருந்ததால் தான் அவன் இப்படிச் செய் தான். ஒருவன் தன்னைத்தானே நம்பியிருப்பதென்றால் எப் பொழுதும் கஷ்டமான வழியையே தேடும் தன்னுடைய மிருக சுபாவத்தின் அஹங்காரத்தைத் திருப்திப்படுத்தாமல் அதற்கு விரோதமாக முடிவுசெய்ய வேண்டியிருக்கிறது. பிறரை நம்புவ தென்றால் தான் தீர்மானிக்க வேண்டுவது ஒன்றுமில்லை. எல்லா விஷயங்களைப் பற்றியும் ஏற்கனவே பிறர் முடிவு செய்து வைத்திருக்கின்றனர். எல்லா முடிவும் தன்னுடைய மிருக சுபாவத்திற்குச் சாதகமாக, ஆத்மாவுக்கு விரோதமாகவே இருக்கின்றன. இதோடு நிற்கவில்லை. ஒருவன் தன்னைத்தான் நம்பியிருப்பதென்றால் தன்னைச் சுற்றியுள்ளவர்களின் கண்ட னத்திற்கு ஆளாக வேண்டியிருக்கிறது. மற்றவரை நம்பி யிருந்தால் அவர்களுடைய ஆதரவு கிடைக்கிறது. கடவுள், சத்தியம், செல்வம், வறுமை, முதலிய வாழ்க்கையின் முக்கிய பிரச்னைகளைப் பற்றி அவன் சிந்தித்த பொழுதும், பேசியபொழு தும் அவையெல்லாம் அசந்தர்ப்பமானவை என்றும் கேவல மானவை என்றும் கூட அவனைச் சுற்றி இருந்தவர்கள் நினைத் தார்கள். அவனை ஒரு வேதாந்தி என்று அவமாகப் பரிகா ஸம் செய்வது வழக்கம். அவன் நாவல்களைப் படித்து,

ஆபாஸப் பேச்சுக்கள் பேசி, பிரெஞ்சு நாடகங்களைப் பார்த்து விட்டுவந்து, அங்குதான் கேட்டவற்றைக் குஷியாகத் திருப் பிச் சொன்னபொழுது அவனைக் கண்டு அனைவரும் பெருமைப் பட்டுக்கொண்டதோடு அவனை உற்சாகப்படுத்தவும் செய்த னர். அவன் பழைய கோட் அணிந்து, சாராயம் குடிக்காமல் செலவைக் குறைக்க முயன்றபொழுது அவனுடைய நடத்தை யை விசித்திரமாக நினைத்தார்கள். அவன் வேஷம் போடுவ தாகக் கருதினார்கள். வேட்டையாடுவதிலோ, தன்னுடைய அறையை அலங்கரிப்பதிலோ, அவன் ஏராளமான தொகை யைச் செலவிட்டபொழுது அனைவரும் அவனைப் பாராட்டி, அவனுடைய கலையை அபிவிருத்தி செய்ய விலையுயர்ந்த பொருள்களைப் பரிசாக அளித்தனர். அவன் பரிசுத்தமாக இருந்தபொழுது அவனுடைய ஆரோக்கியத்தைப் பற்றி அவ னுடைய நண்பர்கள் கவலைப்பட்டார்கள். ஆனால் அவன் ஒரு பிரெஞ்சு ஸ்திரீயுடன் நட்புக்கொண்டிருப்பதாக அறிந்த பொழுது அவனுடைய தாயார் கூடக் கவலைப்படவில்லை. இதற்கு மாறாகத் தன் மகன் 'உண்மை' மனிதனாக ஆனது பற் றிச் சந்தோஷித்தாள். அவனுக்கு வயதுவந்து, அவனுக்குக் கிடைத்த அவனுடைய தந்தையின் நிலங்களை விவசாயிகளுக் குப் பகிர்ந்து கொடுத்தபொழுது அவனுடைய தாயாரும் குடும்பத்தினரும் பிரமித்தனர். அவனுடைய உறவினர்கள் அவனைக் கேலிசெய்ய இது ஒரு காரணமாயிற்று. குடியான வர்கள் இந்த நிலங்களைப் பெற்றதால் பணக்காரர்களாகிவிட வில்லையென்றும், இன்னும் ஏழைகளாகி விட்டதாகவும், வேலை செய்வதையே அவர்கள் விட்டுவிட்டதாகவும் அவனிடம் பலர் சதா சொல்லிக்கொண்டிருந்தார்கள். ஆனால் அவன் தன் னுடைய ஆடம்பரமான நண்பர்களுடன் சேர்ந்துகொண்டு சூதாட்டத்தில் ஏராளமாகப் பணம் செலவிட்டபொழுது அவ னுடைய தாய் வருத்தப்படாமல், தன் மூலதனத்திலிருந்து பணம் எடுத்துக் கொடுத்தாள். சிறு வயதில் தக்க நண்பர்க ளுடன் சேர்ந்துகொண்டு இவ்விதம் நடப்பது சரியே என்றும், அவசியமென்றும் கூட அவள் நினைத்தாள். நிக்லியுடாவ் கடு மையாகப் போராடினான். அவன் தன்னைத்தான் நம்பியிருந்த பொழுது, நல்லவை என்று நினைத்தவற்றையெல்லாம் தீய வை என்றும், தீயவை என்று நினைத்தவற்றையெல்லாம் நல் லவை என்றும் அவனைச் சுற்றி இருந்தவர்கள் கருதினார்கள். ஆனால் போராட்டம் மிகவும் கடுமையாக இருந்தது. கடைசியில் நிக்லியுடாவ் விட்டுக்கொடுத்து விட்டான். அவன் தன்னைத் தான் நம்புவதை விட்டுவிட்டு பிறர் மீது நம்பிக்கை வைத் தான். முதலில் அவனுக்கு இது பிடிக்கவில்லை. ஆனால் போகப்போகச் சரியாகிவிட்டது. அந்த சமயத்தில் அவன் புகை குடிக்கவும் மதுபானம் செய்யவும் கற்றுக்கொண்டான்.

அதனால் அவனுடைய அதிருப்தி மறைந்து அதிக நிம்மதி கூட ஏற்பட்டது!

நிக்லியுட்ாவ் தயக்கமின்றி இந்தப் புதிய வாழ்க்கையை நடத்தினன். இதைத் தடுத்துக் கூறிய அந்தராத்மாவை அடைக்கிவிட்டான். அவன் பீடர்ஸ்பர்க்குக்குச்சென்றபொழுது இது ஆரம்பமாயிற்று. அவன் ராணுவத்தில் சேர்ந்த பின் உச்சநிலையை அடைந்தது.

ராணுவ வாழ்க்கையே மனிதர்களைக் கெடுத்து விடுகிறது. அது அவர்களைச் சோம்பேறிகளாக்கி விடுகிறது, அவர்களை அது மனிதனின் கடமைகளை மறக்கச் செய்து வெறும் சம்பிர தாயக் கடமைகளை அனுஷ்டிக்குமாறு செய்துவிடுகிறது. ஒரு புறம் அது மற்றவர்கள் மீது பூரண அதிகாரம் அளித்த போதிலும், மேல் அதிகாரிகளுக்கு அவர்களை அடிமைகளாக்கி விடுகிறது.

கௌரவம், ராணுவ உடை, கொடி, பலாத்காரமும் கொலை யும் செய்ய அளிக்கப்பட்டுள்ள அதிகாரம் முதலியவற்றினல் ஏற்படும் தீமைகளோடு, பணத்தினலும் பெரிய இடத்துப் பழக்கத்தினலும் ஏற்படும் தீமையும் சேர்ந்துகொள்கிறது. இதனல் பெரும் சுயநல மனப்பான்மை வந்துவிடுகிறது. நிக்லியுடாவ் ராணுவத்தில் சேர்ந்தவுடனேயே அவனைச் சுயநல ஆசை தாக்கியது. தன்னுடைய சகாக்களைப் போலவே வாழ்க்கை நடத்தத் தொடங்கினன். அழகாக உடையணிந்து குதிரைமீது ஏறிக்கொண்டு பயிற்சிக்குச் செல்வதைத் தவிர அவனுக்கு வேறு வேலையே இல்லை. அந்த உடைகளைக் கூட மற்றவர்கள் பிரஷ்ஷினல் துடைத்து வைத்துவிடுவார்கள். ஆயுதங்களையும் பிறர் சுத்தமாகத் துடைத்து அவனிடம் கொடுத்து விடுவார்கள். அவன் சவாரிசெய்யும் குதிரையை யும் வேறு யாராவது போஷித்து விடுவார்கள். பயிற்சி நடக் கும் இடத்தில் தன்னைப் போன்ற மற்றவர்களோடு அவனும் வாளைச் சுழற்ற வேண்டும். இதை மற்றவர்களுக்குக் கற்பிக்க வேண்டும். அவனுக்கு வேறு வேலையே இல்லை. சிறியவர்க ளும் பெரியவர்களும் மன்னனும் மற்றவர்களும் இதற்காக அவனைப் பாராட்டியதோடு நில்லாமல் அவனுக்கு நன்றி செலுத்தவும் செய்தார்கள்.

பெரிய ஹோட்டலில் சாப்பிடுவதிலும் குடிப்பதிலும் எங்கிருந்தோ வந்த பணத்தை வாறி இறைப்பது, இதைக் காட் டிலும் முக்கியமென்று கருதப்பட்டது. இதற்கு மேல் நாடகக் கொட்டகைகள், விளையாட்டு, பெண்கள்—மறுபடியும் குதிரை சவாரி, வாள்வீச்சு, குதிப்பு, மறுபடியும் பணத்தைச் செலவிடு வது, சாராயம், சீட்டாட்டம், பெண்கள்.

இத்தகைய வாழ்க்கை மற்றவர்களைக் காட்டிலும் ராணுவத்தினரை அதிகம் கெடுத்துவிடுகிறது. மற்றவர்கள் இப்படிப்பட்ட வாழ்க்கை நடத்தினால் அதுபற்றி அவர்கள் தங்களுக்குள்ளேயே வெட்கப்படாமல் இருக்க முடியாது. ஆனால் இதற்கு மாறாக ஒரு சோல்ஜர் இது பற்றிப் பெருமைப்படுகிறான். யுத்தகாலத்தில் இந்தப் பெருமை இன்னும் அதிகமாகிறது. துருக்கியின் மீது யுத்தம் தொடுக்கப்பட்ட உடனேயே நிக்லியுடாவ் ராணுவத்தில் சேர்ந்திருந்தான். "யுத்தத்தில் நாங்கள் பிராணனைத் தியாகம் செய்யத் துணிந்திருக்கிறோம். ஆகையால் இத்தகைய பொறுப்பற்ற உல்லாஸ வாழ்க்கை மன்னிக்கக் கூடியது மாத்திரமல்ல, அவசியமானதும் கூட. ஆகையால் இப்படி வாழ்கிறோம்" என்ற ரீதியில் நிக்லியுடாவின் சிந்தனைகள் ஓடின. முன்னர் தன்மீது தானே விதித்துக் கொண்டிருந்த தார்மீகக் கட்டுப்பாடுகளிலிருந்து விடுதலை பெற்றிருந்தது பற்றிச் சந்தோஷித்தான்.

இவ்விதம் மூன்று வருஷ காலம் வரை சுயநல வாழ்க்கை நடத்திவிட்டு தன் அத்தைகளைக் காண வந்தான் நிக்லியுடாவ்.

## 14

**போ**ர்க்களத்திற்குச் சென்றிருந்த தன்னுடைய படையில் போய்ச் சேர்வதற்குச் செல்லவேண்டிய ரோடுக்கு அருகே அவனுடைய அத்தைகளின் கிராமம் இருந்தது. அதனால் தான் அவன் அத்தைகளைப் பார்க்கச் சென்றான். அவர்கள் அவனை மிகவும் அன்பாக அழைத்திருந்ததாலும், விசேஷமாக அவன் காடுஷாவைப் பார்க்க விரும்பியதாலும் அவன் அங்கு சென்றான். காடுஷாவைக் கெடுக்க இப்பொழுது அவனுடைய மிருக உணர்ச்சி கூறிய யோசனைகளை முன்னாலேயே அவன் தன்னுடைய ஹிருதயத்தின் ஆழத்தில் புதைத்து வைத்திருந்தானோ என்னமோ; ஆனால் தன்மீது அன்பைப் பொழிந்த அத்தைகளையும், இன்ப நினைவுகளை உண்டாக்கிய காடுஷாவையும் காண மீண்டும் அங்கு வந்த அவன் இதை உணரவில்லை.

மார்ச் மாதக் கடைசியில் 'குட் பிரைடே' யன்று அவன் வந்தான். அப்பொழுது பனி நின்று மழை கொட்டத் தொடங்கிவிட்டது. அவன் தொப்பமாக நனைந்துவிட்டான். குளிர் நடுக்கியது. இருந்தாலும் சுறு சுறுப்பாகவும் உற்சாகமாகவும் இருந்தான். "அவள் இன்னமும் இவர்களுடனேயே இருக்கிறாளா?" என்று சிந்தித்துக் கொண்டே, தனக்குப் பழக்கமான வீட்டு வாசல் புறத்தில் பிரவேசித்தான்.

தன் வண்டியின் மணியோசை கேட்டவுடன் அவள் வருவாள் என்று எதிர்பார்த்தான். ஆனால் அவள் வரவில்லை. காலில் பாதரக்ஷையில்லாத இரு பெண்கள் வெளியே வந்து பார்த்தார்கள். அவர்கள் வீட்டைச் சுத்தம் செய்துகொண்டிருந்தார்கள் போல் தோன்றியது. வேலைக்கார டிகோனும் வெளியே வந்தான். முன்புற அறையில் அவனுடைய அத்தை. சோபியா ஐவனோவ்னா மாத்திரம் தான் அவனைச் சந்தித்தாள். அவள் பட்டு உடையும் குல்லாயும் அணிந்திருந்தாள்.

அவன் வருகைக்காக அவள் சந்தோஷம் தெரிவித்துவிட்டு அவனை முத்தமிட்டாள். மேரிக்கு உடம்பு சரியாகஇல்லை; கோயிலில் மூர்ச்சையாகிவிட்டாள்" என்றாள் அவள்.

நிக்லியுடாவும் அவள் கையை முத்தமிட்டுவிட்டு, "ஓ! மன்னிக்கவும், உன்னையும் ஈரமாக்கிவிட்டேன்" என்றான்.

"இப்படி நனைந்து சொட்டிக் கொண்டிருக்கிறாயே! உன் அறைக்குப் போ! அட! உனக்கு மீசைகூட முளைத்துவிட்டதே!......காடுஷா! காடுஷா! இவனுக்குக் கொஞ்சம் காபி கொண்டுவா! சீக்கிரம்!" என்றாள் அத்தை.

"இதோ ஒரு நிமிஷம்" என்ற குரல் உள்ளேயிருந்து கேட்டது. நிக்லியுடாவ் நன்றாக அறிந்த இனிய குரல் அது. "அவள் இங்குதான் இருக்கிறாள்" என்று அவன் மனம் கொக்கரித்தது. மேகத்திற்குள்ளிருந்து சூரியன் வெளிப்பட்டது போலிருந்தது இது அவனுக்கு.

நிக்லியுடாவ் உடைகளை மாற்றிக் கொள்வதற்காகத் தன்னுடைய பழைய அறைக்குச் சென்றான். டிகோனும் அவனைத் தொடர்ந்து சென்றான். காடுஷாவைப் பற்றி டிகோனிடம் விசாரிக்க வேண்டுமென்று நிக்லியுடாவுக்குத் தோன்றியது. அவள் எப்படி இருக்கிறாள்? என்ன செய்கிறாள்? அவள் விவாகம் செய்துகொள்ளப் போவதே இல்லையா? என்பதையெல்லாம் அவனிடம் கேட்கவேண்டுமென்று நினைத்தான். ஆனால் டிகோன் மிகுந்த மரியாதையுடனும், உறுதியுடனும் தன் வேலையில் ஈடுபட்டிருந்தான். ஆகையால் நிக்லியுடாவ், காடுஷாவைப் பற்றி அவனிடம் கேட்கத் துணியவில்லை. டிகோனின் பேரன்கள், கிழக் குதிரை, 'போல்தான்' என்ற கிழ நாய் முதலியவற்றைப் பற்றி விசாரித்தான். முந்தின கோடைகாலத்தில் நாய் வெறி பிடித்து இறந்துவிட்டதாம்.

அவன் தன்னுடைய ஈர உடைகளைக் களைந்து விட்டு வேறு உடையணியத் தொடங்கியவுடன், அவனுக்குப் பழக்கமான கரு

சுறுப்பான அடியோசையும் கதவைத் தட்டும் சப்தமும் கேட்டன. அந்தக் காலடிச் சப்தமும், கதவைத் தட்டும் ஒலியும் யாருடையது என்பது அவனுக்குத் தெரியும். அவளைத் தவிர வேறு ஒருவரும் அப்படி நடக்கவோ கதவைத் தட்டவோ செய்வதில்லை.

களைந்த கோட்டைத் தோளிலேயே மாட்டிக்கொண்டு அவன் கதவைத் திறந்தான்.

"உள்ளே வா" என்று அழைத்தான். அதே காடுஷா தான். முன்னைக் காட்டிலும் இப்பொழுது இன்னும் மதுரமாக இருந்தாள். சிறிது வக்கரமாக இருந்த ஆனந்தம் பொங்கும் அதே கருவிழிகள். உடைகளில் அழுக்குப் படாமல் தடுக்க முன் போலவே இப்பொழுதும் வெள்ளை அங்கி அணிந்திருந்தாள். அப்பொழுது தான் காகிதத்தைப் பிரித்து எடுத்த ஒரு புதிய சோப்பையும், இரு டவல்களையும் அவள் கொண்டு வந்திருந்தாள். அந்த சோப், டவல்கள், அவற்றைக் கொண்டு வந்திருந்த அவள், எல்லாம் பரிசுத்தமாகவே இருந்தன. அவனைக் கண்டவுடன் ஏற்பட்ட ஆனந்தத்தால் அவளுடைய உதடுகள் முன் போலவே வளைந்தன.

"சௌக்கியம்தானா, தெமித்ரி ஐவனோவிச்?" என்று கேட்டாள் அவள். அதைக் கேட்பதற்குள் வெட்கத்தினால் அவள் முகம் ரோஜா மலர் போல் சிவந்து விட்டது.

"நீ எப்படி இருக்கிறாய்? சௌக்கியந்தானே?" என்று அவனும் உணர்ச்சி ததும்பக் கேட்டான்.

"கடவுள் கிருபையால் சௌக்கியமாகத்தான் இருக்கிறேன். உங்களுக்குப் பிடித்த சோப்பும், டவல்களும் இதோ இருக்கின்றன" என்று சொல்லிக்கொண்டே சோப்பை மேஜை மீது வைத்து விட்டு, டவல்களையும் நாற்காலியின் பின்புறத்தில் போட்டாள்.

"இங்கேயே எல்லாம் இருக்கின்றன" என்று டிகோன் கூறி விட்டு, திறந்திருந்த நிக்லியுடாவின் பெட்டியைச் சுட்டிக் காட்டினான். அதில் பிரஷ்களும் வாஸனைப் பொருள்களும் நிறைந்து கிடந்தன.

"அத்தைகளுக்கு என் நன்றியைத் தெரிவி. இங்கு வந்ததால் எனக்கு எவ்வளவு சந்தோஷம் தெரியுமா?" என்றான் நிக்லியுடாவ். அவன் இருதயத்தில் பழைய மென்மை குடி கொண்டது.

அவன் சொன்னதற்குப் பதில் அளிக்கும் முறையில் அவள் புன் முறுவல் புரிந்து விட்டு போய் விட்டாள்.

நிக்லியுடாவ் மீது அதிக அன்பு வைத்திருந்த அவனுடைய அத்தைகள் முன் தடவைகளைக் காட்டிலும் இந்தத் தடவை அதிகப் பிரியமாக அவனை வரவேற்றனர். அவன் யுத்தத்திற்குச் செல்கிறான். அவன் அங்கு காயமடையக் கூடும். அல்லது இறக்கவும் கூடும். இதனால் தான் அந்தக் கிழவிகள் வருந்தினர்.

நிக்லியுடாவ் தன் அத்தைகளுடன் ஒரு நாள் தான் தங்க ஏற்பாடு செய்திருந்தான். ஆனால் அவன் காடுஷாவைக் கண்டவுடன் ஈஸ்டர் விடுமுறை முழுவதும் அங்கேயே தங்கியிருக்க சம்மதித்தான். ஒடெஸ்ஸாவில் தான் சந்திக்க விருந்த ஸ்கோடுனுபோக் என்ற நண்பருக்கு தன்னுடைய அத்தை வீட்டில் வந்து தன்னைச் சந்திக்கும்படி தந்தி யடித்து விட்டான்.

காடுஷாவைச் சந்தித்தவுடன் நிக்லியுடாவ் தன்னுடைய பழைய உணர்ச்சிகளை மீண்டும் பெற்றான். முன் போலவே அவளுடைய வெள்ளை அங்கியைக் காணும் பொழுது அவனுக்கு உணர்ச்சி பொங்கியது. ஓர் இன்ப உணர்ச்சி யில்லாமல் அவளுடைய காலடி சத்தத்தையும், குரலையும் சிரிப்பையும் கேட்க முடிய வில்லை. அவள் புன் முறுவல் பூக்கும் பொழுது ஒரு வித மெல்லுணர்ச்சி யில்லாமல் அவளுடைய கருவிழிகளைக்காண முடியவில்லை. அவன் காதல் கொண்டிருப்பதாகவே அவனுக்குத் தோன்றியது. ஆனால் முன் போல் இந்தக் காதல் விளங்காத புதிராக இல்லை. இந்தக் காதல் எப்படிப்பட்டது என்பதும் இதனால் என்ன நேரும் என்பதும் அவனுக்கு ஸ்தூலமாகத் தெரிந்திருந்தது. ஆனால் அதைத் தானே கூட உணராதபடி மறைக்க முயன்றான். ஒவ்வொருவரிடமும் இருப்பது போல நிக்லியுடாவிடமும இருவித மனம இருந்தது. எல்லாருக்கும் சந்தோஷத்தை விளைவிக்கக் கூடிய சந்தோஷம் தான் தனக்கும் வேண்டும் என்று தார்மிக மனம கூறும். மிருகத்தனம் நிறைந்த மற்றொரு மனத்திற்கு தன்னுடைய சந்தோஷம்தான் முக்கியம். அதற்காக உலகத்தில் மற்ற எல்லாருடைய சந்தோஷத்தையும் பலியிடவும் அது தயாராக இருந்தது. பீடர்ஸ்பர்க்கிலும் ராணுவத்திலும் அவன் நடத்திய வாழ்க்கையால் அவனுக்கு சுய நலம் மேலிட்டிருந்தது. இந்த சமயத்தில் அவனுடைய மிருக மனம்தான் ஆட்சி செலுத்தியது. அவனுடைய தார்மிக மனத்தை அது நசுக்கி விட்டது.

ஆனால் அவன் காடுஷாவைச் சந்தித்து மூன்று வருஷங்களுக்கு முன்னால் அவன் அனுபவித்த உணர்ச்சிகளை மீண்டும் பெற்ற பொழுது அவனுடைய தெய்விக மனம் தலை நிமிர்ந்து தன் உரிமையைக் கொண்டாடத் தொடங்கியது. சண்டைச்

சுருப்பான அடியோசையும் கதவைத் தட்டும் சப்தமும் கேட்டன. அந்தக் கல்லடிச் சப்தமும், கதவைத் தட்டும் ஒலியும் யாருடையது என்பது அவனுக்குத் தெரியும். அவளைத் தவிர வேறு ஒருவரும் அப்படி நடக்கவோ கதவைத் தட்டவோ செய்வதில்லை.

நனைந்த கோட்டைத் தோளிலேயே மாட்டிக்கொண்டு அவன் கதவைத் திறந்தான்.

"உள்ளே வா" என்று அழைத்தான். அதே காடுஷா தான். முன்னைக் காட்டிலும் இப்பொழுது இன்னும் மதுரமாக இருந்தாள். சிறிது வக்கரமாக இருந்த ஆனந்தம் பொங்கும் அதே கருவிழிகள். உடைகளில் அழுக்குப் படாமல் தடுக்க முன் போலவே இப்பொழுதும் வெள்ளை அங்கி அணிந்திருந்தாள். அப்பொழுது தான் காகிதத்தைப் பிரித்து எடுத்த ஒரு புதிய சோப்பையும், இரு டவல்களையும் அவள் கொண்டு வந்திருந்தாள். அந்த சோப், டவல்கள், அவற்றைக் கொண்டு வந்திருந்த அவள், எல்லாம் பரிசுத்தமாகவே இருந்தன. அவனைக் கண்டவுடன் ஏற்பட்ட ஆனந்தத்தால் அவளுடைய உதடுகள் முன் போலவே வளைந்தன.

"சௌக்கியம்தானா, தெமித்ரி ஐவனோவிச்?" என்று கேட்டாள் அவள். அதைக் கேட்பதற்குள் வெட்கத்தினால் அவள் முகம் ரோஜா மலர் போல் சிவந்து விட்டது.

"நீ எப்படி இருக்கிறாய்? சௌக்கியந்தானே?" என்று அவனும் உணர்ச்சி ததும்பக் கேட்டான்.

"கடவுள் கிருபையால் சௌக்கியமாகத்தான் இருக்கிறேன். உங்களுக்குப் பிடித்த சோப்பும், டவல்களும் இதோ இருக்கின்றன" என்று சொல்லிக்கொண்டே சோப்பை மேஜை மீது வைத்து விட்டு, டவல்களையும் நாற்காலியின் பின் புறத்தில் போட்டான்.

"இங்கேயே எல்லாம் இருக்கின்றன" என்று டிகோன் கூறி விட்டு, திறந்திருந்த நிக்லியுடாவின் பெட்டியைச் சுட்டிக் காட்டினான். அதில் பிரஷ்களும் வாஸனைப் பொருள்களும் நிறைந்து கிடந்தன.

"அத்தைகளுக்கு என் நன்றியைத் தெரிவி. இங்கு வந்ததால் எனக்கு எவ்வளவு சந்தோஷம் தெரியுமா?" என்றான் நிக்லியுடாவ். அவன் ஹிருதயத்தில் பழைய மென்மை குடி கொண்டது.

அவன் சொன்னதற்குப் பதில் அளிக்கும் முறையில் அவள் புன் முறுவல் புரிந்து விட்டு போய் விட்டாள்.

நிக்லியுடாவ் மீது அதிக அன்பு வைத்திருந்த அவனுடைய அத்தைகள் முன் தடவைகளைக் காட்டிலும் இந்தத் தடவை அதிகப் பிரியமாக அவனை வர வேற்றனர். அவன் யுத்தத்திற்குச் செல்கிருன். அவன் அங்கு காயமடையக் கூடும். அல்லது இறக்கவும் கூடும். இதனுல் தான் அந்தக் கிழவிகள் வருந்தினர்.

நிக்லியுடாவ் தன் அத்தைகளுடன் ஒரு நாள் தான் தங்க ஏற்பாடு செய்திருந்தான். ஆனுல் அவன் காடுஷாவைக் கண்டவுடன் ஈஸ்டர் விடுமுறை முழுவதும் அங்கேயே தங்கியிருக்க சம்மதித்தான். ஒடெஸ்ஸாவில் தான் சந்திக்க விருந்த ஸ்கோடுேபோக் என்ற நண்பருக்கு தன்னுடைய அத்தை வீட்டில் வந்து தன்னைச் சந்திக்கும்படி தந்தி யடித்து விட்டான்.

காடுஷாவைச் சந்தித்தவுடன் நிக்லியுடாவ் தன்னுடைய பழைய உணர்ச்சிகளை மீண்டும் பெற்ருன். முன் போலவே அவளுடைய வெள்ளை அங்கியைக் காணும் பொழுது அவனுக்கு உணர்ச்சி பொங்கியது. ஓர் இன்ப உணர்ச்சி யில்லாமல் அவளுடைய காலடி சத்தத்தையும், குரலையும் சிரிப்பையும் கேட்க முடிய வில்லை. அவள் புன் முறுவல் பூக்கும் பொழுது ஒரு வித மெல்லுணர்ச்சி யில்லாமல் அவளுடைய கருவிழிகளைக்காண முடியவில்லை. அவன் காதல் கொண்டிருப்பதாகவே அவனுக்குத் தோன்றியது. ஆனுல் முன் போல் இந்தக் காதல் விளங்காத புதிராக இல்லை. இந்தக் காதல் எப்படிப்பட்டது என்பதும் இதனுல் என்ன நேரும் என்பதும் அவனுக்கு ஸ்தூலமாகத் தெரிந்திருந்தது. ஆனுல் அதைத் தானே கூட உணராதபடி மறைக்க முயன்ருன். ஒவ்வொருவரிடமும் இருப்பது போல நிக்லியுடாவிடமும் இருவித மனம் இருந்தது. எல்லாருக்கும் சந்தோஷத்தை விளைவிக்கக் கூடிய சந்தோஷம் தான் தனக்கும் வேண்டும் என்று தார்மிக மனம் கூறும். மிருகத்தனம் நிறைந்த மற்றெரு மனத்திற்கு தன்னுடைய சந்தோஷம்தான் முக்கியம். அதற்காக உலகத்தில் மற்ற எல்லாருடைய சந்தோஷத்தையும் பலியிடவும் அது தயாராக இருந்தது. பீட்ர்ஸ்பர்க்கிலும் ராணுவத்திலும் அவன் நடத்திய வாழ்க்கையால் அவனுக்கு சுய நலம் மேலிட்டிருந்தது. இந்த சமயத்தில் அவனுடைய மிருக மனம்தான் ஆட்சி செலுத்தியது. அவனுடைய தார்மிக மனத்தை அது நசுக்கி விட்டது.

ஆனுல் அவன் காடுஷாவைச் சந்தித்து மூன்று வருஷங்களுக்கு முன்னுல் அவன் அனுபவித்த உணர்ச்சிகளை மீண்டும் பெற்ற பொழுது அவனுடைய தெய்வீக மனம் தலை நிமிர்ந்து தன் உரிமையைக் கொண்டாடத் தொடங்கியது. ஈஸ்டர்

வரை இரண்டு நாள் முழுதும் அவன் மனத்துள் போராட்டம் நிகழ்ந்து கொண்டிருந்தது.

தான் போய் விட வேண்டும் என்பதையும், தன்னுடைய அத்தை வீட்டில் தங்கி யிருப்பதற்குக் காரணம் இல்லை என்பதையும் அவனுடைய அந்தராத்மா அறியும். அதனால் ஒரு நன்மையும் ஏற்படாது என்பதும் அவனுக்குத் தெரியும். இருந்தாலும் அங்கு தங்கி யிருப்பது அவனுக்கு ஆனந்தமாகவும் உற்சாகமாகவும் இருந்தது. உண்மையை சத்தியத்தை ஏற்காமல், அவன் அங்கேயே தங்கி யிருந்தான்.

ஈஸ்டர் தினத்தன்று சடங்குகளை நடத்திவைக்க பூஜாரியும் அவருடைய சிஷ்யரும் வந்தனர். கோயிலுக்கும் அவர்களுடைய வீட்டுக்கு மிடையில் உள்ள மூன்றுமைல் தூரத்தைக் கடக்க அவர்கள் மிகவும் கஷ்டப்பட்டதாக அவர்கள் சொன்னார்கள்.

ஈஸ்டர் சடங்குகளில் நிக்லியுடாவும் கலந்து கொண்டான். காடுஷாவையே அவன் பார்த்துக் கொண்டிருந்தான். அவள் கதவருகே நின்று கொண் டிருந்தாள். பூஜாரிகள் கேட்ட தூப தீபங்களைக் கொண்டுவந்து வைத்தாள். பிறகு பூஜாரிகளுக்கும் அத்தைகளுக்கும் ஈஸ்டர் முத்தம் அளித்தான். இன்னும் நடுநிசியாகி, ஈஸ்டர் வராவிட்டாலும், வேலைக்காரக் கிழவியான மாட்ரேனு பாவலோவ்னு, ஈஸ்டர் பிரஸாதம் வாங்கிக் கொள்வதற்காகக் கோவிலுக்குப்போக ஏற்பாடு செய்துகொண்டிருந்ததை அவன் அறிந்தபொழுது தானும் படுக்கைக்குச் செல்ல விரும்பினுன். "நானும் கோவிலுக்குப் போகலாமே" என்று நினைத்துக்கொண்டான்.

கோவிலுக்குச் செல்லும் ரஸ்தா வண்டி போக லாயக்கற்றதாக இருந்தது. குதிரைக்கு ஜேணம் பூட்டிக்கொண்டு வரச் சொன்னுன். குதிரை சவாரிக்கான உடைகளை அணிந்து கொண்டான். படுக்கப்போவதற்குப் பதிலாக கோவிலுக்குப் புறப்பட்டான். அதிகத் தீனி தின்று கொழுத்திருந்த அந்தக் குதிரை வழிநெடுக கனைத்துக்கொண்டே போயிற்று. இருட்டில் கரடுமுரடான அந்தப் பாதையைக் கடந்து அவன் கோவிலுக்குச் சென்றுன்.

## 15

நிக்லியுடாவுக்கு இந்தக் கொண்டாட்டம் வாழ்க்கை முழுமையிலும் ஞாபகத்திலிருக்கும்படிப் பதிந்துவிட்டது. அவன் இருளைக் கடந்து கோவிலுக்குச் சென்றபொழுது கோவிலைச் சுற்றி தீபாலங்காரம் செய்யப்பட்டிருந்தது. அவன் போய்ச் சேருவதற்கு முன்பே பிரார்த்தனை ஆரம்பமாகிவிட்டது.

மேரி ஐவனேவ்னவின் மருகனுகிய அவனேக் குடியானவர்கள் அடையாளம் கண்டுகொண்டு விட்டார்கள். அவன் குதிரையைவிட்டு இறங்குவதற்காக உலர்ந்த இடத்திற்குக் குதிரையைப் பிடித்துச் சென்றார்கள். அவன் இறங்கியவுடன் கோவிலுக்குள் செல்ல வழி காட்டினர்கள். கோவிலில் ஏராளமான ஜனங்கள் வந்து கூடியிருந்தனர். வலது பக்கத்தில் குடியானவர்கள் நின்றுகொண்டிருந்தனர். அவர்கள் கோட் அணிந்து, கால்களில் வெள்ளைக் கம்பளிப் பட்டையைச் சுற்றிக்கொண் டிருந்தார்கள். இளைஞர்கள் புதிய கோட்டுகளும் பிரகாசமான பெல்ட்டுகளும் அணிந்திருந்தனர்.

இளம் பெண்கள் இடது பக்கம் நின்றிருந்தனர். தலையில் சிவப்புக் கைகுட்டையைச் சுற்றிக் கட்டியிருந்தனர். கையில்லாத கருப்பு ஜாகெட்டுகள் அணிந்திருந்தனர். பிரக்காசமான சிவப்புச் சட்டையின் கை வெளியே தெரிந்தது. பச்சை, நீலம், சிவப்பு முதலிய பலவர்ண கௌன்களும் கனத்த தோல் பூட்ஸ்களும் அணிந்திருந்தனர். இன்னும் அடக்கமான உடை அணிந்த கிழவிகள் அவர்களுக்குப் பின்னல் நின்றுகொண்டிருந்தனர். தலைக்கு எண்ணெய் தடவி வாரப்பெற்ற குழந்தைகள் உள்ளுக்கும் வெளிக்குமாக ஓடிக்கொண்டிருந்தன. ஆண்களும் பெண்களும் சிறுவர்களும் குனிந்து எழுந்து பிரார்த்தனை செய்யத் தொடங்கினர்கள். பாடகர்கள் ஒரு பக்கம் கானம் செய்து கொண்டிருந்தார்கள்.

நிக்லியுடாவ் முன்னே சென்றான். ஊர் தனவந்தர்கள் மத்தியில் நின்றுகொண்டிருந்தார்கள். ஒரு ஜமீன்தார், அவருடைய மனைவி, மாலுமி உடை அணிந்த அவருடைய மகன், போலீஸ் அதிகாரி, தந்தி குமஸ்தா, ஒரு வர்த்தகன், கிராமத் தலைவன் முதலியவர்கள் அங்கு இருந்தனர். ஜமீன்தார் மனைவிக்குப் பின்னல் மாட்ரேனு பாவ்லோவ்னு நின்றுகொண்டிருந்தாள். காடுஷா வெள்ளை உடையும், கூந்தலில் ஒரு சிவப்பு புரோச்சும் அணிந்து' அவள் பக்கத்தில் நின்றிருந்தாள்.

எல்லாம் ஆடம்பரமாகவும், பிரகாசமாகவும் அழகாகவும் காணப்பட்டன. ஆனல் அவற்றையெல்லாம்விட அதிக அழகாகக் காடுஷா விளங்கினுள். தன்னைப்பாராமலே, தான் வந்திருப்பதை காடுஷா உணர்ந்தாளென்பதை நிக்லியுடாவ் அறிந்தான். நிக்லியுடாவ் அவளைக் கடந்து செல்லும்பொழுது இதைக் கவனித்தான். அவளுக்குச் சொல்ல சமாசாரம் ஒன்றும் இல்லை. ஆனல் அவனுக ஒன்றைச் சிருஷ்டித்துக் கொண்டான். "பிரார்த்தனைக்குப் பின் உபவாஸத்தை முடித்துக் கொள்ளப் போவதாக அத்தை சொன்னுள்" என்று அவளிடம் ரகசியமாகச் சொன்னன்.

இளம் ரத்தம் காடுஷாவின் இனிய முகத்திற்குப் பாய்ந்து அவள் முகம் சிவந்துவிட்டது. அவனைப்பார்க்கும் பொழு தெல்லாம் அவளுக்கு இப்படித்தான் ஏற்படுவது வழக்கம். ஆனந்தம் பொங்கிச் சிரிக்கும் அவளுடைய கருவிழிகள் அவனையே நோக்கின.

"எனக்குத் தெரியும்" என்று புன்சிரிப்போடு பதில் சொன்னாள்.

இந்த சமயத்தில் கோவில் குமாஸ்தா ஒரு செப்புப் பாத்தி ரத்தில் புனித நீரை எடுத்துக்கொண்டு காடுஷாவைக் கவனிக் காமல் அவள்மீது உராய்ந்துகொண்டே போனான். நிக்லியுடா வுக்கு மரியாதை காட்டும் முறையில் சிறிது விலகிச் செல்ல வேண்டும் என்பதற்காக அவன் அப்படிப் போயிருக்கக் கூடும். ஆனால், இங்கும், உலகத்திலும் எல்லாமே காடுஷாவுக் காகத் தான் இருக்கின்றன என்று அந்தக் குமாஸ்தா உணராதது பற்றி நிக்லியுடாவ் ஆச்சரியமடைந்தான்! எல்லாவற்றிற்கும் அவளே நடுநாயகமாக இருப்பது போல அவனுக்குத் தோன்றி யது. வேறு எதைக் கவனியாது இருந்தாலும், அவளைக் கவ னியாமலிருக்க முடியாது. மெழுகு வத்திகள் அவளுக்காகவே ஒளிவீசின. கோயிலில் பாடகர்கள் அவளுக்காகவே கானம் செய்துகொண்டிருந்தார்கள். உலகத்தில் நல்லவை யெல்லாம் அவளுக்காகவே ஏற்பட்டிருந்தன. அவளுடைய அழகிய விரல் களையும், வெள்ளை உடையையும், ஆனந்தம் ததும்பும் அவளு டைய முகத்தையும் அவன் கண்டபொழுது இவையெல்லாம் தனக்காக ஏற்பட்டவைதான் என்பதை அவளும் உணர்ந் திருந்தாள் என்று அவனுக்குத் தோன்றியது. தன் மனத் துள் என்னென்ன நிகழ்ந்தனவோ அவையெல்லாம் அவளு டைய மனத்திற்குள்ளும் நிகழ்ந்தன என்பதை அவன் அறிந் தான்.

இடைவேளையில் நிக்லியுடாவ் கோயிலிலிருந்து புறப்பட் டான். ஜனங்கள் ஒதுங்கி நின்று அவனுக்கு வழிவிட்டார்கள். குனிந்து மரியாதை செய்தார்கள். சிலருக்கு அவனைத்தெரியும். மற்றவர்கள் அவனைப் பற்றிக்கேட்டுத் தெரிந்துகொண் டார்கள்.

அவன் வந்து படிகளில் நின்றான். அங்கு இருந்த பிச்சைக் காரர்கள் வந்து அவனைச் சூழ்ந்துகொண்டார்கள். தன் பையில் இருந்த பணத்தை அவர்களுக்கெல்லாம் கொடுத்துவிட்டு இறங்கினான். பொழுது புலர்ந்துகொண்டிருந்தது. ஆனால் இன்னும் சூரியன் உதிக்கவில்லை. ஜனங்கள், கோவிலுக்கு வெளியே இருந்த சமாதிகளுக்கிடையில் கூடினார்கள். நிக்லி

யுடாவ் கோயிலுக் குள்ளேயே இருந்தாள். அவன் அவளுக்காகக் காத்திருந்தான்.

ஜனங்கள் இன்னமும் கோவிலுக்குள்ளிருந்து வருவதும் மறைவதுமாக இருந்தார்கள்.

தலை தள்ளாடும் ஒரு தொண்டுக்கிழவன், அத்தையின் சமையல்காரன் நிக்லியுடாவை நிறுத்தி, அவனுக்கு ஈஸ்டர் முத்தம் அளித்தான். அவனுடைய மனைவி, மஞ்சள் வர்ணம் பூசிய முட்டை ஒன்றைத் தன் கைக்குட்டைக் குள்ளிருந்து எடுத்து நிக்லியுடாவிடம் கொடுத்தாள். புதிய சட்டை அணிந்திருந்த ஒரு குடியானவன், குதூகலம் நிறைந்த கண்களோடு நிக்லியுடாவ் அருகே வந்து "கிறிஸ்து பிரான் எழுந்துவிட்டார்" என்று கூறி, அவனை முத்தமிட்டான்.

அதே சமயத்தில் மாட்ரேனா பாவ்லோவ்னாவின் உடையும். காடுஷாவின் தலையில் அணிந்திருந்த சிவப்பு புரோச்சும் அவன் கண்களில் பட்டன.

காடுஷாவும் மற்றவர்களுக் கிடையே அவனைக் கண்டுவிட்டாள். தன்னைக் கண்டவுடன் அவளுடைய முகம் மலர்ந்ததை அவன் கவனித்தான்.

மாட்ரேனா பாவ்லோவ்னாவுடன் அவள் வெளியே வந்து பிச்சைக்காரர்களுக்குப் பிச்சை கொடுப்பதற்காக நின்றாள். மூக்கு இருக்கவேண்டிய இடத்தில் சிவப்பு ரணத்தோடுகூடிய ஒரு பிச்சைக்காரன் அவள் அருகே வந்தான். காடுஷா அவனிடம் ஏதோ கொடுத்துவிட்டு, அவனைக்கண்டு அருவருப்படையாமல், அவனை மூன்றுமுறை முத்தமிட்டாள். அவளுடைய கண்கள் இப்பொழுதும் ஆனந்தத்தினால் பிரகாசித்துக்கொண் டிருந்தன. பிச்சைக்காரனை அவள் முத்தமிட்டபொழுது அவளுடைய பார்வை நிக்லியுடாவின் கண்களைச் சந்தித்தது. "நான் செய்வது சரிதானே?" என்று கேட்பது போலிருந்தது அவளுடைய பார்வை. "சரிதானடி கண்ணே; நீ செய்வதெல்லாம் சரிதான். எல்லாம் சரிதான். எல்லாம் அழகாக இருக்கின்றன" என்றது அவன் மனம்.

அவர்கள் இறங்கி வந்தார்கள். அவனும் அவர்களருகே சென்றான். அவன் அவர்களுக்கு ஈஸ்டர் முத்தம் கொடுக்க நினைக்கவில்லை. அவள் அருகில் இருக்கவே விரும்பினான்.

மாட்ரேனா பாவ்லோவ்னா குனிந்து வணங்கிவிட்டு, "கிறிஸ்து எழுந்துவிட்டார்" என்றாள். "இன்று நாம் அனைவரும் சமம்" என்ற பாவம் அவள் குரலில் தொனித்தது

சுருட்டிவைத்திருந்த கைக்குட்டையால் தன் வாயைத் துடைத்துக்கொண்டு, முகத்தை அவனருகே நீட்டினாள்.

"உண்மையாகவே எழுந்துவிட்டார்" என்று நிக்லியுடாவ் பதிலளித்துவிட்டு, அவளை முத்தமிட்டபின் காடுஷாவை நோக்கினான். அவள் முகம் சிவக்கப்பெற்று அவனருகே வந்தாள்.

"கிறிஸ்து எழுந்துவிட்டார். தெமித்ரி ஐவனோவிச்" என்றாள். "அவர் உண்மையாகவே எழுந்து விட்டார்" என்று நிக்லியுடாவ் பதிலளித்து விட்டு அவளை இருமுறை முத்தமிட்டான். "மூன்றும் முறை முத்தமிடுவது அவசியமா?" என்று ஆலோசிப்பதுபோல் இருவரும் சற்று நிதானித்தனர். "அவசியம்தான" என்று தீர்மானித்துக்கொண்டு மற்றொரு முறையும் முத்தமிட்டு விட்டுப் புன்முறுவல் பூத்தனர்.

"பாதிரியார் இருக்குமிடத்திற்கு நீ போகவில்லையா?" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"இல்லை, நாம் இங்கு சற்று உட்காருவோமே" என்று சிறிது சிரமப்பட்டு பதிலளித்தாள் காடுஷா. பேரானந்தம் அளிக்கக்கூடிய ஒரு காரியத்தைச் சாதித்துவிட்டது போன்ற உணர்ச்சி அவளுக்கு. மார்பகம் புடைக்க ஒரு பெரிய பெருமூச்சுவிட்டாள். பக்தியோடும், கன்னிப் பரிசுத்தத்தோடும், காதலோடும், சிறிது வக்கரமான தன் கண்களால் அவனை நிமிர்ந்து நோக்கினாள் காடுஷா.

ஆணுக்கும் பெண்ணுக்கும் மிடையில் ஏற்படக்கூடிய காதலில் உச்சநிலை ஒன்று வருகிறது. அத்தகைய நேரம் அந்த ஈஸ்டர் இரவன்று வந்துவிட்டது நிக்லியுடாவுக்கு. அவன் இப்பொழுது காடுஷாவைப் பற்றி நினைக்கும்பொழுது மற்றவை யெல்லாம் மறந்து போய்விட்டன. பட்டுப்போன்ற அவளுடைய கறுத்த கூந்தலும், உடம்போடு ஒட்டிய வெள்ளை உடையும், இளமை பூரண வளர்ச்சி பெறாத அவளுடைய மார்பும், [illegible]

[illegible]

ஆஹா! எல்லாம் அதோடு நின்றிருந்தால்! "ஆம்! அந்த ஈஸ்டர் இரவன்று அந்த பயங்கர சம்பவங்களெல்லாம் நடக்கவில்லை" என்று ஜூரிகளின் அறை ஜன்னல் அருகே உற்கார்ந்தபடியே நிக்லியுடாவ் தனக்குள் சொல்லிக்கொண்டான்.

## 16

கோயிலிலிருந்து திரும்பி வந்தவுடன் நிக்லியுடாவ் தன் அத்தைகளுடன் பாரணை செய்தான். ஒரு கோப்பை சாராயமும் குடித்தான். ராணுவத்தில் இருந்ததால் அவனுக்குக் குடிப் பழக்கம் ஏற்பட்டிருந்தது. தன் அறைக்குப் போய், உடைகளைக் கூடக் களையாமலே படுத்துத் தூங்கிவிட்டான். சிறிது நேரத்திற்குப் பின் யாரோ கதவைத் தட்டும் சத்தத்தைக் கேட்டுக் கண் விழித்தான்.

அவள் கதவைத் தட்டும் சத்தம் தான் அது என்பது அவனுக்குத் தெரியும். கண்ணைக் கசக்கிச் சோம்பல் முறித்துக்கொண்டே எழுந்தான்.

"காடுஷா, நீதானே? வாயேன்" என்றான்.

அவள் கதவைத் திறந்தாள்.

"சாப்பாடு தயாராக இருக்கிறது" என்றாள் அவள். அதே வெள்ளை உடையைத்தான் அவள் இன்னமும் அணிந்திருந்தாள். ஆனால் தலையில் மாத்திரம் சிவப்பு புரோச் இல்லை. ரொம்பவும் நல்ல சமாசாரம் எதையோ அவனிடம் கூறியவள் போலப் புன் சிரிப்புச் சிரித்துக் கொண்டே அவனை நோக்கினாள்.

"இதோ வந்து விட்டேன்" என்று சொல்லிக்கொண்டே தன் தலையை வாரிக்கொள்ள சீப்பை எடுத்தான் நிக்லியுடாவ்.

அவள் ஒரு நிமிஷம் அசைவற்று நின்றாள். அவன் அதை கவனித்து, சீப்பை எறிந்து விட்டு, அவளை நோக்கி ஒரு அடி எடுத்து வைத்தான். ஆனால் அதே க்ஷணத்தில் அவள் சட்டெனத் திரும்பி நடந்தாள்.

"என்ன முட்டாள் தனம்! அவளை ஏன் நிறுத்தவில்லை?" என்று நினைத்தான் நிக்லியுடாவ். அவன் வேகமாகச் சென்று அவளுக்கு முன்னால் நின்றான்.

அவன் அங்கு இருக்க வேண்டுமென்று ஏன் விரும்பினான் என்பது அவனுக்கே தெரியவில்லை. ஆனால் செய்ய வேண்டியது ஏதோ விடுபட்டுப்போய் விட்டது போல் தோன்றியது. அவன் உள்ளே வந்த பொழுது, அத்தகைய சந்தர்ப்பங்களில் பொதுவாகச் செய்யப்படும் ஏதோ ஒரு காரியத்தை அவன் செய்யாமல் விட்டு விட்டதாக அவனுக்குத் தோன்றியது.

"காடுஷா, சற்று இரு" என்றான்.

காடுஷா நின்று, "என்ன வேண்டும்?" என்று கேட்டாள்.

"ஒன்றுமில்லை—" என்று சொல்லிக்கொண்டே, தன் நிலையில் உள்ள புருஷர்கள் என்ன செய்வார்கள் என்பதை ஞாபகப் படுத்திக் கொண்டு, அவளுடைய இடுப்பில் கை கொடுத்து அணைத்துக் கொண்டான்.

அவள் சலனமற்று நின்று அவனுடைய கண்களுக்குள் ஊடுருவிப் பார்த்தாள்.

"வேண்டாம் தெமித்ரி ஐவனோவிச்; அப்படிச் செய்யாதீர்கள்" என்று சொல்லிக் கொண்டே அவன் கையை அகற்றினாள். அவள் கண்களில் நீர் பொங்கிக் கொண்டு வந்தது. அவன் அவளை விட்டு விட்டான். ஒரு க்ஷண நேரம் அவன் குழப்பமும் வெட்கமும் அடைந்தான். தன்னையே அவன் நொந்து கொண்டான்.

இந்த சமயத்தில் அவன் தன்னையே நம்பியிருக்க வேண்டும். அவனுடைய ஆத்மா சுதந்தரமாக இருக்க விரும்புகிறது என்பதும், மிக உன்னதமான உணர்ச்சியினால் தான் இந்தக் குழப்பமும் வெட்கமும் உண்டாயின என்பதும் அவனுக்குத் தெரிந்திருக்கும். ஆனால் அது தன்னுடைய முட்டாள் தனமென்றும், மற்றவர்களைப் போலத் தானும் நடந்து கொள்ள வேண்டுமென்றும் தான் அவன் நினைத்தான். அவன் மறுபடியும் வேகமாகச் சென்று அவள் கழுத்தில் முத்தமிட்டான்.

முன்பு லைலாக் புதருக்குப் பின்னால் சிந்தனையின்றி இட்ட முதல் முத்தத்தைப் போல இல்லை இந்த முத்தம். கோவிலில் இட்ட முத்தத்திலிருந்தும் இது முற்றிலும் மாறுபட்டிருந்தது. இது வேறு விதமான முத்தம் தான். அவளே இதை உணர்ந்தாள்.

விலை மதிக்க முடியாத ஏதோ ஒன்றை அவன் நொறுக்கி விட்டது போல, "இது என்ன காரியம்!" என்று கத்தி விட்டு வேகமாக ஓடினாள் காடுஷா.

சாப்பாட்டு அறைக்குள் அவன் வந்தான். அவனுடைய அத்தானும், குடும்ப டாக்டரும், பக்கத்து வீட்டுக்காரர் ஒருவரும் அங்கு இருந்தனர். ஆனால் கிள்ளிப்டாவின் மனதிற்குள் மாத்திரம் புயல் வீசிக் கொண்டிருந்தது. அங்கு வந்தவை ஒன்றும் அவன் மனத்தில் பதியவில்லை. காந்தாவைப் பற்றியே சிந்தித்துக் கொண்டு, ஏதோ வாய்க்கு வந்த பதிலை அளித்துக் கொண்டிருந்தான். அந்தக் கடைசி முத்தத்தின் உணர்ச்சியைப்பற்றியே அவன் சிந்தித்துக் கொண்டிருந்தான். வேறு எதைப்பற்றியும் அவனால் நினைக்க முடியவில்லை. அவள் அறைக்குள் வந்த பொழுது, அவள் திரும்பிப்பாராமலே அவன் இருப்பதை உணர்ந்தாள்.

சாப்பாடு முடிந்த உடனேயே தன் அறைக்குப் போய் விட்டான். பெருத்த பரபரப்புடன் தன் அறைக்குள் குறுக்கும் நெடுக்குமாக அலைந்து கொண்டிருந்தான். வீட்டில் எழுந்த ஒவ்வொரு சிறு சப்தத்தையும் அவன் உற்றுக் கேட்டான். அவளுடைய காலடிச் சத்தம் கேட்கு மென்று அவன் எதிர் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய மிருக உணர்ச்சி, அவன் முதல் முறையாக அந்த வீட்டிற்கு வந்த பொழுது தலை தூக்கி நின்ற தார்மிக உணர்ச்சியைக் காலடியில் போட்டு மிதித்து விட்டது. அன்று காலை கூட அவனுடைய தார்மிக உணர்ச்சி ஆட்சி செலுத்தியது. அவள் உள்ளே செல்லும் சப்தம் கேட்டவுடன், மூச்சைப் பிடித்துக்கொண்டு, ஏதோ குற்றம் செய்யப் போகிறவனைப்போல சத்தமிடாமல் நடந்து அவள் பின்னாலேயே சென்றான்.

தலையணைக்கு அவள் சுத்தமான வெள்ளை உறை போட்டுக்கொண்டிருந்தாள். அப்படியே அவள் திரும்பிப் பார்த்து, புன்சிரிப்புச் சிரித்தாள். சந்தோஷத்தினால் பொங்கிவரும் சிரிப்பன்று அது. பயமும் பரிதாபமும்தான் அதில் நிறைந்திருந்தன. அவன் நினைப்பது தவறு என்று சொல்வதுபோல் இருந்தது அந்தச் சிரிப்பு. அவன் ஒரு க்ஷணம் நின்றான். மனப் போராட்டத்திற்கு இன்னமும் இடம் இருந்தது. அவள் மீது அவனுக்கு இருந்த உண்மை அன்பு ஹிருதயத்தில் இன்னமும் அவளுக்காக அவளுடைய உணர்ச்சிகளுக்காக, அவளுடைய வாழ்க்கைக்காகப் பரிந்து பேசிக்கொண்டிருந்தது. ஆனால் அதே சமயத்தில், "ஜாக்கிரதை! நீ இன்பம் அனுபவிப்பதற்கு, சந்தோஷம் அடைவதற்கு, கிடைத்துள்ள சந்தர்ப்பத்தை நழுவவிட்டுவிடாதே!" என்று மற்றொரு குரல் கூறிக்கொண்டிருந்தது. முதல் குரலை இந்தக் குரல் முற்றிலும் அமுக்கிவிட்டது. அவன் உறுதியோடு அவளருகே சென்றான்! கட்டுப்படுத்தமுடியாத பயங்கரமான ஒரு மிருக இச்சை அவனை வசப்படுத்திக் கொண்டுவிட்டது.

அவள் இடுப்பைச் சுற்றித் தன் கையை வளைத்து, அவளைப் படுக்கையின் மீது உட்கார வைத்தான். இன்னும் செய்ய வேண்டியது ஏதோ பாக்கியிருக்கிறது என்று உணர்ந்து, தானும் அவள் பக்கத்தில் உட்கார்ந்தான்.

"தெமித்ரி ஐவனிச், என் அன்பே! தயைசெய்து என்னைப் போகவிட்டுவிடுங்கள்" என்று அவள் பரிதாபமான குரலில் கேட்டாள். "மாட்ரேனா பாவ்லோவ்னா வருகிறாள்" என்று கத்தியபடி அவள் திமிறிக்கொண்டு ஓடினாள். உண்மையிலேயே யாரோ கதவருகே வந்து கொண்டிருந்தார்கள்.

"சரி. நான் ராத்திரி உன்னிடம் வருகிறேன். நீ தனியாகத் தானே இருப்பாய்?" என்று ரகசியமாகக் கேட்டான் நிக்லியுடாவ்.

"நீங்கள் என்ன செய்ய நினைக்கிறீர்கள்? எந்தக் காரணத்தைக் கொண்டும் வரவேண்டாம்" என்றாள் காடுஷா. இந்த வார்த்தைகள் அவளுடைய உதட்டிலிருந்துதான் வந்தன. ஆனால் குழப்பமடைந்திருந்த அவளுடைய உடலும் உள்ளமும் இதற்கு நேர்மாறாகப் பேசிக்கொண்டிருந்தன.

அங்கே வந்தவள் மாட்ரேனா பாவ்லோவ்னாதான். தன் கையில் ஒரு போர்வையைமடித்துப்போட்டுக்கொண்டிருந்தாள். நிக்லியுடாவை அவள் சந்தேகத்துடன் நோக்கினாள். வேறு போர்வையை எடுத்துக்கொண்டு வந்து விட்டதற்காகக் காடுஷாவைத் திட்டத் தொடங்கினாள்.

நிக்லியுடாவ் மௌனமாக வெளியே சென்றான். வெட்கப்படவில்லை. மாட்ரேனா பாவ்லோவ்னா தன்னைப் பழிக்கிறாள் என்பதை அவளுடைய முகத்திலிருந்தே நிக்லியுடாவ் அறிந்தான். காரணமாகத்தான் அவள் பழிக்கிறாள் என்பதும் அவனுக்குத் தெரியும். தான் செய்வது தவறு என்பதை உணர்ந்தான். ஆனால் இந்தக் கேவலமான மிருக உணர்ச்சி காடுஷாவின் மீது அவனுக்கு இருந்த உண்மையான பழைய அன்பை அமுக்கிக்கொண்டு கிளம்பிவிட்டது. வேறு ஒன்றுக்கும் அவன் உள்ளத்தில் இடமில்லை. தன் வெறியைத் தணித்துக்கொள்ள என்ன செய்ய வேண்டும் என்பது அவனுக்குத் தெரியும். அதைச் செய்வதற்கு வேண்டிய சந்தர்ப்பத்தை எப்படி உண்டாக்கிக் கொள்வது என்று யோசித்துக் கொண்டிருந்தான்.

அவளைத் தனியாக எப்படிச் சந்திக்கலாம் என்று யோசித்துக்கொண்டே அவன் அத்தையின் அறைக்குச் சென்றான். பிறகு தன்னுடைய அறைக்கே வந்தான். பிறகு வாசலுக்கு வந்தான். ஆனால் அவள் அவன் கண்ணில்படாமலே நட-

மாடிக் கொண்டிருந்தாள். மாட்ரேனு பாவ்லோவ்னு அவளைக் கூர்ந்து கவனித்து வந்தாள்.

## 17

மாலைநேரம் கழிந்து இரவு வந்தது. நிக்லியுடாவின் அத்தைகளும் படுக்கைக்குப் போய்விட்டார்கள். மாட்ரேனு பாவ்லோவ்னுவும் அவர்களுடன் படுக்கை அறையில் இருந்தாள் என்பது அவனுக்குத் தெரியும். ஆகையால் வேலைக்காரிகளின் அறையில் காடுஷா தனியாகவே இருப்பாள் என்பது நிச்சயம். அவன் மறுபடியும் வெளியே வந்தான். எங்கும் இருள் சூழ்ந்திருந்தது. தரை சொத சொதப்பாக இருந்தது. மூடுபனி கவிந்துகொண்டிருந்தது. சிறிது தூரத்திற்கப்பால் மலையடிவாரத்தில் ஓடும் ஆற்றிலிருந்து விசித்திரமான சப்தம் வந்துகொண்டிருந்தது. நிக்லியுடாவ் படிகளில் இறங்கி வந்து வேலைக்காரிகள் அறை ஜன்னலருகே சென்ருன். அவனுடைய ஹிருதயம் படபடவென்று அடித்துக்கொண்டிருந்தது. அதன் சப்தம் அவனுக்கே கேட்பதுபோலிருந்தது. அவள் என்ன செய்கிருள் என்பதைக் கவனிப்பதற்காக அவன் நீண்ட நேரம் அசையாமல் நின்ருன். தன் ஹிருதயத்தின் ஒலியையும், ஆற்றின் சப்தத்தையும் தன்னை அறியாமலே கேட்டுக் கொண்டு, அவளைப் பார்த்து நின்ருன். சில விஞடிகள் அவள் அசையவில்லை. பிறகு தன் பார்வையை உயர்த்திஞள். பிறகு தன்னைத்தானே திட்டிக்கொள்வதுபோல் தலையை அசைத்தாள். பிறகு நிலைமாறி உட்கார்ந்தாள். கைகளை மேஜைமீது தொப்பென்று போட்டாள். மறுபடியும் தனக்கு முன்ஞல் வெறித்துப் பார்க்கத்தொடங்கிஞள். ஆற்றிலிருந்து அந்த முடிவற்ற ஒலி கேட்டுக்கொண்டேயிருந்தது. ஏதோ விசிப்பதுபோலவும் உடைவதுபோலவும், வீழ்வதுபோலவும் துண்டுதுண்டாகச் சிதறுவது போலவும் சப்தம் கேட்டுக் கொண்டிருந்தது. இதோடு, உருகும் பனிக்கட்டிகள் ஒன்ருேடு ஒன்று மோதுவதால் ஏற்படும் சப்தமும் சேர்ந்து கொண்டது.

காடுஷாவின் வருத்தம் தோய்ந்த முகத்தைப் பார்த்துக் கொண்டே அவன் நின்ருன். அவள் மனத்துள் நடக்கும் போராட்டம் அவள் முகத்தில் பிரதிபலித்தது. அவளைக் கண்டு அவன் வருந்திஞன். ஆஞல் இந்த வருத்தம் அவனுடைய இச்சையை அதிகப்படுத்தியது தான் இதில் விசேஷம். இச்சை அவனைப் பூரணமாக வென்றுவிட்டது.

அவன் ஜன்னலைத் தாண்டிஞன். மின்சார அதிர்ச்சி ஏற்பட்டது போல அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவள்

உடல் முழுதும் நடுங்கியது. அவள் முகத்தில் ஒரு பயங்கரக் களை படர்ந்தது. பிறகு அவள் குதித்தெழுந்து ஜன்னல் அருகே வந்து, ஜன்னல் கண்ணாடியருகே முகத்தை வைத்துக் கொண்டு பார்த்தாள். கண்ணாடி வழியாக உற்று நோக்கி அவனை அடையாளம் கண்டுபிடித்த பொழுதுகூட அவள் முகத்தில் இருந்த பயங்கரக் களை மாறவில்லை. அவள் முகத்தில் சோகம் நிறைந்திருந்தது. அதை இவ்விதம் அவன் ஒரு நாளும் பார்த்ததில்லை. அவன் புன்முறுவல் செய்தபொழுது அவளும் பதிலுக்குப் புன்முறுவல் செய்தாள். ஆனால் அவனுக்குப் பணியும் முறையில்தான் இருந்தது அந்தச் சிரிப்பு. நிக்லியுடாவ் கையினால் ஜாடை காட்டி அவளை வெளியே அழைத்தான். ஆனால் அவள் தலையை அசைத்து மறுத்து விட்டு ஜன்னல் அருகிலேயே நின்றாள். அவன் ஜன்னல் அருகே வந்து அவளை அழைக்கப் போனான். அதற்குள் பின் பக்கம் யாரோ கூப்பிட்டது போல அவள் வாசற்படி பக்கம் சட்டெனத் திரும்பினாள். நிக்லியுடாவும் அந்த இடத்திலிருந்து நகர்ந்துவிட்டான். ஆனால் வீட்டிலிருந்து ஐந்து அடி அப்பால் சென்றுவிட்டால் ஜன்னல் தெரியாதபடி அவ்வளவு கனத்த மூடுபனி பெய்து கொண்டிருந்தது. ஆற்றுப் பக்கத்திலிருந்து விசிப்பது போலவும் சல சலப்பது போலவும், விசித்திரமான சப்த ஜாலங்கள் வந்துகொண்டிருந்தன. மூடு பனிக்கிடையே எங்கோ வெகு தூரத்தில் ஒரு சேவல் கூவியது அதற்குப் பதில் அளிப்பது போல் வேறு எங்கோ மற்றொரு சேவல் கூவியது. பிறகு தூரத்துக் கிராமத்தில் இருந்த கோழிகள் கத்தத் தொடங்கி எல்லாம் ஒரே குரலாயின. ஆற்றைத் தவிர மற்றவை யெல்லாம் நிசப்தமாக இருந்தன. அன்று இரவு கோழிகள் கூவியது அது இரண்டாம் முறை.

வீட்டுப் பின்புறத்தில் நிக்லியுடாவ் குறுக்கும் நெடுக்குமாக நடந்துகொண்டிருந்தான். இரண்டு மூன்று முறை சாக்கடையில் கூடக் கால்வைத்துவிட்டான், பிறகு அவன் மறுபடியும் ஜன்னல் அருகே வந்தான். விளக்கு எரிந்துகொண்டிருந்தது. என்ன செய்வதென்று நிர்ணயிக்க முடியாதவள் போல அவள் மேஜை அருகில் மறுபடியும் தனியாக உட்கார்ந்திருந்தாள். அவன் ஜன்னலை அணுகுவதற்குள் அவளே நிமிர்ந்து பார்த்தாள். அவன் தட்டினான். யாரென்றுகூடப் பார்க்காமல் அவள் அறையிலிருந்து வெளியே ஓடிவந்தாள். வெளிக்கதவு திறக்கும் ஓசை அவன் காதில் விழுந்தது. அவள் வந்தவுடன் அவன் ஒன்றும் சொல்லாமல் அவளை அணைத்துக் கொண்டான். அவளும் அவனை அணைந்து அவனுடைய முத்தத்தை தன் உதடுகளில் ஏற்றாள். அவன் தணியாத உணர்ச்சி வேகமும் தாபமும் மேலிட்டு நின்றான். பிறகு முன்போலவே கதவைத் திறக்கும் சப்தம் கேட்டது, மாட்ரேனா பாவ்லோவ்னா கோபக் குரலில், ''காடுஷா'' என்று கூப்பிடுவது கேட்டது.

அவன் அவளிடமிருந்து விடுபட்டு தன் அறைக்குச் சென்றாள். கதவை மூடும் சப்தம் அவன் காதில் விழுந்தது. பிறகு ஒரே நிசப்தம். விளக்கு அணைந்துவிட்டது. மூடுபனி மாத்திரம் கவிந்துகொண்டிருந்தது. மறுபடியும் ஜன்னலைத் தட்டினான். பதில் வரவில்லை. வாசல் பக்கமாக வீட்டுக்குள் வந்தான்; ஆனால் அவனுக்குத் தூக்கம் வரவில்லை. பிறகு வெறுங்காலுடன், மாட்ரேனா பாவ்லோவ்னாவின் அறைக்குப் பக்கத்தில் இருந்த காடுஷாவின் அறைக்குச் சென்றான். மாட்ரேனா பாவ்லோவ்னா குறட்டை விடுவது கேட்டது. அவன் அந்த இடத்தைத் தாண்டிச் செல்வதற்குள், அவளுடைய படுக்கை கிரீச்சிட்டது. அவள், தன் படுக்கையில் புரண்டு படுத்தாள்! அப்பொழுது அவனுடைய ஹிருதயம் நின்று விட்டது போலவே இருந்தது. அவன் அங்கேயே ஐந்து நிமிஷ நேரம் அசையாமல் நின்றான். அவள் மறுபடியும் அமைதியாகக் குறட்டைவிடத் தொடங்கிய பிறகுதான் அவன் அந்த இடத்திலிருந்து நகர்ந்து காடுஷாவின் அறைக்குச் சென்றான். அவளுடைய அறையில் ஒரு சப்தமும் கேட்கவில்லை. அவள் விழித்துக்கொண்டுதான் இருந்தாள் போலும். அவள் தூங்கியிருந்தால் அவள் மூச்சுவிடுவது கேட்டிருக்கும். அவன் "காடுஷா!" என்று ரகசியமாகக் கூப்பிட்டவுடன் அவள் துள்ளி எழுந்தாள். அவள் கோபமடைந்தவள் போல அவனைப் போகச் சொன்னாள்.

"இதற்கு என்ன அர்த்தம்? நீங்கள் என்ன செய்கிறீர்கள்? உங்கள் அத்தைகளுக்குக் கேட்டுவிடும்" என்று அவள் சொன்னாள். ஆனால், "நான் முற்றிலும் உன்னுடையவள்தான்" என்று அவளுடைய உடல் முழுமையும் சொல்லிக் கொண்டிருந்தது. இதைத்தான் நிக்லியுடாவ் புரிந்து கொண்டான்.

"கதவைத் திற. என்னை ஒரு நிமிஷம் உள்ளே விடு. நான் உன்னை வேண்டிக் கொள்கிறேன்" என்றான் நிக்லியுடாவ். அவன் சொன்னது அவனுக்கே தெரியாது.

அவள் மௌனமாக இருந்தாள்.பிறகு அவள் தாழ்ப்பாளுக்காக கதவைத் தட்வும் சப்தம் கேட்ட்து. தாழ்ப்பாள் "கிளிக்" என்ற சப்தத்தோடு திறந்தது. அவன் உள்ளே சென்றான். அவளை அப்படியே தூக்கிக் கொண்டு தன் அறைக்கு வந்து விட்டான்.

"ஐயோ! இதென்ன காரியம்?" என்று அவள் முணுமுணுத்தாள். ஆனால் அவன் அதை லக்ஷியமே செய்யவில்லை.

"உம் ஹூம், கூடவே கூடாது. என்னை விடுங்கள்" என்று அவனை நெருங்கி நின்று கூறினாள்.

x x x x

அவன் கேட்டவை ஒன்றுக்கும பதில் சொல்லாமல் அவள் மௌனமாக நடுங்கிக்கொண்டே அவனை விட்டுப் போய் விட்டாள். அவன் மறுபடியும் வெளியே வந்து, அப்பொழுது நடந்ததன் அர்த்தத்தைக் கண்டு பிடிக்க முயன்று கொண்டிருந்தான்.

ஆற்றின் ஒலியும் பனிக்கட்டி உடையும் சப்தமும் இன்னும் சிறிது அதிகமாகக் கேட்டன. தேய்பிறைச் சந்திரனின் மங்கிய ஒளி இருண்ட ஏதோ ஒன்றின் மீது விழுந்து கொண்டிருந்தது.

"இதன் அர்த்தம் என்ன? எனக்கு ஏற்பட்டது பெரிய சந்தோஷமா பெரிய அவக்கேடா" என்று அவன் தன்னைத் தானே கேட்டுக் கொண்டான்.

"இது எல்லாருக்கும் தான் ஏற்படுகிறது—எல்லாரும் தான் இதைச் செய்கிறார்கள்" என்று அவன் தன்னைத்தானே சமாதானப் படுத்திக் கொண்டு படுத்துத் தூங்கி விட்டான்.

## 18

மறுநாள் காலை நிக்லியுடாவின் நண்பனும் குஷிப் பேர் வழியுமான ஸ்கான்பாக், நிக்லியுடாவ் இருக்கும் இடத்திற்கு வந்து சேர்ந்தான். அவன் நடையுடை பாவனைகளாலும் தாராள மனப்பான்மையினாலும் நிக்லியுடாவிடம் அவன் செலுத்திய அன்பினாலும் அனைவருடைய அன்புக்கும் பாத்திரமாகிவிட்டான்.

நிக்லியுடாவின் அத்தைகள் அவனுடைய தாராள குணத்தைக் கண்டு வியந்தபோதிலும் அதே குணம் அவர்களுக்கு குழப்பத்தை அளித்தது. அது அவர்களுக்கு மிகையாகத் தோன்றியது. வாசலில் வந்த சில குருட்டுப் பிச்சைக்காரர்களுக்கு அவன் ஒரு ரூபிள் கொடுத்தான். வேலைக்காரர்களுக்கு சன்மானமாக பதினைந்து ரூபிள் கொடுத்தான். ஸோபியா ஐவனேவ்னாவின் நாய் காலில் காயப்படுத்திக் கொண்டு வந்தபொழுது அவன் தன்னுடைய விலை உயர்ந்த கைக்குட்டையைக் கிழித்து கட்டுக் கட்டினான். அந்தக் கிழவிகள் இத்தகையவர்களைப் பார்த்ததேயில்லை. ஸ்கான் போக்குக்கு இரண்டாயிரம் ரூபிள் கடன் இருக்கிறது என்பதும், அதை அவன் திருப்பிக் கொடுக்கப் போவதில்லை என்பதும், அதில் ஓர் இருபத்தைந்து ரூபிள் அவனுக்கு ஒரு பிரமாதமில்லை என்பதும் அவர்களுக்குத் தெரியாது.

அவன் அங்கு ஒரு நாள்தான் தங்கி யிருந்தான். அவனும் நிக்லியுடாவும் அன்று இரவே புறப்பட்டு விட்டனர். அவர்களுடைய லீவ் தீர்ந்து விட்டதால் அதற்குமேல் தங்களுடைய படையை விட்டு இருப்பது அவர்களுக்குச் சாத்தியமில்லாமல் போய் விட்டது.

அந்தக் கடைசி தினத்தன்று நிக்லியுடாவின் மனத்தில் இரு எண்ணங்கள் போராடிக் கொண்டிருந்தன, ஒன்று மிருகத்தனமான காம உணர்ச்சியின் நினைவு. அவன் எதிர்பார்த்ததை அந்த உணர்ச்சி நிறைவேற்ற வில்லை யென்றாலும் தன் காரியத்தைச் சாதித்துக் கொண்ட திருப்தி. அதோடு கலந்திருந்தது. மற்றொன்று, தான் செய்த பெரிய தவறை உணர்ந்ததால் ஏற்பட்ட பச்சாதாப உணர்ச்சி. அவளுக்காக இல்லாவிட்டாலும் தனக்காகவாவது அதைத் திருத்த வேண்டுவது மிகவும் அவசியம் என்று அவனுக்குத் தோன்றியது.

இந்த சமயத்தில் நிக்லியுடாவின் சுய நலம் உச்ச நிலையை அடைந்து விட்டது. தன்னைத் தவிர வேறு ஒன்றைப்பற்றியும் அவனால் நினைக்க முடிய வில்லை. தன்னுடைய நடத்தை வெளியானால் தன்னைப் பிறர் தூற்றுவார்களா என்றுதான் அவன் யோசித்தான். காடுஷாவின் உணர்ச்சி இப்பொழுது எப்படி இருக்கிறது; அவளுக்கு இனி என்ன நேரும் என்பதைப்பற்றி யெல்லாம் அவன் சிந்திக்கவே யில்லை.

அவளோடு தனக்கு இருந்த தொடர்பை ஸ்கான்போக் ஊகித்துக் கொண்டு விட்டான் என்பதை நிக்லியுடாவ் அறிந்தான். இதனால் அவனுடைய கர்வம் இன்னும் அதிகரித்தது.

"உன் அத்தைகளோடு நீ ஒரு வாரத்திற்கு மேல் தங்கியிருக்கும்படி அவர்கள் மேல் உனக்கு திடீரென்று அன்பு பிறந்த காரணம் இப்பொழுது தெரிந்து விட்டது" என்றான் ஸ்கான்போக். காடுஷாவைக் கண்ட பொழுது, "இதைக்கண்டு நான் ஆச்சரியப்பட வில்லை. நானும் இதைத்தான் செய்திருப்பேன்! அவள் அழகாகத்தான் இருக்கிறாள்" என்றான் ஸ்கான்போர்க்.

அவளுக்குப் பணம் கொடுத்து விட்டுப் போவது மிகவும் அவசிய மென்று நிக்லியுடாவுக்குத் தோன்றியது. அவளுக்காக அல்ல; அவளுக்குப் பணம் தேவையாக இருக்கும் என்பதற்காக அல்ல. "செய்ய வேண்டிய கடமை அது. அவளைப் பயன் படுத்திக் கொண்ட பின் அவளுக்குப் பணம் கொடுக்காவிட்டால் அவனைக் கேவலமாக நினைப்பார்கள்—" என்று நிக்லியுடாவ் நினைத்தான்.

ஆகையால் ரொம்பவும் பெரிய தொகை என்று தனக்குத் தோன்றியதை அவளுக்குக் கொடுத்தான். அவன் புறப்பட வேண்டிய தினத்தன்று தனியாக ஓர் இடத்தில் காடுஷாவுக்காகக் காத்திருந்தான். அவனை அவள் பார்த்தவுடன் முகம் சிவந்து விட்டது, நேராகப் பார்த்தபடி, அவனைக் கடந்து போய் விட விரும்பினாள். ஆனால் அவன் நிறுத்தினான்.

“உன்னிடம் விடை பெற்றுக்கொண்டு போக வந்திருக்கிறேன்” என்று சொல்லிக் கொண்டே நூறு ரூபிள் நோட்டு அடங்கிய ஒரு கவரை நீட்டினான்.

“அங்கே நான்” என்று இழுத்தான் நிக்லியுடாவ்.

அவன் என்ன சொல்ல நினைத்தான் என்பதை அவள் ஊகித்துக் கொண்டு விட்டாள். அவள் தலையை அசைத்துக்கொண்டே அவன் கையை தூரத் தள்ளினாள்.

“எடுத்துக் கொள். எடுத்துக் கொண்டுதான் ஆக வேண்டும்” என்று அவன் குழறிக் கொண்டே சொல்லி விட்டு, கவரை அவளுடைய அங்கியில் வைத்துத் திணித்தான். அடி பட்டவன் போல முகத்தைச் சுளித்துக் கொண்டு முனகிக் கொண்டே தன் அறைக்கு ஓடினான். தாங்க முடியாத வலியினால் கஷ்டப்படுபவன் போலத் தன் அறைக்குள் அவன் குறுக்கும் நெடுக்கும் அலைந்தான். கடைசிக் காட்சி அவனுக்கு ஞாபகம் வந்த பொழுது உரத்த குரலில் கூட அவன் முனகினான். “ஆனால் நான் வேறு என்ன தான் செய்திருக்க முடியும்? எல்லோருக்கும் நடப்பது தானே இது? ஸ்கான் போக், கிரிஷா மாமா, என் தந்தை எல்லாருக்கும் இப்படித்தானே நடந்திருக்கிறது. ஒரு குடியானவப் பெண்ணோடு என் அப்பா கொண்டிருந்த கள்ள நட்பால் பிறந்த பிள்ளை மிடின்கா கூட இன்னும் இருக்கிறானே? ஒவ்வொருவரும் இப்படிச் செய்யும் பொழுது இது தவிர்க்க முடியாதது என்று தான் நினைக்கிறேன்” என்று நினைத்து மனதைச் சமாதானப் படுத்திக் கொள்ள முயன்றான். ஆனால் சாந்தி ஏற்படவில்லை. நடந்த சம்பவம் அவனுடைய மனச்சாட்சியைச் சுட்டு விட்டது.

தான் நடந்து கொண்டது மிக மட்டமான, கொடிய, கோழைத்தனமான முறை என்பதை அவனுடைய அந்தராத்மா உணர்ந்தது. அதைப் பற்றிய ஞாபகம், மற்றவர்களை நிமிர்ந்து கூடப் பார்க்க முடியாமல் செய்துவிடும். முன்போல் இனித் தன்னைப் பற்றி உயர்வாக நினைத்துக் கொள்ள முடியாது. வாழ்க்கையைச் சந்தோஷமாக நடத்துவதற்கு அப்படி நினைத்துத்தான் ஆக வேண்டும். இந்த சிக்கலைத் தீர்க்க ஒரே

ஒரு வழிதான் இருந்தது. அதாவது, அதைப்பற்றி நினைக்காமலிருப்பது. அப்படிச் செய்வதால் அவன் வெற்றியும் பெற்றுவிட்டான். அவன் ஆரம்பிக்க விருக்கும் புதிய வாழ்க்கை, புதிய சூழ்நிலை, புதிய நண்பர்கள் யுத்தம் எல்லாம் அதை மறக்க உதவியாக இருந்தன, கடைசியில் அந்தச் சம்பவம் அடியோடு மறந்தே போய்விட்டது.

பிறகு ஒரே ஒரு முறைதான் அவளைப் பற்றி அவன் நினைத்தான். யுத்தத்திற்குப் பின் காடுஷாவைச் சந்திக்கலாம் என்ற நம்பிக்கையோடு அவன் தன் அத்தை வீட்டுக்கு வந்தான். கடைசி முறையாக அவன் வந்து விட்டுப் போன பின் அவள் வீட்டைவிட்டுப் போய்விட்டதாக அவனுடைய அத்தைகளுக்குத் தகவல் கிடைத்ததாகவும், அவள் கெட்டுப்போய் விட்டதாகவும் சொன்னார்கள். இதை யெல்லாம் கேட்டபொழுது அவனுடைய உள்ளம் நொந்தது. அவளுடைய பிரசவ காலத்தைக் கணக்கிட்டான். அந்தக் குழந்தை அவனுடையதாகவும் இருக்கலாம். இல்லாமலும் இருக்கலாம். அத்தைகள் அவளைத் திட்டினார்கள். தாயின் கெட்ட நடத்தை அவளுக்கும் வந்து விட்டதாகச் சொன்னார்கள். அவர்களுடைய இந்த அபிப்பிராயத்தைக் கேட்க அவனுக்குத் திருப்தியாக இருந்தது. முதலில் அவளும் அவளுடைய குழந்தையும் இருக்கும் இடத்தைக் கண்டு பிடிக்கலாம் என்று அவனுக்குத் தோன்றியது. ஆனால் அவளைப் பற்றி நினைத்தபொழுது அவன் ஹிருதயத்தின் ஆழத்தில் வெட்கமும் வேதனையும் ஏற்பட்டதால் அதற்கான முயற்சியைச் செய்யவில்லை. மறுபடியும் தன் பாபத்தை மறக்க அவன் முயற்சி செய்தான்.

தற்செயலாக அவளைக் கோர்ட்டில் சந்தித்த இந்த சமயத்தில் இவை யெல்லாம் அவன் ஞாபகத்திற்கு வந்தன. தான் செய்த இரக்கமற்ற, கொடிய, கோழைத்தனமான செய்கையை ஒப்புக்கொள்ள வேண்டுமென்று தோன்றியது. ஆனால் ஒப்புக் கொள்ளவில்லை. அவளோ, அவளுடைய வக்கீலோ இவற்றை யெல்லாம் வெளியிட்டு தன்னை அவமானப் படுத்தி விடுவார்கள் என்ற பயந்தான் இதற்குக் காரணம்.

## 19

இந்த மனோ நிலையில்தான் அவன் கோர்ட்டை விட்டு ஜூரிகளின் அறைக்குச் சென்றான். அங்கு ஜன்னல் அருகே உட்கார்ந்து புகை பிடித்துக் கொண்டே, தன்னைச் சுற்றி இருந்தவர்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்பதைக் கவனித்துக் கொண்டிருந்தான். அவர்கள் தன்னைக் கேட்ட கேள்விகளுக்கு ஒரே வார்த்தையில் பதில் அளித்தான். தன்னை

அவர்கள் அமைதியாக இருக்க விட்டால் தேவலை என்று அவன் மனம் தவித்தது.

கோர்ட் சேவகன் வந்து ஜூரிகளைக் கோர்ட்டுக்குள் வருமாறு அழைத்தான். தன்னைத்தான் விசாரிக்கப் போகிறார்கள் போன்ற பயம் நிக்லியுடாவைப் பற்றிக் கொண்டது. தான் அயோக்கியன் என்பதை அவன் உணர்ந்தான். மற்றவர்களை நிமிர்ந்து பார்க்கக் கூடத் தகுதியற்றவனென்று அவனுக்குத் தோன்றியது. இருந்தாலும் வழக்கத்தின் விளைவாக அவன் மேடைமீது ஏறித் தன் ஆஸனத்தில் அமர்ந்தான்.

கைதிகளும் உள்ளே அழைத்து வரப்பட்டனர். கோர்ட்டில் புதிதாகச் சிலர் வந்திருந்தனர். அவர்கள் சாக்ஷிகள் ஆடம்பரமாக உடை அணிந்து உட்கார்ந்திருந்த ஒரு ஸ்திரீயை விட்டு காடுஷா தன் பார்வையை அகற்றாமலிருந்ததை நிக்லியுடாவ் கவனித்தான். அவள் காடுஷா இருந்த விபசார விடுதியின் எஜமானி என்பதும் அவள் ஒரு சாக்ஷி என்பதும் பிறகு நிக்லியுடாவுக்குத் தெரிந்தது.

சாக்ஷிகள் விசாரணை ஆரம்பமாயிற்று. அவர்களுடைய பெயர்கள், மதம் முதலிய விவரங்கள் கேட்கப்பட்டன. பிறகு கிழப் பாதிரியார் வந்து, தன் மார்பில் தொங்கிய தங்கச் சிலுவையைத் தொட்டுக்கொண்டே சாட்சிகளிடம் பிரமாணம் வாங்கினார்.

விபசார விடுதியின் சொந்தக்காரியான கிடேவாவைத் தவிர மற்ற சாட்சிகளை வெளியே அனுப்பினர். கிடேவா விசாரிக்கப்பட்டாள். "இந்த விஷயம்பற்றி உனக்கு என்ன தெரியும்?" என்று கோர்ட்டார் கேட்டனர். ஒவ்வொரு வாக்கியத்திற்கும் தலையை ஆட்டி கஷ்டப்பட்டு புன்சிரிப்பை வரவழைத்துக்கொண்டு கிடேவா பதில் சொன்னாள். ஜெர்மன் பாஷை பேசுவதுபோல எழுத்துக்களைக் கடினமாக உச்சரித்துப் பேசினாள் அவள். "ஒரு பெரிய சைபீரிய வர்த்தகருக்காக ஒரு பெண்ணை அழைத்துக்கொண்டு போக ஹோட்டல் வேலைக்கார சைமன் என் விடுதிக்குவந்தான். நான் லுபோவை அனுப்பினேன். சிறிது நேரத்திற்குப் பின் அந்த வர்த்தகரோடு லுபோவ் திரும்பி வந்தாள். அந்த வியாபாரி ஏற்கனவே கொஞ்சம் "உச்ச ஸ்தானத்தில்" இருந்தார் (இதைச் சொல்லிவிட்டு அவள் சிரித்துக்கொண்டாள்). மேலும் மேலும் குடிப்பதும், தம்மோடு இருந்த பெண்களைக் குடிக்க வைப்பதுமாக இருந்தார். அவர் கையில் இருந்த பணமெல்லாம் செலவாகிவிட்டது. இதே லுபோவை, தாம் தங்கியிருந்த இடத்திற்கு அனுப்பினார். இவள்மீது அவருக்கு ஒரு தனிப்பிரேமை ஏற்பட்டு விட்டது" என்று சொல்லிவிட்டு காடுஷா பக்கம் பார்த்தாள்.

இந்த சமயத்தில் காடுஷா சிரிப்பது போல நிக்லியுடாவுக்குத் தோன்றியது. இது அவனுக்கு அருவருப்பை யூட்டியது. விவரிக்க முடியாத ஒரு வேதனை அவன் உள்ளத்தைப் பிய்த்தது.

“காடுஷாவைப்பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?” என்று கேட்டார், காடுஷாவுக்காக ஆஜரான இளம் வக்கீல்.

“ரொம்பவும் நல்லவள். நன்ருகப் படித்திருக்கிருள். பிரெஞ்சு பாஷை கூடப் படிப்பாள். பெரிய குடும்பத்தில் வளர்ந்தவள். ரொம்ப நல்ல பெண்!” என்ருள் கிடேவா.

காடுஷா அவனை நோக்கினுள். உடனே அவள் பார்வை ஜூரிகள் பக்கம் திரும்பி நிக்லியுடாவின்மீது போய் நிலைத்தது. அவள் முகத்தோற்றம் கடுமையாக மாறியது. அவளுடைய விசித்திரமான கண்கள் சிறிது நேரம் அவனையே உற்று நோக்கின. அவன், தன்னைப் பற்றிக்கொண்ட பயங்கரத்தையும் மீறி அவளையே நோக்கினுன். பிரகாசம் பொருந்திய அவளுடைய விழிகளிலிருந்து தன் பார்வையை அவனுல் அகற்ற முடியவில்லை.

அந்த பயங்கர இரவை அவன் நினைத்துப் பார்த்தான். ஆற்றிலிருந்து வந்த சப்தமும், உதய காலத்தில் வானத்தில் தோன்றியிருந்த பிறைச் சந்திரனின் மங்கிய ஒளியும் அவன் ஞாபகத்திற்கு வந்தன. சந்திரனின் மங்கிய ஒளி கரியபொருள் ஒன்றின்மீது விழுந்துகொண்டிருந்தது. காடுஷாவின் பார்வை அந்தக் கரியபொருளைத் தான் ஞாபகப்படுத்தியது.

“அவள் என்னை அடையாளம் கண்டு பிடித்துவிட்டாள்” என்று அவன் நினைத்து, ஒரு பலத்த அடியை எதிர்பார்த்தவன்போல் குன்றிப் பின்வாங்கினுன். ஆனுல் அவள் கண்டு பிடிக்கவில்லை. அமைதியாகப் பெருமூச்சு விட்டாள். மறுபடியும் பிரதம நீதிபதியைப் பார்த்தாள். நிக்லியுடாவும் பெருமூச்சு விட்டான். “இது சிக்கிரம் முடிந்து தொலைந்தால் தேவலை” என்று தோன்றியது அவனுக்கு.

வேட்டையாடுகையில் காயமடைந்த ஒரு பறவையைக் கொல்ல வேண்டியிருக்கும்பொழுது ஏற்படும் அதே வேதனையும் வருத்தமும் இப்பொழுது அவன் ஹிருதயத்தை அடைத்துக்கொண்டன.

அவளைத் தனிப்படுத்துவதற்கே போல விசாரணை இழுத்தடிக்கப்பட்டுக்கொண்டிருந்தது. ஒவ்வொரு சாட்சியும் தனித்தனியாக விசாரிக்கப்பட்டார்கள். கடைசியாக வைத்திய நிபுணரை விசாரித்தனர். சர்க்கார் வக்கீலும் மற்ற இரு வக்கீல்களும் வழக்கம்போலத் தங்களைப் பிரமாதமாக நினைத்துக் கொண்டு அனாவசியமான பல கேள்விகளைக் கேட்டனர். கடைசியாக கோர்ட்டில் சாட்சியமாகக் கொண்டுவந்து வைத்திருந்த பொருள்களைப் பார்வையிட வருமாறு ஜூரிகள் அழைக்கப்பட்டனர். விலையுயர்ந்த வைர மோதிரம் ஒன்றும், விஷத்தைப் பரிசோதனை செய்த சோதனைக் குழாய்களும் சர்க்கார் முத்திரைகளோடு அங்கு வைக்கப்பட்டிருந்தன,

அவர்கள் இவற்றைப் பார்ப்பதற்கு முன்னால், இறந்தவரின் உடலைப்பற்றி டாக்டர் பரிசோதனையின் முடிவுகளைக் கேட்க வேண்டுமென்று சர்க்கார் வக்கீல் அறிவித்தார்.

குறிப்பிட்ட நேரத்தில் ஸ்விஸ் பெண்ணைச் சந்திக்க வேண்டும் என்பதற்காக பிரதம நீதிபதி, நடவடிக்கைகளை எவ்வளவு அவசரமாக நடத்த முடியுமோ அவ்வளவு அவசரமாக நடத்திக்கொண்டு போனார். சோதனையின் முடிவுகளைப் படிப்பதால் அலுப்புதான் அதிகரிக்கும் என்பதை சர்க்கார் வக்கீல் அறிந்திருந்தார். ஆனால் அவற்றைப் படிக்க தமக்கு உரிமை உண்டு என்பதால்தான் அவர் அவ்விதம் கேட்டார். ஆகையால் அதை அனுமதிப்பதைத் தவிர பிரதம நீதிபதிக்கு வேறுவழி இல்லை.

டாக்டர் அனுப்பியிருந்த அறிக்கையை குமாஸ்தா வெளியே எடுத்து, மந்தமான தன் குரலில் படிக்கத் தொடங்கினான்.

வெளிப்பரிசோதனையிலிருந்து கீழ்க்கண்ட தகவல்கள் வெளியாயின.

1. தொராபோண்ட் ஸ்மெல்கோவின் உயரம் ஆறு அடி ஐந்து அங்குலம்.

ஜூரிகளில் ஒருவரான வியாபாரி நிக்லியுட்டாவின் காதருகே வந்து, "பரவாயில்லை, நல்ல உயரம்தான்" என்றான்.

2. அவருக்கு நாற்பது வயதாகியிருக்கும்போல் தோன்றியது.

...ந்திருந்தது.

4. சதை பச்சையாக இருந்தது. அதில் பல இடங்களில் கருப்புப் புள்ளிகள் விழுந்திருந்தன.

5. சருமத்தின் மீது பல அளவுகளுள்ள கொப்புளங்க ளெம்பியிருந்தன. உடலின் பல இடங்களில் தோல் பெயர்ந்து போயிருந்தது.

6. தலைமயிர் பழுப்பு நிறமாக இருந்தது. தொட்டால் சுலபமாகத் தனியாக வந்துவிட்டது.

7. விழிகள் பிதுங்கிப் பஞ்சடைந்திருந்தன.

8. வாயிலிருந்தும் மூக்கிலிருந்தும், காதுகளிலிருந்தும நீர் பெருகிக்கொண்டிருந்தது. வாய் பாதித் திறந்திருந்தது.

9. வீக்கத்தினால் கழுத்தே மறைந்துபோயிருந்தது.

குஷியாகக் காலம் கழித்துக்கொண்டிருந்து விட்டு, கடைசியில் வீங்கி அழுகிக்கொண்டிருந்த ஸ்மெல்காவின் பிரேதத்தைப் பற்றி இன்னிதும் நான்கு பக்கம் வர்ணிக்கப்பட்டிருந்தது. நிக்லியுடாவிற்கு ஏற்பட்ட விவரிக்க முடியாத வேதனை. இந்த வர்ணனையைக் கேட்டபொழுது இன்னும் அதிகரித்தது. காடுஷாவின் வாழ்க்கையும், பிரேதத்தின் மூக்கிலிருந்தும் காதிலிருந்தும் வாயிலிருந்தும் பெருகிக்கொண்டிருந்த நீரும், பிதுங்கியிருந்த அதன் விழிகளும் எல்லாம் ஒரே ரகத்தைச் சேர்ந்தவையாகத் தோன்றின. இதே போன்ற விஷயங்கள் தன்னைச் சூழ்ந்துகொண்டிருப்பதாக அவனுக்குத் தோன்றியது.

பிரேத பரிசோதனை அறிக்கை படித்து முடிந்தவுடன் பிரதம நீதிபதி ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார். அது முடிந்து விட்டதாக நினைத்து நிமிர்ந்து பார்த்தார், உடனே பிரேதத்தின் உள்புற பரிசோதனை விவரங்களை குமாஸ்தா படிக்கத் தொடங்கினான். பிரதம நீதிபதி மறுபடியும் தன் முகத்தைக் கையால் தாங்கிக்கொண்டு கண்களை மூடிக்கொண்டார். நிக்லியுடாவுக்குப் பக்கத்தில் இருந்த வியாபாரி தூக்கத்தில் ஆடி-ஆடி விழுந்துகொண்டிருந்தான். ஜூரிகளும் காவல்காரர்களும் அமைதியாக உட்கார்ந்திருந்தனர்.

பிரேதத்தின் உள் சோதனை, பின் வரும் விஷயங்களை வெளிப்படுத்தின:

1. தலை எலும்பிலிருந்து சதை சுலபமாக பிரிந்துவிட்டது. உறைந்த ரத்தம் இல்லை.

2. மண்டை ஓடு சாதாரண கனத்துடன் நல்ல நிலைமையில் இருந்தது.

3. மூளையின் மீது நான்கு அங்குலம் நீளமுள்ள இரு புள்ளிகள் காணப்பட்டன. மூளையின் மேல் தோல் மங்கிய வெள்ளை நிறமாக இருந்தது.

இப்படி இன்னும் பதின்மூன்று பாராக்கள் அந்த அறிக்கையில் அடங்கியிருந்தன. பிரேதத்தைப் பரிசோதித்த டாக்டர்களும் அவர்களுடைய சகாக்களும் கடைசியில் கையெழுத்திட்டிருந்தனர். "வயிற்றிலும் குடலிலும், மூத்திரக் குழாய்களிலும் ஏற்பட்டிருந்த மாறுதல்களைக் கவனித்தால், விஷத்தை உட்கொண்டதால் அவர் இறந்திருக்கக் கூடும்" என்று அந்த அறிக்கை முடிவாகக் கூறியது. என்ன விஷம் என்பதைக் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆனால் வயிற்றில் நிரம்ப சாராயம் இருந்ததால் அது சாராயத்தில் கலந்து கொடுக்கப்பட்டது என்பது மாத்திரம் தெரிந்தது.

அப்பொழுதுதான் விழித்துக் கொண்ட வியாபாரி, "அவன் குடிப்பான் போலிருக்கிறது! சந்தேகமே இல்லை" என்றான் நிக்லியுடாவிடம்.

இந்த அறிக்கையைப் படிப்பதற்கு ஒரு மணி நேரம் ஆயிற்று. சர்க்கார் வக்கீலுக்கு இன்னும் திருப்தி ஏற்படவில்லை. "உள் உருப்புக்களின் சோதனை பற்றிய அறிக்கையைப் படிப்பது அவசியமில்லை என்று தோன்றுகிறது" என்றார் பிரதம நீதிபதி, சர்க்கார் வக்கீல்பக்கம் திரும்பி. சர்க்கார் வக்கீல் பிரதம நீதிபதியைப் பாராமலே, கடுமையான குரலில் பதில் சொன்னார்.

இந்த அறிக்கையையும் படிக்கத் தமக்கு உரிமை உண்டு என்பது போல் அவர் நிமிர்ந்தார். இதைப் படிக்காவிட்டால் அப்பீலுக்கு இடம் ஏற்படும் என்பதுபோல் இருந்தது அவருடைய முகத்தோற்றம். நீண்ட தாடி வைத்திருந்த, வயிற்று வலியோடு கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த நீதிபதி, பிரதம நீதிபதியை நோக்கி, "இதையெல்லாம் படிப்பதால் பிரயோசனமென்ன? அனாவசியமாகக் காலம் வீணாகிறது. புதுத் துடைப்பங்கள் சுத்தமாகப் பெருக்குவதில்லை" என்றார்.

பொன் வளையத்தோடு கூடிய மூக்குக் கண்ணாடி அணிந்திருந்த நீதிபதி, ஒன்றும் சொல்லாமல் சோகக் களையோடு எதிரே வெறித்துப்பார்த்தார். தன் மனைவியிடமிருந்தோ, பொதுவாக வாழ்க்கையிலேயோ நன்மை ஒன்றையும் அவர் எதிர்பார்க்கவில்லை என்பது அவருடைய பார்வையில் பிரதிலித்தது.

"188—ம் வருஷம், பிப்ரவரி மாதம், 15-ம் தேதி..." என்று தன் உறுதியான குரலைச் சற்று உயர்த்திக் கொண்டு படிக்கத் தொடங்கினன் குமாஸ்தா. அங்கு இருந்தவர்களுக்கு வந்த தூக்கத்தைக் கலைப்பதற்காகவே அவன் குரலை உயர்த்திக் கொண்டது போல் இருந்தது.

பிறகு பிரதம நீதிபதி தன் சகாக்கள் இருவரிடமும் ஏதோ கேட்டு அவர்களுடைய சம்மதத்தைப் பெற்றுக்கொண்டு, "இந்த அறிக்கையைப் படிப்பது அனுவசியமென கோர்ட் கருதுகிறது" என்று அறிவித்தார். குமாஸ்தா படிப்பதை நிறுத்தினன். சர்க்கார் வக்கீல் கோபத்தோடு உட்கார்ந்து எதையோ எழுதிக்கொண்டார்.

"இங்கு சாட்சியமாக வைக்கப்பட்டுள்ள பொருள்களை இனி ஜூரிகள் பார்வையிடலாம்" என்றூர் பிரதம நீதிபதி. ஜூரிகள் மேஜை அருகே சென்று, ஸ்மெல்கோவின் வயிறு, குடல். நுரை ஈரல், கல்லீரல், மூத்திரக்காய்கள் முதலியவை அடங்கிய கண்ணடி ஜாடிகளையும், வைர மோதிரத்தையும், விஷம் பரிசோதிக்கப்பட்டிருந்த சோதனைக் குழாய்களையும் மாற்றி மாற்றிப் பார்த்தனர். ஜூரியாக வந்திருந்த வியாபாரி மோதிரததைத் தன் விரலில் போட்டுப் பார்த்துக் கொண்டான்.

"ஹா! விரல் எவ்வளவு பெரியதாக இருந்திருக்க வேண்டும்!" என்றூன் வியாபாரி. அவன் கற்பனை செய்த ஸ்மெல்கோவின் பூதாகாரமான தோற்றம் அவனுக்கு ஆச்சரியமளித்தது.

## 21

சாக்ஷியமாக வைக்கப்பட்டிருந்த பொருள்களின் பரிசீலனை முடிந்துவிட்டது. வாதத்தை மேலே தொடர்ந்து நடத்துமாறு சர்க்கார்வக்கீலைப் பிரதம நீதிபதி கேட்டுக்கொண்டார். அவரும் மனிதனுகையால் சிறிது நேரம் புகை குடிக்கவோ சாப்பிடவோ விரும்புவார், மற்றவர்களுக்கும் தயை காட்டுவார்" என்று நீதிபதி நினைத்தார். ஆனல் அவர் தமக்கும் தயைக் காட்டிக்கொள்ளவில்லை மற்றவர்களுக்கும் தயை காட்டவில்லை. இயற்கையிலேயே அவர் ஒரு அவிவேகி.

நீதிபதி அழைத்தவுடன் அவர் ஜம்பமாக எழுந்து நின்று தலையை லேசாகச் சாய்த்துக்கொண்டு, எதிரிகளை மாத்திரம்

பாராமல் கோர்ட்டை ஒரு முறை சுற்றிப் பார்த்தார். பிறகு, தாம் தயாரித்து வைத்துக் கொண்ட கருத்து ஒன்றையும் விடாமல் நீண்ட நேரம் பேசினர். தட்டுத் தடங்கலில்லாமல் ஒன்றேகால் மணி நேரம் பேசிவிட வேண்டும் என்பது அவ னுடைய விருப்பம்.

இடையில் உமிழ் நீரை விழுங்குவதற்காக ஒரே ஒரு முறை தான் நிறுத்தினர். ஆனல் மீண்டும் தம் பிரசங்கத்தை தொடங்கி, முன்னைக் காட்டிலும் அதிக வேகத்துடன் பேசி, இடையில் நிறுத்தியதற்கு ஈடு செய்து விட்டார். கோர்ட் டுக்கு வந்திருந்தவர்களையும், வக்கில்களையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டு, சந்தர்ப்பத்திற்குத் தக்கபடி தொனியை யும் மாற்றிக்கொண்டு தடபுடலாகப் பேசினர். நவீன விஞ் ஞானப் பதங்களை யெல்லாம் கொட்டிக் குழப்பினர். ஆனல் அவரையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த கைதிகளின் பக்கம் மாத்திரம் அவர் திரும்ப வில்லை.

ஸ்மெல்கோவ் என்ற வியாபாரி உத்தமமான ரஷய ரென றும், அவர் நம்பி நாசமாகி விட்டதாகவும் கூறினர். மாஸ் லோவா தான் இந்தக் குற்றத்தில் முக்கிய ஸூத்திரதாரியாக இருந்து கொண்டு எல்லாவற்றையும் நடத்தியதாகக் கூறினர் "இவள் உயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்தவள். நன்ருகப் படித் தவள். இவள் யோக்கியமாக வேலை செய்து வாழ்ந்திருக்கலாம். ஆனல் தன்னைக்காப்பாற்றியவர்களைத் துறந்து, தன் உணர்ச் சிக்கு அடிமையாகி, அதைத் தணித்துக் கொள்ளும் பொருட்டு விபசார விடுதியில் பிரவேசித்தாள். அங்கு தன் படிப்பினலும் வசிய சக்தியினலும் பிரதானமாக விளங்கினள். இவற்றின் மூலம் தான் அவள் தயாள குணம் நிறைந்த அந்த வர்த்தகரை வசப்படுத்தி, அவருடைய நம்பிக்கையைப் பயன் படுத்திக் கொண்டு அவருடைய பணத்தைப் பறிக்கவும் கடைசியில் அவரைக் கொலை செய்யவும் செய்தாள்."

"இவர் மிகை படுத்திக் கூறுகிருர்" என்ருர் பிரதம நீதி பதி, சிடுமூஞ்சியோடு உட்கார்ந்திருந்த நீதிபதி பக்கம் சாய்ந்து கொண்டு.

"சுத்த மடையன்!" என்று அந்த நீதிபதி பதிலளித் தார்.

சர்க்கார் வக்கில் தம் பிரசங்கத்தைத் தொடர்ந்து நடத்திக் கொண்டே யிருந்தார்.

சர்க்கார் வக்கில் ஜூரிகளை நோக்கி ஜூரிகளே, இவர் களுடைய விதிமாத்திரமின்றி சமூகத்தின் விதியும் உங்கள்

கையில் தான் இருக்கிறது. உங்களுடைய தீர்ப்பினால் சமூகம் பாதிக்கப்படும். இந்த வழக்கின் முழு அர்த்தத்தையும், சமூகத்திற்கு மாஸ்லோவா போன்றவர்களால் ஏற்படும் அபாயத்தையும் உணர்ந்து, நாசத்திலிருந்து சமூகத்தைக் காப்பாற்ற வேண்டும்'' என்று கூறி முடித்தார். தான் நிகழ்த்திய பிரசங்கத்தை நினைத்துப் புளகாங்கித மடைந்து தன் ஆஸனத்தில் அமர்ந்தார் அவர்.

பிறகு கார்ட்டின்கின், போச்கோவா ஆகியவர்களுக்காக நியமிக்கப்பட்டிருந்த வக்கீல் எழுந்து குற்றம் முழுமையையும் காடுஷா மீது சுமத்திப் பேசினார். திருட்டுக் குற்றச் சாட்டிலிருந்து தம் கட்சிக்காரர்களை விடுவிக்காவிட்டாலும் விஷமிட்ட குற்றச் சாட்டிலிருந்தாவது விடுவிக்குமாறு கேட்டுக் கொண்டான்.

பிறகு காடுஷாவின் வக்கீல் பேச எழுந்தான். திருட்டில் அவள் கலந்து கொண்டாள் என்பதை அவர் மறுக்கவில்லை. ''வியாபாரிக்கு விஷம் கொடுக்க வேண்டுமென்ற நோக்கம் அவளுக்கு இல்லை. அவரைச் தூங்கச் செய்ய வேண்டும் என்பதற்காகத்தான் அந்தத் தூளைக் கொடுத்தாள்'' என்றார். அவளைக் கெடுத்து விபசார வாழ்க்கை நடத்தும்படி சந்தியில் இழுத்து விட்ட புருஷன் தண்டிக்கப்படாமல் இருக்கும்பொழுது இந்தக் கஷ்டங்களை யெல்லாம் இவள் அனுபவிக்க வேண்டியிருப்பதை எடுத்துக்காட்டி தம் பிரசங்க மேதையை வெளிப்படுத்த முயன்றார் அவர். ஆனால் அங்கிருந்தவர்களுக்கு இது எரிச்சலை உண்டாக்கியது. புருஷர்களின் கொடுமையையும், பெண்களின் நிராதரவான நிலைமையையும் பற்றி அவர் பேசிய பொழுது பிரதம நீதிபதி குறுக்கிட்டு, இந்த வழக்கு சம்பந்தமான விஷயங்களைப்பற்றி மாத்திரம் பேசும்படி கூறி அவருக்கு உதவி செய்ய முயன்றார்.

அவன் பேசி முடித்தபின் சர்க்கார் வக்கீல் பதில் அளித்தார் பிறகு கைதிகள் பேச நீதிபதி அனுமதி அளித்தார்.

யுபேமியா போச்கோவா முன் சொன்ன படியே தனக்கு ஒன்றும் தெரியாதென்றும், தான் நிரபராதி என்றும், குற்றம் முழுமையும் காடுஷாவினுடைய தாதுவென்றும் கூறினாள். ''நான் நிரபராதி; இது அக்கிரமம்'' என்று ஸைமன் கார்ட்டின்கின் திரும்பத் திரும்பச் சொன்னான். காடுஷா ஒன்றும் சொல்லவில்லை. தன் விழிகளை உயர்த்தி, கோர்ட் அறையைச் சுற்றி, வேட்டையாடப்பட்ட மிருகம்போல ஒரு முறை பார்வையைச் செலுத்தினாள். பிறகு தலையைக் குனிந்து கொண்டு அழத் தொடங்கி விட்டாள்.

நிக்லியுடாவ் விசித்திரமான முறையில் ஒரு சப்தம் செய்ததைக் கேட்டு, ஜூரிகளில் ஒருவரான வியாபாரி என்ன விஷயம் ?'' என்றார். பலவந்தமாக அவன் அடக்கிவைத்துக் கொண்டிருந்த கேவல் அவனையும் மீறி வெளி வந்து விட்டது. தன்னுடைய நிலைமையின் அர்த்தம் இன்னதென்பதை அவன் உணர்ந்து கொள்ளவில்லை. இந்தக் கேவல்களுக்கும், தன் கண்களை நிரப்பிய கண்ணீருக்கும் நரம்பின் பலவீனம்தான் காரணமென்று நினைத்தான். கண்ணீரை மறைப்பதற்காக மூக்குக் கண்ணாடியை அணிந்தான். கைக்குட்டையை எடுத்து முகத்தருகே விசிறிக் கொண்டான்.

அவனுடைய நடத்தையை கோர்ட்டில் இருப்பவர்கள் அறிந்து கொண்டு விட்டால் ஏற்படும் அவமானத்தின் பயம், சிந்தனையைத் தடுத்தது.

# 22

கடைசியில் நீதிபதி வழக்கை ஜூரிகளுக்கு எடுத்துக் கூறத் தொடங்கினார். "அயோக்கியத்தனம் அயோக்கியத்தனம் தான். திருட்டு திருட்டுத்தான்'' என்பதுபோல் அவர் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தார். இந்த பெரிய உண்மைகளை நிக்லியுடாவுக்கு விளங்க வைப்பவர்போல அவனைப் பலமுறை பார்த்தார். இவற்றை அவனுக்கு விளங்க வைத்து விட்டால், மற்ற ஜூரிகளுக்கு அவன் விளக்கி விடுவான் என்பது அவருடைய அபிப்பிராயம். "கொலை என்பது ஒருவருக்கு மரணம் ஏற்படுத்தும் செய்கையாகும். ஆகையால் விஷம் கொடுப்பதும் கொலைதான். கொலையோடு திருட்டும் நடந்தால் அந்தக் குற்றத்திற்கு கொலையுடன் திருட்டு என்று பெயர்'' என்பது போன்ற "அரிய உண்மைகளை'' அவர் விளக்கிக் கொண்டு போனார்,

வழக்கைச் சீக்கிரம் முடிக்க வேண்டும் என்ற ஆவல் அவருக்கு. ஸ்விஸ் பெண் அவருக்காகக் காத்திருப்பாள். இருந்தாலும் அவர் பேசத் தொடங்கி விட்டால் அவரால் நிறுத்த முடியாது. ''எதிரிகள் குற்றவாளிகளென்று நீங்கள் கருதினால், 'குற்றவாளிகள்' என்று தீர்ப்புக் கூற உங்களுக்கு உரிமை உண்டு. அவர்கள் 'குற்றவாளிகள் அல்ல' என்று கூறவும் உரிமை உண்டு. ஏதாவது ஒரு குற்றச்சாட்டில்தான் அவர்கள் குற்றவாளிகள் என்று நீங்கள் நினைத்தால் அந்தக் குற்றச்சாட்டின் கீழ்தான் அவர்கள் குற்றவாளிகள் என்று கூறலாம். ஜூரிகளுக்கு இந்த உரிமைகள் இருந்தாலும் மிக்க ஜாக்கிரதையாக இதை உபயோகிக்க வேண்டும்''

என்று பிரதம நீதிபதி கூறி விட்டு கடியாரத்தைப் பார்த்தார் மணி மூன்று அடிக்க ஐந்து நிமிஷம் இருந்தது. பிறகு வழக்கில் அடங்கி யிருந்த விஷயங்களை எடுத்துக் கூறினார். அவருடன் இருந்த இரு நீதிபதிகளும், அவருடைய பிரசங்கத்தை மிகவும் ஆழ்ந்து கவனிப்பது போல் உட்கார்ந் திருந்தனர். ஆனால் அடிக்கடி கடியாரத்தைப் பார்த்தார்கள். பிரசங்கம் நன்ருக இருந்தாலும் மிகவும் நீளம் என்று அவர்கள் நினைத்தனர். கோட்டில் இருந்த ஒவ்வொருவரும், அவருடைய பிரசங்கத்தை ஆவலுடன் கேட்பதுபோல் பாவனை செய்தபோதிலும் அவர்களும் இப்படியேதான் நினைத்தார்கள்.

எல்லாம் முடிந்து விட்டதுபோல் தோன்றியது. ஆனால் உண்மையில் முடிந்து விடவில்லை. பிரதம நீதிபதி பேசுவதற்குத் தமக்கு உள்ள உரிமையை விட்டுக் கொடுக்க விரும்பவில்லை. தம்முடைய குரலின் இனிமையைக் கேட்கக் கேட்க அவருக்கே ஆனந்தமாக இருந்தது. ஆகையால் ஜூரிகளின் உரிமைகளைப் பற்றி அவர் இன்னும் சில வார்த்தைகள் சொன்ஞர். அந்த உரிமையை எப்படி உபயோகிக்கக் வேண்டும், எப்படி உபயோகிக்கக் கூடாது. பிரமாணத்தைக் காப்பாற்ற வேண்டிய அவசியம், விவாத அறையில் நடக்கும் சம்பாஷணைகளைப் புனிதமாகக் கருத வேண்டியதன் அவசியம் எல்லாவற்றைப் பற்றியும் கூறினார்.

பிரதம நீதிபதி பேசத் தொடங்கியது முதல் அவருடைய பேச்சில் ஒரு பதத்தை இழக்கக்கூட பயப்படுபவர் போல அவரை விட்டுத் தன் பார்வையை அகற்ருமல் கவனித்துக் கொண்டிருந்தாள் காடுஷா. ஆகையால், அவளுடைய கண்கள் தன்னைச் சந்திக்குமோ என்ற பயமில்லாமல் நிக்லியுடாவும் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

சிறை உடை, வாளிப்பான தேகம், நெற்றியில் காணப்பட்ட சில சுருக்கங்கள் இவற்றையெல்லாம் மீறி, அவள் பழைய கா்டுஷாவாகத்தான் இருந்தாள். முன்பு ஈஸ்டர் தினத்தன்று இரவு கண்களில் ஆனந்தம் பொங்கத் தன்னை நேசித்து அறியாக் குழந்தை போல் நிமிர்ந்து நோக்கிய அதே காா்டுஷாவாகத்தான் காட்சியளித்தாள்.

"என்ன விசித்திரம்! இத்தனை வருஷங்களுக்குப் பின் நான் ஜூரியாக இருக்கும்பொழுது இந்த வழக்கு விசாரணைக்கு வந்திருப்பதும், நான் அவளை மறுபடியும் காணும்பொழுது அவள் கைதிக் கூண்டில் நிற்பதும் எவ்வளவு ஆச்சரியமான சம்பவங்கள்! இது எப்படி முடியுமோ! இவர்கள் இதையெல்லாம் சீக்கிரம் முடித்துத் தொலைக்கக்கூடாதா!" என்று நினைத்தான் நிக்லியுடாவ்.

அவன் உள்ளத்துள் தலைதூக்கத் தொடங்கிய பச்சாதாப உணர்ச்சிக்கு அவன் இன்னமும் பணிய விரும்பவில்லை. இவை யெல்லாம் தற்செயலான சம்பவங்களென்றும், அவை தன் வாழ்க்கையை பாதிக்காமல் கழிந்து விடுமென்றும் நினைத்தான்.

தன் செய்கைக்காகத் தன்னையே வெறுத்துக் கொண்டான். அதிலிருந்து தான் தப்பமுடியாதபடி தன்னை அமுக்கி பிடித்துக்கொண்டிருந்த ஒரு சக்தியை உணர்ந்தான். தன் முன் நிற்பது தன்செய்கையின் விளைவு என்பதை அவன் நம்ப மறுத்தான். இன்னமும் அவன் தைரியத்தை விடவில்லை. வழக்கம் போல் தன் ஆஸனத்தில் அலக்ஷிய பாவத்துடனேயே உட்கார்ந்து மூக்குக் கண்ணாடியை கையில் பிடித்துச் சுழற்றிக் கொண்டிருந்தான். தன் செய்கையில் அடங்கிய கொடுமை, கோழைத்தனம், அற்பத்தனம் ஆகியவை மாத்திரமின்றி, கொடுமையும், தான்தோன்றித் தனமும் நிறைந்த தன் வெட்டி வாழ்க்கை முழுமையுமே அவனுடைய ஹிருதயத்தின் ஆழத்தை உருத்தியது. இந்தப் பாபத்தையும், இதற்குப்பின் அவன் நடத்திய பத்து வருஷ வாழ்க்கையையும் அவன் உணராதபடி மறைத்துக் கொண்டிருந்த திரை விலகத் தொடங்கியது. இந்தத் திரைக்குள் மறைந்திருந்த வற்றை கொஞ்சம் கொஞ்சமாக அவன் உணர்ந்தான்.

## 23

பிரதம நீதிபதி தம் பிரசங்கத்தை முடித்துக் கொண்டு ஜூரிகளைக் கேட்கவேண்டிய கேள்விகள் அடங்கிய ஜாபிதாவை நாஸூக்காக எடுத்து போர்மனிடம் கொடுத்தார். தாங்கள் அந்த இடத்தை விட்டு விவாத அறைக்குப் போக வேண்டிய சமயம் வந்ததைப் பற்றி ஜூரிகள் பெரு மகிழ்ச்சியடைந்தனர். தாங்கள் செய்த ஏதோ ஒரு காரியத்திற்காக வெட்கப்படுபவர்கள் போல ஒவ்வொருவராக எழுந்து சென்றனர். விவாத அறைக்குள் அவர்கள் போய்க் கதவை மூடிக்கொண்டவுடன் ஒரு காவற்காரன் வாசற்படியருகே வந்து, உறையிலிருந்து வாளை உருவித் தோளில் சாத்திக் கொண்டு நின்றான். ஜூரிகள் அங்கு வந்தவுடன் முதல் காரியமாக ஸிகரெட்டை எடுத்துப் பற்றவைத்தனர். கோர்ட்டில் இருந்தபொழுது அவர்களுக்கு இருந்த பதவியின் போலி உணர்ச்சி போய்விட்டது. விடுதலை உணர்ச்சியோடு அவர்கள் உட்கார்ந்து தீவிரமாக விவாதிக்கத் தொடங்கினர்.

வழக்கைப்பற்றி ஜூரிகள் மேம்போக்காக நீண்டநேரம் சம்பாஷித்துக்கொண் டிருந்தனர். பிறகு போர்மன் தம்மு டைய ஆஸனத்தில் அமர்ந்து, மற்ற ஜூரிகளையும் அவரவர்க ளுடைய ஸ்தானங்களில் உட்காருமாறு அழைத்தார். பிறகு கீழ்க்கண்ட கேள்விகளை அவர் கேட்டார்.

1. திருட்டு, விஷம் வைத்தல் ஆகிய இரு குற்றச்சாட்டு களிலும் ஸைமன் கார்ட்டின்கின் குற்றவாளிதானு?

2. மேலே கூறிய குற்றச்சாட்டுகளின் கீழ் யுபேமியா போச்கோவா குற்றவாளிதானு?

3. மேலே கூறிய குற்றச்சாட்டுகளின் கீழ் காடுஷா குற்ற வாளிதானு?

4. போச்கோவா, விஷமிட்ட குற்றச்சாட்டின்கீழ் குற்ற வாளியல்ல வென்ருல் வியாபாரியின் பணத்தைத் திருடிய குற்றச் சாட்டின் கீழாவது குற்றவாளியா?

போர்மன் இந்தக் கேள்விகளைப் படித்துவிட்டு, "கனவான் களே, நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?" என்று கேட்டான்.

களவு, விஷம் கொடுத்தல் ஆகிய் இரு குற்றச் சாட்டு களின் கீழும் கார்ட்டின்கின் குற்றவாளிதான் என்று எல்லா ரும் ஒப்புக்கொண்டனர். லாபம் நஷ்டம் எல்லாவற்றையும் அங்கத்தினர்கள் தங்களுக்குள்ளேயே பகிர்ந்து கொள்ளும் ஆர்ட்டெல் சங்கத்தின் அங்கத்தினராகிய ஒரு கிழவன் மாத் திரம் எதிரியை விடுதலை செய்துவிடவேண்டுமென்று வாதித் தான். தன் கேள்வியை அவன் புரிந்துகொள்ள வில்லையோ வென்று போர்மன் நினைத்து, கார்ட்டின்கின்மீது உள்ள குற்றச் சாட்டை விளக்கிக்கூறிஞர். "எல்லாம் எனக்குப் புரிந்தது. இருந்தாலும் அவனுக்கு தயை காட்டலாம். நாமெல்லாம் மஹ ரிஷிகளல்ல" என்ருன் அந்தக் கிழவன்.

நீண்ட விவாதத்தின்பின், விஷம் வைத்த குற்றத்தின்கீழ் போச்கோவா குற்றவாளியல்ல வென்றும், திருட்டுக் குற்றச் சாட்டின்கீழ் குற்றவாளிதா னென்றும் முடிவு செய்தார்கள்.

காடுஷாவைப் பற்றிய குற்றச்சாட்டு, தீவிரமான விவா தத்தை எழுப்பியது. விஷம் வைத்தல், திருட்டு ஆகிய இரு குற்றச்சாட்டுகளின் கீழும் அவள் குற்றவாளிதானென்று போர்மன் கூறிஞர். ஜூரியாக வந்திருந்த வியாபாரி இதை ஒப்புக்கொள்ளவில்லை. கர்னல், குமாஸ்தா, தொழிலாளிக் கிழவன் ஆகியோர் வியாபாரியை ஆதரித்தனர். மற்றவர்கள் ஒருவிதமாகவும் நிச்சயிக்கவில்லை. எல்லா ஜூரிகளும் அலுத்

துப்போயிருந்தார்கள். எந்த அபிப்பிராயத்தைச் சொன்னால் தாங்கள் சீக்கிரம் விடுபட்டு வீட்டுக்குச் செல்லமுடியுமோ அந்த அபிப்பிராயத்தைச் சொல்ல அவர்கள் தயாராக இருந்தனர்.

காடுஷா குற்றவாளி அல்ல என்பது, அவளை நன்கு அறிந்திருந்த நிக்லியுடாவுக்குத் தெரியும். மற்றவர்களும் இதே முடிவுக்குத்தான் வருவார்கள் என்பதை நிச்சயமாக அவன் நினைத்தான். ஜூரியாக வந்திருந்த வியாபாரி, காடுஷாவின் உடல் அழகைக்கண்டு மோகித்து அவளுக்காக பரிந்து பேசுவதையும் போர்மனின் பிடிவாதத்தையும், எல்லாரும் களைத்திருப்பதையும், இவற்றினால் அவளுக்கு தண்டனை கிடைக்கத்தான் செய்யும் என்பதையும் அவன் கண்டபொழுது தன்னுடைய அபிப்பிராயத்தை வெளியிடவேண்டுமென்ற ஆவல் அவனுக்கு ஏற்பட்டது. ஆனால் அவளுக்கும் தனக்குமிடையில் ஏற்பட்டிருந்த தொடர்பு வெளியாகி விடுமோ என்று பயந்தான். இருந்தாலும் நிலைமையை இப்படியே விட்டு விட அவன் விரும்பவில்லை. அவன் பேச வாயெடுத்தான். உணர்ச்சியினால் அவன் முகம் சிவந்து மீண்டும் வெளிறியது. அதற்குள் பீடர் கொராஸிமோவிச் என்ற ஜூரி எழுந்து, நிக்லியுடாவ் சொல்லவிருந்ததையே சொன்னான். போர்மனின் அதிகார தோரணையைக் கண்டு ஆத்திரமடைந்து அவன் பேசினான்.

"ஒரு நிமிஷம் பேச எனக்கு அனுமதி கொடுங்கள். சாவி அவளிடம் இருந்ததால் அவள் தான் பணத்தைத் திருடியிருப்பாள் என்று நீங்கள் நினைப்பதாகத் தெரிகிறது. அவள் போன பின் வேலைக்காரர்கள் மாறு சாவி போட்டு பீரோவைத் திறந்திருக்கக் கூடாதா?" என்று கேட்டான் பீடர்.

"ஆமாம், ஆமாம்" என்றான் வியாபாரி.

"அவளுடைய நிலைமையில் அந்தப் பணத்தை என்ன செய்வதென்று அவளுக்குத்தெரியாதாகையால் அவள் அந்தப் பணத்தைத் திருடி யிருக்க முடியாது" என்றான் பீடர்.

"அதைத்தான் நானும் சொல்கிறேன்" என்றான் வியாபாரி.

"அவள் திரும்பி வந்தவுடன், பழியை அவள் தலையில் சுமத்தி விடலாமென்று வேலைக்காரர்கள் நினைத்து, அவ்விதமே செய்து விட்டிருக்கக் கூடும்" என்றான் பீடர்.

போர்மனின் மனத்தை உறுத்தும்படி அவன் பேசினான் ஆகையால் போர்மன் பிடிவாதமாகத் தன் கட்சியை ஆதரித்துப் பேசிக்கொண்டிருந்தான். ஆனால் அனைவருக்கும் திருப்தி ஏற்படும் முறையில் பீடர் பேசியதால் பெரும்பாலானவர்கள்

அவனுடைய அபிப்பிராயத்தை ஆதரித்து, காடுஷா குற்றவாளியல்லவென்று கருதினர். காடுஷா திருடவில்லை என்றும், வைரமோதிரத்தை வியாபாரியே தான் அவளிடம் கொடுத்திருக்க வேண்டுமென்றும் முடிவு செய்தார்கள்.

பிறகு விஷம் கொடுத்த குற்றச்சாட்டு எடுத்துக்கொள்ளப்பட்டது. அவள் குற்றவாளியல்லவென்று மூர்க்கத்தனமாக வாதித்த வியாபாரி, அவள் கெட்ட எண்ணத்துடன் விஷத்தைக் கொடுக்கவில்லை என்றும், ஆகையால் அவளை விடுதலை செய்து விடவேண்டுமென்றும் சொன்னான்.

"ஆனால் தூளைக் கொடுத்ததாக அவளே ஒப்புக்கொண்டிருப்பதால் அவளை விடுதலை செய்ய முடியாது" என்று போர்மன் கூறினர்.

"ஆமாம், அது அபின் என்று நினைத்துக் கொடுத்தாள்" என்றான் வியாபாரி.

சம்பந்தமில்லாத விஷயங்களைப் பற்றிப் பேசுவதில் ஆர்வம் கொண்ட கர்னல், "அபின் கூட ஒருவனுடைய உயிரைப் போக்கி விடும்" என்றான். தன்னுடைய மைத்துனி அபினைத் தின்று விட்டு, பிராணாபத்துக்கு உள்ளானதையும், உடனே டாக்டர் அழைக்கப்படாமல் இருந்திருந்தால் அவள் இறந்தே போயிருப்பாள் என்பதையும், ரஸமாக விவரித்தான். ஆனால் குமாஸ்தா குறுக்கிட்டு, "சிலர் நாற்பது துளிகள் வரை சாப்பிட முடியும். என்னுடைய உறவுக்காரர் ஒருவர் இருக்கிறார்—" என்று ஆரம்பித்தான். தன் பிரசங்கத்தில் அவன் குறுக்கிடுவதை கர்னல் தடுத்து விட்டு, தான் சொல்லத் தொடங்கிய கதையைச் சொல்லி முடித்தான்.

"மணி ஐந்து அடிக்கப் போகிறது" என்று ஞாபகப்படுத்தினர் ஒரு ஜூரி.

"சரி, இப்பொழுது நாம் என்ன சொல்ல வேண்டுமென்கிறீர்கள்? 'அவள் குற்றவாளிதான் ஆனால் திருட வேண்டுமென்ற நோக்கம் அவளுக்கு இல்லை. சொத்து எதையும் திருடவில்லை' என்று, சொல்வோமா? அது போதுமா?" என்று கேட்டான் போர்மர்.

பீடர் கெராஸிமோவிச், தனக்குக் கிடைத்த வெற்றியைக் கண்டு சந்தோஷித்து இவ்விதம் அறிவிப்பதற்கு ஒப்புக் கொண்டான்.

"ஆனால் அவளுக்கு தயை காட்டும்படி சிபார்சு செய்ய வேண்டும்" என்றான் வியாபாரி.

அதை அனைவரும் ஒப்புக் கொண்டனர்.

தொழிலாளிக் கிழவன் ஒருவன்தான் அவளைக் குற்றவாளியல்லவென அறிவிக்க வேண்டுமென்று வாதாடினான்.

"எல்லாம் ஒன்றுதான்; 'திருட வேண்டுமென்ற நோக்கமில்லை எந்த சொத்தையும் திருடவில்லை—ஆகையால் குற்றவாளியல்ல—இது தெரிந்தது தானே?" என்று "விளக்கினார்" போர்மன்.

"ரொம்ப சரி; அது போதும் அவளுக்கு தயை காட்டும்படி சிபார்சு செய்வோம்" என்றான் வியாபாரி, உல்லாசமான தொனியுடன்.

ஜூரிகள் அனைவரும் அலுத்துப் போய் விவாதத்தினால் குழப்பமடைந்திருந்ததால், 'கொல்ல வேண்டுமென்ற நோக்கமில்லாமல் பணத்தைக் கொடுத்தாள்' என்பதை எழுத மறந்துவிட்டார்கள். நிக்லியுடாவும் குழப்பமடைந்திருந்ததால் அவனும் இதை கவனிக்கவில்லை. ஆகையால் அவர்கள் ஒப்புக்கொண்டபடியே பதில்கள் எழுதப்பட்டன.

போர்மன் மணியை அடித்தான். வெளியே உருவிய வாளுடன் நின்ற காவல்காரன் வாளை உறையிலிட்டு ஒதுங்கி நின்றான். ஜூரிகள் ஒவ்வொருவராக வெளியே வந்து கோர்ட்டுக்குள் பிரவேசித்தனர்.

பதில்கள் அடங்கிய காகிதத்தை போர்மன் பயபக்தியோடு நீதிபதியிடம் கொடுத்தார். அதைப் பார்த்த பிரதம நீதிபதி ஆச்சரியமடைந்து கைகளை விரித்துக் கொண்டு தம் சகாக்களுடன் ஏதோ பேசினார். "திருட வேண்டுமென்ற நோக்கமில்லாமல்" என்ற ஷரத்தைச் சேர்த்த ஜூரிகள், "கொலை செய்ய வேண்டுமென்ற நோக்கமில்லாமல்" என்ற ஷரத்தைச் சேர்க்காததைக் கண்டு வியப்படைந்தார். காடுஷா திருடவில்லை என்றும், ஆனால் காரணமில்லாமலே ஒருவனுக்கு விஷம் கொடுத்ததாகவும் ஜூரிகள் தீர்ப்புக் கூறியிருந்தார்கள்.

பிரதம நீதிபதி, சிடு மூஞ்சி நீதிபதியின் பக்கம் திரும்பி, "எவ்வளவு முட்டாள்தனமாக முடிவு செய்திருக்கிறார்கள் பாருங்கள்" என்றார். "இதன்படி அவளை சைபீரியா சிறைக்கு அனுப்ப வேண்டும், ஆனால் உண்மையில் அவள் நிரபராதி" என்றார் அவர்.

"உண்மையிலேயே அவள் நிரபராதி என்று நினைக்கிறீர்களா!" என்றார் அந்த ஜட்ஜ்.

“ஆமாம். இந்த வழக்கில் ஜூரிகளின் முடிவை நாம் புறக்கணிக்க வேண்டுமென்று கருதுகிறேன்” என்றார் பிரதம நீதிபதி. மற்றொரு ஜட்ஜ் பக்கம் திரும்பி, “நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?” என்று கேட்டார்.

அந்த ஜட்ஜ் மேஜைமீது கிடந்த ஒரு காகிதத்திலிருந்து ஒரு எண்ணைத் தேர்ந்தெடுத்து, “இது மூன்றினால் மிச்சமில்லாமல் வகுக்கப்பட்டால் பிரதம நீதிபதி சொல்வதை ஒப்புக் கொள்ளாம். இல்லையானால் வேண்டாம்” என்று நினைத்துக் கொண்டு கணக்குப் போட்டுப் பார்த்தார். மிச்சம் வந்தது. இருந்தாலும் அவருடைய நல்ல சுபாவம், பிரதம நீதிபதியின் கருத்தை ஒப்புக் கொள்ளச் செய்தது.

“அப்படித்தான் செய்ய வேண்டுமென்று நானும் நினைக்கிறேன்” என்று அவர் பதில் அளித்தார்.

மூன்றாவது நீதிபதி பக்கம் பிரதம நீதிபதி திரும்பி, “நீங்கள்?” என்று கேட்டார்.

“கூடவே கூடாது. ஜூரிகள் கைதிகளை விடுதலை செய்துவிடுவதாக இப்பொழுது பத்திரிகைகள் கூறுகின்றன. ஜட்ஜுகளே அதைச் செய்தால் அவை என்ன சொல்லும்? எந்தக் காரணத்தை முன்னிட்டும் நான் இதற்கு ஒப்புக் கொள்ள மாட்டேன்” என்று பதில் அளித்தார் அவர்.

பிரதம நீதிபதி தன் கடிகாரத்தைப் பார்த்தார். “வருந்தத்தக்க விஷயம்தான். இருந்தாலும் என்ன செய்வது?” கேள்வித்தாளை போர்மனிடம் கொடுத்துப் படிக்கச் சொன்னார். கோர்ட்டில் இருந்த அனைவரும் எழுந்து நின்றனர். போர்மன் ஒவ்வொரு அடியாக எடுத்துவைத்து முன்னால் வந்து தொண்டையைக் கனைத்துக்கொண்டு, கேள்விகளையும் பதில்களையும் படித்தார். கோர்ட்டில் இருந்த அனைவரும் ஆச்சரியமடைந்தனர். கைதிகள், அந்த பதில்களின் அர்த்தத்தைப் புரிந்துகொள்ளாமல் அசைவற்று உட்கார்ந்திருந்தனர். எல்லாரும் மறுபடியும் உட்கார்ந்தனர்.

காடுஷாவுக்கு தண்டனை விதிப்பதில் தமக்கு எதிர்பாராத விதமாகக் கிடைத்த வெற்றிபற்றி சர்க்கார் வக்கீல் சந்தோஷப்பட்டுக் கொண்டார். தன்னுடைய பேச்சுத் திறமையினால்தான் இந்த வெற்றி கிடைத்ததாக அவர் நினைத்தார். கைதிகளுக்கு சாத்தியமான அளவு கடும் தண்டனை விதிக்க வேண்டுமென்று அவர் கூறினார்.

தண்டனை விதிப்பது பற்றி ஆலோசிப்பதற்காகக் கோர்ட் கலைவதாக பிரதம நீதிபதி அறிவித்துவிட்டு எழுந்தார். ஒரு

காரியத்தை நன்ருகச் செய்துவிட்ட சந்தோஷத்தோடு மற்ற வர்களும் எழுந்து வெளியே போகவோ அல்லது கோர்ட்டுக் குள்ளேயே உலாவவோ செய்துகொண் டிருந்தார்கள்.

நிக்லியுட்டாவோடு போர்மன் ஏதோ பேசிக்கொண்டிருந் தான். அப்பொழுது, பீடர் கெராஸிமோவிச் அவர்களிடம் சென்று, "நாம் வெட்கக்கேடான ஒரு தப்பு செய்திருக்கிரும். உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டான், "அவளை ஸைபீரியாவுக்கு அனுப்புவதற்கான ஏற்பாட்டைச் செய்து விட்டோம்" என்ருன்,

"நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?" என்று வியப்போடு கேட்டான் நிக்லியுடாவ்.

"குற்றவாளிதான். ஆனுல் கொல்ல வேண்டுமென்று நோக்கம் இல்லை' என்ற வார்த்தைகளைச் சேர்க்க மறந்துவிட் டோம். அவளுக்கு பதினைந்து வருஷக் கடுங்காவல் தண்டனை விதிக்க வேண்டுமென்று சர்க்கார் வக்கீல் பிடிவாதமாக இருப்ப தாக இப்பொழுதுதான் கோர்ட் குமாஸ்த்தா என்னிடம் சொன்ஞன்" என்ருன்.

"ஆனுல் அப்படித்தானே தீர்மானிக்கப்பட்டது?" என் ருர் போர்மன்.

"அவள் பணத்தைத் திருடவில்லை. ஆகையால் கொலை செய்யவேண்டுமென்ற நோக்கம் அவளுக்கு இல்லை என்பது தான் இயற்கையான முடிவு" என்று பீடர் கெராஸிமோவிச் விவாதித்தான்.

"ஆனுல் நாம் அறையைவிட்டு வெளியேறுவதற்கு முன் னுல் பதில்களைப் படித்துக் காட்டினேன். ஆனுல் ஒருவரும் ஆக்ஷேபிக்கவில்லையே!" என்று சொல்லி போர்மன் தன் பழி யைத் தட்டிக் கழிக்க முயன்ருர்.

பீடர், "அப்பொழுது நான் வெளியே போயிருந்தேன்" என்று சொல்லிவிட்டு, நிக்லியுடாவ் பக்கம் திரும்பி, "நீங்கள் கற்பனை உலகத்தில் இருந்தீர்களாக்கும்!" என்ருன்.

"இல்லை, நான்—" என்ருன் நிக்லியுட்டாவ்.

"ஓ! இல்லையா?"

"ஆனுல் அதை இப்பொழுது சரிப்படுத்தி விடலாமே!". என்ருன் நிக்லியுட்டாவ்.

"ஓஹோ! அது தீர்ந்துபோன விஷயம்!" என்ருன் பீடர்.

நிச்லியுடாவ் கைதிக்ளைப் பார்த்தான். தங்கள் விதி என்ன ஆகுமோவென்று நினைத்து அவர்கள் அசைவற்று உட்கார்ந்திருந்தனர். காடுஷா புன்சிரிப்புச் சிரித்துக்கொண்டிருந்தாள். நிக்லியுடாவின் மனத்தை ஏதோ குடைந்து கொண்டிருந்தது. அவள் விடுதலையாகி விடுவாளென்று அவன் இதுவரை நினைத்திருந்தான். அவள் நகரிலேயே இருப்பாளென்று எதிர்பார்த்தான். அவளிடம் எப்படி நடந்துகொள்வதென்பது பற்றி அவன் ஒன்றும் நிச்சயிக்கவில்லை. அவளிடம் எந்தவிதமான தொடர்பு ஏற்படுத்திக் கொள்வதும் கஷ்டமாகத் தோன்றியது. ஆனால் ஸைபீரியாவும் சிறை, தண்டனையும் எவ்விதத் தொடர்பையும் அசாத்தியமாக்கி விட்டன.

# 24

பீடர் கொராமிஸோவிச் நினைத்தது சரியாகிவிட்டது.

பிரதம நீதிபதி ஆலோசனை அறையிலிருந்து கையில் ஒரு காகிதத்துடன் வந்து தீர்ப்பைப் படித்தார். கார்ட்டின்கின்னுக்கும் 'காடுஷாவுக்கும், எல்லா சொத்து உரிமைகளையும் பறித்து, ஸைபீரியாவில் கார்ட்டின்கின்னுக்கு எட்டுவருஷ கடுங்காவல் தண்டனையும், காடுஷாவுக்கு நான்குவருஷ தண்டனையும் விதித்து தீர்ப்புக் கூறினார். போச்கோவாவின் சொத்து உரிமைகளும் பறிக்கப்பட்டு விட்டதாகவும், அவளுக்கு மூன்று வருஷ சிறைதண்டனை விதித்திருப்பதாகவும் அறிவித்தார். இந்த வழக்குக்கு ஆன செலவுகளை மூன்று கைதிகளும் சமமாகப் பகிர்ந்துகொள்ள வேண்டும். அவர்களிடம் போதிய சொத்து இல்லை யென்றால் செலவை சர்க்காருக்கு மாற்றலாம். சாட்சியமாகக் கொண்டு வரப்பட்ட பொருள்கள் விற்கப்படவேண்டும். மோதிரத்தைத் திருப்பிக் கொடுத்து விடவேண்டும்'' என்று பிரதம நீதிபதி அறிவித்தார்.

கார்ட்டின்கின் வாயை அசைத்துக்கொண்டே ஒடுங்கி நின்றுகொண்டிருந்தான். போச்கோவா அமைதியாக இருப்பதுபோல் காணப்பட்டாள். காடுஷா தீர்ப்பைக் கேட்டவுடன், முகம் சிவக்கப்பெற்று, ''நான் நிரபராதி, நிரபராதி'' என்று கத்தினாள். அவளுடைய குரல் அறையெங்கும் எதிரொலித்தது. ''இது மஹா பாபம். நான் நிரபராதி. நான் அப்படி நினைக்கவேயில்லை. நான் சொல்வது உண்மை—சத்தியம்'' என்று கதறிக்கொண்டே பெஞ்சிமீது துவண்டு விழுந்து, கோவென்று அழுதாள். கார்ட்டின்கின்னும் போச்கோவாவும் வெளியேபோன பிறகும் அவள் உட்கார்ந்து அழுது கொண்டே

யிருந்தாள். காவல்காரன் அவள் சட்டையைத் தொட்டு எழுந்திருக்கச் சொல்லவேண்டியிருந்தது.

நிக்லியுடாவ் தன் கெட்ட எண்ணங்களையெல்லாம் அடியோடு மறந்து, "இதை இப்படியே விட்டுவிட முடியாது" என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான். அவள் பின்னாலேயே தாழ்வாரத்திற்கு விரைந்தான். காரணமில்லாமல், அவளை மற்றும் ஒரு முறை பார்க்க வேண்டுமென்று அவனுக்குத் தோன்றியது. வாசற்படியில் கூட்டம் அதிகமாக இருந்தது. காரியத்தை முடித்த திருப்தியோடு வக்கில்களும் ஜூரிகளும் போய்க்கொண்டிருந்தார்கள். ஆகையால் நிக்லியுடாவ் அங்கு சற்று நிற்கவேண்டியிருந்தது. அவன் வெளியே வந்து பார்த்தபொழுது அவள் சிறிதுதூரம் போய்விட்டாள். நிக்லியுடாவ் வெகு வேகமாக நடந்து அவளை நோக்கிச் சென்றான். அங்கு இருந்த கூட்டம் தன்னைக் கவனிப்பதைக்கூட லக்ஷியம் செய்யவில்லை. வேகமாக நடந்து அவளுக்கு முன்னே சென்று நின்றான். அவள் அழுவதை நிறுத்திவிட்டு கேவிக் கொண்டு மாத்திரம் இருந்தாள். கைக்குட்டையை எடுத்து, முகத்தைத் துடைத்துக் கொண்டாள். அவனைக் கவனிக்காமலே அவள் போய்விட்டாள். பிறகு அவன் பிரதம நீதிபதியைச் சந்திக்கத் திரும்பி விரைவாக வந்தான். அவர் கோர்ட் அறையை விட்டுப் புறப்பட்டு விட்டார். தம் சொந்த அறைக்குப்போய், சாம்பல் நிறக்கோட்டை அணிந்துகொண்டு, ஒரு வேலைக்காரனிடமிருந்து, வெள்ளிப் பூண்போட்ட பிரம்பை வாங்கிக்கொண்டிருந்தபொழுது நிக்லியுடாவ் அவரைப் போய்ச் சந்தித்தான்.

"இப்பொழுது விசாரித்த வழக்கைப்பற்றி உங்களிடம் சில வார்த்தைகள் பேசலாமா? நான் ஜூரிகளில் ஒருவன்" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"ஓ! நிச்சயமாகப் பேசலாம் நிக்லியுடாவ்; நான் அதைச் சந்தோஷத்துடன் வரவேற்கிறேன். நாம் இதற்கு முன்பே சந்தித்திருக்கிறோம் என்று நினைக்கிறேன்" என்று சொல்லிக் கொண்டே நிக்லியுடாவின் கையைக் குலுக்கினார். அவர்கள் முதல்நாள் சந்தித்த சம்பவத்தை சந்தோஷத்துடன் விவரித்துவிட்டு, "நான் என்ன செய்யவேண்டும் சொல்லுங்கள்" என்றார்.

"காடுஷாவைப்பற்றி ஜூரிகள் சொன்ன முடிவில் ஒரு பிசகு ஏற்பட்டுவிட்டது. விஷமிட்ட குற்றச்சாட்டின் கீழ் அவள் குற்றவாளியல்ல, இருந்தாலும் அவளுக்கு கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது" என்று பரபரப்பு நிறைந்த சோகக் குரலில் கூறினான் நிக்லியுடாவ்.

"நீங்கள் சொன்ன முடிவில் முரண்பாடு இருப்பதாகத் தோன்றிய போதிலும் அதன்படியே தான் தீர்ப்பு கூறப்பட்டிருக்கிறது" என்றார் பிரதம நீதிபதி. ஜூரிகளுடன் உத்தியோக தோரணையில் பேசுவதுபோல் சொல்ல வாயெடுத்தார். ஆனால் சீக்கிரம் பேச்சை முடிக்க விரும்பி அவ்விதம் செய்யவில்லை.

"ஆமாம், அந்தத் தவற்றைத் திருத்த முடியாதா?"

"அப்பீலுக்கு எப்பொழுதுமே ஒரு காரணம் கண்டுபிடிக்க முடியும். இதைப் பற்றி நீங்கள் ஒரு வக்கிலிடம் பேசவேண்டும்" என்று சொல்லிக் கொண்டே வாசற்படியை நோக்கி நகர்ந்தார் நீதிபதி.

"ஆனால் இது பயங்கரம்" என்றான் நிக்லியுடாவ். இருவரும் வெளியே வந்தார்கள். வெயில் பிரகாசமாகக் காய்ந்து கொண்டிருந்தது. வண்டிகளின் சப்தத்திற்கிடையே அவர்கள் பேச வேண்டியிருந்ததால் குரலைச் சற்று உயர்த்தி கொண்டனர்.

"கொல்ல வேண்டும் என்ற நோக்கம் இல்லாமல்' என்ற வார்த்தையை மாத்திரம் நீங்கள் சேர்த்துவிட்டிருந்தால் காடுஷா விடுதலையாகி யிருப்பாள்" என்றார் நீதிபதி.

"ஆமாம், அதை நான்விட்டது மன்னிக்க முடியாத தவறு தான்."

"விவகாரமே இதில்தான் இருக்கிறது" என்று புன்சிரிப்போடு சொல்லிவிட்டு தம் கடிகாரத்தைப் பார்த்தார் நீதிபதி. அவருடைய கிளாராவைச் சந்திப்பதற்கு நிர்ணயித்த நேரத்திற்கு இன்னும் முக்கால் மணி இருந்தது.

"வேண்டுமானல் நீங்கள் வக்கில்களுடன் கலந்து ஆலோசியுங்கள். அப்பீல் செய்வதற்கு நீங்கள் ஏதாவது காரணம் கண்டுபிடிக்க வேண்டியிருக்கும் அதைச் சுலபமாகச் செய்து விடலாம்" என்று சொல்லிவிட்டு ஒரு வண்டியைக் கூப்பிட்டார். "ட்வோரியான்ஸ் காயாவுக்குப் போகவேண்டும். முப்பது கொபெய்க் கொடுக்கிறேன். அதற்கு மேல் நான் கொடுப்பதில்லை" என்றார் வண்டிக்காரனிடம்.

"சரி எஜமான், அழைத்துக் கொண்டு போகிறேன்" என்ருன் வண்டிக்காரன்.

"போய் வருகிறேன். நான் ஏதாவது உதவியாக இருக்க முடியுமென்றால் தெரியப்படுத்துங்கள்" என்று நிக்லியுடா

விடம் கூறி தம்முடைய விலாஸத்தை அவனிடம் சொல்லி விட்டு வண்டியில் ஏறிக்கொண்டு கிளம்பினார்.

# 25

நீதிபதியோடு நடத்திய சம்பாஷணையும், சுத்தமான காற்றும் நிக்லியுடாவுக்குச் சிறிது மன அமைதியைக் கொடுத்தன. காலையில் தான் இருந்த புதிய சூழ்நிலை, சம்பவங்களை மிகைப் படுத்திக் காட்டியதாக அவனுக்குத் தோன்றியது.

"அவளுடைய கஷ்டத்தைக் குறைக்க என்னால் முடிந்ததையெல்லாம் செய்ய வேண்டும். அதையும் எவ்வளவு சீக்கிரம் செய்ய முடியுமோ அவ்வளவு சீக்கிரம் செய்யவேண்டும். ஆமாம்! உடனே செய்கிறேன்! பானரின் அல்லது மிது வின் இருக்கும் இடத்தைக் கண்டுபிடிக்க வேண்டும்" என்று இரு பெரிய வக்கீல்களின் பெயர்களை ஞாபகப்படுத்திக் கொண்டு, தனக்குத் தானே சொல்லிக் கொண்டான். கோர்ட்டுக்குத் திரும்பிச் சென்று மாடிமீது ஏறினான். முதல் மாடியில் பானேரினையே சந்தித்துவிட்டான். அவரை நிறுத்தி, அவரிடம் ஒரு கேஸ் விஷயமாகப் பேச விரும்புவதாகச் சொன்னான்.

நிக்லியுடாவை பானேரின் பார்த்தும் அவனைப் பற்றிக் கேள்விப்பட்டும் இருக்கிறார்.

"எனக்குக் களைப்பாக இருந்த போதிலும், உங்கள் சமாசாரத்தைச் சொல்ல அதிக நேரம் ஆகாதென்றால் இப்பொழுதே சொல்லலாம். இந்த அறைக்குள் வருகிறீர்களா?" என்று சொல்லிக்கொண்டே அருகில் இருந்த ஓர் அறைக்குள் நிக்லியுடாவை அழைத்துக் கொண்டு போனார். அது யாரோ ஒரு நீதிபதியின் அறை. அங்கு இருந்த மேஜை அருகே இருவரும் உட்கார்ந்தனர்.

"நீங்கள் என்ன சொல்ல வந்தீர்கள்?"

"இந்த விஷயம் மிகவும் ரகசியமாக இருக்க வேண்டுமென்று முதலில் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். நான் இதில் அக்கரை காட்டுவதாக ஒருவருக்கும் தெரியக் கூடாது."

"சரி, அப்படியே ஆகட்டும். அதற்கு மேல்?"

"நான் இன்று ஜூரிகளில் ஒருவனாக இருந்தேன். ஒரு பெண்ணை ஸைபீரியாவுக்கு அனுப்பும்படி தண்டனைகொடுத்து விட்டோம். அந்தப் பெண் நிரபராதி. இது எனக்கு ரொம்பவும் வருத்தம் அளிக்கிறது" என்றான் நிக்லியுடாவ். தனக்கு முகம் கருப்பதையும் வார்த்தை குழறுவதையும் கண்டு நிக்லியுடாவுக்கே ஆச்சரியமாக இருந்தது. பானேரின் அவனை துரிதமாக ஏற இறங்கப் பார்த்துவிட்டு மறுபடியும் பூமியைப் பார்த்தபடி அவன் சொல்வதைக் கேட்கத் தொடங்கினார்.

"பிறகு?"

"நாங்கள் ஒரு பெண்ணைத் தண்டித்து விட்டோம். இந்த தண்டனையை எதிர்த்து மேல் கோர்ட்டுக்கு அப்பீல் செய்ய விரும்புகிறேன்."

"ஸெனேட்டுக்கா?" என்று கேட்டு அவன் சொன்னதைத் திருத்தினார் வக்கீல்.

"ஆமாம். இந்த வழக்கை நீங்கள் உடனே எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்."

நிக்லியுடாவ் தன் சம்பாஷணையின் மிகக் கஷ்டமான பகுதியைக் கடக்க விரும்பி, "இந்த வழக்குக்கு என்ன செலவானாலும் அதை நானே ஏற்றுக்கொள்கிறேன்" என்றான்.

வக்கீல் புன் சிரிப்புச் சிரித்துக் கொண்டே, "அதையெல்லாம் பற்றி நாம் பிறகு பேசிக்கொள்ளலாம்" என்று, நிக்லியுடாவின் அனுபவமின்மையை மன்னிப்பவர் போலக் கூறிவிட்டு, "வழக்கு விவரம் என்ன?" என்று கேட்டார்.

நடந்தவற்றையெல்லாம் நிக்லியுடாவ் சொன்னான்.

"சரி, இந்த வழக்கை நான் நாளைக்குக் கவனிக்கிறேன். நீங்கள் மறுநாள் வாருங்கள்—வேண்டாம் வியாழக்கிழமை வருவது நல்லது. மாலை ஆறு மணிக்கு மேல் வாருங்கள். பதில் சொல்கிறேன். இங்கு சில விஷயங்களைப் பற்றி நான் விசாரிக்க வேண்டியிருக்கிறது" என்றார் வக்கீல்.

நிக்லியுடாவ் அவரிடம் விடைபெற்றுக்கொண்டு வெளியே கிளம்பினான்.

வக்கீலோடு பேசியதாலும், காடுஷாவைக் காப்பாற்ற தானே ஏற்பாடு செய்ததாலும் அவன் மனத்திற்கு இன்னும் அதிக நிம்மதி ஏற்பட்டது. தெருவில் இறங்கினான். காலநிலை

இனிமையாக இருந்தது. வஸந்தத்தின் இனிய காற்றை நிரம்ப உள்ளுக்கு இழுப்பது அவனுக்கு ஆனந்தமாக இருந்தது. வண்டிக்காரர்கள் பலர் வந்து அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். ஆனால் அவன் நடந்தேதான் சென்றான். காடுஷாவைப் பற்றிய நினைவுகளும் சிந்தனைச் சித்திரங்களும் அவன் மனத்தில் உருண்டு ஓடிக்கொண்டிருந்தன. எல்லாம் மந்தமாகத் தோன்றின. "இதையெல்லாம் பிறகு ஆலோசித்துக் கொள்கிறேன். விரும்பத்தகாத இந்த சிந்தனைகளிலிருந்து நான் முதலில் விடுபட வேண்டும்" என்று தனக்குள் கூறிக் கொண்டான்.

கோர்சாகின் குடும்ப விருந்து ஞாபகத்திற்கு வந்தது. கடியாரத்தைப் பார்த்தான். இன்னும் அதிக நேரம் ஆகிவிடவில்லை. அந்தப் பக்கம் போய்க்கொண்டிருந்த டிராம்காரை ஓடிப்பிடித்து ஏறிக்கொண்டான். கடைத் தெரு வந்தவுடன் இறங்கி ஒரு வண்டியை அமர்த்திக் கொண்டு, சில நிமிஷங்களுக்குள் கோர்ச்சாகின் குடும்பத்தாரின் பிரம்மாண்ட வீட்டின் வாசலை அடைந்தான்.

## 26

அங்கு இருந்த தடித்த காவற்காரன், கதவைத் திறந்து, "வாருங்கள்" என்று அன்போடு வரவேற்றான். கதவு சப்தமிடாமல் திறந்தது. "சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்கள்; நீங்கள் வந்தால் உங்களை அழைத்து வரும்படி உத்தரவு" என்றான் காவல்காரன். அவன் மாடிப்படி வரைச் சென்று மணியை அடித்தான்.

"அயலார் யாராவது வந்திருக்கிறார்களா?" என்று கேட்டான் நிக்லியுடாவ் தன் மேல் கோர்ட்டைக் கழற்றிக் கொண்டே.

"கோலோஸோவும், மைக்கேல் ஸெர்கியேவிச்சும்தான்."

மாடியிலிருந்து வேலைக்கார இளைஞன் ஒருவன் எட்டிப் பார்த்தான். "தயை செய்து மேலே வாருங்கள். உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்" என்று அவன் அழைத்தான்.

நிக்லியுடாவ், நடனமாடும் விசாலமான அறையைக்கடந்து விருந்து மண்டபத்திற்குச் சென்றான். அங்கு தாயார் ஸோபியா வாஸிலெவ்னாவைத் தவிர, கோர்ச்சாகின் குடும்பத்

தினர் அனைவரும் கூடியிருந்தனர். மத்தியில் வயது
முதிர்ந்த கோர்ச்சாகின் உட்கார்ந்திருந்தார். அவருடைய
இடது பக்கத்தில் குடும்ப டாக்டரும் வலப்பக்கத்தில்
விருந்தினராக வந்திருந்த ஜவான் ஜவனிச் கோலோஸோவும்
உட்கார்ந்திருந்தனர். கோர்ச்சாகின், முன்பு ராணுவ அதிகாரி
யாக இருந்தவர். இப்பொழுது ஒரு பாங்கியின் டைரக்டர்
கோர்ச்சாகினின் நண்பர். மிதவாதி. மேஜைக் கடைசியில்
மிஸ்ஸி கோமகள் உட்கார்ந்திருந்தாள். அவள் பக்கத்தில்
ஒரு ஆஸனம் காலியாக இருந்தது.

"ரொம்பச்சரி, உட்காருங்கள். இப்பொழுது தான் நாங்
கள் மீன் தின்று கொண்டிருக்கிறோம்" என்று கோர்ச்சாகின்
செயற்கைப் பற்களால் உணவை ஜாக்கிரதையாக மென்று
கொண்டே, தம் ரத்தக் கண்களை உயர்த்தி நிக்லியுடாவை
நோக்கினார். அந்தக் கண்களின் மீது இமைகள் இருந்த
தாகவே தெரிய வில்லை. "ஸ்டீபன்!" என்று வாய் நிறைய
ஆகாரத்தோடு பட்லரைக் கூப்பிட்டு விட்டு, காலியாக இருந்த
இடத்தைப் பார்த்தார். கோர்ச்சாகினை நிக்லியுடாவுக்கு
நன்றாகத் தெரிந்திருந்த போதிலும், விருந்தில் அவரை அடிக்
கடி பார்த்திருந்த போதிலும், அவருடைய சிவந்த முகமும்,
தின்று கொழுத்த ராணுவத் தோற்றமும் அன்று அவனுக்
குப் பிடிக்க வில்லை. இவர் ராணுவ அதிகாரியாக இருந்த
பொழுது செய்த அக்கிரமங்கள் தாமாகவே அவனுக்கு ஞாப
கம் வந்தன. தாம் பணக்காரர். ஒருவருடைய தயவும் வேண்
டியதில்லை என்ற திமிரினால், காரண மில்லாமல் பலரைச்
சவுக்கால் அடித்தும் தூக்கில் போட்டும் இருக்கிறார்.

"வேலைக்காரன், இதோ ஆகி விட்டது எஜமான்" என்று
சொல்லி விட்டு, மிஸ்ஸியின் பக்கத்தில் நிக்லியுடாவ் உட்
கார்ந்து சாப்பிடுவதற்கான ஏற்பாடுகளைச் செய்தான். நிக்லி
யுடாவ் ஒவ்வொருவருடனும் கை குலுக்கிக் கொண்டு சுற்றி
வந்தான். அவர்களில் பலரோடு அவன் பேசவில்லை. இவை
யெல்லாம் அவனுக்குப் பிடிக்கவே யில்லை. அவன் சாப்பிடத்
தொடங்கும் வரையில் தனக்கு எவ்வளவு பசி என்பதை உணர
வில்லை. ஆவலோடு சாப்பிட ஆரம்பித்தான்.

"சமூகத்தின் அஸ்தி வாரத்துக்குக் குழி பறிப்பதில்
வெற்றி பெற்று விட்டீர்களா?" என்று குத்தலாகக் கேட்டார்
கோலோஸோவ். விசாரணையில் ஜூரி முறையைத் தாக்கி
எழுதிய ஒரு பிற் போக்குப் பத்திரிகை கூறியதை அவர் இவ்
விதம் எடுத்துச் சொன்னார். குற்ற வாளிகளை விடுதலை செய்து
நிரபராதிகளை தண்டித்தாகி விட்டதா?" என்று அவர் கேட்
டார்.

"அஸ்திவாரத்திற்குக் குழிப்பறிப்பது ... அஸ்தி வாரத்திற்குக் குழிபறிப்பது" என்று கோர்ச்சாகின், சிரித்துக் கொண்டே, திருப்பிச் சொன்னார். பொறுக்கி எடுத்த தம் நண்பரின் புத்திசாலித்தனத்திலும் படிப்பிலும் அவருக்கு அஸாத்திய நம்பிக்கை.

நிக்லியுடாவ் கடு கடுப்போடு, கொலோஸோவின் கேள்விக்கு பதில் சொல்லாமலே இருந்து விட்டான்.

"அவரைச் சாப்பிட விடுங்கள்" என்று மிஸ்ஸி சிரித்துக் கொண்டே சொன்னாள். நிக்லியுடாவ் சாப்பிட்டுக் கொண்டேயிருந்தான். அவனுடைய ஆத்திரத்தைக் கிளப்பும் முறையில் கோலோஸோவ் தான் படித்த கட்டுரையில் இருந்த விஷயங்களை உரக்கச் சொல்லிக் கொண்டிருந்தார். மிஸ்ஸியின் ஒன்று விட்ட அண்ணனை மைக்கேல் ஸெர்ஜியேவிச், தான் படித்த மற்றொரு கட்டுரையைப்பற்றி விவரித்து அவர் சொன்னதை ஆமோதித்தான்.

மிஸ்ஸி வழக்கம் போல் ஆடம்பாமாகக் காட்சி யளித்தாள்.

"நீங்கள் ரொம்பவும் களைத்துப் போயிருக்க வேண்டும்" என்றாள் அவள்.

"அப்படி ஒன்றுமில்லை. சித்திரங்களைப் பார்க்கப் போயிருந்தீர்களா?"

"இல்லை நாங்கள் அதைத் தள்ளிப் போட்டு விட்டு, டென்னிஸ் ஆடிக்கொண்டிருந்தோம். க்ருக்ஸ் நன்றாகத்தான் ஆடுகிறார்."

தன் சிந்தனையை வேறு திசையில் திருப்புவதற்காக நிக்லியுடாவ் இங்கு வந்தான். இந்த வீட்டின் டாம்பீகத்திற்காகவும் தனக்குக் கிடைக்கும் நாஸுக்கான புகழ்ச்சிக்காகவும் அவன் இந்த வீட்டில் இருக்க விரும்புவது வழக்கம். ஆனால் இன்று அந்த வீட்டில் இருந்த ஒவ்வொன்றும் அவனுக்கு வெறுப்பை அளித்தன. எல்லாவற்றிற்கும் மேலாக, மிஸ்ஸி தன்னைப் பற்றிப் பேசும் பொழுது தன் பெயரைச் சொல்லாமல் 'அவர்' என்று கூறியது அவனுக்கு அதிக எரிச்சலை உண்டாக்கியது. அவனுக்கு மிஸ்ஸி இரண்டு விதமாகத் தோற்ற மளிப்பது வழக்கம். சில சமயங்களில் அவளைச் சந்திரிகையில் காண்பது போல் பார்ப்பான். அவளுடைய அழகுதான் அவன் கண்ணில்படும். மற்றும் சில சமயங்களில் கடுமையான வெயிலில் அவளைப் பார்ப்பது போல் இருக்கும். அப்பொழுது அவ

ளுடைய கோரத்தைத் தவிர வேறு ஒன்றும் அவன் கண்ணில் படாது. இன்றும் அப்படித்தான் நேர்ந்தது. அவள் முகத்தின் சுருக்கங்களையும், கூருன முழங்கையையும், அவன் தந்தையைப் போலவே பெரிய கட்டை விரல் நகத்தையும் தான் அவன் பார்த்தான்.

"டென்னிஸ் ரொமபவும் மந்தமான விளையாட்டு" என்ருர் கோலோஸோவ்.

"இல்லவே இல்லை. அது கன குஷியான விளையாட்டு. நீங்கள் டென்னிஸ் ஆடியதில்லை போலிருக்கிறது" என்ருள் மிஸ்ஸி. "கன" என்ற வார்த்தையை அவள் அனுவசியமாக் அழுத்திச் சொல்வது போல் நிக்லியுடாவுக்குத் தோன்றியது. இதைத் தொடர்ந்து எழுந்த விவாதத்தில் எல்லாரும் கலந்து கொண்டார்கள்.

"ஓ! இந்த முடிவற்ற விவாதமா? என்று சொல்லிச் சிரித்துக்கொண்டே கோர்ச்சாகின் எழுந்தார். அவரைத் தொடர்ந்து மற்றவர்களும் எழுந்து வேருெரு மேஜை அருகே சென்ருர்கள். அங்கு வாஸலீன கலந்த வென்னீர் ஒரு தொட்டியில் தயாராக வைக்கப் பட்டிருந்தது. அவர்கள் வாயைக் கொப்பளித்துக் கொண்டு, ஒருவருக்கும் ரஸிக்காத அந்த விவாதத்தைத் தொடங்கினுர்கள்.

ஒரு மனிதனின் குணத்தை வெளிக் காட்ட விளையாட்டை விடச் சிறந்த சாதனம் வேறு ஒன்றுமில்லை என்று தான் சொன்னதை மிக்லியுடாவ் ஊர்ஜிதம் செய்ய வேண்டும் என்பதற்காக "நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?" என்று அவனைக் கேட்டாள்.

அவன் முகத்தில் கவலையும் அதிருப்தியும் நிறைந்த களையைக் கண்டு, அதன் காரணத்தைக் கண்டுபிடிக்க விரும்பினுள்.

"உண்மையில் எனக்குத் தெரியாது; அதைப் பற்றி நான் சிந்தித்ததில்லை" என்று பதில் அளித்தான் நிக்லியுடாவ்.

"அம்மாவைப் பார்க்க வருகிறீர்களா?" என்று கேட்டாள் மிஸ்ஸி.

"ஆமாம் ஆமாம்" என்ருன் அவன். ஆனல் அவன் அங்கு போக விரும்பவில்லை என்பதை அவன் குரல் நன்ருக எடுத்துக் காட்டியது. ஒரு ஸிகரெட்டை எடுத்தான்.

கோலோஸோவையும் நிக்லியுடாவையும் பார்த்துச் சிரித்துக் கொண்டே சொல்லிவிட்டு, அறையில் விரித்திருந்த ரத்ன கம்பளத்தின்மீது ஓசைப்படாமல் வேகமாக நடந்து போய்விட்டாள். ஒன்றுமே நடக்காததுபோல் அவள் பேசினாள்.

"வாப்பா, சௌக்கியந்தானா? உட்கார்" என்றாள். ஸோபியா வாஸிலியெவனா தன் இயற்கையான கபடப் புன் சிரிப்போடு. அவளுடைய பொய்ப் பல் வரிசை லேசாக வெளியே தெரிய "கோர்ட்டிலிருந்து நீ வருத்தத்தோடு வந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். ஹிருதயம் உள்ளவர்களுக்கு இது ரொம்பவும் சங்கடமான வேலைதான்" என்றாள்.

"ஆமாம், அப்படித்தான். பிறரை மதிப்பிட நமக்கு உரிமையில்லை என்பது அங்கு தெரிகிறது" என்று அவன் பதிலளித்தான்.

"உன்னுடைய சித்திர வேலைகள் எப்படி இருக்கின்றன? நான் இப்படி முடமாக இல்லாமலிருந்தால் முன்பே வந்து அதைப் பார்த்திருப்பேன்" என்றாள். தன்னோடு பேசுபவர்களை சர்துர்யமாக ஸ்துதி செய்ய அவள் கற்றுக்கொண்டிருந்தாள்.

"நான் அதை அடியோடு விட்டுவிட்டேன்" என்று அவன் வறண்ட குரலில் பதில் அளித்தான். அவளுடைய கிழத்தனம் எவ்வளவு வெளிப்படையாகத் தெரிந்ததோ அவ்வளவு வெளிப்படையாக அவளுடைய முகஸ்துதியும் தெரிந்தது. இந்த சமயத்தில் இங்கிதத்தோடு நடந்துகொள்ள அவனால் முடியவில்லை.

"ஐயோ, ரொம்பவும் வருந்தத்தக்க விஷயம்" என்று அவள் சொல்லிவிட்டு, கோலோஸோவ் பக்கம் திரும்பி, "சித்திரக் கலையில் இவனுக்கு நல்ல திறமை இருக்கிறது. ரெபின்னே இதை ஒப்புக்கொண்டிருக்கிறார்" என்றாள்.

"இவள் இப்படிப் பொய்சொல்வதற்கு ஏன் வெட்கப்படவில்லை?" என்று நிக்லியுடாவ் நினைத்து முகத்தைச் சுளித்துக் கொண்டான்.

நிக்லியுடாவின் மனநிலை சரியாக இல்லை என்பதை அவள் அறிந்தவுடன், கோலோஸோவ் பக்கம் திரும்பி, ஒரு புதிய நாடகத்தைப் பற்றி விசாரித்தாள். அவனுடைய அபிப்பிராயம் எல்லா சந்தேகங்களையும் நிவர்த்தித்துவிடும் போன்ற தொனியைத் தன் குரலில் வருவித்துக் கொண்டாள். நாடகம், அதன் ஆசிரியர் இரண்டுபேரையும் கோலோஸோவ் குறை கூறினான். கலையைப்பற்றிய அபிப்பிராயங்களையும் சொன்

ஞன். வாஸிலியெவ்ஞ அந்த நாடகத்தை ஆதரித்துப் பேசு வதுபோலவும், ஆனால் கோலோஸோவ் கூறிய அபிப்பிராயத் திஞல் அந்த அபிப்பிராயத்தைப் மாற்றிக்கொள்வதுபோல வும் அவள் நடித்தாள். நிக்லியுட்ாவ் அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தபோதிலும் அவனுடைய ஞாபகம் அங்கு இல்லை. "நாடகத்தைப்பற்றியோ நாடக ஆசிரியனைப் பற்றியோ இந்த இரண்டுபேருக்குமே கவலையில்லை; சாப்பிட்ட பின் தொண்டையின் தசைகளையும் நாக்கையும் அசைக்க வேண்டு மென்ற இச்சையைப் பூர்த்தி செய்வதற்காகவே இவர்கள் பேசிக்கொண்டிருக்கிருர்கள்" என்றுதான் நிக்லியுடாவுக்குத் தோன்றியது. வாஸிரியெவ்ஞ பேசிக்கொண்டிருக்கையில், தன் முகத்தின் கிழத்தனத்தை எடுத்துக் காட்டக்கூடிய சூரிய கிரணம். ஜன்னல் வழியாக உள்ளே வருவதை அவள் அதிருப்தியோடு அடிக்கடி பார்த்துக்கொண்டிருந்தாள். கோலோஸோவோடு பேசிக்கொண்டே தன் ஸோபாவின் பக்கத்தில் இருந்த மின்சார மணியின் பித்தானை அழுத்திஞள். டாக்டர், அந்த வீட்டு சொந்தக்காரரைப்போல எழுந்து ஒன் றும் சொல்லாமல் வெளியே சென்ருர். வாஸிலியெவ்ஞவின் பார்வை அவரைத் தொடர்ந்து சென்றது. வேலைக்காரன் உள்ளே வந்தான்.

"பிலிப், அந்த ஜன்னல் திரையைச் சரியாக இழுத்து விடு" என்று ஜன்னலைக் சுட்டிக்காட்டிஞள். அவன் வேறு ஒரு ஜன்னலின் திரையை இழுக்கவே, "அதையல்ல, இந்தப் பெரிய ஜன்னலின் திரையை" என்ருள், வெறுப்புக் கலந்த குரலில். நாடகத்தைப் பற்றிய சம்பாஷணையும் இடை இடையே நடந்துகொண்டிருந்தது.

பிலிப் மன்னிப்புக் கோருபவன் போல் சிறிது பணிந்து மெதுவாக அடி எடுத்து வைத்துக்கொண்டு ஜன்னல் அருகே சென்று, வெளிச்சம் அவள் முகத்தில் விழாதபடி பார்த்துக் கொண்டே ஜன்னல் திரையை இழுத்தான். இப்பொழுதும் அவளுக்குத் திருப்தி ஏற்படவில்லை. மறுபடியும் மறுபடியும் பிலிப்பைக் கடிந்து கொண்டாள். பிலிப்பின் கண்களில் ஒரு க்ஷண நேரம் ஒளி தோன்றி மறைந்தது.

"நீ நாசமாய்ப்போக, என்னசெய்து தொலைக்கவேண்டும்?" என்று—பிலிப்—நினைப்பது போல் நிக்லியுடாவுக்குத் தோன்றியது. ஆஞல் அவன் தன் கோபத்தை அடக்கிக் கொண்டு அவளுடைய கட்டளைப்படி செய்தான்.

கோலோஸோவ் தன் சம்பாஷணையின் தொடர்ச்சியாக, "டார்வின் தத்துவத்தில் நிரம்ப உண்மை இருக்கிறது" என்ருன்.

மௌனமாக உட்கார்ந்திருந்த நிக்லியுடாவை வாலிஸி யெவ்ன பார்த்து, "பரம்பரை குணங்களில் உனக்கு நம் பிக்கை உண்டா?" என்று கேட்டாள். அவனுடைய மௌனம் அவளை உறுத்தியது.

"பரம்பரை குணமா?" என்று நிக்லியுடாவ் கேட்டுவிட்டு, "நான் நம்புவதில்லை" என்று பதில் அளித்தான். இந்த சம யத்தில் சில தடுக்க முடியாத உணர்ச்சிச் சித்திரங்கள் அவன் மனத்தில் வந்து நிறைந்தன. பிலிப்பின் கட்டமைந்த அழகாக தோற்றத்திற்குப் பக்கத்தில், கோலோஸோவின் நிர்வாணத் தோற்றம் அவன் மனக் கண்முன் தோன்றியது. அவன் தொங் கியும், வழுக்கைத் தலையும், தசையற்ற குச்சி போன்ற கைகால் களும் காட்சியளித்தன. பட்டினால் மூடப்பட்டிருந்த வாஸியெவ் னவின் உண்மைத் தோற்றமும் அவன் கற்பனை கண்முன் எழுந்தது. இந்தக் காட்சிகள் அவனுக்கு மிகவும் பயங்கரமாக இருந்தன. இவற்றை விரட்டியடிக்க அவன் முயன்றான்.

ஸோபியா வாஸிலியெவ்ன தன் கண்களாலேயே அவனை அளந்து பார்த்தாள்.

"சரி, மிஸ்ஸி உனக்காகக் காத்துக்கொண்டிருக்கிறாள். கிரிக்கின் புதிய பாட்டு ஒன்றை உனக்கு வாத்தியத்தில் வாசித் துக் காட்ட விரும்புகிறாள்" என்றாள் நிக்லியுடாவிடம்.

"அவள் ஒன்றையும் வாசித்துக் காட்ட விரும்பவில்லை. இவள் எதற்காகவோ பொய் சொல்கிறாள்" என்று நிக்லி யுடாவ் நினைத்துக்கொண்டே, அந்த அறையைவிட்டு வெளியே சென்றான்.

கா்தரின் அலெக்ஸியெவ்ன அவனைக்கூடத்தில் சந்தித்து ஜூரியின் வேலை உங்களை மிகவும் பாதித்திருக்கிறது" என்று பிரெஞ்சு பாஷையில் பேசத் தொடங்கினாள்.

"ஆமாம்; என்னை மன்னிக்கவும், இன்று என்மனம் நிம்மதி யாக இல்லை. நான் இங்கு இருந்து மற்றவர்களுக்கு அசௌகர் யம் ஏற்படுத்த விரும்பவில்லை" என்று சொல்லிக்கொண்டே தன் தொப்பியைத் தேடினான்.

"நீங்கள் ஏன் இவ்வளவு வருத்தப்பட வேண்டும்?" என்று கேட்டாள் அவள்.

"தயை செய்து அதையெல்லாம் சொல்லும்படி கேட்கா தீர்கள்."

"எப்பொழுதும் உண்மையேதான் வேண்டும்" என்று நீங்கள் அடிக்கடி சொல்வது ஞாபகம் இருக்கிறது! நீங்கள்

எவ்வளவு கொடிய உண்மைகளை யெல்லாம் சொல்லி யிருக்கிறீர்கள்? இப்பொழுது மாத்திரம் ஏன் சொல்ல மாட்டேன் என்கிறீர்கள்? மிஸ்ஸிக்காகக் கூடச் சொல்ல மாட்டீர்களா? என்று அங்கு வந்த மிஸ்ஸியைச் சுட்டிக் காட்டிக் கேட்டாள்.

"அப்பொழுது நாம் விளையாடிக் கொண்டிருந்தோம். விளையாட்டில் உண்மையைச் சொல்லலாம். ஆனால் உண்மையில் நிஜத்தைச் சொல்ல முடியாத அளவுக்கு நாம் கெட்டவர்கள்—இல்லை—நான் கெட்டவன்" என்று கடு கடுப்பாக பதிலளித்தான் நிக்லியுடாவ்.

அவர்கள் எவ்வளவு கேட்டும் அவன் பதில் சொல்லாமல் விடை பெற்றுக் கொண்டான்.

"நாளை வருவீர்களா?" என்று கேட்டாள் மிஸ்ஸி.

"அனேகமாக வர மாட்டேன்" என்று அவன் பதிலளித்து விட்டுப்போய் விட்டான்.

"அது என்னவாக இருக்கும்? அதைக்கண்டு பிடிக்க வேண்டும். ஏதோ முறிந்த காதல் போலிருக்கிறது" என்றாள் காதரீன் அலெக்ஸியெவ்னா.

"ஏதோ ஆபாஸக்காதல்" என்று சொல்ல மிஸ்ஸி வாயெடுத்தாள். ஆனால் அதைச் சொல்லாமல் "நல்ல காலமும் கெட்ட காலமும் எல்லாருக்குமே வருகின்றன" என்றாள்.

"இவன் கூட ஏமாற்றுவானா?" என்று தனக்குள் நினைத்தாள். "இப்படி நடந்து விட்டது. இது அவனுடைய குற்றம் தான்" என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள். எது எப்படி நடந்து விட்டது என்பது அவளுக்கே தெரியாது. ஆனால் தனக்கு அவன் நம்பிக்கை அளித்திருந்தான் என்பதையும், அவன் அனேகமாக வாக்குறுதியே அளித்திருந்தான் என்பதையும் அவள் உணர்ந்திருந்தாள். அவர்கள் விவாகம் சம்பந்தமாக நிச்சயமாக ஒன்றும் பேசிக் கொள்ள வில்லை. பார்வையும் புன் முறுவலும் தான் பரிமாறிக் கொண்டிருக்கிறார்கள். இருந்தாலும் அவனைத் தனக்கே சொந்தமாக அவள் கருதினாள். அவனை இழப்பது அவளுக்கு மிகவும் கஷ்டமான விஷயமாகத் தோன்றியது.

# 28

நிக்லியுடாவ் வீட்டுக்குத் திரும்பி நடந்த பொழுது, "வெட்கம், மடத்தனம், பயங்கரம், வெட்கம்" என்று தனக்குத்தானே திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்தான். மிஸ்ஸியோடு பேசிக் கொண்டிருந்த பொழுது ஏற்பட்ட மனச் சோர்வு இன்னும் அவனை விட்டு அகல வில்லை. அந்த விஷயத்தைப்பற்றி வெளிப்படையாக நோக்கும் பொழுது தான் செய்தது சரியென்றே தோன்றியது. தன்னைக் கட்டுபபடுத்தக் கூடிய ஒன்றையும் அவன் மிஸ்ஸியிடம் சொல்ல வில்லை. ஆனால் உண்மையில் தான் அவளுக்கே கட்டுப் பட்டிருந்ததை அவன் அறிந்திருந்தான். தான் அவளுக்குச் சொந்தமான வனயிருப்பதாக நம்பிக்கை யூட்டி யிருந்தான். ஆனால் அவளை மணக்க முடியாதென்று இன்று அவனுக்கு மனப்பூர்வமாகத் தோன்றியது.

"வெடகம் — பயங்கரம் — பயங்கரம் — வெட்கம் — என்று அவன் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டான். மிஸ்ஸியோடு தான் கொண்டிருந்த உறவைப்பற்றி மாத்திரமில்லை. உலகத்தில் உள்ள எல்லாவற்றைப் பற்றியுமே அவனுக்கு இத்தகைய உணர்ச்சி தான் ஏற்பட்டது. "எல்லாம் பயங்கரமாக இருக்கின்றன; எல்லாம் வெட்கப் படத்தக்கவையாக இருக்கின்றன" என்று முணு முணுத்துக் கொண்டே வீட்டின் வாசல் தாழ்வாரத்தில் பிரவேசித்தான். "நான் இன்று இரவு சாப்பிடப்போகிறதில்லை" என்று தன் பின்னலேயே சாப்பாட்டு அறைக்கு வந்த வேலைக்காரன் கோர்னேயிடம் சொல்லி விட்டான். சாப்பாட்டு அறையில் மேஜையின் மீது துணி விரிக்கப்பட்டு சாப்பாடு தயாராக இருந்தது. "நீ போகலாம்" என்றான் நிக்லியுடாவ் தன் வேலைக்காரனிடம்.

"சரி சரி" என்றான் கோர்னே. ஆனல் அவன் அங்கிருந்து போகாமல் மேஜையைச் சுத்தம் செய்யத் தொடங்கினான். நிக்லியுடாவ் கடுகடுப்போடு கோர்னேயைப் பார்த்தான். அவனுக்குத் தனியாக இருக்க வேண்டும் போல் தோன்றியது. எல்லாரும் தன்னை ஹிம்ஸிப்பதுபோல் உணர்ந்தான். சாப்பாட்டுச்சாமான்களை கோர்னே எடுத்துக்கொண்டு போனவுடன் நிக்லியுடாவ் சிறிது தேநீர் தயாரிக்கப் போனான். அதற்குள் அக்ரபேனா பெட்ரோவ்னாவின் காலடிச் சப்தம் கேட்டது. அவள் கண்ணில் படாமலிருக்கும் பொருட்டு மற்றோர் அறைக்குள் அவசரமாகச் சென்று கதவை மூடிக் கொண்டான். மூன்று மாதத்திற்கு முன்னல் இந்த அறையில்தான் அவனுடைய தாயார் இறந்து போனாள். அங்கு அவனுடைய தந்தை

யின் படத்திற்கு முன்னுல் ஒரு விளக்கும் தாயின் படத்திற்கு முன்னுல் ஒரு விளக்கும் எரிந்து கொண்டிருந்தன. தன் தாயாரின் கடைசிக் காலத்தில் அவளிடம் தனக்கு இருந்த போலித்தனமான உறவு அவன் ஞாபகத்திற்கு வந்தது. இது வும் வெட்கப்பட்டத் தகுந்ததாகவும் பயங்கரமாகவும் தோன்றி யது. அவள் நோய் வாய்ப் பட்டிருந்த கடைசி காலத்தில், அவள் இறந்து போவது நல்லது என்று அவன் பிரார்த்தித் தான். அவளுக்காகவேதான் இவ்விதம் விரும்புவதாகவும், அவனுடைய கஷ்டங்களிலிருந்து சீக்கிரம் விடுபட வேண்டு மென்றும் நினைத்தான். ஆனுல் உண்மையில் அவள் படும் கஷ்டத்தைப் பார்ப்பதிலிருந்துதான் விடுபட வேண்டும் என்ப தற்காகவே அவன் இவ்விதம் விரும்பினுன்.

அவளைப் பற்றிய சந்தோஷமான சம்பவம் எதையாவது நினைத்துப் பார்க்க விரும்பி படத்தருகே சென்ருன். அந்தப் படம் ஒரு பெரிய சைத்திரிகனுல் தீட்டப் பட்டது. அதற்காக ஐயாயிரம் ரூபிள் செலவாயிற்று. அகன்ற கழுத்தோடு கூடிய கருப்பு வெல்வெட் உடையுடன் படம் தீட்டப்பட்டிருந்தது. வெளிக் கோட்டை விசேஷ கவனத்துடன் தீட்டியிருந்தான் சைத்திரிகன். மார்பின் இடைவெளி, பிரகாசிக்கும் தோள்கள், கழுத்து எல்லாவற்றையும் அழகாகத் தீட்டி யிருந்தான். இந் காட்சி அவனுக்கு வெறுப்பையும் பயங்கர உணர்ச்சியையும் ஊட்டியது. தன் தாய் அரை நிர்வாண அழகியாகத் தீட்டப் பட்டிருந்த காட்சி அவனுக்கு வெறுப்பை அளித்தது. மூன்று மாதங்களுக்கு முன்னுல் இந்த ஸ்திரீ சவம்போல் உலர்ந்து, இந்த அறை மாத்திரமின்றி வீடு முழுமையுமே நாறச் செய்து கொண்டு படுத்திருந்ததை நினைத்தபொழுது இந்த வெறுப்பு இன்னும் அதிகரித்தது. இப்பொழுது கூட அந்த நாற்றம் வருவதுபோல் அவனுக்குத் தோன்றியது. அவள் இறப்பதற் குச் சில தினங்களுக்கு முன்னுல் தன் எலும்புக் கைகளினுல் அவன் கையைப் பற்றிக் கொண்டு, "மித்யா, நான் செய்ய வேண்டியதைச் செய்யத் தவறி யிருந்தால் அதற்காக என்மீது கோபிக்காதே" என்ருள். வேதனையினுல் பஞ்சடைந்து போயி ருந்த அந்தக் கண்களில் எப்படித்தான் நீர் வந்து நிரம்பியது!

பிரகாசமான தோள்களோடும், முகத்தில் வெற்றிச் சிரிப் போடும் அந்த அரை நிர்வாணப் படத்தை மீண்டும் அவன் நிமிர்ந்து பார்த்து, "ஹா! என்ன கோரம்!" என்று சொல்லிக் கொண்டான். பாதி திறந்திருந்த அந்த மார்பு, சில தினங் களுக்கு முன்னுல் தான் சந்தித்த, இதே போல் உடை யணிந் திருந்த மற்றொரு பெண்ணை ஞாபக மூட்டியது. மிஸ்ஸிதான் அந்த பெண். அன்று அவள் இதே போல் உடை யணிந்து பந்தாடப் புறப்பட்டுக் கொண்டிருந்தாள். இந்தக் கோலத்

பூரணத்துவமும் நிறைந்த காற்று அவன்மீது வீசுவதுபோல் தோன்றியது. அவன் வருத்தம் இன்னும் அதிகரித்தது.

முன்பு அவன் இருந்ததற்கும் இப்பொழுது அவன் இருப்பதற்கும் எவ்வளவோ வித்தியாசம். அன்று மாதா கோயிலில் இருந்த காட்யூஷாவுக்கும், இன்று காலை தண்டிக்கப்பட்ட விபசாரி காட்யூஷாவுக்குமிடையில் எவ்வளவு வித்தியாசமோ அவ்வளவு வித்தியாசம் இருந்தது. அன்று அவன் அச்சமின்றி சுதந்திரமாக இருந்தான். அன்று எவ்வளவோ காரியங்களைச் சாதிப்பதற்கான சாத்தியம் அவன் முன்னால் இருந்தது. இன்று உபயோகமற்ற சூன்யமான வாழ்க்கைச் சேற்றில் சிக்கிக் கொண்டிருப்பது போல் அவன் உணர்ந்தான். தான் விரும்பினாலும் இதிலிருந்து மீள முடியாதுபோல் அவனுக்குத் தோன்றியது. ஆனால் அவன் மீள முயற்சிக்கவும் இல்லை. தான் ஒளிவு மறைவு இன்றி நடந்துகொண்டதையும், உண்மையே சொல்வதென்று விரதம் பூண்டு, உண்மையிலேயே சத்தியமாக இருந்ததற்காகப் பெருமைப் பட்டதையும் நினைத்துப் பார்த்தான். இப்பொழுது பயங்கரமான பொய்களில் மூழ்கிக் கிடப்பதும் அவன் ஞாபகத்திற்கு வந்தது. இந்தப் பொய்களிலிருந்து வெளியேற மார்க்கம் இருப்பதாகவே அவனுக்குத் தோன்றவில்லை.

மேரி வாஸிலியெவ்னு, அவளுடைய கணவன் முதலியவர்களின் முகத்தில் மீண்டும் விழிக்கக்கூடிய முறையில் அவர்களுடன் உள்ள உறவை எப்படி அறுத்துக்கொள்வது? மிஸ்ஸியிடமிருந்து விடுபடுவது எப்படி? நிலம் வைத்துக்கொள்வது தவறென்று அவன் ஒப்புக்கொண்டிருந்தும், தன் தாயிடமிருந்து கிடைத்த நிலத்தை வைத்துக்கொண்டிருக்கும் முரண்பாட்டிலிருந்து தப்புவது எங்ஙனம்? காட்யூஷா விஷயத்தில் அவன் செய்த பாபத்திற்குப் பிராயச்சித்தம் என்ன? மற்றவை எப்படியிருந்தாலும் இந்தக் கடைசிக் கேள்வியை அப்படியே விட முடியவில்லை. தான் காதலித்த ஒரு பெண்ணைக் கடுங்காவல் தண்டனையிலிருந்து விடுவிப்பதற்காகப் பணம் கொடுத்து அதோடு விட்டுவிட அவன் விரும்பவில்லை. அவள் கடுங்காவல் தண்டனை பெறவேண்டியவளே அல்ல. நூறு ரூபா பணம் கொடுப்பதனாலா பிராயச்சித்தம்? முன்பு அவளுக்கு அவன் பணம் கொடுத்தபொழுது பிராயச்சித்தம் செய்துகொள்வதாக அவன் நினைக்கவில்லையா?

அன்று நடைபாதையில் அவளை நிறுத்தி, பணத்தை அவளிடம் திணித்துவிட்டு ஓடியது அவன் நினைவுக்கு வந்தது. "ஓ அந்தப் பணம்!" என்று பயங்கர உணர்ச்சியோடு நினைத்துப் பார்த்தான். "ஐயோ, ஐயோ! எவ்வளவு வெறுக்கத் தகுந்த விஷயம்! அயோக்கியன்தான் அப்படிச் செய்வான். நான்—நான் அயோக்கியன்தான்!" என்று உரக்கச் சொல்லிக்

வேண்டும் என்பதற்காக
இல் நிக்லியுடாவ் தன்னைப் பார்க்க
ஏதோ ஒரு காரணத்தைச் சிருஷ்டித்துக் கொண்டு அவனைத்
தன் அறைக்குள் அழைத்தாள். அவளுடைய அழகிய
தோள்களையும் கையையும் நினைத்த பொழுது அவனுக்கு
வெறுப்பாகத்தான் இருந்தது. "மிருகத்தனமான அவளுடைய
முரட்டுத் தந்தையும், கொடுமை நிறைந்த அவளுடைய துர்
வாழ்க்கையும், துர்நடத்தையோடு கூடிய அவளுடைய தாயும்"
எல்லாம் அருவையும் வெட்கமும் உண்டாக்கின.

"வெட்கம் — பயங்கரம் — பயங்கரம் — வெட்கம்" என்று
மீண்டும் சொல்லிக் கொண்டான் நிக்லியுடாவ்.

"இல்லை, இல்லை; எனக்குச் சுதந்திரம் வேண்டும். கோர்ச்
சாகின் குடும்பத்துடன் உள்ள இந்த போலிபாந்தவ்யத்திலிருந்
தும், மேரிவாஸிலியெவ்னா விடமிருந்தும், என் பிதிரார்ஜிதத்தி
லிருந்தும் மற்றெல்லாவற்றி லிருந்தும் நான் விடுதலை பெற
வேண்டும். ஐயோ! நான் சுயேச்சையாக மூச்சு விட வேண்டும்.
வெளி நாடு எதற்காவது—ரோமுக்குச் செல்ல வேண்டும்.
சித்திரம் தீட்ட வேண்டும்" என்று நினைத்தான். தன் சித்திரத்
திறமையில் அவனுக்குச் சந்தேகம் வந்தது. "இருக்கட்டும்
பாதகமில்லை. சுயேச்சையாக மூச்சு விடுவதற்குத்தானே! முத
லில் கான்ஸ்டான்டி நோபிளுக்கு—பிறகு ரோமுக்கு, பிறகு
வக்கீலிடம் ஏற்பாடு செய்ய வேண்டும்" என்று நினைத்தான்.

காடுஷாவின்
உடனே, கைதியாக நின்றுகொண்டிருந்த
கருவிழிகளும், கடைசி வாக்குமூலம் கொடுக்கும்படி நீதிபதி
கேட்டவுடன் அவள் கதறி அழுத காட்சியும் சித்திரம்போல்
அவன் மனத்தின் முன்னால் தோன்றின. தன் கையில் இருந்த
ஸிகரெட்டைப் பரபரப்போடு சாம்பல் கூட்டிற்குள் திணித்து
விட்டு, வேறொரு ஸிகரெட்டை எடுத்துப் பற்றவைத்துக்
கொண்டு அந்த அறையில் குறுக்கும் நெடுக்கும் நடந்தான்.
அவளோடுதான் இருந்த காலத்தில் நடந்த சம்பவங்களின்
காட்சிகள் ஒவ்வொன்றாக அவன் மனக்கண்முன் எழுந்து
எழுந்து மறைந்தன. ஈஸ்டர் தினத்தன்று அதிகாலையில்
வெள்ளை உடை தரித்திருந்த அவளுடைய தோற்றம் அவன்
நினைவுக்கு வந்தது. 'ஏன்? நான் அவளைக் காதலிக்கத்தான்
செய்தேன். அன்று இரவு நான் அவள்மீது பரிசுத்தமாக
காதல்தான் செலுத்தினேன். அதற்கு முன்பே, நான் அவ
ளைக் காதலித்தேன். ஆமாம்! வியாஸம் எழுதுவதற்காக நான்
முதல்முறை என் அத்தைவீட்டுக்குப் போய்த் தங்கியிருந்த
பொழுதே அவளைக் காதலித்தேன்." என்று சொல்லிக்கொண்
டான். அப்பொழுது தான் இருந்த மாதிரியை நிக்லியுடாவ்
நினைத்துப் பார்த்தான். அந்தப் புதுமையும், இளமையும்,

பூரணத்துவமும் நிறைந்த காற்று அவன்மீது வீசுவதுபோல் தோன்றியது. அவன் வருத்தம் இன்னும் அதிகரித்தது.

முன்பு அவன் இருந்ததற்கும் இப்பொழுது அவன் இருப்பதற்கும் எவ்வளவோ வித்தியாசம். அன்று மாதாகோயிலில் இருந்த காடுஷாவுக்கும், இன்று காலை தண்டிக்கப்பட்ட விபசாரி காடுஷாவுக்கு மிடையில் எவ்வளவு வித்தியாசமோ அவ்வளவு வித்தியாசம் இருந்தது. அன்று அவன் அச்சமின்றி சுதந்திரமாக இருந்தான். அன்று எவ்வளவோ காரியங்களைச் சாதிப்பதற்கான சாத்தியம் அவன் முன்னால் இருந்தது. இன்று உபயோகமற்ற சூன்யமான வாழ்க்கைச் சேற்றில் சிக்கிக் கொண்டிருப்பது போல் அவன் உணர்ந்தான். தான் விரும்பினாலும் இதிலிருந்து மீளமுடியாதுபோல் அவனுக்குத் தோன்றியது. ஆனால் அவன் மீள முயற்சிக்கவும் இல்லை. தான் ஒளிவு மறைவு இன்றி நடந்துகொண்டதையும், உண்மையே சொல்வதென்று விரதம் பூண்டு, உண்மையிலேயே சத்தியமாக இருந்ததற்காகப் பெருமைப் பட்டதையும் நினைத்துப் பார்த்தான். இப்பொழுது பயங்கரமான பொய்களில் மூழ்கிக் கிடப்பதும் அவன் ஞாபகத்திற்கு வந்தது. இந்தப் பொய்களிலிருந்து வெளியேற மார்க்கம் இருப்பதாகவே அவனுக்குத் தோன்றவில்லை.

மேரி வாஸிலியெவ்ஞ, அவளுடைய கணவன் முதலியவர்களின முகத்தில் மீண்டும் விழிக்கக்கூடிய முறையில் அவர்களுடன் உள்ள உறவை எப்படி அறுத்துக்கொள்வது? மிஸ்ஸியிடமிருந்து விடுபடுவது எப்படி? நிலம் வைத்துக்கொள்வது தவறென்று அவனே ஒப்புக்கொண்டிருந்தும், தன் தாயிடமிருந்து கிடைத்த நிலத்தை வைத்துக்கொண்டிருக்கும் முரண்பாட்டிலிருந்து தப்புவது எங்ஙனம்? காடுஷா விஷயத்தில் அவன் செய்த பாபத்திற்குப் பிராயச்சித்தம் என்ன? மற்றவை எப்படி யிருந்தாலும் இந்தக் கடைசிக் கேள்வியை அப்படியே விட முடியவில்லை. தான் காதலித்த ஒரு பெண்ணைக் கடுங் காவல் தண்டனையிலிருந்து விடுவிப்பதற்காகப் பணம் கொடுத்து அதோடு விட்டுவிட அவன் விரும்பவில்லை. அவள் கடுங்காவல் தண்டனை பெறவேண்டியவளே அல்ல. தவறுக்குப் பணம் கொடுப்பதன்மூலம் பிராயச் சித்தமா? முன்பு அவளுக்கு அவன் பணம் கொடுத்தபொழுது பிராயச் சித்தம் செய்துகொள்வதாக அவன் நினைக்கவில்லையா?

அன்று நடைபாதையில் அவளை நிறுத்தி, பணத்தை அவளிடம் திணித்துவிட்டு ஓடியது அவன் நினைவுக்கு வந்தது. "ஓ அந்தப்பணம்!" என்று பயங்கர உணர்ச்சியோடு நினைத்துப் பார்த்தான். "ஐயோ, ஐயோ! எவ்வளவு வெறுக்கத் தகுந்த விஷயம்! அயோக்கியன்தான் அப்படிச் செய்வான். நான்—நான் அயோக்கியன்தான்!" என்று உரக்கச் சொல்லிக்

கொண்டான். "ஆனால் நான் அயோக்கியன் தானா?" என்று சற்று ஸ்தம்பித்து நின்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டான். "அயோக்கியனில்லாமல் வேறென்ன?" என்று தானே பதிலும் சொல்லிக்கொண்டான். மேரி வாஸிலியெவ்னாவிடமும் அவளுடைய கணவனிடமும் நான் நடந்துகொண்ட விதம் மிகவும் கேவலமில்லையா? பணவிஷயத்தில் நான் காட்டும் மனோபாவம்? பணம் என் தாய்மூலம் கிடைத்தது என்பதால் அதை உபயோகிப்பது சட்ட விரோதம் என்று நான் நினைக்கவில்லையா? என்னுடைய சோம்பேறி வாழ்க்கை? அற்பஅயோக்கியன்! அவர்கள் எப்படி வேண்டுமானாலும் என்னைப்பற்றி முடிவு செய்து கொள்ளட்டும். அவர்களை நான் ஏமாற்றலாம். ஆனால் என்னை நான் ஏமாற்றிக்கொள்ள முடியாது."

இன்று எல்லாரையும் தான் வெறுத்ததற்குக் காரணம் தன்மீதே ஏற்பட்ட வெறுப்புத்தான் என்பதை அவன் திடீரென்று அறிந்தான். தன் அற்பத்தனத்தை அவன் உணர்ந்தபொழுது சிறிது வருத்தமாக இருந்தபோதிலும் ஒருவித சந்தோஷமும் சாந்தியும் ஏற்பட்டன.

நிக்லியுடாவ் தன் வாழ்க்கையில் பலமுறை "ஆத்ம சுத்தம்" செய்து கொண்டிருக்கிறான். நீண்டகாலம் அசுத்த வாழ்க்கை நடத்தியபின் அத்தகைய வாழ்க்கையை நிறுத்திவிட்டு, தன் உள்ளத்தில் சேர்ந்து கிடக்கும் அசுத்தங்களை ஒழிப்பதைத்தான் அவன் "ஆத்ம சுத்தம்" என்று சொல்லிக்கொள்வது வழக்கம். அவ்விதம் ஞானோதயம் பெற்றபின் சில விதிகளை நிர்ணயித்துக் கொண்டு எப்பொழுதும் அவற்றை அனுஷ்டிப்பதென்று தீர்மானித்துக் கொள்வான். டைரியிலும் இதை எழுதுவான். மறுபடியும் வாழ்க்கை முறையை மாற்றுவதில்லை என்ற உறுதியோடு புதுவிதமான வாழ்க்கையைத் தொடங்குவான். "புதிய பக்கத்தைத் திருப்பியாகிவிட்டது" என்று தனக்குத்தானே சொல்லிக்கொள்வான். ஆனால் ஒவ்வொரு முறையும் உலக ஆசாபாசங்கள் அவனைக் கௌவிக்கொள்ளும். அவன் அதைக் கவனிக்காமலே முன்னைக்காட்டிலும் அதிக ஆழத்தில் வீழ்ந்துவிடுவான்.

இது போல் பலமுறை அவன் ஞானோதயம் பெற்றிருக்கிறான். கோடைகாலத்தில் அவன் தன் அத்தை வீட்டில் தங்கியிருந்தபொழுது பெற்றதுதான் முதல் ஞானோதயம். அதன் சக்தி சிறிது காலம் வரை இருந்தது. அவன் ராணுவத்தை விட்டு சித்திரம் தீட்டுவதற்காக வெளிநாடு சென்றது முதல் இதுவரை கழிந்த நீண்டகாலத்தில் "ஆத்மசுத்தி" செய்து கொள்ளவேயில்லை. ஆகையால் அவனுடைய மனச்சாட்சியின் விருப்பத்திற்கும், அவன் நடத்தி வந்த வாழ்க்கைக்குமிடையில் இருந்த வித்தியாசம் முன் எப்பொழுதையும் காட்டி

லும் இப்பொழுது அதிகமாக இருந்தது. இவ்வளவு பிரம் மாண்டமான வித்தியாசம் இருப்பதைக் கண்டு அவன் பிரமித்துப் போனான். இதை ஒழிக்க முடியுமா என்றுகூட அவன் சற்றுத் திகைத்தான். “உன்னைச் சீர்திருத்திக் கொள்ள இதற்கு முன்னால் நீ முயன்றதில்லையா? அதனால் ஒன்றும் நடக்கவில்லையே! மறுபடியும் அதையே செய்வதில் பலன் என்ன? நீ ஒருவன் தான் இப்படி இருக்கிறாயா? எல்லாரும் ஒரே மாதிரிதான் இருக்கிறார்கள். வாழ்க்கையே அப்படித்தான்” என்றது உணர்ச்சியின் குரல். ஆனால் நிக்லியுடாவுக்குள் அடங்கியிருந்த உண்மையான, சக்திவாய்ந்த, அமரத்துவம் படைத்த ஜீவாத்மா விழித்துக் கொண்டு விட்டது. அவனால் அதை நம்பாமல் இருக்க முடியவில்லை. அவன் இருக்க விரும்பிய நிலைக்கும், அவன் இப்பொழுது இருக்கும் நிலைக்குமிடையில் அதிக தூரம் இருந்தபோதிலும், அடைய முடியாதது ஒன்றுமில்லை என்று அந்த ஜீவாத்மா கூறியது.

“என்னைப் பிணைத்துக்கொண்டுள்ள இந்தப் பொய்யைத் தகர்த்து எறிவேன். எல்லாரிடமும் உண்மையைச் சொல்லி உண்மயாக நடந்துகொள்வேன்.” என்று அவன் உறுதியுடன் கூறிக்கொண்டான். மிஸ்ஸியிடம் உண்மையைச் சொல்லி அவளை மணக்க முடியாதென்று அறிவித்து விடுகிறேன். மேரி வாஸிலியெவ்னாவிடம் சொல்கிறேன்...ஓ! அவளிடம் சொல்வதற்கு ஒன்றுமில்லை. அவளுடைய கணவனிடம், அயோக்கியனாகிய நான், அவனை இதுவரை ஏமாற்றி வந்ததாகச் சொல்லிவிடுகிறேன். உண்மையை உணரும் முறையில் என் சொத்துக்களைப் பகிர்ந்து கொடுத்து விடுகிறேன். காடுஷாவிடம் சென்று, நான் அயோக்கியனென்றும், அவளிடம் பாவம் செய்துவிட்டேன் என்றும், அவளுடைய கஷ்டத்தைக் குறைக்க என்னால் இயன்றதையெல்லாம் செய்யப்போகிறேன் என்றும் சொல்கிறேன். ஆமாம். அவளைச் சந்தித்து, என்னை மன்னிக்குமபடி அவளைக் கேட்டுக்கொள்கிறேன். ஆம்! குழந்தைகளைப்போல மன்னிப்புக் கோருகிறேன்” என்று சொல்லிவிட்டு சற்று நின்றான். “அவசியமானால் அவளையே மணந்து கொள்ளவும் செய்கிறேன்” என்று சொல்லிக்கொண்டு கையைக் கட்டிக் கொண்டு, விழிகளை மேலே உயர்த்தி, யாரையோ பார்ப்பது போல் பார்த்துக்கொண்டு, “பகவானே, எனக்கு உதவி செய், உபதேசம் செய், வா, என்னுள்வந்து புகுந்து கொண்டு என்னைச் சுத்தம் செய்” என்றான்.

தன்னுள் வந்து புகுந்து தன்னைச் சுத்தம் செய்யும்படி அவன் கடவுளிடம் பிரார்த்தித்தான். ஆனால் அவன் கேட்பதற்கு முன்னாலேயே அது நடந்துவிட்டது; அவனுக்குள் அடங்கியிருந்த கடவுள் அவன் உணரும்படி விழித்துக்கொண்

டார். அவரோடு தான் ஐக்கியமாகியிருப்பதை உணர்ந்தான். நிக்லியுடாவ் வாழ்க்கையின் சுதந்திரம், ஆனந்தம், சாதாரணத்துவம் ஆகியவற்றை உணர்ந்தான். மனிதன் என்னென்ன உன்னதமான காரியங்களைச் செய்யமுடியுமோ அத்தனையையும் தான் செய்யமுடியுமென்று அவனுக்குத் தோன்றியது. அவன் கண்களில் ஆனந்த பாஷபம் நிறைந்தது,

அவன் உடம்பு உஷ்ணமாக இருந்தது. ஜன்னல் அருகே சென்று கதவுகளைத் திறந்தான். ஜன்னல், தோட்டத்தின் பக்கமாக இருந்தது. பால்போன்ற நிலவில் எங்கும் நிசப்தம் நிலவியது. சலசலவென்று சப்தம் செய்துகொண்டே குறுக்கே ஏதோ ஒன்று ஓடியது. மீண்டும் நிசப்தம் குடிகொண்டது. ஜன்னலுக்கு எதிரே உள்ள ஒரு போப்ளார் மரத்தின் நிழல் பூமியில் கோலம் போட்டாற்போல் படர்ந்திருந்தது. இடது பக்கத்தில் ஒரு வீட்டின் கூரை, நிலவில் வெளேரென்று பிரகாசித்தது. அந்தக் கூரையையும், நிலவு படிந்த தோட்டத்தையும், போப்ளார் மரத்தின் நிழலையும் நிக்லியுடாவ் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான். உணர்ச்சியூட்டும் புதுக்காற்றை அவன் நிரம்ப உள்ளுக்கு இழுத்தான்.

"என்ன ஆனந்தம்! என்ன ஆனந்தம்! பகவானே. என்ன ஆனந்தம்!" என்று சொல்லிக்கொண்டான்.

## 29

காடுஷா மாலை ஆறு மணிக்குத்தான் சிறைக்குப்போய்ச் சேர்ந்தாள். அதிக தூரம் நடந்து பழக்கமில்லாத அவள் கல்லும் கரடுமான அந்த ரஸ்தாவில் அன்று கால்கடுக்க பத்துமைல் தூரம் நடந்ததால் களைத்துப் போய்விட்டாள், அவள் எதிர்பாராத கடுந்தண்டனையினால் நசுங்கி, பசியினால் வாடிப்போய் விட்டாள்.

சாப்பாட்டு வேளைக்கு கோர்ட் கலைந்தபொழுது அவள் அருகே இருந்த சோல்ஜர்கள் ரொட்டியும் வேகவைத்த முட்டையும் சாப்பிட்டுக்கொண்டிருந்தார்கள்.

அதைக்கண்ட அவளுக்கு நாக்கில் தண்ணீர் ஊறியது. அவளுக்கும் பசியாகத்தான் இருந்தது. ஆனால் அவர்களிடம் உணவுப் பிச்சை கேட்பது அவளுக்கு கௌரவக் குறைவாகத் தோன்றியது. மூன்று மணிநேரம் சென்ற பின் சாப்பிடவேண்டும் என்ற உணர்ச்சி போய்விட்டது. உடம்பு பலவீனமாக

இருப்பது ஒன்றுதான் அவளுக்குத் தெரிந்தது. அப்பொழுதுதான் தனக்கு விதிக்கப்பட்ட எதிர்பாராத தண்டனையை அவள் கேட்டாள். தான் தப்பு அர்த்தம் செய்துகொண்டுவிட்டதாக முதலில் அவளுக்குத் தோன்றியது. தான் ஸைபீரியாவில் கைதியாக இருப்பதைக் கற்பனை செய்யக்கூட அவளால் முடியவில்லை. ஆகையால் தான் கேட்டதைக் கூட அவளால் நம்பமுடியவில்லை. இது இயற்கையே என்றும், எதிர்பார்க்கப்பட்டதே என்றும் நினைத்து கோர்ட்டில் உட்கார்ந்திருந்தவர்களின் முகபாவத்தைக் கண்டபொழுது தான் அவளுக்கு ஆத்திரம் மூண்டது. தான் நிரபராதி என்று கதறினாள். கோர்ட்டில் தன்னை அனுதாபத்தோடு விரைத்துப் பார்த்த இளைஞர்கள் கூட தன்னைக் கண்டித்ததைக் கண்டு அவள் ஆச்சரியமடைந்தாள். அவளுடைய கூச்சலும் இயற்கையானதே என்று கோர்ட்டில் இருந்தவர்கள் நினைத்தனர். இதனால் ஒரு பயனும் கிடைக்காது என்றும், இந்த அநியாய தண்டனைக்குத் தான் பணிந்துதான் ஆக வேண்டும் என்பதையும் அவள் அறிந்தபொழுது நம்பிக்கை இழந்து அழுதாள். பிறகு துக்கத்தை அடக்கிக்கொண்டு கைதிகளின் அறையில் பிரமித்துப் போய் உட்கார்ந்துவிட்டாள். புகை குடிக்க வேண்டும் என்ற ஒரே ஒரு எண்ணம் தான் இப்பொழுது அவளுக்குத் தோன்றியது. இந்த நிலையில் தண்டனைபெற்ற போச்கோவாவும் கார்ட்டின்கின்னும் அதே அறைக்கு அழைத்து வரப்பட்டனர். போச்கோவா உடனே அவளைத் திட்டத் தொடங்கினாள்.

காடுஷா முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். "நான் உன்னைத் தொந்தரவு செய்யவில்லை. அதே போல் நீயும் என்னைத் தொந்தரவு செய்யாதே" என்று மாத்திரம் அவள் போச்கோவாவுக்குப் பதில் அளித்தாள். "நான் உன்னைத் தொந்தரவு செய்யவில்லை; செய்கிறேனா?" என்று அவள் திரும்பக் கேட்டுவிட்டு மௌனத்தில் ஆழ்ந்தாள். போச்கோவாவையும் கார்ட்டின்கின்னையும் ஒரு சேவகன் அங்கிருந்து அழைத்துச் சென்றபொழுது அவள் முகம் பிரகாசம் அடைந்தது. ஒரு சேவகன் வந்து மூன்று ரூபிள்களை அவளிடம் கொடுத்துவிட்டு, "ஒரு ஸ்திரீ இதை உன்னிடம் கொடுக்கச் சொன்னாள்" என்றான்.

"ஸ்திரீயா? எந்த ஸ்திரீ?" என்றாள் காடுஷா.

"இதை எடுத்துக்கொள். உன்னோடு பேசிக்கொண்டிருக்க முடியாது" என்று சேவகன் அதை அவளிடம் கொடுத்துவிட்டுப் போய்விட்டான். விபசார விடுதியின் தலைவியாகிய கிடேவா அதிகாரிகளின் அனுமதியோடு அதைக் காடுஷாவிடம் கொடுக்குமாறு அனுப்பிவிட்டுப் போயிருந்தாள். போச்கோ

வாவும் கார்ட்டின்கின்னும் அங்கிருந்து போனதாலும், சேவகன் பணம் கொண்டுவந்து கொடுத்ததாலும் அவளுடைய முகம் சிறிது பிரகாசமடைந்தது.

இடேவா அதைக் கொடுத்துவிட்டு, "தயவுசெய்து அதை ஜாக்கிரதையாகக் கொண்டுபோய்க் கொடு" என்றாள் அவளுடைய அவநம்பிக்கையைக் கண்டு வேலைக்காரனுக்குக் கோபம் வந்தது. அதனால்தான் அவன் காடுஷாவிடம் அவ்வளவு சிடுசிடுப்பாக பதிலளித்தான்.

பணம் வந்ததைப் பற்றி காடுஷா மிகவும் சந்தோஷப்பட்டாள். அவளுக்கு மிகவும் தேவையாக இருந்த ஸிகரெட்டை வாங்கலாம். புகை குடிக்க வேண்டும் என்பதில் தான் அவளுடைய ஞாபகம் முழுமையும் இருந்தது.

மாலையில் ஐந்து மணிக்கு மேல் தான் காடுஷா அங்கிருந்து அழைத்துச் செல்லப்பட்டாள். ஒரு காவல்காரனிடம் பணம் கொடுத்து கொஞ்சம் ரொட்டியும் ஸிகரெட்டும் வாங்கிக் கொண்டு வரச்சொன்னாள். அவன் அவ்விதமே வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தான். திரும்பவும் அவள் சிறைக்கு அழைத்துச் செல்லப்பட்டாள். தண்டனை பெற்ற புதிய கைதிகள் அப்பொழுதுதான் ரயிலில் வந்து இறங்கியிருந்தனர். சில கைதிகள் காடுஷாவைக் கண்டு கண் அடிப்பதும், சேஷ்டைகள் செயவதுமாக இருந்தார்கள், சிறை அதிகாரிகள் காடுஷாவைச் சோதித்தனர். ஆக்ஷேபகரமான ஒன்றும் அவளிடம் இல்லை என்று தெரிந்தபின் காலையில் அவள் விட்டுச் சென்ற அறைக்குள்ளேயே மீண்டும் அடைக்கப்பட்டாள்.

# 30

**கா**டுஷா அடைக்கப்பட்ட அறை இருபத்தோரு அடி நீளமும் பதினாறு அடி அகலமும் இருந்தது. அதில் இரு ஜன்னல்கள் இருந்தன. குளிர்காயும் கணப்பு ஒரு பக்கம் இடிந்து கிடந்தது. அறையில் பெரும் பகுதியை பலகைப் படுக்கைகள் அடைத்துக் கொண்டிருந்தன. கதவுக்கு எதிரே மெழுகுவத்தியோடு கூடிய குளோப் தொங்கிக்கொண்டிருந்தது. இடது பக்கத்தில் கதவுக்குப் பின்னால் நாற்ற மடிக்கும் தொட்டி ஒன்று இருந்தது. பெண்கள் அந்த அறைக்குள் விட்டுப் பூட்டப்பட்டனர்.

இந்த அறையில் மூன்று குழந்தைகள் உள்பட பதினைந்து பேர் இருந்தனர். இன்னும் வெளிச்சம் இருந்தது. இரண்டு பேர்

தான் படுத்துக்கொண்டிருந்தார்கள். ஒருத்தி க்ஷயரோகி இருமலை அடக்கிக் கொள்வதற்காகத் துணியைச் சுற்றித் தலைமாட்டில் வைத்துக்கொண்டு படுத்திருந்தாள். அவள் தூங்கவில்லை. கண்களை அகல விழித்துக்கொண்டுதான் இருந்தாள். மற்றவள் ஒரு அசடு. பாஸ்போர்ட் வைத்துக்கொள்ள வில்லை என்பதற்காக தண்டிக்கப் பட்டவள். அவள் அனேகமாக எப்பொழுதும் தூங்கிக்கொண்டே யிருந்தாள்.

மற்றும் சிலர் ஜன்னலுக்கு வெளியே பார்த்துக்கொண்டிருந்தனர். மூன்று பேர் உட்கார்ந்து ஏதோ பின்னல் வேலை செய்து கொண்டிருந்தனர். காலையில் காடுஷாவை வழியனுப்பிய கிழவியும் இவர்களில் ஒருத்தி. இவள் பெயர் கோரா பிளேவா. உயரமாகவும், கண்டிப்பான தோற்றத்துடனும் இருந்தாள். கோடரியால் தன் கணவனைக் கொன்றதாக இவளுக்கு ஸைபீரியாவில் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருந்தது. அந்தச் சிறையில் இருந்த பெண்களுக்கெல்லாம் அவள்தான் ''தலைவி'' அவள் பக்கத்தில் மற்றொருத்தி உட்கார்ந்திருந்தாள். அவள் ஒரு சாக்கைத் தைத்துக்கொண்டிருந்தாள், இவள் ஒரு ரயில்வே காவல்காரனின் மனைவி. ரயில் வரும்பொழுது இவள் கொடிகாட்டவில்லை. இதனால் ஒரு விபத்து நேர்ந்துவிட்டது. இதற்காக அவளுக்கு மூன்றுமாத சிறை தண்டனை விதிக்கப்பட்டிருந்தது. இவள் எப்பொழுதும் பேசிக்கொண்டே யிருந்தாள். இவர்களோடு மற்றொரு பெண்ணும் உட்கார்ந்திருந்தாள். அவள் கண்கள் பிரகாசமாக இருந்தன. தன் கணவனுக்கு விஷம் வைக்க முயன்றதாக இவளுக்கு தண்டனை விதிக்கப்பட்டிருந்தது. கல்யாணமான வுடனேயே இவள் இப்படிச் செய்தாளாம். இவளுடைய பதினாறுவது வயதில் இவள் இஷ்டத்திற்கு விரோதமாக இவளுக்குக் கல்யாணம் செய்து வைத்தார்களாம். இவள் ஜாமீனில் விடுதலையாகியிருந்த எட்டுமாத காலத்தில் தன் கணவன்மீது இவளுக்குக் காதல் ஏற்பட்டு விட்டது. அவளுடைய வழக்கு விசாரணைக்கு வந்தபொழுது அவர்கள் இணைபிரியாத காதலர்களாகி விட்டார்கள். அவளுடைய மாமியாருக்கும் அவள்மீது அளவில்லாத பிரியம். அவன் விடுதலையாவதற்கு என்னவெல்லாம் சாத்தியமோ அதையெல்லாம் செய்தார்கள். ஆனால் கோர்ட்டார் அவளுக்கு தீவாந்திர சிக்ஷை விதித்தனர். தியோடாஸியா என்ற இந்தப் பெண்ணின் படுக்கை, காடுஷாவின் படுக்கைக்குப் பக்கத்தில் இருந்தது. காடுஷாமீது இவளுக்கு ரொம்பப் பிரியம். அவளுக்கு வேண்டிய சிசுருஷையெல்லாம் இவளே செய்து வந்தாள். மற்றும் இரு பெண்கள் ஒரு வேலையும் செய்யாமல் தங்கள் படுக்கைகளில் உட்கார்ந்திருந்தனர். இளைத்துப்போன வெளிறிய முகத்தோடு ஒருத்தி உட்கார்ந்திருந்தாள். ஒரு காலத்தில் இவள் நல்ல அழகியாக இருந்திருப்பாள்.

இவள் குழந்தையை, எலும்புக்கூடுபோன்ற தன் மார்பில் அணைத்துக்கொண் டிருந்தாள். மற்றொருத்தி கூன் கிழவி. அவளுக்கு எதிரே சிரித்துக்கொண்டு உட்கார்ந்திருந்த ஒரு நான்கு வயதுச் சிறுவனை அவள் பிடிக்க முயன்றுகொண் டிருந்தாள். இவர்களைத் தவிர மற்றும் நான்குபேர், திறந்த ஜன்னல் ஒன்றின் அருகே நின்றிருந்தனர்.

# 31

கதவின் தாழ்ப்பாள் கலகலவென்று ஒலித்தது. காடுஷா உள்ளே வந்தாள். எல்லாரும் அவள் பக்கம் திரும்பினர்.

கோரபிளேவா பின்னல் போடுவதை றுத்திவிட்டு, தன் மூக்குக் கண்ணாடி வழியாக காடுஷாவைப் பார்த்து, "திரும்பி வந்து விட்டாயா? உன்னை விட்டு விடுவார்கள் என்று நினைத்தேன்" என்று தன் கட்டைத் தொண்டையில் கூறினாள்.

"விட்டு விடுவார்கள் என்று தான் நானும் நினைத்திருந்தேன். அப்படியும் நடப்பதுண்டு. எல்லாவற்றிற்கும் அதிர்ஷ்டம் வேண்டும்" என்றாள் ரயில்வே காவல்காரனின் மனைவி.

"உன்னை தண்டிக்கவா செய்து விட்டார்கள்?" என்றாள் தியோடாஸியா. அவளுக்கு துக்கமே வந்து விடும்போல் இருந்தது. காடுஷா ஒருவருக்கும் பதில் சொல்லாமல் தன்னுடைய இடத்திற்குப் போய் கோராப்ளேவாவின் பக்கத்தில் உட்கார்ந்தாள்.

தியோடாஸியா எழுந்து காடுஷாவின் பக்கத்தில் வந்து, "ஏதாவது சாப்பிட்டாயா?" என்று கேட்டாள்.

காடுஷா இதற்கும் பதில் சொல்லாமல் தன் தலையில் கட்டிக்கொண்டிருந்த கை குட்டையையும், தும்பு படிந்த தன் மேல் அங்கியையும் அகற்றினாள். குழந்தையோடு விளையாடிக்கொண்டிருந்த கிழவி காடுஷாவுக்கு எதிரே வந்து நின்றுகொண்டு "த்ஸொ த்ஸொ, த்ஸொ" என்று சப்புக் கொட்டிக்கொண்டு அனுதாபத்தோடு அவளைப் பார்த்தாள். பையனும் அவளோடு கூடவே வந்து, காடுஷா கொண்டு வந்திருந்த ரொட்டித்துண்டுகளை முறைத்துப் பார்த்தான். இவற்றையெல்லாம் காடுஷாவால் தாங்க முடியவில்லை. துக்கம் வந்துவிட்டது.

"நல்ல வக்கீல் வைக்க வேண்டு மென்று நான் அப்பொழுதே சொல்ல வில்லையா? போகட்டும், என்ன தண்டனை? தீவாந்திர சிக்ஷையா?" என்று கேட்டாள் கோராபிளேவா.

காடுஷாவால் பதில் சொல்ல முடிய வில்லை. அவள் ரொட்டிக்கு அடியில் மறைத்து வைத்திருந்த ஒரு சிகரெட் பெட்டியை எடுத்து கோராபிளேவாவிடம் கொடுத்தாள். காடுஷா பணத்தை இப்படி வீணுக்குவதை விரும்பாதவள் போல் அவள் தலையை ஆட்டினுள். ஆனுல் உடனே ஒரு சிகரெட்டை வெளியே எடுத்து விளக்கில் பற்ற வைத்து ஒரு மூச்சு இழுத்தாள். அழுது கொண்டே யிருந்த காடுஷா, கையை ஆர்வத்தோடு உள்ளுக்கு இழுத்தாள்.

"அந்தக் கொலைபாதகர்களுக்குக் கடவுளிடம் பயமே யில்லையா? ஒன்று மில்லாததற்கு ஒரு தண்டனையா?" என்று முணுமுணுத்தாள் கோராபிளேவா. இந்த சமயத்தில், ஜன்னல் அருகே நின்றிருந்த பெண்கள் கூக்குரலிட்டுச் சிரித்தார்கள். வெளியே ஒரு கைதி செய்த ஏதோ சேஷ்டையைப் பார்த்து விட்டுத்தான் அவர்கள் அப்படிச் சிரித்தார்கள்.

"எதற்காக இப்படிச் சிரிக்கிருர்கள்?" என்று கோராபிளேவா கேட்டுவிட்டு, காடுஷாவை நோக்கி, "எத்தனை வருஷம்" என்று கேட்டாள்.

"நாலு வருஷம்" என்ருள் காடுஷா. அவள் கன்னங்களில் தாரை தாரையாகக் கண்ணீர் வழிந்தது. ஒரு சொட்டு கண்ணீர் ஸிகரெட் மீதும் விழுந்ததால் அதைக் கசக்கி எறிந்து விட்டு, மற்ருெரு ஸிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்தாள். ரயில்வே காவல் காரனின் மனைவி புகை குடிப்பதில்லை யானுலும், அவள் எறிந்த ஸிகரெட்டை எடுத்து நீட்டி ஒழுங்கு படுத்தினுள். காடுஷாவை விட்டு விடுவார்களென்று கோரபிளேவா சொன்னுள்; "விடமாட்டார்கள், தண்டனை கொடுத்து விடுவார்களென்றுதான் எனக்குத் தோன்றுகிறது என்று நான் சொன்னேன். அப்படியே நடந்துவிட்டது......" என்று அவள் விடாமல் பேசிக் கொண்டிருந்தாள். அவள், தன் குரலைக் கேட்டுத் தானே ஆனந்தித்துக் கொண்டது போல் தோன்றியது. ஜன்னல் அருகே நின்று சிரித்துக் கொண்டிருந்தவர்களும் இதற்குள் காடுஷா அருகே வந்து விட்டார்கள்.

"ஏன் இவ்வளவு கடுமையான தண்டனை?" என்ருள் ஒருத்தி.

"ஏனு? பணமில்லை! அதனுல்தான். பணமிருந்தால் நல்ல வக்கிலாக வைத்திருக்கலாம். வக்கீல்களின் தந்திரத்

னால்தான் விடுதலை கிடைக்கிறது. சந்தேகமில்லை. அந்த நீள மூக்கு வக்கிலை வைத்திருந்தால் விடுதலை கிடைத்திருக்கும். ஆனால் ஆயிரம் ரூபிளுக்குக் குறைந்தால் அவன் நம் முகத்தில் காரிக் கூடத் துப்ப மாட்டான்'' என்றாள் கோராபிளேவா. அருகில் இருந்த ஸ்திரீகள் பலவிதமாகப் பேசிக் கொண்டிருந்தனர்.

''கொஞ்சம் சாராயம் வேணும்'' என்று கண்ணைத் துடைத்துக் கொண்டு கேட்டாள் காடுஷா. ''எடுத்துக் கொள்ளேன்'' என்றாள் கோராபிளேவா.

# 32

காடுஷா மறைத்து வைத்திருந்த பணத்தை எடுத்து கோராபிளேவாவிடம் கொடுத்தாள். கோராபிளேவா, மேல் ஜன்னலில் ஒரு சிறுபுட்டியில் மறைத்து வைத்திருந்த சாராயத்தை எடுத்தாள். இதைக் கண்ட மற்றபெண்கள் தங்கள் இடங்களுக்குச் சென்றனர். காடுஷா தன் படுக்கையில் உட்கார்ந்து ஒரு ரொட்டித் துண்டை எடுத்துத் தின்னத் தொடங்கினாள்.

''உனக்காக நான் டீ வைத்திருக்கிறேன். ஆனால் அது ஆறிப்போயிருக்கும்'' என்று சொல்லிக்கொண்டே தியோடாஸியா டீயை எடுத்தாள். டீ சில்லென்று தான் இருந்தது. டீயின் ருசியே அதில் இல்லை. இருந்தாலும் காடுஷா அதை டம்ளரில் கொட்டிக் குடித்தாள். ''பிஷ்கா, இங்கேவா,'' என்று, தன் வாயையே பார்த்துக்கொண்டு நின்றிருந்த அந்தச் சிறுவனை அழைத்து, அவனிடம் கொஞ்சம் ரொட்டியைக் கொடுத்தாள் காடுஷா.

இதற்குள் கோராபிளேவா சாராயத்தைக் கொண்டுவந்து காடுஷாவிடம் கொடுத்தாள். இதைக்குடித்தபின் காடுஷாவுக்குச் சிறிது சுருசுருப்பு ஏற்பட்டது. கோர்ட்டில் நடந்தவற்றையெல்லாம் பிறகு விவரமாகச் சொன்னாள். கோர்ட்டில் இருந்த அனைவரும் தன்னைச் சுற்றி வட்டமிட்டுக்கொண்டிருந்ததையும் சொன்னாள்.

''ஆமாம், அவர்கள் அப்படித்தான் வெல்லத்தை ஈ மொய்ப்பதுபோல வருவார்கள்'' என்று ஆமோதித்தாள் ரயில்வே காவல்காரன் மனைவி.

''அப்பீலைப்பற்றி வக்கீல் என்ன சொல்கிறார்? அப்பீல் செய்வதானால் இப்பொழுதே செய்யவேண்டுமே?'' என்றாள் கோராபிளேவா.

"அதைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது" என்று பதில் அளித்தாள் காடுஷா.

இந்த சமயத்தில் மற்றொரு ஸ்திரீ அங்கே வந்து, "தீர்ப்பில் உனக்குத் திருப்தி இல்லை என்று எழுதிக் கொடுக்க வேண்டும்" என்று ஆரம்பித்தாள்.

கோராபிளேவா அவள்மீது சீறி விழுந்து, "உன்னை யார் இங்கு கூப்பிட்டது? சாராயத்தை வாஸனை பிடிக்க வந்தாயா? எல்லாம் எங்களுக்கே தெரியும். உன் யோசனையை ஒருவரும் கேட்கவில்லை, போ" என்று அதட்டினாள்.

"நான் உன்னிடம் சொல்லவில்லை" என்றாள் வந்தவள்.

பிறகு இருவரும் அடித்துக்கொண்டு சண்டையிட்டனர். காடுஷா சண்டையை விலக்க முயன்றாள். ஆனால் முடியவில்லை. பிறகு வார்டரும் ஜெயிலரும் வந்துதான் விலக்க வேண்டியதாயிற்று.

யார்மேல் தவறு என்பதைப்பற்றிக் கைதிகள் சிறிது நேரம் விவாதித்துக் கொண்டிருந்தனர். பிறகு பூரண அமைதி நிலவியது. சிலர் குரட்டைவிடத் தொடங்கினார்கள். தான் கைதி என்பதை நினைக்கக் கூட காடுஷாவுக்கு வருத்தமாக இருந்தது. அவள், பக்கத்தில் இருந்த கோராபிளேவாவை நோக்கி, "இப்படியெல்லாம் நடக்குமென்று யார் நினைத்தார்கள்? எத்தனையோபேர், குற்றத்தையும் செய்துவிட்டு தண்டனை பெறுமலே போய்விடுகிறார்களே!" என்றாள்.

"கவலைப்படாதே, ஸைபீரியாவிலும் எத்தனையோபேர் வசிக்கிறார்கள். உனக்கு அங்கு ஒரு குறையும் வராது" என்று கோராபிளேவா அவளுக்குத் தைரியம் கூறினாள்.

"ஒரு குறைவும் வராது என்பது எனக்குத் தெரியும். ஆனால் சுலபமான வாழ்க்கை நடத்திக்கொண்டிருந்த எனக்கு இந்தக் கதி நேர்ந்தது கஷ்டமாக இருக்கிறது" என்றாள் காடுஷா.

"கடவுள் விருப்பத்திற்கு மாறாக ஒருவராலும் ஒன்றும் செய்ய முடியாதம்மா" என்றாள் கோராபிளேவா.

"அதுவும் தெரியும். இருந்தாலும் கஷ்டமாக இருக்கிறது" என்றாள் காடுஷா.

சிறிது நேரம் அவர்கள் மௌனமாக இருந்தனர். "அந்த ஓசை உனக்குக் கேட்கிறதா?" என்று கேட்டாள் கோராபி

ளேவா. அவளோடு சண்டையிட்ட ஸ்திரீ, அறையின் கோடியில் விசித்து விசித்து அழுதுகொண்டிருந்தாள்.

"ஐயோ பாவம்" என்றாள் காடுஷா.

"பாவம்தான். ஆனால் அவள் இங்கு வந்து தொந்தரவு கொடுத்திருக்கக் கூடாது" என்றாள் கோராபிளேவா.

# 33

மறுநாள் காலை, தனக்கு ஏதோ முக்கியமான சம்பவம் நிகழ்ந்திருப்பது போன்ற உணர்ச்சியோடு நிக்லியுடாவ் எழுந்தான்.

"காடுஷா—விசாரணை!" ஆமாம், இனி பொய்சொல்வதை நிறுத்திவிட்டு, உண்மை முழுவதையும் சொல்லிவிட வேண்டும்!

அன்று காலை மற்றொரு விசேஷம் நடந்தது. அவன் வெகு காலமாக எதிர்பார்த்துக் கொண்டிருந்த கடிதம் வந்துவிட்டது. ராணுவ அதிகாரியின் மனைவி அவனுக்குப் பூரண சுதந்திரம் அளித்துக் கடிதம் எழுதியிருந்தாள். அவன் கல்யாணம் செய்துகொண்டு சௌக்கியமாக இருக்க வேண்டுமென்றும் வாழ்த்தியிருந்தாள்.

"கல்யாணம்! இப்பொழுது கல்யாணத்திற்கும் எனக்கும் எவ்வளவு தூரம்!" என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான் நிக்லியுடாவ்.

முன் தினம் அவன் செய்து கொண்ட தீர்மானம் அவனுக்கு ஞாபகம் வந்தது. அவளுடைய கணவனிடம் எல்லாவற்றையும் சொல்லிவிட வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டிருந்தான். ஆனால் இப்பொழுது அது அனாவசியமென்று தோன்றியது.

"அவனுக்குத் தெரியாத விஷயத்தை அவனிடம் சொல்லி வருத்தம் உண்டாக்குவானேன்? அவனாக வந்து கேட்டால் எல்லாவற்றையும் சொல்லிவிட்டால் போகிறது" என்று நினைத்தான். மிஸ்ஸியிடம் உண்மையைச் சொல்வதும் அவ்வளவு சுலபமாக இன்று காலை தோன்றவில்லை. ஒரே ஒரு விஷயத்தில் தான் அவன் உறுதியுடன் இருந்தான், "அங்கு மறு

படியும் போவதில்லை. கேட்டால் உண்மையைச் சொல்லி விடுவது'' என்று தீர்மானித்துக் கொண்டிருந்தான்.

ஆனால் காடுஷாவிடம் ஒன்றையும் சொல்லாமல் மறைக்கக்கூடாது என்று தீர்மானித்துக் கொண்டிருந்தான். "சிறைக்குப் போய், அவளிடம் எல்லாவற்றையும் சொல்லி, அவளிடம் மன்னிப்புக் கோருகிறேன். அவசியமானால், ஆமாம், அவசியமானால், அவளை மணந்து கொள்ளவும் செய்கிறேன்." என்று முடிவு செய்திருந்தான்.

ஒரு தர்மத்திற்காக சர்வத்தையும் தியாகம்செய்யவேண்டுமென்ற எண்ணம் தன் மீதே அவனுக்கு அனுதாபத்தை உண்டாக்கியது. "நிலம் வைத்துக் கொள்வது அதர்மம்" என்ற தன் கொள்கைப்படி தன்சொத்துக்களை பைஸல் செய்ய அவன் தீர்மானித்திருந்தான். சர்வத்தையும் துறந்துவிட அவனுக்கு தைரியமில்லாவிட்டாலும், தன்னையும் ஏமாற்றிக் கொள்ளாமல் மற்றவர்களையும் ஏமாற்றாமல் கூடியவரைவிட்டுக் கொடுக்க அவன் தீர்மானித் திருந்தான்.

அக்ரபெனா பெட்ரோவ்னா உள்ளே வந்தபொழுது, இந்த வீடும், அவளுடைய உதவியும் தனக்கு வேண்டா மென்று சொல்லிவிட்டான். இவ்வளவு உறுதியாகச் சொல்ல முடியுமென்று அவனே நினைக்கவில்லை, அவன் விவாகம் செய்து கொள்வதற்காகத்தான் இவ்வளவு பெரிய வீட்டையும், மற்ற வசதிகளையும் வைத்துக் கொண்டிருப்பதாக அனைவரும் நினைத்திருந்தனர், ஆகையால் இவற்றை விட்டுவிடுவதாக அவன் சொன்னதில் விசேஷ அர்த்தம் இருந்தது. அக்ரபேனா பெட்ரோவ்னா அவனை ஆச்சரியத்தோடு பார்த்தாள்.

" இதுவரை இவ்வளவு அன்பாக நீ என்னைப் பார்த்துக்கொண்டதற்கு நன்றி செலுத்துகிறேன். ஆனால் இனி எனக்கு இவ்வளவு பெரிய வீடு அவசியமில்லை. நீ, எனக்கு உதவி செய்வதாக இருந்தால், அம்மா இருந்தபொழுது இருந்தபடி எல்லாவற்றையும் எடுத்து வைத்துவிடு. நடாஷா வந்தபின் எல்லாவற்றையும் பார்த்துக் கொள்வாள் '' என்றான் நிக்லியுடாவ். நடாஷா அவனுடைய சகோதரி.

அக்ரபெனா பெட்ரோவ்னா தலையை ஆட்டிக்கொண்டே "இவையெல்லாம் மறுபடியும் வேண்டியிருக்கும்'' என்றாள்.

" இல்லை, வேண்டியிராது. கோர்னேக்கும் இரண்டு மாதச் சம்பளம் கொடுத்து விடுகிறேன். இனி வேலைக்கு வேண்டாமென்று அவனிடமும் சொல்லிவிடு'' என்றான் நிக்லியுடாவ்.

நடந்ததை யெல்லாவற்றையும் அவளிடம் சொல்லிவிட்டுத் திரும்பினான்.

"நேற்று ஒரு விசேஷம் நடந்தது. என் அத்தையோடு இருந்த காடுஷாவை உனக்கு ஞாபகம் இருக்கிறதா?"

"ஓ! நன்றாக ஞாபகம் இருக்கிறதே! நான்தான் அவளுக்குப் பின்னல் வேலை கற்றுக் கொடுத்தேன்.

"அந்தக் காடுஷா மீது நேற்று கேஸ் நடந்தது. நான் ஜூரியாக இருந்தேன்.

"அட பாவமே! அவள்மீது என்ன கேஸ்?"

"கொலை வழக்கு; இதற்கெல்லாம் காரணம் நான்தான்.

"இதென்ன விசித்திரம்? இதற்கு நீங்கள் எப்படிக் காரணம்?" என்று கேட்டாள் அக்ரபெனு பெட்ரோவ்னு. அவளுடைய கண்களில் ஒரு ஒளி பிறந்தது. காடுஷாவோடு அவன் கொண்டிருந்த தொடர்பு அவளுக்குத் தெரியும்.

"ஆமாம். நான்தான் காரணம். இதனுல்தான் என் திட்டங்களையெல்லாம் மாற்றிக்கொண்டு விட்டேன்!

"அதனுல் உங்களுக்கு என்ன?"

"இதையெல்லாம் அவள் செய்வதற்கு நான்தான் காரணம். ஆகையால் அவளுக்கு வேண்டிய உதவியையெல்லாம் நான் செய்ய வேண்டும்,"

"இதில் உங்கள் தப்பு ஒன்றுமில்லையே! இப்படி எல்லாருக்கும் தான் நடக்கிறது. நியாயமாக நடந்துகொள்பவர்களாக இருந்தால் எல்லாவற்றையும் ஒருவிதமாகச் சரிப்படுத்தி விட்டு மறந்து விடுகிருர்கள். இதையெல்லாம் உங்கள் தலையில் போட்டுக் கொள்வானேன்? அவள் நெறி தவறிப்போய்விட்டதாகக் கூடக் கேள்விப்பட்டேன். அது யாருடைய தப்பு?" என்ருள் அக்ரபெனு பெட்ரோவ்னு;

"என் தப்புதான். அதனுல்தான் அதைச் சரிப்படுத்த வேண்டுமென்கிறேன்."

"சரிப்படுத்த முடியாது."

"அதுதான் என் வேலை ஆனுல் உன்னைப்பற்றியே நீ யோசித்துக் கொண்டிருந்தாயானுல், என் அம்மா சொன்னபடி—"

"என்னைப்பற்றி நான் நினைக்கவில்லை. என்னை ரொம்பவும் அன்பாக நடத்தினார்கள். நான் ஒன்றுக்கும் ஆசைப்படவில்லை. நான் இங்கு வேலைக்கு வேண்டாமென்றால் என் மருமான் என்னை வந்துவிடச்சொல்லி யிருக்கிறான். நீங்கள் இப்படி வருத்தப்படுவது சரியல்ல. எல்லாருக்கும் தான் இப்படியெல்லாம் நடக்கிறது."

"ஆனால் நான் அப்படி நினைக்கவில்லை" என்மீது கோபித்துக்கொள்ளாதே. நீ செய்த உதவிகளுக்கெல்லாம் என் நன்றி."

முன் தினம் சென்ற அதே தெருக்கள் வழியாக அவன் கோர்ட்டுக்குப் போய்க் கொண்டிருந்தான். ஆனால் இன்று தான் முற்றிலும் வேறுபட்டிருப்பதாக அவனுக்குத் தோன்றியது. மிஸ்ஸியை மணப்பது சாத்தியமாக நேற்று தோன்றியது. ஆனால் அதுவே இன்று அசாத்தியமாகத் தோன்றியது. அவள் சந்தோஷத்துடன் தன்னைக் கல்யாணம் செய்து கொள்வாள் என்பது அவனுக்குத் தெரியும். ஆனால் அவளோடு நெருங்கிப் பழகுவதற்குக்கூடத் தான் லாயக்கில்லை என்று அவனுக்குத் தோன்றியது. "நான் யாரென்பதை அவள் அறிந்தால் என்னைத் திரும்பிக் கூடப் பார்க்க மாட்டாள். அவள் ஏற்றுக் கொள்வதாக இருந்தால்கூட எனக்கு மனச் சாந்தி எப்படிக் கிடைக்கும்? இன்றோ நாளையோ அவளை ஸைபீரியாவுக்கு அனுப்பப் போகிறார்கள். என்னால் கெட்ட பெண் கடுங்காவல் அனுபவிக்கப் போய்க் கொண்டிருக்கும் பொழுது, நான் இங்கு கல்யாணக் களியாட்டத்தில் மூழ்கி யிருப்பதா? முதலில் வக்கீலைப் பார்த்து அவர் சொல்வதைக் கேட்டுக் கொள்ள வேண்டும். பிறகு அவளை, நேற்று தண்டனை பெற்ற கைதியைப் பார்த்து எல்லாவற்றையும் அவளிடம் சொல்லிவிட வேண்டும்" என்று நிக்லியுடாவ் சிந்தித்துக் கொண்டே நடந்தான். தன் மனமாறுதல் அவனுக்கே சந்தோஷம் அளித்தது.

அவளை எப்படிச் சந்திப்பது, எப்படிப் பேசுவது, தன் பாபத்தை எவ்விதம் எடுத்துக் கூறி, அதற்குப் பிராயச்சித்தமாக, தன்னால் இயன்றதையெல்லாம் செய்வதாகக்கூறுவது, அவளை மணப்பதாகச் சொல்வது? இவற்றையெல்லாம் அவன் நினைத்துப் பார்த்த பொழுது ஓர் உன்னதமான உணர்ச்சி வசப்பட்டான். அவன் கண்களில் நீர் நிரம்பியது.

நிக்லியுடாவ் கோர்ட்டுக்கு வந்து சேர்ந்தான். முதல் நாள் அங்கு இருந்த சேவகனே அன்றும் இருந்தான். தண்டனை பெற்ற கைதிகள் எங்கு இருக்கிறார்கள், அவர்களைப் பார்க்க வேண்டுமானால் யாரிடம் அனுமதி கேட்க வேண்டும். என்ற விஷயங்களை அவனிடம் கேட்டுத் தெரிந்து கொண்டான். நிக்லியுட்ாவ் அவனுக்கு நன்றி செலுத்தினான்.

பிறகு அவன் ஜூரிகளின் அறைக்குச் சென்றான். மற்ற ஜூரிகள் அப்பொழுது தான் கோர்ட்டுக்குக் கிளம்பிக் கொண்டிருந்தார்கள். ஜூரியாக வந்திருந்த வியாபாரி முன் தினத்தைப் போலவே குஷியாக இருந்தான். காடுஷாவோடு தனக்கு இருந்த உறவை எல்லா ஜூரிகளிடமும் சொல்லிவிட வேண்டுமென்று நிக்லியுடாவுக்குத் தோன்றியது. ஆனால் மற்ற ஜூரிகளோடு அவன் கோர்ட்டுக்குள் பிரவேசித்தவுடன் முன் தினத்தைப் போல்வே எல்லா சம்பிரதாயங்களும் நடந்தன. இவற்றை யெல்லாம் கெடுக்க அவன் விரும்ப வில்லை.

இன்று ஒரு திருட்டு வழக்கு விசாரணைக்கு வந்திருந்தது. உருவிய வாளோடு இரு சோல்ஜர்கள் கைதிக்குக் காவல் நின்றிருந்தனர். அவனுக்கு சுமார் இருபது வயது இருக்கும். ரத்தம் சுண்டி, ஒட்டி உலர்ந்த உட்லோடு காணப்பட்டான். மற்றொருவனோடு சேர்ந்து கொண்டு, ஒரு கிட்ங்கின் பூட்டை உடைத்து, மூன்று ரூபிள் மதிப்புள்ள பாய்களைத் திருடியதாக இவன் மீது குற்றச்சாட்டு. இவனோடு சேர்ந்து திருடியவன் சிறையிலேயே இறந்து விட்டான். ஆகையால் இவனை மாத்திரம் விசாரணைக்குக் கொண்டு வந்து நிறுத்தி யிருந்தார்கள். சாட்சியத்திற்காக பாய்கள் மேஜை மீது வைக்கப் பட்டிருந்தன

முன் தினத்தைப் போலவே விசாரணை நடந்தது. பாயின் சொந்தக்காரனை சர்க்கார் வக்கீல் பல கேள்விகள் கேட்டார். அவருக்குக் கோபம் வந்து விட்டது. "இதில் இவ்வளவு சங்கடங்கள் இருக்கு மென்று தெரிந்திருந்தால் இவற்றிற்காக நான் கவலைப் பட்டே யிருக்க மாட்டேன். இந்தத் தொந்தரவுகளிலிருந்து விடுபடுவதற்காக இன்னும் பத்து ரூபிளை அந்தப் பாய்களோடு வைத்துக் கொடுத்து விட்டிருப்பேன். வண்டிச் சத்தத்திற்காக மாத்திரம் நான் ஐந்து ரூபிள் செலவழித்தாகி விட்டது'' என்றார் பாய்களின் சொந்தக்காரர்.

கைதியே குற்றத்தை ஒப்புக்கொண்டு விட்டான். எல்லாம் பட்ட வர்த்தனமாகத் தெரிந்திருந்தது. இருந்தாலும் சர்க்கார் வக்கில் வழக்கம்போல் தன் தோள்களைக் குலுக்கிக் கொண்டு,

தந்திரமாக பதில் வரவழைப்பதாக நினைத்துப் பல கேள்விகள் கேட்டார். பிறகு தம் வாதத்தில் எதிரி, சமூகத்திற்கு பயங்கரமான விரோதி என்று சித்தரித்தார். எதிரிக்காக கோர்ட்டாரே நியமித்திருந்த வக்கீல் வாதிக்கையில், "குற்றத்தை மறுக்கவில்லை. ஆனால் ஜனங்கள் குடியிருக்கு மிடத்தில் திருட்டு நடக்கவில்லை. ஆகையால் சர்க்கார் வக்கில் சித்திரிப்பது போன்ற அபாயகரமானவனல்ல கைதி" என்றார்.

பிரதம நீதிபதி வழக்கை ஜூரிகளுக்கு எடுத்துச் சொன்னார். இது அவர்களுக்கே நன்றாகத் தெரிந்திருந்ததுதான். மறுபடியும் சம்பிரதாயமான காரியங்களெல்லாம் நடந்தன.

இந்தக் கைதி ஒரு புகையிலை தொழிற்சாலையில் வேலை கற்றுக் கொண்டிருந்தான். ஒரு வேலை நிறுத்தத்திற்குப் பின் அவனை வேலையிலிருந்து விரட்டிவிட்டார்கள். பிறகு வேலையில்லாமல் சுற்றிக் கொண்டிருந்தான். ஒரு நாள் ஒரு ஹோட்டலில் தன்னைப் போன்ற ஒருவனைச் சந்தித்தான். ஒருநாள் இரவு இருவருமாகக் குடித்துவிட்டு ஒரு கிடங்கின் பூட்டை உடைத்து, முதலில் அவர்கள் கையில் பட்ட சாமானை எடுத்துக் கொண்டு கிளம்பினார்கள். போலீசார் அவர்களைப் பிடித்துச் சிறையில் வைத்தனர். அவர்களும் குற்றத்தை ஒப்புக் கொண்டு விட்டார்கள். ஒரு கைதி சிறையிலேயே இறந்து விட்டான். மற்றொரு கைதியின் அபாயத்திலிருந்து சமூகத்தைக் காப்பாற்ற வேண்டு மென்பதற்காக இவனை விசாரணைக்குக் கொண்டு வந்து நிறுத்தி யிருந்தார்கள்.

நிக்லியுடாவ், தன் முன் நடந்தவற்றை யெல்லாம் பார்த்து விட்டு, "நேற்றைய கைதி எவ்வளவு அபாயகரமானவளோ அவ்வளவு அபாயகரமானவன்தான் இவனும். இவர்கள் அபாயகரமானவர்கள்; இவர்களுக்கு நீதி வழங்கும் நாங்கள் அபாயகரமானவர்களில்லையா? அயோக்கியனாகிய நான்—என்னை அறிந்தவர்கள், எனக்கு மரியாதை செய்து போற்றுவர்கள் எல்லாரும் அயோக்கியர்களில்லையா? சந்தர்ப்பத்தின் சுழலில் சிக்கி அவன் இந்தக் கதிக்கு வந்தான். இப்படிப் பட்டவர்களைத் திருத்த வேண்டுமென்றால் இதற்குக் காரணமாக உள்ள சந்தர்ப்பத்தை ஒழிக்க வேண்டும். சமயத்தில் யாராவது அவனுக்கு தயைக் காட்டி உதவி செய்திருந்தால் ஒன்றும் நேர்ந்திராது" என்றெல்லாம் சிந்தித்துக் கொண்டிருந்தான்.

"ஆனால் ஒருவரும் அவனுக்கு அனுதாபம் காட்டவில்லை. அவன் நகரத்திற்கு வந்தது முதல், 'ஏமாற்றுவது, குடிப்பது பொய் சத்தியம் செய்வது, பிறரைத் தாக்குவது இவற்றை யெல்லாம் செய்பவன்தான் உயர்ந்தவன்' என்று பெரிய தொழிலாளர் சொல்வதை அவன் கேட்டிருக்கிறான். நோய், குடி, விப

சாரம், ஒரு நோக்கமும் இல்லாத அலைச்சல், கனவைப் போன்ற ஒரு பிரமிப்பு—இப்படி அலைந்து கொண்டிருந்தவன் ஏதோ ஒரு கொட்டகையில் புகுந்து ஒருவருக்கும் உபயோக மில்லாத பாயை எடுத்தான். அவனை இந்த நிலைமைக்குக் கொண்டு வந்த காரணத்தை ஒழிக்க முயலாமல், அவனைத் தண்டிக்கப் பார்க்கிறோம். இதன் மூலம் தவற்றைச் சரிப்படுத்த முயல்கிறோம். பயங்கரம்!'' என்றெல்லாம் நிக்லியுடாவ் யோசித்துக் கொண்டிருந்தான். அவனுக்கு எதிரே நடந்துகொண்டிருந்த ஒன்றையும் அவன் கவனிக்கவில்லை. இவையெல்லாம் முன்னாலேயே தனக்கு ஏன் விளங்க வில்லை என்பதற்குக் காரணம் தெரிய வில்லை. மற்றவர்களுக்கு இவை ஏன் தெரியவில்லை என்பதும் புரியவில்லை.

# 35

**கோ**ர்ட் கலைந்திருந்த சமயத்தில் நிக்லியுடாவ் வெளியே போனான். மறுபடியும் இங்கு திரும்பி வரக்கூடாது என்ற எண்ணத்தோடு சென்றான். "அவனை அவர்கள் என்ன வேண்டுமானாலும் செய்துகொள்ளட்டும். இந்தக் கேலிக் கூத்தில் நான் கலந்து கொள்ள முடியாது'' என்று நினைத்தான்.

ஜெயில் அதிகாரி இருக்கும் இடத்தை விசாரித்துக் கொண்டு அங்கு நேராகச் சென்றான். அவனை காவல்காரன் உள்ளே அனுமதிக்க மறுத்தான். அவர் ரொம்பவும் அவசரமான வேலையில் ஈடுபட்டிருப்பதாகச் சொன்னான். ஆனால் நிக்லியுடாவ் அதை லக்ஷியம் செய்யாமல் நேராகப் போனான். அங்கு யாரோ ஒரு உத்தியோகஸ்தர் அவனைச் சந்தித்தார். தான் ஒரு ஜூரி என்றும், ஜெயில் அதிகாரியைப் பார்க்க விரும்புவதாகவும் அவரிடம் நிக்லியுடாவ் சொன்னான்.

அவனுடைய விருதுகளும், உயர்ந்த உடையும் அவனுக்குப் பெரிதும் உதவியாக இருந்தன. அவர் ஜெயில் அதிகாரியிடம் நிக்லியுடாவைப் பற்றிச் சொன்னார். அவரும் அவனை உள்ளே வரச் சொன்னார். அவன் இவ்வளவு பிடிவாதமாக உள்ளே வந்ததைப் பற்றி அவர் அதிருப்தி கொண்டார்.

"உங்களுக்கு என்னவேண்டும்?'' என்று கேட்டார் ஜெயில் அதிகாரி.

"நான் ஜூரிகளில் ஒருவன். நேற்று தண்டனை பெற்ற காடுஷா என்ற கைதியைப் பார்க்க வேண்டும்'' என்று உறுதி

யான குரலில் பதிலளித்தான் நிக்லியுடாவ், தன் வாழ்க்கையையே மாற்றக் கூடிய ஒரு காரியத்தைச் செய்வது போன்ற உணர்ச்சி அவனுக்கு ஏற்பட்டது.

அந்த அதிகாரி கருப்பாகவும் குள்ளமாகவும் இருந்தார். தாடியைக் குட்டையாகக் கத்தரித்து விட்டுக்கொண்டிருந்தார். அவருடைய கண்களில் சுரு சுருப்பின் ஒளி வீசியது.

"காடுஷாவா?" எனக்குத்தெரியும். விஷம்கொடுத்ததற்காக தண்டிக்கப்பட்டாள். அவளை நீங்கள் எதற்காகப் பார்க்கவேண்டும்?" என்றார் அந்த அதிகாரி, தன் கேள்வியில் தொனித்த கடுமையைக் குறைப்பதற்காக, உடனே, "நீங்கள் அவளைப் பார்க்க அனுமதி கோரும் காரணத்தை அறியாமல் உங்களுக்கு அனுமதி கொடுக்க முடியாது" என்றார்.

நிக்லியுடாவ் முகம் சிவக்க, "ஒரு முக்கியமான காரணத்திற்காகத் தான் பார்க்கவேண்டும்" என்றான்.

அவர் புருவத்தை உயர்த்தி நிக்லியுடாவை கூர்ந்து கவனித்தபடி, "அவளுடைய வழக்கில் விசாரணை நடந்ததா இல்லையா?" என்றார்.

"நேற்று விசாரிக்கப்பட்டாள். அக்கிரமமாக அவளுக்கு நான்கு வருஷக் கடுங்காவல் தண்டனை விதித்து விட்டார்கள், அவள் நிரபராதி."

"சரி, நேற்றுதான் தண்டனை பெற்றாளென்றால் பூர்வாங்க் காவல் சிறையில்தான் இருப்பாள். இறுதித் தீர்ப்புக் கூறும்வரை அங்கேயேதான் இருப்பாள். சில குறிப்பிட்ட தினங்களில்தான் அங்கு கைதியைச் சந்திக்க அனுமதி உண்டு. நீங்கள் அங்கேயே போய் விசாரிப்பது நல்லது" என்று பதிலளித்தார் அதிகாரி. காடுஷாவின் நிரபராத தன்மையைப் பற்றி நிக்லியுடாவ் கூறியது அவர் காதில் விழவேயில்லை.

"ஆனால் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் நான் அவளைப் பார்க்க வேண்டுமே" என்று வாய் தழதழக்கக் கூறினான் நிக்லியுடாவ். நெருக்கடிக் கட்டம் நெருங்கி வந்து கொண்டிப்பது போல் அவனுக்குத் தோன்றியது.

"எதற்காக அவ்வளவு அவசியமாகப் பார்க்க வேண்டும்?" என்று அதிகாரி தம் புருவத்தை உயர்த்திக் கொண்டு பொறுமை இழந்து கேட்டார்.

"அக்கிரமமாக அவளுக்கு தண்டனை விதித்துவிட்டார்கள். என் குற்றத்தினால் தான் அப்படி நடந்தது" என்று

நடுங்கும் குரலில் கூறினன் நிக்லியுடாவ். இது அவசிய மில்லாத விஷயத்தைச் சொல்வதுபோல் அவனுக்குத் தோன்றியது.

"எப்படி?" என்று கேட்டார் அதிகாரி.

"நான்தான் அவளைக் கெடுத்து இப்போதைய நிலைமைக் குக் கொண்டு வந்தேன். நான் கெடுக்காமல் இருந்திருந்தால் இந்தக் குற்றச் சாட்டுக்கு அவள் ஆளாகி யிருக்க மாட்டாள்."

"அதெல்லாம் சரி; அதற்கும், அவளை நீங்கள் போய்ப் பார்க்க வேண்டுமென்பதற்கும் என்ன சம்பந்தமென்று எனக்கு விளங்கவில்லை!"

"நான் அவளோடு கூடவே சென்று அவளை விவாகம் செய்து கொள்ள விரும்புகிறேன். இதுதான் சம்பந்தம்" என்று நிக்லியுடாவ் கூறிய பொழுது அவன் வாய் குழறியது. கண் ணில் ஜலம் வந்துவிட்டது.

"நிஜமாகவா?" என்று ஆச்சரியத்தோடு கேட்டார் அதி காரி. "உண்மையிலேயே இது ஒரு விசித்திரமான விஷயம். நீங்கள் ஒரு பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவரென்று நினைக்கி றேன்" என்றார் அதிகாரி. இவ்வளவு விசித்திரமாக நடந்து கொள்ளும் நிக்லியுடாவைப் பற்றித்தாம் முன்பே கேள்விப் பட் டிருப்பதை அப்பொழுது ஞாபகப்படுத்திக் கொள்பவர்போல் இந்தக் கேள்வியைக் கேட்டார்.

"மன்னிக்க வேண்டும். அதற்கும் என் கோரிக்கைக்கும் ஒரு சம்பந்தமுமில்லை" என்று சிறிது கோபக் குரலில் பதி லளித்தான் நிக்யுடாவ்.

அதிகாரி அசட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டே, "வாஸ் தவம்தான். ஆனால் உங்கள் விருப்பம் விசித்திரமாக இருக் கிறது" என்றார்.

"அது இருக்கட்டும், எனக்கு அனுமதி கொடுப்பீர்களா?"

"அனுமதியா? இதோ கொடுக்கிறேன்; உட்காருங்கள்" என்று சொல்லிவிட்டு, அவர் தம் மேஜைக்குப் போய் எழுதத் தொடங்கினர்.

நிக்லியுடாவ் நின்று கொண்டே இருந்தான்.

சிறைக்குள் செல்ல அனுமதி எழுதி நிக்லியுடாவிடம் கொடுத்துவிட்டு, அவனை விசித்திரமாக பார்த்தார்.

"இனி விசாரணையிலும் நான் கலந்துக் கொள்ள முடியா தென்று அறிவிக்க விரும்புகிறேன்" என்றான் நிக்லியுடாவ்.

"அதற்குத் தக்க காரணம் கூற வேண்டும். அது உங்களுக்கே தெரியும்."

"வழக்கை விசாரித்து தீர்ப்புக் கூறுவது உபயோகமற்றது என்று நினைப்பதோடு நில்லாமல், அது அயோக்கியத்தனம் என்றும் கருதுகிறேன்" என்றான் நிக்லியுடாவ்.

மறுபடியும் அந்த அதிகாரி அசட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டு, "சரி, ஆனால் நான் கோர்ட் அதிகாரி; நீங்கள் கூறும் காரணத்தை ஒப்புக் கொள்ள முடியாது. கோர்ட்டில் உங்கள் அபிப்பிராயத்தைக் கூறுங்கள். இது சரியா தவறா என்பதை அவர்கள் முடிவு செய்வார்கள். தவறென்று முடிவு செய்தால் அபராதம் விதிப்பார்கள்; கோர்ட்டுக்கு மனு போடுங்கள்" என்றார் அதிகாரி.

"என் அபிப்பிராயத்தைத் தெரிவித்துவிட்டேன். வேறு எங்கும் மனுபோட நான் விரும்பவில்லை" என்று கோபமாகப் பதிலளித்தான் நிக்லியுடாவ்.

"சரி, நமஸ்காரம், போய்வாருங்கள்" என்றார் அதிகாரி. அவனிடமிருந்து சீக்கிரம் விடுபட வேண்டுமென்று அவர் விரும்பினார்போல் தோன்றியது.

நிக்லியுடாவ் வெளியே சென்றவுடன் மற்றொரு கோர்ட் உத்தியோகஸ்தர் அந்த அறைக்குள் வந்தார். "இவ்வளவு நேரம் இங்கு யார் வந்திருந்தது?" என்று கேட்டார் அவர்.

"நிக்லியுடாவ். கிராஸ்ஜேபெர்ஸ்க் கிராமக் கூட்டங்களில் விசித்திரமாகப் பேசுவானே, அதே நிக்லியுடாவ்தான். அவன் ஜூரிகளில் ஒருவனும்; கடுங்காவல் தண்டனைபெற்றுள்ள ஒரு பெண் இவனால் கெட்டவளாம். இப்பொழுது அவளை விவாகம் செய்துகொள்ள விரும்புகிறானாம்" என்றார் முதல் அதிகாரி.

"இது உண்மையா ?"

"ஆமாம் அப்படித்தான் அவன் சொன்னான். உணர்ச்சி மேலிட்டுப் பேசினான் அவன்".

"இந்தக்காலத்து இளைஞர்களே அப்படித்தான். எதற்கும் ஒரு மிதமே கிடையாது".

" ஓ! இவன் இளைஞனில்லையே!"

" உங்கள் இவாஷென்கோ எவ்வளவு தலைவேதனை செய்துவிட்டான்! முடிவில்லாமல் பேசிக் கொண்டிருந்தானே?"

" இப்படிப் பட்டவர்களையெல்லாம நாமே நிறுத்திவிட வேண்டும். இல்லையானால் பெரிய தொந்தரவாகி விடுகிறார்கள்."

# 36

நிக்லியுடாவ் நேராகச் சிறைக்குச் சென்றான். ஆனால் காடுஷா அந்தச் சிறையில் இல்லை. அவள் பழைய சிறையில் இருக்கக்கூடுமென்று சிறை இன்ஸ்பெக்டர் சொன்னார். அந்தச் சிறை வெகு தூரம் இருந்தது. நிக்லியுடாவ் சாயங்காலம் தான் அங்கு போய்ச்சேர முடிந்தது. விறுவிறுவென்று சிறைக்குள் பிரவேசித்தான். ஆனால் காவல்காரன் அவனைத் தடுத்து நிறுத்திவிட்டு ஒரு மணியை அடித்தான். ஜெயிலர் வெளியே வந்து என்னவென்று விசாரித்தான், நிக்லியுடாவ் தான் வைத்திருந்த அனுமதிச்சீட்டைக் காட்டினான். சிறை இன்ஸ்பெக்டரின் உத்தரவில்லாமல் உள்ளே போகக்கூடாதென்று சொல்லிவிட்டான் ஜெயிலர். இன்ஸ்பெக்டரைப் பார்ப்பதற்காக நிக்லியுடாவ் மாடிப்படியில் ஏறினான். வெகுதூரத்தில் யாரோ பியானோ வாசிக்கும் சப்தம் அவன் காதில் விழுந்தது. எல்லாரும் கேட்டு அலுத்துப் போன பிரசித்திபெற்ற ஒரு பாட்டு அது. ஒரே அடியை யாரோ திருப்பித் திருப்பி வாசித்துக் கொண்டிருந்தார்கள். ஒரே ஸ்வர வரிசை மீண்டும் மீண்டும் ஒலித்துக்கொண்டிருந்தது.

நிக்லியுடாவ் மாடிக்குச் சென்றவுடன் கண்ணில் கட்டுக்களோடு கூடிய ஒரு வேலைக்காரப் பெண் வந்து கதவைத் திறந்தாள். கதவு திறந்தவுடன் பியானோவின் சப்தம் வாசற்படி வழியே இன்னும் பலமாக வந்து தாக்கியது.

" இன்ஸ்பெக்டர் உள்ளே இருக்கிறாரா? என்று வேலைக்காரப் பெண்ணிடம் கேட்டான் நிக்லியுடாவ்.

" இல்லை " என்றாள் அவள்.

" சீக்கிரம் திரும்பிவந்து விடுவாரா? " என்று கேட்டான் நிக்லியுடாவ்.

பாட்டின் அடி நின்று மீண்டும் ஆரம்பமாயிற்று. ஸ்வரங்கள் ஒலித்துக் கொண்டே போய் முன் நின்ற அதே இடத்தில் நின்றன.

"போய்க் கேட்டுக்கொண்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு வேலைக்காரப் பெண் உள்ளே சென்றாள்.

பலமாக ஒலித்துக் கொண்டிருந்த பியானோ திடீரென்று நின்றது. அதற்குப் பதிலாக ஒரு பெண்ணின் குரல் கேட்டது. "அவர் இங்கு இல்லை, இன்றைக்கு வர மாட்டாரென்று சொல். இவர்களெல்லாம் எதற்காக இப்படி வந்து பிராணனை வாங்குகின்றார்களாம்?" என்றது அந்தக் குரல். மறுபடியும் பழைய பல்லவியே பியானோவில் ஆரம்பமாகி முடிந்தது. பிறகு நாற்காலியைப் பின்னால் தள்ளும் சப்தம் கேட்டது. பியானோ வாசித்துக் கொண்டிருந்த பெண்தான் ஆத்திரத்தோடு எழுந்து வருகிறாள் என்று தெரிந்தது,

நோயாளி போல் தோன்றிய ஒரு பெண் வெளியே வந்து, "அப்பா வீட்டில் இல்லை. வெளியே போயிருக்கிறார்" என்றாள். உயர்ந்த முறையில் உடையணிந்த ஓர் இளைஞன் நிற்பதைக் கண்டவுடன் அவள் குரல் சற்றுத் தணிந்தது.

"உள்ளே வாருங்கள், உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டாள் அவள்.

"இந்தச் சிறையில் உள்ள ஒரு கைதியை நான் பார்க்க வேண்டும்."

"அரசியல் கைதியா?"

"இல்லை. அரசியல் கைதி யில்லை; கோர்ட்டிலிருந்து அனுமதி வாங்கிக் கொண்டு வந்திருக்கிறேன்."

"அதைப்பற்றி எனக்குத் தெரியாது. அப்பா வெளியே போயிருக்கிறார். உள்ளே வாருங்களேன். இல்லையானால் உதவி இன்ஸ்பெக்டர் இருக்கிறார். அவரைக் கேளுங்கள். உங்கள் பெயர் என்ன?"

"வந்தனம்" என்று சொல்லி விட்டு, அவள் கேள்விக்கு பதில் சொல்லாமலே நிக்லியுடாவ் போய் விட்டான்.

அந்தப்பெண் உள்ளே போகும் பொழுது கதவை மூடிய சப்தம் கேட்க வில்லை. பியானோவின் ஜீவன் ததும்பும் நாதம் மீண்டும் தொடங்கியது. இவ்வொலி அந்த இடத்திற்கும், நோயாளி போன்ற அந்தப் பெண்ணின் தோற்றத்திற்கும்,

பொருத்தமாக இல்லை. நிக்லியுடாவ் தாழ்வாரத்தில் வந்த பொழுது கனத்த மீசையோடு கூடிய ஒருவர் உட்கார்ந்திருந்தார். "உதவி இன்ஸ்பெக்டர் எங்கே இருக்கிறார்?" என்று கேட்டான் நிக்லியுடாவ். அங்கு உட்கார்ந்திருந்தவர் தான் உதவி இன்ஸ்பெக்டர். கோர்ட்டில் நிக்லியுடாவ் பெற்ற அனுமதிச்சீட்டை அவர் வாங்கிப் பார்த்தார். "இதை வைத்துக் கொண்டு மற்றொரு சிறைக்குள் தான் போக முடியும். தவிர இன்று நேரமாகி விட்டது. நாளை காலை பத்து மணிக்கு எல்லாரும் சிறைக்குள் போய் கைதிகளைப் பார்க்கலாம். நீங்கள் விரும்பினால் பொது அறையிலேயே கைதியைச் சந்திக்கலாம். இன்ஸ்பெக்டர் அனுமதித்தால் ஆபீஸ் ரூமிலும் சந்தித்துப் பேசலாம்" என்று உதவி இன்ஸ்பெக்டர் பதில் அளித்தார்.

ஆகையால் நிக்லியுடாவ் அன்று காடுஷாவைச் சந்திக்க முடியவில்லை.

"காடுஷாவைச் சந்திக்கப் போகிறோம்" என்ற ஞாபகத்தால் அவன் மனம் பரபரப் படைந்திருக்கிறது. கோர்ட்டைப் பற்றிய ஞாபகமே அவனுக்கு இல்லை. அனுமதி கொடுத்த அதிகாரியுடனும், உதவி இன்ஸ்பெக்டருடனும் நடத்திய சம்பாஷணை மாத்திரம் அவன் சிந்தனையில் சுழன்று கொண்டிருந்தது,

பரபரப்படைந்திருந்த அவன் மனம் சாந்தியடைய சிறிது நேரம் பிடித்தது. அவன் வீட்டுக்குத் திரும்பியவுடன் டயரியை எடுத்து பின் வருமாறு எழுதினான்.

"இரண்டு வருஷமாக நான் டயரியில் ஒன்றுமே எழுதவில்லை. குழந்தைத் தனமான இந்தக் காரியத்தை மறுபடியும் செய்யக்கூடாதென்று நினைத்திருந்தேன். ஆனால் புனிதமான ஆத்மாவோடு சம்பாஷிப்பது குழந்தைத்தனமில்லை. இந்த ஆத்மா இத்தனை காலமாகத் தூங்கிக்கொண்டிருந்தது. ஏப்ரல் 28-ம் தேதியன்று கோர்ட்டில் நடந்த ஒரு அசாதாரணமான சம்பவத்தினால் நான் விழித்துக்கொண்டேன். நான் ஜூரியாக இருந்தேன். என்னால் கெட்ட காடுஷா கைதியின் உடையில், கைதிக் கூண்டில் நின்றிருந்தாள். ஒரு சிறு தவறினாலும் என் குற்றத்தினாலும் அவளுக்கு கடுங்காவல் தண்டனை கிடைத்தது. சிறைக்கு சென்று அவளைச் சந்திக்கமுயன்றேன். முடியவில்லை ஆனால் அவளைச் சந்தித்து, அவளிடம் என் குற்றத்தை ஒப்புக்கொண்டு, அதற்கேற்ற பிராயச்சித்தம் செய்து கொள்ளத் தீர்மானித்திருக்கிறேன். கடவுள் எனக்கு உதவி செய்வாராக. என் ஆத்மா சாந்தி பெற்றிருக்கிறது. நான் ஆநந்தபரவசனாக இருக்கிறேன்" என்று எழுதினான் நிக்லியுடாவ்.

# 37

காடுஷாவுக்கு அன்று இரவு வெகுநேரம் வரை தூக்கம் வரவில்லை. "கைதி ஒருவனையும் நான் விவாகம் செய்து கொள்ள முடியாது. ஒரு சிறை அதிகாரி, ஒரு குமாஸ்தா, ஒரு ரைட்டர் அல்லது வார்டரின் வேலைக்காரன் இவர்களில் யாராவது ஒருவருடன் ஏற்பாடு செய்துகொள்ள வேண்டும். நான் இளைத்துப் போகக் கூடாது. இளைத்தால் ஒழிந்து போவேன்'' என்றெல்லாம் சிந்தித்துக்கொண்டிருந்தாள்.

தன் வக்கீலும், பிரதம நீதிபதியும், தன்னைச்சந்தித்த மற்ற புருஷர்களும் கோர்ட்டுக்கு வந்தவர்களும் தன்னை ,எப்படிப் பார்த்தனர் என்பதை நினைத்துப் பார்த்தாள். அவள் தோழியாகிய பெர்தா அவளைச் சிறையில் சந்திக்க வந்தபொழுது கூறியது அவள் ஞாபகத்திற்கு வந்தது. கிடேவாவின் விபசார விடுதியில் அவள் இருந்தபொழுது 'காதலித்த' மாணவன் வந்திருந்தானும். காடுஷாவைப் பற்றி விசாரித்தானும். அவளுக்கு நேர்ந்த கதியைப்பற்றி வருத்தப்பட்டானும். நிக்லியுடாவைத் தவிர மற்ற எவ்வளவோ விஷயங்கள் அவள் ஞாபகத்திற்கு வந்தன. தன் குழந்தைப் பருவத்தையும் இளமையையும் நிக்லியுடாவ் மீது கொண்ட காதலையும் அவள் நினைத்துப்பார்க்கவில்லை.

அவற்றை நினைத்தால் அதிக வருத்தம் ஏற்பட்டிருக்கும். இந்த ஞாபகங்கள் அவள் ஹிருதயத்தின் ஆழத்தில் எங்கோ புதைந்து கிடந்தன. அவனை மறந்தேவிட்டாள். கனவில்கூட அவனைக் காண்பதில்லை. கோர்ட்டில் அவனைக் கண்டபொழுது கூட அடையாளம் கண்டுபிடிக்கமுடியவில்லை. அவன்தோற்றத்தில் ஏற்பட்டிருந்தமாறுதல் மாத்திரம் இதற்குக் காரணமில்லை. அவனைப் பற்றி அவள் நினைக்கவேயில்லை. அவன் ராணுவத்திலிருந்து திரும்பியபொழுது, தன் அத்தைகளைவந்து பார்க்காமலே போன அன்று இரவே அவனைப் பற்றிய ஞாபகத்தை அவள் புதைத்துவிட்டாள். தான் கர்ப்பம் என்பது அப்பொழுது காடுஷாவுக்குத் தெரியும். அவன் வருவான் என்ற நம்பிக்கை அவளுக்கு இருந்த வரை தன் வயிற்றில் இருந்த குழந்தை அவளுக்கு பாரமாகத் தோன்றவில்லை. வயிற்றுக்குள் குழந்தை அசையும்போதெல்லாம் ஆச்சரியமடைந்து வயிற்றைத் தொட்டுப்பார்த்துக் கொள்வாள். அன்று இரவு எல்லாம் மாறிவிட்டன. வயிற்றுப் பிள்ளை ஒருபெரிய பாரமாக அவளுக்குத் தோன்றியது.

அத்தைகள் நிக்லியுடாவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். போகும் வழியில் இறங்கிப் பார்த்துவிட்டுப் போகும்படி

அவனைக் கேட்டுக்கொண்டிருந்தனர். தான் அவசரமாக பீடர்ஸ் பர்க்குக்குப் போகவேண்டியிருப்பதாகப் பதில் தந்தி கொடுத்து விட்டான் நிக்லியுடாவ். காடுஷா இதைக் கேள்விப் பட்டவுடன் ரெயில்வே ஸ்டேஷனுக்குப் போய் அவனைச் சந்திக்கத் தீர்மானித்துக் கொண்டு விட்டாள். கிழவிகளுக்கு வேண்டிய வேலைகளை யெல்லாம் அவசரமாகச் செய்து முடித்து படுக்கைகளைத் தட்டிப்போட்டாள். பிறகு ஒரு பெரிய போர்வையை எடுத்துப் போர்த்துக் கொண்டு, இரு பழைய பூட்ஸ்களையும் அணிந்து, சமயற்காரியின் பெண் மாஷாவையும் அழைத்துக் கொண்டு ரயில்வே ஸ்டேஷனுக்கு விரைந்து ஓடினாள்.

வானம் தூறலும் துந்தலுமாக இருந்தது. வயல் வெளிகளில் வழிகூடச் சரியாகத் தெரியவில்லை. வழி தவறி விட்டது. வண்டி புறப்படுவதற்கு இரண்டாம் மணி கூட் அடித்தாகி விட்டது. அப்பொழுதுதான் அவள் ஸ்டேஷன்.போய்ச் சேர்ந்தாள். பிளாட்பாரத்தில் அவசா அவசரமாக ஓடினாள். ஒரு முதல் வகுப்பு வண்டியில் அவன் இருந்ததைக் கண்டு பிடித்து விட்டாள். அவன் இருந்த பெட்டி பிரகாசமாக இருந்தது. மற்றும் இரு அதிகாரிகள் எதிரே சீட்டாடிக் கொண்டு உட்கார்ந்திருந்தனர். நிக்லியுடாவ் ஒரு ஆஸனத்தில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டு எதையோ பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தான். காடுஷா அவனைக் கண்டு பிடித்தவுடன் வண்டியின் ஜன்னல் கதவைத் தட்டினாள். ஆனால் அதே சமயத்தில் கடைசி மணியும் அடித்து விட்டது. வண்டி பின் நோக்கி ஒரு குலுக்குக் குலுக்கிவிட்டு முன்னால் நகரத் தொடங்கியது. சீட்டாடிக் கொண்டிருந்தவர்களில் ஒருவன் சீட்டைக் கையில் எடுத்துக் கொண்டு எட்டிப் பார்த்தான். காடுஷா வண்டியோடு கூடவே சென்று ஜன்னலைத் தட்டினாள். ஜன்னலில் முகத்தைப் பதித்துக் கொண்டு பார்த்தாள். அந்த அதிகாரி ஜன்னலைத் திறக்க முயன்றான் ஆனால் முடியவில்லை. நிக்லியுடாவ் அவனை இழுத்து விட்டுவிட்டு தானே ஜன்னலைத் திறந்தான். ரயிலின் வேகம் அதிகரித்தது. அவள் வேகமாக நடக்க வேண்டி யிருந்தது. ஜன்னல் திறந்தது. ஆனால் கார்டு அவளைப் பிடித்து தூரத் தள்ளிவிட்டு வண்டியில் ஏறிக் கொண்டான். வண்டியோடு கூடவே, ஈரமாக இருந்த பிளாட்பாரத்தின்மீது காடுஷா ஓடினாள். பிளாட்பாரத்தின் கோடியில், விழவிருந்தவள் தெய்வாதீனமாகத் தப்பினாள். முதல் வகுப்பு வெகு தூரத்திற்கு முன்னால் போய் விட்டது. இரண்டாவது வகுப்பு பெட்டிகள் அவளைக் கடந்து போய்க் கொண்டிருந்தன. கடைசியில் மூன்றாவது வகுப்புப் பெட்டிகளும் அவளைப் பின்னால் விட்டுவிட்டு அதிவேகமாகப் போயின. ஆனால் அவள் ஓடிக் கொண்டே இருந்தாள். கடைசி பெட்டியும் அவளைக் கடந்து போய்விட்டது. அப்பொழுது எஞ்சினுக்குத் தண்ணீர் ஊற்றும் டாங்கி அருகே வந்து விட்டிருந்தாள். திறந்த வெளி.

''ஹோ'' வென்று வாடைக் காற்று அடித்துக் கொண்டிருந்தது. போர்வை அவள் தலையிலிருந்து பறந்து போய் விட்டது. ஆனால் அவள் மாத்திரம் ஓடிக் கொண்டே யிருந்தாள்.

சிறுமியும் அவளோடு கூடவே ஓடி வந்துக் கொண்டிருந்தாள். ''காடுஷா உன் போர்வை பறந்து போய்விட்டதே'' என்றாள் அவள்.

காடுஷா நின்று போர்வையைப் பற்றிக் கொண்டாள். உரக்க விக்கி விக்கி அழுதாள்.

''போய் விட்டது'' என்று சிறு கூச்சலிட்டாள்.

''அவன் குடித்துவிட்டு, வெல்வெட் ஆஸனத்தில் குஷியாக உட்கார்ந்திருக்கிறான். நான் காற்றிலும் மழையிலும் அடிபட்டு இங்கு நின்று கொண்டிருக்கிறேன்'' என்று தானே சொல்லிக் கொண்டாள். அழுது கொண்டே தரையில் உட்கார்ந்தாள். இந்தக் காட்சியைக் கண்ட சிறுமி பயந்து விட்டாள். காடுஷாவை அவள் அணைத்துக் கொண்டு. ''வீட்டுக்குப் போகலாமா?'' என்று கேட்டாள்.

அவள் கேட்டது காடுஷாவின் காதில் விழவேயில்லை. ''ஏதாவது ஒரு ரயில் போகும் பொழுது அதன் கீழ் விழுந்து விட வேண்டும். எல்லாம் தீர்ந்து போய்விடும்'' என்று காடுஷா யோசித்துக் கொண்டிருந்தாள்.

அன்றுமுதல் அவளுடைய மனோபாவமே மாறிவிட்டது அந்த பயங்கர இரவுக்குப் பின். கடவுளிடம் நம்பிக்கை இல்லை. ''கடவுளிடம் ஒருவருக்குமே நம்பிக்கை இல்லை. அவரைப்பற்றிப் பேசுவதெல்லாம் வெறும் ஏமாற்று பொய்'' என்று அவளுக்குத் தோன்றியது. அவளைக் காதலித்தவன் அவளை அனுபவித்தபின் தூக்கி எறிந்து விட்டான். அவளுடைய காதலை அவன் துஷ்பிரயோகம் செய்தான். இருந்தாலும் அவள் அறிந்தவர்களுக்குள் அவன் தான் நல்லவன். மற்றவர்களெல்லாம் இன்னும் கேவலம். வழக்கம்போல் வேலைசெய்ய முடியாத சமயத்தில் நிக்லியுடாவின் அத்தைகள் அவளை துரத்திவிட்டனர். பெண்களெல்லாம் அவளைப் பணம் சம்பாதிப்பதற்கான கருவியாக உபயோகித்தனர்; புருஷர்கள் இன்பம் பயக்கும் பொருளாக அவளை மதித்தனர். உலகத்தில் அனைவரும் தங்கள் இன்பத்தைப் பற்றித்தான் நினைத்தனர். வேறு ஒன்றைப் பற்றியும், அவர்கள் கவலைப்படவில்லை.

ஒவ்வொருவரும் தமக்காகவே வாழ்ந்தனர். தங்களுடைய சொந்த இன்பத்தில்தான் அனைவருக்கும் கண். கடவுளைப்

பற்றிய பேச்செல்லாம் வெறும் ஏமாற்று. சில சமயங்களில் அவள் மனத்தில் சந்தேகம் எழும். "உலகத்தில் எல்லாம் ஏன் இல்வளவு கேவலமாக இருக்கின்றன? ஒவ்வொருவரும் மற்றவர்க்ளை ஏன் இப்படித் துன்புறுத்துகின்றனர்?" என்றெல்லாம் நினைத்துப் பார்ப்பாள். இந்த உலகததில் இல்லாமல் செத்துப்போவது மேலென்று அந்த சமயங்களில் தோன்றும். இத்தகைய வருத்தம் தோன்றும் சமயத்தில் புகை குடிப்பாள். அல்லது சாராயம் குடிப்பாள்: அல்லது யாருடனாவது காதல் லீலை புரிவார்கள். அதோடு சரியாகப் போய் விடும்.

# 38

ஞாயிற்றுக் கிழமை காலை ஐந்துமணி. பெண்களின் சிறையில் ஒரு விஸில் சப்தம் கேட்டது. கோராபிளேவா அதற்கு முன்னாலேயே கண் விழிததுக்கொண்டிருந்தாள். காடுஷாவையும் அவள் எழுப்பினாள்.

"திருடனா?" என்று பயந்துவிட்டாள் காடுஷா. அவளுக்குப் பெருமூச்சு வாங்கியது. மறுபடியும் தூங்கி ஸ்வப்பன உலகத்தில் சஞ்சரிக்க வேண்டும் என்ற ஆசை அவளுக்கு. பயத்தினால் தூக்கம் கலைந்துவிட்டது. எழுந்து உட்கார்ந்து கொண்டு சுற்றுமுற்றும் பார்த்தாள். குழந்தைகள் இன்னமும் தூங்கிக்கொண்டிருந்தன. குழந்தையின் தூக்கத்தைக் கலைக்காமல் அதன் கீழ்ப்போட்டிருந்த துணியை ஒருத்தி நிதானமாக எடுத்துக்கொண்டிருந்தாள். ஒருத்தி குழந்தைத் துணிகளை உலர்த்திக்கொண்டிருந்தாள். ஒரு குழந்தை வீரிட்டு அழுதுகொண்டிருந்தது. தியோடோஸியா அதை எடுத்து வைத்துக்கொண்டு சமாதானப்படுத்திக் கொண்டிருந்தாள். க்ஷயரோகத்தால் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த கைதி இருமிக்கொண்டிருந்தாள். ஒருத்தி ஜெபம்செய்து கொண்டிருந்தாள். ஒரு பெண் தூக்கக் கண்ணோடு மந்தமாகப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். இரு கைதிகள் உள்ளே வந்து, நாற்றம் அடித்துக்கொண்டிருந்த ஒரு தொட்டியை வெளியே தூக்கிக்கொண்டு போனார்கள். பெண்கள் பல் தேய்த்துக் கொள்வதற்காக வெளியே இருந்த குழாய்களுக்குப் போனார்கள். முதல்நாள் கோராபிளேவாவோடு சண்டை போட்ட கைதி இன்னும் மற்றொரு ஸ்திரீயோடு சண்டை பிடித்துக்கொண்டாள். மீண்டும் கூச்சல் கூக்குரல் எல்லாம் எழுந்தது.

ஒரு கிழ ஜெயிலர் அங்குவந்து அவள் முதுகில் ஒரு அடி கொடுத்து, "உன்னைத் தனி அறையில் போட்டுப் பூட்டவேண்டுமா ?" என்று கேட்டான். அவன் கொடுத்த அடி அந்த சிறைக்கூடம் முழுவதும் எதிரொலித்தது. "இனிமேல் இது போன்ற கூச்சல் கிளம்பக் கூடாது" என்று எச்சரித்தான்.

அவன் தமாஷ் பண்ணுவதாக நினைத்துக் கொண்டு, "கிழவன் துள்ளிவிளையாடுறான்" என்றாள் அந்த ஸ்திரீ.

"சரி, சீக்கிரம் ஆகட்டும். பிரார்த்தனைக்காகக் கோவிலுச்குப் போகத் தயாராக இருங்கள்" என்றான் ஜெயிலர்.

"சோதனைக்காக வெளியே வாருங்கள்" என்று கத்தினான் ஒரு ஜெயிலர்.

அறைகளுக்குள் அடை பட்டிருந்த மற்ற கைதிகளும் வெளியே வந்தார்கள். எல்லாக் கைதிகளும் இரு வரிசைகளாக நின்றனர். ஒவ்வொரு ஸ்திரீயும் தனக்கு எதிரே உள்ள ஸ்திரீயின் தோள் மீது கையைப் போட்டுக் கொள்ள வேண்டும். அப்படியே நின்றனர். அதிகாரிகள் அவர்களை எண்ணினார்கள். சோதனை முடிந்தது.

ஸ்திரீ வார்டர் அவர்களை மாதா கோவிலுக்கு அழைத்துக் கொண்டு போனாள். எல்லாக் கைதிகளும் வெள்ளை உடை அணிந்து தலையில் வெள்ளைக்கைகுட்டை கட்டிக் கொண்டிருந்தார்கள், சிலர் வர்ண உடைகளும் அணிந்திருந்தனர். இவர்கள் தண்டனை பெற்று ஸைபீரியா செல்லும் தங்கள் கணவன்மாரோடு செல்பவர்கள். அந்த வரிசையின் மத்தியில் இருந்தனர் காடுஷாவும் தியோடோஸியாவும். கைதிகளின் மிருதுவான காலடிச் சப்தமும், அவர்களுடைய குரலும், இடை யிடையே எழும் ம் சிரிப்புக் குரலும் ஒன்று சேர்ந்து ஒலித்தன. அவர்கள் படிக்கட்டுகளைக் கடந்து கீழே இறங்கி வந்து விட்டனர். காடுஷா,தன் விரோதியாகிய போச்சோவாவை தியோடோஸியாவுக்குக் காட்டினாள். அவள் முகம் கடுத்து வழிந்து கொண்டிருந்தது. எல்லாரும் கீழே வந்த பின் அவர்கள் பேசுவதை நிறுத்தி விட்டனர். பிறகு குனிந்து வணங்கி விட்டு. சர்ச்சுக்குள் பிரவேசித்தனர். அது வரை சர்ச்சில் ஒருவரும் இல்லை, இவர்களுடைய இடங்கள் சர்ச்சின் வலப்பக்கத்தில் இருந்தன.

பெண் கைதிகள் வந்து சேர்ந்த பின், ஆண் கைதிகள் வந்தனர். இவர்கள் எல்லாரும் சாம்பல் நிற உடை அணிந்திருந்தனர்.

சிலுவையை முத்தமிட்டனர். நெருங்குவதற்காக அவர்கள் ஒருவரை ஒருவர் முறுமுறுத்துத் திட்டிக்கொண்டனர். பாதிரியார் சிறை இன்ஸ்பெக்டருடன் பேசிக்கொண்டே தம் கையையும், சிலுவையையும் கைதிகள் முத்தமிடுவதற்குக் காட்டிக்கொண்டிருந்தார். வழுக்கி விழுந்துவிட்ட கைதிகளின் உஜ்ஜீவனத்திற்காக ஏற்பட்ட தொழுகை இவ்விதம் முடிந்தது.

## 40

ஏசுவின் பெயரைப் பாதிரியார் பன்முறை திருப்பித் திருப்பி உச்சரித்துப் புகழ்பாடினார். ஆனால் அங்கு நடந்தவற்றை அதே ஏசு எதிர்க்கிறார் என்பதை சிறை இன்ஸ்பெக்டர் முதல் காடுஷாவரை அங்கு கூடியிருந்தவர்களில் ஒருவரும் அறியவில்லை. "ஒரு மனிதன் மற்றொரு மனிதனை எஜமானே என்று அழைப்பதையும், கோயிலில் பிரார்த்தனை செய்வதையும் ஏசுநாதர் தடுத்திருக்கிறார் என்பதும், ஒவ்வொருவரும் ஏகாந்தமாக இருந்துப பிரார்த்தனை நடத்த வேண்டும் என்பதும் அவர்களுக்குத் தெரியாது. கோயில் கட்டுவதை ஏசுநாதர் தடுத்திருக்கிறார். கோயில்களை அழிக்கவே தாம் வந்திருப்பதாக அவர் கூறியிருக்கிறார். கோயிலில் பிரார்த்தனை செய்வதற்கு பதில் சத்தியமாகவும், மனப்பூர்வமாகவும் பிரார்த்தனை செய்யவேண்டுமென்று சொல்லியிருக்கிறார். பிறரைப் பற்றித் தீர்ப்புக் கூறுவது. அவர்களைச் சிறையில் தள்ளுவது. மனிதர்களைத் தூக்கிலிடுவது முதலியவற்றை அவர் எதிர்க்கிறார். எந்தவிதமான பலாத்காரமும் கூடாதென்று அவர் உத்திரவுசெய்திருக்கிறார்; எல்லா அடிமைகளுக்கும் சுதந்திரம் அளிக்கவே தாம் வந்ததாக அவர் கூறினார்", என்பதெல்லாம் அவர்களுக்குத் தெரியாது.

கிறிஸ்துபிரானின் பெயரால் செய்யப்படும் இந்தச் சடங்குகளெல்லாம் அவரைப் பரிகசிப்பதற்கு ஒப்பாகும் என்பதை அவர்கள் உணர்ந்ததாகத் தெரியவில்லை. இங்கு நடைபெற்ற இதே சடங்குகளைக் கண்டித்ததற்காக ஏசுநாதர் சிலுவையில் அறையப்பட்டார். தாங்கள் முத்தமிட்ட சிலுவை ஏசுநாதர் மரிப்பதற்குக் காரணமாக இருந்த தூக்குமரத்தின் சின்னம் என்பதை அங்கு ஒருவரும் உணரவில்லை. கடவுளின் மாமிசத்தைத் தின்று ரத்தத்தைக் குடிப்பதாகக் கற்பனைசெய்து கொள்ளும் பாதிரிமார் சிறுவர்களைக் கெடுத்து அவர்கள் சந்தோஷமடையாதபடி தடுக்கும் குற்றத்திற்கு ஆளாகிறார்கள் என்பதை ஒருவரும் உணரவில்லை.

மனச்சாட்சியின் குத்தல் இல்லாமல் பாதிரியார் இதையெல்லாம் செய்தார். சிறு வயது முதலே அவர் இப்படிப் பயிற்சி பெற்றிருக்கிறார். ரொட்டி மாமிசமாக மாறி விட்டதாகவோ, சில வார்த்தைகளைத் திருப்பித் திருப்பிச் சொல்வதால் ஆத்மாவுக்கு உபயோகம் உண்டென்றோ, கடவுளின் ஒரு பகுதியைத் தாம் உட்கொண்டதாகவோ அவர் உண்மையில் நம்பவில்லை. ஒருவரும் இவற்றை நம்ப முடியாது. ஆனால் இதைச் செய்து தான் ஆக வேண்டுமென்று அவர் நினைத்தார். தம் குடும்பத்தைக் காப்பாற்றிக் கொள்ளவும், குழந்தைகளைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பவும் போதிய பணம் இதிலிருந்து வந்ததால் அவருடைய நம்பிக்கை இன்னும் பலப்பட்டது. சின்ன சாமியாருக்கு இந்த நம்பிக்கை இன்னும் பலமாக இருந்தது. ஏனென்றால் மதத்தின் அடிப்படைத் தத்துவத்தை அவர் மறந்து விட்டார். தொழுகை பிரார்த்தனை எல்லாவற்றிற்கும் பணம் உண்டு என்பதை அவர் அறிந்திருந்தார். உண்மைக் கிறிஸ்தவர்கள் இவற்றிற்கெல்லாம் தாராளமாகப் பணம் கொடுத்தார்கள். ஆகையால், "கருணை புரிய வேண்டும் கருணை புரிய வேண்டும்." என்று அவர் கூறிய வார்த்தைகளெல்லாம் மனப்பூர்வமாக வந்தவையே. விறகு, உருளைக்கிழங்கு முதலியவற்றை விற்பவர்களின் குரலில் எவ்வளவு உறுதி தொனிக்கிறதோ அவ்வளவு இவர் மந்திரம் ஓதும்பொழுது இவருடைய குரலிலும் தொனித்தது. கோவிலுக்குச் சென்ற சிறை இன்ஸ்பெக்டருக்கோ மற்றவர்களுக்கோ இவையெல்லாம் புரியவில்லை. இருந்தாலும் மன்னரே நம்பியதால் தாங்களும் நம்ப வேண்டும் என்பது அவர்களுடைய கருத்து. தங்கள் கொடுஞ் செயல்களுக்கு இந்த நம்பிக்கை ஆதாரவாக இருப்பதாக அவர்களுக்குத் தோன்றியது. இது இல்லாமலிருந்தால் தங்கள் அதிகாரத்தை உபயோகித்து இவ்வளவு கொடுஞ்செயல்கள் புரிவது அவர்களுக்கு அசாத்தியமாகி விட்டிருக்கும். சிறை இன்ஸ்பெக்டர் இயற்கையிலேயே மிகவும் நல்ல மனுஷ்யன். இந்த நம்பிக்கை இல்லாமலிருந்தால் இப்பொழுதும் செய்யும் செய்கைகளோடு உயிர் வாழ மாட்டார். அதனால் தான் அவர் பக்தியோடு பணிந்தார். தேவர்களைப்பற்றிப் பாடிய பொழுது மனங்கசிய முயன்றார்.

இந்த வாழ்க்கையிலும் மறு உலகத்திலும் சுகபோகங்களைக் கொடுக்கக் கூடிய ஏதோ ஒரு விசித்திர சக்தி அங்கு இருந்த சிலையிலும் மெழுகு வத்தி ஸ்டாண்டிலும் பளபளக்கும் கிண்ணங்களிலும் தட்டுகளிலும் இருப்பதாக கைதிகள் நினைத்திருந்தனர். இந்தமதத்தைத் தழுவுபவர்கள் எவ்வளவு ஏமாற்றுக்குள்ளாகிறார்கள் என்பதை அறிந்து தங்கள் மனத்திற்குள்ளேயே சிரித்துக்கொண்டவர்கள் ஒரு சிலர் தான். பெரும்பாலானவர்கள் பிரார்த்தனைகளின் மூலம் முயற்சி செய்தும் தாங்கள் கோரியவற்றைப் பெறவில்லை. (அவர்களுடைய பிரார்த்-

தனைக்கு பதில் கிடைக்கவில்லை) தங்கள் தோல்வி தற்செயலானது என்று நினைத்துத் திருப்தி அடைந்தார்கள். இந்த வாழ்க்கைக்கு இல்லாவிட்டாலும் மறு உலக வாழ்க்கைக்காவது இவையெல்லாம் அத்தியாவசியம் என்று கருதினார்கள்.

காடுஷாவும் மற்றவர்களைப் போலத்தான் நினைத்தாள் அவள் உணர்ச்சியில் மந்தமும் பக்தியும் கலந்திருந்தன. தன் தோழிகளைத் தவிர வேறொருவர் கண்ணிலும் படாமல் இருக்க வேண்டும் என்பதற்காக அவள் ஒரு கம்பத்தின் ஓரமாக நின்றிருந்தாள். பிரசாதம் வாங்கிக் கொள்ள எல்லாரும் முன்னால் நகர்ந்த பொழுது அவளும் தியோடாஸியாவும் முன்னால் வந்தார்கள். சிறை இன்ஸ்பெக்டரையும், அவருக்குப் பின்னால் ஜெயிலர்களிடையே மெல்லிய தாடிகளோடு கூடிய ஒரு இளம் குடியானவனும் நின்றிருப்பதை இருவரும் பார்த்தனர். இவன் தான் தியோடாஸியாவின் கணவன். தன் மனைவியின் மீதே அவன் பார்வையைப் பொருத்தியிருந்தான். பிரார்த்தனை நடந்து கொண்டிருந்த பொழுது காடுஷா அவனை ஆராய்ந்து கொண்டிருந்தாள். தியோடாஸியாவுடன் ரகசியமாக ஏதோ பேசிக்கொண்டிருந்தாள். பேசிக்கொண்டே இருக்கையில் மற்றவர்கள் குனிந்து எழுந்தால் தானும் குனிந்து நிமிர்வாள்.

## 41

நிக்லியுடாவ் அதிகாலையிலேயே வீட்டை விட்டுப் புறப்பட்டு விட்டான். தெருக்களில் கிராமவாசிகள் பால் விற்றுக் கொண்டு போனார்கள். வசந்த காலத்தின் முதல் மழை முன் இரவு தான் பெய்திருந்தது. தரையில் புல்லின் பசுமை ஒளி வீசியது. தோட்டங்களில் மரங்கள் மொட்டு விட்டுத் தளிர்த்திருந்தன. வீடுகளிலும் கடைகளிலும் ஜன்னல்கள் திறந்து சுத்தம் செய்யப்பட்டன.

[illegible] மார்க்கெட் வழியாக நிக்லியுடாவ் போக வேண்டியிருந்தது. அங்கு வியாபாரிகள் [illegible] அடுக்கிக் கொண்டு [illegible] தோளில் போட்டுக் கொண்டு விற்றார்கள். அவர்களைச் சுற்றி [illegible]. அன்று ஞாயிற்றுக்கிழமையாகையால் தொழிற்சாலைகளில் வேலை செய்பவர்கள் சுத்தமான உடை அணிந்து உலாவிக் கொண்டிருந்தார்கள். போலீஸ்காரன் கையில் துப்பாக்கியுடன் நின்று காவல் புரிந்து கொண்டிருந்தான். தெரு மத்தியில் வண்டிகள் போகும் சப்த

மிட்டு ஓடிக் கொண்டிருந்தன. கோயில் மணிகளின் ஒலி காற்றில் மிதந்து வந்தது. சிறையில் நடப்பது போன்ற பிரார்த்தனைக்கு வருமாறு மக்களை அது அழைத்தது. ஜனங்களும் ஆடம்பரமாக உடை அணிந்து கோயில்களுக்குப் போய்க் கொண்டிருந்தார்கள்.

நிக்லியுடாவின் வண்டி சிறை வரையில் கூடச் செல்லவில்லை. சிறைக்குச் செல்லும் கடைசி ரஸ்தாவிலேயே அவன் இறங்கி விட்டான். சிறைக்கு அருகே பலர் கையில் பொட்டலங்களுடன் நின்றிருந்தார்கள். வலது புறத்தில் மரத்தினால் சிறு வீடுகள் கட்டப் பட்டிருந்தன. இடது பக்கத்தில் இரண்டடுக்கு மாடி வீடு ஒன்று இருந்தது. சிறையின் பெரிய கட்டடம் எதிரே இருந்தது. கைதிகளைப் பார்க்க வந்தவர்கள் சிறைக்கு அருகே வர அனுமதிக்கப்படவில்லை. யாராவது வந்தால், குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்த காவல் காரன் கோஷமிட்டான்.

மரக் கட்டடங்களின் வாசலில் ஒரு ஜெயிலர் கையில் நோட்புக்குடன் உட்கார்ந்திருந்தான். கைதிகளைப் பார்க்க வந்தவர்கள் அவனிடம் சென்று, தாங்கள் பார்க்க விரும்பிய கைதியின் பெயரைச் சொன்னார்கள். அவன் அந்தப் பெயர்களை எழுதிக் கொண்டான். நிக்லியுடாவும் அவனிடம் போய் காடுஷாவின் பெயரைச் சொன்னான். அதையும் அவன் எழுதிக் கொண்டான்.

"ஏன் எங்களை உள்ளே விடவில்லை!" என்று கேட்டான் நிக்லியுடாவ். "பிரார்த்தனை நடந்து கொண்டிருக்கிறது. அது முடிந்தவுடன் விடுவார்கள்" என்று பதில் அளித்தான் ஜெயிலர்.

நிக்லியுடாவ் அந்தக் கூட்டத்திலிருந்து வெளியேறி சற்று ஒதுங்கி நின்றான். கிழிந்த உடையும், கசங்கிய தொப்பியும் அணிந்து காலில் செருப்பு இல்லாமல் இருந்த ஒருவன் சிறையை நோக்கிப் போனான்.

"எங்கே போகிறாய்!" என்று கத்தினான் சிறை காவல்காரன்.

"கூச்சல் போடாதே" என்று வந்தவன் அலட்சியமாகக் கூறிவிட்டுத் திரும்பினான். "போக வேண்டாமென்றால் நிற்கிறேன். இதற்காக பெரிய ஜெனரல் மாதிரி கூச்சல் போட வேண்டுமோ!" என்றான் அவன்.

அவன் சொன்னதை அங்கீகரித்துக் கூட்டம் சிரித்தது. கூட்டத்தில் இருந்தவர்களில் பெரும்பாலானவர்கள் மோசமான உடைதான் அணிந்து கொண்டிருந்தார்கள். சில

ஸியான தோற்றம் உள்ளவர்களும் இருந்தார்கள். நிக்லியுடாவின் பக்கத்தில் தடித்த தேகமுடைய ஒருவன் நின்று கொண்டிருந்தான். "இப்பொழுதுதான முதல்தடவையாக கைதியைப் பார்க்க வந்திருக்கிறீர்களா?" என்று அவனைக் கேட்டான் நிக்லியுடாவ். தான் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் வருவது வழக்கமென்று அவன் பதிலளித்தான். அவன் ஒரு பாங்கியில் காவல்காரன். அவனுடைய தம்பி பொய்க் கையெழுத்திட்டதாக தண்டிக்கப் பட்டிருந்தான். தன் சரித்திரம் முழுவதையும் அவன் நிக்லியுடாவிடம் சொன்னான்.

அவன் நிக்லியுடாவை பதில் கேள்வி கேட்பதற்குள், ஒரு குதிரை வண்டியில் வந்த மாணவன் அவர்கள் அருகே வந்து அவர்களுடைய சம்பாஷணையைக் கலைத்தான். குதிரை வண்டியின் சக்கரத்திற்கு ரப்பர் கட்டுகள் போட்டிருந்தன. வண்டியில் அவனோடு பர்தா அணிந்த பெண் ஒருத்தி உட்கார்ந்திருந்தாள். "நாங்கள் கொண்டுவந்திருக்கும் ரொட்டிகளைக் கைதிகளுக்குக் கொடுக்கலாமா? எப்பொழுது கொடுக்கலாம்?" என்று கேட்டான் அந்த மாணவன். வண்டியிலிருந்த பெண்ணின் பெற்றோர் ரொட்டிகளைக் கைதிகளுக்குக் கொடுக்கச் சொல்லி அனுப்பியிருந்தார்கள்.

"நானும் இப்பொழுது தான் முதல் தட்வையாக இங்கு வந்திருக்கிறேன; அவனைக் கேளுங்கள்" என்று அங்கு உட்கார்ந்திருந்த ஜெயிலரைக் காட்டினான் நிக்லியுடாவ்.

அவர்கள் பேசிக்கொண்டிருந்த பொழுது சிறையின் இரும்புக் கதவு கணகணவென்று திறந்தது. ஒரு அதிகாரியும் ஒரு ஜெயிலரும் வெளியே வந்தார்கள். "கைதிகளைப் பார்க்க வந்திருப்பவர்கள் இப்பொழுது உள்ளே போகலாம்" என்று, நோட் புத்தகம் வைத்திருந்த ஜெயிலர் அறிவித்தான். கூட்டம் விழுந்தடித்துக் கொண்டு வாசற்படியை நோக்கிச்சென்றது அவர்கள் உள்ளே சென்றபொழுது ஒரு ஜெயிலர் அவர்களை உரக்க எண்ணினான். அவர்கள் மற்றொரு வாசற்படியைத் தாண்டும்பொழுது மற்றொரு ஜெயிலர் ஒவ்வொருவரையும் தொட்டு எண்ணினான். நிக்லியுடாவ் உள்ளே சென்றபொழுது ஜெயிலர் அவனையும் தொட்டான். இது நிக்லியுடாவுக்கு ரோஷத்தை உண்டாக்கியது. ஆனால் உடனே அவன் தன்னுடைய மாறுதலை நினைத்துக் கொண்டான். தனக்கு ரோஷம் வந்ததைப் பற்றி அவனே வெட்கப்பட்டான்.

வாசற்படிகளைத் தாண்டியவுடன் உள்ளே ஒரு பெரிய அறை இருந்தது. ஏசுநாதர் சிலுவையில் அறையப்பட்டிருந்த பெரிய படம் ஒன்று அங்கு வைக்கப்பட்டிருந்தது. நிக்லியுடாவ் இதைக் கண்டவுடன் பிரமித்துப் போனான்.

"இதை எதற்காக இங்கு வைத்திருக்கிறார்கள்?" என்று யோசித்தான். அந்தப் படத்திற்கும் விடுதலைக்கும் ஒரு சம்பந்தம் இருப்பதாக அவன் மனம் நினைத்தது. சிறைவாசத்திற்கும் அப்படத்திற்கும் தொடர்பு இருப்பதாகத் தோன்றவில்லை.

அவன் மெதுவாகப் போய்க்கொண்டிருந்தான். அவசரமாகச் சென்றவர்களை முன்னே போகவிட்டு விட்டான். மாறுபட்ட உணர்ச்சிகள் அவனை வந்து தாக்கின. குற்றமில்லாமல் தண்டிக்கப்பட்ட காடுஷாவின் மீதும், முதல் தண்டனை பெற்ற இளைஞனின் மீதும் அனுதாபம் ஒரு பக்கம், தான் காடுஷாவைப் பார்க்க விரும்புவது பற்றிய சங்கோஜம் ஒரு பக்கம். அறையின் மற்றொரு கோடியில் இருந்த ஜெயிலர் ஏதோசொன்னான். ஆனால் சிந்தனையில் மூழ்கியிருந்த நிக்லியுடாவ் அதை கவனிக்கவில்லை. எல்லாரையும் முன்னால் போகவிட்டுவிட்டு அவன் கடைசியாகச் சென்றான். முக்கித் தள்ளிய கூட்டத்தை அவன் பின்தொடர்ந்து சென்றதால் பெண்கள் சிறைக்குப்போவதற்குப் பதிலாக புருஷர்களின் சிறைக்குப் போய்விட்டான்.

கைதிகளைச் சந்திக்கும் அறைக் கதவை நிக்லியுடாவ் திறந்தவுடன் சந்தை இரைச்சலைப் போல் பிரம்மாண்டமான கூச்சல் கேட்டது. அறையின் மத்தியில் ஜனங்கள் கும்பலாக மொய்த்துக்கொண்டிருந்தார்கள். அங்கு என்னவென்று பார்த்தான் நிக்லியுடாவ். வந்திருந்தவர்கள் கைதிகளைப் பேட்டி கண்டுகொண்டிருந்தார்கள். அறையின் மத்தியில், தரைமுதல் கூறை வரை இரு இரும்புக் கம்பி வலைகள் அடிக்கப்பட்டிருந்தன. இரு வலைகளுக்கு மிடையில் 7 அடி தூர இடை வெளி இருந்தது. அந்த இடை வெளியில் ஒரு சோல்ஜர் குறுக்கும் நெடுக்கும் போய்க்கொண்டிருந்தான். ஒரு வலைக்கு இப்பால் வந்திருந்தவர்களும், எதிர்புற வலைக்கு அப்பால் கைதிகளும் நெருக்கிக்கொண்டு நின்றனர். ஒரு பக்கத்தில் இருப்பவர்கள் சொல்வது மற்றொரு பக்கத்தில் இருப்பவர்களுக்குக் காதில் விழவில்லை. தாங்கள் சொல்வது எதிரில் இருப்பவர்களுக்குக் கேட்கும்படி செய்வதற்கு கூச்சலிட்டுப் பேசவேண்டியிருந்தது கைதிகளின் தாய்மாரும் தந்தையரும் குழந்தைகளும் கம்பி வலையில் முகத்தைப் பதித்துக் கொண்டு பேசிக் கொண்டிருந்தார்கள்.

இந்த நிலைமையில் தான் தானும் பேசவேண்டும் என்பதை நிக்லியுடாவ் அறிந்தவுடன் இந்த நிர்பந்தங்களை ஏற்படுத்தியவர்கள் மீது அவனுக்கு ஆத்திரம் மூண்டது. மனித உணர்ச்சிகள் இவ்விதம் நசுக்கப்படுவதைக் கண்டு ஒருவருக்காவது ரோஷம் வராததைக்காண அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. சோல்ஜர்கள் இன்ஸ்பெக்டர், கைதிகள் எல்லாரும்

இவை யெல்லாம் அவசிய மென்று கருதுபவர்கள் போலவே நடந்து கொண்டார்கள்.

நிக்லியுடாவ் இந்த அறையில் ஐந்து நிமிஷ நேரம் இருந்தான். எதுவும் செய்யத் தான் எவ்வளவு சக்தியற்றவனாக இருக்கிறான் என்பதையும் தனக்கும் உலகத்திற்கும் எவ்வளவு வித்தியாசம் இருக்கிறது என்பதையும் அவன் உணர்ந்த பொழுது அவன் உணர்ச்சி குன்றியது. கப்பலில் பிரயாணம் செய்பவர்களுக்குத் தலை சுற்றுவதைப் போல் அவன் மனம் குழம்பியது.

## 42

உடனே அவன் தைரியத்தை வருவித்துக்கொண்டு, "இங்கு நான் எதைச் செய்ய வந்தேனே அதைச் செய்தாக வேண்டும். அடுத்தபடி என்ன செய்ய வேண்டும்?" என்று யோசித்துக்கொண்டு, சிறை அதிகாரி யாராவது இருக்கிருரா என்று சுற்று முற்றும் பார்த்தான். கூட்டத்திற்குப் பின்னல், ஒருவர் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தார். நிக்லியுடாவ் அவரிடம் சென்று, "பெண் கைதிகள் எங்கே இருக்கிருர்கள்? ஒரு கைதியைச் சந்திக்க வேண்டும்" என்று அதி வினயமான குரலில் கேட்டான் நிக்லியுடாவ்.

"அதை நீங்கள் ஹாலிலேயே சொல்லி யிருக்க வேண்டும், நீங்கள் பார்க்க வேண்டியவர் அரசியல் கைதியா?" என்ருர் அந்த அதிகாரி.

"இல்லை. சாதாரண—"

"அவளுக்கு தண்டனை விதித்தாகி விட்டதா?"

"முந்தா நாள் தான் தண்டித்தார்கள்."

"பெண்கள் வார்டுக்கு அதோ அப்படிப்போக வேண்டும்" என்று வழியைச் சுட்டிக் காட்டினுர் அதிகாரி. நிக்லியுடாவின் தோற்றத்தைக் கண்டவுடன் அவன் கவனத்திற்கு உரியவன் என்று தோன்றியது அந்த அதிகாரிக்கு. உடனே ஒருவேலைக் காரனைக் கூப்பிட்டு, நிக்லியுடாவை பெண்கள் வார்டுக்கு அழைத்துச் செல்லும்படி கூறினுர்.

இங்கு நிக்லியுடாவுக்கு எல்லாம் விசித்திரமாகத் தோன்றின. ஆனல் இன்ஸ்பெக்டருக்கும் பிரதம ஜெயிலருக்கும் நன்றி செலுத்த வேண்டும் போல் அவனுக்குத் தோன்றியது.

மற்றெல்லாவற்றையும் விட இது பெரும் விசித்திரமாக இருந்தது.

வேலைக்காரன் நிக்லியுடாவைப் பெண்கள் வார்டுக்கு அழைத்துச் சென்றான். இங்கு கைதிகளைச் சந்திக்கும் அறை சற்றுச் சிறியதாக இருந்தது. இந்த அறையிலும் மத்தியில் இரும்புக்கம்பி வலைகள் அடிக்கப்பட்டிருந்தன. ஆனால் புருஷக் கைதிகளைச் சந்திக்கும் இடத்தைக் காட்டிலும் இங்கு கைதிகளும் அவர்களைப் பார்க்க வந்திருந்தவர்களும் குறைவாக இருந்தார்கள். ஆனால் கூச்சலும் குழப்பமும் பழைய அறையில் இருந்தது போலவே தான் இருந்தன. ஒரு பக்கம் தியோடாஸியாவும் அவளுடைய கணவனும் பேசிக் கொண்டிருந்தனர். அவன் கஷ்டப்பட்டு கண்ணீரை அடைக்கிக்கொண்டிருந்தான். இன்னும் எத்தனையோ கைதிகள் தங்கள் பந்து மித்திரர்களுடன் பேசிக்கொண்டிருந்தனர். ஆனால் அங்கு காடுஷாவை மாத்திரம் காணவில்லை. கைதிகளுக்குப்பின்னால் ஜன்னல் அருகே ஒரு பெண் நின்றிருந்தாள். அவள் காடுஷா தான் என்பதை நிக்லியுடாவ் அறிந்தான். அவனுடைய ஹிருதயம் படபட வென்று அடித்துக் கொண்டது; மூச்சு நின்று விடும்போலிருந்தது. உச்ச கட்டம் நெருங்கிக் கொண்டிருந்தது. அவன் வலை அருகே போய் அவளைப் பார்த்தான். தியோடாஸியாவுக்குப் பின்னால் அவள் நின்று கொண்டிருந்தாள். தியோடாஸியா சொன்னதைக் கேட்டு அவள் சிரித்துக் கொண்டிருந்தாள். அவள் இப்பொழுது கைதியின் உடையில் இல்லை. உடம்போடு ஒட்டினாற் போன்ற வெள்ளை கௌன் அணிந்திருந்தாள். இடுப்பில் சட்டையை இழுத்து விட்டு கௌன் போட்டுக் கொண்டிருந்தாள். தலையில் அவள் கட்டிக் கொண்டிருந்த வெள்ளை கை குட்டைக் குள்ளிருந்து அவளுடைய சுருண்ட கூந்தல் வெளியே தெரிந்தது.

" இன்னும் ஒரு க்ஷணத்தில் தீர்மானமாகிவிடும். அவளை எப்படிக் கூப்பிடுவது. அவளே வருவாளா ?" என்று யோசித்துக்கொண்டிருந்தான். வலைகளுக்கு நடுவே குறுக்கும் நெடுக்குமாக நடந்துகொண்டிருந்த ஸ்திரீ வார்டர் நிக்லியுடாவ் அருகேவந்து, "நீங்கள் யாரைப் பார்க்கவந்திருக்கிறீர்கள் ?" என்று கேட்டாள்.

" காடுஷாவை " என்று கஷ்டப்பட்டு பதில் சொன்னான் நிக்லியுடாவ்.

" காடுஷா உன்னைப்பார்க்க யாரோ வந்திருக்கிறார்கள் " என்று இறைந்தாள் வார்டர்.

காடுஷா நிமிர்ந்து நடந்துவந்து வலையருகே நின்றாள். அவளுடைய இந்தத் தோற்றத்தை அவன் எத்தனையோமுறை பார்த்திருக்கிறான். அவள் இரு கைகளை இரண்டு பக்கமும் தள்ளிவிட்டு முன்னால்வந்து, ஆச்சரியத்துடன் நிக்லியுடாவை நோக்கினாள். அவள் கண்கள் அவனைக் கேள்வி கேட்டன. அவன் உடையைப் பார்த்து அவன் யாரோ பணக்காரன் என்பதை மாத்திரம் அறிந்து புன்சிரிப்புச் சிரித்தாள். முகத்தைக் கம்பி வலையில் பதித்துக்கொண்டு "நீங்கள் என்னையா பார்க்க வந்திருக்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

நான் .......நான்........நான்........உன்னைப் பார்க்க விரும்பினேன்......நான்......" என்று குழறினான் நிக்லியுடாவ் வழக்கமாகப் பேசும் அளவுக்குக்கூட இன்று அவனால் உரக்கப்பேச முடியவில்லை. பக்கத்தில் இருந்தவர்கள் தங்கள் சொந்த விஷயங்களைப்பற்றி கோஷமிட்டுப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

நிக்லியுடாவ் சொன்னது காடுஷாவின் காதில் விழவில்லை. ஆனால் அவன் பேசும்பொழுது முகத்தில் தோன்றிய யாவும், அவள் விரும்பாத ஒன்றை அவளுக்கு ஞாபக மூட்டியது. அவள் முகத்தில் இருந்த புன்சிரிப்பு போய்விட்டது. ஆழ்ந்த வேதனையின் கோடுகள் அவள் முகத்தில் படர்ந்தன.

"நீங்கள் சொல்வது காதில் விழவில்லையே" என்று இரைந்தாள் காடுஷா. அவள் முகம் முன்னைக்காட்டிலும் அதிகமாகச் சுண்டிப்போயிருந்தது.

"நான் எதற்காக வந்தேனென்றால் ....." என்றான் நிக்லியுடாவ.

"ஆமாம், என் கடமையை நான் செய்துகொண்டிருக்கிறேன். குற்றத்தை ஒப்புக்கொள்கிறேன்" என்று நிக்லியுடாவ் நினைத்தான். அவனுக்குத் துக்கம் வந்தது; தொண்டை அடைத்துக்கொள்வதுபோல் இருந்தது. கம்பி வலையைக் கையினால் பற்றிக்கொண்டான். கண்ணீரைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டான். பக்கத்தில் இருந்தவர்கள் கூச்சலிட்டுப் பேசிக்கொண்டே யிருந்தார்கள்.

காடுஷா அவனுடைய உணர்ச்சிப் பெருக்கைக் கண்டு அவனை அடையாளம் கண்டு பிடித்துவிட்டாள்.

"நீங்கள் யாரைப்போல் இருக்கிறீர்க ளென்றால்...இல்லை, எனக்கு ஞாபகம் வரவில்லை" என்று காடுஷா அவனைப் பாராமலே பதிலளித்தாள். அவள் முகத்தின் வருத்தக் களை இன்னும் அதிகமாயிற்று.

"நான் உன்னிடம் மன்னிப்புக் கேட்க வந்திருக்கிறேன்" என்று உரக்கச் சொன்னான் நிக்லியுடாவ். நெட்டுருப் பண்ணிய பாடத்தை ஒப்பிப்பதுபோல் மந்தமாக இருந்தது அவன் குரல். இதைச் சொல்லிவிட்டு அவன் குழப்பத்துடன் சுற்றிலும் பார்த்தான். "வெட்கம் வந்தால் நல்லதுதான், அந்த வெட்கத்தைச் சகிக்க வேண்டும்" என்று நினைத்துக் கொண்டு உரக்கப் பேசத் தொடங்கினான்.

"என்னை மன்னித்துவிடு. நான் உனக்கு பயங்கரமான கொடுமை செய்துவிட்டேன்" என்றான்.

காடுஷா பார்வையை வேறுபக்கம் திருப்பாமல் அவனையே பார்த்துக் கொண்டு அசைவற்று நின்றாள்.

தொடர்ந்து பேசிக்கொண்டேயிருக்க அவனால் முடியவில்லை. கம்பி வலையிலிருந்து சிறிது பின்னால் வந்து தன் துக்கத்தை அடக்கிக்கொள்ள முயன்றான்.

நிக்லியுடாவ் புருஷர்கள் வார்டிலிருந்து இங்கு வர உதவி செய்த இன்ஸ்பெக்டர் அந்த அறைக்குள் பிரவேசித்தார், நிக்லியுடாவ் ஒருவருடனும் பேசாமல் நின்றிருப்பதைக் கண்டு, "நீங்கள் பார்க்கவந்த ஸ்திரீயோடு நீங்கள் ஏன் பேசவில்லை?" என்று கேட்டார். நிக்லியுடாவ் மூக்கைச் சிந்திக்கொண்டு அமைதியாக இருப்பதுபோன்ற தோற்றத்தை வருவித்துக் கொண்டான்.

"வலை வழியாகப் பேசுவது ரொம்பவும் கஷ்டமாக இருக்கிறது, ஒன்றும் காதில் விழவேயில்லை" என்றான் நிக்லியுடாவ்.

இன்ஸ்பெக்டர் சிறிது யோசித்துவிட்டு, "அவளைச் சிறிதுநேரம் இங்கு வரவழைக்கலாமே" என்று சொல்லிவிட்டு, "மேரி கார்லோவ்னா காடுஷாவை வெளியே அழைத்துக் கொண்டு வா" என்று வார்டருக்கு உத்தரவிட்டார்.

## 43

ஒரு நிமிஷத்திற்குள் காடுஷா, பக்கத்துக் கதவு வழியாக வெளியே வந்தாள். அவள் மெதுவாக அடியெடுத்து வைத்து நிக்லியுடாவ் அருகே வந்து நின்றாள். கீழ்க் கண்ணால் அவனைப் பார்த்தாள். அவளுடைய சுருண்ட கூந்தல் இரண்டு தினங்களுக்கு முன்னால் எப்படி வாரி விடப்பட்டிருந்ததோ அப்படியே இன்றும் இருந்தது. கவர்ச்சிகரமான அவள் முகத்தில்

அமைதி நிலவியது. அவளுடைய கரு விழிகள் விசித்திரமாக அவனை நோக்கின.

"நீங்கள் இங்கு பேசலாம்" என்று சொல்லிவிட்டு இன்ஸ்பெக்டர் பின்னுக்கு நகர்ந்தார். சுவர் ஓரமாகப் போட்டிருந்த ஒரு பெஞ்சில் போய் உட்கார்ந்தான் நிக்லியுடாவ். இன்ஸ்பெக்டரைக் காடுஷா கேள்வி கேட்பது போல் பார்த்துவிட்டு, நிக்லியுடாவைத் தொடர்ந்து சென்று அதே பெஞ்சில் உட்கார்ந்தாள்.

"நீ என்னை மன்னிப்பது கஷ்டம் என்பது எனக்குத் தெரியும்" என்று சொல்லிவிட்டு நிறுத்தினான் நிக்லியுடாவ். துக்கம் அவனைக் குலுக்கியது. "ஏற்கனவே நடந்துபோனவற்றைத் திருத்த என்னால் முடியாவிட்டாலும் இப்பொழுது என்னால் சாத்தியமானதைச் செய்யப் போகிறேன்" என்றான்.

காடுஷா அவன் சொன்னதற்கு பதில் அளிக்காமல், "நீங்கள் என்னை எப்படிக் கண்டு பிடித்தீர்கள்!" என்று கேட்டாள். அவள் பார்வை அவன் மீதும் இல்லை. வெளியிலும் இல்லை. மத்தியில் எங்கோ பார்த்துக் கொண்டிருந்தாள்.

"பகவானே! எனக்கு உதவி செய். நான் என்ன செய்ய வேண்டும் என்பதை எனக்குச் சொல்" என்று பிரார்த்தித்தான் நிக்லியுடாவ்.

"முந்தாநாள் நான் ஜூரியாக இருந்தேன். அப்பொழுது என்னை உனக்கு அடையாளம் தெரியவில்லையா?" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"இல்லை. அப்பொழுது ஒருவரையும் அடையாளம் கண்டு பிடிக்க அவகாசம் இல்லை. அன்று நான் உங்களைப் பார்க்கக் கூட இல்லை" என்றாள் காடுஷா.

"ஒரு குழந்தை இருந்ததில்லையா!

"கடவுள் கிருபையால் அது உடனே செத்துப் போய் விட்டது" என்று முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு பதிலளித்தாள் காடுஷா.

"ஏன்?"

"நான் ரொம்பவும் உடம்பு சரியில்லாமல் இருந்தேன். செத்துப் பிழைத்தேன் என்றே சொல்ல வேண்டும்" என்று, தன் விழிகளை உயர்த்தாமலே பதில் சொன்னாள் காடுஷா.

"என் அத்தைகள் உன்னை எப்படி விட்டார்கள்?"

"குழந்தை வைத்திருப்பவளை யார் வேலைக்கு வைத்துக் கொள்வார்கள்? அவர்களுக்கு விஷயம் தெரிந்தவுடன் என்னை அனுப்பிவிட்டார்கள். அதைப் பற்றி யெல்லாம் பேசிப் பயன் என்ன? எனக்கு ஒன்றும் ஞாபகம் இல்லை. அதெல்லாம் தீர்ந்து போய்விட்டன."

"இல்லை. இன்னும் தீர்ந்து போகவில்லை. என் பாபத்திற்குப் பரிகாரம் தேட விரும்புகிறேன்" என்றான் நிக்லியுடாவ்.

"பரிகாரம் செய்வதற்கு ஒன்றுமில்லை. நடந்தது நடந்து போய்விட்டது" என்று சொல்லிவிட்டுப் பரிதாபமாகச் சிரித்தாள் காடுஷா.

அவனை மறுபடியும் சந்திக்க முடியுமென்று காடுஷா எதிர் பார்க்கவில்லை. இந்த இடத்தில், இந்த சமயத்தில் பார்க்கப் போவதாக அவள் நிச்சயமாக எதிர் பார்க்கவில்லை. அவனை முதலில் அடையாளம் கண்டு பிடித்தவுடன் அவள் விரும்பாத பழைய நினைவுகளெல்லாம் வந்தன. நிக்லியுடாவ் முதலில் தன்னைக் காதலித்த பொழுது தான் வசித்த இன்ப உலகம் அவள் ஞாபகத்திற்கு வந்தது. பிறகு அவன் தனக்கு இழைத்த கொடுமையும் அதைத் தொடர்ந்து வந்த இழிவுகளும் கஷ்டங்களும் நினைவு வந்தன. அவள் மனம் நொந்தது. இந்த ஞாபகங்களை யெல்லாம் மறக்க முயன்றாள்.

"இப்பொழுது அழகாக உடை யணிந்து என் பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் நிக்லியுடாவ், முன்பு நான் காதலித்த இளம் நிக்லியுடாவ் அல்ல. வேண்டும்போது என் போன்ற பிறவிகளை உபயோகித்துக் கொள்பவர்களில் இவனும் ஒருவன். என் போன்ற பிறவிகளும் இவர்களைச் சரியாகப் பயன் படுத்திக் கொண்டு எவ்வளவு லாபம் பெற முடியுமோ அவ்வளவு லாபம் சம்பாதிக்க வேண்டும்" என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள். அதனால் தான் அவள் புன் சிரிப்புச் சிரித்தாள். அவனை எப்படி உபயோகித்துக் கொள்வது என்பதை யோசித்துக் கொண்டு அவள் மௌனமாக இருந்தாள்.

"அதெல்லாம் முடிந்து போய் விட்டன. இப்பொழுது எனக்கு தீவாந்திர சிட்சை விதித்திருக்கிறார்கள்" என்றாள் காடுஷா. இந்த பயங்கர வார்த்தையைச் சொல்ல அவள் உதடு நடுங்கியது.

"எனக்குத் தெரியும். நீ குற்றவாளியல்ல என்பது எனக்கு நன்றாகத் தெரியும்."

"குற்றவாளி! நான் திருடியா? கொள்ளைக்காரியா? எல்லாம் வக்கிலைப் பொறுத்திருக்கிறது என்று இங்கு எல்லாரும் சொல்கிறார்கள். நான் ஒரு மனு போட வேண்டுமாம். அதற்குப்பணம் செலவாகும் என்கிறார்கள்.

"ஆமாம், நிச்சயமாகச் செலவாகும். இதைப்பற்றி நான் ஏற்கனவே ஒரு வக்கிலோடு பேசியிருக்கிறேன்" என்றான் நிக்லியுடாவ்.

"பணச் செலவைப் பார்க்கக் கூடாது. வக்கில் கெட்டிக்காரராக இருக்க வேண்டும்" என்று சொல்லி விட்டு மறுபடியும் புன் முறுவல் செய்தாள் காடுஷா.

"சாத்தியமானதை யெல்லாம் நான்செய்கிறேன்" என்றான் நிக்லியுடாவ்.

அவர்கள் மௌனமாக இருந்தனர். மறுபடியும் அவள் புன் முறுவல் பூத்தாள்.

"உங்களிடம் கொஞ்சம் பணம் கேட்க விரும்புகிறேன்... முடிந்தால்......அதிகம் வேண்டாம் பத்து ரூபிள் போதும்" என்று அவள் திடீரென்று கேட்டாள்...

"கொடுக்கிறேன், கொடுக்கிறேன்" என்று நிக்லியுடாவ் கொஞ்சம் குழப்பத்தோடு கூறி விட்டு, தன் சட்டைப் பையில் பணப்பை இருக்கிறதா என்று தொட்டுப் பார்த்துக் கொண்டான். அங்கு குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்த இன்ஸ்பெக்டரை அவள் அவசரமாக நோக்கினாள். "அவன் எதிரில் கொடுக்காதீர்கள் அவன் எடுத்துக் கொண்டு விடுவான்" என்றாள் காடுஷா.

இன்ஸ்பெக்டர் பின் புறம் திரும்பிய பொழுது நிக்லியுடாவ் பணப்பையை எடுத்தான். பணத்தைக் கொடுப்பதற்குள் இன்ஸ்பெக்டர் திரும்பி விட்டதால் அதைத்தான் கையிலேயே மறைத்துக் கொண்டான்.

ஒரு காலத்தில் இனிமையாக இருந்த அவள் முகத்தைப் பார்த்துக் கொண்டே, "இப்பொழுது இவள் ஜீவனற்றுக் கிடக்கிறாள்" என்று நினைத்தான். அவளுடைய கண்களில் ஒரு கொடிய ஒளி வீசியது. நிக்லியுடாவ் பணம் வைத்திருந்த கையையும், இன்ஸ்பெக்டர் போகும் வழியையுமே அவளுடைய கண்கள் மாறி மாறிப் பார்த்தன. நிக்லியுடாவின் மனத்தில் இரவில் அவளோடு விவாதித்த குரல் மீண்டும் இந்த சமயத்தில் எழுந்தது. "இவளை நீ ஒன்றும் செய்ய முடியாது. உன் கழுத்தில் பெரிய பாறையைக் கட்டிக் கொள்வதற்கு ஒப்பாகத்

தான் முடியும். அது உன்னையும் மூழ்கடித்துத் தானும் மூழ்கிப்போய் விடும். மற்றவர்களுக்கும் நீ உபயோகமாக இல்லாதபடி தடுத்து விடும். ஆகையால் இங்கு உன் கையில் உள்ள பணத்தை அவளிடம் கொடுத்து விட்டு, ஒரே வழியாக அவளுக்கு முழுக்குப் போட்டுவிடு'' என்றது அந்தக்குரல். அவன் மனத்திற்குள் சிறிது, நேரம் போராட்டம் நடந்தது இறுதியில் எல்லாவற்றையும் இப்பொழுதே அவளிடம சொல்லி விடுவதென்று தீர்மானித்துக் கொண்டான்.

''காடுஷா, நான் உன்னிடம் மன்னிப்புக் கேட்பதற்காக வந்தேன. நீ ஒன்றும் பதிலே சொல்ல வில்லையே. என்னை மன்னித்து விட்டாயா? என்னை எப்பொழுதாவது மன்னிப்பாயா?'' என்று கேட்டான் நிக்லியுடாவ்.

காடுஷா இப்பொழுதும் ஒரு பதிலும் சொல்லவில்லை. அவன் கையையும் இன்ஸ்பெக்டரையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டிருந்தாள். இன்ஸ்பெக்டர் திரும்பியபொழுது அவள் அவசரமாகக் கையை நீட்டி நோட்டைப் பற்றி எடுத்து தன் பெல்ட்டுக்குள் மறைத்து வைத்துக்கொண்டாள்.

''விசித்திரம்தான். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று கேட்டுவிட்டுச் சிரித்தாள் காடுஷா. அது அலக்ஷியச் சிரிப்புபோல் தோன்றியது அவனுக்கு.

''எனக்கு விரோதமான ஒருவன் இவள் மனத்திற்குள் புகுந்துகொண்டிருக்கிறன். அவன் அவளை ஆதரிக்கிறன். நான் அவளுடைய ஹிருதயத்திற்குள் புகாதபடி அவன் தடுத்துக்கொண்டிருக்கிறன்'' என்று தோன்றியது நிக்லியுடாவுக்கு. ஆனல் இதனுல் அவன் வெறுப்படையவில்லை, ஏதோ ஒரு விசித்திர சக்தி அவனை அவளுக்கருகில் சேர்த்து இழுத்தது. அவளுடைய ஆன்மாவைத் தூண்டி எழுப்ப வேண்டும் என்பதும், ஆனல் இது மிகவும் கஷ்டமான விஷயம் என்பதும் அவனுக்குத் தெரியும். ஆனல் அந்தக் கஷ்டமே அவனை இழுத்தது, அவளைக் கண்டு அவன் மிகவும் அனுதாபப்பட்டான். அவளுக்காகவோ அல்லது மற்றவர்களுக்காகவோ அவன் இதற்கு முன் இவ்வளவு அனுதாபப் பட்டதில்லை. அவனுடைய உணர்ச்சியில் சுயநலம் இல்லை. அவளிடமிருந்து அவன் ஒன்றும்பெற விரும்பவில்லை. ''அவள் இப்பொழுது இருப்பது போல் இருக்கக்கூடாது. அவள் விழித்து எழுந்து முன்பு எப்படி இருந்தாளோ அப்படி ஆகவேண்டும்'' என்பது தான் அவன் விருப்பம்.

''காடுஷா, ஏன் அப்படிப் பேசுகிறாய்? உன்னை எனக்குத் தெரியும். உன்னையும் அந்தப் பழைய நாட்களையும் நான் ஞாபகப் படுத்திக் கொள்கிறேன்'' என்றான் நிக்லியுடாவ்.

சிறைபெற்ற விபசாரிதான். இருந்தாலும் அவளுக்கு வாழ்க்கையைப் பற்றிய ஓர் அபிப்பிராயம் இருந்தது. அதனால்தான் அவள் திருப்தியுடனும் பெருமையுடனும் இருக்க முடிந்தது. கிழவர்கள் இளைஞர்கள், பள்ளிக்கூடப் பையன்கள், படித்தவர்கள் படிக்காதவர்கள் முதலிய அனைவரும் அழகான பெண்களோடு கூடிக்களிப்பதுதான் உயர்ந்த காரியம். இதுதான் வாழ்க்கையைப் பற்றிய அவள் அபிப்பிராயம். எல்லாரும் வேறு வேறு வேலைகளில் ஈடுபட்டிருப்பவர்களைப் போல் நடித்தால் கூட, இதைத் தவிர வேறு ஒன்றையும் அவர்கள் விரும்பவில்லை; காதூஷா அழகான பெண். ஒருவரைத் திருப்தி செய்வதும் திருப்தி செய்யாமலிருப்பதும் அவளுடைய அதிகாரத்திலிருந்தது. ஆகையால், தன்னை முக்கியமானவளாக அவள் கருதினாள். அவளுடைய பழைய வாழ்க்கையும் தற்போதைய வாழ்க்கையும் இந்த அபிப்பிராயத்தை ஊர்ஜிதம் செய்தன.

சென்ற பத்து வருஷ காலத்தில் நிக்லியுடாவ் முதல் ஜெயிலர்கள் வரை அனைவரும் அவளை விரும்பினார்கள். அவளை விரும்பாதவர்களை அவள் கவனிக்கவில்லை. ஆகையால் உலகம் முழுமையும் காமவெறி பிடித்து அலைவதாக அவளுக்குத் தோன்றியது. கள்ளத்தனமாகவோ, பலாத்காரத்தினாலோ, தந்திரத்தினால் மோசடியின் மூலமோ வேறு எந்த வழியிலாவது அவளை அடைய வேண்டுமென்று உலகம் விரும்புவதாக அவளுக்குத் தோன்றியது. வாழ்க்கையை அவள் புரிந்து கொண்டிருந்த விதம் இதுதான். அந்த நோக்குடன் பார்க்கும் பொழுது தான் கேவலமென்று அவளுக்குத் தோன்றவில்லை; மிக முக்கியமானவளென்றே தோன்றியது. மற்றெல்லாவற்றையும் விடத் தன் செய்கை மிக மேலானதாக அவள் மதித்தாள். இந்த அபிப்பிராயத்தை விட்டால் அவள் முக்கியத்துவத்தை இழந்து விடுவாள். ஆகையால்தான் இந்த அபிப்பிராயம் உள்ள கோஷ்டியை அவள் விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டிருந்தாள். நிக்லியுடாவ் அவளை வேறு ஒரு உலகத்திற்கு அழைத்துச் செல்ல விரும்புகிறான் என்பதை உணர்ந்தாள். அவனைப் பின்பற்றினால் தனக்குக் கிடைத்துள்ள சுயமரியாதையும், வாழ்க்கையில் தான் பெற்றுள்ள முக்கியஸ்தானமும் போய்விடும் என்பதை தீர்க்க திருஷ்டியால் அறிந்தாள். ஆகையால்தான் அவனை அவள் எதிர்த்தாள். இதனால் தான் தன் இளமையைப் பற்றிய ஞாபகங்களையும், நிக்லியுடாவுடன் தான் கொண்டிருந்த உறவு பற்றிய நினைவுகளையும் விரட்டியடித்தாள். உலகத்தைப் பற்றிய அவளுடைய தற்போதைய கருத்துக்கு மாறாக இருந்தன இந்த நினைவுகள். அவை அவளுடைய ஞாபகத்தை விட்டே போய் விட்டன; அவை வெளிக் கிளம்பாதபடி எங்கோ ஒரு மூலையில் அடக்கி வைக்கப்பட்டிருந்தன. ஒரு காலத்தில் அவளுடைய பரிசுத்தமான காதலுக்குப் பாத்திர

மாக இருந்த நிக்லியுடாவா இன்று அவள் சந்தித்த நிக்லியுடாவ்? இவன் யாரோ ஒரு பெரிய பணக்காரன். இவனை அவள் பயன் படுத்திக் கொள்ள வேண்டும். பொதுவாக எல்லாப் புருஷர்களுடனும் அவள் எத்தகைய உறவு வைத்துக் கொள்வது வழக்கமோ அதே போன்ற உறவைத்தான் நிக்லியுடாவுடனும் வைத்துக் கொள்ள முடியும்.

“முக்கியமான விஷயத்தை அவளுடன் சொல்ல முடியவில்லையே” என்று நினைத்துக் கொண்டே மற்றவர்களுடன் வெளியே நகர்ந்தான் நிக்லியுடாவ். “நான் அவளை மணக்க விரும்புவதாக அவளிடம் சொல்லவில்லை; ஆமாம் சொல்லவில்லைதான்; ஆனால் சொல்லி விடுகிறேன்” என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

கைதிகளைப் பார்த்துவிட்டு வெளியே சென்றவர்களை இரு ஜெயிலர்கள் தொட்டுத் தொட்டு எண்ணி வெளியே விட்டனர். நிக்லியுடாவ் வாசற்படியைக் கடந்து வெளியே சென்ற பொழுது அவனையும் ஒரு ஜெயிலர் தொட்டான். ஆனால் ஆனால் இந்த தடவை நிக்லியுடாவுக்கு ரோஷம் வரவில்லை. அவன் இதைக் கவனிக்கக்கூட இல்லை.

# 45

தன் புற வாழ்க்கை முழுமையும் மாற்றியமைத்துக் கொள்ள நிக்லியுடாவ் விரும்பினான். வேலைக்காரர்களை யெல்லாம் அனுப்பிவிட்டு, தன் பெரிய வீட்டையும் விட்டு சிறிய இடத்திற்குக் குடிபோக விரும்பினான். ஆனால் நகரில் உள்ள வீட்டிற்குக் குளிர்காலம் வரை ஒருவரும் வாடகைக்கு வரமாட்டார்கள் என்பதை அக்ரபெனா பெட்ரோவ்னா ஞாபகப் படுத்தினான். ஆகையால் எளிய வாழ்க்கை நடத்த அவன் செய்த முயற்சிகள் பயனளிக்கவில்லை. வீட்டில் புதிய வேலைகள் ஆரம்பமாயின. கம்பளத்தினால் ஆன பொருள்களை யெல்லாம் வெளியே கொண்டு வந்து போட்டுத் தட்டினார்கள். இதில் கேட்கிபர், வேலைக்காரப் பையன், சமையற்காரன், கோர்னி முதலிய அனைவரும் ஈடுபட்டார்கள். ஒருவருமே உபயோகித்திராத கம்பளங்கள், உடைகள் எடுத்துத் தொங்க விடப்பட்டன. கேட்கிபரும் வேலைக்காரப் பையனும் சட்டைக் கையை மடித்து விட்டுக் கொண்டிருந்தார்கள். அறையில் ரசகற்பூர உருண்டையின் நாற்றம் நிரம்பியது.

நிக்லியுடாவ் இவற்றை யெல்லாம் பார்த்த பொழுது இவ்வளவு உபயோகமற்ற சாமான்கள் இருந்ததைப்பற்றி ஆச்சரிய

களை வழக்கமாகச் சந்திக்கும் இடத்தில் அல்லாமல் வேறொரு இடத்தில் வேறு சமயத்தில் சந்திக்க கவர்னரின் அனுமதி வேண்டுமென்கிறார்களே. அது அவசியம்தானா?''

''ஆமாம்: அப்படித்தான் நினைக்கிறேன். ஆனால் தற் சமயம் கவர்னர் ஊரில்லை. உதவிக் கவர்னர்தான கவர்னர் ஸ்தானத்தில் இருக்கிறான். அவன் சுத்த மடையனாயிற்றே. அவனுடன நீங்கள் ஒன்றும் செய்ய முடியாதே''

''மாஷ்லெனிகோவா பதவிக்கு வந்திருக்கிறான்?'

''ஆமாம்.''

''எனக்கு அவனைத் தெரியுமே'' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டான் நிக்லியுடாவ். இந்த சமயத்தில் மிக கோரமான ஒரு ஸ்திரீ உள்ளே பிரவேசித்தாள். அவள் வக்கிலின் மனைவி அவள் பின்னாலேயே உயரமான ஒருவனும் வந்தான். அவன் ஒரு எழுத்தாளன். அவனை நிக்லியுடாவ் பார்த்திருக்கிறான்.

''அனடோல், ஸைமன் இவானிச் வந்திருக்கிறார். அவர் கவிதைகளைப் படித்துக் காட்டுவதாகச் சொல்லுகிறார். நீங்கள் கட்டாயம் வரவேண்டும்'' என்று அந்த ஸ்திரீ தன் கணவனை அழைத்தாள். பிறகு அவள் தன் கணவனிடம் ஏதோ ரகசிய மாகப் பேசினாள். தன்னைப் பற்றித்தான் பேசுகிறாள் என் பதை நிக்லியுடாவ் அறிந்து அங்கிருந்து புறப்பட முயன்றான். ஆனால் அவள் அவனைத் தடுத்து, ''எனக்கு உங்களைத் தெரியும், ஆகையால் மற்றொருவர் அறிமுகம் செய்துவைக்க வேண்டுமென்று அவசியமில்லை. சற்று தங்கியிருந்து இந்த இலக்கிய விசாரத்தில் கலந்துகொள்ளும்படி கேட்டுக் கொள் கிறேன்'' என்றாள் அவள்.

வக்கில் தமக்கு மிகவும் பிடித்த ஒரு விஷயத்தை விட மன மில்லாதவர் போல முகத்தை வைத்துக் கொண்டு, ''நான் எவ்வளவு வேலைசெய்ய வேண்டியிருக்கிறது பார்'' என்று இரு கையையும் விரித்தார்.

நிக்லியுடாவ் வருத்தம்தோய்ந்த பார்வையுடன் அவளுக்கு நன்றி தெரிவித்து, அவளுடைய அழைப்பை நிராகரித்தான்.

வெளி அறையில் வக்கில் குமாஸ்தா இருந்தான். எழுதி வைத்திருந்த பெடிஷனை நிக்லியுடாவின் கையில் கொடுத்து விட்டு, ''இந்த வழக்குக்காக வக்கிலுக்கு நூறு ரூபிள் கொடுக்க வேண்டிவரும், பானரின் சாதாரணமாக இப்படிப்பட்ட வழக்கு களை எடுத்துக்கொள்வதே யில்லை. உங்களுக்கு உதவிசெய்ய வேண்டும் என்பதற்காகத் தான் இதை எடுத்துக் கொண் டிருக்கிறார்'' என்றான்.

"இந்த பெடிஷனில் யார் கையெழுத்து போடவேண்டும்?" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"கைதியே கையெழுத்துப் போடலாம். அவளுடைய அனுமதி கிடைத்தால் வக்கீலே போடலாம்" என்று பதிலளித்தான் குமாஸ்தா.

"ஓ, வேண்டாம் பெடிஷனை நான் அவளிடமே எடுத்துச் சென்று கையெழுத்து வாங்கிக் கொண்டு வருகிறேன்" என்முன் நிக்லியுடாவ். குறிப்பிட்ட காலத்திற்கு முன்னுலேயே காடுஷாவைச் சந்திக்க ஒரு காரணம் கிடைத்தது பற்றி அவனுக்குச் சந்தோஷம்.

## 46

வழக்கமான நேரத்தில் சிறை விஸில்கள் ஊதின. கட கட வென்ற சப்தத்துடன் சிறைக்கூடுகளின் கதவுகள் திறந்தன. தோட்டி வேலைசெய்த கைதிகள் நாற்றத்தைக் காற்றில் பரப்பிக் கொண்டே குறுக்கும் நெடுக்கும் சென்ருர்கள். கைதிகள் பல் தேய்த்து, உடைகளை மாற்றிக்கொண்டு, தேநீர் தயாரிப்பதற்காக வெந்நீர் வாங்கிக்கொள்ள தங்கள் அறைகளிலிருந்து சென்ருர்கள்.

அன்றுகாலைசிறைமுழுமையிலும்கைதிகள்பேசிக்கொண்டதெல்லாம் இரு கைதிகளைப் பற்றித்தான். அன்று சவுக்கடி பெற விருந்த இரு கைதிகளைப் பற்றித்தான் எல்லாரும் பேசிக்கொண்டார்கள். அவர்களில் ஒருவன் வாஸிலியெவ். அவன் கொஞ்சம் படித்தவன். ஓர் இடத்தில் குமாஸ்தாவாக இருந்தான். பொருமையினுல் தன் எஜமானியை கொன்றுவிட்டான். அவன் வெகு குஷியாக இருந்தான். சிறை அதிகாரிகளிடம் அவன் கண்டிப்பாய நடந்து கொள்வான். ஆகையால் மற்றக் கைதிகளுக்கு அவனிடம் பெரும் மதிப்பு. சிறை விதிகளெல்லாம் அவனுக்குத் தெரியும். அவை சரியானபடி அமூல் நடத்தப்படவேண்டுமென்று அவன் வற்புறுத்தினுன். இதனுல் சிறை அதிகாரிகளுக்கு அவன்மீது ஆத்திரம்.

மூன்றுவாரத்திற்கு முன்னுல் ஒரு கைதி ஒரு ஜெயிலரின் மீது கொஞ்சம் ஸூப்பைக் கொட்டிவிட்டான். அதற்காக அந்த ஜெயிலர் கைதியை அடித்தான். வாஸிலியெவ் அந்தக் கைதிக்காகப் பரிந்துகொண்டு, "கைதியை ஜெயிலர் அடிப்பது சட்ட விரோதம்" என்ருன்.

"உனக்கு சட்டத்தைக் கற்பிக்கிறேன் வா" என்று சொல்லிவிட்டு வாஸிலியெவ்வை ஜெயிலர் வாய்க்கு வந்த

படி திட்டினான். வாஸிலியெவ்வும் பதிலுக்குத் திட்டினான். ஜெயிலர் அவனை அடிக்கப்போனான். வாஸிலியெவ் அவனுடைய கையைப்பிடித்து முறுக்கிவிட்டான். ஜெயிலர் இன்ஸ்பெக்டரிடம் புகார் செய்தான். வாஸிலியெவ்வைத் தனிக்கொட்டடியில் போட்டுப் பூட்டும்படி இன்ஸ்பெக்டர் உத்தரவிட்டான்.

தனிக்கொட்டடிகள் என்பவை இருள் சூழ்ந்த அறைகள். அவற்றில் படுக்கையோ, மேஜையோ நாற்காலியோ ஒன்றும் கிடையாது. ஆபாஸமான தரையில்தான் கைதிகள் படுக்க வேண்டும். எலிகள் அவர்கள்மீது குதித்து ஓடும். ரொட்டியை அவை இழுத்துச் செல்வதைக் கைதி தடுத்தால் அவை கடிக்கவரும். அந்த எலிகள் அவ்வளவு தைரியம் பெற்றிருந்தன. "நான் குற்றம் ஒன்றும் செய்யவில்லை; ஆகையால் நான் தனிக்கொட்டடிக்குப் போகமாட்டேன்" என்று வாஸிலியெவ் மறுத்தான், ஜெயிலர்களோடு அவன் போராடினான். ஜெயிலர்களிடமிருந்து அவனை விடுவிக்க மற்றும் இரு கைதிகள் உதவி செய்தனர். எல்லா ஜெயிலர்களும் அங்கு வந்து கூடிவிட்டனர். பயில்வான் என்று பெயர் பெற்ற பேட்ரோவ் என்ற ஜெயிலரும் அங்குவந்து சேர்ந்தான். அவர்கள் கைதிகளைக் கீழே தள்ளி தனிக் கொட்டடிகளுக்குள் அடைத்துப் பூட்டினர். சிறையில் கலகம் நடந்துவிட்டதாக அதிகாரிகள் கவர்னருக்கு அறிவித்தனர். குற்றம் செய்த முக்கியமான இரு கைதிகளுக்கும் சவுக்கடி கொடுக்கும்படி கவர்னர் உத்தரவிட்டார். வாஸிலியெவ்வுக்கும், நெப்போமுஷி என்ற கைதிக்கும் தலா முப்பது அடி கொடுக்கும்படி உத்திரவு கூறியது. பெண் கைதிகளை பேட்டி காணும் இடத்தில் தண்டனை நிறைவேற்றப்படவிருந்தது.

முதல்நாள் மாலையே இது எல்லாக் கைதிகளுக்கும் தெரிந்துவிட்டது. எல்லாக் கைதிகளும் இதைப்பற்றித்தான் உணர்ச்சி ததும்பப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

கோராபிளேவா. தியோடாஸியா, ஹோரோஷங்கா ஆகியவர்கள் தாங்கள் இருந்த இடத்தில் கூடி உட்கார்ந்து கொண்டு டீ குடித்துக்கொண்டிருந்தார்கள். வோட்கா (ஒருவகை மது) குடித்திருந்ததால் அவர்கள் அனைவரும் உற்சாகமாக இருந்தனர். காடுஷாவுக்கு இப்பொழுது ஏராளமாக வோட்கா கிடைத்தது. ஆகையால் அவள் தன் தோழிகளுக்கும் நிரம்பக் கொடுத்தாள்.

இவர்களும் வாஸிலியெவ்வைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர். கோராபிளேவா தன் பலத்த பல்லினால் ஓர் கற்கண்டுக் கட்டியை மென்றுகொண்டே. "அவன் ஒன்றும் அப்

படிக் காலித்தனம் செய்யக்கூடியவனல்ல. ஒரு கைதியை அடிப்பது சட்டத்திற்கு விரோதம். அதனல்தான் அவன் தன் தோழனுக்காகப் பரிந்துகொண்டு போனன்'' என்ருள்.

''அவன் ரொம்ப நல்லவன் என்று சொல்லுகிருர்கள்'' என்ருள் தியோடாஸியா ஒரு கட்டை மீது உட்கார்ந்தபடியே. அவளுக்கு எதிரே பெஞ்சியின் மீது தேநீர் ஜாடி வைத்திருந்தது.

''நீ அவரைக் கேட்டால்'' என்ருள் ரயில்வே வாச்மன்னின் மனைவி காடுஷாவை நோக்கி. நிக்லியுடாவைப் பற்றித்தான் அவள் குறிப்பிட்டாள்.

''நான் அவரிடம் சொல்கிறேன். அவர் எனக்காக எதை வேண்டுமானுலும் செய்வார்'' என்று தலையைச் சாய்த்துப் புன் சிரிப்புச் சிரித்துக் கொண்டே கூறிஞள் காடுஷா.

''சரி, ஆனல் அவர் எப்பொழுது வரப்போகிருர்? இவர்களை அழைத்துக் கொண்டு வர ஆட்கள் போய் விட்டார்களே! பயங்கரமான விஷயம்'' என்று பெருமூச்சு விட்டுக்கொண்டே கூறிஞள் தியோடாஸியா.

தன் கிராமத்தில் ஒருவன் சவுக்கால் அடிக்கப்பட்ட காட்சியை வாச்மன் மனைவி விவரித்தாள். மாடியில் ஏதோ குரல்களும் காலடிச்சத்தங்களும் கேட்கவே அவர்கள் பேச்சை நிறுத்திஞர்கள்.

''அதோ அவனை இழுத்துக்கொண்டு வருகிருர்கள். பிசாசுகள். அவனைக் கொன்றே விடுவார்கள். அவன் பணிந்து பேசாததால் ஜெயிலர்களுக்கு வெறி பிடித்துப் போயிருக்கிறது'' என்ருள் ஒரு ஸ்திரீ.

மாடியில் நிசப்தம் நிலவியது. வாச்மன் மனைவி தான் கூறத் தொடங்கிய கதையை முடித்தாள். இதே போன்ற மற்ருெரு சம்பவத்தை ஒரு கைதி விவரித்தாள். கோராபிளேவாவும், வாச்மன் மனைவியும் தையல் வேலையைத் தொடங்கிஞர்கள், டீ குடித்த பாத்திரங்களை தியோடாஸியா எடுத்து வைத்தாள். காடுஷா ஒரு பக்கத்தில் முழங்காலைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். படுத்துத் தூங்க வேண்டும் போலிருந்தது. அந்த சமயத்தில் ஸ்திரீ வார்டர் ஒருத்தி வந்து, காடுஷாவை அழைத்தாள். ''உன்னை யாரோ பார்க்க வந்திருக்கிருர்கள். ஆபீஸ் ரூமுக்கு வா'' என்று அழைத்தாள் அவள்.

காடுஷா தன் தலையில் கட்டிக் கொண்டிருந்த கைகுட்டையை ஒழுங்கு படுத்திக் கொண்டு புறப்படத்தயாராஞள்.

"எங்களைப்பற்றியும் அவரிடம் சொல்ல மறந்து விடாதே. நான் ஒருகுற்றமும் செய்யாமல் சிறையில் தவிக்கிறேன். அவன் வேறு ஒருவன் மனைவியோடு கொம்மாளம் அடித்துக்கொண் டிருக்கிறான்" என்றாள் மென்ஷோவா என்ற கிழவி.

"சட்டம் அதற்கு இடம் கொடுக்க வில்லை" என்றாள் கோராபிளேவா.

"நான் கட்டாயம் சொல்கிறேன். தைரியமாகப் பேசு வதற்கு இன்னும் ஒருசொட்டு குடித்தால் தேவலையே" என் றாள் காடுஷா. கோராபிளேவா ஒரு கோப்பையில் கொஞ்சம் வோட்கா ஊற்றிக் கொடுத்தாள். காடுஷா அதைக் குடித்து விட்டு வாயைத் துடைத்துக் கொண்டு, "தைரியமாக இருப் பதற்குத் தான்" என்று சொல்லிக் கொண்டே புன் முறுவ லுடன் வார்டரைத் தொடர்ந்து சென்றாள்.

## 47

நிக்லியுடாவ் ஹாலில் வெகு நேரம் காத்திருந்தான்.

சிறையை அடைந்தவுடன் அவன் மணியை அடித்தான். அங்கு வந்த ஜெயிலரிடம் தான் கோர்ட்டி லிருந்து வாங்கி வந்த அனுமதிச்சிட்டைக் கொடுத்தான்.

"நீங்கள் யாரைப் பார்க்க வேண்டும்?"

"காடுஷா என்ற கைதியை"

"நீங்கள் இப்பொழுது பார்க்க முடியாது, இன்ஸ்பெக்டர் வேலையாக இருக்கிறார்."

"அவர் ஆபீஸில் இருக்கிறாரா?"

"இல்லை, கைதிகளை பேட்டி காணும் அறையில்" என்று பதிலளித்தான் ஜெயிலர். அவன் மிகவும் குழப்ப மடைந்து காணப்பட்டான்.

"ஏன், இன்று கைதிகளைப் பேட்டி காணும் தினமா?"

"இல்லை. இன்று விசேஷ வேலை."

"நான் அவரைப் பார்க்க வேண்டும்!"

"இன்ஸ்பெக்டர் வரும்பொழுது அவரிடம் சொல்லுங்கள். ஒரு நிமிஷமும் இருங்கள" என்றான் ஜெயிலர்.

அதே சமயத்தில் பக்கத்துக் கதவைத் திறந்து கொண்டு பெரிய ஸார்ஜெண்ட் அங்கே வந்தான். அவன் கடுமையான குரலில் ஜெயிலரை அழைத்து, "கண்டவர்களையும் இங்கு விட்டுக் கொண்டிருந்தால் என்ன அர்த்தம்? ஆபீஸ—" என்றான்.

அவனுடைய முகத்தில் காணப்பட்ட பரபரப்பைக் கண்டு நிக்லியுடாவ் ஆச்சரிய மடைந்து, "இன்ஸ்பெக்டர் இங்குஇருப்ப தாகச் சொன்னார்கள்" என்றான்.

இதே சமயத்தில் வியர்க்க விரு விருக்க ஜெயிலர் பெட் ரோவ் உள் கதவைத் திறந்து கொண்டு அங்கு வந்தான்.

"அவனுக்கு இது ஞாபகம் இருக்கும்" என்று ஸார் ஜெண்டிடம் அவன் கூறினான். ஸார்ஜெண்ட் தன் பார்வை யின் மூலம் நிக்லியுடாவைச் சுட்டிக் காட்டினான். அவன் புருவத்தைச் சுளித்துக் கொண்டு பின் புறவாசற்படி வழியாக வெளியே சென்றான்.

"யாருக்கு ஞாபகமிருக்கும்? எல்லாரும் ஏன் இப்படிக் குழப்படைந்திருக்கிறார்கள்? அவனுக்கு சார்ஜெண்ட் ஏன் ஏதோ சமிக்ஞை செய்தான்" என்றெல்லாம் நிக்லியுடாவ் யோசிக்கத் தொடங்கினான்;

சார்ஜெண்ட் மறுபடியும் நிக்லியுடாவைப் பார்த்து, "நீங்கள் இன்ஸ்பெக்டரை இங்கு சந்திக்க முடியாது. தயை செய்து ஆபீஸுக்குப் போங்கள்" என்றான். நிக்லியுடாவ் போவதற்குள் இன்ஸ்பெக்டரே பின்புறக் கதவைத் திறந்து கொண்டு அங்கு வந்து விட்டார். மற்றவர்களைக் காட்டிலும் அவர் முகத்தில் அதிகப் பரபரப்புக் காணப்பட்டது. அவர் நிக்லியுடாவைக் கண்டவுடன், ஜெயிலரைக் கூப்பிட்டு, "காடுஷா என்ற கைதியை இங்கே அழைத்து வா. பெண்கள் வார்டில் ஐந்தாவது அறையில் இருக்கிறாள்" என்றார்.

பிறகு அவர் நிக்லியுடாவைப் பார்த்து, "தயை செய்து இப்படி வருகிறீர்களா?" என்று அழைத்தார். இருவரும் ஒரு படி வழியாக ஏறிச்சென்று ஒரே ஜன்னல் உள்ள ஒரு அறைக்குள் பிரவேசித்தனர். இன்ஸ்பெக்டர் உட்கார்ந்து கொண்டு, "என் வேலைகள் மிகக் கடுமையானவை" என்று சொல்லிக்கொண்டு, ஒரு ஸிகரெட்டை எடுத்தார்.

"நீங்கள் களைத்துப் போய்த்தான் இருக்கிறீர்கள்" என்றான் நிக்லியுடாவ்.

“ இந்த வேலையே அலுத்துப் போய்விட்டது.” என் கடமைகள் என்னைச் சோர்வடையச் செய்கின்றன. நாம் சுமையைக் குறைத்துக் கொள்ள முயல்கிறோம். ஆனால் நிலைமை அன்னும் மோசமாகத்தான் ஆகிவிடுகிறது. மிக மோசமான வேலை” என்றார் இன்ஸ்பெக்டர்.

அவருடைய சங்கடம் என்ன என்பது நிக்லியுடாவுக்குத் தெரியாது. ஆனால். இன்று அவர் மிகவும் சோர்வடைந்திருப்பதை மாத்திரம் அறிந்தான். அவர் அனுதாபத்திற்குப் பாத்திரமானவர் என்று அவனுக்குத் தோன்றியது.

“ ஆமாம் வேலை ரொம்பக் கஷ்டம்தான் ” என்றார் இன்ஸ்பெக்டர் மறுபடியும்.

“ அப்படியானால் இந்த வேலையில் ஏன் இருக்கிறீர்கள்?” என்று கேட்டான் நிக்லியுடாவ்.

“ எனக்கு ஒரு குடும்பம் இருக்கிறது. அதைக் காப்பாற்றுவதற்கு வேறு வழியில்லை.”

“ ஆனால் இவ்வளவு கஷ்டம். இருந்தால்—”

“ இருந்தாலும் சிறிது உபயோகமாகவும் இருக்க முடிகிறது. சில விஷயங்களை என்னால் முடிந்தவரையில் சமனப்படுத்துகிறேன். என்னுடைய ஸ்தானத்தில் மற்றொருவன் இருந்தால் வேலைகளை வேறுமாதிரி செய்வான். இங்கு இரண்டாயிரம் பேருக்குமேல் இருக்கிறார்கள், அவர்களும் எப்படிப்பட்டவர்கள்? அவர்களை எப்படி நிர்வகிப்பது என்பது தெரிய வேண்டும். இதைச் சொல்கிற அவ்வளவு சுலபமில்லை செய்வது. அவர்களும் மனுஷ்யர்கள் தானே? அவர்களிடம் யாரும் அனுதாபப்படாமல் இருக்க முடியாது” என்றார் இன்ஸ்பெக்டர். சமீபத்தில் கைதிகளுக்கிடையில் நடந்த ஒரு சண்டையைப் பற்றியும், அதில் ஒருவன் மாண்டதையும் இன்ஸ்பெக்டர் எடுத்துக் கூறினார்.

காடுஷா அங்கு வந்ததால் இன்ஸ்பெக்டர் சொல்லிக் கொண்டிருந்த கதை தடைபட்டது. அவள் இன்ஸ்பெக்டரைப் பார்ப்பதற்கு முன்னால் அவளை வாசற்படி வழியாக நிக்லியுடாவ் கண்டான். அவள் முகத்தில் புன்சிரிப்போடு உற்சாகமாக வந்து கொண்டிருந்தாள். இன்ஸ்பெக்டரைக் கண்டவுடன் அவள் முகபாவம் மாறிவிட்டது. பயத்துடன் அவரைப் பார்த்தாள். ஆனால் உடனே தைரியத்தை வரவழைத்துக் கொண்டு; “ சௌக்கியமா?” என்று நிக்லியுடாவைப் பார்த்துக் கேட்டாள். அவன் கையைப்பற்றி வேக

மாகக் குலுக்கினுள். இன்று அவள் தன்னை தைரியமாக வரவேற்றதைக் கண்டு நிக்லியுடாவ் ஆச்சரியமடைந்தான். " வக்கிலிடமிருந்து ஒரு பெடிஷன் கொண்டு வந்திருக்கிறேன். அதில் நீ கையெழுத்துப் போட வேண்டும் ' என்ருன்.

" பேஷாய்ச் செய்கிறேன். நீங்கள் எதைச் சொன்னுலும் செய்யத் தயார் '' என்ருள காடுஷா.

நிக்லியுடாவ் தன் சட்டைப் பையிலிருந்து மடித்த காகிதம் ஒன்றை எடுத்து, " இதில் அவள் கையெழுத்துப் போட்லாமா ?'' என்று கேட்டான்.

" போடலாம். இப்படி உட்கார். உனக்கு எழுதத் தெரியுமல்லவா ? அதோ பேனு இருக்கிறது பார் '' என்ருர் இன்ஸ்பெக்டர்,

காடுஷா பேனுவைத் தன் சிறிய கையால் எடுத்து, மசியில் தோய்த்து அதிகமாக இருந்த மசியை உதறினுள். பிறகு வெட்கத்துடன் நிக்லியுடாவைப் பார்த்துச் சிரித்தாள்.

நிக்லியுடாவ் அவள் எழுத வேண்டியதைச் சொல்லி, கையெழுத்துப் போடவேண்டிய இடத்தையும் சுட்டிக்காட்டினுன். காடுஷா, வெட்கம் பிடுங்கித்தின்ன காகிதத்தில் கையெழுத்துப் போட்டாள்.

"அவ்வளவுதானே?'' என்று கேட்டுவிட்டு நிக்லியுடாவையும், இன்ஸ்பெக்டரையும் பார்த்தாள். பிறகு மசிக்கூட்டின் பக்கத்தில் அவள் வைத்த பேனுவின் மீதும், கையெழுத்துப் போட்ட காகிதத்தின் மீதும் அவள் பார்வை பாய்ந்தது.

"நான் உன்னிடம் சில விஷயங்கள் சொல்ல வேண்டும்'' என்ருன் நிக்லியுடாவ்.

"சரி, சொல்லுங்கள்'' என்று அவள் பதில் அளித்தாள். திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவள் போல அவள் முகம் மாறிவிட்டது. அவளுக்குத் துக்கம் வருவது போல இருந்தது. அவள் முகம் மந்தமாக ஆகிவிட்டது.

நிக்லியுடாவையும் அவளையும் மாத்திரம் தனியாக விட்டு விட்டு இன்ஸ்பெக்டர் வெளியே சென்ருர்.

48

காடுஷாவை அழைத்து வந்த ஜெயிலர் ஜன்னலருகே உட்கார்ந்திருந்தான்.

நிக்லியுடாவ் ஒரு தீர்மானத்திற்கு வரவேண்டிய தருணம் வந்துவிட்டது. முதலில் அவளைச் சந்தித்த பொழுது முக்கியமான விஷயத்தை அவளிடம் சொல்லாததற்காக தன்னைத் தானே அவன் சபித்துக்கொண்டிருந்தான். அவளை தான் மணக்கப் போவதாக இப்பொழுது சொல்லிவிட வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டிருந்தான். மேஜையின் ஒரு கோடியில் அவள் உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு எதிரே நிக்லியுடாவ் உட்கார்ந்திருந்தான். அறை வெளிச்சமாக இருந்தது. அப்பொழுதுதான் அவள் முகத்தை நிக்லியுடாவ் அருகில் பார்த்தான். அவள் கண்ணைச் சுற்றிலும் நெற்றியிலும் காணப்பட்டசுருக்கங்கள் நன்ருகத்தெரிந்தன. அவள்மீது பரிதாபம் கொண்டான். தான் பேசுவது ஜெயிலர் காதில் கேட்காமலிருக்கும் பொருட்டு அவன் மேஜைமீது குனிந்து கொண்டு பேசினுன்.

"இந்த மனுவினுலும் பயன் கிடைக்காவிட்டால் மன்னரிடம் அப்பீல் செய்யலாம். சாத்தியமான எல்லாவற்றையும் செய்ய வேண்டும்" என்ருன் நிக்லியுடாவ்.

காடுஷா குறுக்கிட்டு. "ஆரம்பத்திலேயே நல்ல வக்கீல் வைத்திருந்தால் இவ்வளவு கஷ்டம் வந்திராது. என் வக்கீல் சுத்த மடையன். அவன் என்னைப் புகழ்ந்து கொண்டிருந்தானே தவிர வேறு ஒன்றும் செய்யவில்லை. என்னை உங்களுக்குத் தெரியும் என்பது அவர்களுக்குத் தெரிந்திருந்தால் நிலைமை வேறுவிதமாக இருந்திருக்கும். ஒவ்வொருவரும் திருடன் என்றுதான் அவர்கள் நினைக்கிருர்கள்." என்ருள் காடுஷா.

"இப்பொழுது இவள் எவ்வளவு விசித்திரமாக நடந்து கொள்கிருள்!" என்று யோசித்தான் நிக்லியுடாவ். பிறகு அவன் மனதில் இருந்ததைச் சொல்வதற்குள் அவள் பேசத் தொடங்கினுள். "நான் உங்களிடம் சொல்லவேண்டிய மற்ருெரு விஷயம் இருக்கிறது சிறையில் எங்களோடு ஒரு கிழவி இருக்கிருள். ரொம்ப நல்லவள். ஒரு குற்றமும் செய்யாமல் அவளும் அவள் பிள்ளையும் சிறையில் அடைப்பட்டுக் கிடக்கிருர்கள். ஒரு வீட்டுக்குத் தீவைத்ததாக அவர்கள் மீது குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது. அவள் பிள்ளையைப் பார்க்க அனுமதி கேட்கும்படி உங்களிடம் சொல்லச் சொன்னுள். அவர்கள்

குற்றவாளிகள் அல்ல என்பதைப் பார்க்கும்பொழுதே அறிந்து கொள்வீர்கள்'' என்று சொல்லிவிட்டு நிக்லியுடாவைக் கடைக் கண்ணால் பார்த்துச் சிரித்தாள்.

அவள் சுதந்திரமாகவும், சுலபமாகவும் பழகுவதைக்கண்ட நிக்லியுடாவின் ஆச்சரியம் இன்னும் அதிகரித்தது. ''அவர்களைப் பற்றி விசாரிக்கிறேன். இப்பொழுது என்னைப் பற்றியே பேசப்போகிறேன். முன் தடவை நான் சொன்னது நினைவிருக்கிறதா?'' என்று கேட்டான் நிக்லியுடாவ்.

''முன் தடவை நீங்கள் எவ்வளவோ சொன்னீர்கள்'' என்று சிரித்துக் கொண்டே சொன்னாள் காடுஷா.

''நான் மன்னிப்புக் கேட்பதற்காக வந்திருப்பதாகச் சொன்னேன்'' என்று ஆரம்பித்தான் நிக்லியுடாவ்.

''அதனால் என்ன பயன்? மன்னிப்பு, மன்னிப்பு.''

''என் பாவத்திற்குப் பிராயச் சித்தம் செய்துகொள்ள விரும்புகிறேன். வெறும் வார்த்தையின்மூலம் மாத்திரமில்லை செய்கையின் மூலமும்தான். நான் உன்னை விவாகம் செய்து கொள்ளத் தீர்மானிதது விட்டேன்'' என்றான் நிக்லியுடாவ்.

காடுஷாவின் முகத்தில் ஒரு பீதிக் களை பரவியது. அவளுடைய கண்கள் அவன்மீது நிலைத்தன. ஆனால் அவனைப் பார்க்கவில்லை.

''எதற்காக?'' என்று கோபம் நிறைந்த குரலில் கேட்டாள்.

''கடவுளின் முன்னிலையில் அப்படிச் செய்வது என் கடமை என்று தோன்றுகிறது.''

''இப்பொழுது என்ன கடவுளைக் கண்டு விட்டீர்கள்? நீங்கள் அர்த்தமில்லாமல் பேசுகிறீர்கள். என்ன கடவுள்? கடவுளை அப்பொழுது ஞாபகப்படுத்திக் கொண்டிருக்க வேண்டும்'' என்றாள் காடுஷா. அவள் வாயிலிருந்து வந்த சாராய நாற்றத்தை இப்பொழுதுதான் நிக்லியுடாவ் கவனித்தான். அவளுடைய ஆத்திரத்தின் காரணம் அவனுக்குப் புரிந்துவிட்டது.

''உணர்ச்சியைத் தணித்துக்கொள்.''

''நான் ஏன் தணித்துக் கொள்ள வேண்டும்? குடி மயக்கத்தில் இருக்கிறேன் என்று நினைக்கிறீர்களா? நான் குடித்துத்தான் இருக்கிறேன். இருந்தாலும் என்ன சொல்லுகிறேன் என்பதை அறிந்துதான் சொல்கிறேன்'' என்று வேகமாகப்

பேசத் தொடங்கினாள். அவளுடைய முகம் சிவந்து விட்டது. "நான் ஒரு கைதி. விபசாரி; நீங்கள் பெரிய மனிதர், பிரபு. என்னைத் தொட்டு நீங்கள் அசுத்தமாக வேண்டாம், உங்கள் சிமாட்டிகளிடம் நீங்கள் போங்கள். என் விலை ஒரு பத்து ரூபிள் நோட்டுத்தான்" என்றாள்,

"நீ எவ்வளவு கடுமையாகப் பேசினாலும் நான் என்ன நினைக்கிறேன் என்பதை எடுத்துச் சொல்ல உன்னால் முடியாது. நான் குற்றவாளியென்பதை எவ்வளவு தூரம் உணர்கிறேன் என்பது உனக்குத் தெரியாது" என்றான் நிக்லியுடாவ். அவன் உடல் முழுவதும் நடுங்கியது.

"குற்றவாளி!" என்று, அவனுக்கு அழகு காட்டுவது போல் கோபமாகச் சொன்னாள், "அப்பொழுது நீங்கள் இப்படி நினைக்கவில்லை. ஒரு நூறு ரூபிள் நோட்டை வீசி எறிந்தீர்கள்.. அது நீங்கள் கொடுத்த விலை."

"எனக்குத் தெரியும், தெரியும். ஆனால் அதற்காக இப்பொழுது என்ன செய்வது? உன்னை விடுவதில்லை என்று தீர்மானித்துவிட்டேன். நான் சொன்னதைச் செய்யத்தான் போகிறேன்.",

"நீங்கள் செய்யக் கூடாதென்று நான் சொல்கிறேன்."

"காடுஷா!" என்று அவள் கையைத் தொட்டுப் பேசத் தொடங்கினான் நிக்லியுடாவ்.

காடுஷா கையை இழுத்துக் கொண்டு "போங்கள். நான் கைதி. நீங்கள் பிரபு. உங்களுக்கு இங்கு ஒரு வேலையும் இல்லை" என்று எரிந்து விழுந்தாள். "என் மூலம் உங்களையே நீங்கள் காப்பாற்றிக் கொள்ள முயல்கிறீர்கள். இந்த வாழ்க்கையில் என் மூலம் இன்பம் அனுபவித்தாகி விட்டது. மறு வாழ்க்கையிலும் என் மூலம் கடைத்தேறப் பார்க்கிறீர்கள். போங்கள் போங்கள்" என்று கத்திக் கொண்டே எழுந்தாள் காடுஷா.

ஜன்னல் அருகே உட்கார்ந்திருந்த ஜெயிலர் உடனே அங்கு வந்து, "ஏன் இப்படிக் கத்துகிறாய்?" என்றான்.

"தயை செய்து அவளை ஒன்றும் செய்யாதே" என்று கேட்டுக் கொண்டான் நிக்லியுடாவ்.

"அவள் தன்னை மறந்து விடக் கூடாது" என்றான் ஜெயிலர்.

"கொஞ்சம் பொறுத்துக் கொள்" என்று நிக்லியுடாவ் கேட்டுக் கொண்டபின் அவன் தன்னுடைய பழைய இடத்தில் போய் உட்கார்ந்தான்.

காடுஷா மறுபடியும் உட்கார்ந்தாள். அவள் இரு கைகளையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு பூமியை நோக்கியபடி உட்கார்ந்திருந்தாள். நிக்லியுடாவ் அவள் பக்கம் சாய்ந்து உட்கார்ந்திருந்தான். அவனுக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை.

"என்னை நீ நம்பவில்லையா?" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"நீங்கள் என்னை மணக்க விரும்புகிறீர்கள் என்பதையா? அது நடக்காது. அதைக் காட்டிலும் நான் தூக்குப் போட்டுக் கொண்டு விடுவேன். ஆமாம்."

"இருந்தாலும் நான் உனக்குச் சேவை செய்து கொண்டே இருப்பேன்."

"அது உங்கள் இஷ்டம். உங்களிடமிருந்து எனக்கு ஒன்றும் வேண்டாம். அதுதான் உண்மை" என்றாள் காடுஷா.

"ஐயோ! அப்பொழுதே நான் ஏன் செத்துப் போகவில்லை?" என்று சொல்லிவிட்டு அவள் கோவென்று அழுதாள்.

நிக்லியுடாவால் ஒன்றும் பேச முடியவில்லை. அவளுடைய கண்ணீர் அவன் வாயை அடைத்து விட்டது. அவள் பார்வையை உயர்த்தி அவனை ஆச்சரியத்தோடு பார்த்தாள். பிறகு கை குட்டையால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

இந்த சமயத்தில் ஜெயிலர் வந்து நேரமாகி விட்டதென்று சொன்னான். காடுஷா எழுந்தாள்.

"நீ ரொம்பவும் கோபமாக இருக்கிறாய். சாத்தியமானால் உன்னை மறுபடியும் நானே சந்திக்கிறேன். இதைப் பற்றி நீ தீர்க்கமாக ஆலோசனை செய்" என்றான் நிக்லியுடாவ்.

அவள் ஒரு பதிலும் சொல்லாமல், நிமிர்ந்து கூடப் பாராமல் ஜெயிலரின் பின்னாலேயே சென்றாள்.

காடுஷா சிறைக்குத் திரும்பி நடந்தவற்றைக் கோராபிளேவாவிடம் விவரித்துக் கூறினாள்.

"உனக்கு நல்ல காலம். அவன் உன்னிடம் சொக்கிப் போயிருக்கிறான் என்று தோன்றுகிறது. முடிந்ததை யெல்லாம் இப்பொழுதே அவனிடமிருந்து பறித்துவிடு. நீ விடுதலையாவதற்கு அவன் உதவி செய்வான். பணக்காரர்களால் என்னதான் முடியாது!' என்றாள் கோராபிளேவா. வாச்மன் மனைவி இதை அங்கீகரித்தாள். "என் விஷயத்தை அவளிடம் சொன்னாயா?" என்று கேட்டாள் மென்ஷோவ். மற்றும் பலர் பல விதமாகக் கேள்விகள் கேட்டனர்.

காடுஷா அவர்களுக் கெல்லாம் பதிலே சொல்லவில்லை. தன் படுக்கையில் படுத்துக் கொண்டு சிறையின் ஒரு மூலையில் பார்வையைப் பதித்து விட்டாள். அஸ்தமனம் வரை இப்படியே படுத்திருந்தாள். அவள் மனத்திற்குள் ஒரு கோரமான போராட்டம் நடந்து கொண்டிருந்தது. அவள் அனுபவித்த கஷ்டங்களை நிக்லியுடாவின் சொற்கள் ஞாபகப் படுத்தி விட்டன. அவற்றை மறக்க முடியவில்லை, ஆகையால் மாலையில் கொஞ்சம் சாராயம் வாங்கி, தன் தோழிகளுடன் குடித்தாள்.

## 49

"அப்படியானால் இதுதான் அதற்கு அர்த்தம் — இதுதான்" என்று யோசித்துக் கொண்டே நிக்லியுடாவ் சிறையிலிருந்து வெளியேறினான். அவன் செய்தது எவ்வளவு பெரிய குற்றம் என்பது இப்பொழுதுதான் அவனுக்குப் புரிந்தது. இனி அவளை விட முடியாதென்று தோன்றியது. ஆனால் இனி என்ன நடக்கும் என்பதையும் அவனால் கற்பனை செய்ய முடியவில்லை, அவன் போய்க் கொண்டிருக்கும் பொழுது ஒரு ஜெயிலர் திடீரென அங்கு வந்து ஒரு கடிதத்தை அவனிடம் கொடுத்தான். அவன் மார்பில் சிலுவையும் மெடல்களும் அணிந்திருந்தான்.

"இதை யார் கொடுத்தது?" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"அதைப் படித்துப் பாருங்கள் தெரியும். ஒரு அரசியல் கைதி கொடுத்தாள். நான் அந்த வார்டில்தான் இருக்கிறேன். ஆகையால் அவள் இதை உங்களிடம் கொடுக்கும்படிச் சொன்னாள். இது சட்டத்துக்கு விரோதம் தான் என்றாலும், மனித உணர்ச்சி......" என்றான் ஜெயிலர். அவன் பேசிய முறை இயற்கையாக இல்லை.

அரசியல் கைதிகள் இருக்கும் வார்டைச் சேர்ந்த ஜெயிலர் பகிரங்கமாகக் கடிதங்களைக் கொண்டு வந்து கொடுக்கவாவது! என்று நிக்லியுடாவ் ஆச்சரியமடைந்தான். அதைக் கொண்டு

வந்த ஜெயிலர் உளவாளியாகவும் ஜெயிலராகவும் வேலை செய்து வந்தான் என்பது அப்பொழுது அவனுக்குத் தெரியாது. நிக்லியுடாவ் கடிதத்தைப் பிரித்துப் படித்தான். அது பெரிய எழுத்துக்களில் எழுதப்பட்டிருந்தது.

"நீங்கள் சிறைக்கு அடிக்கடி வருவதாகவும், ஒரு கிரிமினல் கைதி விஷயத்தில் அக்கறை கொண்டிருப்பதாகவும் கேள்விப் பட்டேன். ஆகையால் உங்களைச் சந்திக்க வேண்டும் என்ற ஆவல் எனக்கும் எழுந்தது. என்னைச் சந்திக்க அனுமதி கேளுங்கள். உங்களுக்குக் கிடைக்கும். உங்கள் பாதுகாப்பில் இருக்கும் பெண்ணைப் பற்றியும், எங்கள் கோஷ்டியைப் பற்றியும் பல விஷயங்கள் சொல்கிறேன்.

உங்கள் நன்றியுள்ள

வெராடுகோவா

என்று அந்தக் கடிதத்தில் எழுதப்பட்டிருந்தது.

நோவ்கொராடில் எங்கோ ஒரு சிறிய கிராமத்தில் வெராடு கோவா உபாத்தியாயினியாக இருந்தாள். கரடி வேட்டைக் காகச் சென்றிருந்த நிக்லியுடாவும் அவன் தோழர்களும் அந்த கிராமத்தில் தங்கினார்கள். மேற்கொண்டு படிப்பதற்குப் பணம் வேண்டுமென்று அவள் நிக்லியுடாவிடம் கேட்டாள். அவள் கேட்ட பணத்தை நிக்லியுடாவ் கொடுத்தான். அதோடு அந்தச் சம்பவம் மறந்து போய்விட்டது. இப் பொழுது அவள் அரசியல் கைதியாக இருப்பதாகத் தோன்றியது. அவனுடைய கதையை அவள் கேட்டிருக்கக்கூடும். அவனுக்கு உதவி செய்ய முன் வருகிறாள். அந்த இன்பகர மான காலம் நிக்லியுடாவுக்கு நன்றாக ஞாபகம் வந்தது.

அந்தக் கிராமத்திற்கும் ரயில்வேக்கும் சுமார் நாற்பது மைல் இருந்தது. அங்கு அவனுடைய வேட்டை மிகவும் வெற்றிகர மாக இருந்தது. இரண்டு கரடிகளை வேட்டையாடி விட்டான். அங்குதான் வெராடுகோவாவைச் சந்தித்தான். அவள் குரூபி தான். அவளுடைய கண்களும் புருவமும் தான் அழகாக இருந்தன.

"நீங்கள் பணக்காரர் என்று தெரிகிறது... ...இப்படிப்பட்ட விளையாட்டுக்களில் பணத்தை வாரி இறைக்கிறீர்கள். நான் உங்களிடம் ஒன்று கேட்கிறேன்...எனக்கு ஒன்றும் தெரியாது. ஆகையால் என்னால் ஒரு வேலையும் செய்ய முடியாது" என்று இழுத்துப் பேசினாள். அவள் உண்மை பேசுகிறாள் என்பதை அவள் கண்கள் எடுத்துக் காட்டின. அவள் பேச்சு நிக்லியுடாவின் மனத்தை உருக்கிவிட்டது. அவளுடைய நிலைமையில் தான் இருப்பதாக நினைத்து அவள் மீது அனுதாபப் பட்டான்.

"உனக்கு நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டான் நிகலியுடாவ்.

"நான் ஒரு உபாத்தியாயினி. நான் கலாசாலையில் படிக்க வேண்டும். அதற்குப் பணம் இல்லை. 'பணக்காரர்கள் காடுகளைக் கொள்கிறார்கள். ஏழைகளுக்குச் சாராயம் வாங்கிக் கொடுக்கிறார்கள். அவர்கள் இப்படிப்பட்ட கெட்ட காரியங்களையெல்லாம் செய்யும்பொழுது நல்ல வழியில் பணத்தைச் செலவிடக் கூடாதா' என்று நான் நினைத்ததுண்டு. எனக்கு ஐம்பது ரூபிள் போதும். ஆனால் அதைக் கொடுக்க நீங்கள் விருப்பமில்லையென்றாலும் பாதகமில்லை" என்றாள் அந்தப் பெண்.

"எனக்கு இந்த சந்தர்ப்பம் அளித்ததற்காக நான் நன்றி செலுத்துகிறேன். இப்பொழுதே போய்ப் பணம் கொண்டு வருகிறேன்" என்று பதிலளித்தான் நிகலியுடாவ். அவளுடைய நண்பர்கள் கேலிசெய்ததையும் பொருட்படுத்தாமல் அவன் பணப்பையிலிருந்து பணத்தை எடுத்துக்கொண்டு போய் அவளிடம் கொடுத்தான். இவற்றையெல்லாம் இப்பொழுது நினைத்துப் பார்க்க சந்தோஷமாக இருந்தது. கவலையோ பயமோ இல்லாமல் சந்தோஷமாக அவன் கழித்த காலம் ஞாபகத்திற்கு வந்தது. ஆனால் இப்பொழுது! அட தெய்வமே எவ்வளவு கவலை! எவ்வளவு கஷ்டம்!

வெராடுகோவா புரட்சிக்காரியாகிவிட்டாள் போலும்! அதற்காகத்தான் அவள் சிறையில் அடைக்கப்பட்டிருந்தாள். அவளைப் பார்க்க வேண்டும். காடுஷாவைப்பற்றி யோசனை கூறுவதாக அவள் சொல்லியிருப்பதால் அவளைக் கட்டாயம் பார்த்தாக வேண்டும்.

## 50

மறுநாள் அதிகாலையிலேயே நிகலியுடாவ் எழுந்துவிட்டான். முதல் நாள் செய்தவற்றை நினைத்துப் பார்த்தான். ஒருவித பயம் அவனைக் கவ்வியது. ஆனால் அந்த பயத்தையும் மீறி தான் மேற்கொண்ட வேலையைச் செய்து முடிப்பதென்று முன்னைக்காட்டிலும் அதிக உறுதியுடன் தீர்மானித்துக் கொண்டான்.

கடமை உணர்ச்சி அவனை உந்தியது. காடுஷா, அவள் சொன்ன மென்ஷோவ் அவனுடைய பின் வெராடுக்கோவா ஆகியவர்களைச் சிறையில் சந்திப்பதற்கு அனுமதி பெறுவதற்காக அவன் மாஸ்லென்னிகோவைச் சந்திக்கப் புறப்பட்டான்.

மாஸ்லென்னிகோவை நிக்லியுடாவுக்கு வெகுகாலமாகத் தெரியும். அப்பொழுது மாஸ்லென்னிகோவ் ராணுவத்தில் பொக்கிஷதாராக இருந்தான். மிகவும் நல்லவன். ராணுவத்தையும் ராஜகுடும்பத்தையும் தவிர வேறு ஒன்றைப் பற்றியும் அவனுக்குத் தெரியாது. தெரிந்து கொள்ளவும் அவன் இஷ்டப்படவில்லை. இப்பொழுது ராணுவத்திலிருந்து மாறி சிவில் அதிகாரியாக அவனை நிக்லியுடாவ் பார்த்தான். ஒரு பெரிய பணக்காரப் பெண்ணை அவன் மணந்துகொண்டிருந்தான். அவளுடைய உபத்திரவத்தினால்தான் அவன் இந்த உத்தியோகத்திற்கு மாறினான். நிக்லியுடாவ் அவர்களை முன்பு ஒருமுறை பார்க்கப்போயிருந்தான். ஆனால் அவர்கள் வாழ்க்கை ரஸமற்றுக் காணப்பட்டதால், மறுபடியும் அங்கு போக நிக்லியுடாவ் விரும்பவில்லை.

நிக்லியுடாவைக் கண்டவுடன் மாஸ்லென்னிகோவின் முகம் சந்தோஷத்தால் பூரித்தது. நடை உடை பாவனைகளிலும் தோற்றத்திலும் அவனும் கிட்டத்தட்ட நிக்லியுடாவைப் போலவேதான் இருந்தான்.

“ஹல்லோ! வாப்பா, கவர்னர் ஊரில் இல்லை என்பது உனக்கே தெரிந்திருக்கும். இப்பொழுது நான் சர்க்காரின் தலைவன். என் மனைவியைப் பார்க்கப் போகலாம் வா. நான் உன்னோடு பத்து நிமிஷம் இருக்க முடியும். பிறகு கூட்டத்திற்கு போகவேண்டும்” என்றான். அவனால் தன்னுடைய பெருமையை அடக்கிக்கொள்ள முடியவில்லை.

“நான் ஒரு வேலையாக வந்திருக்கிறேன்” என்றான் நிக்லியுடாவ்.

“என்ன வேலை!” என்று மாஸ்லென்னிகோவ் பரபரப்புடன் கேட்டான். ஜாக்கிரதையான கடு கடுப்பும் அவனுடைய குரலில் தொனித்தது.

“எனக்கு வேண்டிய ஒருத்தி சிறையில் இருக்கிறாள். அவளைத் தனியாகச் சந்தித்துப் பேச வேண்டும். அதற்கு உன்னிடம் அனுமதி வாங்கவேண்டுமென்கிறார்கள்” என்றான் நிக்லியுடாவ்.

“உனக்காக நான் என்ன வேண்டுமானாலும் செய்யத் தயார். ஆனால் என்னுடையது ஒருநாள் கூத்துத்தான் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்” என்றான் மாஸ்லென்னிகோவ்.

“அப்படியானால் அவளை நான் பார்ப்பதற்கு வேண்டிய அனுமதிச் சீட்டைக் கொடுப்பாயல்லவா?”

“அந்தக் கைதி பெண்ணா?”

[illegible]

[illegible]

"எனக்கு இந்த சந்தர்ப்பம் அளித்ததற்காக நான் நன்றி செலுத்துகிறேன். இப்பொழுது கொஞ்சம் பணம் கொண்டு வருகிறேன்" என்று பதிலளித்தான் நிக்லியுடாவ். அவனுடைய கண்பார்வை கேலிசெய்ததையும் பொருட்படுத்தாமல் அவன் பணப்பையிலிருந்து பணத்தை எடுத்துக்கொண்டு போய் அவனிடம் கொடுத்தான். இவற்றையெல்லாம் இப்பொழுது நினைத்துப் பார்க்க சந்தோஷமாக இருந்தது. கவலையோ பயமோ இல்லாமல் சந்தோஷமாக அவன் கழித்த காலம் ஞாபகத்திற்கு வந்தது. ஆனால் இப்பொழுது! அடதெய்வமே! எவ்வளவு கவலை! எவ்வளவு கஷ்டம்!

வொகுடுகோவா புரட்சிக்காரியாகிவிட்டாள் போலும்! அதற்காகத்தான் அவள் சிறையில் அடைக்கப்பட்டிருந்தாள். அவளைப் பார்க்க வேண்டும். காடுஷாவைப்பற்றி யோசனை கூறுவதாக அவள் சொல்லியிருப்பதால் அவளைக் கட்டாயம் பார்த்தாக வேண்டும்.

## 50

மறுநாள் அதிகாலையிலேயே நிக்லியுடாவ் எழுந்துவிட்டான். முதல் நாள் செய்தவற்றை நினைத்துப் பார்த்தான். ஒருவித பயம் அவனைக் கவ்வியது. ஆனால் அந்த பயத்தையும் மீறி தான் மேற்கொண்ட வேலையைச் செய்து முடிப்பதென்று முன்னைக்காட்டிலும் அதிக உறுதியுடன் தீர்மானித்துக் கொண்டான்.

கடமை உணர்ச்சி அவனை உந்தியது. காடுஷா, அவள் சொன்ன மென்ஷோவ் அவளுடைய பிள்ளைடுக்கோவா ஆகியவர்களைச் சிறையில் சந்திப்பதற்கு அனுமதி பெறுவதற்காக அவன் மாஸ்லென்னிகோவைச் சந்திக்கப் புறப்பட்டான்.

மாஸ்லென்னிகோவை நிக்லியுடாவ் பல நாட்களாகத் தெரியும். அவன் முதலில் மாஸ்லென்னிகோவ் ராணுவத்தில் சேவகனாக இருந்தான். பிறகு கவர்னர். ராணுவத்தையும் ராஜாங்கத்தையும் தவிர வேறு ஒன்றைப் பற்றியும் அவனுக்குத் தெரியாது. தெரிந்து கொள்ளவும் அவன் இஷ்டப்படவில்லை. இப்பொழுது ராணுவத்திலிருந்து வந்து சிவில் அதிகாரியாக அவனை நிக்லியுடாவ் பார்க்கிறான். ஒரு பெரிய பணக்காரப் பெண்ணை அவன் மணந்திருக்கிறான். அவளுடைய பட்டத்தினால்தான் அவன் இந்த உத்தியோகத்திற்கு வந்தான். நிக்லியுடாவ் அவர்களை மூன்று முறை பார்க்கப் போயிருந்தான். ஆனால் அவர்கள் வாழ்க்கை ரஸமற்றதாகக் காணப்பட்டதால், மறுபடியும் அங்கு போக நிக்லியுடாவ் விரும்பவில்லை.

நிக்லியுடாவைக் கண்டவுடன் மாஸ்லென்னிகோவின் முகம் சந்தோஷத்தால் பூரித்தது. நடை உடை பாவனைகளிலும் தோற்றத்திலும் அவனும் கிட்டத்தட்ட நிக்லியுடாவைப் போலவேதான் இருந்தான்.

"ஹல்லோ! அப்பா, கவர்னர் ஊரில் இல்லை என்பது உனக்கே தெரிந்திருக்கும். இப்பொழுது நான் சர்க்காரின் தலைவன். என் மனைவியைப் பார்க்கப் போகலாம் வா. நான் உன்னோடு பத்து நிமிஷம் இருக்க முடியும். பிறகு கூட்டத்திற்கு போகவேண்டும்" என்றான். அவனால் தன்னுடைய பெருமையை அடக்கிக்கொள்ள முடியவில்லை.

"நான் ஒரு வேலையாக வந்திருக்கிறேன்" என்றான் நிக்லியுடாவ்.

"என்ன வேலை?" என்று மாஸ்லென்னிகோவ் பரபரப்புடன் கேட்டான். ஜாக்கிரதையான கடு கடுப்பும் அவனுடைய குரலில் தொனித்தது.

"எனக்கு வேண்டிய ஒருத்தி சிறையில் இருக்கிறாள். அவளைத் தனியாகச் சந்தித்துப் பேச வேண்டும். அதற்கு உன்னிடம் அனுமதி வாங்கவேண்டுமென்கிறார்கள்" என்றான் நிக்லியுடாவ்.

"உனக்காக நான் என்ன வேண்டுமானாலும் செய்யத் தயார். ஆனால் என்னுடையது ஒருநாள் உத்தியோகம் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்" என்றான் மாஸ்லென்னிகோவ்.

"அப்படியானால் அவளை நான் பார்ப்பதற்கு வேண்டிய அனுமதிச் சீட்டைக் கொடுப்பாயல்லவா?"

"அந்தக் கைதி பெண்ணா?"

நேற்று பணம் கொடுத்தீர்கள் போலிருக்கிறது. அதற்குச் சாராயம் வாங்கிக் குடித்துவிட்டு ஆர்ப்பாட்டம் செய்தான். அவனைத் தனிக் கொட்டடியில் கூடப் போட்டுப் பூட்ட வேண்டியிருந்தது. தயை செய்து பணம் கொடுக்காதீர்கள்."

முதல் நாள் நடந்தவை நிக்லியுடாவுக்கு நன்றாக ஞாபகம் வந்தன. மீண்டும் அவனை பீதி பற்றிக் கொண்டது.

"டுக்கோவா என்ற அரசியல் கைதியைப் பார்க்கலாமா?" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"பேஷாய்ப் பார்க்கலாம்." என்று சொல்லிவிட்டு அவனை அழைத்துக் கொண்டு சிறைக்கு வந்தார் இன்ஸ்பெக்டர். அவர்கள் வந்தவுடன் சிறைக் கதவு திறந்தது. இரு ஜெயிலர்கள் தங்கள் கையைக் குல்லாய் அருகே உயர்த்தி இன்ஸ்பெக்டருக்கு வந்தனம் செய்தனர்.

"நீங்கள் யாரைப் பார்க்க வேண்டும்?"

"டுக்கோவாவை."

"ஓ! அவள் மாடியில் இருக்கிறாள். அவளைப் பார்க்க வேண்டுமானால் நீங்கள் சிறிது நேரம் காத்திருக்க வேண்டும்."

"அதற்குள் மென்ஷோவையும் அவனுடைய தாயாரையும் பார்க்கலாமா?"

"பேஷாய்ப் பார்க்கலாம். இருபத்தோராவது அறையில் இருக்கிறார்கள். அவர்களை அழைத்து வரச் சொல்லுகிறேன்."

"அவர்களுடைய அறையிலேயே அவர்களைப் பார்க்க முடியாதா?"

"கைதிகளைச் சந்திப்பதற்காக ஏற்பட்ட அறை இன்னும் சௌகரியமாக இருக்கும்."

"இல்லை, கைதிகள் இருக்கும் இடத்தையே நான் அதிகம் விரும்புகிறேன். அது ரஸமாக இருக்கிறது."

"ஓ! நீங்கள் ரஸிக்கக் கூடிய விஷயம் கூட இங்கு இருக்கிறதா?"

இந்த சமயத்தில் உதவி இன்ஸ்பெக்டர் அங்கு பிரவேசித்தார்.

"இவர் நிக்லியுடாவ் கோமகன்; மென்ஷோவ் இருக்கும் இருபத்தோராவது அறைக்கு இவரை அழைத்துக்கொண்டு போய்விட்டு, ஆபீசுக்கு அழைத்து வாருங்கள். நான் போய் மற்றொரு கைதியை அழைத்து வருகிறேன். அவள் பெயர் என்ன?'' என்று கேட்டார் இன்ஸ்பெக்டர்.

"வேராடுகோவா''

உதவி இன்ஸ்பெக்டர் பார்ப்பதற்கு லக்ஷணமாக இருந்தான். அவன் உடையிலிருந்து யுடிகொலோன் வாஸனை வீசிக் கொண்டிருந்தது.

"இப்படி வரவேண்டும்'' என்று அவன் புன்சிரிப்போடு நிக்லியுடாவை அழைத்தான். "எங்களுடைய ஸ்தாபனம் உங்களுக்கு ரஸமாகவா இருக்கிறது?'' என்று கேட்டான்.

"ஆமாம், ரஸமாகத்தான் இருக்கிறது. அதைத் தவிர, குற்றமில்லாமல் ஒருவன் சிறையில் அடைப்பட்டுக் கிடப்பதாகச் சொல்கிறார்கள். அவனுக்கு உதவி செய்வது என் கடமை என்று தோன்றுகிறது.''

உதவி இன்ஸ்பெக்டர் தோள்களைக் குலுக்கிக் கொண்டு "ஆமாம். அடிக்கடி இப்படித்தான் நடந்து வருகிறது. ஆனால் இவர்கள் பொய் சொல்லவும் செய்கிறார்கள்......இந்தப் பக்கம் வாருங்கள்'' என்றான் இன்ஸ்பெக்டர்.

கைதிகள் இருந்த இடத்திற்கு இருவரும் சென்றார்கள்.

"மென்ஷோவ் எங்கே?'' என்று கேட்டான் உதவி இன்ஸ்பெக்டர்.

"இடது பக்கத்தில் எட்டாவது அறையில் இருக்கிறான்'' என்று ஒரு ஜெயிலர் பதில் அளித்தான்.

## 52

அதற்கு முன்னால் இருந்த ஒவ்வொரு அறையையும் எட்டிப் பார்த்துக்கொண்டே போனான் நிக்லியுடாவ். மென்ஷோவ் இருந்த அறையின் நிலைமையைக் கண்டு நிக்லியுடாவ் நடுங்கிப் போனான். நிக்லியுடாவையும் உதவி இன்ஸ்பெக்டரையும் பார்த்து கைதி பயத்துடன் எழுந்து நின்றான். அவனுடைய தோற்றம் நிக்லியுடாவுக்குஉருக்கமாக இருந்தது.

"உன் கேஸைப் பற்றி விசாரிக்க ஒரு கனவான் வந்திருக்கிறார்" என்று கைதியைப் பார்த்துக்கூறினார் உதவி இன்ஸ்பெக்டர்.

"வந்தனம்" என்று கைதி பதில் அளித்தான்.

"ஆமாம். உன்னைப் பற்றிக் கேள்விப்பட்டேன். என்ன நடந்தது என்பதை உன்னிடமே கேட்க விரும்புகிறேன்" என்று சொல்லிவிட்டு நிக்லியுடாவ் ஜன்னல் அருகே போய் நின்றான்.

மென்ஷோவும் அவன் அருகே வந்து, உதவி இன்ஸ்பெக்டரை சங்கோஜத்துடன் பார்த்துக் கொண்டே தன் கதையைச் சொல்லத் தொடங்கினான். போகப் போக அவனுக்கு தைரியம் வந்தது. இன்ஸ்பெக்டர் ஏதோ வேலையாக வெளியே சென்றவுடன் அவனுககுப் பூரா தைரியமும் வந்துவிட்டது. ஒரு நல்ல குடியானவன் எப்படிப் பேசுவானோ அதே போல் அவன் சாதாரணமாகப் பேசினான். ஒருவன் இவ்வளவு கேவலமான உடையுடன், சிறையில் தன்னுடன் பேசுவது நிக்லியுடாவுக்குப் புதுமையாக இருந்தது. அவன் சொன்னவற்றைக் கேடடுக் கொண்டே சுற்றுப்புறத்தையும் நிக்லியுடாவ் கவனித்தான். மரப் படுக்கையையும், கோரைப் பாயையும், தடித்த கம்பிகளுடன் கூடிய ஜன்னலையும், ஈரமான சுவர்களையும், வருத்தம் நிறைந்த கைதியின் முகத்தையும், அவனுடைய உடையையும் பார்க்கப் பார்க்க நிக்லியுடாவின் சோகம் அதிகரித்தது. அவன் சொன்னவற்றை நிக்லியுடாவ் நம்ப விரும்பவில்லை. இவ்வளவு நால்ல சுபாவம் உள்ள ஒருவனைச் சிறையில் அடைத்து வைப்பது பயங்கரமாக அவனுக்குத் தோன்றியது. ஆனால் இப்படிப் பட்டவன் சொல்வது பொய்யாக, வெறும் கற்பனையாக இருக்கக்கூடும் என்ற எண்ணம் அதைக் காட்டிலும் பெரிய பயங்கரமாக இருந்தது. அவனுடைய கதை இதுதான்: அவனுக்கு விவாகம் ஆனவுடன் அவன் மனைவியை அவ்வூர் ஹோட்டல் காரன் ஏமாற்றி இழுத்துக்கொண்டு போய்விட்டான். மென்ஷோவ் அதிகாரிகளிடம் புகார் செய்தான். ஆனால் ஹோட்டல்காரன் எதிலாருக்கும் லஞ்சம் கொடுத்து விடுதலையாகி வந்துவிட்டான். ஒரு நாள்மென்ஷோவ் தன் மனைவியை ஹோட்டலில் பார்த்தான். அவளை அழைத்துச் செல்வதற்காக அங்கு போனான். ஆனால் அவள் அங்கு இல்லை என்று சொல்லி ஹோட்டல்காரன் அவனைப் போகச் சொன்னான். மென்ஷோவ் போக மறுத்தான். ஹோட்டல்காரனும் அவனுடைய வேலைக்காரனுமாகச் சேர்ந்துகொண்டு அவனை ரத்தம் பீரிட்டுக் கொண்டு வரும்படி அடித்துவிட்டனர். மறுநாள் அந்த ஹோட்டலில் தீப்பற்றிக் கொண்டது. மென்ஷோவும் அவன் தாயாரும் தான் தீவைத்து

விட்டதாகச் சொன்னது குற்றச்சாட்டு. உண்மையில் ஹோட்டலுக்கு அவன் தீ வைக்கவில்லை. அந்த சமயத்தில் அவன் ஒரு நண்பனின் வீட்டுக்குப் போயிருந்தான்.

"நீ தீ வைக்கவில்லை என்பது உண்மையா?" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"அப்படிச் செய்யவேண்டுமென்று நான் நினைக்கக்கூட இல்லை. என் விரோதியே தான் இதைச் செய்திருக்க வேண்டும். சமீபத்தில்தான் அவன் ஹோட்டலை இன்ஷ்யூர் செய்ததாகக் கேள்விப்பட்டேன். அம்மாவும் நானும் ஹோட்டலுக்குத் தீ வைத்ததாகவும் நாங்கள் அவனை பயமுறுத்தியதாகவும் சொன்னார்கள். நான் ஒருமுறை அவனிடம் போனேன் என்பது உண்மைதான். ஆனால் நான் தீ வைக்கவில்லை. ஹோட்டல்காரனே தன் ஹோட்டலுக்கு நெருப்பு வைத்துவிட்டு, எங்கள் மீது பழிசுமத்தி விட்டான். இது நடந்தபொழுது நான் அங்கே இல்லை."

"இதெல்லாம் உண்மைதானா?"

"கடவுள் சாட்சியாக உண்மை. தயை செய்யுங்கள். காரணமில்லாமல் நான் இங்கு செத்துக் கொண்டிருக்கிறேன்" என்று சொல்லிவிட்டு மென்ஷோவ் கீழே விழுந்து நமஸ்கரித்தான், அவன் கண்களில் நீர் தாரை தாரையாக வழிந்தோடியது.

"நாம் போகலாமா?" என்று கேட்டான் சின்ன இன்ஸ்பெக்டர்.

"போகலாம்... சரி, நீ தைரியமாக இரு. முடிந்ததையெல்லாம் செய்வோம்" என்று மென்ஷோவுக்கு நிக்லியுடாவ் தைரியம் கூறிவிட்டுப் புறப்பட்டான். மென்ஷோவ் கதவருகே நின்றான். ஜெயிலர் அவனை உள்ளே தள்ளிக் கதவைப் பூட்டினான், பிறகு அவன் சிறை துவாரத்தின் வழியாகப் பார்த்துக் கொண்டு நின்றான்.

## 53

நிக்லியுடாவ் சிறைத் தாழ்வாரத்தைக் கடந்து வந்து கொண்டிருந்தபொழுது மஞ்சள் உடை அணிந்து நின்றிருந்த கைதிகள் அவனை ஆவலுடன் பார்த்தனர். நிக்லியுடாவுக்கு அவர்கள்மீது அனுதாபமும் அதிகாரிகள் அவர்களை நடத்திய விதத்தில் ஆத்திரமும் ஏற்பட்டது. இவற்றையெல்லாம் அமைதியாகப் பார்ப்பது பற்றி அவனுக்கு வெட்கமாகவும்

இருந்தது. ஏன் இந்த வெட்கம் என்பது அவனுக்கே விளங்க வில்லை.

அவன் காலடிச் சத்தத்தைக் கேட்டுப் பல கைதிகள் ஒரு பக்கம் வந்து அவன் வழியை மறித்துக் கொண்டு நின்று பணிந்தனர். "ஸேர், ஐயா, உங்களை என்ன வென்று அழைப்பதென்றே எங்களுக்குத் தெரியவில்லை. எங்கள் விஷயத்தைக் கொஞ்சம் கவனியுங்கள்" என்று அவர்கள் கெஞ்சினர்.

"நான் அதிகாரியில்லை. எனக்கு இதெல்லாம் பற்றி ஒன்றும் தெரியாது."

"எப்படியிருந்தாலும் நீங்கள் வெளியிலிருந்து வருகிறீர்கள். தக்க அதிகாரியிடம் சொல்லி ஏற்பாடு செய்யுங்களேன்" என்ற ஒரு கோபக் குரல் கேட்டது.

"மனித ஜென்மங்கள் என்ற முறையில் எங்கள் மீது தயை வையுங்கள். ஒரு காரணமும் இல்லாமல் இங்கு இரண்டு மாத மாகத் தவித்துக் கொண்டிருக்கிறோம்" என்றான் மற்றொரு வன்.

"ஏன்?" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"ஏன் என்பது எங்களுக்கே தெரியவில்லை. ஆனால் இரண்டு மாதமாக இங்கு அடைப்பட்டுக் கிடக்கிறோம்".

"ஆமாம், அது உண்மைதான். ஒரு தற்செயலான சம்பவத்தினால் அப்படி நடந்திருக்கிறது. பாஸ்போர்ட் இல்லாமல் இங்கு வந்ததற்காக இவர்கள் கைது செய்யப்பட்டார்கள். இவர்களுடைய சொந்த மாகாணத்திற்கு இவர்களை முன்பே அனுப்பி யிருக்க வேண்டும். ஆனால் அங்கு சிறை தீப்பற்றி எரிந்து விட்டதாம். ஆகையால் அவர்களை இங்கேயே வைத்திருக்கும்படி அவர்களுடைய மாகாண சர்க்கார் உத்திரவு அனுப்பி யிருக்கிறது. மற்ற மாகாணங்களைச் சேர்ந்தவர்களையெல்லாம் அனுப்பி விட்டு இவர்களை மாத்திரம் இங்கு வைத்துக் கொண்டிருக்கிறோம்" என்றார் சின்ன இன்ஸ்பெக்டர்.

"இதற்காகவா இவர்கள் சிறையில் இருக்கிறார்கள்? வேறு காரணம் இல்லையா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் நிக்லியுடாவ்.

அவனையும் இன்ஸ்பெக்டரையும் சுமார் நாற்பது பேர் சூழ்ந்து கொண்டு ஒரே சமயத்தில் பேசத் தொடங்கினார்கள். சின்ன இன்ஸ்பெக்டர் அவர்களைத் தடுத்து, "யாராவது ஒருவர் பேசுங்கள்" என்றார்.

சுமார் ஐம்பது வயதுள்ள உயரமான ஒரு குடியானவன் பேச முன் வந்தான். "சொந்த ஊருக்குத் திரும்பும்படி எங்களுக்கெல்லாம் உத்தரவு வந்து விட்டது. ஆனால் பாஸ்போர்ட் இல்லை என்பதற்காக எங்களை இரண்டுமாதமாகச் சிறையில் அடைத்து வைத்திருக்கிறார்கள். எங்களுடைய பாஸ்போர்ட் காலாவதியாகி பதினைந்து நாள் தான் ஆகிறது. வருஷா வருஷம் இப்படி நடப்பதுண்டு. இருந்தாலும் நாங்கள் ஊர் திரும்புவோம். இந்த வருஷம் மாத்திரம் அதிகாரிகள் இடமென்று நினைத்துக் கொண்டு, பாஸ்போர்ட்டுகளைப் புதுப்பிக்க வில்லை யென்று எங்களைக் கைது செய்து விட்டனர். குற்றவாளிகளைப்போல் இரண்டு மாதமாக நாங்கள் சிறையில் அடைபட்டுக் கிடக்கிறோம்" என்றான் அவன்.

"எங்கள் ஊர் சிறை எரிந்து விட்டதாம். அதற்கு நாங்களா பொறுப்பாளி? நீங்கள் தான் எனக்கு உதவி செய்ய வேண்டும்" என்றான் மற்றொருவன்.

"நாயைவிடக் கேவலமாக நடத்துகிறார்கள் எங்களை" என்றான் இன்னொருவன்.

"போதும், போதும். ரொம்பப் பேசாதே. பேசினால் தெரியும்" என்றான் சின்ன இன்ஸ்பெக்டர்.

"என்ன தெரியும்?" என்று கத்தினான் அந்தக் கைதி.

"கத்தாதே" என்று அதட்டினார் சின்ன இன்ஸ்பெக்டர்.

"இதற்கெல்லாம் என்ன அர்த்தம்?" என்று தனக்குள் கேட்டுக் கொண்டான் நிக்லியுடாவ். நூற்றுக் கணக்காள் கண்கள் அவனையே நோக்கிக் கொண்டிருந்தன.

"குற்றமற்றவர்களும் இங்கு அடைக்கப்படுவது சாத்தியம் தானா?" என்று இன்ஸ்பெக்டரைப் பார்த்துக் கேட்டான் நிக்லியுடாவ்.

"நாங்கள் என்ன செய்வது? அவர்கள் சாதுரியமாகப் பொய் சொல்கிறார்கள். அவர்கள் சொல்வதைக் கேட்டால் அவர்கள் நிரபராதிகள் தான். ஆனால் சில உண்மையான நிரபராதிகளும் சிறையில் தள்ளப்படத்தான் செய்கிறார்கள்" என்று பதிலளித்தார் சின்ன இன்ஸ்பெக்டர்.

"இவர்கள் ஒரு குற்றமும் செய்ய வில்லையே?"

"ஆமாம் அதை ஒப்புக் கொள்கிறோம். ஆனால் ஜாக்கிரதையாக கவனிக்கப்பட வேண்டிய சிலர் இருக்கிறார்கள். இப்படிப்பட்ட இரண்டு பேரை நேற்று தண்டிக்க வேண்டி வந்தது."

"தண்டிக்க வேண்டி வந்ததா! எப்படி?"

"உத்திரவுப்படி பிரம்பால் அடிக்கப்பட்டார்கள்"

"அடிப்பதைத்தான் தடுத்து விட்டார்களே!"

"உரிமை இழந்தவர்களுக்கு அது பொருந்தாது. அவர்களுக்கு இந்த தண்டனை இன்னமும் இருக்கத்தான் இருக்கிறது.

முதல் நாளன்று நிக்லியுடாவ் ஹாலில் காத்திருந்தபோது தான் கண்டவற்றை நினைத்துப் பார்த்தான். அப்பொழுது இந்த தண்டனை நிறைவேறிக் கொண்டிருந்தது என்று அவனுக்குத் தோன்றியது. சின்ன இன்ஸ்பெக்டரையோ சுற்றுப் புறத்தையோ கவனியாமல் விறு விறுவென்று நடந்து சிறை ஆபீஸை அடைந்தான். அங்கு இன்ஸ்பெக்டர் வேறு வேலைகளில் மூழ்கியிருந்தார். டுக்கோவாவை வரவழைக்க அவர் மறந்து போய் விட்டார்.

"சற்று உட்காருங்கள். அவளை இதோ வரவழைத்து விடுகிறேன்" என்றார் இன்ஸ்பெக்டர்.

# 54

ஆபீஸ் இரண்டு அறைகளாக இருந்தது. ஒரு மூலையில் கைதிகளை அளக்கும் ஸ்டாண்டு இருந்தது. ஒரு பக்கம் ஏசு கிறிஸ்துவின் பெரிய படம் ஒன்று வைக்கப்பட்டிருந்தது. ஜெயிலர்கள் பலர் நின்றிருந்தனர். அடுத்த அறையில் சுமார் இருபது பேர் ஜோடிகளாகவும், சிறு சிறு கோஷ்டிகளாகவும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர். ஜன்னலுக்கருகே ஒரு மேஜை போடப்பட்டிருந்தது.

இன்ஸ்பெக்டர் மேஜையின் பக்கத்தில் உட்கார்ந்து, தம் பக்கத்திலேயே நிக்லியுடாவுக்கும் ஒரு ஆஸனம் கொடுத்தார். நிக்லியுடாவ் உட்கார்ந்து அங்கு வந்திருந்தவர்களைப் பார்த்தான். குட்டையான கைகளுடன் கூடிய சட்டை அணிந்த ஓர் இளைஞன்தான் முதலில் அவன் கண்ணில் பட்டான். நடுத்தர வயதுடைய ஒரு ஸ்திரீயோடு அவன் கையை ஆட்டிப் பேசிக் கொண்டிருந்தான். அவர்களுக்குப் பக்கத்தில் நீல மூக்குக் கண்ணாடி அணிந்த கிழவன் ஒருவன் உட்கார்ந்திருந்தான். கைதியின் உடையில் இருந்த ஒரு பெண்ணின் கையை அவன் பற்றிக் கொண்டிருந்தான். கிழவனிடம் அவள் ஏதோ சொல்

லிக் கொண்டிருந்தாள். பள்ளிக்கூடச் சிறுவன் ஒருவன் பயம் நிறைந்த கண்களால் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு மூலையில் இரு காதலர்கள் உட்கார்ந்திருந்தனர். அந்தப் பெண் மிகவும் அழகாக இருந்தாள். அவள் அருகில் ரப்பர் சட்டை அணிந்து உட்கார்ந்திருந்த இளைஞனுக்கும் மூக்கும் விழியும் கடைசல் பிடித்ததுபோல் இருந்தன. அவர்கள் ஏதோ ரகசியமாகப் பேசிக் கொண்டிருந்தனர். அவர்கள் காதலில் மூழ்கியிருந்தனர். மேஜைக்கு அருகில் நரைத்த தலையுடன் கூடிய ஒரு ஸ்திரீ கருப்பு உடையுடன் உருகார்ந்திருந்தாள். க்ஷயரோகி போன்ற ஓர் இளைஞன் அவளுடன் பேசிக் கொண்டிருந்தான். இவனும் ரப்பர் சட்டைதான் அணிந்திருந்தான். அவன் தோள்மீது அவள் தலையைச் சாய்த்துக் கொண்டிருந்தாள். அவள் ஏதோ சொல்ல முயன்றாள். ஆனால் துக்கத்தினால் பேச முடியவில்லை. அவர்களோடு சுருண்ட கூந்தலும், விசாலமான கண்களும் உடைய தடித்த பெண் ஒருத்தி இருந்தாள். அவளுடைய அகன்ற வெண் கைகள், சுருண்ட கூந்தல், எடுப்பான மூக்கு, அதரங்கள் முதலிய எல்லா அங்கங்களுமே அழகை அள்ளி வீசின. எல்லாவற்றையும் விட, அன்பைப் பொழியும் அவளுடைய கண்கள்தான் அதிக அழகாக இருந்தன. அழுது கொண்டிருந்த தாயை அவள் சமாதானப் படுத்திக் கொண்டிருந்தாள். நிக்லியுடாவ் உள்ளே வந்தவுடன் அவளுடைய ஒளி வீசும் கண்கள் தன் தாயின் மீதிருந்து விலகி ஒரு க்ஷண நேரம் நிக்லியுடாவை நோக்கின. உடனே அவள் திரும்பி, தாயிடம் ஏதோ சொன்னாள். காதலர்களுக்குப் பக்கத்தில் சோகம் நிறைந்த முகத்தோடு கூடிய ஒருவன், தன்னைப் பார்க்க வந்திருந்தவனோடு கோபமாகப் பேசிக் கொண்டிருந்தான்.

கிராப் தலையோடு கூடிய ஒரு சிறிய பையன் நிக்லியுடாவிடம் ஓடிவந்து, "நீ யாரைப் பார்க்க வந்திருக்கிறாய்?" என்று, கீச்சிடும் குரலில் கேட்டான்.

அதைக் கேட்ட நிக்லியுடாவுக்கு ஆச்சரியமாக இருந்தது. சிறுவனின் பார்வை நிக்லியுடாவின் முகத்தில் பதிந்திருந்தது; "எனக்குத் தெரிந்த ஒரு பெண்ணைப் பார்க்க வந்திருக்கிறேன்" என்று பதிலளித்தான்.

"அவள் உன் தங்கையா?" என்று சிறுவன் மறுபடியும் கேட்டான்.

"இல்லை, என் தங்கையில்லை" என்று நிக்லியுடாவ் ஆச்சரியத்துடன் பதிலளித்துவிட்டு "நீ இங்கு யாரோடு இருக்கிறாய்?" என்று கேட்டான்.

"நான் அம்மாவோடு இருக்கிறேன். அவள் ஓர் அரசியல் கைதி" என்றான் சிறுவன்.

"மேரி பாவ்லோவ்னு, கோல்யாவை அழைத்துக்கொண்டு போ" என்ருர் இன்ஸ்பெக்டர். சிறுவன் நிக்லியுடாவுடன் பேசுவது சட்டவிரோதமென்று அவர் கருதினுர்.

நிக்லியுடாவின் கவனத்தைக் கவர்ந்த அந்த அழகி மேரி பாவ்லோவ்னு எழுந்து நிமிர்ந்து நடந்து வந்தாள். அவள் நடையில் ஓர் உறுதி காணப்பட்டது.

"அவன் உங்களை என்ன கேட்கிருன்?—நீங்கள் யார்?" என்று நிக்லியுடாவைக் கேட்டாள் அவள். நிக்லியுடாவின் முகத்தை அவள் ஊடுருவிப் பார்த்தாள். எல்லாருடனும் அவள் சகோதர பாவத்தில் பழக விரும்புகிருள் என்பதை அவளுடைய பார்வையே உணர்த்தியது.

"இவன் எல்லாவற்றையும் தெரிந்துகொண்டுவிடவேண்டு மென்கிருன்" என்று சொல்லிவிட்டு, புன்முறுவல் புரிந்து கொண்டே சிறுவனைப் பார்த்தாள்.

"யாரைப் பார்க்க வந்திருக்கிருய் என்று கேட்டான்" என்ருன் நிக்லியுடாவ்.

"மேரி பாவ்லோவ்னு, அயலாரோடு பேசுவது சட்ட விரோதம் அது உனக்கே தெரியும்" என்ருர் இன்ஸ் பெக்டர்.

"சரி சரி" என்று சொல்லிக்கொண்டே அவள் சிறுவனைக் கையில் பிடித்துக்கொண்டு க்ஷயரோக இளைஞன் இருந்த இடத்திற்குப் போய்விட்டாள்.

"இந்தச் சிறுவன் யார்?" என்று இன்ஸ்பெக்டரை நிக்லியுடாவ் கேட்டான்.

"அவன் சிறையில் பிறந்தவன்" என்று இன்ஸ்பெக்டர் பெருமையுடன் சொல்லிக் கொண்டார்.

"அப்படியா?"

"ஆமாம். அவளுடன் அவன் சைபீரியாவுக்குப் போகி ருன்."

"அந்த இளம்பெண்?"

"உங்கள் கேள்விக்கு பதிலளிக்க முடியாது" டுக்கோவா இதோ வந்துவிட்டாள்" என்று இன்ஸ்பெக்டர் தோளைக் குலுக்கிக் கொண்டே சொன்னுர்.

# 55

அறையின் பின்புற வாசற்படி வழியாக வெரா டுக்கோவா அறைக்குள் பிரவேசித்தாள்.

"நீங்கள் வந்ததற்காக நன்றி. என்னை நினைவிருக்கிறதா! இப்படிக் கீழே உட்காருவோம்" என்றாள் டுக்கோவா.

"உன்னை நான் இப்படிப் பார்க்க நேரும் என்று எதிர்பார்க்கவில்லை."

"ஓ! நான் மிகவும் சந்தோஷமாகத்தான் இருக்கிறேன். இதுதான் எனக்கு இன்பம் தருகிறது. வேறு ஒன்றும் வேண்டாமென்று கூடத் தோன்றுகிறது" என்று மருண்ட பார்வையுடன் கூறினாள் டுக்கோவா. அவளுடைய சட்டையின் காலர் கசங்கி விகாரமாக இருந்தது.

"நீ சிறைக்கு எப்படி வந்தாய்?" என்று கேட்டான் நெக்லியுடாவ். அவள் தன் கதையை உணர்ச்சியுடன் சொன்னாள்.

அவள் பேச்சில், "சமூக கோஷ்டிகள்" "பிரிவுகள்" "உபபிரிவுகள்" "பிரசாரம்" என்பன போன்ற வார்த்தைகள் அடிக்கடி அடிபட்டன; இவை எல்லோருக்கும் புரியுமென்று நினைத்து அவள் பேசினாள். ஆனால் நெக்லியுடாவுக்கு ஒன்றும் விளங்கவில்லை. தான் சேர்ந்துள்ள புரட்சி ஸ்தாபனம் பற்றிய எல்லா விவரங்களையும் எடுத்துச் சொன்னாள். அவளைக் கண்டு இரக்கப்பட்டான் அவன். ஆனால் ஒரு குற்றமும் செய்யாமல் சிறையில் வாழும் மென்ஷோவைக் கண்டபொழுது ஏற்பட்ட இரக்கமல்ல இது. இவளுடைய மனக் குழப்பத்தைக் கண்டுதான் அவன் அனுதாபப் பட்டான். தன்னுடைய லட்சியத்திற்காக பிராணனைத் தியாகம் செய்பவளாகத்தான் இருந்தாள், ஆனால் அந்த லட்சியம் என்னவென்பதோ, அதன் வெற்றி எதில் அடங்கியிருக்கிறது என்பதோ அவளுக்குத் தெரியவில்லை.

அவர்களுடைய "உபபிரிவை" கூடச் சேர்த்து அவளுடைய தோழி ஒருத்தியை ஐந்து மாதங்களுக்கு முன்னால் அதிகாரிகள் கைது செய்து, பீட்டர் பால் கோட்டைச் சிறையில் வைத்திருந்தனர். ஆட்சேபகரமான புத்தகங்கள் சில அவளிடம் இருந்ததுதான் இதற்குக் காரணம். அந்தப் புத்தகங்களை வேறு யாருடையவோ அவள் வாங்கி வைத்திருந்தாள். அவள் கைதியானதற்கு தான் தான் காரணமென்று டுக்கோவா கருதினாள். பெரிய இடங்களில் நெக்லியுடாவுக்குச் செல்வாக்கு

இருப்பதால் அவனை விடுதலை செய்ய ஏற்பாடு செய்யும்படி அவனைக் கேட்டுக் கொண்டாள். நெக்லியுடாவை அவள் சந்திக்க விரும்பியதன் நோக்கம் இதுதான். இதைத் தவிர பெட்ரோபாவ்லோவ்ஸ்கி கோட்டையிலேயே குர்கெவிச் என்ற மற்றொரு நண்பனும் கைதியாக இருந்தான். அவனை அவன் தாய் சந்திக்க அனுமதி வாங்கிக் கொடுக்கும்படியும், அவன் படிப்பதற்குச் சில விஞ்ஞானப் புத்தகங்கள் அனுப்ப ஏற்பாடு செய்யும்படியும் டுக்கோவா கேட்டுக் கொண்டாள்.

தான் பீடர்ஸ்பர்க் சென்றவுடன் தன்னால் முடிந்ததைச் செய்வதாகச் சொன்னான் நெக்லியுடாவ்.

டுக்கோவா தன்னைப் பற்றிச் சொன்னது இதுதான். அவள் மருத்துவம் படித்து முடித்த பின் நரோதோவோல்ஸ்ட்வோ என்ற புரட்சி ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்களுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டாள். முதலில் எல்லாம் சாதாரணமாகவே நடந்து வந்தன. தொழிற்சாலைகளில் பிரசாரம் செய்யத் தொடங்கினார்கள். அவர்கள் ஸ்தாபனத்தைச் சேர்ந்த முக்கியமான மெம்பர் ஒருவன் கைதியாகி விட்டான். அவனிடம் இருந்த காகிதங்களையும் அதிகாரிகள் கைப்பற்றினர். இதன் விளைவாக மற்றவர்களையும் கைது செய்து விட்டனர். "நானும் கைதியானேன். என்னை தேசப் பிரஷ்டம் செய்து விடுவார்கள். ஆனால் அதனால் என்ன? எனக்கு இது சந்தோஷமாகத்தான் இருக்கிறது." என்று டுக்கோவா தன் சரித்திரத்தைக் கூறி முடித்தாள்.

தான் பார்த்த அழகியைப் பற்றி நெக்லியுடாவ் விசாரித்தான். "அவள் ஒரு ஜெனரலின் பெண். வெகு காலமாக அவள் புரட்சி ஸ்தாபனத்தில் இருந்து வந்தாள். ஒரு போலீஸ்காரனைச் சுட்டுக் கொன்றதாக அவள் ஒப்புக் கொண்டாள். சில சதிகாரர்களுடன் அவள் ஒரு வீட்டில் வசித்து வந்தாள். அவர்கள் ரகசியமாக ஓர் அச்சுக் கூடம் நடத்திக் கொண்டிருந்தார்கள். ஒரு நாள் இரவு போலீசார் இந்த வீட்டைச் சோதனையிட வந்தார்கள். அங்கு இருந்தவர்கள் எப்படியாவது தங்களைப் பாதுகாத்துக் கொள்வதென்று தீர்மானித்துக் கொண்டனர். விளக்கை அணைத்து விட்டு, தங்களுக்கு பாதகம் விளைவிக்கக் கூடிய பொருள்களை யெல்லாம் அழிக்கத் தொடங்கினார்கள். போலீசார் பலவந்தமாக உள்ளே புகுந்து விட்டனர். வீட்டில் இருந்தவர்களில் யாரோ ஒருவர் சுட்டனர். ஒரு போலீஸ்காரன் மாண்டான். தான்தான் சுட்டதாக இந்தப் பெண் சொன்னாள். இவள் கையில் துப்பாக்கியும் இல்லை. இவள் ஒரு ஈயைக் கூடக் கொல்லக் கூடியவளும் அல்ல. இருந்தாலும் போலீஸ்காரனைத் தானே கொன்றதாக வாதாடினாள். அவளுக்கு தீவாந்திர சிக்ஷை அளிக்கப்பட்டிருக்

கிறது. மிகவும் நல்ல பெண்" என்று கூறி முடித்தாள் டுக்கோவா.

காடுஷாவைப் பற்றியும் நிக்லியுடாவிடம் கூற விரும்பினாள். "அவளை அரசியல் கைதிகள் வார்டுக்காவது, அல்லது ஆஸ்பத்திரியில் நர்ஸ் வேலைக்காவது மாற்ற ஏற்பாடு செய்யுங்கள். நோயாளிகள் அதிகப் பேர் இருப்பதால் அதிக நர்ஸ்களுக்குத் தேவை இருக்கிறது" என்றாள்.

அவள் கூறிய யோசனைகளுக்காக நிக்லியுடாவ் நன்றி செலுத்திவிட்டு, அவற்றின்படி நடப்பதாகக் கூறினான்.

## 56

அவர்கள் பேசிக் கொண்டிருக்கையில் இன்ஸ்பெக்டர் குறுக்கிட்டு, "நேரமாகி விட்டது. கைதிகளும் அவர்களுடைய நண்பர்களும் பிரிந்து போக வேண்டும்" என்று அறிவித்தார். டுக்கோவாவிடம் நிக்லியுடாவ் விடை பெற்றுக் கொண்டான். அவன் கதவருகே நின்று, என்ன நடக்கிறது என்பதைக் கவனித்தான்.

"நேரமாகி விட்டது, நேரமாகி விட்டது" என்று சொல்லிக் கொண்டே இன்ஸ்பெக்டர் எழுந்திருப்பதும் உட்காருவதுமாக இருந்தார்.

அவர் இப்படிச் சொன்னதால் கைதிகளிடையே சோகமும் பரபரப்பும் அதிகரிக்கத்தான் செய்தது. ஒருவராவது பிரிந்து போகவில்லை. சிலர் எழுந்து நின்றுகொண்டு பேசினர். சிலர் எழுந்திருக்காமல் பேசிக்கொண்டேயிருந்தனர். சிலர் அழுது கொண்டே விடை பெற்றுக்கொண்டனர். க்ஷயரோகிபோல் தோன்றிய இளைஞனின் தாய் அவன் தோள்மீது முகத்தைப் பதித்து முன்னைக்காட்டிலும் அதிகமாக அழுதாள். அவன் பக்கத்தில் இருந்த அழகி அவனுக்கு ஏதோ ஆறுதல் சொல்லிக்கொண்டிருந்தாள். நீல மூக்குக் கண்ணாடி அணிந்திருந்த கிழவர் தன் பெண்ணின் கையைப் பிடித்துக்கொண்டிருந்தார். இளங் காதலர்கள் எழுந்து நின்று, ஒருவர் கண்களை ஒருவர் ஊடுருவி நோக்கிக்கொண்டிருந்தனர்.

"இவர்கள்தான் இங்கு சந்தோஷமாக இருக்கிறார்கள்" என்றான், நிக்லியுடாவ் அருகே இருந்த குஷிப் பேர்வழி ஒருவன். நிக்லியுடாவும் அவனும் தங்களையே கவனிப்பதைக்

கண்ட காதலர்கள் கையைக் கோர்த்துக் கொண்டு சுற்றிச் சுற்றி நடனமாடத் தொடங்கி விட்டனர்.

“இன்று இரவு அவர்களுக்கு சிறையிலேயே விவாகம் நடக்கப் போகிறது. அவளும் அவனோடு சைபீரியாவுக்குப் போகப் போகிறாள்” என்றான் நெக்லியுடாவின் பக்கத்தில் இருந்த இளைஞன்.

“நிஜமாகவா?”

“ஆமாம். தீவாந்திர சிக்ஷைபெற்ற கைதி. இந்த இரண்டு பேருமாவது கொஞ்சம் சந்தோஷமாக இருக்கட்டும். இல்லையானால் ரொம்பக் கஷ்டம்” என்றான் அந்த இளைஞன், ஷுயரோவின் தாய் அழுவதைப் பார்த்துக் கொண்டே.

“நான் கடுமையான நடவடிக்கை எடுக்கும்படி செய்யாதீர்கள். தயை செய்து கிளம்புங்கள். அதிக நேரம் ஆகிவிட்டது. இப்படிச் செய்தால் என்ன அர்த்தம்? கடைசியாகச் சொல்கிறேன், கிளம்புங்கள்” என்று இன்ஸ்பெக்டர் திரும்பத் திரும்பச் சொன்னார்.

பிறருக்குத் துயரம் விளைவிப்பதற்குக் காரணமாக இருப்பவர்களில் தாமும் ஒருவர் என்பதை இன்ஸ்பெக்டர் உணர்ந்தார். இதுதான் அவரை அதிகம் துன்புறுத்தியது.

கடைசியாக கைதிகளும், அவர்களைப் பார்க்கவந்தவர்களும் கலைந்துபோகத் தொடங்கினார்கள்.

நெக்லியுடாவோடு பேசிக்கொண்டிருந்த இளைஞன் பாதியில் நிறுத்திய சம்பாஷணையைத் தொடங்குபவன் போல “விசித்திரமான கட்டம்தான்” என்றான்.

“ஆமாம், நாம் இன்ஸ்பெக்டருக்கு நன்றி செலுத்தவேண்டும். விதிகளை கடுமையாக அனுஷ்டிப்பதில்லை, தயாளகுணம் வாய்ந்தவர். அவர்கள் கொஞ்சநேரம் பேசிக்கொண்டிருந்தால் மனம் எவ்வளவோ நிம்மதி அடைகிறது” என்றான் நெக்லியுடாவ்.

நெக்லியுடாவ் மெட்னிட்ஸெவ் என்ற அந்த இளைஞனுடன் பேசிக்கொண்டே ஹாலுக்கு வந்துவிட்டான். அங்கு இன்ஸ்பெக்டர் அலுப்புடன் நடந்துவந்து, “நீங்கள் காடுஷாவைப் பார்க்க வேண்டுமென்றால் நாளை வாருங்கள்” என்றார்.

“சரி” என்று சொல்லிவிட்டு நெக்லியுடாவ் விரைந்து சென்றான். காகிதத்தில் சில விஷயங்களை எழுதவேண்டிய

முறை தவறுதலாலோ அல்லது இதைப்போன்ற வேறு சிறு காரணங்களினாலோ இவ்வளவுபேர் கஷ்டமும் அவமானமும் அனுபவிப்பது பயங்கரமாகத் தோன்றியது. நிரபராதியான மென்ஷோவின் துன்பம் மஹத்தானதாக இருந்தது. மிருகத் தனமான ஜெயிலர்கள், தயாளகுணமுள்ள இன்ஸ்பெக்டர் முதலியவர்களை நினைத்துப் பார்த்தான்.

"இதெல்லாம் எதற்காக?" என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டான். அவன் தலை சுற்றியது. அவன் கேள்விக்குப் பதில் கிடைக்கவில்லை.

# 57

மறுநாள் வக்கீலைப் பார்க்கச் சென்றான் நிக்லியுடாவ். மென் ஷோவின் வழக்கைப்பற்றி வக்கீலிடம் கேட்டான். அது நிக்லி யுடாவ் சொல்வதுபோல் இருந்தால் அதைப் பணம் இல்லா மலே நடத்த ஒப்புக்கொண்டார். காரணமில்லாமல் சிறையில் அடைக்கப்பட்டுள்ள நூற்று முப்பது பேரைப்பற்றி நிக்லி யுடாவ் எடுத்துச் சொல்லி, "இதற்குக் காரணம் யார்? இது யாருடைய தவறு?" என்று கேட்டான்.

சரியான பதிலைச் சொல்ல வேண்டுமென்று வக்கீல் சிறிது நேரம் யோசித்தார்.

"காரணம் யார்? ஒருவருமில்லை. சிறை அதிகாரியைக் கேட்டால் 'கவர்னர்தான் காரணம்' என்பார்; கவர்னரைக் கேட்டால் சிறை அதிகாரி தான் காரணம் என்பார். தவறுக் குக் காரணம் ஒருவருமில்லை" என்று பளிச்சென்று கூறினார் வக்கீல்.

"இப்பொழுது உதவிக் கவனரைப் பார்க்கப் போகிறேன். அவரிடம் இதைப்பற்றிக் கேட்கிறேன்."

"ஊஹூம். அதனால் பயனிராது. அவன் சுத்த—அவன் உங்களுக்கு உறவோ நண்பனோ இல்லையே?—அவன் சுத்த மடையன். இருந்தாலும் தந்திரசாலி." என்றார் வக்கீல்.

இந்த வக்கீலைப்பற்றி மாஸ்லென்னிகோவ் சொன்னது நிக்லியுடாவின் நினைவுக்கு வந்தது. ஆகையால் அவன் ஒரு பதிலும் சொல்லாமல் வக்கீலிடம் விடை பெற்றுக் கொண்டு, மாஸ்லென்னிகோவின் வீட்டுக்கு நேராகச் சென்றான். மாஸ் லென்னிகோவிடம் அவன் இரண்டு விஷயங்கள் கேட்க விரும்

பினன். காடுஷாவைச் சிறை ஆஸ்பத்திரிக்கு மாற்றுவது ஒன்று. காரண மில்லாமல் சிறையில் அடைப்பட்டுள்ள நூற்று முப்பத்தைந்து பேரையும் விடுதலை செய்யும்படி கேட்பது மற்றொன்று. தான் மதிக்காத ஒருவனிடம் உதவி கோருவது கஷ்டம்தான். இருந்தாலும் விருப்பம் நிறைவேற அதைத் தவிர வேறு வழியில்லை.

மாஸ்லென்னிகோவின் வீட்டு வாசலில் வண்டிகள் வரிசையாக நின்று கொண்டிருந்தன. அன்று அவன் மனைவி நடத்தும் விருந்து. அதற்குத்தான் நிக்லியுடாவை மாஸ்லென்னிகோவ் ஏற்கனவே அழைத்திருந்தான். கோர்ச்சாகின் வீட்டு வண்டியும் அங்கு வந்திருந்தது. அந்த வண்டிக்காரன் நிக்லியுடாவைக் கண்டவுடன் தொப்பியை எடுத்து வணங்கினான்.

நிக்லியுடாவ் மாஸ்லென்னிகோவைப்பற்றி விசாரிப்பதற்குள் ஒரு பெரிய ராணுவ உத்தியோகஸ்தரை வழியனுப்புவதற்காக அவனே மாடியிலிருந்து இறங்கி வந்து விட்டான். அனாதைக் குழந்தைகளின் ஆசிரமத்திற்காக நடத்தப்படும் ஒரு லாட்டரியைப்பற்றி அந்த அதிகாரிபிரெஞ்சு பாஷையில் பேசிக் கொண்டிருந்தார். "இது பெண்களுக்குப் பொழுது போக்காகவும் இருக்கிறது. பணமும் வருகிறது" என்றார் அவர்.

அவன் நிக்லியுடாவைக் கண்டவுடன், "ஓ, நிக்லியுடாவ்; சௌக்கியமா? உன்னைப் பார்க்கவே முடிவதில்லையே? வீட்டுக்கார அம்மாவைப் போய்ப் பார்த்து விட்டு வா. கோர்ச்சாகின் குடும்பத்தாரும் வந்திருக்கிறார்கள். நகரில் உள்ள அழகிகளெல்லாம் வந்து கூடியிருக்கிறார்கள்" என்றார். வந்திருந்த அவர் மாஸ்லென்னிகோவின் கையைக்குலுக்கி விட்டுப்புறப்பட்டார்.

"இப்பொழுது வா மேலே. உன் வேலைகளெல்லாம் பிறகு தான். நீ முதலில் என் மனைவியைச் சந்திக்க வேண்டும். பிறகு நீ என்ன சொன்னாலும் செய்யத்தயார்" என்று சொல்லி விட்டு நிக்லியுடாவை இழுத்துக் கொண்டு போனான். ஒரு பெரிய அதிகாரி தன் வீட்டுக்கு வந்து விட்டுப்போனதால் ஏற்பட்ட சந்தோஷத்தை அவனால் அடக்க முடியவில்லை. மாடிப்படிகளில் தாவித்தாவி ஏறினான். எஜமானன் தட்டிக் கொடுக்கும் பொழுது சந்தோஷப்படும் நாயைப்போல் இருந்தது அவனுடைய மனோநிலை. தன் எஜமானன் தட்டிக்கொடுத்தாலோ அல்லது சொறிந்து கொடுத்தாலோ நாய் தன் காதுகளைத் தாழ்த்தி நெறித்துக்கொண்டு, வாலை ஆட்டும்; வெறி பிடித்தது போலச் சுற்றிச் சுற்றி ஓடும். அப்படியே செய்ய மாஸ்லென்னிகோவும் தயாரா யிருந்தான். நிக்லியுடாவ் சொன்னது அவன் காதில் ஏறவேயில்லை.

"நிக்லியுடாவ் வந்திருக்கிறார் என்று எஜமானியம்மாளிடம் சொல்" என்று ஒரு வேலைக்காரனிடம் சொல்லி அனுப்பினான். மாஸ்லென்னிகோவின் மனைவி அன்னா இக்னட்யெவ்னா விரைந்து வந்தாள். அங்கு ஏற்கனவே கூடியிருந்த ஸ்திரீகளும் புருஷர்களும் வளவள வென்று பேசிக்கொண்டிருந்தனர்.

"எங்களை மறந்தே போய்விட்டீர்கள் என்று நினைத்திருந்தோம். அப்படி நாங்கள் என்ன தப்பு செய்தோம்?" என்று நிக்லியுடாவைப் பார்த்து ஸ்வாதீனமாகக் கேட்டாள். அன்னா இக்னட்யெவ்னா. அங்கு வந்திருந்தவர்களையும் அவள் இடையிடையே விசாரித்தாள்.

மிஸ்ஸி நிக்லியுடாவ் அருகே வந்து. "நீங்கள் ஊருக்குப் போய்விட்டீர்கள் என்று நினைத்திருந்தேன்" என்றாள்.

"போகத்தான் வேண்டும். சில வேலைகளை முன்னிட்டு தங்கியிருக்கிறேன். இங்கும் ஒரு வேலையாகத்தான் வந்தேன்" என்றான் நிக்லியுடாவ்.

"அம்மாவைப் பார்க்க வரமாட்டீர்களா? வந்தால் ரொம்ப சந்தோஷப்படுவாள் என்றாள் மிஸ்ஸி. தான் சொல்வது உண்மையல்ல என்பது அவளுக்கே தெரியும். நிக்லியுடாவுக்கும் அது தெரியும் என்பதை அவள் அறிந்திருந்தாள்.

"அவகாசம் கிடைக்காதென்று நினைக்கிறேன்" என்று மந்தமான குரலில் பதிலளித்தான் நிக்லியுடாவ்.

மிஸ்ஸி முகத்தைச் சுளித்துக்கொண்டு அருகில் இருந்த ஓர் அதிகாரியின் பக்கம் திரும்பினாள். அவள் கையில் இருந்த காலி கோப்பையை அவன் வாங்கிக்கொண்டான். அவனுடைய வாள் நாற்காலிகளின் மீது இடிக்க கம்பீரமாக நடந்து சென்று அந்தக் கோப்பையை வேறொரு மேஜைமீது வைத்தான்.

அன்னா இக்னட்யெவ்னாவுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. அவள் நடத்திய விருந்து பிரமாத வெற்றியுடன் நடந்துவிட்டது.

"சிறை விவகாரங்களில் நீங்கள் தீவிரமாக ஈடுபட்டிருப்பதாக மிக்கி (மாஸ்லென்னிகோவ்) சொல்கிறார். மிக்கியிடம் எவ்வளவோ குறைகள் இருக்கலாம். ஆனால் அவருக்கு எவ்வளவு தயாளகுணம் தெரியுமா? இந்தக் கைதிகளையெல்லாம், தம் குழந்தைகளைப் போலவே அவர் மதிக்கிறார்" என்றாள். இரு கைதிகளைச் சவுக்கால் அடிக்க உத்தரவிட்ட

தன் கணவனின் தயாளகுணத்தை வர்ணிக்க அவளுக்கு வார்த்தைகள் கிடைக்கவில்லை! இதற்குள் அங்கு வந்த ஒரு கிழவியின் பக்கம் திரும்பினாள் இக்னாட்யேவ்னா.

நிக்லியுடாவ், சப்பிரதாயத்திற்கு எவ்வளவு அவசியமோ அவ்வளவு மாத்திரம் பேசிவிட்டு மாஸ்லென்னிகோவைச் சந்திக்க மாடிக்குச் சென்றான்.

"எனக்காகச் சில நிமிஷம் ஒதுக்க முடியுமா!" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"ஓ, பேஷாய்ச் செய்கிறேன். என்ன வேண்டும்? நாம் இந்த அறைக்குப் போகலாம் வா" என்றான் மாஸ்லென்னிகோவ். இருவரும் ஒரு சிறிய அறைக்குள் சென்று ஜன்னல் அருகே உட்கார்ந்து பேசத் தொடங்கினர்.

## 58.

"நீ புகை குடிப்பதுண்டா? இங்கு குளறுபடி செய்து விடாமலிருப்போம், சற்று இரு" என்று சொல்லிவிட்டுப் போய் ஸிகரெட்டு சாம்பலை உதிர்க்கும் ஒரு பாத்திரத்தைக் கொண்டு வந்து, "நீ என்ன சொல்கிறாய்?" என்றான்.

"இரண்டு விஷயங்களைப் பற்றி நான் உன்னிடம் கேட்க விரும்புகிறேன்."

"சொல்."

மாஸ்லென்னிகோவின் முகத்தில் தாண்டவமாடிய குதூகலமெல்லாம் இந்த சமயத்தில் எங்கோ மறைந்து போய்விட்டன. அவன் முகத்தில் சோகக்களை படர்ந்தது. உள்ளே விருந்துக்கு வந்திருந்தவர்கள் பேசிக்கொண்டிருந்ததையும் நிக்லியுடாவ் கூறியவற்றையும் ஏககாலத்தில் கவனிக்க முயன்றான் மாஸ்லென்னிகோவ்.

"மறுபடியும் நான் அந்தப் பெண் விஷயமாகத்தான் வந்திருக்கிறேன்" என்றான் நிக்லியுடாவ்.

"அது எனக்குத் தெரியும். ஒரு குற்றமும் செய்யாமல் தண்டனை பெற்றிருக்கிறாளே, அவள் விஷயமாகத்தானே?" என்று மாஸ்லென்னிகோவ் கேட்டான்.

"அவளை சிறை ஆஸ்பத்திரியில் வேலை செய்ய அனுப்ப வேண்டும். இதைச் செய்ய முடியும் என்று சொன்னார்கள்"

மாஸ்லென்னிகோவ் உதடுகளை இறுக மூடிக் கொண்டு ஆலோசித்தான்.

"இதைச் செய்வது ரொம்பவும் கஷ்டம். இருந்தாலும் ஏதாவது செய்ய முடியுமா என்று பார்க்கிறேன். முடிவை நாளை உனக்குத் தந்தி மூலம் தெரியப்படுத்துகிறேன்" என்று மாஸ்லென்னிகோவ் பதிலளித்தான்.

"நோயாளிகள் அதிகமாக இருப்பதாகச் சொன்னார்கள். அவர்களுக்கு உதவி தேவையாம்"

"சரி, சரி; எப்படியிருந்தாலும் உனக்குத் தெரியப்படுத்துகிறேன்."

"தயவு செய்து கட்டாயம் தெரியப்படுத்து. இன்னொரு விஷயம் என்னவென்றால், பாஸ்போர்ட் காலாவதியாகி விட்டது என்பதற்காக நூற்று முப்பது பேர் சிறையில் அடைபட்டுக் கிடக்கிறார்கள். அவர்கள் இங்கு ஒரு மாதத்திற்கு அதிகமாக இருக்கிறார்களாம்" என்று கூறிவிட்டு அவர்களைப் பற்றிய விவரங்களை நிக்லியுடாவ் சொன்னான்.

மாஸ்லென்னிகோவ் முகத்தில் அதிருப்தி தோன்ற, "அது உனக்கு எப்படித் தெரிந்தது?" என்றான்.

"நான் ஒரு கைதியைப் பார்க்கப் போனேன். இவர்கள் வந்து என்னைச் சூழ்ந்து கொண்டு கேட்டார்கள்."

"எந்தக் கைதியைப் பார்க்கப் போனாய்?"

"நிரபராதியான ஒரு விவசாயி சிறையில் அடைக்கப்பட்டிருக்கிறான். அவனுடைய வழக்கை ஒரு வக்கீலிடம் ஒப்படைத்தேன். குற்றம் செய்யாதவர்களை, பாஸ்போர்ட் காலாவதியாகி விட்டது என்பதற்காக சிறையில் வைக்கலாமா? அதோடு—"

மாஸ்லென்னிகோவ் கோபத்துடன் குறுக்கிட்டு, "அது சிறை அதிகாரியின் இலாகா. நியாயமான விசாரணை என்று நீங்கள் கூறும் முறையால் என்ன நேர்கிறதென்று பார். சர்க்கார் வக்கீல் அடிக்கடி சிறைக்குப் போய், யாராவது அக்கிரமமாகச்சிறையில் அடைக்கப்பட்டிருக்கிறார்களா என்பதைப் பார்க்க வேண்டும். ஆனால் அவர்களெல்லாம் சீட்டாடிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் செய்வது அவ்வளவுதான்" என்றான்.

"சிறை அதிகாரி மீது கவர்னர் பழியைப்போடுவான்" என்று வக்கீல் சொன்னது நிக்லியுடாவுக்கு ஞாபகம் வந்தது.

"அப்படியானால் இவ்விஷயத்தில் உன்னால் ஒன்றும் செய்ய முடியாதென்று அர்த்தமா?" என்று கேட்டான்.

"முடியும். அதை உடனே கவனிக்கிறேன்" என்று மாஸ்லென்னிகோவ் பதிலளித்தான்.

உள்ளே வந்திருந்த விருந்தினரின் வம்பளப்பு நன்றாகக் கேட்டுக் கொண்டிருந்தது.

"சரி, இதை யெல்லாம் செய்து விடுகிறேன்" என்று மாஸ்லென்னிகோவ் திரும்பவும் சொல்லி விட்டு, "விருந்தினர் இருக்கும் இடத்திற்கு நாமும் போவோம் வா" என்று, ஸிகரெட்டை அணைத்து எறிந்து விட்டுநிக்லியுடாவையும் அழைத்தான்.

நிக்லியுடாவ் வாசற்படியருகே நின்று கொண்டு, "இன்னொரு விஷயம். நேற்று சில கைதிகளைத் தண்டிப்பதற்காக அடித்தார்களாமே! அது உண்மையா?" என்று கேட்டான்.

மாஸ்லென்னிகோவுக்கு முகம் சிவந்து விட்டது. "ஓ! நீ அதைக் கேட்கிறாயா? சரி, சரி உன்னை இனிமேல் சிறைக்குள் விடக்கூடாது. நீ ஒவ்வொன்றையும் பிடிக்கப் பார்க்கிறாய். வா, வா, அன்னா நம்மைக் கூப்பிடுகிறாள்" என்று நிக்லியுடாவின் கையைப் பற்றி இழுத்தான் மாஸ்லென்னிகோவ். மறுபடியும் பழைய பரபரப்பைப் பெற்று விட்டான். ஆனால் இப்பொழுது அந்தப் பரபரப்பில் சந்தோஷம் இல்லை. ஒரு வித கவலை கலந்திருந்தது.

நிக்லியுடாவ் தன் கையை விடுவித்துக் கொண்டு ஒருவரிடமும் விடை பெற்றுக் கொள்ளாமல் விர்ரென்று போய் விட்டான்.

"என்ன நடந்தது? நீங்கள் என்ன சொன்னீர்கள்?" என்று அன்னா தன் கணவனிடம் கேட்டாள்.

"அவன் எப்பொழுதுமே அப்படித்தான்" என்றான் மாஸ்லென்னிகோவ்.

விருந்துக்கு வந்திருந்தவர்கள் வம்பு பேசுவதற்கு நிக்லியுடாவைப் பற்றிய விஷயம் கிடைத்து விட்டது!

மறுநாள் மாஸ்லென்னிகோவிடமிருந்து நிக்லியுடாவுக்கு ஸீல் வைத்த கடிதம் ஒன்று வந்தது. "காடுஷாவை ஆஸ்பத்திரிக்கு மாற்றுவது சம்பந்தமாக டாக்டருக்கு எழுதியிருக்கிறேன். உன்னுடைய விருப்பம் நிறைவேறும் என்று நம்புகிறேன்" என்று மாஸ்லென்னிகோவ் எழுதி யிருந்தான். கடிதத்தின் முடிவில் "உன்பிரியமுள்ள தோழன்", என்று

எழுதி அதன் கீழ் கலையழகோடு கையெழுத்துப் போட்டிருந்தான் மாஸ்லென்னிகோவ். இந்தக் கடைசி வார்த்தைகளைக் கண்டவுடன், ''சுத்த மடையன்'' என்றான் நிக்லியுடாவ். இந்த சொற்களில் அவனுடைய அற்பத் தனத்தைத்தான் நிக்லியுடாவ் கண்டான். ''தார்மிக முறையில் மிகக் கேவலமானவன். இருந்தாலும் தான் மஹா முக்கியமான ஒருவன் என்று நினைத்திருக்கிறான். என்னைப் புகழ்வதற்காக இல்லாவிட்டாலும் தனக்கு கர்வம் இல்லை என்று காட்டிக் கொள்வதற்காக தன்னைத் 'தோழன்' என்று அழைத்துக் கொள்கிறான்'' என்று நினைத்தான் நிக்லியுடாவ்.

# 59

ஒவ்வொரு மனிதனுக்கும் பிரத்தியேகமான சில குணங்கள் இருக்கின்றன என்று நினைப்பது எங்கும் பரவியுள்ள ஒரு மூட நம்பக்கை. ஒருவன் நல்லவன், கெட்டவன், புத்திசாலி, முட்டாள் என்றெல்லாம் சொகிறார்கள். அது தவறு. ஒருவனிடம் உள்ள கெட்ட குணங்களைக் காட்டிலும் நல்ல குணங்கள் அதிகமாக இருக்கின்றன; அல்லது புத்திசாலித்தனத்தைவிட முட்டாள்தனம் அதிகம் இருக்கிறது'' என்றோ அல்லது இந்த முறையை மாற்றியோ கூறலாம். ஆனால், ''இவன் நல்லவன், அவன் கெட்டவன், இவன் புத்திசாலி, அவன் மடையன், என்று சொல்வது சரியல்ல. இருந்தாலும் இந்த ரீதியில்தான் நாம் மனிதர்களைப் பாகுபாடு செய்கிறோம். ஆற்று நீரைப் போலத்தான் மனிதர்களும். ஆற்றில் ஜலம் ஓர் இடத்தில் குறுகலாகவும் மற்றோர் இடத்தில் அகன்றும், ஓர் இடத்தில் வேகமாகவும், மற்றோர் இடத்தில் நிதானமாகவும், ஓர் இடத்தில் தெளிவாகவும், மற்றோர் இடத்தில் கலங்கலாகவும், ஓர் இடத்தில் குளிர்ச்சியாகவும், வேறோர் இடத்தில் உஷ்ணமாகவும் இருக்கிறது. மனிதர்கள் விஷயமும் இப்படியேதான். மனித குணங்களின் வித்து ஒவ்வொரு மனிதனிடமும் இருக்கின்றன. ஒரு சமயத்தில் ஒரு குணமும், மற்றொரு சமயத்தில் வேறொரு குணமும் மேலெழுந்து நிற்கின்றன.

சிலரிடம் இந்த மாறுதல் வெகு வேகமாக நடக்கிறது. அப்படிப்பட்டவன்தான் நிக்லியுடாவ். அத்தகைய மாறுதல் இப்பொழுது அவனுக்கு ஏற்பட்டது. விசாரணைக்குப் பின்பும், காடுஷாவை சிறையில் முதலில் சந்தித்த பிறகும் ஏற்பட்ட புது வாழ்க்கை பற்றிய சந்தோஷமும் வெற்றி உணர்ச்சியும் மறைந்து விட்டன. காடுஷாவைக் கடைசியாகச் சந்தித்த பின் ஒருவித பீதி அவனைப் பற்றிக் கொண்டது. அவளை விடுவதில்லை என்று அவன் தீர்மானித்துக் கொண்டிருந்

தான். அவளை மணப்பதென்ற தீர்மானத்தையும் விடுவதில்லை என்று உறுதி கொண்டிருந்தான். ஆனால் இது மிகவும் கஷ்ட மாக இருக்குமென்று தோன்றியது.

மாஸ்லென்னிகோவைப் பார்த்த மறுநாள் நிக்லியுடாவ் மறுபடியும் சிறைக்குச் சென்றான். பெண் கைதிகளை வெளி யார் சந்தித்துப் பேசுவதற்கான அறையில் காடுஷாவைக்காண இன்ஸ்பெக்டர் அனுமதித்தார். ஆனால் இன்று அவர் நிக்லி யுடாவுடன் அதிகம் பேசவில்லை. மாஸ்லென்னிகோவுடன் நிக் லியுடாவ் நடத்திய சம்பாஷணையின் விளைவாக அவருக்கு ஏதாவது உத்தரவு அனுப்பப்பட்டிருந்ததோ என்னவோ! "நீங்கள் அவளைச் சந்தித்துப் பேசலாம். ஆனால் பணம் சம்பந்தமாக நான் சொன்னதை ஞாபகத்தில் வைத்துக் கொள் ளுங்கள். அவளை ஆஸ்பத்திரிக்கு மாற்றுவது சம்பந்தமாக கவர்னரிடமிருந்து உத்தரவு வந்திருக்கிறது. டாக்டரும் அதை அங்கிகரித்துவிடுவார். ஆனால் அவள்தான் இதை விரும்ப வில்லை. இவர்களைப் பற்றி உங்களுக்குத் தெரியாது" என்றார் இன்ஸ்பெக்டர்.

நிக்லியுடாவ் பதில் சொல்லவில்லை. காடுஷாவைச் சந்திக்க அனுமதிக்கும்படி கேட்டான். இன்ஸ்பெக்டர் ஒரு ஜெயிலரை அழைத்து நிக்லியுடாவை காடுஷா இருந்த இடத்திற்கு அழைத்துச் செல்லும்படி கூறினார். அங்கு காடுஷாவைத் தவிர வேறு ஒருவரும் இல்லை. அவள் அவனை நிமிர்ந்து பாராமல் அமைதியாக அவன் அருகே வந்து. " என்னை மன்னிக்க வேண்டும் நிக்லியுடாவ்: மிகவும் தப்பான வார்த்தைகளை முந்தாநாள் நான் பேசிவிட்டேன் " என்றாள்.

" நான் மன்னிப்பதற்கு ஒன்றுமில்லை " என்றான் நிக்லி யுடாவ். "

அவள் இடைமறித்து, " எப்படியிருந்தாலும் நீங்கள் என்னை விட்டுவிட வேண்டும்" என்றாள். அவளுடைய கண்களில் பழைய கோபத்தையே கண்டான் நிக்லியுடாவ்.

" நான் ஏன் விட்டுவிட வேண்டும் ?"

" நீங்கள் விடத்தான் வேண்டும். "

" ஏன் ?,'

அவள் மறுபடியும் நிமிர்ந்து பார்த்தாள். அது கோபப் பார்வையைப் போல் அவனுக்குத் தோன்றியது.

" அது அப்படித்தான். நீங்கள் என்னை விட்டுத்தான் ஆகவேண்டும். இது உண்மை—என்னால் முடியாது. நீங்கள்

அதை அடியோடு விட்டுவிடவேண்டும்" என்றாள். அவள் உதடுகள் நடுங்கின. அவள் ஒரு கணநேரம் மௌனமாக இருந்துவிட்டு மறுபடியும் பேசினாள்: "நான் சொல்லுவது உண்மை. அதைக் காட்டிலும் நான் தூக்குப் போட்டுக் கொண்டு விடுவேன்" என்றாள்.

இந்த மறுப்பில் துவேஷமும், மன்னிக்க விரும்பாத ஆத்திரமும் கலந்திருப்பதாக நிக்லியுடாவுக்குத் தோன்றியது. ஆனால் அதோடு ஏதோ ஒரு நன்மையும் கலந்திருந்தது. நிக்லியுடாவின் மனத்தில் இருந்த சந்தேகங்களை இந்த மறுப்பு விரட்டி அடித்துவிட்டது. காடுஷா விஷயத்தில் அவனுக்கு ஏற்பட்டிருந்த வெற்றி உணர்ச்சியை இது திரும்பிக்கொண்டு வந்தது.

"காடுஷா, நான் முன்பு சொன்னதையேதான் இப்பொழுதும் சொல்கிறேன். என்னை விவாகம் செய்து கொள்ளும்படி உன்னைக் கேட்டுக்கொள்கிறேன். நீ இஷ்டப்படாவிட்டால் நீ இஷ்டப்படாதவரையில் உன்னை எங்கெல்லாம் அழைத்துச் செல்கிறார்களோ அங்கெல்லாம் நானும் வரப்போகிறேன்."

"அது உங்கள் இஷ்டம். இதற்கு மேல் நான் ஒன்றும் சொல்வதற்கில்லை" என்று காடுஷா பதிலளித்தாள். அவள் உதடுகள் மறுபடியும் துடித்தன.

அவனும் மௌனமாக இருந்தான். அவனால் ஒன்றும்பேச முடியவில்லை. பின்னர்சிறிது அமைதியடைந்து "இப்பொழுது நான் கிராமத்திற்குப் போய்விட்டு பிறகு பீடர்ஸ்பர்க் போகிறேன். உன்னுடைய—இல்லை, நம்முடைய—கேஸைப் புனராலோசனை செய்வதற்கு என்னால் ஆன முயற்சியையெல்லாம் செய்கிறேன். கடவுள் சித்தமிருந்தால் தண்டனை ரத்தாகும்" என்றான்.

"தண்டனை ரத்தாகாவிட்டாலும் பாதகமில்லை. அதைப் பெறத் தகுதி உள்ளவள்தான் நான். இந்த வழக்கில் இல்லாவிட்டாலும் வேறு விதத்தில் தண்டனைபெற வேண்டியவள்தான்" என்றாள். வந்த துக்கத்தை அவள் மிகவும் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டாள். நிக்லியுடாவும் இதைக் கவனித்தான்.

தன்னுடைய துக்கத்தை மறைப்பதற்காக "மென்ஷோவைச் சந்தித்தீர்களா ?" அவர்கள் நிரபராதிகள் என்பது உண்மைதான். இல்லையா ?" என்று திடீரென்று கேட்டாள்.

"ஆமாம். நானும் அப்படித்தான் நினைக்கிறேன் !"

"அந்தக் கிழவி மிகவும் நல்லவள்" என்றாள்.

மென்ஷோவைப் பற்றிப் தான் விசாரித்தவற்றையெல்லாம் நிக்லியுடாவ் விவரித்துவிட்டு, "உனக்கு ஏதாவது வேண்டுமா?" என்று கேட்டான்.

ஒன்றும் வேண்டாமென்று அவள் சொல்லிவிட்டாள்.

"ஆமாம், ஆஸ்பத்திரி விஷயம் என்ன?" என்று காடுஷா அவனை நிமிர்ந்து பார்த்துக் கேட்டாள். "நீங்கள் விரும்பினால் நான் போகத் தயார். இனி நான் குடிக்கவும் மாட்டேன்" என்றாள்.

நிக்லியுடாவ் அவளுடைய கண்களை ஊடுருவிப் பார்த்தான். அவை புன்முறுவல் செய்தன.

"ரொம்பசரி" என்றுதான் அவனால் சொல்ல முடிந்தது. பிறகு அவளிடம் விடை பெற்றுக்கொண்டான்.

"ஆமாம், ஆமாம், அவள் முற்றிலும் வேறானவள் தான். பழைய சந்தேகங்களுக்குப் பின், இது வரை அனுபவித்திராத ஓர் உணர்ச்சி அவனுக்கு இப்பொழுது ஏற்பட்டது- "அன்பை வெல்ல முடியாது" என்ற நிச்சய ஞானத்தை அவன் உணர்ந்தான்.

x x x

காடுஷா சிறைக்குத் திரும்பிச் சென்று தான் படுத்துக் கொள்ளும் பெஞ்ச் மீது கைகட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். கைதிகளில் சிலர் வெளியே வேலை செய்துகொண்டிருந்தனர். சிலர் தூங்கிக் கொண்டிருந்தனர். இரண்டு பேர் காடுஷா அருகே வந்து, "குஷியாகப் பேசிவிட்டு வந்தாயா?" என்று கேட்டனர்.

காடுஷா பதில் சொல்லாமல் காலை ஆட்டிக் கொண்டு மௌனமாக உட்கார்ந்திருந்தாள். அவளை வாச்மன் மனைவி உற்சாகப்படுத்த முயன்றாள். சிறிது நேரத்திற் கெல்லாம் எல்லாக் கைதிகளும் வந்துவிட்டனர். தியோடாஸியா நேராகக் காடுஷாவிடம் வந்தாள். அவள் காடுஷாவை அன்புடன் பார்த்துக்கொண்டே, "என்ன நேர்ந்தது? ஏதாவது தவறாக நடந்துவிட்டதா என்ன?" என்று கேட்டாள். "இது நம்முடைய டீக்காக" என்று சொல்லிக் கொண்டே சில ரொட்டித் துண்டுகளை ஷெல்பில் போட்டாள்.

"ஏன்? கல்யாண விஷயமாக அவர் அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ளவில்லையே?" என்று கேட்டாள் கோரா பிளேவா.

"இல்லை; நான் தான் அதற்கு இஷ்டப்பட வில்லை. இதை அவரிடமே சொல்லிவிட்டேன்."

"சுத்த முட்டாள் நீ" என்று முணு முணுத்தாள் கோரா பிளேவா.

"சேர்ந்து வாழ முடியவில்லை யென்றால் கல்யாணம் செய்து கொண்டு என்ன பயன்?"

"உன் கணவரும் உன்னோடு வருகிறார்" என்றாள் வாச்மன் மனைவி.

"சரி, நமக்கு ஏற்கனவே விவாகமாகி யிருக்கிறதே" என்றாள் தியோடாஸியா.

"அவளோடு வாழ முடியவில்லை யென்றால் இந்தச் சடங்குகளை யெல்லாம் அவர் செய்வானேன்?"

"உண்மையிலேயே ஏன் செய்ய வேண்டும்? முட்டாள்தனமாகப் பேசாதே. அவரை மணந்தால் அவள் செல்வத்தில் புரளலாம்" என்றாள் கோரபிளேவா.

"என்னை எங்கெல்லாம் அழைத்துக் கொண்டு போகிறார்களோ அங்கெல்லாம் தாமும் வருவதாக அவர் சொல்கிறார். வந்தால் சரி, வராவிட்டால் அதுவும் சரியே. வரும்படி நான் அவரைக் கேட்கப் போவதில்லை. இந்த வழக்கு சம்பந்தமாக அவர் இப்பொழுது பீடர்ஸ்பர்க் போகிறார். அங்கு எல்லா மந்திரிகளும் அவருக்கு உறவு. இருந்தாலும் எனக்கு அவர் அவசியமில்லை" என்றாள் காடுஷா.

கோரபிளேவா வேறு எதையோ நினைத்துக் கொண்டு, "ஆமாம், இல்லைதான்" என்று திடீரென்று ஆமோதித்தாள். "இருக்கட்டும், நாம் ஒரு சொட்டு குடிப்போமா?" என்று அவள் கேட்டாள்.

"நீ குடி, எனக்கு வேண்டாம்" என்று காடுஷா பதிலளித்தாள்.

# புத்துயிர்

## இரண்டாம் பாகம்

### 1

காடுஷாவின் வழக்கு இரண்டு வாரத்தில் மேல் கோர்ட்டில் விசாரணைக்கு வரவிருந்தது. மேல் கோர்ட்டில் அப்பீல் தோற்றுப்போனால் வக்கீல் சொன்னபடி மன்னரிடம் அப்பீல் செய்ய நெக்லியுடாவ் விரும்பினான். அப்பீல் விசாரணை சமயத்தில் அவன் பீட்டர்ஸ்பர்க்கில் இருக்க திட்டம் போட்டிருந்தான். அப்பீல் தோற்றுவிட்டால் காடுஷாவும் அவளுடைய கோஷ்டியைச் சேர்ந்த கைதிகளும் ஜூன் மாத ஆரம்பத்தில் சைபீரியாவுக்குச் செல்ல வேண்டியிருக்கும். காடுஷா சைபீரியா செல்ல நேர்ந்தால் அவளோடு தானும் போவதென்று நெக்லியுடாவ் தீர்மானித்திருந்தான். அதற்கு முன்னால் அவனுடைய ஜமீன் விஷயங்களை ஒழுங்குபடுத்த வேண்டியிருந்தது. ஆகையால் அருகாமையில் இருந்த குஸ்மின்ஸ்கி ஜமீனுக்கு முதலில் போனான். அவனுடைய வருமானத்தில் பெரும்பகுதி இந்த ஜில்லாவிலிருந்துதான் வந்தது.

நெக்லியுடாவின் இளமைப் பருவமெல்லாம் இந்த ஜமீனில்தான் கழிந்திருக்கிறது. அங்கு குடியானவர்களுக்கும் ஜமீன்தாருக்குமிடையில் உள்ள உறவு அவனுக்கு நன்றாகத் தெரியும். குடியானவர்கள் ஜமீன்தாரை நம்பித்தான் பிழைத்து வந்தார்கள். நெக்லியுடாவ் கலாசாலை மாணவனாக இருந்தபொழுது ஹென்றி ஜார்ஜின் உபதேசத்தில் நம்பிக்கை கொண்டிருந்தான். அதை அவனே பிரசாரம் செய்யவும் செய்து வந்தான். இந்தக் கொள்கையின்படி தன் தந்தையிடமிருந்து பிதிரார்ஜிதமாக வந்த சொத்தை குடியானவர்களுக்கே பகிர்ந்து தானம் செய்துவிட்டான். அவன் ராணுவத்திலிருந்து திரும்பி வந்தபின் வருஷத்தில் இருபதாயிரம் ரூபிள் விதம் செலவழித்தான். அவனுடைய பழைய கொள்கைகள் அப்பொழுது மறந்து போயிருந்தன என்பது உண்மையே. தனக்குத் தன் தாய் அனுமதித்திருந்த பணம் எங்கிருந்து வருகிறது என்பதைப் பற்றி அவன் சிந்திப்பதையே விட்டுவிட்டான். பிறகு அவன் தாய் இறந்துவிட்டாள். சொத்து அவனைச் சேர்ந்தது. ஜமீன்களை அவனே நிர்வகிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஆகையால் சொந்த சொத்து விஷயத்தில் தன்னுடைய நிலைமை என்ன என்ற பிரச்னை மீண்டும் எழுந்தது. ஒரு மாதத்திற்கு முன்பாக இருந்தால், தற்போதைய முறையை

ளும் ஜமீன்தாரின் நிலங்களுக்கிடையே கலந்திருப்பதாலும் ஏற்படும் சௌகர்யங்களைக் கங்காணி எடுத்துச் சொன்னான். இதைக் கேட்டபின், நிலங்களைக் குடியானவர்களிடமே விட்டு விட வேண்டும் என்ற அவனுடைய எண்ணம் வலுப்பட்டது.

நல்ல நிலங்களில் மூன்றில் இரண்டு பாகத்தை ஸ்திரமான சம்பளம் பெறும் குடியானவர்கள் நவீன இயந்திர சாதனங்களைக் கொண்டு உழுது பயிரிட்டனர். மற்ற நிலங்களை ஒரு "டெஸ்யாடின்" (இரண்டே முக்கால் ஏகர்) விஸ்தீரணத்திற்கு ஐந்து ரூபிள் விதம் கூலி பெற்றுப் பயிரிட்டனர். அதாவது இந்த நிலங்களை மூன்று சால் உழுது, பயிரிட்டு அறுவடை செய்து, களத்தில் எஜமானிடம் கொடுக்க ஐந்து ரூபிள். சாதாரணக் கூலியாள் ஒருவன் இதே வேலைகளைச் செய்தால் அவனுக்கு பத்து ரூபிளாவது கிடைக்கும். ஜமீனிலிருந்து குடியானவர்கள் பெற்ற வருமானத்தைக் காட்டிலும், ஜமீனுக்காக அவர்களுடைய உழைப்பு அதிகமாக இருக்கும், இவையெல்லாம் நிக்லியுடாவுக்கு முன்பே தெரியும். இருந்தாலும் அவற்றை அவன் புதுக் கண் கொண்டு பார்த்தான். "நிலத்தைக் குடியானவர்களிடமே விட்டால் கெட்டுப் போய்விடும். அதனால் அதிக நஷ்டம் ஏற்படும்" என்றெல்லாம் கங்காணி கூறினான். நிலங்களைத் திருப்பிக் கொடுப்பது நல்ல காரியம் என்ற எண்ணத்தை இந்த வாதம் ஊர்ஜிதம் தான் செய்தது. இந்த விஷயத்தை உடனே பைஸல் செய்ய விரும்பினான். அறுவடை தானியங்களை விற்பது, விவசாய சாமான்கள், உபயோகமற்ற கட்டிடங்கள் இவற்றை விற்பது ஆகிய வேலைகளை கங்காணியிடம் விடலாமென்று முடிவு செய்திருந்தான். குஸ்மின்ஸ்கி ஜமீனைச் சேர்ந்த குடியானவர்களை ஒரு கூட்டமாகக் கூட்டும்படி கங்காணியிடம் சொன்னான்.

கவனிப்பாரற்றுக் கிடந்த பூந்தோட்டத்திலும், புல் மண்டிப்போயிருந்த டென்னிஸ் பந்தாட்ட மைதானத்திலும், எலுமிச்சஞ் சோலையிலும் உலாவிக் கொண்டே தன் முன் இருந்த வேலைகளைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தான். குடியானவர்களின் கூட்டத்தில் என்ன பேசுவது என்பதை ஒருவாறு யோசித்து வைத்துக் கொண்டான். தேநீர் குடித்தபின் மீண்டும் சிந்தித்துக் கொண்டே தனக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த சிறிய அறைக்குள் சென்றான்.

வெனிஸ் நகரப் படங்கள் அறைச் சுவர்களை அலங்கரித்தன. இரு ஜன்னல்களுக்கு மத்தியில் ஒரு பெரிய முகம் பார்க்கும் கண்ணாடி மாட்டப்பட்டிருந்தது, ஒரு பக்கம் சுத்தமான படுக்கை கட்டி போடப் பட்டிருந்தது. அருகில் ஒரு மேஜையின்மீது குடிப்பதற்கு சுத்தமான தண்ணீரும், தீப்பெட்டியும் இதர சாமான்களும் இருந்தன. பக்கத்தில் அவனுடைய உடை

கள் அடங்கிய பெட்டி இருந்தது. அதே பெட்டியில் கிரிமினல் சட்டம் சம்பந்தமான சில புத்தகங்கள் இருந்தன.

அறையின் ஒரு மூலையில் ஒரு நாற்காலி இருந்தது. முன்பு அவனுடைய தாயின் படுக்கையறையில் இருந்த நாற்காலி அது என்பது அவனுக்கு ஞாபகம் வந்தது. இந்த ஞாபகம் எதிர்பாராது ஒரு கிளர்ச்சியை திடீரென்று எழுப்பியது. "வீடு அழிந்து விடும்; தோட்டம் பாழாய்ப் போய்விடும்" என்ற எண்ணங்கள் அவன் மனத்தில் நிரம்பின. நிலங்களை விவசாயிகளிடம் விடுவது கூடக்கடினமாகத் தோன்றியது. "நிலங்களை வைத்துக் கொள்ளக் கூடாது" என்றது ஒரு குரல். "நிலம் இல்லா விட்டால் இந்த வீட்டையும் பண்ணையையும் காப்பாற்ற முடியாது" என்றது மற்றொரு குரல். "சைபீரியாவுக்குப்போக வேண்டுமே?" என்றது முதல் குரல். "போனாலென்ன? வாழ்க்கை முழுமையும் அங்கேயே கழிந்து விடப் போகிறதா என்ன! விவாகம் நடக்கும்; குழந்தைகள் பிறக்கும். இந்தச் சொத்தை யெல்லாம் அவர்களிடம் ஒப்படைக்க வேண்டும். எல்லாவற்றையும் அழிப்பது சுலபம். ஆனால் அவற்றைச் சம்பாதிப்பது தான் கஷ்டம். எல்லாவற்றிற்கும் மேலாக நீ மனச் சாட்சிப்படி நடக்கிறாயா அல்லது வெளித் தோற்றத்திற்காகச் செய்கிறாயா?' என்று கேட்டது முதல் குரல். நிக்லியுடாவ் யோசித்தான். தன்னைப்பற்றி ஜனங்கள் என்ன சொல்லுவார்கள் என்ற எண்ணம் தான் முக்கியமாக இருந்தது என்பதை உணர்ந்தான். இதை அறிந்த பின் இன்னும் பல கேள்விகள் எழுந்தன. அவற்றைத் தீர்ப்பது அசாத்தியமாகத் தோன்றியது.

இவற்றை யெல்லாம் காலையில் யோசித்துக் கொள்ளலாமென்று நினைத்து படுக்கப் போனான். ஆனால் தூக்கம் வரவில்லை. தூரத்தில் தவளைகள் கத்திக் கொண்டிருந்தன. நிலவு காய்ந்து கொண்டிருந்தது. தோட்டத்தில் இரு வானம்பாடிகள் பாடிக்கொண்டிருந்தன. வானம் பாடியின் பாட்டைக் கேட்டவுடன் இன்ஸ்பெக்டரின் பெண் வாசித்த சங்கீதம் ஞாபகம் வந்தது. பிறகு இன்ஸ்பெக்டரே அவன் மனக்கண் முன் தோன்றினார். அடுத்தாற்போல் காடுஷா ஞாபகத்திற்கு வந்தாள். அவள் உதடுகள் எப்படித் துடித்தன. இந்தத் தவளைகள் கத்துவதைப்போலத்தான் இருந்தது அவளுடைய உதட்டின் துடிப்பும்!" என்று நினைத்துக் கொண்டான். 'நீங்கள் பிரபு, நான் கைதி" என்று அவள் சொன்ன வார்த்தைகளும் அவன் காதில் ஒலித்தன. "சரி, என் உறுதியை விடக்கூடாது என்று அவன் தீர்மானித்துக் கொண்டான். "நான் செய்வது சரிதானா?' என்றகேள்வி எழுந்தது. "அது எனக்குத் தெரியாது; அதைப்பற்றிக் கவலை யில்லை. நான் தூங்க வேண்டும்" என்று எண்ணித் தூங்கத் தொடங்கினான்.

# 2

மறுநாள் காலை ஒன்பது மணிக்கு எழுந்தான் நிக்லியுடாவ். அவன் புரளும் சப்தம் கேட்டவுடன், பளபளக்கும் பூட்ஸ்களை வேலைக்காரன் கொண்டு வந்து வைத்தான். பிறகு சுத்தமான குளிர்ந்த நீரைக் கொண்டு வந்து வைத்துவிட்டு, குடியானவர்கள் வந்து கூடியிருப்பதாகச் சொன்னான். நிக்லியுடாவ் படுக்கையிலிருந்து குதித்தெழுந்தான். மீண்டும் யோசித்தான். நிலங்களைக் கொடுப்பது பற்றி நேற்று ஏற்பட்ட வருத்தத்தின் சாயை கூட இன்று இல்லை. அதைப்பற்றி அவன் பெருமை கூட அடைந்தான்.

ஜன்னல் வழியாகப் பார்த்தான். புல் மண்டிக் கிடந்த டென்னிஸ் மைதானத்தில் குடியானவர்கள் வந்து கூடிக் கொண்டிருந்தார்கள். முதல் நாள் இரவு தவளைகள் கத்தியது வீண்போகவில்லை. காலநிலை மந்தமாக இருந்தது. காற்று வீசவில்லை. காலையில் தூறிய சிறு தூற்றலின் துளிகள் இலைகள் மீதும் புல் நுனிகளிலும் ஒட்டிக் கொண்டிருந்தன. புதுப் பயிர்களின் வாசனையும், அதிக மழைக்கு அறிகுறியாக மண் வாசனையும் அறைக்குள் பிரவேசித்தன.

நிக்லியுடாவ் உடைகளை அணிந்தபடியே வெளியே கூடியிருந்த குடியானவர்களைப் பலமுறை பார்த்தான். அவர்கள் ஒவ்வொருவராக வந்து குல்லாயை அகற்றி ஒருவருக்கொருவர் வந்தனம் செய்துவிட்டு உட்கார்ந்து ஏதோ பேசிக் கொண்டிருந்தனர். குடியானவர்கள் வந்து விட்டார்கள் என்று அறிவிக்க கங்காணி வந்தான். நிக்லியுடாவ் டீயோ காபியோ குடித்துவிட்டு வரும் வரையில் அவர்கள் காத்திருப்பார்கள் என்று அவன் சொன்னான்.

''இல்லை, நான் இப்பொழுதே அவர்களைப் பார்த்துவிடுகிறேன்'' என்றான் நிக்லியுடாவ். இதைச் சொல்லும் பொழுது ஒருவித சங்கோஜ உணர்ச்சி அவனுக்கு ஏற்பட்டது. குடியானவர்களின் விருப்பத்தை அவன் நிறைவேற்ற விருந்தான். அந்த விருப்பத்தை அவர்கள் வெளியே சொல்லக் கூடத் துணியவில்லை. அவர்களுக்கு ஒரு பெரிய வரப்பிரஸாதத்தையே அவன் கொடுக்க விருந்தான் என்று சொல்லலாம். இருந்தாலும் ஏதோ ஒன்றைப்பற்றி அவன் வெட்கப்பட்டான்.

குடியானவர்கள் இருக்கும் இடத்திற்கு நிக்லியுடாவ் வந்தான். அவர்கள் வெறுந்தலையோடு உட்கார்ந்திருந்தார்கள். அவர்களைப் பார்த்தவுடன் நிக்லியுடாவுக்கு ஒன்றும் பேசத் தோன்றவில்லை. மீண்டும் தூறல் போடத் தொடங்கியது. தங்கள் எஜமான் என்ன பேசப்போகிறார் என்பதை அறிய குடியானவர்கள் ஆவலுடன் அவனையே பார்த்துக் கொண்

டிருந்தனர். ஆனால் அவனால் பேச முடியவில்லை. கண்காணி அந்த அசம்பாவிதமான நிசப்தத்தைச் கலைத்து, "நிலங்களை உங்களிடமேவிட எஜமான் தயாராக வந்திருக்கிறார். ஆனால் அதற்கு நீங்கள்தான் லாயக்கில்லை" என்றான்.

"நாங்கள் என் லாயக்கில்லை. உங்களுக்கு நாங்கள் வேலை செய்யவில்லையா? செத்துப்போன அந்த எஜமானி அம்மாள் எங்களிடம் எவ்வளவு அன்பாக இருந்தார்கள் தெரியுமா? அவர்கள் ஆன்மா சாந்தியடைய வேண்டும். சின்ன எஜமானும் எங்களைக் கைவிட மாட்டார்" என்றான் ஒரு குடியானவன்.

"எங்கள் எஜமானுக்கு எதிராக ஒன்றும் சொல்லமாட்டோம். நிலம் போதவில்லை என்பதுதான் எங்கள் புகார். பிழைப்புக்குப் போதிய அளவு நிலம் இல்லை" என்று மற்றொரு குடியானவன் சொன்னான்.

"அதற்காகத்தான் உங்களைக் கூட்டியிருக்கிறேன். நீங்கள் விரும்பினால் எல்லா நிலங்களையும் உங்களிடமே விட்டுவிட விரும்புகிறேன்" என்றான் நிக்லியுடாவ்.

குடியானவர்கள் மௌனமாக இருந்தனர். அவன் சொன்னது அவர்களுக்குப் புரியவில்லையோ அல்லது அதை அவர்களால் நம்ப முடியவில்லையோ!

"எப்படி?" என்று கேட்டான் நடுத்தரவயதுள்ள ஒரு குடியானவன்.

"குறைந்த வாரத்திற்கு உங்களிடம் விடுகிறேன்."

"மிகவும் நல்ல காரியம்" என்று ஒரு கிழவன் கூறினான்.

"வாரம் நாங்கள் கொடுக்கக் கூடியதாக இருந்தால் சரி," என்றான் மற்றொருவன்.

"உங்களுக்கும் அதனால் மன நிம்மதி ஏற்படும். இப்போதைய முறையில் உள்ள பாவத்தையும் கஷ்டங்களையும் கவனியுங்கள். நிலத்தை வாரத்திற்கு விட்டுவிட்டால் நீங்கள் வாரம் வாங்கிக் கொள்வதைத் தவிர வேறு ஒன்றும் செய்ய வேண்டாம்" என்றன பல குரல்கள்.

"பாபத்திற்குக் காரணம் நீங்கள்தான். உங்கள் வேலையை ஒழுங்காகச் செய்து—" என்று ஜெர்மன் கண்காணி கூறினான்.

"எங்களைப் போன்றவர்களுக்கு அது சாத்தியமில்லை. பயிரில் குதிரையை ஏன் விட்டு மேய்த்தாய்?' என்று கேட்கிறீர்கள். நாங்கள் வேண்டுமென்று குதிரையை விட்டு மேய்க்கிறோம்."

"விதிகளின்படி நடக்க வேண்டும்!"

"விதிகளைப் பற்றிப் பேசுவது சுலபம். அவற்றின்படி நடக்க எங்களுக்குச் சக்தியில்லை."

"வேலி போட வேண்டுமென்று நான் முன்பே சொல்லவில்லையா?"

"வேலி போடுவதற்கு மரம் கொடுங்கள். போன வருஷம் வேலி போடுவதற்காகத்தான் நான் மரம் வெட்டினேன். அதற்காக என்னை மூன்று மாதம் சிறையில் தள்ளினீர்கள்" என்று குள்ளமான மற்றொரு குடியானவன் கூறினன்.

அவன் எதைப்பற்றிப் பேசுகிருன் என்பது நிக்லியுடாவுக்கு விளங்கவில்லை. கண்காணியிடம் கேட்டான்.

"அவன் ஒரு பெரிய திருடன். ஒவ்வொரு வருஷமும் அவன் தோப்பில் திருட்டுத்தனமாக மரம் வெட்டும் பொழுது அகப்பட்டுக் கொள்கிருன்" என்று கண்காணி சொல்லிவிட்டு, அந்தக் குடியானவன் பக்கம் திரும்பி, "பிறர் சொத்தை மதிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்" என்ருன்.

"நாங்கள் உங்களை மதிக்கவில்லையா? மதித்துத்தானே ஆகவேண்டும்? எங்களை நீங்கள் கயிருக வேண்டுமானுலும் திரிக்கலாம். நாங்கள் உங்கள் கையில் இருக்கிறோம்" என்ருன் ஒரு கிழக்குடியானவன்,

"உன்னை அப்படியெல்லாம் செய்யவே முடியாது. நீதான் எங்களையெல்லாம் ஆட்டிவைக்கிருயே!" என்ருன் ஜெர்மானியன்.

"உண்மையாகவா? நீங்கள் என்னைக் கன்னத்தில் அறையவில்லையா? பணக்காரர்கள் மீது வழக்குத் தொடுப்பதால் பயனில்லை."

"முதலில் நீ சட்டத்திற்கு அடங்கி நடக்கவேண்டும்."

இப்படி ஒரு சொற்போரே நடந்து கொண்டிருந்தது. இது எதற்காக என்பது அதில் கலந்து கொண்டவர்களுக்கே விளங்கவில்லை. ஆனுல் ஒரு புறம் பயத்தினுல் அடங்கிக்கிடந்த துவேஷமும், மறுபக்கம் இருந்த அதிகார மமதையும் வெளியாயின. நிக்லியுடாவுக்கு இவற்றையெல்லாம் கேட்டுக்கொண்டிருக்கப் பிடிக்கவில்லை. ஆகையால் நிலத்தை குடியானவர்களிடம் விடுவது பற்றிய பிரச்னைக்குத் திரும்பினுன்.

"சரி, நிலத்தைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்? நிலம் முழுமையும் உங்களிடமே விடுவதானுல் எவ்வளவு வாரம் கொடுக்கிறீர்கள்?"

"சொத்து உங்களுடையது, வாரத்தை நிர்ணயிக்க வேண்டியவர் நீங்கள்தான்."

நிக்லியுடாவ் ஒரு தொகையைச் சொன்னான். சுற்றுப் பக்கங்களில் கொடுக்கும் வாரத்தைக் காட்டிலும் அது மிகவும் குறைவுதான். குடியானவர்கள் அதைச் சந்தோஷத்துடன் ஏற்பார்கள் என்று அவன் எதிர்பார்த்தான். ஆனால் அவர்களிடம் திருப்தியின் அறிகுறியையே காணவில்லை. வாரம் மிகவும் அதிகமென்றார்கள், அவர்களுடைய வழக்கமான முறையில் அதைக் குறைக்க பேரம் பேசினார்கள். குடியானவர்களுக்கிடையே இருந்த போட்டியைக் கொண்டுதான் இந்த வாரம் குறைவு என்பதை நிக்லியுடாவ் அறிந்தான். கண்காணியின் முயற்சியால் வாரம் நிர்ணயமாயிற்று. ஒப்பந்தத்தை எழுத நிக்லியுடாவும் கண்காணியும் ஜமீன் ஆபீஸுக்குள் சென்றார்கள். அந்த ஜில்லாவில் உள்ள வாரத்தைக் காட்டிலும் முப்பது சதவிகிதம் குறைந்த வாரத்திற்கு குடியானவர்களுக்கு நிலங்கள் கிடைத்துவிட்டன. எப்படி நடக்க வேண்டுமென்று நிக்லியுடாவ் விரும்பினானோ அப்படியே எல்லாம் நடந்துவிட்டன. இருந்தாலும் ஏதோ ஒன்றைப் பற்றி அவன் வெட்கப்பட்டான். குடியானவர்கள் நன்றி செலுத்தினாலும் அவர்களுக்குத் திருப்தி ஏற்படவில்லை என்பது தெரிந்தது. அவர்கள் இன்னும் அதிகம் எதிர்பார்த்தனர். "தான் எல்லாவற்றையும் துறந்தும் குடியானவர்களின் விருப்பத்தைப் பூர்த்திசெய்ய முடியவில்லை" என்று தோன்றிறது.

மறுநாள் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டுவிட்டு குடியானவர்களிடம் நிக்லியுடாவ் விடை பெற்றுக் கொண்டான். அதிருப்தியும் ஏமாற்றமும் சொட்டும் முகத்துடன் அவர்கள் வழியனுப்பினார்கள். நிக்லியுடாவுக்குத் தன் மீதே வெறுப்பு. எதையோ பற்றி வெட்கப்பட்டுக் கொண்டே அவன் ஸ்டேஷனுக்குச் சென்றான்.

## 3

குஸ்மின்ஸ்கியிலிருந்து, அவன், தன் அத்தைகளிடமிருந்து கிடைத்த ஜமீனுக்குச் சென்றான். குஸ்மின்ஸ்கியில் ஏற்பாடு செய்தது போலவே இங்கும் செய்ய விரும்பினான். முதலில் அவன் காடுஷாவைச் சந்தித்த இடம் இதுதான். நில விவகாரங்களைக் கவனிப்பதற்கு முன்னால் அங்கு காடுஷாவைப் பற்றிய எல்லா விஷயங்களையும் அறிய விரும்பினான். அவனிடம் தனக்குப் பிறந்த குழந்தை இறந்துவிட்டது என்பது உண்மையா என்று அறிய அவனுக்கு ஆவலாக இருந்தது.

காலையில் பனோவாவுக்குச் சென்றான். அங்கு குடிகொண்டிருந்த சூன்யமும், விசேஷமாக அவர்களுடைய வீட்டின் பாழடைந்த தோற்றமும் தான் அவனுடைய கவனத்தைக் கவர்ந்தன. வீட்டின் மீது இருந்த தகரத் தகடுகள் துருபிடித்

"ஆமாம் மருமான் தான்" என்று பதிலளித்தான் நிக்வியுடாவ்.

"எங்களை அன்புடன் பார்த்துவிட்டுப் போக வந்திருக்கிறீர்களா?"

"ஆமாம். நீங்களெல்லாம் சௌக்கியம் தானே?"

"சௌக்கியம் எது? ரொம்பவும் கஷ்டப்பட்டுக்கொண்டு தான் இருக்கிறோம்."

"ஏன் அவ்வளவு கஷ்டம்?" என்று கேட்டுக்கொண்டே வாசற்படிக்குள் பிரவேசித்தான் நிக்லியுடாவ்.

"மிகவும் கஷ்ட ஜீவனம் நடத்துகிறோம்; நாங்கள் பன்னிரண்டு பேர். இவ்வளவு பேருக்கும் சாப்பாட்டிற்குப் பணம் எங்கிருந்து வருகிறது!" என்று சொல்லிக்கொண்டே தொழுவத்தைச் சுத்தம் செய்துகொண்டிருந்த இரு பெண்களைச் சுட்டிக் காட்டினான்.

"வேண்டிய அளவு தானியத்தை நீயே பயிரிட்டுக்கொள்வதில்லையா?"

"நானேயா! மூன்றுபேருக்குப் போதிய தானியம் பயிரிடுவதற்குத்தான் நிலம் இருக்கிறது. போன வருஷம் நான் பயிரிட்ட தானியம் கிறிஸ்மஸ் வரையில் கூடப்போதவில்லை."

"பின் என்ன செய்கிறாய்?"

"என்னத்தைச் செய்வது? ஒரு பையனைத் தொழிற்சாலையில் வேலைக்கு விட்டிருக்கிறேன். உங்களிடமிருந்து கொஞ்சம் பணம் கடன் வாங்கிக்கொண்டேன். எல்லாம் செலவாகிவிட்டது. இன்னமும் வரி கட்டவில்லை."

"வரி எவ்வளவு?"

"என் குடும்பத்திற்கு பதினேழு ரூபிள். எங்களுடைய கஷ்டம் கடவுளுக்குத்தான் தெரியும். குடும்பம் எப்படி நடக்கிறதென்பது எனக்கே தெரியவில்லை."

"நான் உன் குடிசைக்குள் வரலாமா?" என்று கேட்டு ஓர் அடி எடுத்து வைத்தான் நிக்லியுடாவ்.

"தாராளமாய் வாருங்கள்" என்று கூறி, குடியானவன் வேகமாக நடந்து சென்று கதவைத் திறந்தான்.

அங்கு வேலை செய்து கொண்டிருந்த பெண்கள் தங்கள் தலையில் கட்டியிருந்த கை குட்டையை ஒழுங்கு படுத்திக்

கொண்டார்கள். தங்கள் வீட்டிற்குள் பிரவேசித்த கனவானை அவர்கள் ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டு நின்றனர். நிக்லியுடாவ் தன் தொப்பியை அகற்றிவிட்டு குனிந்து குடிசைக்குள் நுழைந்தான். பழையது வாசனை மூக்கைத் துளைத்தது, குடிசையில் பெரும் பகுதி இடத்தை இரு தறிகள் அடைத்துக் கொண்டிருந்தன. அடுப்பின் பக்கத்தில் ஒரு கிழவி தன் சட்டையின் கைகளை மடித்து விட்டுக் கொண்டு நின்றிருந்தாள்.

"இதோ நம்முடைய எஜமான் நம்மைப் பார்க்க வந்திருக்கிறார்" என்று அவளை அழைத்தான் கிழவன்.

கிழவி தன் சட்டைக்கையைத் தொங்கவிட்டுக் கொண்டு நல்வரவு கூறி நிக்லியுடாவை வரவேற்றாள். அவர்கள் எவ்வளவு அற்பமான ஆகாரம் சாப்பிடுகிறார்கள் என்பதையும் நிக்லியுடாவ் விசாரித்துத் தெரிந்து கொண்டான். வழக்கமான, காரணம் தெரியாத வருத்தமும் வெட்கமும் அவனைக் கவ்விக் கொண்டன. குடியானவனிடம் அவன் விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டான். அவன் வந்து தங்கள் குடும்ப நிலையைப்பற்றி விசாரித்ததற்காக குடியானவன் நன்றி செலுத்தினான். இவ்வளவு நேரம் வாசற்படியில் கூடி நின்று நிக்லியுடாவை ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்த பெண்களும் சிறுவர்களும் ஒதுங்கி நின்று அவனுக்கு வழி விட்டனர். இரு சிறுவர்கள் மாத்திரம் நிக்லியுடாவோடு கூடவே வெளியே வந்தனர்.

"நீங்கள் எங்கே போகிறீர்கள்!" என்று கேட்டான் ஒரு சிறுவன்.

"மாட்ரேனா ஹரினாவைப் பார்க்கப் போகிறேன். உனக்கு அவளைத் தெரியுமா!" என்று நிக்லியுடாவ கேட்டான்.

சிறிய பையன் எதற்காகவோ உரக்கச் சிரித்தான். ஆனால் முதலில் பேசிய பையன், "எந்த மாட்ரேனாவை! அவள் கிழவியா?" என்று சாதாரணமாகக் கேட்டான்.

"ஆமாம் கிழவிதான்."

"ஓ! அவளா? அவள் கிராமத்தின் அந்தக் கோடியில் இருக்கிறாள்" என்று சொல்லி விட்டு, மற்றொரு சிறுவனைப் பார்த்து, "பெட்கா, நாமும் இவரோடு போகலாம், வருகிறாயா!" என்று கேட்டான்.

"வருகிறேன், ஆனால் குதிரையை என்ன செய்வது!"

"குதிரைகள் எல்லாம் சரியாகத்தான் இருக்கும்" என்றான் முதல் சிறுவன்

அவனும் ஒப்புக் கொண்டான். மூவரும் மாட்ரேனுவின் வீட்டை நோக்கி நடந்தார்கள்.

## 5

நிக்லியுடாவுக்கு பெரியவர்களுடன் பேசுவதைக் காட்டிலும் சிறுவர்களோடு பழகுவது சகஜமாக இருந்தது. அவர்களோடு பேசிக்கொண்டே போனான். சிறிய பையன் சிரிப்பதை நிறுத்தி விட்டு பெரியவனைப் போலவே சாதுரியமாகப் பேசினான்.

"இங்கு யார் யார் ரொம்ப ஏழை?" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"ரொம்ப ஏழையா? மைகேல் ஏழை; ஸைமன் மாக்ரோவும் ஏழைதான்; மார்தாதான் ரொம்ப ஏழை"

"அநிஸ்யா இன்னும் ஏழை. அவளிடம் ஒரு பசு கூட இல்லை; அவள் பிச்சை எடுக்கிருள்" என்று ஆக்ஷேபித்தான் சிறிய பையன்.

"பசு இல்லா விட்டால் என்ன! அவர்கள் வீட்டில் மூன்று பேர்தானே இருக்கிருர்கள்? மார்த்தா வீட்டில் ஐந்து பேராயிற்றே" என்ருன் பெரியவன்.

"ஆனல் அநிஸ்யா விதவை"

"மார்தாவும் விதவை மாதிரிதான். இவளுக்கும் தான் கணவன் இல்லை."

"அவளுடைய கணவன் எங்கே?" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"சிறையில் இருக்கிருன்" என்ருன் பெரிய பையன்.

"போன வருஷம் தோப்பில் இரண்டு மரங்களை வெட்டினான். அதற்காக அவனை ஜெயிலில் அடைத்து விட்டார்கள். அவன் சிறைக்குப்போய் ஆறு மாதம் ஆகி விட்டது. அவன் மனைவி பிச்சை எடுத்துப் பிழைக்கிருள். அவளுக்கு மூன்று குழந்தைகளும் ஒரு கிழத் தாயாரும் இருக்கிருர்கள்" என்று விவரித்துக் கொண்டே போனான் சிறிய பையன்.

"அவள் எந்த வீட்டில் இருக்கிருள்?"

"இதோ இந்த வீட்டில் தான் இருக்கிருள்" என்று ஒரு குடிசையைச் சுட்டிக் காட்டினான் சிறுவன். அங்கு செம்மட்

டைத் தலையுடன் ஒரு குழந்தை நின்றிருந்தது. "வாஸ்கா, அந்தச் சின்னப் போக்கிரி எங்கே?'' என்று கத்திக்கொண்டே ஒரு ஸ்திரீ ஓடி வந்து அந்தக் குழந்தையை எடுத்துக் கொண்டாள். தன குழந்தையை நிக்லியுடாவ் துன்புறுத்துவான் என்று பயந்தவள் போல் அவள் காணப்பட்டாள். சிறையில் இருந்தவனுடைய மனைவி இவள் தான்.

அதற்குள் அவர்கள் மாட்ரேனாவின் வீட்டுக் கருகே வந்து விட்டார்கள். "இந்த மாட்ரேனாவும் ஏழை தானே?'' என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"அவளா ஏழை? இல்லவே இல்லை. அவள் சாராயம் விற்கிறாள்' என்று சிறுவன் சட்டென்று பதிலளித்தான்.

சிறுவர்கள் இருவரையும் வெளியே விட்டு விட்டு நிக்லியுடாவ் குடிசைக்குள் பிரவேசித்தான். குடிசை பதினான்கு அடி நீளம் தான் இருக்கும். அங்கு கணப்புக்குப் பக்கத்தில் ஒரு கட்டில் கிடந்தது. உயரமான ஒருவர் அதில் நன்றாக நீட்டிப் படுக்கக் கூட முடியாது. "காடுஷா இந்தக் கட்டிலில் தான் குழந்தையைப் பெற்றிருப்பாள். பிறகு அவள் அசௌக்கிய முற்றிருந்த பொழுதும் இந்தக் கட்டிலில் தான் படுத்திருப்பாள்'' என்று நினைத்தான் நிக்லியுடாவ். அறையில் பெரும் பகுதியை ஒரு கைத்தறி அடைத்துக் கொண்டிருந்தது. ஒரு கிழவியும் அவளுடைய பெரிய பேத்தியும் அதில் பாவைச் சரிப்படுத்திக் கொண்டிருந்தார்கள். மற்றக் குழந்தைகள் நிக்லியுடாவைத் தொடர்ந்து ஓடிவந்து வாசற்படியில் நின்றன.

கிழவி நிக்லியுடாவைப் பார்த்து விட்டு, "உங்களுக்கு யார் வேண்டும்?'' என்று கடுமையான குரலில் கேட்டாள். தறியில் இழைகளைச் சரிப்படுத்த முடியாததால் அவளுக்கு எரிச்சலாய் இருந்தது. தவிர அவள் திருட்டுத் தனமாகச் சாராயம் விற்று வந்தால் புதிதாக யாராவது வந்தால் பயந்து போவாள்.

"நான் இந்த ஜமீனுக்குச் சொந்தக்காரன்; உன்னோடு சில விஷயங்கள் பேச வேண்டும்'' என்றான் நிக்லியுடாவ்.

"என் கண்ணே! நீங்களா? யாரோ வழிப் போக்கர் என்று நினைத்துவிட்டேன். மன்னிக்க வேண்டும்'' என்று கெஞ்சினாள் கிழவி.

"உன்னோடு நான் தனியாகச் சில விஷயங்கள் பேசவிரும்புகிறேன்'' என்று சொல்லி விட்டு நிக்லியுடாவ் கதவை நோக்கினான். கதவருகே சில குழந்தைகளும் ஒரு ஸ்திரீயும் நின்றிருந்தனர்.

"இங்கு என்ன பார்க்கிறீர்கள்? கதவை மூடிவிட்டுப் போங்கள்" என்று அதட்டினாள் கிழவி. குழந்தைகள் ஓடிப் போய்விட்டன. அங்கு இருந்த ஸ்திரீ கதவை மூடிக்கொண்டாள.

"உள்ளே யார் வருகிறார்கள் என்று பார்த்தேன்! நான் கிழப் பிணம்தானே? கண் தெரியவில்லை" என்றாள் கிழவி.

நிக்லியுடாவ் உட்கார்ந்தான். கிழவி முகவாய்க்கட்டையில் கையை வைத்துக் கொண்டு அவன் எதிரே நின்றாள்.

"உனக்கு காடுஷாவை ஞாபகம் இருக்கிறதா" என்று ஆரம்பித்தான் நிக்லியுடாவ்.

"இருக்கிறது. ஏன்? அவள் என் மருமாள்தானே? அவளையும் நினைவிருக்கிறது. அவளுக்காக நான் சிந்திய கண்ணீரும் நினைவிருக்கிறது. எனக்கு எல்லாம் தெரியும். கடவுளின் முன்னால் பாவம் செய்யாதவர்கள் யார்? மன்னருக்கு எதிராகக் குற்றம் செய்யாதவன் யார்? இளமை இன்னதென்பது நமக்குத் தெரியும். நீங்கள் அவளைக் கைவிட்டீர்கள். இருந்தாலும் நூறு ரூபிள் கொடுக்கவில்லையா? அவள் என்ன செய்தாள் தெரியுமா? நான் சொன்னதைக் கேட்டிருந்தால் எவ்வளவோ சௌக்கியமாக இருந்திருக்கலாம். அவள் எங்கும் வணங்கி வேலை செய்யவில்லை."

"அவளுடைய குழந்தை என்ன ஆயிற்று? அவள் உன் விட்டில்தான் பிறசவித்திருந்தா ளில்லையா?"

"ஆமாம். அவள் ரொம்பவும் அசௌக்கிய முற்றுப் படுத்திருந்தாள். அப்பொழுது குழந்தையை சிசு சம்ரக்ஷண ஆஸ்பத்திரியில் கொண்டுபோய் விட்டேன். அங்கு அது இறந்து விட்டது" என்று கூறிவிட்டு, குழந்தையை ஆஸ்பத்திரியில் சேர்த்த விவரங்களைக் கிழவி சொன்னாள். குழந்தையைப் பற்றி நிக்லியுடாவுக்கு இவ்வளவுதான் தெரிந்தது.

## 6

நிக்லியுடாவ் வெளியே வந்தான். வாசற்படி அவன் தலையில் இடித்தது. அங்கு பல ஸ்திரீகள் இடுப்பில் குழந்தையை வைத்துக் கொண்டு நின்றிருந்தனர். ஒல்லியான ஒருத்தி, இளைத்து ரத்தம் சுண்டிய ஒரு குழந்தையுடன் அங்கு நின்றிருந்தாள். குழந்தையின் வாடிய முகத்தில் புன்முறுவல் பூத்தது. வேதனையில் எழுந்த சிரிப்புத்தான் அது என்பதை நிக்லியுடாவ் அறிந்தான். அவள் யாரென்று விசாரித்தான் நிக்லியுடாவ்.

"நான் சொன்ன அனிஸ்யாதான் அவள்" என்றான் அவனோடு வந்த பெரிய பையன்.

நிக்லியுடாவ் அவளை நோக்கி, "நீ எப்படி வாழ்க்கையை நடத்துகிறாய்?" என்று கேட்டான்.

"பிச்சை எடுக்கிறேன்" என்று சொல்லிவிட்டு அவள் அழுதாள்.

நிக்லியுடாவ் ஒரு பத்து ரூபிள் நோட்டை எடுத்து அவளிடம் கொடுத்தான். இதைக் கண்ட மற்றும் பல ஸ்திரீகள் வந்து அவனிடம் தங்கள் ஏழ்மையை எடுத்துக்கூறி உதவி செய்யும்படி கேட்டார்கள். நிக்லியுடாவ், தன்னிடம் இருந்த அறுபது ரூபிளையும் அவர்களுக்குக் கொடுத்துவிட்டான். மனத்தில் வேதனையுடன் ஜமீன் குமாஸ்தாவின் வீட்டுக்குத் திரும்பினான்.

குமாஸ்தா புன்சிரிப்புடன் அவனை வரவேற்றான். குடியானவர்கள் சாயங்காலம் வந்து கூடுவதாக அவன் கூறினான். நிக்லியுடாவ் நன்றி செலுத்திவிட்டு, தான் கண்டவற்றைப் பற்றி ஆலோசிக்க நேராகத் தோட்டத்திற்குச் சென்றான்.

முதலில் எல்லாம் நிசப்தமாக இருந்தது. சிறிது நேரத்திற்கெல்லாம் குமாஸ்தாவின் வீட்டிலிருந்து கோஷம் கேட்டது. இரு ஸ்திரீகள் இரைந்து பேசினார்கள். நடுநடுவே குமாஸ்தாவும் ஏதோ பதில் சொன்னான்.

"என் சக்தியை யெல்லாம் இழந்து நான் ஓய்ந்து போய் விட்டேன். என் தாலியை அறுக்கிறாயே!" என்றது ஒரு பெண்ணின் ஆத்திரமான குரல்.

"ஒரு நிமிஷம்தான் உள்ளே போயிருந்தாள். மாட்டை விட்டு விடுங்கள். அதை ஏன் பட்டினி போட்டுக் கொல்கிறீர்கள்? குழந்தைகளுக்கும் பால் வேண்டியிருக்கிறது" என்றது மற்றொரு பெண்ணின் குரல்.

"பணத்தையாவது கட்டு, இல்லையானால்; அதற்கு உண்டான வேலையையாவது செய்' என்றது குமாஸ்தாவின் குரல்.

இதைக் கேட்டு நிக்லியுடாவ் அங்கு வந்து பார்த்தான். இரு ஸ்திரீகள் தாழ்வாரத்தில் நின்று கொண்டிருந்தனர். அவர்களில் ஒருத்தி பூரண கர்ப்பிணி. நிக்லியுடாவைக் கண்டவுடன் தங்கள் தலையில் கட்டிக்கொண்டிருந்த கைகுட்டையை அவர்கள் சரிப்படுத்திக் கொண்டனர். இரு பசுக்கள் ஜமீன் புல்தரையில் மேய்ந்ததற்காக அவற்றைக் குமாஸ்தா பிடித்

துக் கட்டியிருந்தான் என்பதையும் அதற்காகத்தான் இந்தக் கூச்சல் என்பதையும் நிக்லியுடாவ் அறிந்தான். பசுக்களை மீட்டுக் கொண்டு போக ஸ்திரீயிடம் பணம் இல்லை. "பின்னர் வேலை செய்து கழிக்கிறேன்" என்று ஸ்திரீ சொன்னதை குமாஸ்தா கேட்கவில்லை.. பசுக்களை நிக்லியுடாவ் அவிழ்த்து விட்டுவிடச் சொன்னான்.

"ஜனங்கள் இப்படி மடிவதை ஏன் எல்லாரும் அறிவதில்லை. இது பட்டப்பகல் போலத் தெரிகிறது. நான் கூட எப்படி இதை இவ்வளவு காலம் உணராமலிருந்தேன்? எல்லாருக்கும் உணவு அளிக்கக்கூடிய நிலத்தை ஜமீன்தார்கள் எடுத்துக் கொண்டு விட்டதால்தான் இவ்வளவு தரித்திரம். பால் இல்லாததால் குழந்தைகளும் கிழவர்களும் மடிகிறார்கள் என்பது எவ்வளவு நன்றாகத் தெரிகிறது. பசுக்கள் மேய நல்ல புல்தரை இல்லாததால் பால் கிடைக்கவில்லை. அவர்கள் தானியங்களைப் பயிரிடுவதற்கோ, மாட்டிற்கு வைக்கோல் உற்பத்தி செய்வதற்கோ நிலம் இல்லை" என்றெல்லாம் நிக்லியுடாவ் சிந்தித்துக் கொண்டிருந்தான்.

இவற்றை யெல்லாம் நினைக்க பயங்கரமாக இருந்தது அவனுக்கு. இதை இனியும் அனுமதிக்கக் கூடாதென்று தோன்றியது. "இதற்கு ஒரு வழி செய்தே தீருவேன்" என்று தீர்மானித்துக் கொண்டான். "விஞ்ஞான வட்டாரங்களிலும், சர்க்கார் ஸ்தாபனங்களிலும், மக்கள் வறுமையின் காரணத்தைப் பற்றியும், அதைப் போக்குவதற்கான வழிகளைப் பற்றியும் ஆராய்கிறோம். ஆனால் அவர்களுடைய கஷ்டத்தை நிச்சயமாகக் குறைக்கக் கூடிய ஒரே ஒரு வழியைப் பற்றி ஒருவரும் யோசிப்பதில்லை. அவர்களுக்குத் தேவையான நிலத்தை அவர்களுக்குக் கொடுப்பது ஒன்றுதான் இதற்கான வழி" என்று நினைத்துக் கொண்டான்.

ஹென்றி ஜார்ஜின் அடிப்படைத் தத்துவம் நிக்லியுடாவுக்கு நினைவு வந்தது. நிலம் ஒருவருக்கும் சொந்தமில்லை. காற்று, ஜலம் முதலியவற்றைப்போல நிலத்தையும் ஒருவரும் விற்கவோ வாங்கவோ உரிமை இல்லை. நிலத்தில் எல்லாருக்கும் சம உரிமை உண்டு. அதிலிருந்து கிடைக்கும் பலனை எல்லாரும் சமமாக அடைய வேண்டும். குஸ்மின்ஸ்கியில் நடந்த பேரத்தைப் பற்றி அவன் ஏன் வெட்கப்பட்டான் என்பது இப்பொழுது தெரிந்தது. நிலத்திற்குச் சொந்தக்காரனாக இருக்க ஒருவருக்கும் உரிமை இல்லை என்று தெரிந்திருந்தும் அவன உரிமை கொண்டாடினான். அவன் அடையத் தகுதியற்ற பொருளின் ஒரு பகுதியைத்தான் குடியானவர்களுக்குக் கொடுத்தான். குஸ்மின்ஸ்கியில் நிலங்களைக் குடியானவர்களுக்கு விட்டமுறையை மாற்றிவிடத் தீர்மானித்துக்

கொண்டான். நிலங்களைக் குடியானவர்களுக்கே விட்டு அவற்றில் கிடைக்கும் மகசூலை அவர்களே அநுபவிக்க அநுமதிக்க வேண்டும் என்று முடிவுசெய்தான். இப்படிச் செய்தால் நிலத்திலிருந்து தனக்கு லாபம் கிடைக்காது என்பது அவனுடைய முக்கிய பிரச்னையாக இருந்தது.

அவன் வீடு திரும்பியவுடன், குமாஸ்தா அவனைச் சாப்பிட அழைத்தான். என்ன சாப்பிடுகிறோம் என்பதைக்கூடக் கவனிக்காமல் நிக்லியுடாவ் சாப்பிட்டுக்கொண்டிருந்தான். குடியானவர்களைப் பார்த்துவிட்டு வரும்பொழுது அவன் மனத்தில் இருந்த வருத்தத்தை அவனுடைய யோசனைகள் போக்கிவிட்டன. தன் மனைவியின் சமையல் திறமையைப் பற்றி குமாஸ்தா பூரித்துப்போனான்.

சாப்பாடு முடிந்தபின் குமாஸ்தாவைத் தன் அருகில் உட்காரவைத்துக்கொண்டு தான் போட்டிருந்த திட்டத்தை அவனிடம் விவரித்துக் கூறினான். குமாஸ்தாவுக்கு ஒன்றுமே புரியவில்லை.

"நிலங்களையெல்லாம் குடியானவர்களுக்கே கொடுத்துவிடப்போகிறேன். அவற்றிலிருந்து நான் எவ்வித லாபமும் அடையப் போவதில்லை" என்று நிக்லியுடாவ் கூறிய பிறகுதான் அவனுக்கு விஷயம் புரிந்தது. பிறர் நன்மைக்காகத் தியாகம் செய்வதை அவன அறிந்ததே இல்லை. அதனால் தான் நிக்லியுடாவின் திட்டத்தைப் புரிந்துகொள்ள அவன இவ்வளவு கஷ்டப்பட்டான். அவன் முகத்தில் இருந்த புன்சிரிப்பு மறைந்துவிட்டது. சிறிதுநேரத்திற்குப் பின் நீண்ட பெருமூச்சு விட்டுவிட்டு மீண்டும் புன்சிரிப்பை வருவித்துக்கொண்டான். நிக்லியுடாவின் திட்டத்தால் தனக்கு நன்மை இல்லை என்பதை குமாஸ்தா அறிந்தபொழுது அவனுக்கு வருத்தமாக இருந்தது. நிக்லியுடாவின் திட்டத்தில் அவனுக்கு அக்கரை ஏற்படவில்லை. இருந்தாலும் தன் எஜமானனைத் திருப்தி செய்வதற்காக அவன் முகத்தில் புன்சிரிப்புடன் உட்கார்ந்திருந்தான்.

தன்னுடைய திட்டத்தை குமாஸ்தா புரிந்துகொள்ளவில்லை என்பதை நிக்லியுடாவ் அறிந்தவுடன் அவனைப்போகச் சொல்லிவிட்டு ஜன்னல் அருகே உட்கார்ந்து திட்டத்தைக் காகிதத்தில் எழுதத் தொடங்கினான்.

பசுமரங்களுக்குப் பின்னால் சூரியன் மறைந்தது. கொசுக்கள் சப்தித்துக்கொண்டே உள்ளே பிரவேசித்தன. நிக்லியுடாவ் குறிப்பு எழுதிமுடித்தான். மாடுகள் கொட்டகைக்குத் திரும்பும் சப்தமும் குடியானவர்களும் கூட்டத்திற்காக வந்து

சேரும் சப்தமும் கேட்டன. குடியானவர்களை ஜமீன் ஆபீஸ் அருகே அழைக்கவேண்டாமென்று குமாஸ்தாவிடம் சொல்லி விட்டான் நிக்லியுடாவ். அவர்கள் கூடியிருந்த இடத்திற்குத் தானே சென்று அவர்களைச் சந்திக்க விரும்பினான். குமாஸ்தா கொடுத்த டீயை அவசரமாகக் குடித்துவிட்டு குடியானவர்கள் இருந்த இடத்திற்குப் புறப்பட்டான் நிக்லியுடாவ்

## 7

கிராமத் தலைவனின் வீட்டுக்கு முன்னால் கூடியிருந்த குடியானவர்கள் சப்தமிட்டுப் பேசிக்கொண்டிருந்தனர். நிக்லியுடாவ் அங்கு வந்தவுடன் சப்தம் நின்றுவிட்டது. எல்லாரும் தங்கள் குல்லாயைத் தலையிலிருந்து அகற்றி மரியாதை செலுத்தினர். குஸ்மின்ஸ்கியில் இருந்த குடியானவர்களைக் காட்டிலும் இவர்கள் அதிக ஏழைகள்.

நிக்லியுட்டாவ் கஷ்டப்பட்டுப் பேசத் தொடங்கினான். நிலங்களைக் குடியானவர்களுக்கே கொடுத்துவிடத் தீர்மானித்திருப்பதாகக் கூறினான், குடியானவர்கள் மௌனமாக இருந்தனர். அவர்கள் முகத்தில் ஒருவிதமான மாறுதலும் காணப்படவில்லை.

"நிலத்தை உபயோகித்துக் கொள்ள ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு அதனால்தான் இப்படிச் செய்யத் தீர்மானித்திருக்கிறேன்" என்று நிக்லியுடாவ் உணர்ச்சி ததும்பச் சொன்னான்.

"உண்மை தான்" என்று ஆமோதித்தன பல குரல்கள்.

"நிலங்களை உங்களிடமே விட்டுவிடுகிறேன். அதிலிருந்து கிடைக்கும் வருமானத்தை ஒரு நிதியாகச் சேர்த்து வைத்துக் கொண்டு பொது நன்மைக்கு உபயோகித்துக் கொள்ளுங்கள் ஒப்பந்தம் எழுதிக் கையெழுத்துப் போடுவோம்" என்றான் நிக்லியுடாவ்.

அவனுடைய திட்டத்தை அவர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. மிராசுதார்கள் தங்கள் நலனைக் கொஞ்சமும் விட்டுக்கொடுக்க மாட்டார்கள் என்பது தலைமுறை தலைமுறையாக அவர்கள் அடைந்து வந்துள்ள அனுபவம். நிக்லியுடாவ் ஏதோ சூழ்ச்சி செய்வதாக அவர்கள் சந்தேகித்தனர். தாங்கள் ஏமாறத் தயாராக இல்லை என்று கூறுவது போல் அவர்கள் நிக்லியுடாவைப் பார்த்தனர்.

"இதற்கெல்லாம் என்ன அர்த்தம்? பழைய முறையே எங்களுக்குப் போதும். புதிதாக ஒன்றும் வேண்டாம். பயிரிடு வதற்கு நீங்கள் விதை மாத்திரம் கொடுத்துவிடுங்கள் போதும்'' என்று சிலர் கோபம் கலந்த குரலில் கூறினர்,

நடுத்தர வயதுள்ள ஒரு குடியானவனைப் பார்த்து, "ஆனால் நிலங்களைப் பெற்றுக் கொள்ள நீங்கள் இஷ்டப்பட வில்லையா?'' என்று நிக்லியுடாவ் கேட்டான்.

"ஆமாம்'' என்றான் அவன்.

"நான் சொன்னதைப் பற்றி நீர்க்காலோசனை செய்து பாருங்கள்'' என்று சொல்லிவிட்டு, நிக்லியுடாவ் தன் திட்டத்தை மீண்டும் எடுத்துக் கூறினான்.

"நாங்கள் யோசிப்பதற்கு ஒன்றுமில்லை. சொன்னது சொன்னதுதான்!'' என்றான் ஒரு பொக்கை வாய்க் கிழவன்.

"நான் நாளை முழுதும் இங்குதான் இருக்கிறேன். உங்கள் அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டால் எனக்குத் தெரியப் படுத்துங்கள்'' என்றான் நிக்லியுடாவ்.

குடியானவர்கள் மௌனமாக இருந்தனர்.

"கூட்டம் கூட்டிப் பேசினால் இவர்கள் இப்படித்தான் பிடிவாதம் பிடிப்பார்கள். கொஞ்சம் விஷயம் தெரிந்தவர்களை நம் ஆபீஸுக்கு வரவழைத்துப் பேசினால் புரிந்து கொள்வார்கள்'' என்று யோசனை கூறினான் குமாஸ்தா. நிக்லியுடாவ் அந்த யோசனையை ஏற்றுக் கொண்டு, மறுநாள் அவர்களை ஆபீஸுக்கு வரவழைக்கச் சொன்னான்.

x x x

இரவில் இருவர் குதிரைகளை மேய்க்க ஓட்டிச் சென்று கொண்டிருந்தார்கள். "ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போட வேண்டுமாம். பிறகு நிலத்தை வெறுமனே கொடுத்து விடுகிறாராம்! இதைப் போல் இவர்கள் அடிக்கடி செய்வதில்லையா?'' என்றான் ஒருவன்.

"கையெழுத்துப் போடச் சொல்லிவிட்டு நம்மை உயிரோடு விழுங்கிவிடப் பார்க்கிறான்'' என்றான் மற்றவன்.

"ஆமாம் ஆமாம்; அதில் சந்தேகமே இல்லை'' என்றான் முதல் குடியானவன். பிறகு அவர்கள் ஒன்றும் பேசவில்லை. குதிரைகளின் குளம்புச் சப்தம் மாத்திரம் கேட்டுக்கொண்டிருந்தது.

# 8

நிக்லியுடாவ் ஜமீன் ஆபிஸுக்குத் திரும்பி வந்தான். ஆபிஸிலேயே அவனுக்கு படுக்க வசதிகள் செய்யப்பட்டிருந்தன. சாப்பிட வருமாறு நிக்லியுடாவை அழைத்தான் குமாஸ்தா, நிக்லியுடாவ் மறுத்து விட்டான்; சரியான வசதிகள் செய்து கொடுக்க முடியாமைக்கு வருத்தம் தெரிவித்து விட்டு குமாஸ்தா போய்விட்டான்.

குடியானவர்கள் நிலங்களை ஏற்க மறுத்ததால் நிக்லியுடாவுக்கு வருத்தம் ஏற்படவில்லை. குஸ்மின்ஸ்கியில் அவனுடைய யோசனையைக் குடியானவர்கள் ஏற்று நன்றி செலுத்தினர். இங்கு ஆத்திரமடைந்தனர். இருந்த போதிலும் அவனுக்கு சந்தோஷமும் திருப்தியும் ஏற்பட்டன.

அவன் படுத்திருந்த இடத்தில் இருக்கமாக இருந்தது. அங்கிருந்து எழுந்து தோட்டத்தின் பக்கம் சென்றான். ஆனால் "அந்த இரவு" அவனுக்கு ஞாபகம் வந்துவிட்டது, வேலைக்காரியின் அறை, பக்கத்து வாசற்படி, எல்லாம் நினைவுக்கு வந்தன. பழைய குற்றங்களை ஞாபக மூட்டிய அந்த இடத்தின் வழியாகச் செல்ல அவன் விரும்பவில்லை. ஆகையால் வாசற்படியிலேயே உட்கார்ந்தான். பர்ச் மரங்களின் வாசனை கம்மென்று வீசிக்கொண்டிருந்தது. வானம்பாடிகள் இனிமையாக பாடிக் கொண்டிருந்தன. குமாஸ்தா வீட்டு ஜன்னலில் பிரகாசித்துக் கொண்டிருந்த வெளிச்சம் மறைந்துவிட்டது. கிழக்கே மரங்களுக்குப் பின்னலிருந்து உதயசந்திரனின் ஒளி வானத்தில் படர்ந்தது. நிலவு அதிகரிக்க அதிகரிக்க பாழடைந்த வீடும், செடிகள் மண்டிக்கிடந்த தோட்டமும் நன்றாகப் புலப்பட்டன. வெகுதூரத்திற்கப்பால் வானம் இடிக்கும் சப்தம் கேட்டது. வானம்பாடிகளின் பாட்டு நின்றுவிட்டது. வானத்தின் ஒரு பகுதியில் கருமேகம் படர்ந்தது. வழக்கத்தை விட சீக்கிரமாக அன்று ஜாமக்கோழி கூவியது. இவ்விதம் சீக்கிரமாகக் கோழி கூவினால் இரவு இனிமையாக இருக்கும் என்பார்கள். அந்த இரவு நிக்லியுடாவுக்கு இனிமையாக மாத்திரம் இல்லை; மிகுந்த சந்தோஷத்தையும் அளித்தது. இளமையின் இன்ப நினைவெல்லாம் அன்று அவனுக்குத் திரும்பி வந்தது. அன்று நடந்தவற்றையெல்லாம் நினைத்துப் பார்த்தான். அவன் சிறையில் கண்ட காட்சிகளும் திடீரென்று ஞாபகம் வந்தன.

சந்திரன் வானத்தில் உயர வந்துவிட்டது, பாழடைந்த வீட்டின் கூரை, நிலவில் பிரகாசித்தது. இந்த இரவை

விணுக்க விரும்பாததைபோல வானம்பாடிகள் மீண்டும் பாடத் தொடங்கின.

குஸ்மின்ஸ்கியில் ஏற்பட்ட கஷ்டங்களைப் பற்றி நினைத்துப் பார்த்தான். "எவ்வளவு எளிய விஷயம்! எவ்வளவு கஷ்டமாகத் தோன்றியது!" என்று இப்பொழுது ஆச்சரியமடைந்தான். தன்னைப்பற்றி நினையாமல் பிறருக்குத்தான் செய்ய வேண்டிய கடமையை யோசித்ததால் தான் அவையெல்லாம் சுலபமாக முடிந்தன. "காடுஷாவைக் கைவிடக்கூடாது. அவளுக்கு உதவி செய்துகொண்டே இருக்க வேண்டும். தீர்ப்பைப் பற்றிய எல்லா விஷயங்களையும் ஆராய்ந்து அறிய வேண்டும். முடிவு எப்படியானாலும் சரி; இதையெல்லாம் செய்தாக வேண்டும்" என்று தீர்மானித்துக் கொண்டான். இந்தத் தீர்மானம் அவனுக்கு இன்பமளித்தது.

கருமேகம் வர்னம் முழுமையிலும் பரவிவிட்டது. மின்னல் பளீர் பளீரென்று வீசியது. நடுவானில் இடி இடித்தது. பறவைகளெல்லாம் மௌனமாகிவிட்டன. இளங்காற்று மாத்திரம் வீசிக்கொண்டிருந்தது. முதலில் ஒரு தூற்றல் விழுந்தது; பிறகு மற்றொன்று விழுந்தது. சிறிது நேரத்திற்குள் சலசலவென்று நல்ல மழை வந்துவிட்டது. பளீரென வெட்டிய ஒரு பிரகாசமான மின்னலின் ஒளி எங்கும் பரவியது. பிறகு, ஒரு க்ஷணநேரத்திற்குள் பிரம்மாண்டமான தோர் இடியரவம் வானவெளியெங்கும் எதிரொலித்தது.

நிக்லியுடாவ் எழுந்து உள்ளே சென்றான்.

"ஆமாம், வாழ்க்கையின் அர்த்தம் விளங்கவில்லை. அதை அறிந்துகொள்ளவும் முடியாது. என் அத்தைகள் எதற்காக இருந்தார்கள், காடுஷா எதற்காக இருந்தாள்? என்னுடைய வெறி எதற்கு? யுத்தம் ஏன் வந்தது? பிறகு நான் ஏன் கட்டுப்பாடற்ற வாழ்க்கை நடத்தினேன்? இதையெல்லாம் அறிவது கடவுளின் சித்தத்தைப் புரிந்து கொள்வது, என் சக்திக்கு உட்பட்ட காரியமல்ல. ஆனால் அவர் சித்தப்படி நடப்பது என்னால் முடியும். அவருடைய விருப்பம் என் மனச்சாட்சியில் எழுதியிருக்கிறது. அது இன்னதென்பது எனக்கு நன்றாகத் தெரியும். அவருடைய சித்தப்படி நடக்கும்பொழுது எனக்கு திட்புத்தியும், சாந்தியும் ஏற்படுகிறது." என்று சிந்தித்துக் கொண்டிருந்தது அவன் மனம். தன்னை எஜமானனென்று நினையாமல் ஒர் ஊழியனாக நினைத்துக்கொள்ளும் பொழுது அவனுக்கு ஆனந்தமாக இருந்தது.

விளக்கை அணைத்துவிட்டுப் படுக்கையில் படுத்தவுடன் மூட்டை பூச்சி கடிக்கத் தொடங்கியது.

"நிலங்களை விட்டுவிட்டு சைபீரியாவுக்குப் போக வேண்டும்—ஈக்கள், மூட்டைப் பூச்சி, அசுத்தம்! இருக்கட்டுமே! இருந்தால் என்ன! அனுபவிக்க வேண்டுமென்றால் சகித்துக் கொள்கிறேன்" என்று நினைத்தான். இருந்தாலும் மூட்டைப் பூச்சிக்கடியைச் சகிக்க முடியவில்லை. எழுந்து ஜன்னல் அருகே உட்கார்ந்தான். கலைந்து போய்க்கொண்டிருந்த மேகங்களையும், மீண்டும் பிரகாசிக்கத் தொடங்கிய சந்திரனையும் அவன் வியப்புடன் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான்.

## 9

நிக்லியுடாவ் தூங்குவதற்குள் விடிந்துவிட்டது. ஆகையால் வெகுநேரம் கழித்துத் தான் கண் விழித்தான். குடியானவர்களில் எழுபேரை குமாஸ்தா அழைத்திருந்தான். அவர்கள் எழுபேரும் நடுப்பகலில், கூட்டம் நடக்கவிருந்த தோட்டத்திற்கு வந்து சேர்ந்தனர். அங்கு ஆப்பிள் மரங்களின நிழலில் மேஜையும் பெஞ்சுகளும் போட்டு கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருந்தான் குமாஸ்தா. குடியானவர்களை பெஞ்சில் உட்காரச் செய்வது பிரம்மப் பிரயத்தனமாகி விட்டது. அவர்கள் உட்கார்ந்த பின் நிக்லியுடாவ் அவர்களுக்கு எதிரே உட்கார்ந்து தன்னுடைய திட்டத்தை விளங்கிக் கூறத்தொடங்கினான்.

இந்தத் தட்வை நிக்லியுடாவுக்கு எவ்வித குழப்பமும் ஏற்படவில்லை. தன்னுடைய திட்டத்தை நிக்லியுடாவ் விளக்கிக் கூறினான். குடியானவர்கள் அதைக் கொஞ்சம் கொஞ்சமாகப் புரிந்து கொண்டு அதைத் தங்கள் சொந்த பாஷையில் வியாக்கியானம் செய்தனர். முதல் நாள் கூட்டத்தில் ஆக்ஷேபித்த பொக்கைவாய்க் கிழவனும் மற்றொரு குடியானவனும்தான் அவனுடைய யோசனைகளை எதிர்த்தனர்,

"நிலத்தை ஒருவரும் வாங்கவோ விற்கவோ முடியாது என்பது என் அபிப்பிராயம். ஏனென்றால் பணம் உள்ளவர்கள் எல்லா நிலங்களையும் வாங்கிவிட்டு, நிலம் இல்லாதவர்களிடமிருந்து எவ்வளவு வேலை வேண்டுமானாலும் வாங்கலாம்" என்று தொடங்கினான் நிக்லியுடாவ்.

குடியானவர்கள் தங்களுக்குத் தோன்றிய உதாரணங்களையெல்லாம் கூறி இதை ஆமோதித்தனர்.

"இனி நிலங்களை வைத்துக்கொள்ள எனக்கு இஷ்டமில்லை. இதைக் குடியானவர்களுக்கு எப்படிப் பிரித்துக் கொடுப்பது

என்பதுபற்றி யோசிக்கத்தான் நான் இங்கு வந்திருக்கிறேன்" என்றான் நிக்லியுடாவ்.

"குடியானவர்களிடம் கொடுத்துவிடுங்கள். அவ்வளவு தானே!" என்றான் பொக்கைவாய்க் கிழவன்.

தன்னுடைய நோக்கத்தை அவன் சந்தேகிப்பதாக நிக்லியுடாவுக்குத் தோன்றியது. "சந்தோஷமாகக் கொடுத்துவிடத் தயார். ஆனால் யாரிடம் கொடுப்பது? எப்படிக் கொடுப்பது? எந்தக் குடியானவர்களிடம் கொடுப்பது. அடுத்த கிராமவாசிகளிடம் கொடுக்காமல் உங்களிடம் ஏன் கொடுக்க வேண்டும்?" என்று அவன் கேட்டான்.

எல்லாரும் மௌனமாக இருந்தனர்.

"நிலங்களை நீங்கள் பிரித்துக் கொடுப்பதாக இருந்தால் எப்படிப் பிரித்துக் கொடுப்பீர்கள்?" என்று நிக்லியுடாவ் கேட்டான்,

"ஒவ்வொருவருக்கும் இவ்வளவு நிலம் என்று சமமாகப் பிரித்துக் கொடுப்போம்" என்றான் ஒரு குடியானவன்.

இதை மற்றவர்களும் ஆமோதித்தனர்.

"உங்கள் வீட்டு வேலைக்காரர்களுக்கும் நிலத்தைப் பங்கிட்டுக் கொடுக்க வேண்டுமா?" என்று நிக்லியுடாவ் கேட்டான்.

"கூடாது" என்றான் ஒரு குடியானவன்.

"சமமாகப் பிரித்துக் கொடுப்பதென்றால் எல்லாருக்கும் தான் நிலம் கிடைக்க வேண்டும்" என்றான் மற்றொருவன்.

இதற்கு நிக்லியுடாவே பதில் அளித்தான்: "அது கூடாது. அப்படி எல்லாருக்கும் நிலத்தைக் கொடுத்தால், நிலத்தை உழுது பயிரிடாதவர்கள் பணக்காரர்களுக்குநிலத்தை விற்றுவிடுவார்கள். பிறகு நிலங்கள் மறுபடியும் பணக்காரர்களிடம் போய்ச் சேர்ந்துவிடும். நிலம் இல்லாதவர்களைப் பணக்காரர்கள் மறுபடியும் அடக்கி ஆள்வார்கள்" என்றான்.

"ஆமாம்" என்று அங்கீகரித்தான் ஒரு குடியானவன்.

"நிலத்தை விற்கக் கூடாது என்று தடை செய்துவிடுங்கள். உழுது பயிரிடுபவர்களிடம்தான் நிலம் இருக்கவேண்டும்" என்று ஆத்திரத்துடன் கூறினான் மற்றொருவன்.

"நிலங்களை யார் உழுது பயிரிடுவார்கள், யார் பயிரிட மாட்டார்கள் என்று கண்டு பிடிப்பது கஷ்டம்; எல்லாரும் பயிரிடுவ

தாக இருந்தால் விவசாயக் கருவிகள், குதிரைகள் முதலியவை அனைவருக்கும் வேண்டும்; மற்ற கருவிகளை நீங்கள் எல்லாரும் சமமாகப் பங்கிட்டுக் கொள்வீர்களா?'' என்று நிக்லியுடாவ் கேட்டான்.

''முடியாது'' என்று குடியானவர்கள் பதில் அளித்தனர்.

''நிலங்களில் நல்ல நிலங்களும் இருக்கின்றன. மட்டமான நிலங்களும் இருக்கின்றன. நல்ல நிலங்களை யார் எடுத்துக் கொள்வது, மட்டமான நிலங்களை யார் எடுத்துக் கொள்வது என்ற கேள்வி வேறு இருக்கிறது. எல்லாரும் நல்ல நிலங்கள் தான் வேண்டுமென்பார்கள்'' என்று நிக்லியுடாவ் கூறினான்.

''எந்தெந்த நிலத்தை யார் யார் பயிரிட வேண்டும் என் பதை நீங்களே சொல்லிவிடுங்களேன்'' என்றான் ஒரு குடியானவன்.

''இரப்பா, அவரே சொல்லட்டும்'' என்றான் மற்றொருவன்.

''நிலம்ஒருவருக்கும் சொந்தமில்லை; அது கடவுளுடையது'' என்று நிக்லியுடாவ் தன் கருத்துக்களை விளக்கிக் கூறத் தொடங்கினான். ''நிலங்களைப் பயிரிடுகிறவர்கள் கிராமத்தின் பொது நன்மைக்காகப் பணம் கொடுக்க வேண்டும். நல்ல நிலங் களைப் பயிரிடுபவர்கள் அதிகப் பணம் கொடுக்க வேண்டும்; மட்டமான நிலத்தைப் பயிரிடுபவர்கள் குறைவாகப் பணம் கொடுக்கலாம். பணமே கொடுக்க விரும்பாதவர்கள் நிலத் தைப் பயிரிடக் கூடாது. இப்படிச் சேரும் பணத்தை கிரா மத்தின் பொது சௌகரியங்களுக்குச் செலவிட்டுக் கொள்ள லாம்'' என்று நிக்லியுடாவ் கூறி முடித்தான்.

''அதுதான் சரி'' என்று அங்கீகரித்தான் ஒரு குடி யானவன்.

''கொடுக்க வேண்டிய பணம் அதிகமில்லாமல் இருந்தால் சரி'' என்றான் மற்றொருவன்.

''அது மிகவும் அதிகமாகவும் இருக்கக் கூடாது, குறை வாகவும் இருக்கக் கூடாது. அதிகமாக இருந்தால் பணம் கட்டமாட்டார்கள். அதனால் நஷ்டம் ஏற்படும்; குறைவாக இருந்தால் நிலத்தை வாங்குவதும் விற்பதும் ஆரம்பமாகி விடும். இதைப் பற்றித்தான் உங்களுக் கிடையில் ஓர் ஏற் பாட்டைச் செய்ய விரும்பினேன்'' என்று நிக்லியுடாவ் கூறி னான். அவனுடைய கருத்தை அங்கு வந்திருந்த குடியானவர் கள் பூரணமாக அறிந்து கொண்டு விட்டார்கள். ''அதுதான் சரி; அதுதான் நியாயம்'' என்று ஆமோதித்தனர்,

"எனக்குக் கொஞ்சம் நிலம் வேண்டுமென்று வைத்துக் கொள்ளுங்கள்!" என்று குமாஸ்தா சிரித்துக் கொண்டே கேட்டான்.

"உனக்கு ஒதுக்கிக் கொடுத்தால் எடுத்துக் கொண்டு பயிரிடேன்" என்று நிக்லியுடாவ் பதில் அளித்தான்.

"எதற்காக? உங்களுக்குத்தான் இப்பொழுதே போதிய அளவு நிலம் இருக்கிறதே!" என்றான் கிழக் குடியானவன்.

இதோடு கூட்டம் முடிந்தது.

நிக்லியுடாவ் மறுபடியும் தன் யோசனைகளைக் குடியானவர்களிடம் திருப்பிக் கூறினான். உடனே பதில் அளிக்குமாறு அவன் கேட்கவில்லை. மற்றக் குடியானவர்களோடு கலந்து ஆலோசித்துக் கொண்டு வந்து சொல்லும்படிக் கூறினான். குடியானவர்கள் பரபரப்புடன் திரும்பிச் சென்றார்கள். இரவு வெகு நேரம் வரை அவர்கள் பேசிக் கொண்டிருந்தது கேட்டது.

குடியானவர்கள் மறுநாள் வேலைக்குப் போகவே யில்லை. நிக்லியுடாவ் கூறியவை பற்றி விவாதித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களிடையே இரு கட்சிகள் ஏற்பட்டன. ஒரு கட்சி நிக்லியுடாவை ஆதரித்தது. மற்றொரு கட்சி நிக்லியுடாவைச் சந்தேகித்தது. "எஜமானுக்கு தர்ம சிந்தை ஏற்பட்டுவிட்டது அவர் ஆத்ம சிந்தனை செய்யத் தொடங்கிவிட்டார்" என்று ஒரு கிழவி கூறியதன் பேரில் எல்லாக் குடியானவர்களுக்கும் நிக்லியுடாவ் மீது நம்பிக்கை பிறந்தது. தன்னிடம் வந்து கேட்டவர்களுக் கெல்லாம் நிக்லியுடாவ் பணம் கொடுத்துக் கொண்டிருந்தான். இவ்வளவு வறுமையை அவன் இதற்கு முன் கண்டதே யில்லை. கண்டவர்களுக்கும் பணம் கொடுப்பது தவறு என்று அவனுக்குத் தோன்றிய போதிலும், தன்னிடம் ஏராளமாக உள்ள பணத்தை, இல்லாதவர்களுக்குக் கொடுக்காமலிருகக அவனால் முடியவில்லை.

நிக்லியுடாவின் திட்டத்தை ஏற்க, மறுநாள் குடியானவர்கள் சிலரைத் தேர்ந்தெடுத்து அனுப்பினார்கள்.

அவன் பனோவோவில் இருந்த கடைசி நாளன்று தன் அத்தை வீட்டுச் சாமான்களைப் பார்வை யிட்டான். அங்கு ஒரு போட்டோப் படம் இருந்தது. அதில் அவனுடைய அத்தைகளும், அவனும், இளமையின் எழில் பொங்கும் காடுஷாவும் இருந்தனர். அந்தப் படத்தையும், அங்கு இருந்த சில பழைய கடிதங்களையும் மாத்திரம் நிக்லியுடாவ் எடுத்துக் கொண்டான்.

மற்ற சாமான்களையும் வீட்டையும் பத்தில் ஒரு பங்கு விலைக்கு விற்றுவிட்டான்.

சொத்தை இழப்பது பற்றிக் குஸ்மின்ஸ்கியில் அவனுக்கு ஏற்பட்ட சிறிது வருத்தத்தை நினைத்துப் பார்த்தான். அது எப்படி ஏற்பட்டது என்பது அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது. இப்பொழுது அவனுக்கு ஏற்பட்ட சந்தோஷத்திற்கு அளவில்லை. ஒருவித புதுமை உணர்ச்சியும் உலகத்தைச் சுற்றும் ஒரு பிரயாணி புதிய நாட்டைக் கண்டு பிடிக்கும் பொழுது ஏற்படும் ஆனந்தத்தையும் பெற்றான்.

# 10

நிக்லியுட்ாவ் நகருக்கு திரும்பிய பொழுது நகரம் புதிய தோற்றம் அளித்தது. அவனுடைய வீடு களேபரமாக இருந்தது. சாமான்களை யெல்லாம் அக்ரபெனு பெட்ரோவ்னு காலி செய்து கட்டிவைத்துக் கொண்டிருந்தாள். தன் சகோதரர் வந்து அந்தச் சாமானகளைப் பைசல் செய்யும்வரை அக்ரபெனு பெட்ரோவ்னு அவற்றை எப்படியாவது வைத்துக் கொள்ளட்டும் என்று நினைத்து, மறுநாளே அவன் ஒரு ஹோட்டலில் இரண்டு அறைகளை அமர்த்திக் கொண்டு தங்கினான். அந்த ஹோட்டல் சிறைக்கு அருகில் இருந்தது. வீட்டில் இருந்த சாமான்களில் சிலவற்றை ஹோட்டலுக்கு அனுப்பும்படி சொல்லிவிட்டு அவன் வக்கீலைப் பார்க்கச் சென்றான். அவன் வேகமாக நடந்து போய்க் கொண்டிருந்த பொழுது குடியானவர்களையும், இளைத்துப்போன குழந்தைகளையும் ஸ்திரீகளையும் பற்றிய நினைவுதான் அவன் மனதில் சுழன்றுகொண்டிருந்தது. கடைத் தெருவில் உட்கார்ந்திருந்த கொழுத்த வியாபாரிகளோடு, தான் கண்ட குடியானவர்களை ஒப்பிட்டுப் பார்த்தான். நகரில் எல்லாருமே வயிறு நிரம்பச் சாப்பிடுபவர்களாகத்தான் காணப்பட்டனர். இவர்களில் சிலர் கிராமத்தில் நிலம் கிடைக்காமல் நகருக்கு ஓடிவந்தவர்கள் என்பதையும் கண்டான். வந்தவர்களிலும் சிலர் சௌக்கியமாக இருந்தனர். செருப்புத் தைப்பவன், சலவை செய்பவன், வீடுகளுக்குச் சுண்ணும்பு அடிப்பவன் எல்லாரும் பரிதவிக்கத் தக்க நிலையிலேயே இருந்தனர்.

"இவர்களெல்லாம் எதற்காக இங்கு வந்து கூடியிருக்கிறார்கள்?" என்று தனக்குள் கேட்டுக் கொண்டான் நிக்லியுடாவ். குளிர்ந்த காற்றில் தூசும், வார்னிஷ் நாற்றமும் கலந்து அவன் முகத்தில் வீசின.

ஒரு தெரு வழியாகப் போய்க்கொண்டிருக்கையில், இரும்புச் சாமான்கள் ஏற்றிய வண்டிகள் வரிசையாகப் போய்க்கொண்டிருந்தன. அவற்றின் சப்தம் அவனுக்குத் தலைவலியை உண்டாக்கியது. அவற்றைச் சீக்கிரம் கடந்து செல்ல வேண்டுமென்று வேகமாக நடந்தான். திடீரென்று அவனை யாரோ பெயர் சொல்லிக் கூப்பிடும் குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். ஸ்கான் பாக் ஒரு வண்டியில் வந்து கொண்டிருந்தான்,

"ஆ! ஸ்கான்பாக்!" என்று சந்தோஷத்துடன் அவனை வரவேற்றான். ஆனால் உடனே அந்த சந்தோஷம் மறைந்து விட்டது. அவன மனத்தைப் புண்படுத்தாமல் அவனிடமிருந்து எப்படி விடுபடலாம் என்று யோசித்தவாறு, "ஏது இவ்வளவு தூரம்? உன்னோடு நிதானமாகப் பேச அவகாசமில்லையே யென்று வருந்துகிறேன்" என்றான், முன்பு நிக்லியுடாவின் அத்தை வீட்டுக்கு வந்திருந்த அதே ஸ்கான்பாக்தான் இவன். அவனுக்குக் கடன் அதிகரித்துப் போயிருந்த போதிலும் எப்படியோ ராணுவத்தில் இருந்து கொண்டு சமாளித்து வருகிறான். என்றும், பணக்காரர்களிடையே பழகி வருகிறான் என்றும் நிக்லியுடாவ் கேள்விப்பட்டிருந்தான்.

"சாமினோவின் சொத்துக்களை இப்பொழுது நான்தான் நிர்வகித்து வருகிறேன், அது சம்பந்தமாகத்தான் இங்கு வந்திருக்கிறேன்" என்றான் ஸ்கான்பாக். அந்த சொத்துக்களெல்லாம் அவனுடைய சொந்தம் போலப் பெருமையுடன் அவன் பேசினான். "இவை கவனிப்பாரற்றுக் கிடந்தன. நிலங்களையெல்லாம் குடியானவர்களே எடுத்துக் கொண்டு ஒன்றுமே கொடுப்பதில்லை. நான் போய்ஒரு வருஷத்திற்குள் எல்லாவற்றையும் சரிபடுத்தி, முன்னைக் காட்டிலும் எழுபது சதவிகிதம் அதிக வருமானம் வரும்படி செய்தேன்" என்றான் அவன்.

"இவன் மனத்தைப் புண்படுத்தாமல் இவனிடமிருந்து எப்படி விடுபடுவது?' என்று யோசித்துக் கொண்டே நின்றான் நிக்லியுடாவ்.

"எங்கே சாப்பிடலாம்?" என்று கேட்டான் ஸ்கான்பாக்.

"இல்லை, எனக்கு உண்மையிலேயே அவகாசமில்லை." என்று மறுத்துவிட்டான் நிக்லியுடாவ்.

"ராத்திரி ரேஸுக்கு வருகிறாயா? அப்பொழுதாவது நாம் இருவரும் சேர்ந்து சாப்பிடுவோம்" என்று ஸ்கான்பாக் அழைத்தான்.

"ரேஸுக்கும் வரமாட்டேன்" என்று நிக்லியுடாவ் கூறி விட்டான்.

"இப்பொழுது எங்கே போய்க் கொண்டிருக்கிருய் ?"

"வக்கில் வீட்டுக்கு."

"கைதிகள் விஷயத்தில் ஏதோ அக்கறை எடுத்துக் கொண்டிருப்பதாகக் கேள்விப்பட்டேன். கோர்ச்சாகின் வீட்டில் சொன்ஞர்கள். அவர்கள் கூட இப்பொழுது 'நகரில் இல்லை."

"ஆமாம்."

"அது என்ன விஷயம் ?"

"அதையெல்லாம் நடுத்தெருவில் சொல்வதற்கில்லை."

"சரி சரி: ஆனல் நீ ரேஸுக்கு வரமாட்டாயா ?"

"வரமாட்டேன்; கோபித்துக் கொள்ளாதே!"

"கோபமா? இல்லவே இல்லை!" என்று ஸ்கான்பாக் பதில் அளித்தான். இருந்தாலும் அவன் முகத்தில் முதலில் காணப் பட்ட குஷிக் களை இப்பொழுது காணப்படவில்லை. அவன் நிக்லியுடாவின் கையைக் குலுக்கிவிட்டு வண்டியில் ஏறிக் கொண்டு கிளம்பினன்.

நிக்லியுடாவ், வக்கில் வீட்டை நோக்கி நடந்து கொண்டே, "நானும் இப்படித்தானே இருந்திருப்பேன்?" என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டான்." ஆமாம் அப்படித்தான் இருக்க விரும்பினேன்" என்று அவனே பதில் அளித்துக் கொண் டான்.

## 11

நிக்லியுடாவை வக்கில் அதிகநேரம் காக்கவைக்கவில்லை. அவனைச் சீக்கிரம் உள்ளே அழைத்துச் சென்று, மென்ஷோ வின் வழக்கைப்பற்றிப் பேசினர்; அந்த வழக்கில் உள்ள முரண்பாடுகளை உணர்ச்சி ததும்ப எடுத்துக் கூறினர், அவர் களுடைய வழக்கை வெளியூர் கோர்ட்டில் விசாரிக்காமல் இங்கு விசாரித்தால் நிச்சயமாக விடுதலையாவார்கள்' என்ருர் வக்கீல். "தியோடாஸியா பிருகோவாவின் வழக்கில் மன்ன ரிடம் சமர்ப்பிக்க வேண்டிய மனுவை எழுதி வைத்திருக் கிறேன். நீங்கள் பீடர்ஸ்பர்க் போகும்பொழுது உங்களுடைய சொந்தக் கோரிக்கையையும் அதோடு சேர்த்துச் சமர்ப்பிக்க

வேண்டும். இல்லையானால் ஒன்றும் நடக்காது, அப்பீல் கமிட்டியில் செல்வாக்கு உள்ளவர்களை நீங்கள் பிடிக்கவேண்டும் என்று மற்றொரு வழக்கைப் பற்றியும் கூறிவிட்டு, "அவ்வளவு தானே ?" என்று கேட்டார் வக்கீல்.

" இல்லை, என்னிடம் ஒரு கடிதம் இருக்கிறது—"

"சிறையில் உள்ள கைதிகளின் புகார்களைக் கொண்டு வந்து கொட்டும் குழந்தையாக நீங்கள் மாறிவிட்டீர்கள்போல் இருக்கிறதே ! இதையெல்லாம் உங்களால் சமாளிக்க முடியாது" என்று சொல்லிச் சிரித்தார் வக்கீல்.

"இல்லை இது ஒரு முக்கியமான கேஸ்" என்று சொல்லி விட்டு அதைச் சுருக்கமாக விவரித்தான் நிக்லியுடாவ். "ஒரு கிராமத்தில் ஒரு குடியானவன் தன் நண்பர்களோடு சேர்ந்து பைபிளைப் படித்து, அதைப்பற்றி விவாதித்துக் கொண்டிருந்தான். பாதிரியார் இதைக் குற்றமெனக் கருதி அதிகாரிகளிடம் அறிவித்தனர். மாஜிஸ்திரேட் அவனை விசாரித்தார், சர்க்கார் வக்கீல் குற்றப்பத்திரிகை படித்தார். அவனை மேல் விசாரணைக்கு அனுப்பிவிட்டார்கள். இது அக்கிரமமில்லையா ?" என்று கேட்டான்,

" இதில் எதைக்கண்டு நீங்கள் ஆச்சரியப்படுகிறீர்கள் ?"

" ஏன் ? எல்லாம்தான் ! கண்ணை மூடிக்கொண்டு உத்தரவுகளுக்குக் கீழ்ப்படியும் போலீஸ் அதிகாரியின் செய்கை சரி. ஆனால், மெத்தபடித்த பப்ளிக் பிராஸிக்யூடர்கூடவா அப்படிக் குற்றப் பத்திரிகை தயாரிக்க வேண்டும் ?"

" அதுதான் தவறு. பப்ளிக் பிராஸிக்யூடர்களும், நீதிபதிகளும் விசாலபுத்தி உள்ளவர்கள் என்று நினைத்து விடுகிறோம். அவர்கள் விசாலபுத்தி உள்ளவர்களாக இருந்த காலம் ஒன்று உண்டு. ஆனால் இப்பொழுது, சம்பளத்தேதி ஒன்றில்தான் அவர்கள் அனைவருக்கும் கவலை. அவர்களுடைய லக்ஷியம் அதோடு முடிந்துவிடுகிறது. யாரை வேண்டுமானால் அவர்கள் விசாரித்து தண்டித்து விடுவார்கள்."

" ஆனால் பிறரோடு சேர்ந்து பைபிள் படிப்பவனுக்கு தீவாந்திர சிக்ஷை அளிக்க வேண்டுமென்று ஒரு சட்டமும் சொல்லவில்லையே !"

"சொல்கிறது. வைதிக முறைக்கு மாறாக பைபிளை வியர்க்கியானம் செய்து பிரசாரம் செய்பவருக்கு தீவாந்திர

சிக்ஷை அளிக்கலாம், என்று நூற்றுத் தொண்ணூற்றாருவது பிரிவு கூறுகிறது."

"இருக்கவே இருக்காது."

"நிச்சயமாக இருக்கிறது. இந்த நீதிபதிகளுக்கு நாமெல்லாம் நன்றி செலுத்த வேண்டும். நாம் சிறைக்குள் அடைபடாமல் வெளியே இருக்கிருேமென்ருல் அது அவர்களுடைய தயவிஞல்தான். நம்முடைய உரிமைகளைப் பறித்து நம்மைச் சிறையில் அடைப்பது அவர்களுக்கு வெகு சுலபம். சட்டம் அப்படி இருக்கிறது."

"எல்லாம் அவர்களிடம்தான் இருக்கிறதென்ருல் விசாரணைகள் எதற்காக?"

இதைக்கேட்டு வக்கீல் உரக்கச் சிரித்தார். "நீங்கள் விசித்திரமான கேள்விகள் கேட்கிறீர்கள், நீங்கள் பேசுவது வேதாந்தம். சனிக்கிழமையன்று வாருங்கள். இதையெல்லாம் பற்றி விவரமாக விவாதிக்கலாம். விஞ்ஞானிகள், இலக்கிய கர்த்தாக்கள், கலைஞர்கள் எல்லாரையும் இங்கு சந்திக்கலாம். இந்த வரண்ட விஷயங்களைப்பற்றியும் அப்பொழுது விவாதிக்கலாம். நீங்கள் என் மனைவியைச் சந்தித்திருக்கிறீர்களா? கட்டாயம் வாருங்கள்" என்று அழைத்தார் வக்கீல்.

"வரமுயல்கிறேன்" என்ருன் நிக்லியுடாவ். தான் சொல்வது உண்மை யல்ல என்பதை அவன் உணர்ந்தான். எதற்காவது அவன் முயற்சி செய்ய விரும்பிஞனென்ருல், அது சனிக்கிழமை யன்று வக்கீல் வீட்டுக்கு வராமலிருப்பதற்கும், விஞ்ஞானிகள், கலைஞர்கள், இலக்கிய கர்த்தாக்கள் ஆகியவர்களின் கோஷ்டியில் கலந்து கொள்ளாமல் இருப்பதற்கும் தான்

அவனும் வக்கிலும், பிரச்னைகளை எவ்வளவு மாறுபட்ட கோணங்களில் நின்று கவனிக்கின்றனர் என்பதை வக்கீலின் சிரிப்பும், 'வேதாந்தம்' என்று அவர் கூறிய தொனியும் நன்ருக எடுத்துக் காட்டின. தனக்கும், தன்னுடைய பழைய நண்பர்களுக்குமிடையில் அதிக வித்தியாசம் இருப்பதாக முன்பு தோன்றியது. தனக்கும் வக்கிலுக்குமிடையில் உள்ள தூரம் அதைக்காட்டிலும் அதிகமாக இப்பொழுது தோன்றியது.

# 12

வக்கில் வீட்டிலிருந்து சிறை வெகு தூரத்தில் இருந்ததால் நிக்லியுடாவ் ஒரு வண்டியை அமர்த்திக் கொண்டான். வண்டிக்காரன் நடுத்தர வயது உடையவன். அவன் புத்திசாலியாகக் காணப்பட்டான். அப்பொழுதுதான் கட்டிக் கொண்டிருந்த ஒரு பிரம்மாண்டமான வீட்டின் பக்கமாக வண்டி போய்க் கொண்டிருந்தது. வண்டிக்காரன் அதைச் சுட்டிக் காட்டி, "எவ்வளவு பெரிய வீடு பாருங்கள்" என்றான்.

வீடு உண்மையிலேயே பெரியதுதான். ஏராளமான வேலைக்காரர்கள் எறும்புகளைப்போல் இங்கும் அங்கும் அலைந்து வேலை செய்து கொண்டிருந்தார்கள். சாமான்கள் ஏற்றிய வண்டி உள்ளே போவதும் காலி வண்டிகள் வெளியே வருவதுமாக இருந்தது.

"கிராமத்தில் குழந்தைகள் முகம்ஒட்டி, கைகால்கள் சூம்பி மடிகின்றன. அவற்றின் சாப்பாட்டைக் கொள்ளையடிக்கும் யாரோ ஒரு கிராதகனுக்காக இவ்வளவு பெரிய வீடு கட்டப்படுகிறது" என்று அதை பார்த்துக் கொண்டே சிந்தித்தான் நிக்லியுடாவ். அவன் சிந்தனையின் தொடர்ச்சியாக, "பைத்தியக்கார வேலை" என்று வாய்விட்டு கூறினான்.

"ஏன் பைத்தியக்கார வேலை? இதனால் எவ்வளவு பேருக்கு வேலை கிடைக்கிறது!" என்றான் வண்டிக்காரன்.

"ஆனால் அப்படிக் கிடைக்கும் வேலை உபயோகமற்றது."

"உபயோகமற்றதல்ல. அதனால் ஜனங்களுக்கு சாப்பாடு கிடைக்கிறது."

வண்டியின் சப்தத்திற்கிடையில் பேசுவது கஷ்டமாக இருந்ததால் நிக்லியுடாவ் மௌனமாக இருந்தான்.

வண்டி சிறிது தூரம் சென்றபின் சமமான தரையில் ஓடியது. இப்பொழுது சப்தம் குறைவாக இருந்ததால் சுலபமாகப் பேசமுடிந்தது.

"கிராமங்களிலிருந்து எவ்வளவு ஜனங்கள் பட்டணத்திற்கு வந்து குவிகிறார்கள் தெரியுமா!" என்றான் வண்டிக்காரன். அந்தப் பக்கமாக வந்து கொண்டிருந்த கிராமவாசிகளின் கோஷ்டி ஒன்றை அவன் சுட்டிக் காட்டினான்.

"இந்த வருஷம் அதிகமாக் வருகிறார்களா?" என்றான் நிக்லியுடாவ்.

"ரொம்பவும் அதிகம். சகிக்க முடியவில்லை. எங்கு போனுலும் ஒரே கூட்டம். ஜனங்கள் வேலை கிடைக்காமல் திண்டாடுகிருர்கள்."

"ஏன் வேலை கிடைக்கவில்லை?"

"அதிகப்பேர் வந்துவிட்டார்கள். அவ்வளவு பேருக்கும் இடமில்லை."

"ஏன் அவ்வளவு பேர் வந்திருக்கிருர்கள்?"
"கிராமங்களில் அவர்களுக்கு வேலை இல்லை, நிலம் இருந்தால்தானே?"

வண்டிக்காரன் சொன்ன வார்த்தை, நிக்லியுடாவுக்கு புண்ணில் குத்தியது போல் இருந்தது, பட்டகாலிலேயே படும் என்பார்கள். ஆனுல் காலில் ஏற்கனவே காயம் ஏற்பட்டிருப்பதால்தான் அதில் ஏதாவது படும்பொழுது, 'ஏதோ படுகிறது' என்பதை உணர்கிருேம்.

"எல்லா இடத்திலும் இப்படித்தான் நடக்கிறதா?" என்று யோசித்தவாறு வண்டிக்காரனை மேலும் கேள்விகள் கேட்டான்.

"நீ ஏன் கிராமத்திலிருந்து வந்துவிட்டாய்?" என்ருன் நிக்லியுடாவ். வண்டிக்காரன் சந்தோஷத்துடன பதில் அளித்தான்.

"எங்களுக்கு ஒரு டெஸ்யாடின் நிலம்தான் இருக்கிறது. அதில் மூன்று பேர் ஜீவிக்க வேண்டும். என் தந்தையும் தம்பியும் வீட்டில் இருந்து கொண்டு பயிரைக் கவனிக்கிருர்கள். ஒரு தம்பி பட்டாளத்தில் இருக்கிருன். நிலத்தில் ஒன்றும் வருவதில்லை. என் தம்பி கூட மாஸ்கோ வந்துவிட வேண்டுமென்று யோசித்துக் கொண்டிருக்கிருன்."

"நிலத்தை வாரத்திற்கு வாங்கிக் கொள்ள முடியாதா?"

"எப்படி வாங்குவது பணக்காரர்கள் நிலங்களை வாங்கி சொந்தத்தில் பண்ணை வைத்துப் பயிரிடுகிருர்கள். எங்கள் கிராமத்தையே பாருங்களேன்! ஒரு பிரெஞ்சுக்காரன் வந்து நிலத்தை யெல்லாம் வாங்கிவிட்டான்."

"யார் அவன்?"

"உங்களுக்குக் கூடத் தெரிந்திருக்கும். அவன் பெயர் டுபோர். நடிகர்களுக்கு உடைகள் தயாரித்துக் கொடுப்பவன்.

நிரம்ப பணம் சம்பாதித்து விட்டான். அவன் நல்லவன் தான். அவன் மனைவி ஒரு ராக்ஷஸி. அவளிடமிருந்து கடவுள் தான் எங்களைக் காப்பாற்ற வேண்டும். ஜனங்களிடம் பகல் கொள்ளை யடிக்கிறாள். சகிக்க முடியவில்லை இதோ சிறை வந்துவிட்டது. வாசற்படி வரை வண்டியை ஓட்டிக்கொண்டு போகட்டுமா? ஓட்டிக்கொண்டு போக விடமாட்டார்கள் என்று நினைக்கி றேன்'' என்றான் வண்டிக்காரன்.

## 13

சிறைக்குள் சென்று காடுஷாவைப் பற்றி விசாரித்தான் நிக்லியுடாவ். அவள் சிறை ஆஸ்பத்திரியில் இருப்பதாகத் தெரிந்தது. அங்கு போய்ப் பார்த்தான். அவள் குழந்தைகள் வார்டில் இருப்பதாகச் சொன்னார்கள். நிக்லியுடாவ் அங்கு சென்றபொழுது ஓர் இளம் டாக்டர் வந்து, ''என்ன வேண்டும்?'' என்று கடுமையாகக் கேட்டார். அவர் கைதிகளிடம் கொஞ்சம் அன்பாக நடந்துகொள்பவர். இதற்காக அவருக்கும் சிறை அதிகாரிகளுக்கு மிடையில் அடிக்கடி சச்சரவு கூட ஏற் படுவதுண்டு. நிக்லியுடாவ் விதிகளுக்கு விரோதமாக எதை யாவது கேட்பான் என்று நினைத்துத்தான் அவன் அப்படிக் கேட்டார். ''இங்கு பெண்கள் யாரும் இல்லை, இது குழந்தை கள் வார்டு'' என்றார்.

''தெரியும். ஒரு கைதி இங்கு நர்ஸாக வேலை செய்கிறாள்.''

''அப்படி இங்கு இரண்டு பேர் இருக்கிறார்கள்.''

''அவர்களில் காடுஷா என்பவளோடு நான் பேச வேண்டும். அவள் கேஸ் சம்பந்தமாக மேல் கோர்ட்டில் அப்பீல் செய்ய நான் பீடர்ஸ்பர்க் போகிறேன். அதற்கு முன் இந்தப் படத்தை அவளிடம் கொடுக்க விரும்புகிறேன்'' என்று நிக்லி யுடாவ் ஒரு கவரைக் காட்டினான்.

''ஓ செய்யுங்களேன்'' என்று டாக்டர் கொஞ்சம் சாந்த மாகச் சொல்லிவிட்டு, அருகில் இருந்த கிழவியைப் பார்த்து, காடுஷாவை அழைத்து வரும்படிக் கூறினார்.

டாக்டரின் மனமாறுதலைப் பயன்படுத்திக் கொண்டு, காடு ஷாவைப் பற்றி விசாரிக்கத் தொடங்கினான் நிக்லியுடாவ்.

''சரியாகத்தான் இருக்கிறாள். அவளுடைய பழைய வாழ்க்கையைக் கவனித்தால் நன்றாக வேலை செய்கிறாள்

என்றுதான் கூறவேண்டும்'' என்று டாக்டர் பதில் அளித்தார்.

அதற்குள் காடுஷாவே வந்துவிட்டாள். அவள் நீலப் பட்டைப் போட்ட சட்டையும் வெள்ளை அங்கியும் அணிந்திருந் தாள். ஒரு வெள்ளைக் கைகுட்டையைத்தலையில் கட்டிக்கொண் டிருந்தாள். நிக்லியுடாவைக் கண்டவுடன் நாணத்தால் அவள் முகம் சிவந்தது. அவள் நிக்லியுடாவுக்குக் கைகொடுத்துக் குலுக்க அவள் விரும்பாவிட்டாலும், கையை நீட்டினாள். அவள் கன்னங்கள் முன்னைக்காட்டிலும் அதிகமாகச் சிவந்தன. கோபமாகப்பேசியதற்காக அவள் நிக்லியுடாவிடம் மன்னிப்புக் கேட்டபின் அவன் அவளைச் சந்திக்கவில்லை. அப்பொழுது இருந்தபடியே தான் இருப்பாள் என்று அவன் நினைத்திருந் தான். ஆனால் இன்று அவள் வேறுவிதமாக இருந்தாள். அவள் முகபாவத்தில் புதிதாக ஏதோ ஒன்று காணப்பட்டது. அதிக சங்கோஜப்பட்டாள். அவன்மீது வெறுப்புக் கொண் டிருப்பதாகவும் தோன்றினாள். தான் பீடர்ஸ்பர்க் போவதாக அவளிடமும் சொல்லிவிட்டு போட்டோ அடங்கிய கவரைக் கொடுத்தான் நிக்லியுடாவ்.

"இது எதற்காக?'' என்று கேட்பதுபோல் அவள் நிமிர்ந்து பார்த்தாள்.

"நான் பனோவாவுக்குப் போயிருந்த போது இந்த போட்டோ கிடைத்தது. 'அங்கு உன் அத்தையையும் சந்தித் தேன்'' என்று நிக்லியுடாவ் கூறினான்.

"பார்த்தீர்களா?'' என்று அவள் அலக்ஷியமாகக் கேட்டாள்.

"இங்கு சௌக்கியமாக இருக்கிறதா?'' என்று விசாரித் தான் நிக்லியுடாவ்.

"சௌக்கியமாகத்தான் இருக்கிறது.''

"கஷ்டம் ஒன்றும் இல்லையே?''

"இல்லை. ஆனால் இந்த வேலை இன்னும் பழக்கமாக வில்லை.''

"அந்த இடத்தைவிட இங்கு சௌக்கியமாக இருக்கும் என்று நினைக்கிறேன்.

"எந்த இடத்தைவிட!'' என்று முகம் சிவக்கக் கேட்டாள் காடுஷா.

"சிறையை விட" என்று நிக்லியுடாவ் விரைந்து பதில் அளித்தான்.

"ஏன்?"

"அங்கு இருந்தவர்களைக் காட்டிலும் இங்கு இருப்பவர்கள் நல்லவர்களாக இருப்பார்கள்."

"அங்கும் நல்லவர்கள் இருக்கிறார்கள்."

"மென்ஷோவின் வழக்கையும் கவனித்து வருகிறேன். அவர்கள் விடுதலையாகி விடுவார்கள் என்று தோன்றுகிறது."

"அவர்களுக்குக் கடவுள் அருள்புரிய வேண்டும். மிகவும் நல்ல கிழவி அவள்."

"இன்று நான் பீட்டர்ஸ் பர்க்குக்குச் செல்கிறேன். உன்னுடைய வழக்கு சீக்கிரம் விசாரணைக்கு வரும். தண்டனை ரத்தாகிவிடும் என்று நம்புகிறேன்.

"இப்பொழுது தண்டனை ரத்தானாலும் ஒன்றுதான்". ஆகாவிட்டாலும் ஒன்றுதான்."

"ஏன்?"

"சரி—என்று சொல்லிவிட்டு, கேள்வி கேட்பவள் போல் அவன் கண்களை ஊடுருவிப் பார்த்தாள். இதன் அர்த்தம் அவனுக்குப் புரிந்துவிட்டது. "நீங்கள் சொன்ன உறுதியுடனேயே இருக்கிறீர்களா அல்லது என்னுடைய மறுப்பை ஏற்றுக் கொண்டுவிட்டீர்களா?" என்று அவள் கேட்பது போல் தோன்றியது.

"எப்படி எல்லாம் ஒன்று என்பது எனக்கு விளங்கவில்லை. என்னைப் பொறுத்தவரையில் வேண்டுமானால் எல்லாம் ஒன்றுென்று சொல்லலாம். எப்படியானாலும் நான் சொன்னபடி செய்யத் தீர்மானித்திருக்கிறேன்." என்றான். அவள் அவனைக் கண்கொட்டாமல் பார்த்தாள். அவள் முகம் சந்தோஷத்தினால் ஜொலித்தது. ஆனால் அவளுடைய பேச்சு வேறு விதமாக இருந்தது.

"நீங்கள் அதைச் சொல்லாமல் இருப்பது நல்லது" என்றாள்.

"உனக்கு அது தெரிய வேண்டும்' என்பதற்காகத்தான் சொல்கிறேன்."

"அதைப்பற்றி எல்லாம் சொல்லியாகிவிட்டது. இனி சொல்வதற்கு ஒன்றுமில்லை" என்று புன்சிரிப்பை அடக்கிக் கொண்டு சொன்னாள் காடுஷா.

ஆஸ்பத்திரி வார்டிலிருந்து திடீரென்று ஏதோ சப்தம் கேட்டது. ஒரு குழந்தையின் அழுகைக்குரல்.

"என்னைக் கூப்பிடுகிறார்கள் போலிருக்கிறது" என்று சொல்லிக் கொண்டே காடுஷா திரும்பினாள்.

"சரி, நான் விடைபெற்றுக் கொள்கிறேன்.' என்றான் நிக்லியுடாவ். கைகுலுக்க அவன் நீட்டிய கையைக் கவனிக்கா தவள் போல நடித்து, தன் பூரிப்பை மறைக்க முயன்று கொண்டே வேகமாகப் போய்விட்டாள் காடுஷா.

"அவள் என்ன நினைக்கிறாள்? என்னைச் சோதிக்க விரும்புகிறாளா? அவள் நினைப்பதைச் சொல்ல முடியவில்லையா, அல்லது சொல்ல விரும்பவில்லையா? உண்மையிலேயே அவள் என்னை மன்னிக்க முடியாதா? அவள் மனம் மிருதுவாகியிருக்கிறதா அல்லது கடினமாகிவிட்டதா?" என்று நிக்லியுடாவ் தனக்குள் பல கேள்விகளைக் கேட்டுக்கொண்டான். ஆனால் ஒருவிதமான பதிலும் கண்டு பிடிக்க முடியவில்லை. ஆனால், "அவள் மாறியிருக்கிறாள்; அவள் மனம் மாறுதலடைந்து வருகிறது" என்பது மாத்திரம் அவனுக்குத் தோன்றியது. இந்த மாறுதல் அவனை அவளோடு மாத்திரமின்றி பரமபொருளுடனும் ஐக்கியப்படுத்துவதாகத் தோன்றியது. இந்த உணர்ச்சி அவனுக்கு ஆனந்தத்தை அளித்தது.

காடுஷா தன் வார்டுக்குத் திரும்பினாள். அங்கு எட்டு சிறிய படுக்கைகள் இருந்தன. அங்கு இருந்த நர்ஸின் உத்திரவுப்படி காடுஷா ஒரு படுக்கையை ஒழுங்குபடுத்தச் சென்றாள். அப்பொழுது அவள் தவறி விழவிருந்தாள்.

அவளைப் பார்த்துக்கொண்டிருந்த, கழுத்தில் கட்டுடன் இருந்த ஒரு சிறுவன் சிரித்தான். அதற்கு மேலும் காடுஷாவால் தன் சந்தோஷத்தை அடக்கிக்கொண்டிருக்க முடியவில்லை. இடி இடியென்று சிரித்து விட்டாள். இதைக்கண்டு மற்ற சிறுவர்களும் சிரித்தனர் அங்கு இருந்த ஒரு நர்ஸ் அவளைக் கடிந்து கொண்டாள். "எதற்காக அப்படிச் சிரிக்கிறாய்? இது உன் வீடு என்று நினைத்துவிட்டாயா? போய் சாப்பாட்டைக் கொண்டு வா" என்றாள் அவள்,

காடுஷா சிரிப்பதை நிறுத்திவிட்டுப் போனாள். ஆனால் அந்தச் சிறுவனைப் பார்த்தபொழுது ஓசைப்படாமல் சிரித்தாள்.

காடுஷா தனியாக இருந்தபொழுதெல்லாம் போட்டோ வைக் கவருக்குள்ளிருந்து பாதிவெளியே இழுத்துப் பார்ப் பாள். ஆனால் மாலையில் அவள் வேலைகளெல்லாம் முடிந்து தன் அறைக்குப் போனபொழுது தான் அதை நிதானமாகப் பார்த்தாள். அதில் இருந்த முகங்கள், உடை, வீட்டின படிக் கட்டுகள் பின்னணியில் இருந்த புதர் எல்லாவற்றையும் ஒன்றுவிடாமல் ஆராய்ந்து பார்த்தாள். மங்கிய அந்தப் படத்தையே நீண்டநேரம் பார்த்து ஆனந்தித்துக் கொண் டிருந்தாள். முகத்தில் சுருண்டு தொங்கிய கூந்தலுடன்கூடிய தன் இளம் முகத்தைக் கண்டு அவளால் சந்தோஷிக்காமல் இருக்க முடியவில்லை. அவள் கவனமெல்லாம் படத்திலேயே ஆழ்ந்திருந்ததால் அவளோடு வேலை செய்த நர்ஸ் உள்ளே வந்த சப்தம் கூட அவளுக்குக் கேட்கவில்லை. வந்த நர்ஸ். "அவர் உன்னிடம் என்ன கொடுத்தார்?" என்று கேட்டுக் கொண்டே பட்த்தைக் குனிந்து பார்த்துவிட்டு, "இது நீயா" என்றாள்.

"வேறு யார்?" என்று கேட்டுவிட்டு அந்த நர்ஸை நோக்கி புன்முறுவல் புரிந்தாள் காடுஷா!

"அது யார்? அவரா? இவள் அவருடைய தர்யாரா?"

"இல்லை. அவருடைய அத்தை."

"உன் ஜாடையே மாறிப்போய் விட்டதே: இது பத்து வருஷத்திற்குமுன் எடுத்த படமாக இருக்க வேண்டும்."

"வருஷங்களில்லை. ஒரு ஆயுள்காலமே ஆகிவிட்டது" என்றாள் காடுஷா. உடனே அவள் முகத்தில் இருந்த சந்தோஷம் மறைந்து வருத்தம் படர்ந்தது. புருவங்கள் சுளித்தன.

"ஏன் உன்னுடைய வாழ்க்கை சுலபமாக இருந்திருக் குமே?" என்றாள் அந்த நர்ஸ்.

காடுஷா "சுலபம்தான்" என்றுகூறி, கண்களை மூடிக் கொண்டு ஒருமுறை தலையைக் குலுக்கினாள்.

"அப்பா! நரகத்தைவிட மோசம் என்றாள்.

"ஏன்?"

"இரவு எட்டுமணி முதல் காலை நான்கு மணிவரை, தின மும் அதேதான்;

"அதை ஏன் விடவில்லை?"

"விடவேண்டுமென்றால் விட்டுவிட முடியாது. இதைப் பற்றியெல்லாம் பேசி என்ன பயன்?" என்று சொல்லிக் கொண்டே காடுஷா எழுந்து படத்தை மேஜை டிராயருக்குள் எறிந்தாள். கோபக் கண்ணீரைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டாள். கதவைப் படார் என்று அறைந்து சாத்திக் கொண்டு வெளியே போய்விட்டாள்.

அந்தப் படத்தைப் பார்த்துக்கொண்டிருந்த பொழுது பழைய வாழ்க்கை நடப்பதுபோலவே அவள் கனவு கண்டாள். அவனோடு இனி அனுபவிக்கக் கூடிய சந்தோஷங்களைப்பற்றியும் கற்பனை செய்தாள். ஆனால் அந்த நர்ஸின் பேச்சு அவளுடைய தற்போதைய நிலைமையை அவளுக்கு ஞாபக மூட்டியது. அவள் நடத்திய வாழ்க்கையின் கோரமெல்லாம் ஞாபகத்திற்கு வந்துவிட்டது. அதை மாற்றிக்கொள்ளவே முடியவில்லை. அதற்கெல்லாம் அவன்தானே காரணம்!

"மீண்டும் அவன்மீது துவேஷம் ஏற்பட்டது." என்று கிடைத்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு, அவனைத் திட்டியனுப்பாமல் விட்டுவிட்டோமே!" என்று வருந்தினாள். இதையெல்லாம் மறக்கடிக்க வேண்டுமென்று தோன்றியது. ஆனால் சாராயம் கிடைக்கவில்லை. பிறகு தன் சிறிய அறைக்குத் திரும்பிவந்து பாழடைந்த தன் வாழ்க்கையை நினைத்து நீண்டநேரம் அழுதுகொண்டிருந்தாள்.

## 14

நிக்லியுடாவ் பீடர்ஸ்பர்க்கில் நான்கு விஷயங்களைக் கவனிக்க விரும்பினான். காடுஷாவின் அப்பீல்; அப்பீல் கமிட்டியில் திவோடாஸியா பிருகோவாவின் மனு; தன்னுடைய ஸ்நேகிதை ஷுஸ்டோவா விடுதலையாக ஏற்பாடு செய்யும்படி வொரடிக்கோவா கேட்டுக்கொண்டது. ஒரு கிழவி சிறை ஆபீஸில் தன் மகளைச் சந்திக்க அனுமதி வாங்கிக்கொடுப்பது; வெரக்கோவா செய்யச்சொன்ன இரண்டு வேலைகளையும் நிக்லியுடாவ் ஒன்றாக மதித்தான். நண்பர்களோடு சேர்ந்து பைபிள் படித்ததற்காக தீவாந்திர சிக்ஷைபெற்றிருந்தவர்களின் வழக்கையும் நிக்லியுடாவ் கவனிக்க விரும்பினான்.

மாஸ்லெனிகோவை நிக்லியுடாவ் சந்தித்தபின் அவன் இதுவரை வாழ்ந்துவந்த சமூகத்தைப்பற்றி அருவருப்படைந்தான். கிராமத்திற்குப்போய் வந்தபின் இந்த உணர்ச்சி அதிகமாகிறது. இந்தச் சமூகம் லக்ஷக்கணக்கானவர்களின்

கஷ்டத்தை சாதுரியமாக மறைத்து, ஒரு சிலர் சந்தோஷம் அனுபவிக்கும்படி செய்தது. பிறருடைய துயரத்தை அது அறியவில்லை. இந்த சமூகத்தில் இனியும் பழக நிக்லியுடாவால் முடியவில்லை. காடுஷாவுக்கும், கஷ்டப்படும் மற்றவர்களுக்கும் உதவிசெய்வது ஒன்றில்தான் அவன் அக்கரைகொண்டிருந்தான்.

நிக்லியுடாவ் பீடர்ஸ்பர்க்குக்கு வந்த பொழுது தன் சிற்றன்னை (தாயின் தங்கை) சார்ஸ்காயா சிமாட்டியின் வீட்டில் தங்கினான். அவளுடைய கணவன் மந்திரியாக இருந்தவர். அவன் வெறுத்த பெரிய மனுஷர்களின் வட்டாரம் இங்கும் அவனைச் சூழ்ந்து கொண்டது. ஆனால் இதிலிருந்து தப்ப வழியில்லை. ஹோட்டலில் தங்கினால் அவனுடைய சிறிய தாயாருக்குக் கோபம் வந்துவிடும். தவிர பெரிய மனிதர்களெல்லாம் அவளுக்குத் தெரியும். ஆகையால் அவளைத் தன் வேலைக்குப் பயன்படுத்திக் கொள்ளலாமென்று அவனுக்குத் தோன்றியது.

நிக்லியுடாவின் நடவடிக்கைகளைப் பற்றியும், காடுஷாவுக்கும் அவனுக்குமிடையில் இருந்த உறவைப் பற்றியும் அவள் விசாரித்தாள். நிக்லியுடாவ் எல்லாவற்றையும் விவரமாகச் சொன்னான். அவனுடைய சிற்றன்னை எல்லாவற்றையும் கேட்டுவிட்டு, "நீ சுத்த அசடு" என்றாள்.

"காடுஷா வழக்கில் அப்பீல் செய்வதற்காகத்தான் நான் இங்கு வந்திருக்கிறேன். அதில் உன் உதவியும் வேண்டும்" என்றான் நிக்லியுடாவ்.

"எங்கே அப்பீல் செய்யப் போகிறாய்?"

"ஸெனேட்டில்."

"ஸெனேட்டிலா? என் மருமான் லியோ கூட அங்குதான் இருக்கிறான். ஆனால் அவன் வேறு இலாகாவில் இருக்கிறான். நீதிபதிகளில் ஒருவரையும் எனக்குத் தெரியாது. இருந்தாலும் பரவாயில்லை. உன் சித்தப்பாவுக்கு எல்லாரையும் தெரியும். அவரிடம் நான் சொல்கிறேன். நீயும் அவரிடம் எல்லாவற்றையும் விவரித்துச் சொல்ல வேண்டும். நான் சொல்வது புரியவில்லை என்பார். என் பேச்சு எல்லாருக்கும் புரிகிறது. அவருக்கு மாத்திரம் புரியாது."

இந்த சமயத்தில் ஒருவன் ஒரு கடிதத்தைக் கொண்டு வந்து அவளிடம் கொடுத்தான். அவள் அதைப் படித்துப் பார்த்து விட்டு, "இன்று மாலை இங்கு கீஸ்வெட்டர் உபந்யாசம் நடத்தப் போகிறார். அதைக் கேட்க உனக்கு சந்தர்ப்பம் கிடைக்கும்" என்றாள்.

"அது யார் கிஸ்வெட்டர்?"

"கிஸ்வெட்டரா? இன்று சாயங்காலம் வந்து பார். யாரென்பது தெரியும். அவர் உபன்யாசத்தைக் கேட்டால் கொடிய கொலைபாதகர்கள் கூட அழுது விடுவார்கள்."

கிறிஸ்தவ மதத்தின் தத்துவமே மீட்சியில்தான் இருக்கிறது என்பதை காதரீன் இவானேவ்னு சீமாட்டி பலமாக நம்பினாள். இதைப்பற்றி உபன்யாசம் நடக்கும் இடங்களுக்கெல்லாம் போவாள். தன் வீட்டிலும் ஆஸ்திகர்களின் கூட்டங்களைக் கூட்டுவாள்.

"இன்று சாயங்காலம் நீ வீட்டிலேயே இருந்து அவருடைய உபன்யாசத்தைக் கட்டாயம் கேள்" என்றாள் காதரீன் இவானேவ்னு.

"இதெல்லாம் எனக்குப் பிடிப்பதில்லையே."

"நான் சொல்கிறேன் கேள். மிகவும் நன்றாக இருக்கும். எங்கேயாவது போக வேண்டுமானால் இப்பொழுதே போய் விட்டு வந்துவிடு. நான் இன்னும் என்னென்ன செய்ய வேண்டும்? எல்லாவற்றையும் சொல்லிவிடு."

"அடுத்தபடி கோட்டையில் கொஞ்சம் வேலை இருக்கிறது."

"கோட்டையிலா? கிரிக்ஸ் மத்துக்கு வேண்டுமானால் நான் கடிதம் கொடுக்கிறேன். அவர் உன்னுடைய தந்தையின் நண்பர், ஆத்மிகத்தில் நம்பிக்கை உள்ளவர். இருந்தாலும் பரவாயில்லை; நல்லவர். நீ அங்கு என்ன செய்ய வேண்டும்?"

"ஒரு பையன் கோட்டைச் சிறையில் அடைப்பட்டுக் கிடக்கிறான். அவனுடைய தாய் அவனைச் சந்திக்க அனுமதி வாங்கிக் கொடுக்க வேண்டும். இதில் கிரிக்ஸ்மத் ஒன்றும் செய்ய முடியாது. செர்வியான்ஸ்கிதான் ஏதாவது செய்ய முடியுமாம்."

"எனக்கு செர்வியான்ஸ்கியைப் பிடிப்பதே யில்லை. மேரியட்டின் கணவர்தான் அவர். அவளைக் கேட்போம். எனக்கு வேண்டியதை அவள் செய்வாள். அவள் ரொம்ப நல்லவள்."

"மற்றொரு பெண் காரணமே இல்லாமல் அங்கு அடைக்கப் பட்டிருக்கிறாள். அவளுக்காகவும் நான் மனு செய்ய விரும்புகிறேன்."

"எல்லாம் நியாயமாகத்தான் அடைக்கப் பட்டிருக்கிறார்கள்."

"நியாயமாக அடைக்கப்பட்டிருக்கிறார்களா அநியாயமாக் அடைக்கப்பட்டிருக்கிறார்களா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் அவர்கள் மிகவும் அவஸ்தைப்படுகிறார்கள். நீ வேதத் தில் நம்பிக்கை உள்ள கிறிஸ்தவச்சியாக இருந்தும் உனக்குக் கருணை இல்லையே?"

"வேதம் வேதம்தான். அது வேறு இது வேறு இந்த நாஸ் திகர்களிடம், அன்பு செலுத்துவதாக நான் நடிக்க முடியாது."

"நீ ஏன் அவர்களை பொறுத்துக் கொள்ளக் கூடாது?"

"இரண்டாவது அலெக்ஸாண்டர் மன்னர் கொலையுண்ட பிறகுமா 'ஏன் பொறுத்துக் கொள்ளக் கூடாது?' என்று கேட்கிறாய்?"

"அந்தக் கொலையில் இவர்கள் கலந்து கொள்ள வில்லை."

"அவர்களுக்கு சம்பந்த மில்லாத விஷயத்தில் அவர்கள் தலை யிடக்கூடாது. இதெல்லாம் பெண்களின் வேலையல்ல."

"மேரியட் இதிலெல்லாம் கலந்து கொள்வாள் என்று நீ நினைக்கிறாயா?"

"மேரியட்டா? மேரியட் மேரியட்தான். இவர்களைப்பற்றிக் கடவுளுக்குத்தான் தெரியும். இவர்கள் உலகத்திற்கே உப தேசம் செய்ய வருகிறார்கள்."

"உபதேசம் செய்ய வரவில்லை. ஜனங்களுக்கு உதவி செய்ய வருகிறார்கள்."

"யாருக்கு உதவி செய்ய வேண்டும். யாருக்கு வேண்டா மென்பது எல்லாருக்கும் தெரியும்."

"குடியானவர்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். நான் இப்பொழுதுதான் கிராமத்திற்குப் போய் வந்தேன். அவர்கள் உடலில் சக்தி உள்ளவரை உழைக்கிறார்கள். ஆனால் அவர் களுக்குக் கிடைப்பதென்னவோ ஒன்றுமில்லை. ஆனால் இங்கு நாம் மாத்திரம் சுக வாழ்வு வாழ்கிறோம்."

"பின் என்ன செய்ய வேண்டு மென்கிறாய்? நான் வேலை செய்ய வேண்டும்; ஒன்றும் சாப்பிடக் கூடாது என்கிறாயா?"

"சாப்பிடக் கூடாதென்று சொல்ல வில்லை. எல்லாரும் உழைக்க வேண்டும். எல்லாரும் வயிறாரச்சாப்பிட வேண்டும்."

அவள் தன் புருவத்தைக் சுளித்துக்கொண்டு அவனை விசித்திரமாகப் பார்த்து விட்டு, "குழந்தை, நீ ரொம்ப கஷ்டப் பட்டப் போகிறாய்" என்றாள்.

"ஏன்?" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

அதற்குள் அவனுடைய சிற்றன்னையின் கணவர், மாஜி மந்திரி வந்து விட்டார்.

"ஆ! நிக்லியுட்டாவ், சௌக்கியமா?" என்று கேட்டுக் கொண்டே அவன் முத்தமிடுவதற்காக தம் கன்னத்தைக் காட்டினார். பிறகு தம் மனைவியின் நெற்றியில் சப்தமின்றி முத்த மிட்டார்.

காதரீன் இவானோவ்னா தன் கணவரைப் பார்த்து, "பிள்ளை சொல்வதைக் கேளுங்கள்! நான் துணி துவைக்க வேண்டுமாம்! உருளைக் கிழங்கைத் தின்று பிழைக்க வேண்டு மாம்! அசடு! இருந்தாலும் அவன் கேட்கும் உதவியைச் செய் யுங்கள். நீங்கள் அவனோடு பேசிக்கொண்டிருங்கள். நான் சில கடிதங்கள் எழுத வேண்டும்" என்றாள். நிக்லியுடாவ் அடுத்த அறைக்குள் போவதற்குள் அவனைத் திரும்ப அழைத்து, "அப்படியானால் மேரியட்டுக்கு எழுதுவோமா?" என்றாள்.

"தயை செய்து எழுது"

"கடிதத்தில் கொஞ்சம் இடம் விட்டு வைக்கிறேன். அந் தப் பெண்ணைப்பற்றி என்ன எழுத வேண்டுமோ அதை நீ எழுது. மேரியட் தன் கணவனிடம் சொல்லி வேண்டியதைச் செய்வாள். என்னைப் பொல்லாதவள் என்று நினைக்காதே. இந்தப் புரட்சிக்காரர்களெல்லாம் அப்படிப்பட்டவர்கள். இருந் தாலும் அவர்களுக்குத் தீமை ஏற்படவேண்டு மென்று நான் நினைப்பதில்லை. போய்வா. ஆனால் சாயங்காலம் உபன்யாசத் திற்கு நீ கட்டாயம் இருக்க வேண்டும். இந்த விஷயங்களில் உன் தாயாகட்டும், மற்றவர்களாகட்டும் மிகப் பின்னணியில் இருக்கிறீர்கள் என்பது எனக்குத் தெரியும். போய்வா."

# 15

இவான் மிஹெய்லிச் பிரபு மந்திரியாக இருந்தவர். உயர்ந்த சாப்பாடு சாப்பிட வேண்டும்; உயர்ந்த உடை உடுக்க வேண்டும். உயர்ந்த குதிரைகள் மீது சவாரி செய்ய வேண்டும் என்பவை தான் அவருடைய வாழ்க்கைத் தத்துவம். இவை அவருக்குத் தயாராக இருக்க வேண்டும்.

மற்றவற்றைப்பற்றி அவருக்கு லக்ஷியமில்லை. தஸ்தாவேஜி களையும் சட்டங்களையும் நன்றாகப் புரிந்து கொள்வார். சர்க்கார் உத்தரவுகளை எழுத்துப் பிழை இல்லாமல் சுமாராக எழுதி விடுவார். அவருக்கு மந்திரி பதவி கிடைத்ததற்கு முதல் காரணம் இது தான். அடுத்தபடியாக அவருடைய கம்பீரமான தோற்றம். அடுத்த படியாக சொந்த விஷயத்திலோ நிர்வாக விஷயத்திலோ திட்டமான கொள்கை ஒன்றும் அவருக்குக் கிடையாது. சமயத்திற்குத் தகுந்தபடி அவற்றை மாற்றிக் கொண்டு விடுவார். தம்முடைய முரண்பாடு வெளிப்படை யாகத் தெரியாதபடி நடந்து கொள்வார். தம் காரியங்கள் ருஷிய சாம்ராஜ்யத்திற்கோ அல்லது உலகத்திற்கோ நன்மை விளைவித்தாலும் அல்லது தீமை செய்தாலும் அவருக்குக் கவலை யில்லை.

அவர் மந்திரியான பொழுது, அவரைப் பெரிய ராஜதந்திரி என்று தான் எல்லாரும் நினைத்திருந்தனர். அவரே அப்படித் தான் நினைத்தார். ஆனால் காலப் போக்கில் உருப்படியாக ஒன்றும் நடக்கவில்லை. அவரைப் போலவே யோக்கியதாம்சம் பெற்றிருந்த மற்றவர்கள் அவரை விரட்டிவிட்டுப் பதவிக்கு வந்துவிட்டனர். அவருக்கு ஒன்றும் தெரியாது என்பது பிறகு பட்டவர்த்தனமாகிவிட்டது. அவருக்கும் அது பிறகுதான் தெரிந்தது. ஆனால் வருஷா வருஷம் தமக்கு ஏராளமான சர்க் கார் பணம் சேரவேண்டும் என்ற எண்ணம் மாத்திரம் போக வில்லை. அதை மறுக்க ஒருவருக்கும் தைரியமில்லை. பென்ஷ னாகக் கொஞ்சம் பணம் வந்தது. சர்க்கார் ஸ்தாபனம் ஒன்றில் அங்கத்தினராக இருந்ததற்காக ஏராளமான பணம் சம்பளமா கப் பெற்றார். பல்வேறு கமிட்டிகளுக்கும் கவுன்ஸில்களுக்கும் தலைவராக இருந்து ஆயிரக்கணக்கில் பணம் வாங்கினார். இவற் றைத் தவிர சர்க்கார் மரியாதைகள் வேறு. இவை காரண மாகப் பெரிய இடங்களிலெல்லாம் அவருக்கு நட்பு இருந்தது.

நிக்லியுடாவ் சொன்னவற்றையெல்லாம் அவர் கேட்டார். அவர் மந்திரியாக இருந்ததால் பார்லிமெண்டரி காரியதரிசியின் அறிக்கைகளை இப்படிக் கேட்டுக் கேட்டு வழக்கம். இவான்மி ஹெய்லிச் பிரபு எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு, இரு கடிதங்கள் கொடுப்பதாகச் சொன்னார். அப்பீல் இலாகாவைச் சேர்ந்த ஸெனெட்டார் உல்புக்கு ஒருகடிதமும், அப்பீல் கமிட்டி யில் செல்வாக்குள்ள மெம்பர் ஒருவருக்கு ஒருகடிதமும் கொடுப் பதாக வாக்களித்தார்.

“உல்பைப் பற்றி என்ன வெல்லாமோ சொல்வார்கள். இருந்தாலும் அவர் மிக நல்லவர். எனக்கும் மிகவும் கடமைப் பட்டிருக்கிறார். அவரால் சாத்தியமானதை யெல்லாம் எனக் காகச் செய்வார்” என்றார் இவான்மி ஹெய்லிச்.

இயோடோஸியா பிருகோவாவைப் பற்றி நிக்லியுடாவ் கூறிய விவரங்களை அவர் ஸ்வாரஸ்யமாகக் கேட்டுக்கொண்டிருந்தார். "இது உண்மையிலேயே துக்ககரமான விஷயம்தான். இது சம்பந்தமாக வழக்கமாகப் போடவேண்டிய மனுவை நீ போட்டு வை. சந்தர்ப்பம் வாய்க்கும் பொழுது ராணியிடம் இதைப் பற்றி நான் நேரிலும் சொல்கிறேன்" என்றார். அவர் கொடுத்த கடிதத்தையும் வாங்கிக் கொண்டு நிக்லியுடாவ் உடனே புறப்பட்டான்.

முதலில் அவன் மேரியட் வீட்டிற்குச் சென்றான். அவள் சிறிய பெண்ணாக இருந்தபொழுதே அவளை நிக்லியுடாவுக்குத் தெரியும். அவளுடைய குடும்பம் பெரிய தென்றாலும் பணக்காரக் குடும்பமல்ல. அவளுடைய கணவனுக்கு நல்ல பெயர் இல்லை என்பதும் அவனுக்குத் தெரியும். தன் மதிப்புக்குப் பாத்திரமில்லாத ஒருவனின் உதவியை நாட அவனுக்கு இஷ்டமில்லை. இத்தகைய சந்தர்ப்பங்களில், உதவி கோருவதா வேண்டாமா என்று தயங்குவான். கடைசியில் கேட்பதென்றே முடிவு செய்து விடுவான். அவன் விரும்பாத சமூகத்தின் அதர்மக் குரலுக்கு அவன் பணிந்தான்.

பீடர்ஸ்பர்க்கில் இதற்கு முன்னால் அவன் அதிக காலம் தங்கியிருந்ததில்லை. இந்த நகரின் சூழ்நிலை உடலுக்கு உற்சாகமளித்த போதிலும் மனத்தை மந்தமாக்கியது. எல்லாம் சுத்தமாகவும் ஒழுங்காகவும் இருந்தன. தார்மிகத் துறையில் மக்கள் காட்டிய மனோபாவத்தினால் வாழ்க்கை மிகச் சுலபமாக இருப்பதாகத் தோன்றியது. ஒரு வண்டியில் ஏறிக்கொண்டு மேரியட் வசித்த வீட்டை அடைந்தான் நிக்லியுடாவ்.

"எஜமானி அம்மாளை இப்பொழுது சந்திக்க முடியாது; எங்கோ போகப்போகிறார்கள்" என்றான் காவற்காரன். வருகிறவர்கள் தங்கள் வருகையைப் பற்றி எழுதிவைத்து விட்டுப் போகும் நோட் புத்தகம் இருந்த மேஜை அருகே சென்றான் நிக்லியுடாவ். அதற்குள் மேரியட்டே இறங்கி வந்துவிட்டாள். அவள் நிக்லியுடர்வைக் கண்டவுடன், "ஆ! நிக்லியுடாவ், எனக்கு முன்பே தெரிந்திருந்தால்—" என்றாள்.

"என்ன? என் பெயர் கூடவா ஞாபகம் இருக்கிறது?" என்று நிக்லியுடாவ் ஆச்சரியத்துடன் கேட்டான்.

"இல்லாமல் என்ன? நானும் என் தங்கையும் உங்கள் மீது எவ்வளவு அன்பு வைத்திருந்தோம்! இப்பொழுது நீங்கள் எவ்வளவு மாறிப்போய்விட்டீர்கள்! ஐயோ, நான் அவசரமாகப் போக வேண்டியிருக்கிறதே! மாடிக்குப் போவோமா?" என்று சொல்லிவிட்டுச் சற்றுத் தயங்கி நின்றாள். உடனே கடியாரத்

தைப் பார்த்துவிட்டு, "இல்லை, அவகாசம் இல்லை. காமென்ஸ்கி வீட்டில் ஒரு பிரார்த்தனையில் கலந்துகொள்வதறகாகப் போகிறேன்" என்றாள்.

"காமென்ஸ்கி யார்?"

"நீங்கள் கேள்விப்பட்டதில்லையா? அவர்கள் வீட்டுக்கு ஒரே பிள்ளைதான். அவன் சண்டையில் இறந்து விட்டான். அவன் தாய் துக்கத்தில் ஆழ்ந்து கிடக்கிறாள்."

"அவர்களைப் பற்றிக் கொஞ்சம் கொஞ்சம் கேள்விப்பட்டிருக்கிறேன்."

"இல்லை, நான் போவதுதான் நல்லது. இன்று இரவாவது, நாளை காலையாவதுதான் நீங்கள் வர வேண்டும்."

"இல்லை, இன்று இரவு எனக்கு வர முடியாது. நான் உன்னிடம் ஒரு விஷயம் கேட்க வந்தேன்" என்று சொல்லிக் கொண்டே அவளைத் தொடர்ந்தான்.

"என்ன விஷயம்?"

"என் சிற்றன்னை ஒரு கடிதம் கொடுத்திருக்கிறாள். அதில் எல்லா விஷயங்களும் அடங்கி யிருக்கின்றன."

"என் கணவரிடம் எனக்கு ஏதோ செல்வாக்கு இருப்பதாக காதரின் ஐவனோவ்னு நினைத்திருக்கிறாள். அது தவறு. அவர் விஷயத்தில் நான் தலையிடுவதே யில்லை. ஆனால் அந்த சிமாட்டிக்காகவும் உங்களுக்காகவும் என் கொள்கையை விட்டுக் கொடுக்கத் தயார். அது என்ன விஷயம்?" என்று அவள் கேட்டாள்.

"கோட்டைச் சிறையில் ஒரு பெண் அடைபபட்டுக கிடக்கிறாள். அவளுக்கு உடம்பு சௌகரியமில்லை. தவிர அவள் ஒரு குற்றமும் செய்யவில்லை."

"அவள் பெயர் என்ன?"

"ஷுஸ்டோவா—லிடா ஷுஸ்டோவா. அது கடிதத்திலேயே இருக்கிறது."

"சரி, என்னால் முடிந்ததைச் செய்கிறேன்" என்று சொல்லி விட்டு வண்டியில் ஏறி உட்கார்ந்தாள். "நீங்கள் கட்டாயம வர வேண்டும். வேறு வேலை ஒன்றும வைத்துக் கொள்ளாமல் வர வேண்டும்" என்று சொல்லி விட்டு, சிறிது

டாவைப் பார்த்து ஒரு புன் சிரிப்புச் சிரித்தாள். அதன் சக்தி எவ்வளவென்பது அவளுக்குத் தெரியும். ஆட்டம் முடிந்த பின் திரையை விடுவதுபோல படுதாவால் மீண்டும் முகத்தை மறைத்துக் கொண்டு வண்டியை விடச் சொல்லிச் சமிக்ஞை செய்தாள். வண்டி சப்தமில்லாமல் ஓடத் தொடங்கியது. நிக்லியுடாவ் தன் தொப்பியை எடுத்து அவளுக்கு மரியாதை செலுத்தினன்.

# 16

மேரியட்டின் புன் சிரிப்பு நிக்லியுடாவுக்கு ஞாபகம் வந்த பொழுது தலையைக் குலுக்கிக் கொண்டான். "இன்னும் அந்த வாழ்க்கையிலிருந்து சரியாக மீளக் கூட அவகாசமில்லை. இதற்குள் அதே வாழ்க்கைக்குத் திரும்புகிருயா?" என்று தன் மனத்திற்குள்ளேயே கடிந்து கொண்டான். இழிந்தவர்களின் உதவியை நாடும்பொழுது ஏற்படும் மன வேதனை அவனை அமுக்கியது.

அடுத்தபடி எங்கே போகலா மென்று யோசித்தான். மீண்டும் வீட்டுக்குத் திரும்ப அவன் விரும்பவில்லை. உடனே செனேட்டுக்குப் போவதென்று தீர்மானித்துக் கொண்டான். அங்கு ஒரு பிரம்மாண்டமான அறையில் பல உத்தியோகஸ்தர்கள் இருந்தனர். காடுஷாவின் மனு வந்து சேர்ந்துவிட்டதென்றும், ஸெனெட்டார் உல்பின் ஆலோசனைக்கு அதை அனுப்பி யிருப்பதாகவும் சொன்னர்கள், அதே உல்பிற்குத் தான் நிக்லியுடாவ் தன் சிற்றப்பாவிடமிருந்து கடிதம் கொண்டு வந்திருந்தான்,

"இந்த வாரத்தில் செனேட் கூட்டம் ஒன்று நடக்கும். பிரத்தியோகமாகக் கேட்டுக் கொண்டாலொழிய அது இந்த கூட்டத்தில் ஆலோசனைக்கு வராது. கேட்டுக் கொண்டால் ஒரு வேளை புதன்கிழமை ஆலோசனைக்கு வரலாம்" என்ருர் ஒரு உத்தியோகஸ்தர்.

காமென்ஸ்கியின் மரணத்தைப் பற்றித்தான் ஆபீஸில் எல்லர்ரும் பேசிக் கொண்டிருந்தனர். காமென்ஸ்கி இருந்த படையைப் பற்றி ஒரு அதிகாரி ஏதோ கேவலமாகப் பேசினுணும். அவனை காமென்ஸ்கி பொய்யன் என்று திட்டினுனும். அந்த அதிகாரி காமென்ஸ்கியை அடித்தானும். மறுநாள் இருவருக்கும் சண்டை நடந்தது. காமென்ஸ்கி வயிற்றில் காயமடைந்து மாண்டான். கொலை செய்தவனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் கைது செய்து இருக்கிருர்கள். ஆனல் அவர்களை இரண்டு வாரத்தில் விடுதலை செய்து விடுவார்கள் என்று சொல்லிக் கொண்டார்கள்.

அப்பீல் கமிட்டியில்செல்வாக்குள்ள மெம்பராகிய வோரோ பென் பிரபுவைப் பார்க்க அங்கிருந்து புறப்பட்டான் கிக்லியுடான். "பிரபுவை இன்று பார்க்க முடியாது. அவர் பேட்டியளிக்கும் தினங்களில் தான் பார்க்கலாம். இன்று அவர் மன்னரோடு பேசிக்கொண்டிருக்கிறார்" என்று காவல்காரன் கண்டிப்பாகச் சொல்லி விட்டான். தன் சிற்றப்பாவிடமிருந்து தான் கொண்டு வந்த கடிதத்தை வேலைக்காரனிடம் கொடுத்து விட்டு கிக்லியுடான் அங்கிருந்து புறப்பட்டான். ஸெனெடார் உல்பைப் பார்ப்பதற்காக அவன் நேராகச் சென்றான்.

உல்ப் அப்பொழுதுதான் சாப்பிட்டு விட்டு தம் அறையில் குறுக்கும் நெடுக்குமாக உலாவிக் கொண்டிருந்தார். சாப்பிட்டது ஜீர்ணமாவதற்காக ஒரு சுருட்டைப் புகைத்துக் கொண்டிருந்தார். விவாகத்தின் மூலம் அவருக்கு வருஷத்தில் பதினெட்டாயிரம் ரூபிள் கிடைத்தது. தம் சொந்த முயற்சியினால் ஸெனெட்டரானார். லஞ்சம் வாங்காதிருப்பதை ஒரு கௌரவமாக மதித்தார், ஆனால் பிரயாணப்படி என்றும் மற்ற அலவன்ஸ்கள் என்றும் சர்க்காரிடமிருந்து ஏராளமாகப் பணம் வாங்குவதை அவர் அகௌரவமாக நினைக்கவில்லை. சர்க்காருக்காக எதைச் செய்தாலும் அதற்குப் பணம் வாங்கி விடுவார். நாட்டு மக்களையும், தங்கள் மதத்தையும் நேசித்ததற்காக ஆயிரக் கணக்கான மக்களை அவர் சிறையில் அடைத்திருக்கிறார். இதை அவர் கேவலமென்று கருதவில்லை; வீரம் என்றுகூட நினைத்தார்! தன் மனைவிக்கும் மைத்துனிக்கும் சொந்தமான பொருள்களை அபகரிப்பது அயோக்கியத்தனம் என்று அவருக்குத் தோன்றவில்லை. குடும்ப விஷயங்களை புத்திசாலித்தனத்துடன் ஒழுங்குபடுத்துவதாக நினைத்திருந்தார். அவருடைய குடும்பத்தில் அவர் மனைவி, மைத்துனி சோனிப் பெண் ஒருத்தி ஆகியவர்கள் தான் இருந்தனர். மைத்துனியின் சொத்துக்களை விற்று பணத்தை அவரே எடுத்துக் கொண்டு விட்டார். பெண்ணின் மனம் பாரமார்த்திகத் துறையில் ஈடுபட்டிருந்தது. அவருடைய மகன் தத்தாரியாக இருந்தான். அவன் படிப்பு பூர்த்தியாவதற்கு முன்பே அவனுடைய இருபதாவது வயதில் அவனை வீட்டை விட்டுத் துரத்தி விட்டார். இருமுறை அவன் வாங்கிய கடன்களை அவர் கொடுத்தார். இனி சீர்திருந்த வில்லை யென்றால் குடும்பத்துடன் அவனுக்கு இருந்த உறவைத் துண்டித்து விடுவதாக எச்சரித்தார். அவன் இங்கிருக்க வில்லை. மேலும் ஆயிரம் ரூபிள் கடன் வாங்கினான். "இனி நீ என் பிள்ளையில்லை. உனக்கு இஷ்டமான இடத்திற்குப் போகலாம்" என்று அவனிடம் சொல்லி விட்டார். அன்று முதல் பிள்ளை இல்லாதவர் போலவே அவர் நடந்து கொண்டார். பிள்ளையைப்பற்றி அவரிடம் பேச வீட்டில் ஒருவருக்கும் தைரிய

மில்லை. குடும்ப விவகாரங்களைச் சிறந்த முறையில் சீர்படுத்தி விட்டதாக அவர் திருப்தி கொண்டார்.

நிக்லியுடாவ் உள்ளே பிரவேசித்தவுடன் அவர் சற்று நின்று, நேசமும் அலக்ஷியமும் கலந்த சிரிப்பு ஒன்று சிரித்தார். மற்றவர்களைக் காட்டிலும் தாம் உயர்ந்தவர் என்ற அஹம் பாவம் அந்த சிரிப்பில் ஒளி வீசியது. நிக்லியுடாவ் கொடுத்த கடிதத்தைப் படித்துப் பார்த்தார்.

"தயை செய்து உட்காருங்கள்; நான் குறுக்கும் நெடுக்கும் நடந்து கொண்டே பேசுவதற்காக மன்னிக்கவும்" என்று சொல்லிவிட்டு, தம் கோட்பைகளில் கைகளை விட்டுக்கொண்டு மீண்டும் நடக்கத் தொடங்கினர்.

"உங்கள் ஸ்நேகம் கிடைப்பதைப்பற்றி மகிழ்கிறேன். ஐவான் மிஹெய்லிச் பிரபு சொல்கிற எந்த வேலையையும் செய்யத்தயார்" என்று அவர் மீண்டும் கூறிவிட்டு புகையை ஒரு முறை இழுத்து வெளியே விட்டார்.

"வழக்கைச் சீக்கிரம் விசாரணைக்கு எடுத்துக் கொள்ள வேண்டும் என்பது தான் என் கோரிக்கை" என்ருன். நிக்லியுடாவ்.

"கைதியின் பெயர் என்ன?"

"காடுஷா"

உல்ப் உடனே மேஜை அருகே சென்று ஏதோ ஒரு தஸ்தா வேஜைப் பார்த்து விட்டு, "ஆமாம், காடுஷா; மற்றவர்களையும் கேட்கிறேன். வழக்கை புதன் கிழமை யன்று விசாரிக்கிருேம்" என்ருர்.

"அப்படியானல் வக்கீலுக்குத் தந்தி அனுப்பட்டுமா?"

"வக்கீலுக்கா? எதற்காக? நீங்கள் விரும்பினல் அனுப்புங்கள்.

"அப்பீலுக்குக் காரணம்போதாமல் இருக்கலாம், இருந்தாலும் ஒரு சிறு தவறினல் தண்டனை விதிக்கப்பட்டது என்பது தெரியும்."

"ஆமாம், ஆமாம், இருக்கலாம், வழக்கின் தாரதம்யத்தைக் கொண்டு செனேட் முடிவுசெய்ய முடியாது. சட்டம் சரியானபடி பிரயோகிக்கப்படுகிறது என்பதையும், அதன் வியாக்கியானத்தையும் தான் செனேட் கவனிக்கிறது."

"ஆனால் இது ஒரு அசாதாரணமான வழக்கு."

"ஆமாம்; ஆமாம்; எல்லாம் அசாதாரணமான வழக்கு தான். நாங்கள் கடமையைச் செய்கிறோம். அவ்வளவுதான்" என்று சொல்லிக்கொண்டே, சுருட்டின் நுனியில் சேர்ந்திருந்த சாம்பலை, சாம்பல் கிண்ணத்தில் தட்டினார். "நீங்கள் அடிக்கடி பீடர்ஸ்பர்க்குக்கு வருவதுண்டா?" என்று நிக்லியுடாவைக் கேட்டுவிட்டு, காமென்ஸ்கி விஷயத்தைப் பற்றியும், காதரீன் இவானோவ்னாவைப் பற்றியும் பேசத் தொடங்கினார்.

நிக்லியுடாவ் அவரிடம் விடைபெற்றுக்கொள்வதற்காக எழுந்து வணங்கினான்.

"சௌகர்யமானால் புதன்கிழமையன்று இங்கு சாப்பிட வந்துவிடுங்கள். அன்று இறுதியாக ஒரு பதில் அளித்துவிடுகிறேன்" என்று கூறி, நிக்லியுடாவுக்குக் கை கொடுத்தார் உல்ப்.

நிக்லியுடாவ் தன் சிற்றன்னை வீட்டுக்குச் சென்றபொழுது அதிக நேரம் ஆகிவிட்டது.

# 17

**கா**தரீன் இவானோவ்னா இரவு ஏழரை மணிக்கு சாப்பிட உட்காருவது வழக்கம். அவர்கள் வீட்டில் சாப்பாடு பரிமாறும் விதமும் நிக்லியுடாவுக்குப் புதிதாக இருந்தது. காமென்ஸ்கி மரணத்தைப் பற்றித்தான் இங்கும் பேச்சு, மாண்டவனின் தாயாரிடம் மன்னர் அனுதாபப்பட்டார். ஆனால் கொலைசெய்தவன் ராணுவத்தின் கௌரவத்தைக் காப்பாற்றியதால் அவனிடம் அவர் கடுமையாக நடந்துகொள்ள விரும்பவில்லை. ஆகையால் மற்றவர்களும் அவனைக் கொஞ்சம் தாராள மனப்பான்மையுடனேயே நோக்கினர். நிக்லியுடாவ் மாத்திரம் இந்த சம்பாஷணையில் கலந்துகொள்ளவில்லை. "குடிமயக்கத்தில் ஒரு குடியானவன் கொலை செய்துவிட்டால் கைகால் விலங்குடன், தலையை மொட்டை அடித்துக்கொண்டு சைபீரியாவில் கடுங்காவல் தண்டனை அனுபவிக்க வேண்டும். ஆனால் அதிகாரி கொலைசெய்தால் எல்லா வசதிகளுடனும் கூடிய அறையில் உட்கார்ந்து புத்தகங்கள் படித்துக் கொண்டிருக்கலாம்! நல்ல சாப்பாடும் நல்ல மதுவகைகளும் கிடைக்கும். இரண்டொரு நாளைக்குள் விடுதலையும் ஆகி விடுவான்" என்று சிந்தித்துக்கொண்டிருந்தான். முதலில் அவனுடைய சிற்றன்னை அவனுடைய

கருத்தை ஆதரித்துப் பேசுவதாகத் தோன்றியது. பிறகு அவளும் மௌனமாகிவிட்டாள்.

சாப்பாடு முடிந்தது. உபன்யாசம் நடக்கவிருந்த அறையில் பலர் வந்து கூடினர். ஆண்களும் பெண்களும் ஆடம்பரமான உடை அணிந்து வந்திருந்தனர்.

கிஸ்வெட்டர் ஆங்கிலத்தில் உபன்யாசம் செய்தார். இளம் பெண் ஒருத்தி அதை ரஷ்ய பாஷையில் மொழி பெயர்த்தாள். "நம்முடைய பாபம் மஹத்தானது. அதற்கு கிடைக்கக் கூடிய தண்டனை நினைக்கவும் பயங்கரமானது. அன்புக்குரிய சகோதர சகோதரிகளே! நாம் என்ன செய்கிறோம் என்பதை ஒரு கணநேரம் நினைத்துப் பாருங்கள். கருணைக் கடலாகிய கடவுளுக்கு எதிராக நாம் என்ன குற்றம் செய்துவிட்டோம் என்பதை எண்ணிப் பாருங்கள். கிறிஸ்து பிரானை நாம் எப்படித் துன்பத்தில் ஆழ்த்துகிறோம் என்பதை நினைத்துப் பாருங்கள். நாமெல்லாம் நாசமடைவது நிச்சயம் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்" என்றார். அவர் குரல் நடுங்கியது. கண்களில் நீர் பெருகியது. "ஓ! சகோதரர்களே! நாம் எப்படித் தப்புவது? அணைக்க முடியாத இந்தத் தீயிலிருந்து நாம் வெளியேறுவது எங்ஙனம்? வீடு தீப்பற்றி எரிகிறது. நாம் தப்பி ஓட வழியில்லை" என்றார். அதற்கு மேல் அவரால் பேசமுடியவில்லை. அவர் கன்னத்தில் கண்ணீர் தாரைதாரையாகப் பெருகியது. எட்டு வருஷங்களாக அவர் உபன்யாசம் செய்துவருகிறார். ஒவ்வொரு முறையும் இதேக் கட்டத்தை அடைந்தவுடன் அவருடைய தொண்டையில் என்னவோ செய்யும். மூக்கில் ஒருவித குறுகுறுப்பு உணர்ச்சி உண்டாகும். கண்கள் நீரைப் பொழியும். இந்தக் கண்ணீர் அவருக்கு இன்னும் அதிக துக்கத்தை உண்டாக்கும்.

அவரைக் கண்டு அந்த அறையில் இருந்த அனைவரும் சோகத்தில் ஆழ்ந்தனர். கிஸ்வெட்டர், நாடகத்தில் நடிப்பவரைப் போல் திடீரென்று முகத்தில் சிரிப்பை வரவழைத்துக் கொண்டு மீண்டும் இனிய குரலில் பேசத் தொடங்கினர்.

"இருந்தாலும் தப்ப ஒரு வழி இருக்கிறது. ஆனந்தமான —சுலபமான வழி. கர்த்தரின் புதல்வர் நமக்காகச் சிந்திய ரத்தத்தில் மோக்ஷம் இருக்கிறது. அவர் அனுபவித்த கஷ்டம் அவர் சிந்திய ரத்தம் நம்மைக் காக்கும்" என்றார். மறுபடியும் கண்களில் நீர் ததும்ப, "சகோதர சகோதரிகளே, உலகம் உய்யும் பொருட்டு தம்முடைய ஒரே மகனை—அவருடைய புனிதமான ரத்தத்தை—கொடுத்த கடவுளை வாழ்த்துவோம்" என்று கூறி முடித்தார்.

நிக்லியுட்ாவுக்கு இந்த உபன்யாசம் வெறுப்பைத்தான் அளித்தது. அவன் சப்தம் செய்யாமல் எழுந்து தன் அறைக்குப் போய்விட்டான்.

# 18

மறுநாள் காலை நிக்லியுடாவ் வெளியே புறப்பட விருந்த சமயத்தில் வேலைக்காரன் ஒரு கார்டைக் கொண்டு வந்து அவனிடம் கொடுத்தான். மாஸ்கோ வக்கீலிடமிருந்து கடிதம் வந்திருந்தது. அவரும் ஏதோ சொந்தக் காரியமாக பீட்டர்ஸ்பர்க் வந்திருந்தார். "காடுஷாவின் வழக்கு இந்த வாரத்தில் செனேட்டில் விசாரணைக்கு வருகிறதா?" என்று அவர் கேட்டிருந்தார். விசாரணைக்கு சீக்கிரம் வருமானால் அதற்கும் தாம் இருந்துவிட்டுப் போவதாக அவர் கூறியிருந்தார். அவர் மாஸ்கோவிலிருந்து புறப்பட்டு வந்த பின் நிக்லியுடாவின் தந்தி அங்கு போய்ச் சேர்ந்திருக்க வேண்டும். வழக்கு ஆலோசிக்கப் படும்பொழுது எந்தெந்த செனேட்டர்கள் பிரசன்னமாகி யிருப்பார்கள், விசாரணை தினம் இந்த விஷயங்களை வக்கீல் கேட்டுக்கொண்டு, ஒரு புன்சிரிப்புச் சிரித்தார். "மூன்று செனேட்டர்களும் மூன்றுவிதம். உல்ப் ஒரு உத்தியோகஸ்தர்; ஸ்கோவோரோட் னிகோவ் ஏட்டுச் சுரக்காய் நீதிபதி; பேதான் பிரத்தியக்ஷ நீதிபதி. இவரிடம் தான் கொஞ்சம் நம்பிக்கை வைக்கலாம். அப்பீல் கமிட்டி விஷயம் என்ன?" என்றார் வக்கீல்.

"வோரோ பெவ் பிரபுவை இன்று தான் போய்ப் பார்க்கப் போகிறேன். நேற்று அவரைப் பார்க்க முடியவில்லை" என்று பதிலளித்தான் நிக்லியுடாவ்.

"நாம் இருவரும் சேர்ந்து போவோம்" என்றார் வக்கீல்.

அவர்கள் புறப்படும் சமயத்தில் ஒரு கடிதம் வந்தது. மேரியட் எழுதியிருந்தாள். "உங்களுக்காக என் கொள்கையை விட்டு, நீங்கள் கூறிய பெண்ணைப் பற்றி என் கணவனுடன் பேசினேன். அந்தப் பெண் உடனே விடுதலையாவாள். கமாண்டருக்கு என் கணவர் கடிதம் எழுதியிருக்கிறார். ஆகையால், இனி வேலை ஒன்றும் வைத்துக் கொள்ளாமல் வாருங்கள். உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்" என்று அவள் எழுதியிருந்தாள்.

நிக்லியுடாவ் வக்கீலைப் பார்த்து, "வேடிக்கைதான்; ஏழு மாதமாக சிறையில் அடைக்கப்பட்டிருந்த ஒரு பெண் ஒருபாவமும் அறியாதவள் என்று வெளியாகிறது. இது பயங்கரமான

விஷயமில்லையா? அவளை விடுதலை செய்வதற்கு ஒரு வார்த்தை தான் தேவையாக இருந்தது'' என்றான்.

''எப்பொழுதுமே அப்படித்தான் நடக்கிறது. எப்படியிருந்தாலும் நீங்கள் எடுத்துக் கொண்ட முயற்சியில் வெற்றி கிடைத்துவிட்டதல்லவா!'' என்றார் வக்கில்.

''ஆமாம், ஆனால் இந்த வெற்றி எனக்கு வருத்தத்தைத் தான் அளிக்கிறது. அவளை ஏன் இவ்வளவு நாள் அடைத்து வைத்திருந்தார்கள்?''

''ஓ! இதை யெல்லாம் ஆழ்ந்து ஆராயாமல் இருப்பது நல்லது'' இன்று கூறி, நிக்லியுடாவை அழைத்துக் கொண்டு புறப்பட்டார் வக்கில். வக்கிலின் வண்டியிலேயே நிக்லியுடாவ் வோரோ பெவ் பிரபுவின் வீட்டுக்கு வந்து சேர்ந்தான். பிரபு வீட்டில்தான் இருந்தார். முன் அறையில் இரு ஸ்திரீகளோடு ஓர் இளம் உத்தியோகஸ்தன் இருந்தான், நிக்லியுடாவைக் கண்டவுடன் அவன் எழுந்துவந்து, ''உங்கள் பெயர் என்ன?'' என்று கேட்டான். நிக்லியுடாவ் தன் பெயரைச் சொன்னான். ''பிரபு உங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். இதோ வருகிறேன்'' என்று சொல்லிவிட்டு அவன் உள்ளே சென்றான். துக்க உடை அணிந்து, அழுதுகொண்டிருந்த ஒரு கிழவியை அவன் உள்ளிருந்து அழைத்துக் கொண்டு வந்து வெளியே விட்டான். பிறகு அவன் நிக்லியுடாவை நோக்கி, ''வாருங்கள்'' என்று அழைத்தான்.

நிக்லியுடாவ் உள்ளே சென்றான். நடுத்தர உயரமும் பருமனான தோற்றமும் உள்ள ஒருவர் உள்ளே இருந்தார். ஒரு பெரிய மேஜைக்கருகே அவர் உட்கார்ந்திருந்தார். நிக்லியுடாவைக் கண்டவுடன் நேசபாவத்துடன் புன்முறுவல் புரிந்தார்.

''உன்னைப் பார்க்க சந்தர்ப்பம் கிடைத்தது பற்றிச் சந்தோஷிக்கிறேன். உன் தாயாரும் நானும் பழைய ஸ்நேகிதர்கள். நீ சிறிய பையனாக இருந்தபோதும், பிறகு ராணுவ அதிகாரியாக இருந்தபோதும் உன்னைப் பார்த்திருக்கிறேன். இப்படி உட்கார். உனக்காக நான் என்ன செய்ய வேண்டும் சொல்?'' என்றார் வோரோ பெவ். தியோடோஸியா விஷயத்தை நிக்லியுடாவ் சொன்னான். அவர், ''சரி, சரி'' என்று தலையை ஆட்டிக் கேட்டுக் கொண்டிருந்தார். எல்லாவற்றையும் கேட்டுக் கொண்ட பின், ''உண்மையிலேயே வருந்தத்தக்க விஷயம்தான். நீ மனுவைக் கொடுத்துவிட்டாயா?'' என்றார்.

''மனுவைத் தயாராக வைத்திருக்கிறேன். முதலில் உங்களைப் பார்த்து விவரங்களைச் சொன்னபின் கொடுத்தால் அதைப் பிரத்தியேகமாக கவனிப்பார்கள் என்பதற்காக

அதை இன்னும் கொடுக்கவில்லை'' என்று நிக்லியுடாவ் பதிலளித்தான்.

''நல்ல காரியம் செய்தாய். இதை நானே நேரில் எடுத்துக் கொள்கிறேன்'' என்று கூறி, சந்தோஷம் ததும்பும் தம் முகத்தில் சோகக் களையை வருவித்துக் கொள்ள முயன்றார். ஆனால் பயனில்லை. ''மிகவும் துக்ககரமான விஷயம். அவள் சின்னப் பெண் என்று தெரிகிறது. அவளுடைய கணவன் அவளுக்குக் கொடுமை செய்தான். காலப் போக்கில் அவர்கள் மறுபடியும் காதலிக்கத் தொடங்கிவிட்டார்கள், எனக்குப் புரிந்து விட்டது. நான் இதை யெடுத்துச் செல்கிறேன்'' என்றார் பிரபு.

''ஐவான் மிஹெய்லிச் பிரபுவும் இதைப் பற்றிப் பேசுவதாகச் சொல்லி யிருக்கிறார்'' என்று நிக்லியுடாவ் கூறிய வுடன் வோரோபெவ்வின் முகம் மாறிவிட்டது. ''மனுவை நீ ஆபீஸிலேயே கொடுத்துவிடுவது நல்லது. என்னால் முடிந்ததைச் செய்கிறேன் '' என்றார்.

நிக்லியுடாவ் விடை பெற்றுக் கொண்டு, திரும்பவும் ஆபீஸுக்குச் சென்றான். செனேட் ஆபீஸைப் போலவே இங்கும் உத்யோகஸ்தர்கள் நாகரிக உடையணிந்து, மரியாதையுடன் நடந்து கொண்டார்கள். ''எவ்வளவு தின்று கொழுக்கிறார்கள்! உடை யெல்லாம் எவ்வளவு சுத்தமாக இருக்கின்றன. அவர்களுடைய பூட்ஸ்தான் எவ்வளவு பளபளப்பாக இருக்கின்றன. இதையெல்லாம் இவர்களுக்காக யார் செய்கிறார்கள்? கைதிகள் மாத்திரமில்லை. கிராமவாசிகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் இவர்களெல்லாம், எவ்வளவு சௌகர்யமாக வாழ்கிறார்கள்!'' இந்த எண்ணங்கள் மீண்டும் நிக்லியுடாவின் மனத்தில் எழுந்தன.

# 19

**பீ**ட்டர்ஸ்பர்க் கைதிகளின் விதி ஒரு ஜெர்மன் ராணுவ அதிகாரியின் கையில் இருந்தது. இவன் ஜெர்மன் வம்சத்தைச் சேர்ந்த ஒரு பிரபு. ஏராளமான ராணுவப் பரிசுகளைப் பெற்றிருந்தான். அவற்றுள் மிக உயர்ந்ததாக அவன் மதித்த வெண் சிலுவையை மாத்திரம்தான் அவன் அணிந்திருந்தான். அவன் ஒரு சமயம் காகஸஸ்ஸில் வேலை செய்து கொண்டிருந்தான். அப்பொழுது ஆயிரக் கணக்கானவர்களைக் கொல்லும்படி இவன் உத்திரவிட்டான். தங்கள் உரிமையையும் வீடு வாசல்களையும் பாதுகாத்துக் கொள்ள முயன்றதுதான் அவர்கள் செய்த குற்றம். ராணுவ உடை அணிந்து, துப்பாக்கி தாங்கி

யிருந்த ரஷ்யக் குடியானவர்களை அவனுடைய உத்திரவுப்படியே அவர்களைக் கொன்று குவித்தனர். இதற்காகத்தான் அவனுக்கு இந்தப் பதக்கம் கிடைத்தது. பிறகு போலந்தில் இருந்தான். அங்கும் ரஷ்யக் குடியானவர்கள் பல குற்றங்களைச் செய்யக் காரணமாக இருந்தான். இதற்காக இன்னும் பல மரியாதைகளும் பதக்கங்களும் கிடைத்தன. இன்னும் எங்கெல்லாமோ வேலை பார்த்தான். இப்பொழுது அவன் சக்தியை இழந்து கிழவனாகி விட்டபடியால் இந்த உத்தியோகத்தில் இருக்கிறான். இதனால் அவனுக்கு வருமானமும் அந்தஸ்த்தும் உயர்ந்திருக்கின்றன. மேலிடத்திலிருந்து வரும் உத்தரவுகளை இவன் மிகக்கடுமையாக அமல் நடத்தினான். அரசியல் கைதிகளை—அவர்கள் ஆண்களாயினும் சரி, பெண்களாயினும் சரி—அவர்களைத் தனிக் கொட்டடிகளில் அடைத்து வைப்பதுதான் இவன் வேலை. சிறையில் அடைபட்ட பத்து வருஷத்திற்குள் அவர்களில் பாதிப்பேராவது மடிந்தே போகும்படி அவன் பார்த்துக் கொள்ள வேண்டும். சிலர் க்ஷயரோகத்தினால் உயிர் விடுவார்கள்; சிலருக்குப் பைத்தியம் பிடித்து விடும். மற்றும் சிலர் பட்டினி கிடந்தோ, ரத்தக்குழாயை வெட்டிக் கொண்டோ, தூக்குப் போட்டுக் கொண்டோ தற்கொலை செய்து கொள்வார்கள்.

அந்தக் கிழ அதிகாரிக்கு இவை யெல்லாம் தெரியாமலில்லை. அவன் கண்ணெதிரில் தான் எல்லாம் நடந்தன. ஆனால் இடி, வெள்ளங்களினால் ஏற்படும் விபத்துக்களுக்கும் இந்த சம்பவங்களுக்கு மிடையில் எவ்வித வித்தியாசமும் இருப்பதாக அவனுக்குத் தோன்றவில்லை. மன்னரின் உத்தரவுகளை அமல் நடத்துவதன் பலன்தான் இவை யெல்லாம். ஆகையால் இவற்றைப்பற்றிக் கவலைப்படுவதில் பயனில்லை. இவற்றைப்பற்றி நினைப்பது, கடமையைச் செய்யத் தவறுவதற்கு ஒப்பாகுமென்று அவனுக்குத் தோன்றியது. ஒரு வாரத்திற்கு ஒரு முறை அவன் சிறையைச் சுற்றிப் பார்ப்பான். அது அவனுடைய கடமை. ஏதாவது குறை இருக்கிறதா வென்று கைதிகளைக் கேட்பான். அவர்கள் பலவிதமான குறைகளைச் சொல்லுவார்கள். எல்லாவற்றையும் மௌனமாகக் கேட்டுக் கொள்வான். அவை சிறைவிதிகளை மீறியவை என்பதால் ஒன்றையும் நிறைவேற்ற மாட்டான்.

நிக்லியுடாவ் அவனைப் பார்க்கச் சென்ற பொழுது இரண்டு மணி ஆகி விட்டது. நிக்லியுடாவ் உள்ளே பிரவேசித்தவுடன், "உங்கள் வருகைக்காக சந்தோஷிக்கிறேன்" என்று கூறி ஒரு நாற்காலியைக் காட்டி அதில் உட்காரச் சொன்னான் அதிகாரி. பிறகு, "நீங்கள் பீட்டர்ஸ் பர்க்கில் வெகு நாளாக இருக்கிறீர்களா?" என்று கேட்டான்.

"இல்லை; இப்பொழுது தான் வந்திருக்கிறேன்."

"உங்கள் தாயார் சௌக்கியமா?"

"என் தாயார் இறந்து விட்டாளே!"

"ஓ! மன்னிக்கவும் உங்களைச் சந்தித்திருப்பதாக என் பிள்ளை சொன்னான்."

இந்த ஜெனரல் செய்த வேலையையே தான் அவனுடைய பிள்ளையும் செய்து வருகிறான். அவன் ராணுவக் கலாசாலையில் தேறிய பின் விசாரணை ஆபீஸில் இருந்து வருகிறான். தன் வேலைகளைப்பற்றி அவனுக்கு அசாத்தியப்பெருமை. சர்க்கார் உளவாளிகளை நிர்வகிப்பது அவன் வேலை.

"உங்கள் அப்பாவும் நானும் ஒன்றாக வேலை செய்திருக்கிறோம். நாங்கள் நெருங்கிய நண்பர்கள். நீங்கள் ராணுவத்தில் தான் இருக்கிறீர்களா?"

"இல்லை"

இந்த பதிலை விரும்பாதவன் போல ஜெனரல் தன் தலையை குனிந்து கொண்டான்.

"உங்களிடம் ஒரு உதவி கோருவதற்காக வந்தேன்"! என்று தான் வந்த விஷயத்தைப் பற்றிப் பேசத் தொடங்கினான் நிக்லியுடாவ்.

"மிகவும் சந்தோஷம். என்ன விஷயம்?"

"தர்கெவிச் என்ற ஒருவன் கோட்டையில் கைதியாக இருக்கிறான். அவனுடைய தாய் அவனைச் சந்திக்க அனுமதி கொடுக்க வேண்டும். அல்லது அவன் படிப்பதற்காவது சில புத்தகங்களை அனுமதிக்க வேண்டும்."

இதைக் கேட்ட ஜெனரல் திருப்தியோ அதிருப்தியோ தெரிவிக்கவில்லை. அவன் கண்களை மூடிக்கொண்டு ஏதோ ஆலோசிப்பவன் போல் நடித்தான், உண்மையில் அவன் களைத்திருக் கொஞ்சம் ஓய்வு கொடுத்திருந்தானே தவிர ஒன்றைப் பற்றியும் யோசிக்கவில்லை. இப்படிச் சிறிது நேரம் சென்றபின, "இதோ பாருங்கள். இது என் அதிகாரத்தில் உள்ள விஷயமன்று. பேட்டிகள் சம்பந்தமாக மன்னர் பிறப்பித்துள்ள உத்தரவு ஒன்று இருக்கிறது. அதன்படி தான எல்லாம் நடக்கும். சிறையிலேயே, அங்கீகாரமான புத்தகங்கள் அடங்கிய புத்தகசாலை ஒன்று இருக்கிறது. அனுமதிக்கப்

பட்டுள்ள புத்தகங்களை எடுத்து அவர்கள் படிக்கலாம்'' என்றான் ஜெனரல்.

''அவனுக்கு விஞ்ஞானப் புத்தகங்கள் வேண்டுமாம். அவன் படிக்க விரும்புகிறான்.''

''அதெல்லாம் நம்பாதீர்கள்'' என்று சொல்லிவிட்டு ஜெனரல் சிறிதுநேரம் மௌனமாக இருந்தான். பிறகு, ''அவன் விரும்புவது படிப்பல்ல; பொறுமையில்லாமையால் தான் அப்படிச் சொல்கிறான்'' என்று உருமினான்.

''பின் என்ன செய்வது? அவர்களுக்கு எப்படியாவது பொழுதுபோக வேண்டுமே!'' என்றான் நிக்லியுடாவ்.

''புகார் செய்வதுதான் எப்பொழுதும் இவர்களுக்கு வேலை அவர்களை எங்களுக்கு நன்றாகத் தெரியும்'' என்று ஜெனரல் பதில் அளித்தான். ஒரு கொடிய ஜாதியினரைப் பற்றிப் பேசுவது போல் அவன் பொதுப் படையாகப் பேசினான். அவன் மீண்டும் தொடர்ந்து, ''மற்ற இடங்களில் இல்லாத வசதிகள் இங்கு இருக்கின்றன. முன்பு கஷ்டமாக இருந்தது என்பது உண்மைதான். ஆனால் இப்பொழுது கைதிகள் மிகவும் சௌகர்யமாக வைத்துக் கொள்ளப்படுகிறார்கள். மூன்று வகை சாப்பாடு போடுகிறோம். ஞாயிற்றுக்கிழமைகளில் தித்திப்பு பக்ஷணமும் கொடுக்கிறோம். ரஷ்யாவில் ஒவ்வொருவருக்கும் இவர்களுக்குக் கிடைக்கும் உணவு வசதிகள் கிடைக்க கடவுள் அருள் புரிய வேண்டும்'' என்றான். இதை நிருபிக்கப் பல உதாரணங்கள் கூறினான்.

''மதம் சம்பந்தமான புத்தகங்கள் கொடுக்கிறோம். பழைய பத்திரிகைகளைக் கொடுக்கிறோம். அவர்கள் படிப்பதேயில்லை. முதலில் படிப்பவர்கள் போல் தோன்றுகிறார்கள். பிறகு படிப்பதேயில்லை. வாங்கிக் கொடுக்கும் புத்தகங்கள் புதுக்கருக்கு அழியாமல் அப்படியே இருக்கின்றன. அவர்கள் எழுதுவதற்கும் தடையில்லை. பலகையும் பலப்பமும் கொடுத்திருக்கிறோம் அவற்றைக் கொண்டு எழுதலாம். முதலில் எழுதியவற்றை அழித்துவிட்டு மீண்டும் எழுதலாம். ஆனால் அவர்கள் எழுதுவதில்லை. முதலில் கொஞ்சநாள் வரை பொறுமையற்றுக் காணப்படுகிறார்கள். பிறகு அமைதியாகிக் கொழுத்துக்கூடப் போய்விடுகிறார்கள்'' என்று சொன்னான். அவன் கூறியவற்றின் பயங்கர அர்த்தத்தை அவனே உணரவில்லை.

அவனுக்கு பதில் அளிப்பதில் பயனில்லை என்று நிக்லியுடாவுக்குத் தோன்றியது. பிறகு ஷுஸ்டோவாவைப் பற்றி விசாரித்தான். அவளை விடுதலை செய்ய உத்தரவு பிறப்பிக்கப்

பட்டிருப்பதாக அன்று காலை அவனுக்கு மேரியட் எழுதியிருந்தாள்.

"ஷுஸ்டோவா—ஷுஸ்டோவா? இவர்கள் பெயரெல்லாம் எனக்கு ஞாபகம் இல்லை, இங்கு எவ்வளவோ பேர் இருக்கிறார்கள்" என்று கூறிவிட்டு, தன் காரியதரிசியை அழைக்கும்படி உத்தரவிட்டான். அவன் வரும் வரையில் வேறு விஷயங்களைப் பற்றி நிக்லியுடாவுடன் ஜெனரல் பேசிக்கொண்டிருந்தான். ராணுவத்தில் சேரும்படி நிக்லியுடாவைத் தூண்டினான். "மன்னருக்கு 'யோக்கியமான கனவான்கள்' தேவை. நாட்டிற்கும் தேவைதான். நான் கிழவனாகி விட்டேன். இருந்தாலும் என்னால் முடிந்த வேலையைச் செய்துகொண்டிருக்கிறேன்" என்று கூறி தன்னையும் யோக்கியர்களின் கோஷ்டியில் சேர்த்துக் கொண்டான்.

இதற்குள் காரியதரிசி வந்தான். ஷுஸ்டோவா சிறையில் தான் இருக்கிறாள் என்றும், அவள் சம்பந்தமாக ஒரு உத்தரவும் வரவில்லை என்றும் சொன்னான்.

"உத்தரவு வந்தால் உடனே விடுதலை செய்து விடுவோம். இவர்களையெல்லாம் வைத்திருக்க நாங்கள் விரும்பவில்லை. இவர்கள் வருகைக்கு நாங்கள் மதிப்பு வைப்பதில்லை" என்று சொல்லிவிட்டு ஜெனரல் சிரிக்க முயன்றான்,

நிக்லியுடாவ் எழுந்தான். அந்தக் கிழவன் மீது ஏற்பட்ட ஆத்திரத்தையும் அனுதாபத்தையும் மறைக்க முயன்றான். தன் நண்பன் மகனிடம் அதிகக் கண்டிப்பாக நடந்துகொள்ள கூடாதென்று தோன்றியது கிழவனுக்கு. அவன் போவதற்குள் சில புத்திமதிகள் சொல்லாமல் இருக்கக் கூடாதென்று நினைத்து, "என்னைத் தப்பர்த்தம் செய்து கொள்ளாதீர்கள். என்னுடைய அன்பினால் தான் இப்படிச் சொல்கிறேன். இந்தச் சிறையில் இருப்பவர்களைப் போன்றவர்களுடன் சகவாசம் வைத்துக் கொள்ளாதீர்கள். இவர்களில் நல்லவர்களே கிடையாது. இவர்கள் அத்தனை பேரும் அயோக்கியர்கள். இவர்களை எங்களுக்கு நன்றாகத் தெரியும்" என்றான். அவன் குரலில் சந்தேகமென்பதே கொஞ்சமும் இல்லை. உண்மையிலேயே அவன் சந்தேகப்படவில்லை! இது சந்தேகத்திற்கு இடமில்லாத விஷயம் என்பது அர்த்தமில்லை. அவன் சந்தேகப்பட்டால் தன்னை வீரனாக அவன் நினைத்துக் கொள்ள முடியாது. தான் மனச்சாட்சியை விற்கும் அயோக்கியனென்றுதான் தோன்றும்.

"சேவையில் ஈடுபடுங்கள். மன்னருக்கு யோக்கியர்களின் உதவிதேவை—நாட்டிற்கும் தேவைதான். உங்களைப் போல் நானும் மற்றவர்களும் வேலை செய்ய மறுத்துவிட்டால்?

ஒரு கம்பெனி டைரக்டர் ஏற்பாடு செய்திருந்த திருட்டுத் தனம் வெளியான விவரங்களை ஒரு பத்திரிகை பிரசுரித்து விட்டது. கம்பெனி டைரக்டர் உண்மையிலேயே அதிகாரத்தை துஷ்பிரயோகம் செய்தாரா என்பதும், அப்படியானால் அவ்விதம் செய்யாமல் தடுக்க வேண்டும் என்பதும் தான் முக்கிய பிரச்னையாகத் தோன்றியது. ஆனால் இங்கு கவனிககப்பட்ட விஷயம் வேறு. 'செய்தியைப் பிரசுரிக்க ஆசிரியருக்கு உரிமை உண்டா? அவர்மீது என்ன குற்றம் சாட்டுவது? பொய்ச் செய்தியைப் பிரசுரித்ததாகக் குற்றம் சாட்டுவதா அல்லது நிந்தனை செய்ததாகக் குற்றம் சாட்டுவதா? நிந்தனையில் எவ்வளவு பொய்ச் செய்தி இருக்கிறது? பொய்ச் செய்தியில் எவ்வளவு நிந்தனை அடங்கி யிருக்கிறது?' என்பவை போன்ற விஷயங்களைப் பற்றி ஆராய்ச்சி நடந்தது.

கிழ்க்கோர்ட் தீர்ப்பை ரத்து செய்துவிட வேண்டுமென்று உல்ப் கூறினார் என்பதும், அதை ஸெலெனின் எதிர்த்தான் என்பதும் மாத்திரம் நிக்லியுடாவுக்கு நன்ருக விளங்கியது.

வழக்கின் விவரங்களை உல்ப் ஒவ்வொன்ருக, ஆதாரத்துடன் எடுத்துக் கூறிக கொண்டு வந்த பொழுது ஸெலெனினுக்கு ஆத்திரம் மூண்டது. அவருடைய கருத்தை எதிர்த்து அனுவசியமான ஆத்திரத்துடன் பேசினன் ஸெலெனின். அதைக் கேட்ட உல்புக்குக் கோபம் வந்து விட்டதாகத் தோன்றியது. அவர் முகம் சிவந்து விட்டது. தம் ஆசனத்தில் ஒரு முறை அசைந்து உட்கார்ந்தார். பிறகு எழுந்து ஒரு முறை கம்பீரமான கோபப் பார்வை பார்த்துவிட்டு, மற்ற நீதிபதிகளையும்அழைத்துக் கொண்டு, விவாதம் நடத்தும் அறைக்குப் போய்விட்டார்.

"நீங்கள் எந்த வழக்கு சம்பந்தமாக வந்திருக்கிறீர்கள்?" என்று பானரினிடம் கேட்டான் குமாஸ்தா.

"காடுஷாவின் வழக்கு."

"அதையும் இன்றுதான் விசாரிக்கப் போகிருர்கள். ஆனல்—"

"ஆனல் என்ன?"

"விவாதம் ஒன்றையும் அவர்கள் கேட்கத் தயாராக இல்லை. இந்த வழக்கில் தீர்ப்புச் சொல்லிவிட்டு நீதிபதிகள் அனேகமாகக் கோர்ட்டுக்குத் திரும்பி வரமாட்டார்கள். இருந்தாலும் மற்ற வழக்கைப் பற்றியும் நான் அவர்களிடம் சொல்கிறேன்."

"நீ என்ன சொல்கிருய்?"

"அவர்களிடம் சொல்கிறேன். சொல்கிறேன்" என்று சொல்லிக் கொண்டே குமாஸ்தா ஏதோ எழுதிக் கொண்டான்.

நிந்தனை வழக்கையும், காடுஷாவின் வழக்கு உள்பட இதர விஷயங்களையும் விவாத அறைக்குள்ளேயே பைஸல் செய்து விடவேண்டுமென்று நீதிபதிகள் விரும்பினர்.

# 21

விவாதம் நடத்தும் அறையில் நீதிபதிகள் தங்கள் தங்கள் ஆஸனத்தில் அமர்ந்தனர். தண்டனையை ஏன் ரத்து செய்ய வேண்டும் என்பதற்காகக் காரணங்களை உல்ப் வரிசையாக எடுத்துக் கூறினர். பிரதம நீதிபதி வெகு காலமாக எதிர் பார்த்திருந்த ஒரு பெரிய பதவிக்கு வேறு ஒருவர் நியமிக்கப் பட்டு விட்டதால் அன்று அவருக்கு ஆத்திரம். உல்ப் சொன்னவை ஒன்றும் அவர்காதில் விழாவிட்டாலும், "ஆமாம்" என்று பதிலளித்தார். உல்ப் கூறியவற்றை வருத்தம் தோய்ந்த முகத்துடன் பே கவனித்துக்கொண்டிருந்தார். அப்பீல் செய்யும் கம்பெனி டைரக்டர் அயோக்கியன் என்பது ஒரு புறமிருக்க, இந்த அப்பீல் பத்திரிகைச் சுதந்திரத்தைப் பாதிக்கிறது என்பதால் அப்பீலைத் தள்ளிவிட வேண்டு மென்பது அவருடைய கருத்து. ரொட்டியை மென்று கொண்டிருந்த ஸ்கோவோ ரோட்னிகோவ் அசை போடுவதை நிறுத்திவிட்டு, "சட்ட ரீதியான ஆதாரம் இருந்தால் அப்பீலை அனுமதிக்கலாம். இல்லாததால் அதை நிராகரிக்கத்தான் வேண்டும்" என்றார்.

பிரதம நீதிபதியும் இந்த அபிப்பிராயத்தை ஏற்று அப்பீலைத்தள்ளி விட்டார்.

பிறகு நீதிபதிகள் டீ கொண்டு வரச் சொல்லி விட்டு, காமென்ஸ்கியின் கொலை போன்ற மற்றொரு வம்பைப்பற்றிப் பேசத் தொடங்கினர்.

இந்த சமயத்தில் குமாஸ்தா வந்து, "காடுஷாவின் வழக்கு பற்றி ஆலோசனை நடக்கும் பொழுது நிக்லியுடாவும், அவருடைய வக்கீலும் பிரசன்னமாக இருக்க விரும்புகின்றனர்" என்றான்.

"இது ஒரு வேடிக்கையான வழக்கு' என்று உல்ப் ஆரம்பித்தார். காடுஷாவுக்கும் நிக்லியுடாவுக்கு மிடையில் உள்ள உறவு பற்றித் தமக்குத் தெரிந்தவற்றைச் சொன்னார். இதைப் பற்றி நீதிபதிகள் சிறிது நேரம் பேசினர். பிறகு செனேட் ஹாலுக்கு வந்து நிந்தனை வழக்கில் தீர்ப்புக் கூறினர்.

பின்னர் காடுஷா வழக்கு விவரங்களை, உல்ப் தம் மெல்லிய குரலில் எடுத்துக் கூறினர். இதிலும் தண்டனையை ரத்து செய்துவிட வேண்டுமென்ற கருத்துப்படத்தான் அவர் பேசினர். பிறகு தலைவர் பானரினை நோக்கி, "இதற்கு மேல் நீங்கள் ஏதாவது சொல்ல விரும்புகிறீர்களா?" என்று கேட்டார்; பானரின் எழுந்து கம்பீரமாக நின்றார். கிரிமினல் கோர்ட் செய்த ஆறு தவறுகளை அவர் அக்கக்காக அலசிக் காட்டினர். சட்டத்தின் உண்மையான அர்த்தத்தையும் எடுத்துக் கூறினர். கடைசியில் நீதிபதிகளின் அறிவு ஆற்றல்களை உயர்த்திப் பேசினர்.

இனி காடுஷாவை விடுதலை செய்வதைத் தவிர வேறு வழியில்லை என்று தான் தோன்றியது. பானரின் தம் பிரசங்கத்தை முடித்தவுடன் அவர் முகத்தில் வெற்றிக்களை ஜொலித்தது. கோர்ட்டைச்சுற்றி ஒரு முறை பார்வையைச் செலுத்தினர். கேஸில் ஜெயம் நிச்சயமென்று நிக்லியுடாவுக்கும் தோன்றியது. ஆனல் நீதிபதிகளையும் மற்றவர்களையும் ஒரு முறை நோக்கினன். வக்கிலின் பிரசங்கத்தைப்பற்றி வேறு ஒருவரும் சந்தோஷப்பட்டதாகத் தோன்றவில்லை." "இந்தப் பிரசங்கத்தைப் போல நாங்கள் எவ்வளவோ கேட்டிருக்கிறோம்; எங்களை இது அனாவசியமாக நிறுத்தி வைத்திருந்தது தான் மிச்சம்" என்று நினைப்பவர்கள் போல அவர்கள் காணப்பட்டனர். பின்னர் தலைவர், சர்க்கார் வக்கிலை நோக்கினர். கீழ்க் கோர்ட் தண்டனையை மாற்றக் கூடாதென்று சுருக்கமாகவும் விளக்கமாகவும் கூறினன் ஸெலெனின். பிறகு நீதிபதிகள் ரகசியமாக ஆலோசிக்கச் சென்றனர்.

நீதிபதிகளுக்கிடையே மாறுபட்ட அபிப்பிராயம் ஏற்பட்டது. கீழ்க்கோர்ட் தண்டனையை ரத்து செய்ய வேண்டுமென்று உல்ப் அபிப்பிராயப் பட்டார். பேயும் அதை ஆதரித்தார். நிகிடின் எப்பொழுதுமே கடுமையில் மோகம் கொண்டவர். உல்பின் அபிப்பிராயத்தை அவர் எதிர்த்தார். எல்லாம் ஸ்கோவோ ரோட்னிகோவின் வோட்டைத்தான் பொறுத்திருந்தது. அப்பீலைத்தள்ளி விட வேண்டுமென்று தான் அவர் கூறினர். காடுஷாவை நிக்லியுடாவ் மணக்க விரும்பினன் என்பதே அவர் இப்படித் தீர்மானித்திற்குக் காரணம்.

ஸ்கோவோரோட்னிகோவ் உலகாயதவாதி. மதம், தர்மம் முதலிய பெயர்களைக் கேட்டாலே அவருக்கு எரிச்சல் வரும். அப்பீலுக்குப் போதிய காரணம் இல்லாததாலேயே இதை எதிர்ப்பதாக அவர் கூறினர். இந்த வழக்கைப்பற்றி வேறு ஒன்றையுமே அறியாதவர் போல் அவர் நடித்தார்.

ஆகையால் காடுஷாவின் தண்டனை மாறவில்லை.

# 22

"அக்கிரமம். பட்டவர்த்தனமாகத் தெரியும் ஒரு விஷயத்தில் முறைகளுக்கு மாத்திரமே முக்கியத்துவம் அளிக்கிறார்கள். அக்கிரமம்" என்றான் நிக்லியுடாவ்.

"கிரிமினல் கோர்ட்டில் வழக்கு பாழாகி விட்டது" என்று வக்கீல் பதில் அளித்தார்.

"ஸெலெனின் கூட அப்பீலைத் தள்ளச் சொன்னானே ! அக்கிரமம், அக்கிரமம் " என்று திரும்பத் திரும்பச் சொன்னான் நிக்லியுடாவ்.

" மன்னரிடம் அப்பீல் செய்வோம், நீங்கள் இங்கு இருக்கும் பொழுதே மனுவைச் சமர்ப்பித்துவிடலாம். நான் எழுதிக் கொடுக்கிறேன்." என்றார் வக்கீல்.

இந்த சமயத்தில் உல்ப் அங்குவந்து சேர்ந்தார். " நிக்லியுடாவ். அப்பீலுக்குப் போதிய ஆதாரமில்லாததால் ஒன்றும் செய்யமுடியவில்லை " என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

தன் பால்ய நண்பன் அங்கு இருக்கிறான் என்பதைக் கேள்விப்பட்ட ஸெலெனின் உடனே நிக்லியுடாவிடம் வந்தான். " உன்னைப் பார்ப்பேன் என்று நான் கனவு கூடக் காணவில்லை, நீ பீடர்ஸ்பர்க் வந்திருக்கிறாய் என்று எனக்குத் தெரியாது " என்றான்.

" நீ இங்கு பப்ளிக் பிராஸிக்யூடர் என்பது எனக்கும் தெரியாது."

" இல்லை, உதவி பப்ளிக்பிராஸிக்யூட்டர் " என்று திருத்தினான் ஸெலெனின். " ஆமாம், நீ ஸெனேட்டுக்கு எதற்காக வந்தாய் ?"

" இங்கு நியாயம் கிடைக்குமென்று நினைத்து வந்தேன். ஒரு குற்றமும் செய்யாமல் தண்டனை பெற்றுள்ள ஒரு பெண்ணைக் காப்பாற்றுவதற்காக வந்தேன். "

" எந்தப் பெண். "

" இப்பொழுது ஒரு வழக்கைப் டிஸ்மிஸ் செய்தீர்களே அந்தப் பெண் தான். "

" ஓ! காடுஷா கேஸா ? அதில் அப்பீலுக்கு ஆதாரமே, இல்லையே !"

"பெண்தான் நிரபராதியே தவிர அப்பீல் அன்று. தண்டனை அனுபவிப்பவள் பெண்தான்."

ஸெலெனின் பெருமூச்சுவிட்டு, "இருக்கலாம்; ஆனால்—" என்றான்.

"இருக்கலாம் என்ன? இருக்கத்தான் செய்கிறது. அது உனக்கு எப்படித் தெரியும்?"

"நான் ஜூரியாக இருந்தேன். தவறு எப்படி நேர்ந்தது என்பது எனக்குத் தெரியும்."

ஸெலெனின் சிந்தனையில் ஆழ்ந்தான். அவன் சிறிதுநேரம் யோசித்துவிட்டு, "நீ ஓர் அறிக்கை சமர்ப்பித்திருக்க வேண்டும்" என்றான்.

"சமர்ப்பித்தேன்,"

"அதை உத்தியோக பூர்வமான முறையில், சமர்ப்பித்திருக்க வேண்டும். அப்பீல் பெடிஷனோடு அதையும் சேர்த்துக் கொடுத்திருக்க வேண்டும்,"

"எப்படியிருந்தாலும் இப்பொழுது கூறியுள்ள தீர்ப்பு அபத்தம்தான்."

"அப்படிச் சொல்வதற்கு செனேட்டுக்கு உரிமை இல்லை. அப்படிச் செய்தால் ஜூரிகளின் தீர்ப்பு அர்த்தமற்றதாகப் போய்விடும்."

"இந்தப் பெண் நிரபராதி என்பது ஒன்றுதான் எனக்குத் தெரியும். அக்கிரமமான தண்டனையிலிருந்து அவளைக் காப்பாற்ற முடியும் என்ற கடைசி நம்பிக்கையும் போய்விட்டது. மிகக் கேவலமானதோர் அநியாயத்தை, மஹோன்னதமான கோர்ட்டே ஊர்ஜிதம் செய்துவிட்டது."

"அதை ஊர்ஜிதம் செய்யவில்லை. வழக்கின் தாரதம்யங்களில் செனேட் தலையிட முடியாது" என்றான் ஸெலெனின். இதைச் சொல்லிவிட்டு கண்களைக் கொட்டிக் கொட்டி விழித்தான். காடுஷாவுக்கும் நிக்லியுடாவுக்குமிடையில் இருந்த தொடர்பைப்பற்றி உண்மையிலேயே அவனுக்கு ஒன்றும் தெரியாது. அதை அவனிடம் சொல்லாமலிருப்பதே நல்லதென்று நிக்லியுடாவும் நினைத்தான்.

ஸெலெனின் பேச்சை மாற்றவிரும்பி, "உன் சிற்றன்னை வீட்டில்தான் தங்கியிருக்கிறாயா? நீ வந்திருப்பதாக அவள் சொன்னாள். வந்து உபன்யாசத்தையும் கேட்டுவிட்டு, உன்னை

யும் சந்தித்து விட்டுப்போகும்படி சொன்னாள்" என்றான். அவன் புன்முறுவல் புரிய முயன்றான். அவன் வாய்தான் சிரித்ததே தவிர, கண்களில் சந்தோஷத்தைக் காணவில்லை. பிறகு உபன்யாசத்தைப் பற்றிப் பேசினான். நிக்லியுடாவுக்கு இது பிடிக்கவில்லை. பேச்சை மாற்ற விரும்பினான். "சர்ச் உபதேசங்களில் உனக்கு நம்பிக்கை உண்டா" என்று கேட்டான்.

"நிச்சயமாக உண்டு" என்று சொல்லிவிட்டு ஸெலெனின் நிமிர்ந்து பார்த்தான். அவன் பார்வையில் ஜீவன் இல்லை.

நிக்லியுடாவ் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டு, "விசித்திரம் தான்" என்றான்.

"பிறகு பேசுவோம் வாயேன். தினமும் மாலை ஏழு மணிக்கு வீட்டில்தான் இருப்பேன். அதுதான் என்னுடைய சாப்பாட்டு நேரம்" என்று ஸெலெனின் அழைத்தான்,

"முடிந்தால் வருகிறேன்" என்று நிக்லியுடாவ் பதில் அளித்தான். ஒரு காலத்தில் தன்னுடைய உயிர்த்தோழனாக இருந்த ஸெலெனின, இந்தச் சிறு சம்பாஷணையின் மூலம் வெகு தூரத்திற்கப்பால் போய்விட்டதாக அவனுக்குத் தோன்றியது.

## 23

ஸெலெனின் மாணவனாக இருந்தபொழுது மிகவும் நல்ல பிள்ளையாக இருந்தான். பரம யோக்கியன. நன்றாகப் படித்துப் பரிசுகள வாங்கினான். பேச்சளவில் இல்லாமல் செய்கையிலும் மனித சமுகத்திற்குச் சேவை செய்வதையே தன வாழ்க்கையின் லக்ஷியமாகக் கொண்டான். எந்தத் துறையில் புகுந்தால் சமுகத்திற்கு அதிக சேவைசெய்ய முடியுமென்று ஆராய்ந்தான். சட்டங்களை வகுக்கும் இலாகாதான் இதற்குச் சரி என்று தோன்றியது. அந்த இலாகாவிலேயே புகுந்தான். தன் கடமைகளை ஒழுங்காகச் செய்து வந்த போதிலும அவனுக்குத் திருப்தி ஏற்படவில்லை. மேல் அதிகாரிகள மிகவும அற்பத்தனமாக நடந்து கொண்டதால் இந்த அதிருப்தி இன்னும் அதிகரித்தது. இதை விட்டு விட்டு செனேட்டில வேலைக்கு வந்தான. முன்னைக் காட்டிலும இங்கு சற்று சுமாராக இருந்த போதிலும் அதிருப்தி நீடிக்கவே செய்தது. தான எதிர்பார்த்தது நடக்கவில்லை என்றும, எப்படி இருக்கவேண்டுமோ அப்படி இல்லை என்றும் தோன்றியது. செனேட்டில் அவன வகித்த உத்தியோகம் அனாவசியமென்று கருதினான். இருந்தாலும தனக்கு உதவி செய்தவர்களுக்கு அதிருப்தி ஏற

படுத்த விரும்பவில்லை. தவிர இந்த உத்தியோகத்திற்காக ஏற்பட்ட பிரத்தியேகமான உடைகளை அணிந்து தன்னைக் கண்ணாடியில் பார்த்துக் கொள்ளும் பொழுது அவனுக்கே பெருமையாக இருக்கும். அவனுடைய அந்தஸ்துக்காகப பலர் அவனுக்கு மரியாதை செய்தனர்.

அவனுடைய விவாக விஷயத்திலும் இப்படித்தான நடந்தது. உலக ரீதியில் மிக உயர்ந்த இடம்தான் கிடைத்தது. இந்தப் பெண்ணை விவாகம் செய்துகொள்ள மறுத்தால், அவள் மாத்திரமின்றி, இந்த விவாகத்திற்கு ஏற்பாடு செய்தவர்களின் மனத்தையும் புண்படுத்த நேருமென்று தோன்றியது. உயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணை விவாகம் செய்து கொள்வது அவனுக்குப் பெருமையாகவும் இருந்தது. ஆகையால் அதை மறுக்கவில்லை. அவனுடைய உத்தியோகத்தைவிட இது மோசம் என்பது பிறகுதான் தெரிந்தது.

அவர்களுக்கு ஒரு குழந்தை பிறந்தது. பிறகு குழந்தை பெற்றுக்கொள்ளக் கூடாது என்று அவள் தீர்மானித்துவிட்டாள். அவள் நடத்திய ஆடம்பர வாழ்க்கையில் அவனையும் கட்டி இழுத்தாள். அவள் பெரிய அழகியன்று, ஆனால் கணவனிடம் உண்மையாக நடந்து கொண்டாள். தான் நடத்திய வாழ்க்கையில் அலுப்பைத் தவிர வேறு ஒன்றையும் அவள் அடைந்ததாகத் தெரியவில்லை. அதை மறைக்க அவள் எவ்வளவோ முயன்றும் பயனில்லை. கணவனின் வாழ்க்கைக்கும் இது விஷமாக இருந்தது. இருந்தாலும் அவள் அதை விடவில்லை. இந்த வாழ்க்கையை மாற்ற அவள் செய்த முயற்சிகளெல்லாம், கல்லின் மேல் இட்ட கலமாகச் சிதைந்துபோயின.

அவனுக்கு இஷ்டமில்லாத முறையில் அவனுடைய பெண் வளர்ந்து வந்தது. ஆகையால் அது அவனுக்கு அந்நியமாகவே தோன்றியது. கணவனுக்கும் மனைவிக்கு மிடையில் வழக்கமான அபிப்பிராய பேதங்கள் ஏற்பட்டன. மௌனமான ஒரு போராட்டமே நடந்து வந்தது எனலாம். குடும்ப வாழ்க்கை அவனுக்குப் பெரும்பாரமாக இருந்தது.

எல்லாவற்றிற்கும் மேலாக மதத்தில் அவன் காட்ட வேண்டியிருந்த மனோபாவந்தான் மோசமாகத் தோன்றியது. இளமையில், மதம் சம்பந்தமான மூட நம்பிக்கைகளை அவன் உதறிவிட்டான். ஆனால் பிற்காலத்தில் உத்தியோகத் தொந்தரவாலும் சமூக நிர்ப்பந்தத்தாலும் மதச் சடங்குகளில் கலந்து கொள்வது அவசியமாகி விட்டது. ஏதாவது ஒரு பிரார்த்தனையோ அல்லது இதரமதச் சடங்கோ இல்லாமல் அனேகமாக ஒரு நாள் கூடப்போகாது. பிரார்த்தனைகள் நடக்கும் பொழுது அவன் நம்பாத போலிச் சடங்குகளில் நம்பிக்கை

யிருப்பது போல் நடிக்க வேண்டும். இல்லையானால் இவற்றில் கலந்து கொள்ளாமல் இருக்க வேண்டும். இது தோன்றுவது போல் அவ்வளவு சுலபமாக இல்லை. அவனுக்கு வேண்டிய வர்களெல்லாம் விரோதமாகி விடுவார்கள். பதவியை விட வேண்டி யிருக்கும். இதன் மூலம் அவன் பொது மக்களுக்குச் செய்து வந்ததாக நினைத்த சேவையைத் தியாகம் செய்ய வேண்டி வரும். இந்தத் தியாகங்களைச் செய்ய வேண்டுமானால் தான் செய்வது சரியே என்ற திட நம்பிக்கை அவசியம். படித்த இளைஞன் ஒருவனுக்கும் இந்த நம்பிக்கை இல்லாமலிராது. மதங்கள், விசேஷமாக கிறிஸ்தவ மதம், தோன்றிய விதத்தைக் கொஞ்சம் சரித்திரம் படித்த யாரும் அறியாமல் இருக்க முடியாது. சர்ச்சின் உபதேசத்தை ஏற்காமலிருப்பது சரியே என்று அவனுக்கு நன்ருகத் தெரியும்.

தினசரி வாழ்க்கையின் நிர்ப்பந்தத்தில் ஒரு சிறு தவறை அவன் அனுமதித்தான். "ஓர் அக்கிரமத்தைத் திருத்தி நியாயம் வழங்க வேண்டுமானால் அந்த அக்கிரமத்தைப் பயில்வது அவசியம்'' என்று கருதினன். இந்தச் சிறிய தவறு அவனைக்கொண்டுபோய் ஒரு பெரிய தவறில் ஆழ்த்தி விட்டது.

இந்தச் சடங்குகளை நியாயமென்று நிரூபிக்கும் புத்தகங்களைப் படித்து ஓரளவு மன நிம்மதி பெற்றுன். "ஒரு தனி நபருக்கு உண்மை விளங்கி விடாது; ஒரு கும்பலுக்குத்தான் விளங்கும்'' என்பதற்கான போலி வாதங்களை யெல்லாம் மேற்கொண்டான். அமைதியுடன் பிரார்த்தனைகளில் கலந்துகொண்டான். இருந்தாலும் இது சரியல்ல என்ற எண்ணம் அவன் ஹிருதயத்தின் ஆழத்தில் இருந்து கொண்டுதான் இருந்தது. இதனால்தான் அவன் கண்களில் எப்பொழுதும் சோகம் சொட்டியது. நிக்லியுடாவைப் பார்த்தவுடன் தன்னுடைய பழைய நிலைமை அவனுக்கு ஞாபகம் வந்தது. தான் நடப்பது சரியல்ல என்ற உணர்ச்சி முன்னைக் காட்டிலும் அதிகமாக ஏற்பட்டது. அதோடு அவனுடைய வேதனையும் அதிகரித்தது.

பழைய நண்பனைச் சந்தித்ததால் நிக்லியுடாவுக்கு ஏற்பட்ட சந்தோஷம் சீக்கிரம் மறைந்து விட்டது. அவனுக்கும் மனத்தில் இதே போன்ற வருத்தம் ஏற்பட்டது.

அவர்கள் மறுபடியும் சந்திப்பதாகச் சொல்லிக் கொண்டாலும், சந்திப்புக்கான ஏற்பாடு ஒன்றையும் செய்யவில்லை. நிக்லியுடாவ் பீடர்ஸ்பர்க்கில் இருந்தவரை அவர்கள் சந்திக்கவே யில்லை.

## 24

கோர்ட்டிலிருந்து புறப்பட்ட கிக்லியுடானும் வக்கீலும் நடந்தே சென்றனர். வக்கீல் வண்டியைப் பின்னால் கொண்டு வரச் சொல்லி விட்டு கிக்லியுடானுடன் பேசிக்கொண்டே வந்தார். பெரிய சர்க்கார் உத்தியோகஸ்தர் ஒருவர் செய்த ஆபாசமான குற்றத்தைப் பற்றிச் சொன்னார். கார்பெண்டரி கொலைக்கு அடுத்தபடி இதைப்பற்றித்தான் பிட்ஸ்பர்க் எங்கும் பரபரப்பு. நீதிபதிகள் கூடத் தனியாக விசாரணை நடத்திக் கொண்டிருந்த பொழுது இதைப்பற்றித் தான் பேசினர். அக்குற்றம் எப்படி வெளியாயிற்று என்பதை வக்கீல் விவரித்தார். அந்தக் குற்றம் செய்தவனைச் சட்டப்படி காராக்கிருகத்திற்கு அனுப்ப வேண்டும். ஆனால் இந்த அதிகாரியையே பிலிப்பைனில் ஒரு தீவுக்குக் கவர்னராக நியமித்து விட்டார்களாம். இந்த சம்பவத்தின் ஆபாசங்களை யெல்லாம் சொல்லி முடித்தார். அடுத்தபடியாக, ஒரு ஞாபகச் சின்னம் கட்டுவதற்காக வசூலான ஏராளமான பணத்தைப் பெரிய மனிதர்கள் சாப்பிட்டு விட்ட விவரத்தை உற்சாகத்துடன் கூறினார். பங்கு மார்க்கெட்டில் ஒரு அதிர்ஷ்டக் கணக்கில் பணம் சம்பாதித்தது, ஒருவன் தன் மனைவியை மற்றொருவனுக்கு விற்க ஒப்புக்கொண்டது இவைபோன்ற பல விஷயங்களைப்பற்றி வக்கீல் பேசினார். அதிகாரிகள் குற்றம் செய்து விட்டு, உன்னத ஸ்தானங்களுக்கு வந்து விடுவதைப்பற்றிச் சொன்னார். அவருக்குத் தெரிந்திருந்த இத்தகைய சம்பவங்களுக்கு எல்லையில்லை போல் தோன்றியது. தாம் பணம் சம்பாதித்த முறை நியாயமானதே என்பதை எடுத்துக் காட்டுவதற்காகத்தான் இவற்றை யெல்லாம் சொன்னார். அவர் கடைசியாக ஒரு பெரிய மோசடியைப் பற்றி விவரிக்கத் தொடங்கினார். அதை முடிக்கு முன் கிக்லியுடான் ஒரு வண்டியை அமர்த்திக் கொண்டு புறப்பட்டு விட்டான்.

அப்பீல் தோற்றதால் அவன் மனம் வருத்தத்தில் ஆழ்ந்திருந்தது. அவனுடைய விதியோடு தன்னைப் பிணைத்துக் கொள்ள வேண்டுமென்ற அவனுடைய விருப்பம் ஈடேறுவது இனிக் கஷ்டமாகி விட்டது. வக்கீல் விவரித்துக் கொண்டு வந்த அக்கிரமங்கள் அவனுடைய சோகத்தை அதிகப்படுத்தின. ஹெலெனின் பார்த்த அன்பற்ற பார்வை அவன் மனக்கண் முன் அடிக்கடி தோன்றியது. இதனால் அவனுடைய வருத்தம் இன்னும் அதிகரித்தது.

அவன் வீட்டுக்குத் திரும்பியவுடன் காவற்காரன் அவனிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தான். யாரோ ஒரு ஸ்திரீ வந்து அதை எழுதிக் கொடுத்து விட்டுப் போனதாகச் சொன்

இப்படி நடிக்கவில்லை. உண்மையிலேயே அவன் மனோபாவத்தைப் பிரதிபலித்தாள்.

அவனுடைய வேலைகள் எப்படியிருக்கின்றன என்பதை விசாரித்தாள். அப்பீல் தோற்றதைப்பற்றிச் சொன்னான். பிறகு பேச்சை மாற்றவிரும்பி, ஷுஸ்டோவா விடுதலையானதற்காக நன்றி செலுத்தினான்.

"அவளை விடுதலைசெய்துவிட முடியும் என்று என் கணவர் சொன்னார். அவள் நிரபராதி யென்றால் அவளை ஏன் சிறையில் அடைத்தார்கள்? என்ற எண்ணம் தான் எனக்கு உடனே தோன்றியது. அக்கிரமம்—அக்கிரமம்" என்றாள் மேரியட். நிக்லியுடாவ் சொல்லவிரும்பியவற்றை யெல்லாம் அவள் சொன்னாள். நிக்லியுடாவை அவள் 'காக்காய் பிடிப்பது' காதரின் இவானோவ்னாவுக்கு வேடிக்கையாக இருந்தது.

பிறகு கிஸ்வெட்ட்ரின் உபன்யாசத்திற்கும் சம்பாஷணை தாவியது. பீடர்ஸ்பர்க்குக்கு வந்திருந்த ஒரு பிரெஞ்சு நடிகையைப்பற்றிப் பிறகு பேசினார்கள். அந்த சமயத்தில் காதரீனைப் பார்க்க யாரோ வந்திருப்பதாக வேலைக்காரன் வந்து சொன்னான். ஒரு தர்ம ஸ்தாபனத்தின் காரியதரிசி வந்திருந்தான். காதரீன்தான் அதன் தலைவி.

"இவன் சுத்த மண்டு. நானே போய் அவனைப்பார்த்துவிட்டு வந்துவிடுகிறேன். மேரியட் நிக்லியுடாவுக்குக் கொஞ்சம் டீ ஊற்றிக்கொடு' என்று சொல்லிவிட்டு காதரீன் எழுந்து போனாள்.

"கொஞ்சம் குடியுங்கள்" என்று சொல்லி, கெட்டிலில் இருந்த டீயை கோப்பையில் ஊற்றினாள் மேரியட். அவள் முகத்தில் சோகக்களை படர்ந்திருந்தது.

"என் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களின் கருத்து என்னைக் குழப்பும்பொழுது மிகுந்த வருத்தமாக இருக்கிறது" என்றாள் மேரியட். இதைச் சொல்லிவிட்டு அவள் அழுதுவிடுவாள்போல் தோன்றியது. உண்மையில் இந்த வார்த்தைகளில் ஒரு அர்த்தமும் இல்லை. ஆனால் இதோடு அவளுடைய அழகிய கண்களின் பார்வையும் சேர்ந்துகொண்டது. ஆகையால் இந்தப் பேச்சில் ஆழ்ந்த கருத்து இருப்பதுபோல் நிக்லியுடாவுக்குத் தோன்றியது.

நிக்லியுடாவ் மௌனமாக அவளைப் பார்த்தான். அவள் முகத்தில் பதிந்த தன் பார்வையை அப்பால் அகற்ற முடியவில்லை.

"நான் உங்களைப் புரிந்து கொள்ளவில்லை என்று நினைக்கிறீர்கள். ஆனால் உங்கள் மனத்தில் நிகழ்வது எனக்குத் தெரியும். நீங்கள் செய்யும் காரியங்கள் பகிரங்க ரகசியம். உங்கள் நடவடிக்கைகளைக் கண்டு நான் சந்தோஷிக்கிறேன்" என்றாள் மேரியட் மறுபடியும்.

"சந்தோஷப் படும்படி ஒன்றுமில்லையே! இதுவரை நான் செய்திருப்பதெல்லாம் ரொம்பக் கொஞ்சம் தானே?"

"பாதகமில்லை, உங்கள் கருத்து எனக்குத் தெரியும். அவளைப் பற்றியும் தெரியும்" என்றாள். இந்த சமயத்தில் நிக்லியுடாவின் முகத்தில் ஏற்பட்ட மாறுதலைக் கண்டு விட்டாள். மறுபடியும் அவன் கவனத்தைக் கவர்வதற்காக பேச்சை மாற்றினாள். "கஷ்டப்படுகிறவர்களுக்கு உதவி செய்ய விரும்புகிறீர்கள். மற்றவர்களின் அலஷிய புத்தியினால் துயரத்தில் ஆழ்ந்திருப்பவர்களுக்கு சேவை செய்ய வேண்டுமென்கிறீர்கள். இத்தகைய லக்ஷியத்திற்கு உயிரையும் கொடுக்க வேண்டுமென்று தோன்றும். எனக்கும் இப்படிப்பட்ட ஆசை உண்டு. ஆனால் நம் விதி வேறு இருக்கிறதே!"

"ஏன்? உங்கள் விதியில் உங்களுக்குத் திருப்தியில்லையா?"

"எனக்கா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டாள் மேரியட்.

"திருப்தியடையத்தான் வேண்டியிருக்கிறது. திருப்தியடையவும் செய்கிறேன். ஆனால் மனச்சாட்சி விழித்துக் கொள்கிறது—"

"அது தூங்கிப் போகும்படி விடக்கூடாது. அதன் கட்டளைக்குப் பணிய வேண்டும்" என்றான் நிக்லியுடாவ். அவள் வீசிய வலையில் அப்போதைக்கு அவன் விழுந்து விட்டான்.

பின்னர் அவளுடன் தான் பேசியவற்றை நினைக்க நினைக்க அவனுக்கு வெட்கமாக இருந்தது. அவள் பொய் பேசவில்லை. என்றாலும் அவனைப் போலவே நடித்தாள்.

காதரீன் இவானோவ்னா திரும்பி வந்த பொழுது, நெடு நாளாய்ப் பழகிய நண்பர்களைப்போல் அவர்கள் பேசிக் கொண்டிருந்தனர். அதிகார வர்க்கத்தின் அக்கிரமத்தைப் பற்றிப் பேசினார்கள். ஏழைகளின் துயரத்தைப் பற்றிப் பேசினர். ஆனால் இடையிடையே அவர்களுடைய கண்கள் மாத்திரம், "நீ என்னைக் காதலிக்க முடியுமா?" என்று கேட்பதும், "முடியும்" என்று பதிலளிப்பதுமாக இருந்தன. காம உணர்ச்சி விசித்திரமான முறையில் அவர்களை ஒன்று பிணைத்தது.

மேரியட் புறப்பட்டாள். அப்பொழுது, "எப்பொழுதும் உங்களுக்கு உதவி செய்யக் காத்திருக்கிறேன். என்னால் முடிந்ததையெல்லாம் செய்கிறேன். நாளை நாடகக் கொட்டகைக்கு வாருங்கள். உங்களிடம் ஒரு முக்கியமான விஷயம் சொல்ல வேண்டும்" என்றாள்.

கடைசியில், "உங்களை மறுபடியும் எப்பொழுது பார்க்கப் போகிறேனோ? யாருக்குத் தெரியும்?" என்று சொல்லிவிட்டு மேரியட் ஒரு பெரு மூச்சு விட்டாள். "நாளை கட்டாயம் நாடகக் கொட்டகைக்கு வருகிறீர்களா!" என்று மறுபடியும் கேட்டாள்.

வருவதாக நிக்லிடாவ் வாக்களித்தான்.

அன்று இரவு நிக்லியுடாவ் படுக்கைக்குச் சென்றபொழுது சீக்கிரம் தூக்கம் வரவில்லை. காடுஷாவின் விதியை நினைத்துக் கொண்டான். செனேட்டின் தீர்ப்பு ஞாபகத்திற்கு வந்தது. என்ன ஆனாலும் அவளுடனேயே செல்ல வேண்டுமென்று தீர்மானம் நினைவுக்கு வந்தது. நிலங்களைத் துறந்ததை நினைத்துப் பார்த்தான்—திடீரென்று மேரியட்டின் முகம் அவன் மனக் கண்முன் தோன்றியது. உங்களை மறுபடியும் எப்பொழுது பார்க்கப் போகிறேனோ என்று கூறி அவள் விட்ட பெருமூச்சும், பார்த்த பார்வையும் தத்ரூபமாக அவன் முன் தோன்றின. அவள் நேரிலேயே வந்து சிரிப்பது போல் இருந்தது. அவன் பதிலுக்குச் சிரிக்கக் கூடச் செய்து விட்டான். "நான் சைபீரியாவுக்குப் போவது சரியா? நிலங்களை விட்டது சரிதானா!" என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான். நிச்சயமான பதில் கிடைக்கவில்லை. எல்லாம் குழப்பமாக இருந்தது. தன்னுடைய பழைய மனோ நிலைமையை ஞாபகப்படுத்திக் கொண்டான். பழைய சிந்தனைகளை வருவித்துக் கொண்டான். ஆனால் அவற்றிற்கு முன் இருந்த வேகம் இல்லை. ஆழ்ந்த தூக்கம் அவனை ஆட்கொண்டது.

## 25

மறுநாள் காலை நிக்லியுடாவ் எழுந்தான். முதல்நாள் தான் ஏதோ குற்றம் செய்துவிட்டது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. "என்ன செய்தோம்?" என்று நினைத்துப் பார்த்தான். உண்மையில் ஒன்றும் செய்யவில்லை. ஆனால் கெட்ட எண்ணங்களுக்கு மனதில் இடமளித்தான். "காடுஷாவை மணப்பது, நிலங்களைத் துறப்பது எல்லாம் நிறைவேற முடியாத கனவுகள்" என்று நினைத்தான். கெட்ட செய்கைகளுக்குப் பிராயச்சித்தம் உண்டு. ஆனால் அவற்றின் பிறப்

பிடமாகிய கெட்ட எண்ணங்களுக்குப் பிராயச்சித்தமே இல்லை. கட்டுக்கடங்காத முறையில் இவை மனிதனைக் கெட்டவழியில் இழுத்துச் செல்கின்றது. ஆனால் கெட்ட செய்கைகள், மேலும் கெட்ட காரியம் செய்வதற்கு வழிதான் கோலுகின்றன; அவ்வளவுதான்.

முதல்நாள் அத்தகைய எண்ணங்கள் எழுந்தன என்பதை நினைக்கவே அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. தன் தீர்மானப்படி செய்வதைத் தவிர வேறு வழியில்லை என்று அவனுக்குத் தோன்றியது. பழைய வாழ்க்கைக்குத் திரும்புவதை அவன் மரணத்திற்குச் சமமாகக் கருதினன். காலையில் படுக்கையைவிட்டு எழுந்திருக்கிறோம். இன்னும் சிறிதுநேரம் படுக்கையிலேயே படுத்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. அந்த விருப்பத்தைப் போன்றவைதான் இந்த எண்ணங்களும்.

"அவன் பீடர்ஸ்பாக்கில் தங்கியிருந்தது இன்றுதான் கடைசிநாள். அன்று காலை ஷுஸ்டோவாவைப் பார்க்கச் சென்றான். அவன் போனபோது ஷுஸ்டோவாவின் தாயார் சமைத்துக் கொண்டிருந்தாள். அவனைப் பார்த்தவுடன்,— "யார்?" என்று கடுமையான குரலில் கேட்டாள். அவன் பதில் அளிப்பதற்குள் அவளுக்குத் தெரிந்துவிட்டது. "நிக்லியுடாவ் பிரபுவா? வாருங்கள். என் பெண்ணை அவர்கள் கொன்றே விட்டார்கள்" என்றாள், "இங்கு என் தங்கை இருக்கிறாள். இந்த அரசியல் விவகாரங்களிலெல்லாம் அவள் கொஞ்சம் சம்பந்தப்பட்டிருந்தாள். ரொம்பவும் கெட்டிக்காரி" என்று அவள் ரகசியமாகக் கூறினாள். பிறகு ஷுஸ்டோவா இருந்த அறைக்கு அவனை அழைத்துக்கொண்டு போனாள். தாயின் ஜாடையாகவே இருந்தாள் ஷுஸ்டோவாவும். ஒரு இளைஞனோடு அவள் ஏதோ ஸ்வாரஸ்யமாகப் பேசிக்கொண்டிருந்தாள். "லிடியா, நிக்லியுடாவ் பிரபு வந்திருக்கிறார். நீ விடுதலையாக ஏற்பாடு செய்தவர்" என்று தாய் அறிவித்தாள்.

"டுக்கோவா சொன்ன 'அபாயகரமான' பெண் நீதானா?" என்று சிரித்துக்கொண்டே கேட்டான் நிக்லியுடாவ்.

"ஆமாம். நான்தான் லிடியா ஷுஸ்டோவா" என்று அவளும் சிரித்துக்கொண்டே பதில் அளித்தாள். அவளுடைய அழகிய பல்வரிசை லேசாக வெளியில் தெரிந்தது. "என் சித்திதான் உங்களைப் பார்க்க ஆவலாக இருந்தாள்" என்று சொல்லி, "சித்தி" என்று இனிய குரலில் அழைத்தாள்.

"வெராடுகோவா உன்னைப்பற்றி ரொம்பவும் கவலைப்பட்டாள்" என்றான் நிக்லியுடாவ்.

இளைஞன் அப்பொழுதுதான் சுவிசேஷத்தை விட்டு எழுந்தான். "இப்படி உட்காருங்கள்—இல்லையானல் அப்படி உட்காருங்களேன்" என்று, இளைஞன் காலிசெய்த சுவிசேஷரைக் காட்டினுள் ஷுஸ்டோவா. நிக்லியுடாவ் இளைஞனைப் பார்த்தான். அதைக் கவனித்த ஷுஸ்டோவா, "அவன் என்னுடைய ஒன்றுவிட்ட அண்ணன்" என்றுள். இளைஞன் நிக்லியுடாவை நோக்கிப் புன்முறுவல் புரிந்தான். பிறகு அவன் போய் ஒரு நாற்காலியை எடுத்துவந்தான் அதை நிக்லியுடாவின் பக்கத்தில் போட்டுக்கொண்டு உட்கார்ந்தான். பள்ளிக்கூடச் சிறுவன் ஒருவனும் வந்து ஜன்னலில் உட்கார்ந்து கொண்டான்.

"டுக்கோவாவுடன் என் சித்திக்கு அதிக ஸ்நேகம். எனக்கு அவளோடு அவ்வளவாகப் பரிச்சயமில்லை" என்றுள் ஷுஸ்டோவா.

அடுத்த அறையிலிருந்து ஒரு ஸ்திரீ வந்து நிக்லியுடாவின் பக்கத்தில் இருந்த சோபாவில் உட்கார்ந்தாள். "சௌக்கியமா? இவ்வளவு தூரம் வந்ததற்காக நன்றி. டுக்கோவாவைப் பார்த்தீர்களா? எப்படி இருக்கிறுள்? சிறைவாசத்தை எப்படி அனுபவிக்கின்றுள்?"

"ஒரு புகாரும் சொல்லவில்லை உற்சாகமாக இருப்பதாகவே சொன்னுள்"

"அதுதான் டுக்கோவாவின் குணம். எனக்கு அவளை நன்றாகத் தெரியும். அவளுக்கு சுயநலமே கிடையாது. பிறருக்கு உதவி செய்வதிலேயே தான் ஞாபகம்." என்று கூறி அவள் தலையை அசைத்துக்கொண்டாள்.

"ஆமாம். தனக்காக அவள் ஒன்றும் கேட்கவில்லை. ஷுஸ்டோவாவைப் பற்றித்தான் அவள் அதிகம் கவலைப்பட்டதாகத் தோன்றியது. இவள் காரணமின்றி சிறையில் அடைக்கப்பட்டிருந்தாளாம்."

"உண்மைதான். அது ஒரு பயங்கரமான சம்பவம். என்னல் அவள் கஷ்டப்பட்டாள்."

"இல்லவே இல்லை சித்தி நீ இல்லாமல் நானே அந்தக் காகிதங்களை எடுத்துக் கொண்டிருக்க வேண்டும்" என்று இடைமறித்தாள் ஷுஸ்டோவா.

அவளுடைய சித்தி அவளைத் தடுத்து விட்டுப் பேசினுள்: "ஒருவன் சிலகாகிதங்களைக் கொடுத்தான். அவற்றைச் சிறிது

காலம் பத்திரமாக வைத்திருக்கும்படி சொன்னான். எனக்கு விடு இல்லை. ஆகையால் இங்கு கொண்டு வந்து வைத்தேன் அன்று இரவே போலீசார் வந்து வீட்டைச் சோதனையிட்டனர். அந்தக் காகிதங்களைக் கைப்பற்றி, இவளையும் கைது செய்தனர். 'அந்தக் காகிதங்களை யார் கொடுத்தார்கள்?' என்று இவளைக் கேட்டனர். அதற்காகத்தான் இவ்வளவு காலம் இவளைச் சிறையில் அடைத்து வைத்திருந்தனர்.''

''யார் கொடுத்தார்கள் என்பதை நான் சொல்லவில்லை''

''நான் அப்படிச் சொல்ல வில்லையே?''

''அவர்கள் மிடினைக் கைது செய்தார்களென்றால் அது என்னால் அல்ல'' என்றாள் ஷுஸ்டோவா. அவள் முகம் சிவந்துவிட்டது. பயத்துடன் ஒரு முறை அறையைச் சுற்றிப் பார்த்தாள்.

''அதைப் பற்றிப் பேசாதே லிடியா'' என்றாள் அவளுடைய தாய்.

''ஏன் கூடாது? நான் சொல்லத்தான் போகிறேன்'' என்றாள் லிடியா ஷுஸ்டோவா. அவள் முகத்தில் புன்சிரிப்பு மறைந்துவிட்டது, தன் நீண்ட தலை மயிரை விரலில் சுற்றிக் கொண்டே பேசினாள்.

''நேற்று இதைப் பற்றிப் பேசும்பொழுது என்ன நடந்தது? அதை மறந்துவிடாதே'' என்றாள் தாய்.

''இல்லை நீ பேசாமல் இரு அம்மா...நான் சொல்லவே யில்லை. அவன் என்னை விசாரித்த பொழுது பதிலே சொல்ல வில்லை. சித்தியைப் பற்றியும் மிடினைப் பற்றியும் கேட்டான். நான் பதில் சொல்ல மறுத்துவிட்டேன்.''

''பிறகு இந்த...பெட்ரோவ்—''

''பெட்ரோவ் ஒரு உளவாளி. அயோக்கியன்'' என்று சித்தி விளக்கிக் கூறினாள்.

ஷுஸ்ட்டோவா மறுபடியும் ஆத்திரத்துடன் பேசத் தொடங்கினாள். ''அவன் என்னைத் திரும்பத் திரும்பக் கேட்டான். 'யார் கொடுத்ததென்று என்னிடம் சொல். ஒருவருக்கும் ஒரு தீங்கும் வராது. உண்மையைச் சொன்னால் அநியாயமாகச் சிறையில் அடைபட்டுக் கிடப்பவர்களை விடுதலை செய்துவிட சௌகரியமாக இருக்கும்' என்றான். அப்பொழுதும் நான் சொல்லவில்லை. 'மிடின்தானே கொடுத்தான்?' என்று கேட்டான். 'அதைப் பற்றிப்பேசாதே' என்று சொல்லி விட்டேன்.''

"அதைப் பற்றிப் பேசாதே" என்ருள் சித்தி.

"நடுவில் பேசாதே சித்தி...பிறகு மிடினைக் கைதுசெய்து விட்டதாக அவர்கள் சொல்வது போல் கனவு கண்டேன். அவனுக்கு துரோகம் செய்துவிட்டேனென்று தோன்றியது எனக்குப் பைத்தியமே பிடித்துவிடும் பொலிருந்தது" என்று சுற்று முற்றும் பார்த்துக் கொண்டே உணர்ச்சி மேலிட்டுப் பேசினுள் ஷுஸ்டோவா.

"நீ காரணமில்லை என்பது பிறகு தெரிந்ததா?"

"ஆமாம், நான் துரோகம் செய்து விட்டதாக நினைத்து சிறையில் குறுக்கும் நெடுக்கும் அலைந்து கொண்டிருந்தேன். பிறகு போர்த்துக் கொண்டு படுத்தேன். 'துரோகம், துரோகம், மிடினுக்கு துரோகம்' என்று ஒரு குரல் கேட்பதுபோல் இருந்தது. தூங்க விரும்பினேன். ஆனுல் தூக்கம் வரவில்லை, அதைப் பற்றி நினைக்காமல் இருக்கவும் முடியவில்லை. அப்பா! பயங்கரம்!" என்ருள். அவள் பேசும் பொழுது கூந்தலை விரலில் சுற்றுவதும் பிரிப்பதுமாக இருந்தாள்.

"லிடியா, அமைதியாகப் பேசு" என்று அவள் தோளைத் தொட்டுக் கூறினுள் தாய். ஆனுல் ஷுஸ்டோவா நிறுத்தவில்லை. "அதைவிடப் பெரிய பயங்கரம்..." என்ருள். அவளுக்கு துக்கம் வந்துவிட்டது. அழுது கொண்டே வெளியே போய்விட்டாள். தாயும் அவளைத் தொடர்ந்தாள்.

"அந்தக் கழுதைகளைத் தூக்கில் போட வேண்டும்" என்ருன் பள்ளிக்கூடச்சிறுவன்.

"என்னது?" என்ருள் தாய்.

"வந்து...ஒன்றுமில்லை" என்று மழுப்பிவிட்டான்.

## 26

"இளைஞர்கள் தனிக் கொட்டடியில் இருப்பது கஷ்டம் தான்" என்று கூறி தலையைக் குலுக்கிக் கொண்டாள் சித்தி, பிறகு ஒரு ஸிகரெட்டை எடுத்துப் பற்றவைத்தாள்.

"யாருக்குமே கஷ்டம்தான்" என்று நிக்லியுடாவ் பதிலளித்தான்.

"இல்லை. எல்லாருக்கும் அப்படியில்லை. உண்மையான புரட்சிக்காரர்களுக்கு அங்கு ஓய்வு கிடைப்பதாகச் சொல்கிருர்கள். போலீஸாரால் தேடப்படும் ஒருவன் சதா பயந்து

கொண்டே வாழவேண்டியிருக்கிறது. தனக்காகவும் மற்றவர்களுக்காகவும், தன் லக்ஷியத்திற்காகவும் அவன் நடுங்கிக் கொண்டேயிருக்கிறுன். அவன் கைதியாகிவிட்டால் பிறகு அவனுக்கு ஒரு பொறுப்பும் இல்லை, சிறையில் அமைதியாக இருக்கிறுன். கைதியானவுடன் அவர்கள் சந்தோஷப்படுவதாகச் சொல்கிறுர்கள். ஒன்றும் அறியாத இளைஞர்கள் முதலில் கைதியாகும்பொழுது அதிர்ச்சியைக் கடுமையாக உணர்கிறுர்கள். இந்த அதிர்ச்சியில்லாமல் இருந்தால் மற்ற கஷ்டங்களையெல்லாம் சுலபமாகப் பொறுத்துக் கொண்டு விடலாம்.''

''அப்படியானுல் நீங்கள் சிறைவாசம் அனுபவித்திருக்கிறீர்களா?''

''நான் இரண்டு முறை சிறை சென்றிருக்கிறேன்'' என்று வருத்தம் கலந்த சிரிப்புடன் கூறினுள் சித்தி.

''நான் முதலில் கைதியானபொழுது எனக்கு வயது இருபத்தொன்று. அப்பொழுது கர்ப்பம். ஏற்கனவே கையில் ஒரு குழந்தை இருந்தது. முதலில் நான் கைதியானபொழுது ஒரு குற்றமும் செய்யவில்லை. 'என்னை எங்கு அழைத்துச் செல்கிறீர்கள்? என்றேன். 'போனுல் தெரிகிறது' என்றனர் போலீசார். 'நான் என்ன குற்றம் செய்தேன்?' என்று கேட்டேன், பதிலே கிடைக்கவில்லை. சிறையில் என்னைத் தனியாகத் தள்ளிப் பூட்டிவிட்டனர். என் அறை வாசலில் துப்பாக்கிச் சேவகன் ஒருவன் குறுக்கும் நெடுக்கும் நடந்து காவல் புரிந்து கொண்டிருந்தான். ஒரு சந்து வழியாக அவன் அடிக்கடி உள்ளே எட்டிப்பார்ப்பான். குழந்தையிடமிருந்தும் கணவனிடமிருந்தும் ஈவு இரக்கமின்றி என்னைப் பிரித்துவிட்டார்கள் இது என்ன நியாயம்? இப்படிக் கொடுமை செய்தால் கொடிய விளைவு ஏற்படாமல் இராது. ஒருவன் சிறைக்குப்போய்விட்டு வந்தால், கடவுளிடமோ, மனிதனிடமோ, மனிதர்களின் நேசத்திலோ நம்பிக்கை போய்விடும். அது முதல் மனிதவர்க்கத்தின் மீதே எனக்கு நம்பிக்கை இல்லை; கசந்துபோய்விட்டது'' என்று புன்சிரிப்புடன் கூறி முடித்தாள்.

ஷுஸ்டோவாவின் தாய் திரும்பி வந்தாள். ''அவள் மிகவும் துக்கப்படுகிறுள். அதனுல்தான் திரும்பிவரவில்லை'' என்றுள்.

''இந்த இளம் பெண்ணின் வாழ்க்கையை ஏன் இப்படி நாசமாக்கினுர்கள்? இதற்கு நான் காரணம் என்பதுதான் எனக்கு அதிக வேதனையூட்டுகிறது'' என்று சித்தி மீண்டும் சொன்னுள்.

"கடவுள் கிருபை இருந்தால் கிராமத்தில் குணமடைவான். அவன் தந்தை இருக்கும் இடத்திற்கு அனுப்பிவிடலாமென்று பார்க்கிறேன்" என்றாள் தாய்.

"நீங்கள் இல்லையென்றால் அவன் சிறையிலேயே இறந்து போயிருப்பான். அவனைக் காப்பாற்றியதற்காக கடவுளுக்கு நன்றி செலுத்துகிறேன். ஆனால் நான் உங்களைப் பார்க்க விரும்பியது வேறு காரியத்திற்காக. இந்தக் கடிதத்தை நிக்கோலாயிடம் சேர்த்து விட வேண்டும். கவரை ஒட்டவில்லை. படித்துப் பாருங்கள், கொடுக்கலாமென்று தோன்றினால் கொடுங்கள். இல்லையானால் கிழித்து எறிந்து விடுங்கள். அதில் ஆபத்தான விஷயம் ஒன்றும் இல்லை" என்றாள் வேரா.

நெக்லியுடாவ் அதை வாங்கிக் கொண்டான். அவ்விதமே சேர்த்துவிடுவதாக வாக்களித்தான். அதைப் படித்துப்பாராமலே ஒட்டிவிட்டான்.

## 27

இனி மரண தண்டனைக் கைதிகளின் வழக்கு ஒன்றுதான் பாக்கி. அதற்காகத்தான் நெக்லியுடாவ் பீட்டர்ஸ்பர்கில் இருந்தான். தன்னுடைய பழைய நண்பனான பொகாட்டிரெவ் மூலம் அவர்களுடைய மனுவை மன்னரிடம் சமர்ப்பிக்க விரும்பினான். காலையில் அவன் பொகாட்டிரெவ் வீட்டுக்கு வந்தான். அப்பொழுதான் அவன் சாப்பிட்டுக்கொண்டிருந்தான். பொகாட்டிரெவ் அதிக உயரம் இல்லாவிட்டாலும் நல்ல பலசாலி. யோக்கியன். தாராள மனப்பான்மையுள்ளவனும் கூட! மன்னரிடம் அவனுக்கு அதிக விசுவாசம். பெரிய வட்டாரங்களில் எவ்விதத் தவறையும் அவன் காணவில்லை. யாரையும், அல்லது எந்தப் புதிய திட்டத்தையும் கண்டிக்கமாட்டான். அவைபற்றிப் பேசாமலே இருந்துவிடுவான். இல்லையானால் உரத்த குரலில் தன் கருத்தை வெளியிடுவான். அதேபோன்ற உரத்த குரலில் சிரிப்பான்.

அவன் நெக்லியுடாவைக் கண்டவுடன், "வா, வா, சாப்பிட உட்கார், நான் உன்னைப்பற்றித்தான் நினைத்திருந்தேன். மனுவைக் கொடுத்து விடுகிறேன். முதலில் நீ டோபோரோவைப் பார்ப்பது நல்லதென்று தோன்றுகிறது" என்றான்.

டோபோரோவ் என்ற பெயரைக் கேட்டவுடன் நெக்லியுடாவுக்கு முகம் சுண்டிவிட்டது.

"எல்லாம் அவரிடம்தான் இருக்கிறது. அவரிடம் ஆலோசனையாவது கேட்பார்கள். அவரே கூட உன் விருப்பத்தை நிறைவேற்றிவிட முடியும்."

"நீ சொன்னால் நான் போகிறேன்."

"சரி, அது இருக்கட்டும். உனக்கு பீட்ஸைப் பிடித்திருக்கிறதா!" என்று உரத்த குரலில் கேட்டான் பொகாட்ரிரெவ்.

"மயக்கம் வருகிறது!" என்றான் நெக்லியுடாவ்.

"மயக்கமா?" என்று பொகாட்ரிரெவ் திருப்பிக் கேட்டு விட்டு உரக்கச் சிரித்தான். "ஏன்? ஒரு காரியமும் நடக்கவில்லையா! இந்த மனுவை அவரிடம் கொடு. அவர் ஒன்றும் செய்யாவிட்டால், நானே நாளை மனுவைக் கொடுத்து விடுகிறேன்" என்று தன் வழக்கமான பெருந்தொண்டையில் கூறிவிட்டு எழுந்தான். "நேரமாகிவிட்டது. நான் போக வேண்டும்" என்று சொல்லிக்கொண்டே வாளைத் தன் இடுப்பில் கட்டிக்கொண்டான்.

"நானும் போகவேண்டும்" என்று நெக்லியுடாவ் அவன் கையைக் குலுக்கினான். நல்ல காரியம் நடக்கும்பொழுது ஏற்படும் சந்தோஷம் அவன் மனத்தில் ஏற்பட்டது.

டோபோரோவைப் பார்ப்பதால் ஒரு பலனும் கிடைக்காதென்று தோன்றியது. இருந்தாலும் பொகாட்ரிரெவ் கூறியதால் நெக்லியுடாவ் அவனைப் பார்க்கப்போனான்.

மந்தபுத்தியும் அயோக்கியத்தனமும் உள்ளவர்கள்தான் டோபோரோவின் வேலையைச் செய்ய முடியும். சர்ச்சை கடவுளே ஸ்தாபித்ததாக அது பிரகடனம் செய்து கொண்டிருக்கிறது. அத்தகைய சர்ச்சை, எந்த முறையை அனுசரித்தாயினும் காப்பாற்றுவது டோபோரோவின் வேலை. இதற்காக அவன் பலாத்காரத்தைக் கூட உபயோகிக்கலாம். இதில் உள்ள அபத்தத்தை அவன் அறிய இஷ்டப்படவில்லை. மனிதனுக்கு மனிதன் வித்தியாசமில்லை என்பது மதத்தின் அடிப்படைத் தத்துவம். ஆனால் இது அவனுக்கு மாத்திரம் பொருந்தாது. சாதாரண மக்கள் வேறாகவும், தான் வேறாகவும் தான் அவன் கருதினான். உண்மையில் அவனுக்கு ஒன்றிலுமே நம்பிக்கை இல்லை. இது அவனுக்கு சௌகரியமாகவும் சந்தோஷமாகவும் இருந்தது. ஆனால் "மக்களுக்கும் இதே மனப்பான்மை வந்துவிட்டால் என்ன செய்வது?" என்ற பயம் உள்ளூற உண்டு. ஆகையால் அவர்களை இதிலிருந்து "காப்பாற்று"வதைத் தன் புனிதமான கடமையாகக் கொண்டான். "அடிமைகளாக இருப்பதைத்தான் மக்கள் விரும்பு,

கிறார்கள்'' என்பது அவன் கருத்து. அவர்களுடைய மூட நம்பிக்கைகளை வளர்க்க விரும்பினான்.

நிக்லியுடாவ் சென்றபொழுது டோபோரோவ் உள்ளே ஒரு பிரசாரகியுடன் பேசிக்கொண்டிருந்தான். வெளி ஹாலில் ஒரு அதிகாரி இருந்தான். நிக்லியுடாவ் வந்திருக்கும் வேலையைப்பற்றி விசாரித்தான். நிக்லியுடாவ் சொன்னான்.

''அந்த மனுவை நான் முதலில் படித்துப் பார்க்கலாமா? என்று அந்த அதிகாரி கேட்டான். நிக்லியுடாவ் அதை அவனிடம் கொடுத்தான். அதை படித்துப் பார்த்துவிட்டு உள்ளே எடுத்துச் சென்றான்.

டோபோரோவுடன் பேசிக்கொண்டிருந்த பிரசாரகி எழுந்து போய்விட்டாள். அவன் மனுவை வாங்கிப் படித்துப் பார்த்தான். அதில் பதங்கள் ஆணித்தரமாக உபயோகிக்கப் பட்டிருந்ததைக் கண்டு தலையை ஆட்டிக்கொண்டான். இது அவனுக்கு அதிருப்தியையும் ஆச்சரியத்தையும் அளித்தது.

''இது மன்னர் கைக்குப் போனால் தப்பபிப்பிராயம் ஏற்படும். வேண்டாத விஷயங்களெல்லாம் எழுப்பப்படும்'' என்று அவன் நினைத்தான். உடனே அவன் வேலைக்காரனைக் கூப்பிட்டு நிக்லியுடாவை உள்ளே அழைத்து வரும்படி கூறினான்.

இந்த வழக்கைப் பற்றிய விவரங்களெல்லாம் டோபோரோவுக்கு நன்றாக ஞாபகம் இருந்தன. இதற்கு முன்பே அவர்களிடமிருந்து ஒரு மனு வந்திருந்தது. அவர்களுடைய கேஸ் இதுதான்: இந்தக் கிறிஸ்தவர்கள் கிரேக்க வைதிக சம்பிரதாயத்தை விட்டுவிட்டதாக வழக்கு தொடரப்பட்டது. சட்டபூர்வமாக விசாரணை நடந்தது. இதில் எதிரிகள் விடுதலையாகி விட்டனர். அவர்களுடைய விவாகம் சட்ட விரோதமானதென்று பிஷப்பும் கவர்னரும் கூறினர். பெண்டு, பிள்ளைகளிடமிருந்து இவர்களைப் பிரித்து தேசப்பிரஷ்டம் செய்ய இவர்கள் ஏற்பாடு செய்தனர். தங்களைப் பிரிக்கவேண்டாமென்று தான் அவர்கள் கேட்டுக்கொண்டனர். ''இதை முடித்துவிடுவது நல்லதல்லவா?'' என்று டோபோரோவ ஆலோசித்தான். ஆனால் அந்தக் குடும்பங்களைக் கலைப்பதால் தீமை ஒன்றுமில்லை என்று தோன்றியது. ஆகையால் நடந்தபடி நடக்கட்டுமென்று விட்டுவிட்டான்.

ஆனால் நிக்லியுடாவைப் போன்ற ஒருவன் அவர்களுடைய கட்சியை மேற்கொண்டிருப்பதால் விஷயம் மன்னருக்குத் தெரிந்துவிடும். பீட்டர்ஸ்பர்க்கில் நிக்லியுடாவுக்கு நல்ல செல்வாக்கிருப்பதால் இது கொடுமையென்று மன்னரிடம் யாராவது சொல்லிவிடுவார்கள். வெளிநாட்டுப்பத்திரிகைகளெல்லாம்

இதை அம்பலப்படுத்திவிடும். ஆகையால் எதிர்பாராத முடிவுக்கு வந்தான் டோபோரோவ்.

நிக்லியுடாவ் உள்ளே வந்தான். டோபோரோவ் மிகுந்த அவசர ஜோலிகளைக் கவனிப்பவன் போல் நடித்தான். இந்த மனுவை அவன் உடனே ஆலோசனைக்கு எடுத்துக்கொண்டான். "வாருங்கள் இந்த வழக்கு எனக்குத்தெரியும். இதில் உள்ள பெயர்களைப் பார்த்தவுடன் ஞாபகம் வந்துவிட்டது. பாவம். துரதிருஷ்டசாலிகள். நல்ல வேளையாக நீங்கள் இதை ஞாபகப்படுத்தினீர்கள். இதற்காக் உங்களுக்குப் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன்" என்று கூறி, பழைய மனுவை எடுத்துக்காட்டினான்.

நிக்லியுடாவ் மௌனமாக நின்றுகொண்டே அவனுடைய உணர்ச்சியற்ற முகத்தைப்பார்த்துக்கொண்டிருந்தான்.

"இவர்களை விடுதலை செய்ய நான் உத்தரவு பிறப்பிக்கிறேன்" என்று வாக்களித்தான் டோபோரோவ்.

"அப்படியானால் நான் இந்த மனுவை உபயோகிக்க வேண்டாமா ?"

"நிச்சயமாக நான் சொல்கிறேன். என்று "நான்" என்ற வார்த்தையை அழுத்தி உச்சரித்தான். பிறகு, "இப்பொழுதே எழுதி விடுகிறேன்; உட்காருங்கள்" என்றான்.

ஒரு காகிதத்தை எடுத்து எழுதத்தொடங்கினான். வெள்ளை வெளேரென்று இருந்த அவனுடைய கைவேகமாகப்பேனாவை ஓட்டியது. "இவன் ஏன் இதை இவ்வளவு அக்கரையாகச் செய்கிறான் ?" என்று நிக்லியுடாவ் ஆச்சரியப்பட்டுக்கொண்டிருந்தான்.

"இதோ தீர்ந்துவிட்டது. உங்கள் கட்சிக்காரர்களுக்குத் தெரியப்படுத்திவிடலாம்" என்று சொல்லிக்கொண்டே டோபோரோவ் கவரை ஒட்டினான். புன்சிரிப்பு சிரிப்பவன் போல் வாயை அகற்றினான்.

"அப்படியானால் இவர்கள் ஏன் இவ்வளவு கஷ்டப்பட நேர்ந்தது?" என்று நிக்லியுடாவ் கேட்டான். கவரை அவன் கையில் வாங்கிக்கொண்டான. அந்தக் கேள்வி தனக்கு மிகுந்த சந்தோஷம் அளிப்பதுபோல் டோபோரோவ் நிமிர்ந்து பார்த்துச் சிரித்தான. "அதைச் சொல்லமுடியாது. மக்களின் நலனை நாங்கள் காப்பது முக்கியம். மதவிஷயத்தில் அதிக உற்சாகம் இருப்பதால் அபாயமில்லை. நாட்டில் பரவிவரும் அலக்ஷியபுத்தி அதைக்காட்டிலும் அபாயகரமானது!..." என்றான டோபோரோவ்.

"மதத்தின் பெயரால் தர்மத்தின் அடிப்படையே மீறப்படுகிறதே! குடும்பங்கள் கெடுக்கப்படுகின்றனவே?" என்று நிக்லியுடாவ் மீண்டும் கேட்டான்.

டோபோரோவ் இப்பொழுதும் சிரித்தான். "தனி நபர்களுக்கு அப்படித் தோன்றலாம். ஆனால் நிர்வாக ரீதியாகப் பார்த்தால் வேறு விதமாக இருக்கும்—சரி, நீங்கள் போய் வருகிறீர்களா?" என்று கூறி டோபோரோவ் கையை நீட்டினான். நிக்லியுடாவ் அவன் கையைக் குலுக்கிவிட்டு அவசரமாக வெளியேறினான். அவன் கையைத் தொட்டதற்காகவெகு நேரம் வருத்தப்பட்டான்.

"மக்களின் நலனும! சுயநலத்திற்கு இது மறுபெயர் போலும்!" என்று நினைத்தான். தான் அறிந்த கைதிகளை ஒவ்வொருவராக நினைத்துப் பார்த்தான். "சட்டத்தை மீறி அநியாயம் செய்ததற்காக இவர்களெல்லாம் சிறையில் அடைக்கப்படவில்லை. பணக்காரர்களும் அதிகாரிகளும் மக்களைக் கொள்ளையடிக்கின்றனர். இந்தப் பகற்கொள்ளையில் இடையூறாக இருப்பவர்களைச் சிறையில் தள்ளிப் பூட்டி விடுகிறார்கள். லைஸென்ஸ் இல்லாமல் சாராயம் விற்ற ஸ்திரீ, நகரில் சுற்றும் திருடன், ரகசிய காகிதங்களை மறைத்துவைத்திருந்த லிடியா ஷூஸ்டோவா மூடநம்பிக்கைகளைத் தகர்த்த மத சீர்திருத்தக்காரர்கள், பொறுப்பு வாய்ந்த சர்க்கார் வேண்டுமென்று கேட்ட குர்கெவிட்ச் ஆகியவர்கள் உண்மையான இடையூறுகள். நிரபராதிகளான மக்களின் கஷ்டத்தைப் பற்றி ஒரு அதிகாரிக்கும் கவலை இல்லை. தங்கள் நலனுக்கு அபாயம் விளைவிக்கக் கூடியவர்களிடமிருந்து எப்படித் தப்புவது என்பதைப் பற்றித்தான் கவலை. 'ஒரு நிரபராதியைத் தண்டிப்பதை விட பத்து குற்றவாளிகள் தப்பித்துக்கொள்ள விடலாம்' என்பது விதி. தங்களுக்கு உண்மையில் அபாயம் விளைவிக்கக் கூடிய ஒருவனிடமிருந்து தப்புவதற்காக பத்து நிரபராதிகளை இவர்கள் தண்டித்தனர்' நிக்லியுடாவ் இப்படியெல்லாம் சிந்தித்துக்கொண்டிருந்தான். இந்த உண்மைகள் அவனுக்குத் தெளிவாக விளங்கின. இவ்வளவு தெளிவாக இருந்ததனாலேயே இவற்றை ஏற்க அவன் தயங்கினான். "இவ்வளவு சிக்கலும் பயங்கரமும் நிறைந்த விஷயத்திற்கு இவ்வளவு சுலபமான விளக்கமா? "நீதி" "சட்டம்" "மதம்" "கடவுள்" என்பவை வெறும் வார்த்தைகள் தானா? கேவலமான பேராசையும், அக்கிரமங்களையும் மறைப்பதற்கான வெறும் வார்த்தைகள் தானா இவை?" என்று தோன்றியது.

# 28

நிக்லியுடாவ் அன்று மாலையே பீடர்ஸ்பர்க்கிலிருந்து புறப்பட்டு விட்டிருப்பான். ஆனால் மேரியட்டை நாடகக் கொட்டகையில் சந்திப்பதாக வாக்களித்திருந்தான். அந்த வாக்கை நிறைவேற்றக் கூடாதென்பது அவனுக்குத் தெரியும். ஆனால் அப்படிச் செய்வது தவறு என்று தோன்றியது.

"இந்த இச்சைகளை என்னால் எதிர்க்க முடியுமா?" என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டான். "கடைசி முறையாக முயன்று பார்க்கிறேன்" என்று தானே பதிலும் அளித்துக் கொண்டான்.

மாலை நேர உடை அணிந்து நாடகக் கொட்டகைக்கு வந்து சேர்ந்தான். நாடகத்தின் இரண்டாவது காட்சி நடந்து கொண்டிருந்தது. ஒரு பாத்திரம் ஆஸ்த்மாவினால் உயிர் விடும் காட்சியை வெளிநாட்டு நடிகை ஒருத்தி புதுமுறையில் நடித்துக்கொண்டிருந்தாள். நாடகம் பார்க்கவந்திருந்த அனைவரும் தங்களை மறந்து அந்தக் காட்சியில் ஈடுபட்டிருந்தனர்.

மேரியட் இருந்த இடத்திற்கு அருகே நிக்லியுடாவ் சென்றான். அழகு ததும்ப உட்கார்ந்திருந்த மேரியட் நன்றியறிதலுடன் அவனைப்பார்த்து புன்முறுவல் புரிந்தாள். தோள்கள் வெளியே தெரியும்படி அவள் உடையணிந்திருந்தாள். அந்தப் புன்சிரிப்பில் அர்த்தம் நிறைந்திருப்பதாக நிக்லியுடாவுக்குத் தோன்றியது. தனக்குப் பின்னால் இருந்த நாற்காலியைக் காட்டி அதில் உட்காரும்படி அவனைக் கேட்டுக் கொண்டாள். அவளுடைய கணவன் நிக்லியுடாவை அமைதியாகப் பார்த்தான். பிறகு அவன் தன் மனைவியைப் பார்த்த பார்வையில், "இவ்வளவு அழகான பெண்ணுக்கு உரியவன் தான் தான் என்ற பாவம் பிரகாசித்தது.

நாடகத்தின் அந்தக் காட்சி முடிந்தவுடன் பலத்த கரகோஷம் எழுந்தது- பிறகு மேரியட் தன் கணவனையும் நிக்லியுடாவையும் வெளியே அழைத்துச் சென்று அறிமுகம்செய்து வைத்தாள். அவர்கள் உதவியால் விடுதலைபெற்ற ஷுஸ்டொவாவின் கஷ்டங்களைப்பற்றி நிக்லியுடாவ் சொன்னான். மேரியட்டின் கணவன் அதைக்கேட்டு வஞ்சகச்சிரிப்பு சிரித்தான். பிறகு, "நான் போய்ப் புகை குடித்துவிட்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு வெளியே போய்விட்டான்.

மேரியட் சொல்வதாகச் சொல்லியிருந்த முக்கியமான விஷயத்தைச் சொல்வாள் என்று நிக்லியுடாவ் ஆவலுடன்

எதிர்பார்த்திருந்தான். எதையும் சொல்வதற்கு அவள் முயன்றதாகக் கூடத் தெரியவில்லை, நாடகத்தைப் பற்றித்தான் அவள் தமாஷாகப் பேசிக்கொண்டிருந்தாள், முக்கியமான விஷயம் ஒன்றும் இல்லை என்பதைப் பிறகுதான் நிக்லியுடாவ் அறிந்தான். தன் பூரண அழகையும் நிக்லியுடாவ் பார்க்க வேண்டும் என்பதற்காகத்தான் அவனை வரச்சொல்லியிருந்தாள். அவளுடைய அலங்காரம் அழகாகத்தான் இருந்தது. ஆனால் அவன் அதைக்கண்டு அருவருப்புத்தான் அடைந்தான். அவளுடைய அழகைக்கண்டு அவன் வியந்தான். ஆனால்," அவள் பொய் சொல்பவள்; லக்ஷக்கணக்கான மக்களின் கண்ணீரால் ஜீவிக்கும் ஒருவனுடன் வாழ்க்கை நடத்துகிறாள்; ஆனால் அந்தத் துயரத்தை அவள் லக்ஷியம் செய்யவில்லை; அன்று அவள் சொன்னவையெல்லாம் போலி வார்த்தைகள்; நான் அவளைக் காதலிக்க வேண்டும் என்ற ஒன்றுதான் அவளுடைய விருப்பம்" என்பது அவனுக்குத் தெரியும். அவள் ஏன் தன்னை மயக்க விரும்பினாள் என்பது அவனுக்கு விளங்கவில்லை. அது அவளுக்கும் தெரியாது. இந்த எண்ணங்கள் அவனுக்கு வெறுப்பூட்டவும் செய்தன. அவனைக் கவரவும் செய்தன. அங்கிருந்து போய்விடுவதற்காக அவன் பலமுறை தன் தொப்பியை எடுத்தான். ஆனால் ஏனோ புறப்படவில்லை.

அவளுடைய கணவன் திரும்பி வந்தான். சுருட்டுப்புகையின் நாற்றம் வீசியது. நிக்லியுடாவை அவன் வெறுப்புடன் நோக்கினான். நிக்லியுடாவும் உடனே புறப்பட்டு விட்டான்.

தெருவில் அவன் நடந்து வந்து கொண்டிருந்தான். அவனுக்கு முன்னால் நெட்டையான ஸ்திரீ ஒருத்தி போய்க் கொண்டிருந்தாள். அவள் ஆடம்பரமாக உடையணிந்திருந்தாள். தெருவில்சென்றவர்களெல்லாம் அவளைப் பார்த்துக் கொண்டு போனார்கள். நிக்லியுடாவ்வேகமாக நடந்தான். அவளைக் கடந்து செல்லும் பொழுது அவளைத் திரும்பிப் பாராமல் போகமுடியவில்லை. அவனைப் பார்த்து அவள் புன்முறுவல் புரிந்தாள். அவளுடைய முகமும் அழகாகத்தான் இருந்தது. உடனே அவனுக்கு மேரியட்டின் ஞாபகம் வந்தது. "நான் நாடகக் கொட்டகைக்குள் பிரவேசித்த பொழுது அவளும் இப்படித்தான் சிரித்தாள். இவர்கள் இரண்டுபேருடைய சிரிப்புக்கும் ஒரே அர்த்தம்தான். ஆனால் ஒரே ஒரு வித்தியாசம். நீ இஷ்டப்பட்டால் என்னை அடையலாம். இல்லையானால் உன் வழியைப் பார்த்துக் கொண்டுபோ' என்று வெளிப்படையாகச் சொல்கிறது இவளுடைய சிரிப்பு. ஆனால் மேரியட் இதைப்பற்றிச் சிந்திக்காதவள்போல் நடித்தாள். அவளுடைய உள்ளத்திற்குள்ளும் இந்த எண்ணம்தான் குடி கொண்டிருந்தது. இவள் பொய் சொல்லாமல் உண்மையாகவாவது நடந்துக் கொள்கிறாள்; அவசியத்தினால் இவள் இந்த நிலைமைக்கு வந்திருக்

கிறாள். ஆனால் அவள் இந்த பயங்கர உணர்ச்சியின் மூலம் சந்தோஷப்படுகிறாள். இவள் அசுத்த நீர் என்றால், அவள் விஷம்" என்று அவனுக்குத் தோன்றியது.

முன்பு ஒரு மார்ஷலின் மனைவியோடு அவன் கொண்டிருந்த நட்பு ஞாபகத்திற்கு வந்தது. இதை நினைக்கவே அவனுக்கு வெட்கமாக இருந்தது. "மனிதனின் மிருக உணர்ச்சி வெறுக்கத்தக்கது. அது ஒருவனிடம் தன் சுயரூபத்துடன் இருக்கும் வரை ஆத்மீகத்தின் உயரத்திலிருந்து நோக்கி அதை வெறுக்கிறோம். ஆனால் அதே மிருக உணர்ச்சி கவிதை அல்லது கலை உணர்ச்சி என்ற போர்வையைப் போர்த்துக் கொண்டு விட்டால் அதைப்போற்றுகிறோம். இதுதான் பயங்கரமான விஷயம்" என்று தோன்றியது அவனுக்கு. அன்றிரவு எங்கிருந்தோ வந்த ஒரு மங்கலான ஒளி எங்கும் பரவியிருந்தது. அதேபோல் அவனுடைய மனத்திலும் அஞ்ஞான இருள் கனமாக இல்லை.

இவற்றை யெல்லாம் காணாமல் மறந்துவிட நினைத்தான் அவன். ஆனால் முடியவில்லை. இவை யெல்லாம விளங்கும் படிச் செய்த ஒளி எங்கிருந்து வந்தது என்பது அவனுக்குத் தெரியவில்லை. அந்த ஒளி மங்கலாக இருந்தபோதிலும், அதனால் வெளியான உண்மைகளைக் கண்டு மகிழாமல் இருக்க முடியவில்லை.

## 29

நிக்லியுடாவ் மாஸ்கோவுக்குத் திரும்பி விட்டான். செனேட்டில் வழக்கு தோற்றுவிட்டது என்ற துக்கச் செய்தியை காடுஷாவுக்கு அறிவிப்பதற்காக அவன் உடனே சிறை ஆஸ்பத்திரிக்குச் சென்றான். மன்னருக்கு கருணை மனு போடுவதால் வெற்றி கிடைக்கும் என்ற நம்பிக்கை அவனுக்கு இல்லை. இருந்தாலும் வக்கீல் எழுதிக் கொடுத்த அந்த மனுவில் காடுஷாவின் கையெழுத்தை வாங்கி அதையும் கொண்டு வந்திருந்தான். இந்த மனுவை மன்னரிடம் சமர்ப்பிப்பதால் வெற்றி கிடைக்காமல் இருந்தாலும் நல்லதே என்று அவனுக்குத் தோன்றியது. சைபீரியாவில் கைதிகளுக்கிடையில் வாழ்க்கை நடத்துவதுபோல் கற்பனை செய்து செய்து அவன் மனம் பழக்கமாகி விட்டது. அவள் விடுதலையாகி விட்டால் அவளுடைய வாழ்க்கையும் தன்னுடைய வாழ்க்கையும் எப்படி உருவாகும் என்பதை நினைத்துப் பார்க்க முடியவில்லை. "ஒரு சர்க்கார் அக்கிரமமாக யாரையும் கைது செய்யுமானால், அத்தகைய சர்க்காரின் கீழ், யோக்கியர்கள் இருக்க வேண்டிய இடம் சிறைதான்" என்று தாரு என்ற ஓர் அமெரிக்க எழுத்தாளர்

எழுதி யிருக்கிறார். நிக்லியுடாவுக்கு அது ஞாபகம் வந்தது. பீடர்ஸ்பர்க் போய் பார்த்துவிட்டு வந்தபொழுது அவனுக்கும் அதே உணர்ச்சிதான் ஏற்பட்டது. "ஆமாம், தற்சமயம் ரஷ்யாவில் யோக்கியவான் எவனும் இருக்கத்தக்க இடம் சிறைதான்" என்று தோன்றியது அவனுக்கு.

நிக்லியுடாவ் சிறை ஆஸ்பத்திரிக்குச் சென்றான். காவல்காரன் அவனை அடையாளம் தெரிந்து கொண்டு, "காடுஷாவை மறுபடியும் சிறைக்கே அனுப்பிவிட்டார்கள்" என்றான்.

"ஏன்?"

"இவர்கள் சுபாவம் தெரியாதா? சின்ன டாக்டரோடு தொடர்பு வைத்துக்கொண்டிருந்தாள். ஆகையால் பெரிய டாக்டர் அவளைச் சிறைக்கே திருப்பி அனுப்பிவிட்டார்."

அவள் மனம் பண்பட்டு வருவதாக நினைத்திருந்த நிக்லியுடாவுக்கு இது பெருத்த மன வேதனையை அளித்தது. "என்னுடைய தியாகத்தை ஏற்க மறுத்தாள்; திட்டினாள்; கண்ணீர் விட்டாள். என்னைப் பயன் படுத்திக் கொள்வதற்காகச் செய்த சாகஸம்தானா இவையெல்லாம்?" என்று யோசித்தவாறு அங்கிருந்து புறப்பட்டான்.

"நான் இனிச் செய்ய வேண்டுவது என்ன? இன்னமும் நான் அவளுக்குக் கட்டுப்பட்டிருக்கிறேனா? அவளுடைய செய்கை எனக்குச்சுதந்திரம் அளித்துவிட வில்லையா?" என்ற கேள்விகள் அவன் மனத்தில் எழுந்தன. அவளைக் கைவிடுவது தன்னைத்தானே தண்டித்துக் கொள்வதற்கு ஒப்பாகும் என்று தோன்றியது.

"அவள் செய்த காரியம் என் தீர்மானத்தை மாற்ற முடியாது. அவள் இஷ்டப்படி என்ன வேண்டுமானாலும் செய்யட்டும். என் மனச்சாட்சிக்கு விரோதமாக நடக்கமாட்டேன். என் தீர்மானத்தை மாற்றிக்கொள்ள முடியாது" என்று அவனே பதிலளித்துக் கொண்டு சிறையை நோக்கிச் சென்றான்.

தான் வந்திருப்பதாக இன்ஸ்பெக்டருக்கு அறிவிக்கும்படி ஜெயிலரிடம் கூறினான் நிக்லியுடாவ்.

"பழைய இன்ஸ்பெக்டர் இல்லை இப்பொழுது இருப்பவர் ரொம்பக் கண்டிப்பானவர். முன்போல் கைதிகளைப் பார்க்க முடியாது" என்றான் ஜெயிலர். பிறகு அவன் உள்ளே சென்று இன்ஸ்பெக்டரிடம் கூறினான்.

கடுகடுத்த மூஞ்சியோடு இன்ஸ்பெக்டர் நிதானமாக நடந்துவந்தார்.

"கைதிகளைச் சந்திப்பதற்காக சில தினங்கள் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. அதற்காக ஏற்பட்ட அறையில் அவர்களைச்

சந்தித்துப் பேசலாம்'' என்று அறிவித்தார் இன்ஸ்பெக்டர். நிக்லியுடாவை நேராகப் பாராமலே அவர் பேசினார்.

''மன்னருக்கு ஒரு மனு போடவேண்டும். அதில் அவளுடைய கையெழுத்து வாங்கவேண்டும்.''

''அதை என்னிடம் கொடுங்கள்.''

''கைதியை நானே சந்திக்கவேண்டும்: அவளைச் சந்திக்க இதற்குமுன் என்னை அனுமதித்திருக்கிறீர்கள்''

''ஆமாம், முன்பு அப்படிச் செய்திருக்கலாம்''

''நான் கவர்னரிடமிருந்து அனுமதி வாங்கியிருக்கிறேன்'' என்று கூறி நிக்லியுடாவ் அதை எடுத்தான்.

இப்பொழுதும் அவர் நிக்லியுடாவை நேராகப் பார்க்கவில்லை. ''இப்படிக் கொடுங்கள் பார்ப்போம்'' என்று கூறி அதை வாங்கி நிதானமாகப் படித்தார்.

''சரி, ஆபீஸுக்குள் வாருங்கள்'' என்றார் இன்ஸ்பெக்டர். நிக்லியுடாவ் பிரவேசித்தான். இந்தத் தடவை ஆபீஸ் அறை காலியாக இருந்தது. இன்ஸ்பெக்டர் தன் மேஜை அருகே உட்கார்ந்து காகிதங்களை யெல்லாம் ஒழுங்குபடுத்தத் தொடங்கினார்.

''டுக்கோவா என்ற அரசியல் கைதியைப் பார்க்கலாமா?'' என்று கேட்டான் நிக்லியுடாவ்.

இன்ஸ்பெக்டர் நிமிர்ந்து பாராமலே, ''கூடாது. அரசியல் கைதிகளைப் பேட்டிகாண அனுமதியில்லை'' என்று சுருக்கமாகக் கூறினார். உடனே காகிதங்களை அடுக்குவதில் ஈடுபட்டார்.

டுக்கோவாவுக்குக் கொடுக்க வேண்டிய கடிதத்தை நிக்லியுடாவ் தன் சட்டைப் பையில் வைத்திருந்தான். இன்ஸ்பெக்டரின் பதிலைக் கேட்டவுடன், தான் ஏதோ குற்றம் செய்ய விரும்பியதுபோலவும் தன்னுடைய ரகசிய திட்டங்களெல்லாம் வெளியாகிவிட்டது போலவும் அவனுக்குத் தோன்றியது.

காடுஷா அந்த அறைக்குள் பிரவேசித்தாள். அவர்களில் ஒருவரையும் நிமிர்ந்து பாராமல், ''நீங்கள் பேசலாம்'' என்றார் இன்ஸ்பெக்டர். அவர் காகிதங்களை அடுக்கிக்கொண்டேயிருந்தார்.

நிக்லியுடாவின் முகத்தோற்றம் கடுமையாக இருந்தது. அதைக் கண்டவுடன் காடுஷாவுக்கு முகம் சிவந்துவிட்டது. அவள் தலை குனிந்தாள். ஆஸ்பத்திரி காவற்காரன் சொன்ன விஷயத்தை அவளுடைய குழப்பம் ஊர்ஜிதம் செய்வதாகத் தோன்றியது. அவளுடன் கைகுலுக்கக்கூட அவன் விரும்ப

வில்லை. அவ்வளவு வெறுப்பாக இருந்தது. அவனை நிமிர்ந்து பாராமலே, "உனக்கு ஒரு கெட்ட செய்தி கொண்டுவந்திருக்கிறேன். உன் அப்பீலை செனேட் தள்ளிவிட்டது" என்முன்.

"தள்ளிவிடும் என்று அப்பொழுதே தெரியும்" என்றுள் காடுஷா. பழைய மன நிலையில் நிக்லியுடாவ் இருந்திருந்தால், "ஏன் அப்படிச் சொல்கிருய்?" என்று கேட்டிருப்பான். இப்பொழுது ஒன்றும் கேட்கவில்லை. வெறுமனே நிமிர்ந்து பார்த்தான். அவள் கண்களில் நீர் நிறைந்திருந்தது. ஆனால் இது அவனுடைய பரபரப்பைத் தணிக்கவில்லை—அதிகரிக்கத்தான் செய்தது,

இன்ஸ்பெக்டர் எழுந்து அறையில் குறுக்கும் நெடுக்குமாக நடக்கத் தொடங்கினர்.

அருவருப்பு இருந்தாலும் அவளைக் கண்டு நிக்லியுடாவ் அனுதாபப்பட்டான். செனேட்டின் தீர்ப்பைப் பற்றி தான் வருத்தம் தெரிவிப்பது அவசியம் என்று தோன்றியது.

"இதைக் கண்டு பயந்துவிடக்கூடாது. மன்னருக்கு மனுப் போடுவோம். அப்பொழுது ஒருவேளை வெற்றி கிடைத்தாலும் கிடைக்கும்."

"அதற்காக நான் துக்கப்படவில்லை" என்று கூறி, தன் நீர்நிறைந்த கண்களால் அவனை நோக்கினுள்.

"வேறு என்ன?"

"நீங்கள் ஆஸ்பத்திரிக்குப் போயிருப்பீர்கள். அங்கு அவர்கள்.........!"

"அதனல் என்ன? அது உன்னுடைய சொந்த விஷயம்" என்று கடுகடுப்பாக பதிலளித்தான் நிக்லியுடாவ். தணிந்திருந்தஅவனுடைய உணர்ச்சி புது சக்தியுடன் வெளிப்பட்டது. "நான் சாதாரண மனிதன் உயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்த எந்தப்பெண்ணும் சந்தோஷத்துடன் என்னை மணக்க தயாராக இருப்பாள். நான் இவளை மணக்க முன் வருகிறேன். ஆனல் கொஞ்சம் பொறுத்திருக்கக்கூட இஷ்டப்படாமல் டாக்ரோடு நட்பு வைத்துக்கொண்டாள்!" என்று நினைத்த பொழுது அவனுக்கு வெறுப்பேற்பட்டது.

"அது இருக்கட்டும், இந்த மனுவில்கையெழுத்துப்போடு" என்ருன் நிக்லியுடாவ். ஒரு பெரிய கவரிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்துப் பிரித்து மேஜைமேல் வைத்தான். அவள் கண்ணைத்துடைத்துக்கொண்டு. "இதில் என்ன எழுத வேண்டும்?" எங்கே கையெழுத்துப் போடவேண்டும்?" என்று கேட்டாள். கையெழுத்துபபோட வேண்டிய இடத்தை அவன் காட்டினன். அவள் எழுதத்தொடங்கினுள்.

நிக்லியுடாவ் பின்னல் நின்று பார்த்துக்கொண்டிருந்தான். அவன் மனதிற்குள் நல்ல எண்ணங்களும் கெட்ட எண்ணங்களும் போராடின. கடைசியில் வெற்றி உணர்ச்சி ஏற்பட்டது. தானும் குற்றவாளிதான் என்ற எண்ணம் தோன்றியது. அவள் மீது அனுதாபம் ஏற்பட்டது.

அவள் கையெழுத்துப்போட்டு மனுவை அவனிடம் கொடுத்தாள். விரலில் பட்டிருந்த மசியைப் பாவாடையில் துடைத்துக்கொண்டாள். அவள் எழுந்து நின்று அவனை நோக்கினுள்.

"என்ன நேர்ந்தாலும் என் தீர்மானம் மாத்திரம் மாறவில்லை. நான் சொன்னபடி செய்தே தீருவேன். உன்னை எங்கெங்கு அழைத்துச் செல்கிறார்களோ அங்கெல்லாம் நானும் வரத்தான் போகிறேன்" என்றான் நிக்லியுடாவ்.

"அதனுல் பயன் என்ன ?" என்று அவசரமாகக் கேட்டாள். காடுஷா. ஆனுல் அவள் முகம் மாத்திரம் பிரகாசமாக இருந்தது.

"வழியில் உனக்கு என்னென்ன வேண்டியிருக்கும். என்பதையெல்லாம் யோசனை செய்து வைத்துக்கொள்.

"எனக்கு ஒன்றும் தெரியாது. வந்தனம்"

இன்ஸ்பெக்டர் அருகே வந்தார். அவர் என்ன சொல்லப் போகிறார் என்பதை நிக்லியுடாவ் லக்ஷியம்செய்யவில்லை. காடுஷா விடம் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டுவிட்டான்.

வெளியே சென்ற பொழுது அவன் மனத்தில் நிம்மதியும் சந்தோஷமும் குடிகொண்டிருந்தன. எல்லார் மீதும் அன்புஏற்பட்டது. காடுஷா என்ன செய்தாலும் தன் அன்புமாறவில்லை என்பதை நினைத்தபொழுது அவனுக்கு ஆனந்தமாக இருந்தது. என்றுமில்லாத ஓர் உன்னத ஸ்தானத்தில் இருப்பது போன்றஉணர்ச்சிஏற்பட்டது. அவன், தனக்காக அவளை நேசிக்கவில்லை அவளுக்காகவும கடவுளுக்காகவும் தான் நேசித்தான்.

ஆஸ்பத்திரியில் நடந்த சம்பவம் இதுதான். ஒருநாள் பெரிய நர்ஸ் காடுஷாவை ஏதோ சாமான் கொண்டுவரச் சொன்னுள். அவள் போன இடத்தில் சின்ன டாக்டர் தனியாக இருந்தார். அவர் சிறிது காலமாகவே காடுஷாவைத் தொந்தரவு செய்து கொண்டிருந்தார். அவரிடமிருந்து விடுபடுவதற்காக காடுஷா அவரைப் பிடித்துத் தள்ளினுள். இதனுல் இரண்டு புட்டிகள் கீழே விழுந்து உடைந்தன. அப்பொழுது பெரிய டாக்டர் அந்தப் பக்கமாகப் போய்க்கொண்டிருந்தார். அவர் திரும்பிப் பார்த்தபொழுது காடுஷா ஓடிக்கொண்டிருந்தாள். "இந்தமாதிரி விவகாரங்களெல்லாம் இங்கு வைத்துக்

கொள்ளாதே. விரட்டிவிடுவேன். இதற்கு என்ன அர்த்தம்?" என்று இரைந்தார் பெரிய டாக்டர். சின்ன டாக்டர் ஏதோ சொல்லமுயன்றார். ஆனால் பெரியவர் அதை வாங்கிக் கொள்ள வில்லை. வேறு நர்ஸ அனுப்பும்படி அன்றே சிறை இன்ஸ்பெக் டருக்கு அறிவித்து விட்டார்.

நிக்லியுடாவ் வரும்பொழுது தன் மீது சுமத்தப்பட்ட அப வாதத்தை அவனிடம் விளக்கிக்கூற வேண்டுமென்று நினைத்திருந்தாள். அவன் நிச்சயமாகச் செவிசாய்ப்பா னென்று நம்பினாள். ஆனால் அவன் நம்பவில்லை. அவளுக்கு துக்கம் நெஞ்சை அடைத்தது. ஆகையால் பேசாமலே இருந்து விட்டாள்.

தான் இன்னமும் நிக்லியுடாவை மன்னிக்கவில்லை என்றும், அவனை வெறுப்பதாகவுமே அவள் நினைத்திருந் தாள். ஆனால் உண்மையில் தன்னையும் அறியாமல் அவனை நேசிக்கத்தான் செய்தாள். அவன் விரும்பியவற்றை யெல் லாம் அவள் செய்தாள்; குடிப்பது, புகை குடிப்பது எல்லா வற்றையும் விட்டு விட்டாள். முதலில் அவள் நிக்லியுடா விடம் பெருமையுடன் சொன்ன வார்த்தைகள் அவனுக்கு மிகவும் பிடித்திருந்தன. அவற்றைத் திருப்பித் திருப்பிச் சொல்ல விரும்பினாள். அதனால்தான் அவன் கேட்ட போதெல் லாம் அவனை மன்னிக்க மறுத்தாள். தவிர, தான் அவனை மணப்பது அவனுக்குப் பெரிய துரதிருஷ்டமென்று நினைத் தாள். ஆஸ்பத்திரி அபவாதத்தை இவன்கூட நம்புகிறானே என்று நினைத்தாள். தண்டனை ஊர்ஜிதமான செய்தியைக் காட்டிலும் இது அவளுக்கு அதிக வருத்தம் அளித்தது.

## 30

**சை**பீரியா செல்லும் முதல் கோஷ்டிக் கைதிகளோடு காடுஷாவும் செல்லக்கூடும். ஆகையால் நிக்லியுடாவும் புறப் படுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினான். தான் செய்ய வேண்டிய வேலை இன்னும் ஏராளமாக இருப்பது போல் அவனுக்குத் தோன்றியது. தன் வேலைகளை அவன் மூன்று விதமாகப் பிரித்தான். காடுஷாவைப் பற்றியது முதல் வேலை. அவளுடைய மனுவை மன்னர் கவனத்திற்குக் கொண்டு வரவேண்டும். சைபீரியா பிரயாணத்திற்கு வேண் டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். காடுஷா சம்பந்தமான முக்கியமான வேலைகள் இவை தான்.

இரண்டாவதாகத் தன் நில விவகாரங்களை ஒழுங்குபடுத்த வேண்டும். சைபீரியாவுக்குச் செல்ல எவ்வளவு செலவாகும்

என்பது அவனுக்குத் தெரியாது. ஆகையால் குஸ்மின்ஸ்கி நிலங்களிலிருந்து கிடைக்கக் கூடிய வருமானம் முழுமையும் அவன் இழக்கத் தயாராக இல்லை

அவனிடம் மேன் மேலும் உதவி கோரிய கைதிகளுக்கு உதவி செய்வது மூன்றாவது வேலை. இவர்களுடைய கஷ்டத்தைக் குறைக்கலாமென்று அவனுககு முதலில் தோன்றியது. ஆனால் போகப்போக எண்ணிறந்த கோரிக்கைகள் வரத் தொடங்கி விட்டன. அவற்றை யெல்லாம் கவனிப்பது அசாத்தியமென்று அவனுக்குத் தோன்றியது. "கிரிமினல் சட்டம் தான் என்ன? இது எதற்காக இருக்கிறது? எங்கிருந்து வந்தது?" என்ற பிரச்னைகளைத் தீர்ப்பது தான் இந்த வேலை.

அவனுக்குத் தெரிந்த விவரங்களைக் கொண்டு, கைதிகளை ஐந்து விதமாகப் பிரிக்கலாமென்று தோன்றியது. கோர்ட்டாரின் தவறுகளால் தண்டனை பெற்ற நிரபராதிகள்; இவர்களின் தொகை அதிகம் இல்லை என்று கூறிக்கொள்கிறார்கள்.

ஆத்திரம், பொறாமை, குடி வெறி முதலிய அசாதாரண நிலைமையில்குற்றம் செய்தவர்கள் இரண்டாவதுகோஷ்டியினர். அந்த நிலைமையில், இவர்களுக்கு தண்டனை விதித்தவர்களும் இதே குற்றங்களைச் செய்திருப்பார்கள். இது நிச்சயம். கைதிகளில் பாதி பேருக்கு மேல் இந்த கோஷ்டியைச் சேர்ந்தவர்களென்று நிக்லியுடாவுக்குத் தோன்றியது.

தங்களுக்குச் சரியென்று தோன்றிய காரியங்களைச்செய்து தண்டனை பெற்றவர்கள் மூன்றாவது கோஷ்டியினர். இவர்களுடைய செய்கை சட்டம இயற்றியவர்களுக்குத் தான் குற்றமாகத் தோன்றியது. லைஸென்ஸ் இல்லாமல் சாராயம் விற்றவர்கள், ஜமீன்தார்களுக்கும் சர்க்காருக்குச் சொந்தமான காடுகளில் கட்டை வெட்டியவர்கள், மலைக்கள்ளர்கள், கோயில்களில் திருடியவர்கள் முதலியோர் இந்த கோஷ்டியைச் சேர்ந்தவர்கள்தான்.

தார்மிகத்துறையில் சாதாரண மக்களைக் காட்டிலும் உயர்ந்த நிலைமையில் இருந்ததற்காக தண்டனை பெற்றவர்கள் நான்காவது கோஷ்டியினர். மதத்தைச் சீர்திருத்தம் செய்ய விரும்பியவர்கள், இழந்த சுதந்திரத்தைப் பெற முயன்றவர்கள், அரசியல் கைதிகள், சோஷலிஸ்ட்டுகள், வேலை நிறுத்தக்காரர்கள் முதலியோர் இந்த கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் தான். மிகச் சிறந்தவர்களெல்லாம் இந்த கோஷ்டியில் இருந்தனர்.

சமூகத்தின் பாபத்திற்கு உள்ளானவர்கள் ஐந்தாவது கோஷ்டியில் இருந்தனர். பாயைத் திருடிய இளைஞன் போன்

யம் அவன் அறையில் இல்லை. அங்கு எல்லாம் சுத்தமாகவும் எளிமையாகவும் இருந்தன. அவள் ஒரு கடிதம் எழுதிவைத்து விட்டுத்தான ஹோட்டலுக்குத் திரும்பினாள்.

தன் தம்பி சம்பந்தமான இரு விஷயங்களில் அவளுக்கு அக்கரை ஏற்பட்டிருந்தது. காடுஷாவை அவன் மணக்க விரும்பியது ஒன்று. இதைப்பற்றி அவளுடைய ஊரில் கூட எல்லாரும் பேசிக்கொண்டனர். அவன் நிலங்களைக் குடியான வர்களுக்குக் கொடுத்தது மற்றொன்று, இதை அபாயகரமான அரசியல் நடவடிக்கையாகச் சிலர் கருதினர். அவன் காடு ஷாவை மணப்பது ஓரளவு அவளுக்குத் திருப்தியளித்தது. அவனுடைய விசேஷ குணமான உறுதியைக் கண்டு அவள் வியந்தாள். ஆனால் அவ்வளவு கேவலமானவளை அவன் மணக்க விரும்புவதை நினைத்து வெறுப்பும் கொண்டாள். வியப்பைவிட இந்த வெறுப்புதான் பலமாக இருந்தது. இந்த விவாகத்தை எப்படியாவது அவள் நிறுத்த விரும்பினாள். நிக்லியுடாவின் மனத்தை மாற்றுவது எவ்வளவு கஷ்டம் என்பது அவளுக்குத் தெரியும்.

நிலத்தை குடியானவர்களுக்குக் கொடுப்பதைப்பற்றி அவளுக்கு அவ்வளவு கவலை இல்லை. இதைப் பற்றி அவளுடைய கணவன்தான் அதிக ஆத்திர மடைந்தான், அதையும் தடுக்குமாறு மனைவியைத் தூண்டினான். "பிரசாரத்திற்காகத்தான் நிக்லியுடாவ் இப்படிச் செய்கிறான். நிலங்களைக் குடியானவர்களுக்கே விற்றுவிடுவதுதான் புத்திசாலித்தனம். இவன்யோசனைப்படி செய்வது பைத்தியக்காரத்தனம் தான்" என்றான்.

## 32

நிக்லியுடாவ் திரும்பி வந்தவுடன் தன் அக்காளின் கடிதத்தைப் பார்த்தான். உடனே அவளைச் சந்திக்கப் புறப்பட்டான். தன் தாய் இறந்தபின் நடாலியை அவன் பார்க்கவேயில்லை.

அவன் போனபொழுது நடாலி தனியாகத்தான் இருந்தாள். அவளுடைய கணவன் அப்பொழுது அடுத்த அறையில் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தான். நடாலி கருப்புப்பட்டு உடை அணிந்திருந்தாள். நவீன முறையில் கூந்தலை வாரி விட்டுக் கொண்டிருந்தாள். அவளுடைய கணவனுக்கும் அவளுக்கும் சம வயது, இருந்தாலும் இளம் பெண்போல் தோன்றுவதற்காக அவள் பட்ட கஷ்டத்திற்கு அளவில்லை.

தம்பியை அவள் உற்சாகத்துடன் வரவேற்றாள். வார்த்தையால் விவரிக்க முடியாத விஷயங்களை யெல்லாம் அவர்களு

டைய கண்கள் பேசிக் கொண்டன. பிறகு போலி வார்த்தைகள் வெளி வந்தன;

"நீ பருத்திருக்கிருய். முன்னைக் காட்டிலும் இளமையாகவும் இருக்கிருய்" என்ருன் நிக்லியுடாவ்.

"நீ இளைத்துப் போய் விட்டாய்"

"உன் கணவன் செளக்கியமா?"

"அவர் ஒய்வு எடுத்துக் கொண்டிருக்கிருர். இரவு முழுவதும் தூங்கவேயில்லை.

அவர்கள் பேச வேண்டிய விஷயம் நிரம்ப இருந்தது — அவர்கள் பேசாத பேச்சை அவர்களுடைய கண்கள் பேசி விட்டன.

"உன் அறைக்கு நான் வந்திருக்கிறேன்" என்ருள் நடாலி.

"தெரியும். நம் வீடு மிகவும் பெரியதாக இருந்தது. அங்கு இருக்க பிடிக்க வில்லை. அந்த உள்ள சாமான்கள் ஒன்றும் எனக்கு வேண்டாம்; நீ எடுத்துக் கொள்ளலாம்.

"நான் அங்கும் போயிருந்தேன். அக்ரபெனு பெட்ரோவ்னு சொன்னுள். மிக நன்றி; ஆனல்—"

இந்த சமயத்தில் ஹோட்டல் வேலைக்காரன் டீ கொண்டு வந்தான். நடாலி மௌனமாக டீயைக் கலந்தாள். நிக்லியுடாவும் மௌனமாக உட்கார்ந்திருந்தான்.

"எனக்கு எல்லாம் தெரியும்" என்று மீண்டும் பேச்சைத் தொடர்ந்தாள் நடாலி.

"அதனல் என்ன ? உனக்குத் தெரிந்தது பற்றி சந்தோஷிக்கிறேன்."

"அப்படிப்பட்ட வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தவளை நீ எப்படிச் சீர்திருத்த முடியும்?"

நிக்லியுடாவ் நிமிர்ந்து உட்கார்ந்தான். காடுஷாவைக் கடைசியாகச் சந்தித்த பொழுது அவன் மனத்தில் குடி கொண்டிருந்த அமைதியும் சந்தோஷமும் அப்படியே யிருந்தன. "நான் அவளைச் சீர்திருத்த விரும்பவில்லையே ! என்னையே தான் சீர்திருத்திக்கொள்ள விரும்புகிறேன்" என்று அவன் பதில் அளித்தான். நடாலி பெருமூச்சு விட்டாள்.

"அதற்கு வேறு வழிகள் இருக்கின்றனவே!"

"என்னுடைய கடமை என்னவென்றால்—" என்று ஆரம்பித்தான் நிக்லியுடாவ்.

ரோகோஷின்ஸ்கி அவனைத் தடுத்து மேலும் பேசினான்: "எனக்காகவோ என் குழந்தைகளுக்காகவோ நான் பேசவில்லை. என் குடும்பத்திற்குப் போதிய அளவு சொத்து எனக்கு இருக்கிறது. ஆகையால் உன் விஷயத்தைப் பற்றி நான் பேசுவதில் சொந்த விருப்பு வெறுப்பு ஒன்றுமில்லை. அதைப் பற்றி முதலில் தீர்க்கமாக ஆலோசிக்க வேண்டும்—"

"என் விஷயத்தை நானே தீர்த்துக்கொள்ளும்படி தயை செய்து விட்டுவிடுங்கள். எதைச் செய்யவேண்டும் எதைச் செய்யக்கூடாது என்பது எனக்குத் தெரியும்" என்றான் நிக்லியுடாவ். அவன் முகம் வெளுத்துவிட்டது. உணர்ச்சியைக் கட்டுப்படுத்த முடியவில்லை என்பதை அறிந்தான். உடனே பேசுவதை நிறுத்திவிட்டு டீயைக் குடித்தான்.

## 33

கோபம் சற்று தணிந்தவுடன், "உன் குழந்தைகள் எப்படி இருக்கின்றன?" என்று கேட்டான் நிக்லியுடாவ். அவை விளையாடும் விவரங்களையெல்லாம் சொன்னாள். தன் கணவன் எதிரில் தம்பியின் சொந்த விஷயங்களைப் பற்றிப் பேச அவள் விரும்பவில்லை. ஆகையால் காமென்ஸ்கியின் மரணம் பற்றிய வம்புப் பேச்சை ஆரம்பித்தாள். இதன் விளைவாக ரோகோஷின்ஸ்கிக்கும் நிக்லியுடாவுக்குமிடையில் புதிய விவாதம் எழுந்தது. "சட்டம் நீதியை நிலைநாட்டுகிறது" என்றான் ரோகோஷின்ஸ்கி.

"அதுதான் இல்லை; பணக்காரர்களின் நலன்களைப் பாதுகாப்பதற்காகத்தான் சட்டங்கள் இருக்கின்றன. நான் அனுபவத்தில் கண்ட உண்மை இது. சட்டம் நீதியை நிலைநாட்டுவதாகச் சொல்வது ஏட்டுச் சுரக்காய் வாதம்" என்றான் நிக்லியுடாவ்.

"சட்டத்தின் நோக்கம் சீர்திருத்தம்" என்றான் ரோகோஷின்ஸ்கி.

"சிறைகளில் நடப்பது அழகான சீர்திருத்தம்தான்!"

"சமூகத்தை பயமுறுத்தும் காலிகளை அப்புறப் படுத்த வேண்டும்."

"அதுதான் நடப்பதில்லை. சமூகம் எதைச் செய்வதற்கும் வழியில்லை."

"அது எப்படி? எனக்குப் புரியவில்லை.

"பழைய காலத்தில் உபயோகிக்கப்பட்ட நியாயமான தண்டனைகள் இரண்டுதான் உண்டு. உடல்சம்பந்தமான தண்டனை ஒன்று, சிரச்சேதம் மற்றொன்று, மனிதனின் சுபாவம் மிருதுவாக ஆக இவை உபயோகப்படாமல் போய்விடுகின்றன."

"நீ இப்படிச் சொல்வது ஆச்சரியமாக இருக்கிறது."

"ஒருவன் செய்தகுற்றத்தை மறுபடியும் செய்யாமல் இருக்கும் பொருட்டு அவனைத் துன்புறுத்துவது நியாயம். சமூகத்திற்கு அபாயம் விளைவிக்கும் ஒருவனுடைய தலையைச் சீவிவிடுவதும் நியாயமே. இந்த தண்டனைகளுக்காவது அர்த்தம் உண்டு. ஆனால் வேலை இல்லாமல் குற்றம் செய்பவர்களைச் சிறையில் தள்ளிப் பூட்டுவதால் அர்த்தமேயில்லை. சிறையில் அவர்களுக்குச் சாப்பாடு போடுகிறார்கள். சோம்பேறித்தனம் அவர்கள் மீது பலவந்தமாகச் சுமத்தப்படுகிறது. குற்றம் செய்யும் மற்றும் பலரோடு நெருங்கிப் பழகுகிறார்கள். பொது மக்களின் பணத்தைச் செலவிட்டு இவர்களை தூரதேசங்களுக்கு பிரஷ்டம் செய்வதில் என்ன அர்த்தம் இருக்கிறது?"

"இந்த தேசப் பிரஷ்டமும் சிறைகளும் இல்லாவிட்டால் நீயும் நானும் இங்கு பத்திரமாக உட்கார்ந்திருக்க முடியாதே!"

"சிறைகள் மாத்திரம் நம்மைப் பாதுகாத்துவிடாது. சிறிது காலத்திற்குப் பின் கைதிகள் விடுதலையாகி வந்து விடுகிறார்கள். தவிர இங்கு அடைக்கப்படுகிறவர்களுக்கு பல கெட்ட குணங்கள் வந்துவிடுகின்றன. இதனால் அபாயம் அதிகரிக்கத்தான் செய்கிறது."

"அதனால் சிறையைச் சீர்திருத்தம் செய்யவேண்டுமென்கிறாயா?"

"அதைச்சீர்திருத்தம் செய்யவே முடியாது, அதற்கு ஏராளமான பணம் வேண்டியிருக்கும். இதனால் பொதுமக்களுக்குத்தான் கஷ்டம்"!

"இதனால் சட்டம் செல்லாமற் போகாது"

"இதற்கு நிவர்த்தியே இல்லை."

"பின் என்ன செய்வது? ஜனங்களைக் கொன்றுவிடுவதா? அல்லது யாரோ ஒருவர் சொன்னது போல அவர்களுடைய கண்களை அவித்துவிடுவதா?

"ஆமாம் அது கொடுமைதான். ஆனால் அதனால் பலன் கிடைக்கும். இப்பொழுது அமுலில் உள்ளமுறையும் கொடுமைதான். இதனால் ஒரு பலனும் கிடைப்பதில்லை. புத்தியுள்ளவர்

கள் இந்தக் கிரிமினல் சட்ட விவகாரத்தில் எப்படி ஈடுபடுகிருர்கள் என்பதே புரிவதில்லை.''

''நான் ஈடுபட்டிருக்கிறேனே?''

''அது உங்கள் சொந்த விஷயம், ஆனல் எனக்குப் புரிவதில்லை.'

''உனக்குப் புரியாத விஷயங்கள் எவ்வளவோ இருக்கின்றன.''

''பரிதாபகரமான ஒரு இளைஞன். அவனுக்கு தண்டனை கிடைக்கும்படி செய்வதற்காக சர்க்கார் வகீல் ஒருவர் தம் திறமையையெல்லாம் உபயோகித்தார். மற்ருெருவர் ஒரு கைதியைக் குறுக்கு விசாரணை, செய்து வேதம்ப்படிப துகுற்றம் என்று நிரூபித்துவிட்டார். கோர்ட் விவகாரங்களிலேயே இத்தகைய அக்கிரமங்கள் தான் நிறைந்திருக்கின்றன.''

''நான் அப்படிச்செய்தால் வேலை செய்யமுடியாது'' என்று சொல்லிவிட்டு ரோகோஷின்ஸ்கி எழுந்தான். அவன் மூக்குக் கண்ணுடிக்குப் பின்னல் ஒருவித பளபளப்புத் தெரிந்தது. ''அது கண்ணீரா?'' என்று கவனித்தான் நிக்லியுடாவ், ஆமாம் கண்ணீர் தான். கர்வபங்கத்தின் கண்ணீர். ரோகோஷின்ஸ்கி ஜன்னல் அருகே போய் மூக்கை சிந்திவிட்டுக் கண்ணைத் துடைத்துக்கொண்டான். பிறகு அவன் சோபாவில் வந்து உடகார்ந்து ஒரு சுருட்டைப் பற்ற வைத்தான். அதற்குப்பின் அவன் பேசவேயில்லை.

அவனுக்கு துக்கம் வரும்படி செய்ததற்காக நிக்லியுடாவ் வருந்தினன். மனக்குழப்பத்தோடு அவன் புறப்பட்டான். ''நான் சொன்னதெல்லாம் உண்மையாக இருக்கலாம். எப்படியிருந்தாலும் அவன் பதில் சொல்லவில்லை. ஆனல் நான் சொன்னதைச் சரியான முறையில் சொல்லவில்லை. அவனுக்கும், பேதை நடாலிக்கும் வருத்தம் ஏற்படும்படி நடந்துகொண்டுவிட்டேன். என்மனம் அதிகப் பக்குவப்படவேயில்லை'' என்று நினைத்துக்கொண்டான். நிக்லியுடாவ்,

## 34

காடுஷாவும் மற்றக்கைதிகளும் மாலை மூன்று மணிக்கு மாஸ்கோவிலிருந்து ரயிலில் புறப்படவிருந்தார்கள். அவர்கள் புறப்படுவதைப் பார்க்கவும். அவர்களோடு ரயில்வே ஸ்டேஷனுக்குச் செல்லவும் நிக்லியுடாவ் விரும்பினன். இதற்காக பன்னிரண்டு மணிக்கே அவன் சிறைக்குப் போய்விட விரும்பினன்.

முதல் நாள் இரவுபிரயாணத்திற்கு மூட்டை கட்டிக்கொண்டிருந்தான். அப்பொழுது கைக்குக் கிடைத்த தன் டைரியை எடுத்து ஆங்காங்கு சில பகுதிகளைப் படித்தான். கடைசியாக காடுஷாவைப் பற்றி எழுதியிருந்த பகுதியைப்பார்த்தான். "என்னுடைய தியாகத்தை காடுஷா ஏற்க மறுக்கிறாள். அவளே தியாகம் செய்யவிரும்புகிறாள். உள்ள மாறுதலால் அவள் எனக்கு சந்தோஷமூட்டுகிறாள், அவள் மனம் மாறுதலடைகிறது என்று நம்ப பயமாக இருக்கிறது. அவள் மீண்டும் ஜீவன் பெறுகிறாள்போல் தோன்றுகிறது" என்று எழுதியிருந்தான். பிறகு இன்னும் கொஞ்சம் தள்ளிப் படித்தான்; "மிகக்கஷ்டமும் இன்பமும் நிறைந்த அனுபவம் ஏற்பட்டது. ஆஸ்பத்திரியில் காடுஷா விஷயத்தைக் கேள்விப்பட்டேன். மிகவும் வருத்தமாக இருந்தது. அவ்வளவு வருத்தம் ஏற்படுமென்று நான் நினைக்கவேயில்லை. அவளுடன் வெறுப்போடு பேசினேன். எந்தக் குற்றத்திற்காக அவளை வெறுத்தேனோ அதே குற்றத்தை நான் எத்தனை முறை செய்திருக்கிறேன். என்பதை நினைத்துப் பார்த்தேன். அவள் மீது அனுதாபம் ஏற்பட்டது. மீண்டும் மனம் ஆனந்தமடைந்தது. நம்மிடம் உள்ள குறையை சரியான சமயத்தில் அறிந்துகொண்டு விட்டால் நாம் எவ்வளவு நல்லவர்களாக இருப்போம்!" என்று எழுதியிருந்தது. இதைப் படித்தபின், பின்வருமாறு எழுதினான்: "நடாலியைப்பார்க்கப்போயிருந்தேன். பெருமையால் துவேஷம் கொண்டேன். வருத்தமாக இருக்கிறது; இருக்கட்டும்; அதைத்தவிர்க்க முடியாது. நாளை புதிய வாழ்க்கை ஆரம்பமாகிறது; பழசுக்கு கடைசிக் கும்பிடு; புதிய அபிப்பிராயங்கள் பல ஏற்பட்டிருக்கின்றன; இன்னும் அவற்றை ஒன்று பிணைக்க முடியவில்லை." என்று எழுதினேன்.

மறுநாள் காலை நிக்லியுடாவ் எழுந்தான். தனக்கும் ரோகோஷின்ஸ்கிக்குமிடையில் நடந்த விவகாரம்தான் முதலில் ஞாபகம் வந்தது. அதைப்பற்றி வருந்தினான். அவர்களைப் போய்ப் பார்த்து சமாதானம் சொல்லிவிட்டு வரவேண்டுமென்று தோன்றியது. ஆனால் அவகாசமில்லை. சாமான்களை மூட்டை கட்டி ஸ்டேஷனுக்கு அனுப்பினான் தியோடோஸியாவின் கணவனான டாரஸ்ஸையும் அவளோடு ஸ்டேஷனுக்குப்போயிருக்கும்படி சொன்னான். அவனும் சைபீரியாவுக்குத்தான் சென்றான். பிறகு ஒரு வண்டியை அமர்த்திக் கொண்டு சிறைக்குப் போனான்.

அவனுடைய வண்டி புறப்பட்ட இரண்டு மணி நேரத்திற்கு முன்னால்தான் கைதிகளின் வண்டி புறப்பட்டது. ஆகையால் அவன் ஹோட்டல் கணக்குகளைத் தீர்த்துவிட்டுப் புறப்பட முடிந்தது.

* * * *

ஜூலைமாதம் தாங்க முடியாத உஷ்ணம். பாறைகளும், சுவர்களும், வீட்டுக் கூறைகளும் உஷ்ணத்தை எங்கும் பரப்பிக் கொண்டிருந்தன, எப்பொழுதாவது வீசும் மென்காற்றும் அனல் காற்ருக வீசியது. தெருவில் ஜன நடமாட்டமே இல்லை. நடந்து போய்க் கொண்டிருந்த ஒரு சிலரும் தெருவில் நிழல் பக்கமாகப் போய்க் கொண்டிருந்தனர். சில குடியானவர்கள் ரோடைச் செப்பனிட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்கள் கொதிக்கும் வெயிலில் உட்கார்ந்து கல்லை உடைத்து மணலில் கலந்து கொண்டிருந்தனர்.

நிக்லியுடாவ் சிறைக்குப் போய்ச் சேர்ந்தபொழுது கைதிகள் புறப்படவில்லை. சிறை அதிகாரிகள் வெளியில் உட்கார்ந்து அவர்களைப் பரிசோதித்துக் கொண்டிருந்தனர். அறு நூற்று இருபத்து மூன்று ஆண் கைதிகளும், அறுபத்து நான்கு பெண் கைதிகளும் அன்று பிரயாணமாக விருந்தனர்.

கைதிகளின் சாமான்களையும், நடக்கமுடியாத, கைதிகளையும் ஸ்டேஷனுக்கு ஏற்றிச் செல்ல, இருபது வண்டிகள் சிறைக்கு வெளியே வந்து நின்றிருந்தன. கைதிகளின் உறவினர் ஒரு பக்கம் வந்து கூடி யிருந்தனர். கைதிகள் வெளியே வரும்பொழுது சந்தர்ப்பம் கிடைத்தால் அவர்களுடன் சில வார்த்தைகள் பேசத்தான் இவர்கள் வந்திருந்தனர். நிக்லியுடாவும் அந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டான். அவன் அங்கு சுமார் ஒரு மணி நேரம் நின்றிருந்தான். பிறகு இடியோசை போன்ற சப்தத்துடன் சிறைக் கதவு திறந்து கொண்டது. முதலில் போலீஸ்காரர்களும் பிறகு ஆண் கைதிகளும், அவர்களுக்குப் பின்னுல் பெண் கைதிகளும் வந்தனர். தாங்களாக விரும்பி தங்கள் கணவனுடன் சைபீரியாவுக்குச் செல்லும் பெண்களும் இந்தக் கோஷ்டியில் இருந்தனர். சில பெண்கள் குழந்தைகளை வைத்திருந்தனர்.

அந்தக் கூட்டத்தில் காடுஷா இருந்ததுபோல் தோன்றியது நிக்லியுடாவுக்கு. ஆனுல் பிறகு அவள் தென்படவில்லை. கைதிகளை மீண்டும் ஒரு முறைஎண்ணினர் போலீசார். பிறகு போலீஸ் அதிகாரி ஓர் உத்திரவிட்டார். கைதிகள் வைத்திருந்த மூட்டைகளை வண்டிகளில் போட விரைந்தனர். தங்களுக்கு வண்டியில் இடம் கொடுக்கும்படி சில கைதிகள் அதிகாரியிடம் கேட்டனர். காலில் விலங்கோடு கூடிய ஒரு கிழவனுககு மாத்திரம் அனுமதி கிடைத்தது. அவனுல் வண்டியில் ஏற முடியவில்லை. கால் விலங்கு தடுத்தது. உடம்பில் சக்தியும் இல்லை. வண்டியில் இருந்த ஒரு பெண் அவனை இழுத்து ஏற்றிக் கொண்டாள்

''போங்கள்'' என்று அதிகர்ரி உத்திரவிட்டார். துப்பாக்கி தாங்கிய போலீசார் புடைசூழ கைதிகள் புறப்பட்டனர். அவர்களை வழியனுப்ப வந்திருந்தவர்கள் ஏதோ கோஷித்தனர்.

கைதிகள் பதிலுக்கு கத்தினர். சாமான் வண்டிகள் கடைசியாகச் சென்றன. நடக்க முடியாத கைதிகளும் அவற்றில் ஏற்றப்பட்டிருந்தனர். ஒரு வண்டியில் ஒரு பெண் அழுது கொண்டே உட்கார்ந்திருந்தாள்.

# 35

கைதிகளின் "ஊர்வலம்" மிகப் பெரியதாக இருந்தது. முன்னால் சென்றவர்கள் மறைந்தபிறகுதான் வண்டிகள் புறப்பட்டன. கடைசி வண்டியும் அங்கிருந்து புறப்பட்டுவிட்டது. பிறகு நிக்லியுடாவ் தன் வண்டியில் ஏறிக் கொண்டு புறப்பட்டான். கைதிகளின் கூட்டத்தைக் கடந்து செல்லும்படி வண்டிக் காரனிடம் சொன்னான். காடுஷாவை கண்டு பிடிக்க முயன்றான். ஆண் கைதிகளில் தனக்குத் தெரிந்த யாராவது இருக்கிறார்களா என்று பார்க்கவும் விரும்பினான்.

கைதிகள் தெருவின் மத்தியில் கைகளை வீசி நடந்து போய்க்கொண்டிருந்தனர், எல்லாருக்கும் ஒரேமாதிரியான உடை ஒரே மாதிரியான நடை. எல்லாக் கைதிகளும் ஒரே மாதிரியே தோற்றமளித்தனர். நிக்லியுடாவின் வண்டி அவர்களைக் கடந்து போய்க் கொண்டிருந்தது. பெடோரோவ் என்ற கொலைக் கைதியும், ஓகாடின் என்ற மற்றொரு கைதியும் தான் அவனுக்குத் தெரிந்தவர்கள். தங்களைக் கடந்து சென்ற வண்டியையும் அதனுள் இருந்தவனையும் எல்லாக் கைதிகளும் பார்த்தனர். நிக்லியுடாவை பெடோரோவ் அடையாளம் கண்டுகொண்டு விட்டான். அதற்கு அடையாளமாக அவன் தலையை ஆட்டினான். ஓகாடின் கண்ணைச் சிமிட்டினான்.

பெண்களின் கோஷ்டியில் காடுஷாவை சுலபமாகக் கண்டுபிடித்துவிட்டான் நிக்லியுடாவ். அவள் முகத்தில் சாந்தமும் உறுதியும் குடிகொண்டிருந்தன. தியோடோஸியாவும் அவள் பக்கத்திலேயே போய்க்கொண்டிருந்தாள்.

நிக்லியுடாவ் வண்டியை விட்டு இறங்கி காடுஷாவை நோக்கிப் போனான், தான் அனுப்பிய பொருள்கள் வந்து சேர்ந்தனவாவென்று விசாரிப்பதற்குத் தான் சென்றான். அதற்குள் ஒரு போலீஸ் சார்ஜெண்ட் அவனை நோக்கி ஓடி வந்தான். "யாரையா" அது? அவர்கள் அருகே போகக் கூடாது?" என்று கத்தினான் அவன். அருகில் வந்தவுடன் அவனுக்கு நிக்லியுடாவை அடையாளம் தெரிந்துவிட்டது. உடனே தன் தொனியை மாற்றிக் கொண்டு, "இப்பொழுது வேண்டாம்; ஸ்டேஷனுக்குப் போகும்வரை பொறுத்திருங்கள்" என்றான். நிக்லியுடாவ் வண்டியைப் பின்னால்வரச் சொல்லி விட்டு நடந்து சென்றான்.

தெருவில் சென்றவர்களெல்லாம் கைதிகளைப் பார்த் தனர். சிலர் தங்களையும் அறியாமல் சிறிதுதூரம் கைதிக ளுடன் நடந்து சென்றனர், வண்டிகளில் சென்றவர்கள் வண் டிக்கு வெளியே தலையை நீட்டிப் பார்த்தனர். இந்த கோர ஊர்வலத்தை விட்டு வாசல்களிலிருந்தும் ஜன்னல்களிலிருந் தும் எட்டிப் பார்த்தவர்கள் பலர்.

# 36

கைதிகளுக்குச் சரியாக நிக்லியுடாவும் நடந்து சென் ருன். வெயில் தாங்கவில்லை. கைதிகள் எழுப்பிய தூசு காற்றில் நிரம்பியிருந்தது. மூச்சுவிடுவது கூடக் கஷ்டமாக இருந்தது. கால் மைல் தூரம் நடந்து சென்ற பின் அவன் மறுபடியும் வண்டியில் ஏறிக்கொண்டான். தெருவின் மத்தி யில் உஷ்ணம் இன்னும் அதிகமாக இருந்தது. முதல் நாள் இரவு ரோகோஷின்ஸ்கியுடன் தான் பேசிக்கொண்டிருந்தவற் றை அவன் நினைத்துப் பார்க்க முயன்ருன். முன்பு ஏற்பட்ட வருத்தம் இப்பொழுது ஏற்படவில்லை. கைதிகளின் காட்சி அதை வென்றுவிட்டது.

தெரு ஓரமாக குளிர்ந்த பானங்கள் விற்பவன் ஒருவன் இருந்தான். இரு சிறுவர்கள் அங்கு நின்று ஷர்பத் குடித் துக் கொண்டிருந்தனர். "இங்கு குடிப்பதற்கு ஏதாவது கிடைக்குமா?" என்று வண்டிக்காரனைக் கேட்டான் நிக்லி யுடாவ். "இதோ அருகில் ஓர் இடம் இருக்கிறது" என் ருன் வண்டிக்காரன். மூலை திரும்பியவுடன் ஒரு பெரிய போஸ்டுடன் கூடிய ஒரு கட்டிடத்திற்கு முன்னுல் வண்டியைக் கொண்டு நிறுத்தினன். நிக்லியுடாவ் உள்ளே சென்று ஐஸ் சோடா ஒன்று கொண்டுவரச் சொன்னுன். மற்ருெரு மேஜை அருகே இருவர் உட்கார்ந்திருந்தனர். அவர்களில் ஒருவன் ரோகோஷின்ஸ்கியைப் போல் இருந்தான். உடனே முதல் நாள் இரவு சம்பாஷணை நினைவுக்கு வந்தது. அவனையும் நடாலியையும் மீண்டும் பார்க்கவேண்டும்போல் தோன்றியது. குளிர்ந்த சோடாவை உறிஞ்சிக்கொண்டே, காகிதம், கவர், தபால் தலைமுதலியவை கொண்டுவரச் சொன்னுன். கடிதத் தில் என்ன எழுத வேண்டும் என்பதை யோசித்துப் பார்த் தான். திட்டமாக ஒன்றும் தோன்றவில்லை.

காகிதத்தை வாங்கி, "அன்புள்ள நடாலி நேற்று இரவு உன் கணவனேடு பேசிக்கொண்டிருந்த பொழுது மனவருத் தம் ஏற்பட்டுவிட்டது- அதை அப்படியே விட்டுவிட்டுப் போக நான் விரும்பவில்லை..." என்று எழுதத் தொடங்கினுன் "பிறகு என்ன எழுதுவது? நேற்று நான் சொன்னவற்றிற்

தாக அவனிடம் மன்னிப்புக் கேட்பதா? நான் சரியென்று நினைத்தவற்றைத் தானே சொன்னேன்.? அவற்றையெல்லாம் நான் வாபஸ்பெறுவதாக அவன் நினைத்துவிடுவான். என் சொந்த விஷயங்களில் அவன் தலையிட்டால்...முடியாது..." என்று தனக்குள் கூறிக்கொண்டான். கடிதத்தை முடிக்காமலே மடித்துச் சட்டைப் பைக்குள் போட்டுக்கொண்டான். பிறகு ஹோட்டல்காரனுக்குப் பணம் கொடுத்துவிட்டு மீண்டும் வண்டியில் ஏறிக்கொண்டான்.

உஷ்ணம் முன்னைவிட அதிகமாக இருந்தது. கல்களும் சுவர்களும் உஷ்ணக் காற்றை ஊதித்தள்ளுவது போல் இருந்தது. வண்டிச் சக்கரத்திற்கு மேல் இருந்த தகட்டின்மீது நிக்லியுடாவின் கைபட்டது. வெயிலில் காய்ந்துகொண்டிருந்த அது, கையைச் சுட்டுவிட்டது. குதிரை நிதானமாக ஓடிக்கொண்டிருந்தது. வண்டிக்காரன் தூங்கி விழுந்தான். நிக்லியுடாவ் ஒரு நோக்கமுமில்லாமல் எதிரேபார்த்துக்கொண்டிருந்தான். அவன் மனத்தில் ஒரு சிந்தனையும் இல்லை.

ஒரு பெரிய வீட்டுக் கெதிரில் ஒரு கும்பல் நின்றுகொண்டிருந்தது. அங்கு ஒரு சோல்ஜர் காவல் நின்று கொண்டிருந்தான்.

நிக்லியுடாவ் வண்டியை நிறுத்தச் சொல்லி அங்கு என்ன விசேஷம் என்று விசாரித்தான். "ஒரு கைதிக்கு ஏதோ விபத்து நேர்ந்துவிட்டது" என்று ஒருவன் பதில் அளித்தான் நிக்லியுடாவ் வண்டியை விட்டிறங்கி அருகில் போய்ப் பார்த்தான். சாக்கடை ஓரமாக ஒரு கைதி மல்லாந்து விழுந்து கிடந்தான். அவன் தலை பள்ளத்தில் இருந்தது. அவன் முகமும் கண்களும் சிவந்திருந்தன. கண்கள் மேலே நோக்கிக் கொண்டிருந்தன. சற்று நேரத்திற்கு ஒரு முறை அவன் அகன்ற மார்பு விம்மியது. அவன் முனகிக்கொண்டிருந்தான்.

"சிறையில் இவர்களின் பலத்தை யெல்லாம் ஒழித்து விடுகிறார்கள் பிறகு இப்படி மண்டை வெடிக்கும் வெயிலில் இழுத்துக்கொண்டு போகிறார்கள்" என்றான் அங்கிருந்த ஒருவன்.

"அவன் பிழைக்கமாட்டான்" என்றாள் ஒரு கிழவி.

"ஏன் இப்படி வந்து சூழ்ந்து கொண்டிருக்கிறீர்கள்? போங்கள்" என்று அதட்டினான் போலீஸ்காரன்.

"இவர்களை கவனிக்க வேண்டியவர்கள் கவனிப்பதில்லை. கைதியும் மனிதன்தானே?" என்றன பல குரல்கள்.

"அவன் தலையை மேட்டில் எடுத்துவிட்டு, குடிக்கக்கொஞ்சம் தண்ணீர் கொடுங்கள்" என்றான் நிக்லியுடாவ்.

போலீஸ்காரன் கஷ்டப்பட்டு அவனை மேலே நகர்த்தினன். "தண்ணீர் கொண்டுவரச் சொல்லியிருக்கிறேன்" என்று அவன் நிக்லியுடாவுக்கு பதில் அளித்தான்.

"இங்கு என்ன கூட்டம்?" என்று அதட்டிக் கொண்டே போலீஸ் இன்ஸ்பெக்டர் அங்கு வந்தார். "போங்கள் போங்கள். இங்கு கூட்டம் போடக்கூடாது" என்று சொல்லி, விழுந்து கிடந்தவன் அருகே வந்து பார்த்தார். கைதியின் மரணத்தை எதிர்பார்த்தவர்போல் தலையை ஒருமுறை அசைத்தார். பிறகு போலீஸ்காரன் பக்கம் திரும்பி, "இதைப் பற்றின விவரம் என்ன?" என்று கேட்டார்.

"கைதிகள் கூட்டமாகப் போய்க் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவன் விழுந்துவிட்டான். அவனை விட்டுவிட்டு மேலே செல்லும்படி அவர்களுக்குக் காவல் சென்ற அதிகாரி உத்தரவிட்டார்" என்று போலீஸ்காரன் பதில் அளித்தான்.

"சரி, இவனைப் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டுபோக வேண்டும். ஒரு வண்டியைக் கூப்பிடு" என்றார் அதிகாரி. "வண்டி கொண்டுவர ஆள் போயிருக்கிறான்" என்று போலீஸ்காரன் பதில் அளித்தான்.

வெயிலின் கடுமை பற்றி பக்கத்தில் இருந்த கடைக்காரன் ஏதோ சொன்னன்.

"அது உன் வேலையல்ல, போ" என்று மிரட்டினர் இன்ஸ்பெக்டர்.

"அவனுக்குக்கொஞ்சம் தண்ணீர் கொடுங்களேன்" என்று நிக்லியுடாவ் கூறினன். போலீஸ் அதிகாரி அவனைச்சுடச்சுடப் பார்த்தார். ஆனால் ஒன்றும் சொல்லவில்லை. அதற்குள் ஒருவன் தண்ணீர் கொண்டு வந்தான். போலீஸ்காரன் அதை வாங்கிக் கொண்டான். இறந்துகொண்டிருந்த கைதியின் தாடியை நீக்கி வாயில் கொஞ்சம் தண்ணீர் ஊற்றினன். கைதியால் அதை விழுங்க முடியவில்லை. தாடியின்மீது பெருகிவிட்டது. அதை அவன தலையில் ஊற்று என்றார் இன்ஸ்பெக்டர். போலீஸ்காரன் அவன் குல்லாயை அகற்றி, வழுக்கை விழுந்திருந்த தலையில் தண்ணீரை ஊற்றினன். உடனே கைதி கண்களை அகல விழித்தான். ஆனல் அவனுடைய நிலைமையில் மாத்திரம் மாறுதல் இல்லை. அவன் வாய் அசைந்து கொண்டிருந்தது. உடல் நடுங்கியது.

"இந்த வண்டியில் அவனைத் தூக்கிப்போடு" என்றார். இன்ஸ்பெக்டர். நிக்லியுடாவின் வண்டியை அவர் சுட்டிக் காட்டினர். நான் வேறு ஒருவரை ஏற்றி வந்திருக்கிறேன்" என்றன் வண்டிக்காரன்.

"அந்த வண்டியை நான் அமர்த்திக் கொண்டிருக்கிறேன். இருந்தாலும் பாதகமில்லை. நீங்கள் அவனை ஏற்றிக் கொண்டு போங்கள்" என்றான் நிக்லியுடாவ். "உனக்கு நான் பணம் கொடுத்துவிடுகிறேன்" என்று அவன் வண்டிக்காரனிடம் சொன்னான்.

"ஏன் நிற்கிறாய்? தூக்கி வண்டியில் ஏற்று" என்று கத்தினார் போலீஸ் அதிகாரி. போலீஸ்காரனும் மற்றும் சிலருமாகச் சேர்ந்து கைதியைத் தூக்கி வண்டியில் விட்டனர். அவனால் உட்காரமுடியவில்லை. தலை சாய்ந்துவிட்டது. அவன் உடல் ஆஸனத்திலிருந்து நழுவி விட்டது.

"கீழே படுக்க விடுங்கள்" என்றார் அதிகாரி.

அவனைப் பக்கவாட்டில் படுக்க வைத்து "இப்படியே பிடித்துக்கொண்டு வருகிறேன்" என்றான் போலீஸ்காரன்.

அதிகாரி சுற்றுமுற்றும் பார்த்தார். கைதியின் குல்லாய் அங்கு விழுந்து கிடந்தது. அதை எடுத்து, தண்ணீர் சொட்டிக்கொண்டிருந்த கைதியின் தலைமீது திணித்தார். "போ" என்று பிறகு உத்திரவிட்டார்.

வண்டிக்காரன் கோபத்தோடு சுற்றிலும் ஒரு முறை பார்த்தான். பிறகு போலீஸ் ஸ்டேஷனை நோக்கி வண்டியை நிதானமாக விட்டான். கைதியின் உடல் அடிக்கடி நழுவியது. போலீஸ்காரன் அதை அடிக்கடி இழுத்து ஆசனத்தின் மீது விட்டுக் கொண்டிருந்தான். கைதியின் தலை இப்படியும் அப்படியும் ஆடிக் கொண்டே போயிற்று. நிக்லியுடாவும் வண்டியின் பின்னாலேயே சென்றான்.

## 37

**வ**ண்டி போலீஸ் ஸ்டேஷனை அடைந்தது. வண்டி வந்து நின்றவுடன் சில போலீஸ்காரர்கள் வந்து கைதியின் உடலை இறக்கி மாடிக்குத் தூக்கிச் சென்றனர். அங்கு இருந்த ஒரு சிறிய அறையில் நான்கு படுக்கைகள் இருந்தன. இருபடுக்கைகளில் நோயாளிகள் இருந்தனர். மற்றும் இரு படுக்கைள் காலியாகவே இருந்தன. ஒரு படுக்கையில் கைதியின் உடலைக் கிடத்தினர். நிக்லியுடாவும் அவர்களுடனேயே அங்கு சென்றான். பிறகு ஒரு போலீஸ் அதிகாரியும் டாக்டரும் உள்ளே வந்தனர்.

கைதியின் உடலை டாக்டர் பரிசோதித்தார். ஜீவன் இல்லை. மார்பில் காதை வைத்துப் பார்த்தார். நிசப்தமாக இருந்தது.

"என்ன?" என்று போலீஸ் அதிகாரி கேட்டார்.

"ஒன்றுமில்லை; பிரேத கிடங்குக்கு அனுப்ப வேண்டியதுதான்" என்றார் டாக்டர்.

"உண்மையாகவா? சந்தேகமில்லையே?"

"அப்படித்தான் நினைக்கிறேன். மாத்யூவை வரச் சொல்கிறேன்; அவரும் ஒரு முறை பார்த்து விடட்டும்.

கைதியின் உடலைப் பிரேத கிடங்கிற்குக் கொண்டு போகும்படி அதிகாரி உத்தரவிட்டார். போலீஸ்காரர்கள் மீண்டும் அதைக் கீழே கொண்டு போனார்கள். நிக்லியுடாவும் அவர்களைத் தொடர்ந்து சென்றான். போலீஸ் அதிகாரி அவனைப் பார்த்து, "என்ன வேண்டும்?" என்று கேட்டார்.

"ஒன்றுமில்லை".

"ஒன்றுமில்லையா? அப்படியானால் வெளியே போங்கள்."

நிக்லியுடாவ் தன் வண்டிக்குத் திரும்பினான். வண்டிக்காரன் தூங்கிக் கொண்டிருந்தான். நிக்லியுடாவ் அவனை எழுப்பிவிட்டு வண்டியில் உட்கார்ந்தான். வண்டி ரயில்வே ஸ்டேஷனை நோக்கிச் சென்றது.

அவர்களுடைய வண்டி நூறு கஜதூரம் போவதற்குள் எதிரே மற்றொரு வண்டி வந்து கொண்டிருந்தது. துப்பாக்கியோடு அதில் ஒரு சோல்ஜர் உட்கார்ந்திருந்தான். அதில் மற்றொரு கைதியின் உடல் இருந்தது. "என்ன நடந்திருக்கிறது பாருங்கள்" என்று சொல்லிக் கொண்டே வண்டிக்காரன் வண்டியை நிறுத்தினான். நிக்லியுடாவ் இறங்கி எதிரே வந்த வண்டியைத் தொடர்ந்து சென்றான்.

வண்டி போலீஸ் ஸ்டேஷனை அடைந்தது. முன்போலவே கைதியின் உடலைத் தூக்கிச்சென்றார்கள். நிக்லியுடாவும் கூடவே சென்றான். ஒரு போலீஸ்காரன், "என்ன வேண்டும்?" என்று அவனைக் கேட்டான். நிக்லியுடாவ் பதில் சொல்லவில்லை.

நிக்லியுடாவ் கைதியின் முகத்தைப் பார்த்தான். இளைஞன் முகம் பால் வடிந்தது. நீலம் பாய்ந்த உதட்டில் புன்சிரிப்பு மலர்ந்திருந்தது. கருப்பு மீசை அவன் முகத்தின் அழகை எடுத்துக்காட்டியது. இளந்தாடியும் வளர்த்திருந்தான். அவன் முகத்தில் அமைதியும் அன்பும் குடிகொண்டிருந்தன. நல்ல கட்டுமஸ்தான தேகம். நல்ல வாழ்க்கை நாசமாகிவிட்டது என்பது அவனைப் பார்க்கும் பொழுதே தெரிந்தது. ஆனால் அவனுக்காக துக்கப்படுவார் யாரும் இல்லை. அவன் மாண்டதைத் தொந்தரவாகத்தான் சிலர் கருதினார்கள்.

"இவன் எதனால் மாண்டான்?" என்று நிக்லியுடாவ் டாக்டரைப் பார்த்துக் கேட்டான்.

"வெயிலால் தாக்குண்டு ஏன் ஜனங்கள் சாகிறார்கள்? அதனால்தான் அவனும் செத்தான். குளிர்காலத்தில் வேலையில்லாமல் உள்ளே உட்கார்ந்திருக்கிறார்கள். இவர்களை திடீரென்று வெயிலில் கொண்டுவந்தால் தாங்குவதில்லை. கும்பலாகப் போகும்பொழுது ஸ்வாசிக்க நல்ல காற்று இல்லை சூரிய வெப்பம் தாக்குகிறது."

"அப்படியானால் ஏன் இவர்களை வெளியே கொண்டு வருகிறார்கள்?"

"கொண்டு வருகிறவர்களைத்தான் கேட்கவேண்டும்; அது இருக்கட்டும் நீங்கள் யார்?"

"நான் அயலூர்."

"அப்படியா? போய் வாருங்கள். உங்களோடு பேச அவகாசமில்லை" என்றார் டாக்டர்.

நிக்லியுடாவ் தன் வண்டிக்குத் திரும்பினான். வண்டிக்காரன் மறுபடியும் தூங்கிக்கொண்டிருந்தான்.

## 38

நிக்லியுடாவ் ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தான். அதற்குள் கைதிகள் வண்டி ஏறிவிட்டனர். கைதிகளை வழி அனுப்புவதற்காகப் பலர் பிளாட்பாரத்திற்கு வந்திருந்தனர். வண்டியை அணுக அவர்கள் அனுமதிக்கப்படவில்லை.

கைதிகளோடு சென்ற காவல் படையினருக்கு அன்று அதிகக் கவலை. வழியில் ஐந்து கைதிகள் வெயில் தாங்காமல் மாண்டுவிட்டனர்.* இவ்விதம் மாண்ட இருவரை நிக்லியுடாவ் கண்டான். மற்றொருவனின் உடலை அருகில் இருந்த போலீஸ் ஸ்டேஷனுக்கு அனுப்பினர். ரயில்வே ஸ்டேஷனில் இருவர் இறந்தனர். இவர்கள் இறந்துவிட்டார்களே என்று கைதிகள் கவலைப்படவில்லை. இத்தகைய சந்தர்ப்பங்களில் சட்ட பூர்வமாகச் செய்யவேண்டிய சடங்குகள் ஏதாவது விட்டுப்போய் விட்டால் என்ன செய்வது என்ற கவலைதான் அவர்களுக்கு வெயில் அதிகமாக உள்ள தினத்தில் இந்த வேலைகளைச் செய்வது இன்னும் கஷ்டம்.

*1880-ம் வருஷத்தில், புடிர்ஸ்கி, சிறையிலிருந்து நிஷ்னி ரயில்வே ஸ்டேஷனுக்குச் செல்கையில் 5 கைதிகள் சூரிய வெப்பத்தால் தாக்குண்டு மாண்டனர்—டால்ஸ்டாய்.

ஒரு சார்ஜெண்டுக்கு நிக்லியுடாவ் லஞ்சம் கொடுத்தான். காடுஷாவைப் பார்க்க அவன் அனுமதித்தான்: வேறு அதிகாரிகள் பார்ப்பதற்குள் பேச்சை சீக்கிரம் முடித்துக்கொள்ளும்படி அவன் கூறினன். நிக்லியுடாவ் ஒவ்வொரு பெட்டியாக கவனித்துக்கொண்டே போனன். ஒவ்வொன்றிற்குள்ளிருந்தும் விலங்கு சப்தமும், கைதிகளின் அர்த்தமற்ற பேச்சுச் சப்தங்களும் கேட்டுக்கொண்டிருந்தன. ஆனல் இறந்த கைதிகளைப் பற்றி ஒரு வார்த்தை கூடக் கேட்கவில்லை.

கடைசியாக காடுஷா இருந்த பெட்டிக்கு வந்து சேர்ந்தான் நிக்லியுடாவ். ஜன்னல் வழியாக எட்டிப்பார்த்தான். வியர்வை நாற்றத்தோடு கூடிய உஷ்ணக்காற்று குப்பென்று அடித்தது.

தியோடேர்ஸியாதான் முதலில் நிக்லியுடாவைக் கவனித்தாள். உடனே அவள் காடுஷாவை இடித்து, நிக்லியுடாவைச் சுட்டிக்காட்டினள். காடுஷா அவசரமாக கைகுட்டையை எடுத்துத்தலையில் கட்டிக்கொண்டு ஜன்னல் அருகே வந்தாள்.

"வெயில் ரொம்ப அதிகமாக இருக்கிறது" என்று சொல்லி விட்டுப் புன் முருவல் புரிந்தாள் காடுஷா.

"நான் அனுப்பிய பொருள்கள் வந்து சேர்ந்தனவா?" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"சேர்ந்தன."

"வேறு ஏதாவது வேண்டுமா?"

"வேண்டாம்"

"குடிக்க ஏதாவது கிடைத்தால்" என்ருள் தியோடோஸியா.

"குடிக்க ஏதாவது கிடைத்தால்," என்று காடுஷாவும் திருப்பிச் சொன்னள்.

"ஏன்? உங்களுக்கு இங்கு தண்ணீர் கிடைக்கவில்லையா?"

"ஏதோ கொஞ்சம் தண்ணீர் விட்டார்கள். ஆனல் அது தீர்ந்து போய் விட்டது."

"நான் காவல்காரர்களைக் கேட்கிறேன். நாம் நிஷ்னி போகும் வரை ஒருவரை ஒருவர் சந்திக்க முடியாது."

"ஏன்? நீங்களும் வருகிறீர்களா?" என்று ஒன்றும் அறியாதவள் போல் நிக்லியுடாவைக் கேட்டாள். பிறகு சந்தோஷத்துடன் அவனை நோக்கினள்.

"நான் அடுத்த வண்டியில் வருகிறேன்." என்ருன் அவன்.

காடுஷா ஒன்றும் பதில் சொல்லவில்லை. ஒரு நீண்ட பெருமூச்சுத் தான் விட்டாள்.

பன்னிரண்டு கைதிகளைக் கொன்று விட்டார்களாமே, நிஜம்தானு?" என்று புருஷத் தொண்டையில் கேட்டாள் ஒரு கிழக்கைதி. அவள் தான் கோராபிளேவா.

"பன்னிரண்டு பேர் மாண்டதாகத் தெரியவில்லை. இரண்டு பேரைத்தான் நான் பார்த்தேன் " என்று நிக்லியுடாவ் பதில் அளித்தான்.

"பன்னிரண்டு பேர் இறந்து விட்டதாகச் சொன்னுர்கள். கொன்றவர்களை ஒன்றும் செய்யமாட்டார்களா? பிசாசுகள்!"

"பெண்களில் யாருக்கும் உடம்பு ஒன்றுமில்லையே?" என்று நிக்லியுடாவ் கேட்டான்.

"பெண்கள் அதிக பலசாலிகள்" என்று மற்ருெரு ஸ்திரீ சொல்லி விட்டுச் சிரித்தாள். "ஒரே ஒரு பெண்தான் வர விரும்ப வில்லை. அவள் பக்கத்துப் பெட்டியில் இருக்கிருள்" என்று அவள் சுட்டிக் காட்டினுள். அங்கிருந்து முனகல் சப்தம் வந்து கொண்டிருந்தது.

காடுஷாவும் முகத்தில் சந்தோஷம் தாண்டவமாட, "எங்களுக்கு ஏதாவது வேண்டுமா என்று கேட்கிறீர்கள்" அந்தப் பெண்ணை விட்டு விட்டுப்போக ஏற்பாடு செய்ய முடியாதா ? அவள் ரொம்பவும் கஷ்டப்படுகிருள். நீங்கள் அதிகாரிகளைப் பார்த்துச் சொன்னுல்—" என்ருள்.

"சரி, சொல்கிறேன்."

"இன்னொரு விஷயம். தியோடோஸியா தன் கணவன் டாரஸைப் பார்க்க முடியாதா? அவன் உங்களோடு தானே வருகிருன்?" என்று கேட்டாள் காடுஷா.

அதற்குள் வேருெரு சார்ஜண்ட் அங்கு வந்தான். "ஐயா, கைதிகளோடு பேசக்கூடாது" என்ருன் அவன். நிக்லியுடாவ் அங்கிருந்து போய் விட்டான். நோயாளிக் கைதியைப்பற்றியும், டாரஸைப்பற்றியும் பேச அங்கு அதிகாரிகள் யாராவது இருக்கின்றனவா என்று பார்த்தான். ஒருவரையும் காணவில்லை. காவல்காரர்களைக் கேட்டான். அவர்களும் சீக்கிரம் பதில் அளிக்கவில்லை. எல்லாரும் பர பரப்புடன் ஏதேதோ வேலைகளில் ஈடுபட்டிருந்தனர். இரண்டாவது மணி அடித்த பிறகு தான் அதிகாரியைப் பார்க்க முடிந்தது.

(ரஷியாவில் ரயில் புறப்படுவதற்கு மூன் மூன்று முறை மணி அடிப்பது வழக்கம்).

"என்ன வேண்டும்?" என்று அந்த அதிகாரி கேட்டார்.

"பெண் கைதி ஒருத்தி அசெளக்கிய முற்றிருக்கிருள். அவளை—"

"இருக்கட்டும்; அவளை நாங்கள் பிறகு கவனித்துக்கொள் வோம்" என்ருர் அதிகாரி.

வண்டி புறப்பட்டுவிட்டது. பிளாட்பாரத்தில் இருந்தவர் களும், வண்டியில் இருந்தவர்களும் அழும் சப்தம் கேட்டது.

பிளாட்பாரத்தில் டாரஸின் பக்கத்தில் நிக்லியுடாவ் நின் றிருந்தான். நகர்ந்து செல்லும் வண்டிகளை அவன் கவனித்துக் கொண்டிருந்தான். ஜன்னல்களில் ஆண் கைதிகளின் மொட் டைத் தலைகள் காணப்பட்டன. பெண் வண்டி ஜன்னல்களில் பெண்களின் முகங்கள் தெரிந்தன. காடுஷா இருந்த வண்டியும் அவனைக் கடந்து சென்றது. மற்றவர்களுடன் காடுஷாவும் ஜன்னல் அருகே நின்றிருந்தாள். அவள் நிக்லியுடாவைப் பார்த்துப் பரிதாபமாகச் சிரித்தாள்.

## 39

நிக்லியுடாவின் வண்டி புறப்பட இன்னும் இரண்டு மணி நேரம் இருந்தது. தன் அக்காளைப் போய்ப்பார்த்துவிட்டு வரலாமா என்று மீண்டும் தோன்றியது. ஆனால் அன்றுகாலை தோன்றிய எண்ணங்களுக்குப் பின் அங்கு போகப் பிடிக்க வில்லை. முதல் வகுப்புச் சிற்றுண்டிச் சாலையில் ஒரு சோபா வில் உட்கார்ந்திருந்தான். மனக்குழப்பமும் அலுப்பும் அதிக மாக இருந்ததால் தன் கையின் மீதே தலையை வைத்துப் படுத் துத் தூங்கிவிட்டான்.

சிறிது நேரத்திற்குப்பின் ஒரு வேலைக்காரன்வந்து அவனை எழுப்பினன். "நிக்லியுடாவ் பிரபு நீங்கள்தானே? யாரோ ஒரு ஸ்திரீ உங்களைப் பார்க்க வந்திருக்கிருர்கள்" என்ருன்.

நிக்லியுடாவ் கண்களைத் துடைத்துக்கொண்டு எழுந்தான். அன்று காலை நடந்தவற்றையெல்லாம் ஞாபகப்படுத்திப்பார்த் தான். கைதிகளின் ஊர்வலத்தையும், மாண்ட கைதிகளின் உடல்களையும், கைதிகள் அடைபட்டுக் கிடந்த ரயில் பெட்டி களையும் அவன் மனக் கண்ணுல் கண்டான். ஆனல் அவன் பிரத்தியக்ஷமாகக் கண்டது வேருக இருந்தது. எதிரே மேஜை

யின் மீது ஒரு சிறிய தொட்டி பூங்கொத்தைத் தாங்கி நின்று கொண்டிருந்தது. பரிசாரகர்கள் அங்குமிங்கும் போய்க்கொண்டிருந்தனர். அறையின் கோடியில் ஒரு பீரோ, வரிசை வரிசையான புட்டிகள், பழத்தட்டுகள் எல்லாம் இருந்தன.

நிக்லியுடாவ் எழுந்து உட்கார்ந்து ஏதோ யோசித்துக் கொண்டிருந்தான். அங்கு இருந்தவர்கள் ஆவலுடன் எதையோ பார்த்துக் கொண்டிருந்தனர். நிக்லியுடாவும் அங்கு போய்ப் பார்த்தான். ஒரு ஸ்திரீயை நாற்காலியில் உட்கார வைத்துச் சிலர் தூக்கிக்கொண்டு போயினர். அவளைத் தொடர்ந்து சிலர் வரிசையாக வந்து கொண்டிருந்தனர். முதலில் வந்த காவற்காரன் நிக்லியுடாவுக்குத் தெரிந்தவனாகத் தோன்றினான். நாற்காலிக்குப் பின்னால் கோர்ச்சாகின் பிரபுவும், மிஸ்ஸியும் அவர்களுடைய குடும்பத்தைச் சேர்ந்த மற்றவர்களும் வந்தனர். நிக்லியுடாவுக்கு அறிமுகமாகியிருந்த ஆஸ்டன் என்பவன் மிஸ்ஸியோடு ஹாஸ்யமாக ஏதோ பேசிக் கொண்டு வந்தான். மிஸ்ஸி அதைக் கேட்டுச் சிரித்துக் கொண்டே வந்தாள். அவர்களுடைய டாக்டர் கோபத்துடன் சுருட்டுப் புகையை இழுத்துக்கொண்டே பின்னால் வந்தார். கோர்ச்சாகின் குடும்பத்தார் இந்த ஊரைக் காலி செய்துவிட்டு வேறு ஊருக்குக் குடிபோய்க் கொண்டிருந்தனர். அங்கு இருந்தவர்கள் அவர்களை ஒருவித மரியாதை உணர்ச்சியுடன் பார்த்தனர். நாற்காலியோடு சென்றவர்கள் பெண்கள் உட்காரும் அறைக்குள் போய் மறைந்துவிட்டனர். கோர்ச்சாகின் பிரபு, மிஸ்ஸி, ஆஸ்டென் ஆகியவர்கள் மாத்திரம் ஏதோ சாப்பிடுவதற்காக சிற்றுண்டிச் சாலையிலேயே நின்றுவிட்டனர். அவர்கள் உட்காரும் சமயத்தில், அவர்களுக்குத் தெரிந்த யாரையோ வாசற்படிக் கருகே பார்த்தார்கள். உடனே மிஸ்ஸியும் ஆஸ்டெனும் அங்கு சென்றனர். அங்கு இருந்தவள் நடாலிதான்.

அக்ரபெனு பெட்ரோவ்னுவுடன் நடாலி உள்ளே நுழைந்தாள். நடாலி தன் தம்பியையும் மிஸ்ஸியையும் ஒரே சமயத்தில் பார்த்தாள். நிக்லியுடாவ் பக்கம் தலையை அசைத்துவிட்டு மிஸ்ஸியை நோக்கி அவள் நடந்தாள். மிஸ்ஸியை முத்தமிட்டு விட்டு உடனே தன் தம்பி பக்கம் திரும்பினாள்.

"கஷ்டப்பட்டு உன்னைக் கண்டுபிடித்தேன்" என்றாள் நடாலி, தன் தம்பியிடம். மிஸ்ஸியையும் மற்றவர்களையும் விசாரிப்பதற்காக நிக்லியுடாவ் எழுந்தான். தங்கள் வீட்டில் தீப்பற்றியதைப்பற்றியும் அதனால்தான் ஊரைவிட்டே போகவேண்டியிருப்பதாகவும் மிஸ்ஸி சொன்னாள். ஆஸ்டென் ஒரு தீ விபத்தைப்பற்றி வேடிக்கையாகப் பேசத் தொடங்கினான். நிக்லியுடாவ் அதைக் கவனியாமல் தன் அக்காள் பக்கம் திரும்பி, "நீ இங்கு வந்ததைப் பற்றி எவ்வளவு சந்தோஷம் தெரியுமா?" என்றான்.

"நான் வந்து வெகுநேரமாயிற்று. அக்ரபெனா பெட்ரோவ்னாவும் வந்திருக்கிறாள்" என்று, சிறிது தூரத்தில் நின்றிருந்த அக்ரபெனாவைச் சுட்டிக்காட்டினாள். அவள் நிக்லியுடாவைப் பார்த்து வணங்கினாள். அவள் முகத்தில் ஒருவித கலவரம் காணப்பட்டது.

"நீ வந்தது எனக்கு மிகுந்த சந்தோஷமளிக்கிறது." என்று நிக்லியுடாவ் மீண்டும் திரும்பிச் சொன்னான். "உனக்குக் கடிதம் போட எழுதத் தொடங்கினேன்."

"நிஜமாகவா? எதைப் பற்றி?" என்று ஆச்சரியத்துடன் கேட்டாள்.

அக்காளும் தம்பியும் அந்தரங்கமாக ஏதோ பேசப்போகிறார்கள் என்பதை அறிந்து மிஸ்ஸியும் ஆஸ்டெனும் அங்கிருந்து அகன்றனர். நிக்லியுடாவும் நடாலியும் ஜன்னல் அருகே இருந்த ஒரு வெல்வெட் ஸோபாவில் உட்கார்ந்து பேசத் தொடங்கினர்.

"நேற்று, மறுபடியும் உன்னிடம் வந்து வருத்தம் தெரிவிக்க வேண்டுமென்று நினைத்தேன். ஆனால் உன் கணவன் என்ன நினைப்பானோ என்று தோன்றியது. மிகுந்த ஆத்திரத்துடன் நான் பேசிவிட்டேன். பிறகு அதைப்பற்றி மிகவும் வருந்தினேன்."

"எனக்குத் தெரியும். அதையெல்லாம் மனமாறச் சொல்லவில்லை என்பது நன்றாகத் தெரியும். உனக்குத்தான் தெரியுமே!" என்றான். அதற்கு மேல் அவளால் பேசமுடியவில்லை. துக்கம் வந்துவிட்டது. அவன் கையைப்பிடித்துக்கொண்டாள்.

அவன் வார்த்தை புரியவில்லை. ஆனால் அதன் அர்த்தம் அவனுக்கு நன்றாகப் புரிந்துவிட்டது. "என் கணவன் மீது இருக்கும் அன்பைக் காட்டிலும் உன்மீது உள்ள அன்பைத்தான் நான் அதிகம் மதிக்கிறேன். ஏதாவது தப்பபிப்பிராயம் ஏற்பட்டால் மிகவும் வருத்தமாக இருக்கிறது" என்பது தான் அவளுடைய கருத்து.

"சரி, சரி, இன்று, எவ்வளவு கோரமான காட்சியைக் கண்டேன் தெரியுமா?" என்று ஆரம்பித்தான் நிக்லியுடாவ். அன்று உயிரிழந்த இரண்டாவது கைதியை நினைத்துத்தான் இதைச் சொன்னான். "இரண்டு கைதிகளைக் கொன்றுவிட்டார்கள்." என்றான்.

"கொன்றுவிட்டார்களா? எப்படி?"

"ஆமாம்; கொல்லத்தான் கொன்றார்கள். மண்டை வெடிக்கும் வெயிலில் இழுத்துக்கொண்டு போனார்கள். உஷ்ணம் தாங்காமல் இருவர் மாண்டனர்."

"என்ன? இன்று! இப்பொழுதா!"

"ஆமாம். இப்பொழுதுதான், பிணங்களை என் கண்ணால் பார்த்தேன்."

"கொன்றார்கள் என்றாயே எப்படி? யார் கொன்றார்கள்?"

"கைதிகளை இந்த வெய்யிலில் போகும்படி நிர்ப்பந்தித்தார்கள். அது கொலைதானே?" என்று நிக்லியுடாவ் வருத்தத்துடன் கூறினான். இவளும் தன் கணவனைப் போலவே நினைக்கிறாளென்று அவனுக்குத் தோன்றியது.

இதற்கிடையில் அருகே வந்திருந்த அக்ரபெனா பெட்ரோவ்னா, "அட தெய்வமே!" என்றாள்.

"ஆமாம்; இந்த அபாக்கியசாலிகளுக்கு என்ன கொடுமை செய்யப்படுகிறது என்பது நமக்குக் கொஞ்சம் கூடத் தெரிவதில்லை; ஆனால் அது தெரிய வேண்டும்" என்று சொல்லிவிட்டு, கோர்ச்சாகின் பிரபுவைப் பார்த்தான் நிக்லியுடாவ். அவர் அப்பொழுதுதான் நிக்லியுடாவ் பக்கம் திரும்பினார். அவர் எதிரே ஒரு புட்டி இருந்தது.

"நிக்லியுடாவ் நீங்களும் வந்து கொஞ்சம் சிற்றுண்டி சாப்பிடுங்களேன். நீண்ட பிரயாணத்திற்கு முன் சாப்பிட்டால் சௌக்கியமாக இருக்கும்" என்று அவர் அழைத்தார்.

நிக்லியுடாவ் மறுத்துவிட்டுத் திரும்பினான்.

"நீ என்ன செய்யப்போகிறாய்?" என்று நடாலி பேச்சைத் தொடங்கினாள்.

"என்னால் முடிந்ததைச் செய்யப்போகிறேன். என்ன செய்யப்போகிறேன் என்பது எனக்கே தெரியவில்லை. ஏதாவது செய்தாக வேண்டும். என்னால் முடிந்ததைச் செய்யத்தான் போகிறேன்."

"அவர்கள் விஷயம் என்ன? தீர்ந்துபோய் விட்டதா?" என்று கூறி கோர்ச்சாகின் பிரபுவைப் பார்த்தாள் நடாலி.

"பூரணமாகத் தீர்ந்துபோய் விட்டது. இருதரப்பிலும் வருத்தம் ஏற்படாத வகையில் தீர்ந்து விட்டது."

"இதற்காக நான் ரொம்பவும் வருந்துகிறேன். அவளை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. உன்னை நீயே ஏன் கட்டுப்படுத்திக் கொள்ள விரும்புகிறாய்? நீ எதற்காகப் போகிறாய்?"

"இந்த சம்பாஷணையை முடிக்க விரும்புபவன்போல,"நான் போக வேண்டும். அதனால்தான் போகிறேன்" என்றான். "என் விருப்பத்தை யெல்லாம் சொல்லி விட்டால் என்ன?" என்று தோன்றியது அவனுக்கு. "நான் காடுஷாவை மணக்க விரும்பு

வதைப் பற்றித்தானே கேட்கிருய்? நான் அப்படிச் செய்ய வேண்டுமென்று உறுதிகொண்டு விட்டேன்'' என்ருன். இதைப் பற்றிப் பேசும்பொழுதெல்லாம் ஏற்படுவது போலவே இப்பொழுதும் அவன் குரல் நடுங்கியது. "என் தியாகத்தை அவள் ஏற்க விரும்பவில்லை. அவளே தியாகம் செய்ய விரும்புகிருள். அவளுடைய நிலைமைக்கு அது பெரிய விஷயம்தான். இது தற்காலிக உணர்ச்சி வேகத்தினுல் ஏற்பட்ட தியாகமென்ருல் அதை நான் ஏற்க முடியாது. அதனுல்தான் அவனுடன் கூடவே செல்கிறேன். அவள் எங்கு இருக்கிருளோ அங்கேயே இருப்பேன். அவள் துன்பத்தைக் குறைக்க என்னுல் இயன்றதைச் செய்வேன்.

நடாலி ஒரு பதிலும் அளிக்கவில்லை. அக்ரபெனு பெட்ரோவ்னு, கேள்வி கேட்பது போன்ற பார்வையுடன் அவனை நோக்கினுள். தலையை அவள் ஒருமுறை குறுக்கிக்கொண்டாள். கோர்ச்சாகின் குடும்பத்தாரின் கோஷ்டி மறுபடியும் கிளம்பியது. கோர்ச்சாகினு சிமாட்டி, தன்னைத் தூக்கிச் சென்றவர்களை நிறுத்தச் சொல்லி விட்டு நிக்லியுடாவைச் சமிக்ஞை செய்து அழைத்தாள். "வெயில் தாங்க முடியவில்லை'' என்று சொல்லி விட்டு ரஷ்ய கால நிலையின் கொடுமையைப்பற்றி அவள் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தாள். தங்கள் வீட்டிற்கு ஒருமுறை கட்டாயம் வரும்படி நிக்லியுடாவை அழைத்துவிட்டு, மீண்டும் தன்னை தூக்கிக் கொண்டு போகும்படி ஆட்களுக்கு சமிக்ஞை செய்தாள். அந்த கோஷ்டி முதல் வகுப்பு வண்டியின் பக்கத்தில் திரும்பியது. நிக்லியுடாவ் டாரஸ் போர்ட்டர் ஆகியவர்கள் மூன்ருவது வகுப்பு வண்டியருகே வந்து நின்ருர்கள். "இவன் தான் என் தோழன் டாரஸ்'' என்று அவனைத் தன் சகோதரிக்கு அறிமுகப் படுத்தினுன் நிக்லியுட்டாவ். அவனைப்பற்றி முன்பே சொல்லி யிருக்கிருன்.

"நீ மூன்ருவது வகுப்பில் போகப் போகிறதில்லை யென்று நினைக்கிறேன்'' என்ருள் நடாலி.

"மூன்ருவது வகுப்பில் தான் போகப் போகிறேன். எனக்கு அது தான் பிடித்திருக்கிறது. டாரஸும் நானும் போகிறேரும். மற்ருெரு விஷயம்; குஸ்மின்ஸ்கி நிலங்களை இன்னும் நான் குடியானவர்களுக்குக் கொடுக்கவில்லை. நான் இறந்து போய் விட்டால் அந்த நிலங்கள் உன் குழந்தைகளைச் சாரும்'' என்று கூறினுன் நிக்லியுட்டாவ்.

"அப்படிச் சொல்லாதே''

"அவற்றையும் கொடுத்து விட்டால் மற்ற சொத்துக்கள் உன் குழந்தைகளைச் சாரும். நான் விவாகம் செய்து கொள்வேனென்று நினைக்க வில்லை; செய்து கொண்டாலும் குழந்தைகள் பிறக்காது. ஆகையால்—''

"அப்படியெல்லாம் பேசாதே!" என்றாள் நடாலி, ஆனால் அவன் அப்படிச் சொன்னதைக்கேட்டு அவள் சந்தோஷப் பட்டாள் என்பதை நிக்லியுடாவ் கண்டான்.

பெரும்பாலான பிரயாணிகள் வண்டியில்ஏறி உட்கார்ந்து விட்டனர். வண்டிக் கதவுகளை கார்டு மூடினார். பிரயாணி களை வண்டியில் ஏறிக்கொள்ளும்படியும், மற்றவர்களைக்கீழே இறங்கும்படியும் அவர் கூறிக்கொண்டே வந்தார். நிக்லி யுடாவும் வண்டியில் ஏறிக்கொண்டான். உள்ளே உஷ்ணமும் நாற்றமும் நிறைந்திருந்தது.

என்ன பேசலாம் என்று யோசித்துக்கொண்டே நடாலி நின்றிருந்தாள். "போய்க் கடிதம் எழுது" என்று சொல்லக் கூட அவளால் முடியவில்லை. வழக்கமாகச் சொல்லும் இந்த வார்த்தையைச் சொல்லும் பொழுது அவர்களுக்குச் சிரிப்பு வந்து விடுவது வழக்கம். பணத்தைப்பற்றிய பேச்சு வந்த தால் அவர்களுக் கிடையில் ஒருவித அன்னிய மனோபாவம் ஏற்பட்டு விட்டது. சகோதர உணர்ச்சி மறைந்து விட்டது. வண்டி புறப்பட்ட பொழுது "போய் வா" "போய்வா" என்பதைத் தவிர அவளால் வேறு ஒன்றும் சொல்ல முடிய வில்லை.

அவளை விட்டுப் பிரிந்து போவதால் நிக்லியுடாவுக்கும் சந்தோஷமாகத் தான் இருந்தது. ஒரு காலத்தில் அவன் அன்பிற்குப் பாத்திரமாக இருந்த நடாலி மறைந்து விட்டாள். வெறுக்கத்தக்க ஒரு துர்த்தனின் அடிமையான நடாலி தான் இப்பொழுது இருக்கிறாள். அவளுடைய கணவனுக்கு சந் தோஷம் அளிக்கக்கூடிய விஷயத்தைச் சொன்ன பொழுது அவள் முகம் பிரகாசித்தது. அதுவே இதை நன்றாக எடுத் துக் காட்டியது. இதை நினைக்க அவனுக்கு வருத்தமாக இருந்தது.

## 40

**நா**ள் முழுவதும் வெயில் காய்ந்துகொண்டிருந்த மூன்று வது வகுப்பு வண்டிக்குள் உஷ்ணம் தாங்க வில்லை. வண்டி புறப்பட்டு கட்டிடங்களைத் தாண்டிச் செல்லும் வரை மூச்சு விடுவதற்கு நல்ல காற்றுக் கூட இல்லை.

"ஆமாம்; கொன்றுவிட்டார்கள்" என்று தன் அக்கா ளிடம் சொன்ன வார்த்தையைத் தானே மீண்டும் திருப்பிச் சொல்லிக் கொண்டான். மாண்ட இரண்டாவது கைதியின் அழகிய முகமும், புன்சிரிப்புத் தவழும் அதரங்களும் அவன் மனத்தில் அப்படியே பதிந்திருந்தன. "இவனைக் கொலை

செய்திருக்கிருர்கள். ஆனல் கொலை செய்தவன் யார் என்பது ஒருவருக்கும் தெரியவில்லை. இதுதான் பயங்கரமான விஷயம்'' என்று நினைத்தான். மாஸ்லென்னிகோவின் உத்தரவின்பேரில்தான் இவளை வெளியே அழைத்து வந்தார்கள், ஆனல் மாஸ்லென்னிகோவ் வழக்கமான உத்தரவைப் பிறப்பித்தான். ஆகையால் இதற்கு தான் குற்றவாளியல்லவென்று அவன் நினைப்பான். டாக்டர் ஜாக்கிரதையாகத்தான் கைதிகளைப் பரிசோதித்தார். பலவீனமாக இருந்தவர்களை விலக்கிவிட்டார். வெயில் இவ்வளவு கடுமையாக இருக்குமென்று அவர் எப்படி எதிர்பார்க்க முடியும்? அல்லது கைதிகளை இவ்வளவு நேரம் கழித்து வெளியே அழைத்துச் செல்வார்கள் என்பதைத்தான் கண்டாரா? சிறை இன்ஸ்பெக்டர்? இந்த தினத்தில் இத்தனை பேரை அனுப்பவேண்டுமென்று அவருக்கு உத்தரவு வந்தது. அதன்படி அவர் நடந்தார். காவல் அதிகாரியும் குற்றவாளியாக இருக்க முடியாது. அனுப்பும் கைதிகளை அழைத்துச் செல்வது அவருடைய வேலை. பலசாலிகளான இருவர் வெயிலைத் தாங்க மாட்டார்கள் என்பது அவருக்குத் தெரியுமா என்ன? ஒருவரும் குற்றவாளியல்ல. இருந்தாலும் குற்றமற்றவர்களால்தான் இவர்கள் கொலையுண்டார்கள்.

“சில சமயங்களில் மனிதர்களுக்கிடையில் மனித உணர்ச்சி இருக்கவேண்டிய அவசியமில்லை என்று, கவர்னர்கள், இன்ஸ்பெக்டர்கள், போலீஸ் அதிகாரிகள் எல்லாரும் நினைக்கின்றனர், அதனல்தான் இப்படியெல்லாம் நடக்கிறது. இவர்கள் கவர்னராகவோ, இன்ஸ்பெக்டராகவோ, காவல் அதிகாரியாகவோ இல்லாமலிருந்திருந்தால் என்ன செய்திருப்பார்கள்? இவ்வளவு பேரையும் இந்த வெயிலில் அனுப்புவதற்கு முன்னல் இருபதுமுறை ஆலோசித்திருப்பார்கள். வெயிலில் அவஸ்தைப்படும் ஒருவனை நிழலுக்கு அழைத்துச் சென்று தண்ணீர் கொடுத்திருப்பார்கள். அப்படியும் விபத்து நேர்ந்துவிட்டால் வருத்தப்பட்டிருப்பார்கள். ஆனல் இப்பொழுது இவர்கள் அப்படிச் செய்யத்தவறியதோடு நிற்கவில்லை. பிறர் செய்வதையும் தடுத்தார்கள். மனிதர்களைப் பற்றி இவர்கள் சிந்திக்கவில்லை. தங்கள் உத்தியோகத்தைப் பற்றித்தான் நினைத்தார்கள். அந்த உத்தியோகம் மனித உறவுகளுக்கு அப்பாற்பட்டதென மதித்தார்கள். அன்பைக் காட்டிலும் மற்றெல்லாம் முக்கியமானதென்று நினைத்துவிட்டால், எந்தக் குற்றத்தையும் மனமாறச் செய்யலாம்'' என்று சிந்தித்துக்கொண்டிருந்தான் நிக்லியுடாவ். அவன் சிந்தனையில் மூழ்கியிருந்ததால் காலநிலையில் ஏற்பட்டிருந்த மாறுதலைக்கூட கவனிக்கவில்லை. சூரியனை ஒரு பெரிய மேகப்படலம் மறைத்துக்கொண்டிருந்தது. வெகுதூரத்திற்கப்பால் கனத்த மழை பெய்து கொண்டிருந்தது. காற்றில் நீர்த்துளிகள்

கலந்து வந்தன. மேகத்தில் அடிக்கடி மின்னல் வெட்டியது. அதிலிருந்துவந்த இடியோசை ரயிலின் கடகடா சப்தத்தோடு கலந்தது. மண்வாசனையுடன் கலந்துவந்த குளிர்ந்த காற்றை நிரம்ப உள்ளுக்கு இழுத்தான். பக்கத்தில் இருந்த பயிர் நிலங்களையும் பசுந்தோப்புகளையும் பார்த்து அவன் ஆனந்தித்துக் கொண்டிருந்தான். மழை அதிகநேரம் நீடிக்கவில்லை. சற்றுநேரத்திற்கெல்லாம் சூரியன் மீண்டும் தோன்றியது. அடிவானத்திற்குச் சற்று மேலே வானவில் உருவாகியிருந்தது. அதன் ஊதாவர்ணம் பளிச்சென்த் தெரிந்தது. இந்த இயற்கையின் திருவிளையாடல்கள் முடிந்தவுடன், "நான் எதைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தேன்?" என்று மறுபடியும் யோசிக்கத் தொடங்கினன்.

"ஆமாம்! அவர்களைப்பற்றித் தான்! இன்ஸ்பெக்டர் காவல் அதிகாரி இவர்களைப்பற்றித்தான்! இவர்கள் பெரும்பாலும் நல்லவர்கள்தான். அவர்களுடைய உத்தியோகத்தினல் தான் கொடியவர்களாகி வருகிறார்கள். அன்பும் அனுதாபமுமாகிய மனித குணங்கள் இல்லாதவர்களைப் பார்க்கவே பயங்கரமாக இருக்கிறது. எது சட்டமில்லையோ அதைச் சட்டமென்கிறார்கள். ஆனல் மனிதர்களின் ஹிருதயத்தில் கடவுளே எழுதியுள்ள சட்டத்தை இவர்கள் ஏற்பதில்லை. அதனல் தான் இவர்களைப் பார்க்கும்பொழுது மனச்சோர்வு உண்டாகிறது. உண்மையில் இவர்கள் பயங்கரமானவர்கள்தான். கொள்ளைக்காரர்களைக் காட்டிலும் பயங்கரமானவர்கள். கொள்ளைக்காரர்கள் கூடச் சில சமயங்களில் அனுதாபப்படலாம். ஆனல் இவர்களுக்கு அனுதாபமேயில்லை. புகாட்செவ், ரெஜின் புரட்சிக்காரர்கள் பயங்கரமானவர்களென்று சொல்வார்கள். ஆனல் அவர்களைக் காட்டிலும் இவர்கள் ஆயிரம் மடங்கு பயங்கரமானவர்கள்.

"தயை தாக்ஷண்யம் உள்ளவர்கள் மனச்சாட்சியின் குத்தல் கொஞ்சமும் இல்லாமல் பயங்கரமான கொடுமைகள் புரியும்படி செய்ய ஒரு வழி கண்டு பிடிக்க வேண்டுமென்றல், அதற்கு ஒரு வழி சொல்லலாம். இப்பொழுது நடப்பவற்றைச் செய்து கொண்டே யிருக்கும்படி சொல்வதுதான் அந்த வழி. இவர்கள் கவர்னர்களாகவோ இன்ஸ்பெக்டர்களாகவோ போலீஸ்காரர்களாகவோ இருக்க வேண்டும். 'சர்க்கார் வேலை என்பது ஒன்று இருக்கிறது. இதற்காக மற்றவர்களை மனித உணர்ச்சியே இல்லாமல் நடத்த வேண்டும் என்று இவர்களிடம் சொல்லிவிட வேண்டும். இந்தக் கொடுமைகளுக்கான பொறுப்பு ஒருவர்மீதும் விழாதபடி சர்க்கார் உத்தியோகம் அமைந்துவிட வேண்டும். இந்த நிலைமை இல்லாவிட்டால். இன்று நான் கண்ட பயங்கரம் நடக்க முடியாது. சில சந்தர்ப்பங்களில் மனிதர்கள் அன்பே காட்டாமல் நடந்து கொள்ளலாமென்றுநினைக்கிறார்கள். இந்தக் கொடுமைகளுக் கெல்லாம்

வைத்துவிடுவோம்'' என்று தோட்டக்காரன் கூறினன். அவன் குரலில் அன்பு கனிந்தது.

டாரஸ் மூட்டையைத் தூக்கி அநாயாசமாக வேறு இடத்தில் வைத்தான். "நெருக்கடிதான்: இருந்தாலும் பரவாயில்லை. நாம் நண்பர்களாகையால் பொறுத்துக்கொள்ளலாம்'' என்று சிரித்துக் கொண்டே அவன் கூறினன், "இடம்தான் நிரம்ப இருக்கிறதே! ஒருவர் நிற்கக்கூட நிற்கலாம். நாம் சௌகரியமாகத்தான் இருக்கிறோம். கஷ்டப்படுவது போல் நடிப்பானேன்?'' என்றான் அவன். அவன் முகத்தில் நட்பு தாண்டவமாடியது.

குடித்தாலொழிய தன்னல் பேசமுடியாது என்று டாரஸ் சொல்வது வழக்கம். குடித்தால்தான் பேசுவதற்கு வார்த்தை கிடைக்கிறதாம். உண்மையில் குடிக்காத பொழுது அவன் மௌனமாகத்தான் இருப்பான். எப்பொழுதாவது ஒரு சமயத்தில் தான் அவன் குடிப்பான். அத்தகைய சமயங்களில் ரஸமாகப் பேசுவான். இன்று அவன் அத்தகைய நிலையில்தான் இருந்தான். நிக்லியுடாவ் அருகில் வந்ததால் அவனுடைய பேச்சு தடைபட்டது. அவன் மூட்டையை தூரக்கொண்டு போய் வைத்துவிட்டு வந்து தன் இடத்தில் உட்கார்ந்தான். பிறகு மறுபடியும் தன் புதிய நண்பனுடன் பேசத் தொடங்கினன். தன்னுடைய மனைவியைப்பற்றி அவன் பேசிக்கொண்டிருந்தான். அவளை ஏன் சைபீரியாவுக்கு அனுப்பினர்கள். தான் ஏன் போகிறான் என்பதையெல்லாம் சொல்லிக்கொண்டிருந்தான்.

இந்த சம்பவத்தைப்பற்றி நிக்லியுடாவ் இவ்வளவு விவரமாகக் கேட்டதில்லை. ஆகையால் டாரஸின் பேச்சைக் கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்தான். அவன் அங்கு வந்த பொழுது, தியோடோஸியா விஷம் வைக்க முயன்று, அதை விட்டுக்காரர்கள் கண்டு பிடித்த கட்டத்தை விவரித்துக் கொண்டிருந்தான்.

தன் பேச்சை நிக்லியுடாவ் கவனிப்பதைக் கண்ட டாரஸ் "என் கஷ்டங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறேன் ; ஒரு நல்ல மனுஷ்யன் கிடைத்தார்; அவரிடம் எல்லாவற்றையும் சொல்லிக் கொண்டிருக்கிறேன்'' என்றான்.

"அப்படியா?'' என்று கேட்டுக்கொண்டான் நிக்லியுடாவ்,

"என் தாய் விஷங்கலந்த பக்ஷணத்தை எடுத்துக் கொண்டு, "போலிஸ்டேஷனுக்குப் போகிறேன் என்றான். என் தந்தை மிகவும் நல்லவர். "அவள் குழந்தை; என்ன செய்கிறோமென்பது அவளுக்குத் தெரியாது: அவளிடம் அனுதாபப்பட வேண்டும், அவளுக்கு புத்திவந்து விடும்.''

என்று என் தந்தை சொன்னார். ஆனால் அம்மா கேட்டால் தானே? "அவள் இங்கு இருந்தால் நம எல்லாரையும் கொன்று விடுவாள்" என்று சொல்லி, போலீசாருக்கு அறிவித்துவிட்டாள். போலீஸ் அதிகாரி குதித்துக்கொண்டு வந்துவிட்டான். சாட்சிகளைக் கூப்பிட்டான்.

"நீ என்ன செய்தாய்?" என்று தோட்டக்காரன் கேட்டான்.

"நான் வயிற்று வலியுடன் புரண்டு கொண்டிருந்தேன். வயிற்றைக் கலக்கியது. என்னால் பேசக்கூட முடியவில்லை. அப்பா வண்டியை பூட்டி தியோடோஸியாவை போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டுபோனார். பிறகு மாஜிஸ்திரேட் கோர்ட்டுக்குப் போனார். அவள் முதலில் செய்ததுபோலவே மாஜிஸ்திரேட் முன்னிலையிலும் தன் குற்றத்தை ஒப்புக் கொண்டு விட்டாள்.

"நீ ஏன் அப்படிச் செய்தாய்?" என்று மாஜிஸ்திரேட் கேட்டார். அவர் என்னை வெறுக்கிறார். இப்படிப்பட்டவரோடு குடித்தனம் செய்வதைவிட சைபீரியாவில் வாழ்வது மேல் என்று தோன்றியது. என்று அவள் பதில் அளித்தாள்.

"பிறகு அவளைச் சிறையில் அடைத்து விட்டார்கள், அப்பா மாத்திரம் தனியாக வீட்டுக்குத் திரும்பி வந்தார். பிறகு அறுவடைக் காலம் வந்தது. வீட்டில் அம்மாவைத் தவிர வேறு பெண் இல்லை. அம்மாவுக்கும் வேலை செய்ய சக்தியில்லை. என்ன செய்யலாமென்று யோசித்தோம். தியோடோஸியாவை ஜாமீனில் அழைத்து வரலாமென்று தோன்றியது. இதற்காக ஐந்து அதிகாரிகளை அப்பா போய்ப் பார்த்தார். பயனில்லை. இந்த முயற்சியையே விட்டு விடலாமென்று தோன்றியது. கடைசியில் ஒரு குமஸ்தாவைச் சந்தித்தோம். அவன் ரொம்ப கெட்டிக்காரன். 'ஐந்து ரூபிள் கொடுங்கள். அவள் விடுதலையாகும்படி செய்கிறேன் என்றான். கடைசியில் மூன்று ரூபிளுக்கு ஒப்புக்கொண்டான். எனக்காக அவளே பின்னிய சால்வையை அடமானம் வைத்து அந்தப் பணத்தைக் கொடுத்தேன். அவன் ஒரு காகிதத்தில் ஏதோ எழுதிக் கொடுத்தான். அதைக் கொண்டு போய் சிறை அதிகாரிகளிடம் காட்டினேன். அவர்கள் தியோடாஸியாவை விடுதலை செய்தனர். அவள் வெளியே வந்தவுடன், 'அம்மா உயிரோடு இருக்கிறாளா? அப்பா உயிரோடு இருக்கிறாரா?' என்று விசாரித்தாள். 'சௌக்கியமாக இருக்கிறார்கள்' என்று நான் சொன்னேன். 'டாரஸ். என் குற்றத்தை மன்னித்து விடுங்கள். என்ன செய்கிறேன் என்பதை அறியாமலே செய்து விட்டேன்' என்றாள் அவள். 'உன்னை முன்பே மன்னித்து விட்டேன்' என்று சொன்னேன். வீட்டுக்கு வந்தவுடன் அவள் அம்மா காலில் விழுந்தாள். 'உன்னைக் கடவுள் காப்பாற்ற

வேண்டும்' என்றுள் அம்மா. அப்பர் வந்தார் 'நடந்தது நடந்து விட்டது. இனி அறுவடையைக் கவனிக்க வேண்டும் நீயும் டாரஸும் நாளையே போய் அதை கவனியுங்கள்' என்று அவர் சொன்னுர். அப்பொழுது முதல் அவள் வேலை செய்யும் முறையைக் கண்டு எல்லாரும் ஆச்சரியப் படுகின்றனர். நானே நன்ருக் வேலை செய்வேன். அவள் எடுத்துக்கொள்ளும் வேலையை என்னைக் காட்டிலும் நன்ருகச் செய்வாள். மிக உற்சாகமாக் வேலை செய்தாள்.''

''அது சரி, உன்னிடம் அன்பாக இருந்தாளா?'' என்று தோட்டக்காரன் நடுவில் கேட்டான்.

''அதை ஏன் கேட்கிறீர்கள்! இரண்டு உடலுக்கு ஒரே உயிர் போல் ஆகி விட்டோம் நாங்கள். நான் நினைப்பதையே அவளும் நினைப்பாள். தியோடோஸியா எவ்வளவு மாறி விட்டாள்! புது மனுஷியாகவே ஆகிவிட்டாளே!' என்று என் அம்மாவே ஆச்சரியப்பட்டாளென்ருல் பார்த்துக் கொள்ளுங்களேன்! 'ஏன் அப்படிச் செய்தாய் தியோடோஸியா?' என்று ஒருமுறை அவளைக் கேட்டேன். ''உங்களோடு வாழ நான் விரும்பவில்லை. அதைவிட செத்துப் போவதுமேல் என்று தோன்றியது' என்றுள். 'இப்பொழுது?' என்று கேட்டேன். இப்பொழுது நீங்கள் என் ஹிருதயத்தில் குடிகொண்டு விட்டீர்கள்' என்று அவள் பதில் அளித்தாள்'' என்று சொல்லி விட்டு டர்ரஸ் புன் சிரிப்புச் சிரித்துக் கொண்டான். மறுபடியும் அவன் பேச்சைத் தொடர்ந்து. ''அறுவடை முடிந்ததும் முடியாததுமாக ஒரு சம்மன் வந்தது. தியோடோஸியா விசாரணைக்கு வரவேண்டும்'' என்று அந்த சம்மன் கூறியது. அதற்குள் அந்த விஷயம் எங்களுக்கு மறந்தே போய் விட்டது'' என்ருன்.

தோட்டக்கர்ரன் வேறு ஒரு சம்பவத்தைப் பற்றிப் பேச வாயெடுத்தர்ன். அதற்குள் வண்டியின் வேகம் குறைந்தது. ''ஏதோ ஒரு ஸ்டேஷன் வந்துவிட்டாற் போலிருக்கிறது; நான் போய் ஏதாவது கொஞ்சம் குடித்துவிட்டு வருகிறேன்'' என்று கூறி அவன் எழுந்தான்.

சம்பாஷணை முடிந்தது. தோட்டக்காரனைத் தொடர்ந்து நிக்லியுடாவும், நனைந்திருந்த பிளாட்பாரத்தில் இறங்கினுன்.

# 42

ஸ்டேஷனுக்கு வெளியே உயர்ந்த குதிரைகள் பூட்டிய சில வண்டிகள் நின்றிருந்தன. நிக்லியுடாவ் வண்டியைவிட்டு இறங்கியவுடன், முதல் வகுப்பு பெட்டிக்கருகே ஒரு கூட்டம் நின்றிருந்தது. தடித்த ஸ்திரீ ஒருத்தியும் அந்த கோஷ்டியில் நின்றிருந்தாள். அவள் மழை கோட் அணிந்திருந்தாள். தொப்பியில் விலை உயர்ந்த இறகுகள் செருகியிருந்தாள். அவள் அருகே சைகிள் உடை அணிந்த இளைஞன் ஒருவன் இருந்தான். அவர்களுக்குப் பின்னால் வேலைக்காரர்கள் குடைகளைப் பிடித்துக் கொண்டு நின்றிருந்தனர். கோச் வண்டிக்காரன் ஒருவனும் இருந்தான்.

அந்த ஸ்திரீ முதல், கோச் வண்டிக்காரன் வரை, ஒவ்வொருவரிடமும் செல்வச் செறுக்கு காணப்பட்டது. அந்த இளைஞன் கோர்ச்சாகின் சீமாட்டியின் பிள்ளை. அந்த ஸ்திரீ அவளுடைய தங்கை. அவளுடைய வீட்டுக்குத்தான் கோர்ச்சாகின் குடும்பத்தினர் போகிறார்கள். அவர்களைச் சுற்றி ஒரு கும்பல் கூடிக் கொண்டது.

கோர்ச்சாகின் சீமாட்டியை வேலைக்காரர்கள் நாற்காலியோடு ஜாக்கிரதையாக இறக்கினார்கள். அக்காளும் தங்கையும் உபசார வார்த்தைகள் பேசிக்கொண்டனர். பிரெஞ்சு வாக்கியங்களைக் கொட்டினார்கள். கடைசியில் எல்லாரும் வாசற்படியை நோக்கிப் புறப்பட்டார்கள். நிக்லியுடாவ் மீண்டும் அவர்களைச் சந்திக்க விரும்பவில்லை. அவர்கள் வெளியே செல்லும்வரை அவன் தூரத்திலேயே நின்றிருந்தான். முதலில் சீமாட்டி, அவள் பிள்ளை, மிஸ்ஸி, டாக்டர், வேலைக்காரி ஆகியவர்கள் சென்றார்கள். கோர்ச்சாகின் பிரபுவும் அவருடைய மைத்துனியும் கடைசியில் சென்றார்கள்.

இந்தசமயத்தில் சில தொழிலாளர்கள் தோல்பை மூட்டைகளுடன் ஒரு பெட்டியில் ஏறப் போனார்கள். கார்டு அங்கிருந்து அவர்களைத் துரத்திவிட்டார். மற்றொரு பெட்டியில் ஏறப் போனார்கள். அங்கிருந்து மற்றொருவர் துரத்திவிட்டார். கடைசியாக நிக்லியுடாவ் இருந்த பெட்டியில் ஏற வந்தார்கள். இங்கிருந்தும் ஒருகார்டு அவர்களை விரட்டப்பார்த்தார். ஆனால் நிக்லியுடாவ் குறுக்கிட்டு, "இங்கு நிரம்ப இடம் இருக்கிறது; ஏறிக்கொள்ளட்டும்" என்றான். அவர்கள் வண்டியில் ஏறி உட்காரப் போகும் சமயத்தில், வண்டியில் இருந்த ஒருவன், "தள்ளிப்போங்கள், தள்ளிப்போங்கள்" என்று கத்தினார். அவர்கள் மறுபடியும் எழுந்து முன்னால் செல்லப் பார்த்தார்கள். அவர்க

# புத்துயிர்

## மூன்றும் பாகம்

### 1

கைதிகள் மூவாயிரம் மைல் போயாகிவிட்டது. காடுஷாவும் கிரிமினல் குற்றத்திற்காக தண்டனைபெற்ற மற்ற கைதிகளும் பிரெம் நகர்வரை ரயிலிலும் படகிலும் சென்றுர்கள். அவள் அரசியல் கைதிகளோடு பிரயாணம் செய்ய அனுமதி கேட்குமாறு வெராடுக்கோர்வா கூறியிருந்தாள். அவளும் இந்த கோஷடியுடன்தான் போய்க்கொண்டிருந்தாள். நிக்லியுடாவ் அவ்விதமே அனுமதி பெற முயன்றுன். ஆனுல் இவ்வளவு தூரம் வந்த பிறகு தான் அந்த அனுமதி கிடைத்தது.

பிரெம் நகர்வரை காடுஷாவின் பிரயாணம் மிகவும் கஷ்டமாக இருந்தது. இரண்டுவிதத்தில் கஷ்டம். வண்டியில் கூட்டம் அதிகம். வண்டி ஆபாசமாகவும் இருந்தது. வண்டி நிற்குமிடத்திலெல்லாம் புருஷர்கள் வந்து அவளைச் சுற்றிச் சூழ்ந்துகொண்டு ஹிம்ஸித்தார்கள். விபசார புத்தி அனைவரிடமும் பலமாக இருந்தது. ஒரு பெண் தன் பெண்மையைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டுமென்றுல் மிகுந்த ஜாக்கிரதையாக இருக்க வேண்டியிருந்தது. காடுஷா அழகாக இருந்தாலும் அவளுடைய சரித்திரம் எல்லாருக்கும் தெரிந்திருந்தாலும் அவளுக்கு கஷ்டம் இன்னும் அதிகமாக இருந்தது. அவள் உறுதியுடன் எதிர்த்ததால் அவள்மீது அனைவருக்கும் துவேஷம். ஆனுல் தியோடோஸியாவோடு அவள் நெருங்கிப் பழகியதால் கொஞ்சம் சௌகரியமாக இருந்தது. தியோடோஸியாவையும் ஹிம்ஸிக்கிறுர்கள் என்பதை டாரஸ் அறிந்தான். தன்னையும் கைது செய்து தன் மனைவியோடு அனுப்பும்படி அவன் அதிகாரிகளைக் கேட்டுக்கொண்டான். அவனுடைய வேண்டுகோள்படியே அதிகாரிகள் அவனைக் கைது செய்து தியோடோஸியாவுடன் சேர்த்தனர். நிஷ்னிநோவ் கொராடிலிருந்து அவன் தன் மனைவியோடு பிரயாணம் செய்து வருகிறுன்.

காடுஷா அரசியல் கைதிகளோடு சேர்ந்த பின் அவளுடைய நிலைமை சகிக்கும்படியாயிருந்தது. அரசியல் கைதிகளுக்குச் சிறிது அதிக வசதிகள் அளிக்கப்பட்டிருந்தது. உணவும் கொஞ்சம் மேலாக இருந்தது. இவர்கள் அவ்வளவு மிருகத்தனமாக நடத்தப்படவில்லை, அவளுடைய பழைய வாழ்க்கையை நினைப்பூட்டும் புருஷர்களின் தொந்தரவும் இங்கு இல்லை. எல்லாவற்றிற்கும் மேலாக அவளுடைய குணத்தை மாற்றக் கூடியவர்களுடன் பழக அவளுக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது.

வண்டிநிற்கும் இடங்களிலெல்லாம் அரசியல் கைதிகளோடு பழக காடுஷா அனுமதிக்கப்பட்டாள். அவள் நல்ல பலசாலியாக இருந்ததால் கிரிமினல் கைதிகள் நடந்து செல்லும்பொழுது அவர்களோடு நடக்கவேண்டியிருந்தது. அரசியல் கைதிகளில் இருவரும் இந்தக் கைதிகளோடு நடந்து சென்றனர். கண்ணழகி மேரி பாவ்லோவ்னு ஷெடினு அவர்களில் ஒருத்தி. டுக்கோவாவைச் சந்திப்பதற்காக நிக்லியுடாவ் சிறைக்குப் போயிருந்த பொழுது அவனுடைய கவனத்தைக் கவர்ந்தவள் இவள்தான். வண்டியில் இவளுக்கு இடம் இருந்தது. கர்ப்பமாக இருந்த ஒரு கைதிக்கு அந்த இடத்தைக் கொடுத்து விட்டாள். ஸைமன்ஸன் மற்றொருவன். மேரி பாவ்லோவ்னுவைக் கவனித்தபொழுதுதான் இவனையும் நிக்லியுடாவ கவனித்தான். தனக்குக் கிடைத்த வசதியைப் பயன்படுத்திக் கொள்வது நியாயமில்லையென்று தோன்றியதால் இவன் நடந்துபோய்க்கொண்டிருந்தான். கிரிமினல் கைதிகளோடு இவர்களும் அதிகாலையிலேயே எழுந்து நடக்கப் புறப்பட்டுவிடுவார்கள். மற்ற அரசியல் கைதிகள் பின்னுல் வண்டியில் வருவார்கள். கடைசியாக ஒரு பெரிய நகருக்குப் போகு முன்னர் இந்த முறைதான் அனுஷ்டிக்கப்பட்டது. அந்த நகரிலிருந்து ஒரு புதிய காவல் அதிகாரி அவர்களுக்குக் காவல் போகத் தொடங்கினுன்.

செப்டம்பர் மாதம் ஒருநாள் காலை. குளிர்வாடை. மழையும் பனியும் மாறி மாறி அடித்துக்கொண்டிருந்தன. கைதிகளின் கோஷ்டி முழுமையும் (சுமார் நானூறு புருஷர்களும் ஐம்பது பெண்களும்) கைதிகள் தங்கியிருந்த கட்டிடத்தின் கூடத்தில் வந்து கூடியிருந்தனர். சில கைதிகள் காவல் அதிகாரியைச் சூழ்ந்து நின்றுகொண்டிருந்தனர். கைதிகளின் இரண்டு நாளைய செலவுக்கு வேண்டிய பணத்தை சில முக்கியமான கைதிகளிடம் அவர் கொடுத்துக்கொண்டிருந்தார். சிலர் பணத்தை எண்ணும் குரலும் சிலர் ஏதோ சாமான்களை பேரம் பேசி வாங்குவதும், சில பெண்கள் மெல்லிய குரலில் சாப்பாடு விற்பதும் நன்ருகக் கேட்டுக்கொண்டிருந்தது.

கட்டிடத்திற்குள்ளிருந்து வியாபாரம் செய்யும் பெண்கள் உட்கார்ந்திருந்த இடத்திற்கு வந்தனர் காடுஷாவும் மேரி பாவ்லோவ்னுவும். இருவரும் குதிகால் உயர்ந்த பூட்ஸும், குட்டையான கம்பளிச் சட்டையும் அணிந்திருந்தனர். தலையில் ஒரு கம்பளியைக் கட்டிக்கொண்டிருந்தனர். பொறித்த மாமிசம், மீன், முட்டை' பால் முதலியவற்றைக் கொடுக்க அவர்கள் போட்டி போட்டுக்கொண்டு முன் வந்தனர். ஸைமன்ஸனும் அந்தக் கைதி கூட்டத்தோடு புறப்படுவதற்குத் தயாராக உட்கார்ந்திருந்தான். அவன் ரப்பர் சட்டையும் தேய்ந்து போன ரப்பர் பூட்ஸும் அணிந்திருந்தான். ஸ்டாகின்ஸைச் சுற்றி கயிறு கட்டிக்கொண்டிருந்தான். அவன் அஹிம்சா

வாதியாகையால் கொலைசெய்யப்பட்ட மிருகங்களின் தோலை அவன் உபயோகிப்பதில்லை. அப்பொழுதுதான் தோன்றிய ஒரு கருத்தை அவன் நோட் புத்தகத்தில் எழுதிக்கொண் டிருந்தான். மனிதனின் நகத்தை ஒரு கிருமி ஆராய்ந்து பார்க்குமானால் அது சத்தற்ற பொருள் என்றுதான் முடிவு செய்யும். அதேபோல் நாமும் பூமியின் மேல் மட்டத்தைப் பார்த்துவிட்டு, இது சத்தற்றதென்கிறோம்; இது தவறு'' என்று எழுதினான்.

காடுஷா முட்டை, ரொட்டி, மீன் இவற்றை வாங்கிப் பையில் வைத்துக் கொண்டாள். இவற்றை விற்ற ஸ்திரீக்கு மேரி பால்லோவ்னா காசு கொடுத்துக் கொண்டிருந்தாள். இந்த சமயத்தில் கைதிகளுக்கிடையே ஒரு பரபரப்பு ஏற்பட்டது. அவர்கள் நிசப்தமாக தங்கள் இடங்களில் போய் உட்கார்ந்த னர். காவல் அதிகாரி வந்து ஏதோ உத்திரவுகளைப் பிறப் பித்துக் கொண்டிருந்தார்,

எல்லாம் வழக்கம் போல் நடந்தன. கைதிகளை எண்ணி னார்கள். சிலரை இரண்டிரண்டு பேராகச் சேர்த்து கைகளில் விலங்குகளைப் பூட்டினார்கள். திடீரென்று அதிகாரியின் உரத்த குரல் கேட்டது. பளீரென்று அடிக்கும் சப்தமும், ஒரு குழந்தை வீரிட்டு அழும் சப்தமும் கேட்டன. காடுஷாவும் மேரிபாவ்லோவ் னாவும் திடுக்கிட்டு அந்த இடத்தை நோக்கிச் சென்றார்கள்.

## 2

அங்கு காணப்பட்ட காட்சி இதுதான்: அந்த அதிகாரி ஒரு தடியன். அவன் தன் வலது கையைத் தடவிக் கொண்டு நின்றிருந்தான். அடித்த கை வலித்தது போலும்! ஆபாஸ மான பாஷையில் அவன் திட்டிக்கொண்டிருந்தான். எதிரே ஒரு நெட்டையான கைதி முகத்தில் ரத்தம் வழிய நின்று கொண் டிருந்தான். அவன் நீளம் போதாத சட்டையும் நிஜாரும் அணிந்திருந்தான். வீரிட்டு அழுது கொண்டிருந்த ஒரு பெண்ணை அவன் கையில் பிடித்துக் கொண்டிருந்தான். அவ னுடைய கிராம பஞ்சாயத்து அவனை தேசப்பிரஷ்டம் செய்து விட்டது. டோம்ஸ்க்கிலிருந்து அவன் தன் பெண்ணைத் தூக் கிக்கொண்டே வருகிறான். அங்கு அவனுடைய மனைவி டைபஸ் ஜுரத்தினால் இறந்து விட்டாள். அவனை மற்றொரு கைதி யோடு சேர்த்து விலங்கிடுமாறு அதிகாரி உத்திரவிட்டார். தனக்கு விலங்கு போட்டு விட்டால் குழந்தையைத் தூக்கிச் செல்ல முடியாதே என்றான் கைதி. அவன் உத்திரவுக்குக் கீழ்ப் படியவில்லை யென்று அதிகாரி உடனே அவனை அறைந்தார்.

காயமடைந்த கைதியின் பக்கத்தில் காவல் புரியும் சோல்ஜர் நின்று கொண்டிருந்தான். கைவிலங்கு பூட்டிய மற்றொரு கைதியை அவன் பிடித்துக் கொண்டிருந்தான். அந்தப் பெண்ணை தார இழுத்துக் கொண்டு போகும்படி அதிகாரி மீண்டும் உத்தரவிட்டான். கைதிகளிடையே முணுமுணுப்புச் சப்தம் அதிகரித்தது.

"டோம்ஸ்கிலிருந்து அவன் விலங்கு இல்லாமல் தான் வந்து கொண்டிருக்கிறன்; அது நாயில்லை; குழந்தை" என்று பின்னலிருந்து கட்டைத் தொண்டையில் ஒருவன் கூறினன்.

"அந்தக் குழந்தையை அவன் என்ன செய்வான்? சட்டம் அப்படியில்லை" என்றது மற்றொரு குரல்.

அதிகாரி அந்தக் குரல் வந்த பக்கம் சென்று "யார் அது? சட்டம் எது என்பதை நான் சொல்லிக் கொடுக்கிறேன். யார் பேசினது? நீயா? நீயா?" என்று கத்தினன்.

"எல்லாரும் சொல்கிருர்கள்—" என்ருன் குள்ளமான ஒரு கைதி

அவன் பேச்சை முடிப்பதற்குள் அவன் முகத்தில் இரு கைகளாலும் அறைந்தான் அதிகாரி. "கலகமா செய்கிறீர்கள்? கலகம் என்ருல் என்ன என்பதைக் காட்டுகிறேன். நாய்களைப்போல் உங்களைச் சுட்டுத் தள்ளுகிறேன் இருங்கள். அதிகாரிகள் இதற்காக சந்தோஷப் படத்தான் செய்வார்கள். இந்தப் பெண்ணை இழுத்துக் கொண்டுபோ" என்று மீண்டும் கத்தினன்'

கூட்டம் நிசப்தமாக இருந்தது. ஒருசோல்ஜர் பெண்ணை இழுத்துக் கொண்டு போனன். பெண் வீரிட்டு அழுது கொண்டே யிருந்தது. மேரி பாவ்லோவ்ன கூட்டத்திலிருந்து வெளியேறி அதிகாரி அருகே வந்தாள்.

"அந்தப்பெண் என்னேடு வர அநுமதிப்பீர்களா?" என்று கேட்டாள் அவள்.

"நீயார்?" என்று கேட்டார் அதிகாரி.

"ஓர் அரசியல் கைதி"

மேரிபாவ்லோவ்னவின் கண்கள் அவனை வசீகரித்து விட்டன.

ஏதோ ஆலோசிப்பவனைப்போல சிறிது நேரம் அவளை மௌனமாகப் பார்த்தான். "எனக்கு ஆக்ஷேபணையில்லை. இஷ்டமிருந்தால் தூக்கிக் கொண்டு வா. அனுதாபம் காட்டுவது சுலபமாகத்தான் இருக்கும். அவன் தப்பி ஓடி விட்டால் யார் ஜவாப்தாரி?" என்ருன் அதிகாரி.

"குழந்தையைக் கையில் வைத்துக்கொண்டு அவன் எப்படி தப்பி ஓடி விட முடியும்?" என்று கேட்டாள் அவள்.

"உன்னோடு பேச எனக்கு அவகாசமில்லை. வேண்டுமானால் பெண்ணை எடுத்துக் கொண்டு போ."

"குழந்தையை விட்டு விடட்டுமா?" என்றான் சோல்ஜர்.

"விட்டு விடு" என்று அதிகாரி அனுமதித்தான்.

"என்கிட்டவா" என்று சொல்லி குழந்தையைச் சமாதானப்படுத்த முயன்றாள் மேரிபாவ்லோவ்னா.

"கொஞ்சம் இரு மேரிபாவ்லோவ்னா; அவள் என்னிடம் வருவாள்" என்று சொல்லி பையிலிருந்து ஒரு ரஸ்கை எடுத்துக் கொடுத்தாள் காடுஷா.

அந்தப் பெண்ணுக்கு காடுஷாவைத் தெரியும். அவளுடைய முகத்தையும் ரஸ்கையும் பார்த்தவுடன் அவளிடம் போனாள்.

எல்லாம் அமைதியாகி விட்டது. கதவு திறந்தது, கைதிகள் வெளியே வந்து வரிசையாக நின்றனர். சாமான்களை வண்டியில் ஏற்றினார்கள். முடமான கைதிகள் அவற்றின்மீது உட்கார்ந்தனர். தியோடோஸியாவின் பக்கத்தில் குழந்தைகளுடன் தன்னுடையஸ்தானத்தை அடைந்தாள். காவல் அதிகாரி வண்டியில் ஏறிக்கொண்டிருந்தான்.

நடந்தவற்றை இதுவரை கவனித்து வந்த ஸைமன்ஸன் நேராக அதிகாரியிடம் சென்று, "நீங்கள் மிகக்கேவலமாக நடந்து கொண்டீர்கள்" என்றான்.

"உன் இடத்திற்குப்போ, அதைப்பற்றிப் பேசுவது உன் வேலையல்ல" என்று அதிகாரி பதில் அளித்தான்.

"நீங்கள் மோசமாக நடந்துகொண்டதை உங்களிடம் எடுத்துச் சொல்வது என் வேலைதான். சொல்லிவிட்டேன்" என்றான் ஸைமன்ஸன்.

அவன் சொன்னதை அதிகாரி லக்ஷியம் செய்யாமல், "தயாரா? போங்கள்" என்று கைதிகளுக்கு உத்தரவிட்டான். சேரும் சகதியுமான ரோடில், கைதிக் கூட்டம் நடக்கத் தொடங்கியது.

# 3

அரசியல் கைதிகளின் வாழ்க்கை கஷ்டமாகத்தான் இருந்தது. ஆனால் காடுஷா ஆறுவருஷ காலங்களில் நடத்திய ஆடம்பர வாழ்க்கைக்கும், பல மாதங்கள் சிறையில் கிரிமினல் கைதிகளிடையே நடத்திய கடின வாழ்க்கைக்கும் பின், அரசியல் கைதிகளுடன் பழகினாள், இது மிகவும் உயர்வாகத் தோன்றியது. நல்ல சாப்பாடு, ஒவ்வொரு நாளும் பதினைந்து முதல் இருபது மைல் தூரம் நடை; இரண்டு நாள் நடந்த பின் ஒருநாள் ஓய்வு. இவற்றினால் காடுஷாவின் உடல் பலப்பட்டது. அவளுடைய புதிய சகவாசத்தினால் வாழ்க்கையில் பற்றுதல் ஏற்பட்டது. அவளோடு பழகியவர்கள் "அற்புதமானவர்கள்" என்று அவள் சொன்னாள். இப்படிப்பட்டவர்களை இதுவரை சந்தித்ததில்லை என்பதோடு, கற்பனை கூடச் செய்ததில்லை என்று அவள் சொல்வாள்.

"எனக்கு தண்டனை கிடைத்தபொழுது அழுதேன். ஆனால் அதற்காக என் ஆயுட்காலம் முழுவதும் கடவுளுக்கு நன்றி செலுத்த வேண்டும். தண்டனை பெற்றதால் நான் பல விஷயங்களைக் கற்றுக்கொள்ள முடிந்தது. இல்லையானால் இவற்றையெல்லாம் கற்றிருக்கவே முடியாது" என்று அவள் கூறினாள்.

அவர்களுடைய கருத்தை அவள் சுலபமாகப் புரிந்துகொண்டு ஆதரித்தாள். "அவர்கள் பாமர மக்களை ஆதரிப்பவர்கள்; பணக்கார வர்க்கத்தை வெறுக்கிறார்கள். இவர்களே பணக்காரர்களாக இருந்த போதிலும் மக்களுக்காக தங்களுடைய சர்வத்தையும் தியாகம் செய்துவிட்டார்கள்", என்பதை உணர்ந்தாள். இதனால் அவர்களை மிகவும் உயர்வாக மதித்தாள்.

அரசியல் கைதிகள் யாரைப் பார்த்தாலுமே அவளுக்குச் சந்தோஷமாக இருந்தது. ஆனால் மேரி பாவ்லோவ்னாவிடம் ஒரு விசேஷமான அன்பும் மரியாதையும் ஏற்பட்டது. "அழகான பெண்; மூன்று பாஷை பேசக்கூடியவள்; ஒரு பெரிய ஜெனரலின் மகள். தன் செல்வத்தையெல்லாம் துறந்துவிட்டு ஓர் ஏழைக் குடியானப் பெண் போல் வந்திருக்கிறாள். அற்ப உடை அணிகிறாள். தன் தோற்றத்தைப் பற்றிக் கவலைப்படுவதேயில்லை." காடுஷாவுக்கு இது ஆச்சரியத்தைக் கொடுத்தது.

தான் அழகி என்பது மேரி பாவ்லோவ்னாவுக்குத் தெரியும். அதைப் பற்றி அவளுக்குத் திருப்திகூட உண்டு, ஆனால்

ஆண்களிடம் அந்த அழகு ஏற்படுத்திய மாறுதல் அவளுக்குப் பிடிக்கவில்லை. இதற்காக அவள் பயந்தாள். பார்ப்பவர்கள் தன்னைக் காதலிப்பார்களோ என்று பயமும் வெறுப்பும் கொண்டாள். அவளுடைய தோழர்கள் இதை அறிந்து அவளைக் காதலிப்பதில்லை. காதலித்தாலும் அதை மறைத்துக் கொண்டு புருஷர்களிடம் எப்படிப் பழகுவார்களோ அப்படிப் பழகி வந்தனர். அந்நியர்யாராவது அவளை பலாத்காரம் செய்தால் அவளுடைய உடல்பலம் உதவியாக நின்றது.

"ஒரு சமயம் ஒருவன் என்னைத் தொடர்ந்து வந்தான். என்னை விடவேயில்லை. கடைசியில் அவனை ஒரு அலட்டு அலட்டினேன். நடுங்கிப்போய் ஓடிவிட்டான்" என்று காடுஷாவிடம் அவள் கூறினாள்.

பணக்கார வாழ்க்கை பிடிக்காததால்தான் புரட்சிக்காரியாகி விட்டதாக அவள் கூறினாள். ஆடம்பர வாழ்க்கை அவளுக்குக் குழந்தை முதலே பிடிக்கவில்லையாம். "சதா நான் சமையற்காரர்களுடனும், வேலைக்காரர்களுடனும் வண்டிக்காரர்களுடனும் பழகியதற்காக என்னைத் திட்டுவார்கள். இருந்தாலும் அவர்களோடு பழகுவதுதான் எனக்கு ஸ்வாரஸ்யமாக இருந்தது. எனக்கு சிந்திக்கத் தெரிந்தபொழுது, நாம் நடத்தும் வாழ்க்கை தவறானது என்பதை அறிந்தேன். எனக்குத் தாயில்லை. தந்தை மீது எனக்குப் பிரியமில்லை. பத்தொன்பதாவது வயதில் வீட்டை விட்டு வெளியேறி, ஸ்நேகிதை ஒருத்தியோடு ஒரு தொழிற்சாலையில் வேலை செய்யத் தொடங்கினேன். தொழிற்சாலையை விட்டு ஒரு கிராமத்தில் சிறிது காலம் வசித்து வந்தேன். பிறகு நகருக்குத் திரும்பி வந்து, ரகசிய அச்சுக்கூடம் நடத்தும் வேலையில் ஈடுபட்டேன். அங்கு என்னைக் கைது செய்தார்கள். கடுங்காவல் தண்டனை கிடைத்தது" என்று மேரி பாவ்லோவ்னு கூறினாள். அச்சுக்கூடத்தில் நடந்தவை பற்றி அவள் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் மற்றவர்கள் சொல்லி காடுஷா அறிந்திருந்தாள். ரகசிய அச்சுக் கூடத்தில் சோதனை போட போலீசார் வந்தபொழுது இருட்டிலிருந்து யாரோ சுட்டார்கள். அதைத் தான் சுட்டதாக மேரி பாவ்லோவ்னு கூறினாள்.

மேரி பாவ்லோவ்னு எந்த நிலைமையில் இருந்தாலும் தன்னைப் பற்றி நினையாமல், பிறருக்குச் சேவை செய்யவே விரும்புகிறாள் என்பதைக் காடுஷா கவனித்தாள். பரோபகாரம் என்ற விளையாட்டில் அவள் ஈடுபட்டிருப்பதாக நோவோட் வொரோவ் என்ற விவசாய நண்பன் அவளைப் பற்றிக் கூறினான். இது உண்மை. விளையாடுபவன் விளையாட்டைத் தேடுவதுபோல பிறருக்குச் சேவை செய்வதற்கான சந்தர்ப்பத்தை, வாழ்க்கை முழுவதும் அவள் தேடிக் கொண்டேயிருந்தாள். அந்த விளை

யாட்டு, அவளுடைய வாழ்க்கையின் வழக்கமாகவும் வேலையாக வும் ஆகிவிட்டது. அவளை அறிந்தவர்கள் அவளுக்கு நன்றி தெரிவிப்பதில்லை. அவளிடம் அந்த குணத்தை எதிர்பார்த்த னர். அவ்வளவு இயற்கையாக அவள் சேவை செய்து வந்தாள்.

முதலில் அவள் காடுஷாவைக் கண்டபொழுது வெறுப் படைந்தாள். இதைக் காடுஷாவும் கவனித்தாள். ஆனால் இந்த உணர்ச்சியை அவள் வெல்லமுயன்று காடுஷாமீது அன்பு செலுத்தத் தொடங்கினாள். இவ்வளவு அசாதாரண மான பிறவியின் அன்பு காடுஷாவின் மனத்தை உருக்கியது; தன் ஹிருதயத்தையே அவளிடம் ஒப்படைத்து விட்டாள். தன்னையறியாமலே காடுஷா அவளுடைய கொள்கைகளை ஏற்றுக் கொண்டாள். எல்லா விஷயங்களிலும் அவளைப் போலவே நடக்கத் தொடங்கினாள். சிற்றின்பத்தை வெறுப் பதிலும் அவர்கள் இருவரும் ஒன்றுபட்டிருந்தனர். அதன் கோரம் முழுமையும் அறிந்து ஒருத்தி வெறுத்தாள். மற் றொருத்தி, அதை அறியாமலே, சகிக்க முடியாததென்று கருதி வெறுத்தாள். மனித கௌரவத்திற்கே இது இழிவான தென்று அவள் கருதினாள்.

## 4

மேரி பாவ்லோவ்னாவின் சக்திக்கு காடுஷா பணிந்தது போலவே, ஸைமன்ஸனின் சக்திக்கும் பணிந்தாள். மேரி பாவ் லோவ்னா மீது காடுஷா அன்பு கொண்டாள். அதன் விளை வாக அவளுக்குப் பணிந்தாள். ஸைமன்ஸன் காடுஷாவை நேசித்தான். அதனால் அவனுக்குப் பணிந்தாள்.

மக்கள் ஓரளவு தங்கள் கருத்துப்படியும், ஓரளவு பிறர் கருத்துப்படியும் வாழ்க்கை நடத்துகிறார்கள். இதில் உள்ள ஏற்றத்தாழ்வுப்படி அவர்களிடையே வித்தியாசம் காணப்படு கிறது. சிலர் சிந்தனை செய்வதை மனத்தின் விளையாட்டாகக் கருதுகிறார்கள். பிறரது கருத்துக்கள் தான் இவர்களுடைய செய்கைகளுக்கு வழி காட்டுகின்றன. சம்பிரதாயம், அல்லது பழக்கம் அல்லது சட்டத்தின்படி இவர்கள் நடக்கிறார்கள். மற்றும் சிலர் தங்கள் செய்கைகளுக்குத் தங்கள் கருத்துக் களையே உதாரணமாகக் கொள்கிறார்கள். மற்றவர்களின் கருத்துக்களை எடை போட்டுப் பார்த்து, பிறகு செய்யும் முடி வுப்படிதான் இவர்கள் நடப்பார்கள். இந்த கோஷ்டியைச் சேர்ந்தவன் தான் ஸைமன்ஸன்.

அவனுடைய தந்தை ஒரு சர்க்கார் ஆபீஸில் சம்பள பட்டுவாட செய்யும் அதிகாரியாக இருந்தார். ஸைமன்ஸன்,

மாணவனாக இருந்த பொழுதே, தன் தந்தையின் வருமானம், அயோக்கியத்தனமான முறையில் வருகிறதென்று நினைத்தான். அதை ஜனங்களுக்கே கொடுத்து விட வேண்டுமென்று அவன் தந்தையிடம் கூறினான். தந்தை அவனைத் திட்டினார். அவன் வீட்டை விட்டுக் கிளம்பி விட்டான். தன் தந்தையின் வருமானத்தில் இனி பிழைக்கக் கூடாதென்று அவனுக்குத் தோன்றியது. கஷ்டங்களுக்கெல்லாம் காரணம் மக்களின் அறியாமைதான் என்ற முடிவுக்கு வந்தான். கலாசாலையை விட்டுவிட்டு ஒரு கிராமப்பள்ளிக்கூடத்தின் உபாத்தியாயரானான். தான் நியாய மென்று கருதியவற்றைத் தன் மாணவர்களுக்கும் குடியானவர்களுக்கும் போதித்தான். தனக்கு அநியாய மென்று தோன்றியவற்றை தைரியமாக எதிர்த்தான்.

அவனைக் கைது செய்து விசாரணைக்குக் கொண்டு வந்தார்கள்.

விசாரணை சமயத்தில், தன்னை விசாரிக்க நீதிபதிகளுக்கு உரிமை இல்லை என்ற முடிவுக்கு வந்தான். அப்படியே அவர்களிடம் சொல்லவும் சொன்னான். ஆனால் அவர்கள் பொருட்படுத்தாததால் அவர்கள் கேட்ட கேள்விகளுக்கு அவன் பதிலே சொல்லவில்லை.

அவனை தேசப்பிரஷ்டம் செய்து ஆர்க்கேஞ்சனுக்கு அனுப்பினார்கள். அங்கு அவன் சில மதக்கோட்பாடுகளை அமைத்துக் கொண்டு அவற்றின் படி நடந்து வந்தான். "பிரபஞ்சத்தால் எல்லாம் ஜிவித்திருக்கின்றன; ஒன்றும் சாவதில்லை; ஜீவனற்றவை என்று நாம் கருதும் பொருள்களெல்லாம் அகண்டமான ஒரு ஜீவனின் பல பகுதிகளே. மனிதனும் அதில் ஒரு பகுதிதான். அந்த ஜீவனையும் அதன் எல்லாப் பகுதிகளையும் நீடிக்கச் செய்வது மனிதனின் கடமை" என்பது அவனுடைய சித்தாந்தம். ஆகையால் கொல்வது குற்றம் என்று அவன் கருதினான். யுத்தம், மரண தண்டனை எல்லாம் குற்றமே. மனிதர்களை மாத்திர மின்றி மிருகங்களைக் கொல்வதும் குற்றம் தான்.

விவாகத்தைப்பற்றியும் அவன் சில முடிவுகளுக்கு வந்திருந்தான். பிரஜா உற்பத்தி மனிதனின் ஹீனமான தொழில் என்றும், ஏற்கனவே உள்ள மனிதர்களுக்கு உழைப்பது அவனுடைய உன்னதமான தொழிலென்றும் மதித்தான். நோய்க் கிருமிகளைக் கொல்லும் பாதுகாப்புக் கிருமிகள் நம ரத்தத்தில் இருப்பது பற்றி அவன் கேள்விப் பட்ட பின் அவனுடைய இந்த நம்பிக்கை புலப்பட்டது.

உடம்பில் பலவீனமாக உள்ள பகுதிகளுக்கும், நோயினால் பீடிக்கப்படும் பகுதிகளுக்கும் உதவி செய்வதையே அவை

தொழிலாகக் கொண்டிருக்கின்றன. பிரமச்சாரிகளும் இப்படித் தான். இளமையில் அவன் கெட்டுப்போயிருந்தாலும் இதை அறிந்த பின் அவன் இப்படியே வாழ்க்கை நடத்தத் தொடங்கி விட்டான். மனிதருள் நோய்க்கொல்லிகளாகவே தன்னையும் மேரி பாவ்லோவ்னுவையும் அவன் கருதினான். காடுஷா மீது அவன் கொண்ட அன்பு இதற்கு பாதகமாக இல்லை. அது பரிசுத்தமானது. அவனுடைய நடவடிக்கைகளை அது தடைசெய்யவில்லை. அதற்கு மாருக உற்சாக மூட்டியது.

தர்மத்தைப்பற்றி மாத்திரமல்லாமல் பிரத்தியக்ஷமான எல்லா விஷயங்களைப் பற்றியும் அவனுக்கு சொந்த அபிப் பிராயங்கள் இருந்தன. எவ்வளவு நேரம் வேலைசெய்வது, எவ் வளவு நேரம் ஓய்வு எடுத்துக்கொள்வது, என்னென்ன சாப் பிடுவது, எப்படி உடை அணிவது முதலிய எல்லாவற்றிற் கும் அவன் விதிகள் வகுத்து வைத்திருந்தான்.

அவன் மிகவும் சங்கோஜி. அடக்கமானவன். ஆனால் அவன் ஏதாவது ஒரு முடிவுக்கு வந்துவிட்டால் அவனை அசைக்க முடியாது.

இப்படிப்பட்டவனுடைய அன்பு காடுஷர்வைப் பெரிதும் கவர்ந்தது. அவன் தன்னை நேசிக்கிறுன் என்பதைப் பெண் களுக்கே உரிய ஞானத்தைக் கொண்டு அவள் வெகு எளிதில் கண்டுபிடித்துவிட்டாள். அப்படிப் பட்டவன் தன்மீது காதல் கொள்ளும்படி செய்யமுடிகிறதென்பதை நினைத்து அவள் பெருமைப்பட்டாள். பெருமையினுலும் ஏற்கனவே நடந்த சம்பவங்களினுலும் நிக்லியுடாவ் அவளை மணக்க விரும்பி ஞன். ஆனால் ஸைமன்ஸன் அவளை இப்போதைய நிலைமை யிலேயே காதலித்தான். அவளுடைய நேசத்திற்காகவே நேசித்தான். தன்னிடம் என்ன விசேஷ குணத்தைக் கண்டு அவன் காதலித்தான் என்பது அவளுக்கு நிச்சயமாகத் தெரிய வில்லை. ஆனால் அவனுக்கு ஏமாற்றம் ஏற்படக்கூடாது என் பதற்காக உன்னதமான குணங்களையெல்லாம் பெற முயன் ருள்.

அவர்கள் சிறையில் இருந்தபொழுதே இது ஆரம்பமாகி விட்டது. ஒருநாள் கைதிகளைப் பேட்டி காணும் தினம். அன்று அவன் அன்பு ததும்பும் தன் பள்ளக் கண்களினுல் அவளை உற்று நோக்கிக்கொண்டிருந்தான். "இவன் யாரோ விசித்திரமான மனிதன்; விசித்திரமான முறையில் பார்க் கிருன்" என்று அப்பொழுதே அவள் நினைத்தாள். அவன் தோற்றத்தில் அன்பும் உறுதியும் கலந்திருப்பதைக் கண் டாள். டோம்ஸ்கில் அவள் அரசியல் கைதிகளோடு வந்து சேர்ந்தபொழுது அவனை மறுபடியும் சந்தித்தாள். அவர்கள் ஒன்றும் பேசிக்கொள்ளவில்லையென்ருலும், ஒருவரை ஒருவர் ஞாபகப்படுத்திக் கொண்டனர். அவர்கள் ஒருவருக்கொருவர்

அளித்துக்கொண்ட முக்கியத்துவம் அவர்களுடைய பார்வை யிலிருந்தே வெளியாயிற்று. அதற்குப் பிறகும் அவர்கள் அதிகம் பேசிக்கொண்டதில்லை. ஆனால் தான் இருக்கும் பொழுது அவன் பேசும் பேச்செல்லாம் தன்னைப் பார்த்துத் தான் பேசுவதுபோல அவளுக்குத் தோன்றும். அவன் கைதி களோடு நடக்கத் தொடங்கிய பொழுதுதான் அவர்களுக்கிடை யில் அதிகம் பழக்கம் ஏற்பட்டது.

# 5

அவர்கள் பிரெம்மிலிருந்து புறப்படும்வரை காடுஷாவை இரண்டுமுறைதான் நிக்லியுடாவ் சந்தித்தான். இந்த இரண்டு சமயங்களிலும் அவள் கடுகடுப்பாக இருந்தாள். "ஏதாவது வேண்டுமா?" எல்லாம் சௌகர்யமாக இருக்கிறதா?" என்று கேட்டான். ஆனால் அவள் அலக்ஷியமாக பதில் அளித்து விட்டாள். அவளுடைய வருத்தம் நிறைந்த மனநிலை நிக்லி யுடாவைப் பெரிதும் துன்புறுத்தியது. தன்னுடைய கேவல மான நிலையை நினைத்து வருந்தி மீண்டும் மீண்டும் தன்னை வெறுக்கிறாளோவென்று நிக்லியுடாவுக்குத் தோன்றியது. பிரயாணத்தின் இந்தப் பகுதியில் அவளைச் சந்திக்கவே முடிய வில்லை. ஆகையால் அவளுக்கு உதவிசெய்வதும் சாத்திய மில்லாமல் போய்விட்டது. அரசியல் கைதிகளோடு அவள் சேர்ந்தபின் பார்த்தான். தான் நினைத்தது தவறு என்பது அப்பொழுதுதான் அவனுக்குத் தெரிந்தது. பிறகு அவளை அவன் ஒவ்வொருமுறை சந்தித்தபோதும், அவன் விரும்பிய ஆத்மீக மாறுதல் அவளிடம் ஏற்பட்டு அதிகரித்து வரு வதைக் கண்டான். இப்பொழுது அவள் அவனைச் சந்தித் தால் குழப்பமடையாமல் சந்தோஷத்துடனிருந்தாள். அவனை அரசியல் கைதிகளோடு கொண்டுவந்து சேர்த்ததற்காக நன்றி செலுத்தினாள்.

கைதிகளின் கூட்டம் இரண்டு மாதம் வழி நடந்தது. காடு ஷாவின் உள்ளமாறுதல் வெளியிலும் தெரியத் தொடங்கியது. வெயிலினால் கருத்து இளைத்திருந்தாள் அவள், முகத்தில் சுருக்கங்கள் விழுந்தன, அதிக வயதானவள் போல் தோன்றி னாள். அவள் தலையை வாரிவிட்டுக் கொண்டிருந்த விதத்தி லும் உடை அணிந்திருந்த விதத்திலும் முன்பு இருந்த 'மினுக்கு' இல்லை. அவளிடம் ஏற்பட்டிருந்த—இன்னும் ஏற் பட்டுக் கொண்டு வந்த-இந்த மாறுதலைக் கண்டு நிக்லியுடாவ் சந்தோஷப்பட்டான்.

அவளைப் பற்றி அவன் அதற்கு முன் அனுபவித்திராத ஒருவித உணர்ச்சி ஏற்பட்டது. முதலில் அவள்மீது அவன் கொண்ட கவிதைக் காதலைப் போலவோ, பிறகு கொண்ட

காம உணர்ச்சியைப் போலவோ இது இல்லை. விசாரணை முடிந்தபின் அவளை மணக்கத் தீர்மானித்தபொழுது ஏற்பட்ட கடமை உணர்ச்சிகூட அல்ல இது. இது வெறும் அனுதாபம். அவளை முதலில் சிறையில் சந்தித்த பொழுது இத்தகைய உணர்ச்சி ஏற்பட்டது. ஆஸ்பத்திரியில் கேட்ட சம்பவத்திற்குப் பின் ஏற்பட்ட வெறுப்பை வென்றபின் இத்தகைய உணர்ச்சி ஏற்பட்டது. ஆனால் முன் சந்தர்ப்பங்களில் ஏற்பட்ட உணர்ச்சிக்கும் இதற்கும் சிறிது வித்தியாசம் இருந்தது. முன்பு தோன்றிய உணர்ச்சி தற்காலிகமாக இருந்தது. இப்போதைய உணர்ச்சி நிரந்தரமானது. அவள்மீது மாத்திரமல்லாமல் மற்றெல்லார் மீதுமே இந்த உணர்ச்சிதான் ஏற்பட்டது. அவன் மனத்தில் அலை பாய்ந்து கொண்டிருந்த அன்புமடை திறந்துவிடப்பட்டு விட்டது. அவன் சந்தித்த ஒவ்வொருவர் மீதும் அது பிரவாகம்போல் பாய்ந்தது.

இப்பொழுது காடுஷா அரசியல் கைதிகளோடு இருந்ததால் அவனுக்கும் பல அரசியல் கைதிகளோடு பரிச்சயம் ஏற்பட்டது. இதனால் அவர்களைப் பற்றி அவனுக்கு இருந்த அபிப்பிராயம் முற்றிலும் மாறிவிட்டது.

ரஷ்யாவில் புரட்சி இயக்கம் ஆரம்பமாகி, இரண்டாவது அலெக்ஸாண்டர் மன்னன் கொலை செய்யப்பட்ட மார்ச் முதல் தேதியிலிருந்து, புரட்சிக்காரர்களை நிக்லியுடாவ் வெறுத்தான். அவர்கள் செய்த கொலைகளின் கொடுமையையும், சர்க்காருக்கு எதிராக அவர்கள் அனுஷ்டித்த ரகசிய முறைகளையும் அவன் வெறுத்தான். சர்க்காரிடம் அவர்கள் என்னென்ன கஷ்டப்பட்டார்கள் என்பதைப் பின்னர் அறிந்தான். அவர்கள் வேறு விதமாக இருந்திருக்க முடியாது என்பது பிறகுதான் அவனுக்குத் தெரிந்தது.

மற்ற கைதிகளுக்கு நீதியின் சாயலாவது கிடைத்தது. ஆனால் அரசியல் கைதிகளுக்கு அதுவும் இல்லை. ஷுஸ்டோவா விஷயத்தை நிக்லியுடாவ் ஏற்கனவே அறிந்திருந்தான். மற்றும் பலரைப் பற்றி இப்பொழுது தெரிந்து கொண்டான். வலையில் சிக்கிய மீன்களைப்போல் இவர்கள் நடத்தப்பட்டார்கள். வலையில் பெரிய மீன்களும் சிறிய மீன்களும் சிக்குகின்றன. மீன் பிடிப்பவன் பெரிய மீன்களை எடுத்துக்கொண்டு சிறியவற்றைக் கரையிலேயே சாக விட்டுவிட்டுப் போய்விடுகிறான். அதே போல் குற்றமற்ற நூற்றுக் கணக்கானவர்களை அதிகாரிகள் பிடித்துச் சிறையில் தள்ளினர். அங்கு அவர்கள் நோயினால் பிடிக்கப்பட்டோ, பைத்தியம் பிடித்தோ, தற்கொலை செய்துகொண்டோ மடிந்தார்கள். இவர்களை விடுதலை செய்யவேண்டுமென்று அதிகாரிகளுக்குத் தோன்றவில்லை. அதனால்தான் இவர்கள் வருஷக் கணக்கில் சிறையில் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார்கள். இந்த நிரபராதிகளின்

விதி ஒரு போலீஸ் அதிகாரி இன்ஸ்பெக்டர் மாஜிஸ்ரேட் அல்லது கவர்னரின் கையில் இருந்தது. இந்த அதிகாரிகளில் யாருக்காவது ஒன்றும் தோன்றவில்லையென்ருல் அல்லது தான் பிரதானமாக விளங்க வேண்டுமென்று தோன்றிருல் பலரைக் கைது செய்ய உத்தரவிடுகிருன், அல்லது விடுதலை செய்யச் சொல்கிருன். பெரிய அதிகாரிகளும் இப்படியே கைதிகளுக்கு மரண தண்டனையோ ஜீவாந்தர சிக்ஷையோ விதிக்கிருர்கள். எல்லாம் அவரவர் இஷ்டம். ராணுவத்தினர் செய்யும் கொடுமைகளை வீரமென்று பொதுமக்கள் கருதுவதுபோல, அரசியல் கைதிகளின் கொடுமைகளையும் பெருமையென்று கருதினர். கொடுமையைக் கண்ணுல் காணவும் சகியாதவர்கள் கொலை செய்யத் துணிவதன் ரகசியம் அவனுக்கு விளங்கிவிட்டது. தன்னைப்பாதுகாத்துக் கொள்வதற்கும், உயர்ந்த லக்ஷியங்களை ·அடைவதற்கும் பொது நன்மைக்காகவும் கொலை செய்வது நியாயம் தர்மம் என்று இவர்கள் கருதுகின்றனர் புரட்சிக்காரர்களின் செய்கைகளுக்கு சர்க்கார் அளிக்கும் முக்கியத்துவத்திலும், அளிக்கும் கடுந் தண்டனைகளினுலும் அவர்கள் தங்களைப்பற்றிப் பிரமாதமாக நினைத்துக்கொண்டு விடுகிருர்கள் அவ்வளவு கஷ்டங்களைச் சகிக்க அவர்கள் தங்களைப்பற்றி உன்னதமான அபிப்பிராயம் வைத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது.

நிக்லியுடாவ் இவர்களோடு நெருங்கிப் பழகியபின், சிலர் நினைப்பதுபோல் இவர்கள் கொடிய மூர்க்கரோ, மற்றும் சிலர் நினைப்பது போல் மஹா வீரர்களோ அல்ல வென்பதை அறிந்தான். மற்றெல்லாரையும் போலத்தான் இவர்களும் இருந்தனர் மற்றவர்களைப்போல் இவர்களிடமும் சில நல்ல குணங்களும் சில கெட்ட குணங்களும் இருக்கின்றன.

கொடுமைகளை எதிர்த்துப் போராடுவது தங்கள் கடமை என்று நினைத்ததால் சிலர் புரட்சிக்காரர்களானுர்கள், சுய நலத்திற்காக மற்றும் சிலர் புரட்சிக்காரர்களானுர்கள். ஆனல் அபாயங்களையும் கஷ்டங்களையும் சமாளிப்பதில் ஏற்படும் சந்தோஷத்தை அனுபவிப்பதற்காகப் பெரும் பாலானவர்கள் புரட்சி இயக்கத்தில் சேர்ந்தனர். சக்தி மிகுந்த அனைவருக்கும் இந்த ஆசை உண்டு என்பதை தன்னுடைய ராணுவ வாழ்க்கையிலிருந்து அவன் அறிந்திருக்கிருன். ஆனல் சாதாரண ஜனங்களுக்கும் இவர்களுக்கு மிடையில் ஒரு வித்தியாசம் இருந்தது. இவர்கள் தர்மத்தைப் பிரதானமாகக் கருதுகிருர்கள். சுய கட்டுப்பாடு, கஷ்ட வாழ்க்கை, உண்மை, பற்றின்மை முதலியவற்றை அனுபவிப்பது தங்கள் கடமை என்று கருதி இல்லாமல் பொது நன்மைக்காக தங்கள் உயிர் உட்பட சர்வத்தையும் தியாகம் செய்துவிட அவர்கள் தயாராக இருந்தனர். அவர்களில் சிறந்தவர்கள் மிக உன்னதமான மனோபாவத்துடன் இருந்தனர் தாழ்ந்தவர்கள் பொய்யும் பித்தலாட்டமும் கர்வமும் படைத்த

மிகமட்டமான நிலையில் இருந்தனர். ஆகையால் தான் புதிய சகாக்களில் சிலரை நிக்லியுடாவ் நேசித்தான், மற்றும் சிலர் மீது முன்னைக்காட்டிலும் அதிக துவேஷம் ஏற்பட்டது.

## 6

கிரில்ட்ஸோவ் என்பவன் மீது நிக்லியுடாவுக்கு விசேஷ அபிமானம் ஏற்பட்டது. அவன் க்ஷயரோகம் பிடித்த ஓர் இளைஞன். எக்டெரின் பர்க்கில் நிக்லியுடாவ் அவனை முதலில் சந்தித்தான். பிறகு பலமுறை அவனைச்சந்தித்துப் பேசினான். ஒரு சமயம் ஒரு நாள் முழுவதும் அவனுடனேயே நிக்லியுடாவ் தங்கியிருந்தான். கிரில்ட்ஸோவ் தன் கதையை விபரமாகச் சொன்னான். அவன் குழந்தையாக இருந்தபொழுதே தந்தையை இழந்துவிட்டான். தந்தை ஒரு பெரிய மிராசுதார். தாய்தான் அவனை வளர்த்தாள். பள்ளிக்கூடத்திலும் கலாசாலையிலும் அவன் நன்றாக படித்தான். கணக்கில் அவன் தான் முதல். வெளிநாடு சென்று படிக்க சர்வகலாசாலை அவனுக்கு உபகாரச் சம்பளம் கொடுக்க முன் வந்தது. ஆனால் சீக்கிரம் அவன் ஒரு முடிவுக்கு வரவில்லை, அவன் ஒரு பெண்ணைக் காதலித்தான். விவாகம் செய்து கொள்ள விரும்பினான். கிராம ஆட்சியில் கலந்து கொள்ள வேண்டுமென்று ஆசை. எல்லாவற்றையும் செய்ய வேண்டு மென்று ஆசைப்பட்டான். ஆகையால் சீக்கிரம் ஒரு முடிவுக்கு வர முடியவில்லை. இந்த சமயத்தில் அவனோடு படித்துக் கொண்டிருந்த மாணவர்கள் சிலர் ஏதோ ஒரு பொது ஜன சேவைக்காகப் பணம் கேட்டனர் இது புரட்சி வேலைதான் என்பது அவனுக்குத்தெரியும். இந்த சமயத்தில் அதில் அவனுக்கு அக்கரை இல்லை. இருந்தாலும் பணத்தைக் கொடுத்தான். நட்பு, பெருமை, பயங்கொள்ளி யென்று நினைக்காதிருக்க வேண்டுமேயென்ற எண்ணம். எல்லாமாகச் சேர்ந்து பணத்தைக் கொடுக்கும்படி தூண்டின. பணம் வாங்கிக்கொண்டவர்கள் பிடிபட்டுவிட்டார்கள். கிரில்ட்ஸோவ் தான் அவர்களுக்குப் பணம் கொடுத்தான் என்பது தெரிந்தும் விட்டது. அவனும் கைதியாகிவிட்டான்.

"சிறையில் அதிகாரிகள் அதிகக் கண்டிப்பாக இல்லை. நாங்கள் சுவரைத் தட்டிப் பேசிக்கொள்வோம்; தாழ்வாரத்தில் உலாவுவோம்; எங்களுக்குக் கிடைக்கும் சாமான்களைப் பகிர்ந்து கொள்வோம். சாயங்கால வேளைகளில் நாங்கள் சேர்ந்து பாடக் கூடச் செய்வோம். என குரல் நன்றாக இருக்கும். என் தாய் அவ்வளவு துக்கப்படாமலிருந்திருந்தால் எல்லாம் சரியாகப்போயிருக்கும். ஏன், ரஸமாகக் கூட இருந்திருக்கும். பிரசித்திபெற்ற பெட்ரோவ் அங்கு எனக்கு அறிமுகமானார். அவர் கோட்டையில் கண்ணாடித்துண்டினால் வெட்டிக்கொண்டு தற்கொலை

செய்துகொண்டு விட்டார். இன்னும் பலரையும் தெரிந்து கொண்டேன். இன்னமும் நான் புரட்சிக்காரனுகவில்லை. என் சிறைக்கூட்டிற்குப் பக்கத்தில் இருந்த மற்றும் இருவர் எனக்குச் சிநேகிதர்களானுர்கள். அவர்களும் இதே வேலையில்தான் பிடிபட்டார்கள். போலிஸ் பிரகடனத்தை வைத்திருக்கும் பொழுது அவர்கள் கைதியானுர்கள். ரயில்வே ஸ்டேஷனுக்குப் போகும்பொழுது தப்பியோடியதாக விசாரிக்கப்பட்டார்கள். அவர்களில் லோஜின்ஸ்கி என்பவன் போலந்துக்காரன். ரோஜோவ்ஸ்கி என்ற மற்ருெருவன் யூதன். இந்த ரோஜோவ்ஸ்கி சிறிய பையன்தான். தனக்குப் பதினேழு வயதானதாக அவன் சொல்லிக் கொண்டான். ஆனுல், பதினைந்து வயதானவன்போலத்தான் காணப்பட்டான். ஒல்லியான தேகம். மிகுந்த சுறுசுறுப்பு. ஒளிவீசும் கருவிழிகள். சங்கீதம்போன்ற இனிய குரல். மிக இனிமையாகப் பாடுவான். அவர்கள் விசாரணைக்குப் போனதை நான் பார்த்தேன். காலையில் போனுர்கள்; சாயங்காலம் திரும்பவில்லை; தங்களுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டிருப்பதாகச் சொன்னுர்கள். ஒருவரும் இதை எதிர்பார்க்கவேயில்லை. அவர்களுடைய வழக்கு மிகச் சிறியது. போலீசாரிடமிருந்து தப்பியோடத்தான் முயன்ருர்கள்; ஒருவருக்கும் சிறிய காயம்கூட ஏற்படுத்தவில்லை. தவிர ரோஜோவ்ஸ்கி போன்ற ஒரு சிறிய குழந்தையைத் தூக்கிலிடுவது இயற்கைக்கு விரோதமாக இருந்தது. 'அவர்களைப் பயமுறுத்துவதற்காகத் தான் இப்படிச் செய்திருக்கிருர்கள்; தண்டனையை ஊர்ஜிதம் செய்யமாட்டார்கள்' என்று சிறையில் இருந்த நாங்கள் அனைவரும் நினைத்திருந்தோம். முதலில் எங்களுக்கு ஆத்திரமாக இருந்தது. பிறகு அமைதி பெற்ருேம். ஒருநாள் காவல்காரன் திடீரென்று என் அறைக்கு வந்து "தச்சர்கள் வந்திருக்கிருர்கள்: தூக்குமரம் அமைத்துக் கொண்டிருக்கிருர்கள்" என்று சொன்னுன். எனக்கு ஒன்றும் புரியவில்லை. "என்ன? தூக்குமரமா?" என்றேன். அவன் முகத்தில் காணப்பட்ட பரபரப்பைக் கண்டவுடன் இவர்களுக்குத்தான் தூக்குமரம் என்பது தெரிந்து விட்டது. உடனே சுவரைத்தட்டி என் சகாக்களுக்கு விஷயத்தைச் சொல்ல வேண்டுமென்று நினைத்தேன். ஆனுல் அவர்கள் இருவருக்கும் தெரிந்துவிட்டால்? என்றேன். தோழர்களும் மௌனமாக இருந்தனர்; எல்லாருக்கும் தெரியும் போலும். தாழ்வாரத்திலும் சிறைக்கூடுகளிலும் மரண நிசப்தம் நிலவியது. ஒருவரும் சுவரைத் தட்டிப் பேசவுமில்லை, பாடவுமில்லை; இரவு பத்து மணிக்கு கிழ காவல்காரன் மறுபடியும் வந்து, "தூக்குப் போடுவதற்காக மாஸ்கோவிலிருந்து ஒருவன் வந்திருக்கிருன்" என்று சொல்லி விட்டுப் போனுன். அவன் சிறிது தூரம் போனவுடன் அவனைத் திரும்ப அழைத்தேன். உடனே ரோஜோவ்ஸ்கி உரக்கப் பேசுவது கேட்டது. "என்ன சமாசாரம்? எதற்காக அவனைக் கூப்பிடுகிருய்? என்று என்னைக் கேட்டான். அவன் எனக்குப் புகையிலை கொண்டுவந்து கொடுத்ததாக ஏதோ பதில் சொன்னேன்.

ஆனால் அவன் விழித்துக்கொண்டு விட்டதாகத் தோன்றியது. "இன்று ஏன் பாடவில்லை? சுவரை ஏன் தட்டவில்லை!" என்று கேட்டான். நான் என்ன பதில் சொன்னேனென்பது ஞாபக மில்லை. அதற்கு மேல் அவனோடு பேசாமலிருக்க நான் உள்ளே போய் விட்டேன்.

"அன்று இரவு பயங்கரமாக இருந்தது. உதயமாகும் சமயத்தில் சிலர் நடந்துவரும் சப்தம் கேட்டது. நான் கதவு துவாரத்தின் மூலம் வெளியே பார்த்தேன். தாழ்வாரத்தில் ஒரு விளக்கு எரிந்து கொண்டிருந்தது. முதலில் இன்ஸ்பெக்டர் போனார். சாதாரணமாக அவர் முரடர்தான். ஆனால் அன்று அவர் முகம் பிரேதம் போல் வெளுத்துப் போயிருந்தது. பயந்துபோனவர் போல முகத்தைத் தொங்கவிட்டுக் கொண்டு போனார். அவருக்குப் பின்னால் சின்ன இன்ஸ்பெக்டர் உறுதியுடன் வந்தார். இவர்களுக்குப் பின்னால் காவல்காரர்கள் வந்தனர். அவர்கள் என் அறையைக் கடந்து அடுத்த அறை வாசலில் போய்நின்றார்கள். "லோஜின்ஸ்கி! எழுந்திருந்து சுத்தமான உடையை அணிந்துகொள்"என்று சின்ன இன்ஸ்பெக்டர் சொன்னதைக் கேட்டேன். பிறகு கதவு கிரிச்சிடும் சப்தம் கேட்டது. அவர்கள் அவனுடைய அறைக்குள் பிரவேசித்தனர். பிறகு லோஜின்ஸ்கி தாழ்வாரத்தின் எதிர்ப்பக்கத்திற்குப் போகும் சப்தம் கேட்டது. இன்ஸ்பெக்டர் மாத்திரம்தான் என் கண்ணுக்குத் தெரிந்தார். முகம் வெளுத்துப் போய் சட்டைப் பித்தானைக் கழற்றுவதும் போடுவதுமாக நின்றிருந்தார். தோள்பட்டையை அடிக்கடி குறுக்கிக் கொண்டார். திடீரென்று எதையோ நினைத்து பயந்து போனவர் போல் அந்த இடத்தை விட்டு நகர்ந்தார். லோஜின்ஸ்கி அவரைக் கடந்து என் அறையருகே வந்தான். மிக அழகான பையன்; அகன்ற மார்பு. அழகிய நீல விழிகள். அழகான சுருண்ட தலை மயிர். அந்தத்தலை மயிர் அவனுக்கு கருப்புப்பட்டுக் குல்லாய் போட்டது போலிருந்தது. கதவில் இருந்த துவாரத்தின் மூலம் அவன் முகம் எனக்கு நன்றாகத் தெரியும்படி நின்றான். இப்பொழுது அவன் முகத்தில் ஒரு பயங்கரக்களை காணப்பட்டது. 'கிரில்ட்ஸோவ், உன்னிடம் ஸிகரெட்டு இருக்கிறதா?' என்று கேட்டான். நான் ஸிகரெட்டை எடுத்துக் கொடுப்பதற்குள் சின்ன இன்ஸ்பெக்டர் விரைந்து தன்னிடம் இருந்த ஸிகரெட்டில் ஒன்றைக் கொடுத்தான். பிறகு லோஜின்ஸ்கி எதையோ நினைத்துக் கொண்டவன் போலப் பேசத் தொடங்கினான். 'இது கொடுமை. அக்கிரமம்; நான் ஒரு குற்றமும்செய்யவில்லை; நான்—' என்றான். அதற்கு மேல் அவனால் பேசமுடியவில்லை. வெள்ளை வெளேரென்று இருந்த அவனுடைய அழகான தொண்டையில் ஏதோ உருண்டு அசைவது தெரிந்தது. அவனுடைய தொண்டையை விட்டு என் பார்வையை அகற்ற முடியவில்லை. அப்பொழுது ரோஜோவ்ஸ்கி உரக்கக் கத்திக்கொண்டிருந்தது காதில் விழுந்

தது. லோஜின்ஸ்கி ஸிகரெட்டை எறிந்துவிட்டு, துவாரத்திலிருந்து விலகிச் சென்றான். உடனே லோஜோவ்ஸ்கியின் முகம் அங்கு தெரிந்தது. சிவந்திருந்த அவனுடைய குழந்தை முகத்தையும், கருவிழிகளையும் பார்த்தேன். வெள்ளை கால் சட்டையைத் தூக்கிப் பிடித்துக் கொண்டிருந்தான். அவனுடைய உடம்பு முழுமையும் நடுங்கிக் கொண்டிருந்தது. அவன் கதவருகே இன்னும் நெருங்கிவந்து, 'கிரில்ட்ஸோவ், டாக்டர் எனக்கு இருமலுக்கு மருந்து எழுதிக் கொடுத்திருப்பது உண்மைதானே? எனக்கு உடம்பு சரியாக இல்லை. இன்னும் கொஞ்சம் மருந்து சாப்பிடுகிறேன்' என்றான். ஒருவரும் பதில் சொல்லவில்லை. அவன் என்னையும் இன்ஸ்பெக்டரையும் கேள்வி கேட்பதுபோல் மாறி மாறிப் பார்த்தான். அவன் சொன்னது எனக்கு விளங்கவில்லை. சின்ன இன்ஸ்பெக்டர் உடனே முகத்தைக் கடுகடுப்பாக வைத்துக்கொண்டு, 'இதெல்லாம் என்ன விளையாட்டு? போகலாம்' என்று உரத்தக் குரலில் கூறினார். தனக்கு என்ன நேரப்போகிறது என்பதை ரோஜோவ்ஸ்கி புரிந்துகொள்ளக்கூட முடியாது போல் தோன்றியது. எல்லாருக்கும் முன்னால் வேகமாகச் சென்றான்—ஓடினான் என்றே சொல்ல வேண்டும். அவனுடைய மெல்லிய குரல் நன்றாகக் கேட்டது. பிறகு அவர்களுடைய காலடிச் சத்தமும், பிறகு ஸ்தூலமான ஒரு சப்தமும் கேட்டன. அவன் கத்துவதும் விசித்து விசித்து அழுவதுமாக இருந்தான். போகப் போக இந்த சப்தம் குறைந்தது. கடைசியில் கதவின் கடகட வென்ற சப்தம் கேட்டது. பிறகு ஒரே நிசப்தம். ஆமாம்! அவர்களைத் தூக்கிலிட்டாகி விட்டது. அதை நேரில் பார்த்த வேறொரு காவல்காரன் எல்லாவற்றையும் என்னிடம் விவரமாகச் சொன்னான். லோஜின்ஸ்கி எதிர்க்கவேயில்லையாம். ரோஜோவ்ஸ்கிதான் கொஞ்சத்தில் பணியவில்லையாம். அவனை பலவந்தமாக இழுத்து அவன் கழுத்தில் தூக்குக் கயிற்றை மாட்ட வேண்டியிருந்ததாம். இதையெல்லாம் என்னிடம் சொன்ன காவல்காரன் அசடு. 'இது ரொம்ப கோரமாக இருக்குமென்று எல்லாரும் சொன்னார்கள். ஆனால் ஒரு கோரமும் இல்லை. அவர்கள் தூக்குக் கயிற்றில் தொங்கும் பொழுது தோளை இரண்டு முறை குலுக்கினார்கள்' என்று சொல்லி தன் தோள்களைக் குலுக்கிக் காட்டினான். 'தூக்குக் கயிற்றை இருக்குவதற்காக கொலையாளி ஒரு பிடியை இழுத்தான். எல்லாம் தீர்ந்துவிட்டது' என்று அந்த காவல்காரன் சொன்னான்" என்றான் கிரில்ட்ஸோவ்.

"ஒரு கோரமும் இல்லை" என்று காவல்காரன் சொன்ன வார்த்தைகளை அவன் திருப்பிச் சொல்லிவிட்டுச் சிரிக்க முயன்றான். அவனுக்கு துக்கம் வந்துவிட்டது.

பிறகு வெகு நேரம் வரை அவன் பேசவில்லை. துக்கம் அவனைக் குலுக்கியது. அதை அடக்கிப் பெருமூச்சு விட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

அவனுடைய துக்கம் தணிந்தவுடன் மறுபடியும் பேசத் தொடங்கினான். "அப்பொழுது முதல்தான் நான் புரட்சிக்காரனாகி விட்டேன்" என்றான். பிறகு தன் சொந்த வரலாற்றைச் சில வார்த்தைகளில் முடித்துவிட்டான்.

" தகர்க்கும் கூட்டத்திற்குக் கூட இவன் தலைவனாக இருந்திருக்கிறானாம். சர்க்காரை நடுங்க வைத்து தானே பதவியை விட்டு ஓடச் செய்வதுதான் இந்தக் கூட்டத்தின் நோக்கம். இந்த வேலை சம்பந்தமாக அவன் கிப், ஓடெஸ்ஸா முதலிய இடங்களுக்கும், வெளி நாடுகளுக்கும் பிரயாணம் செய்திருக்கிறான். எங்கும் அவனுக்கு வெற்றிதான். அவனுடைய நம்பிக்கைக்கு முற்றிலும் பாத்திரமாக இருந்த ஒருவன் துரோகம் செய்துவிட்டான். இதன் விளைவாக அவனைக் கைது செய்து விசாரித்தனர். இரண்டு வருஷம் அவனைச் சிறையில் வைத்திருந்த பின் அவனுக்கும் மரண தண்டனை விதித்தனர். பிறகு இந்த தண்டனையை ஆயுள் பரியந்தம் தீவாந்திர சிக்ஷையாகக் குறைத்தார்கள். சிறையில் அவனுக்கு க்ஷயரோகம் வந்துவிட்டது. "இப்போதைய என் தேக நிலையில் இன்னும் சில மாதங்கள்தான் உயிரோடு இருப்பேன். இது எனக்கே தெரியும் இதற்காக நான் வருத்தப்படவில்லை. எனக்கே மற்றொரு பிறப்பு உண்டென்றால், நான் கண்ட அக்கிரமங்களை ஒழிப்பதற்காகவே அப்பிறப்பையும் உபயோகிப்பேன்" என்று கூறினான்.

இதற்கு முன் புரியாத பல விஷயங்கள் இப்பொழுது நிக்லியுடாவுக்கு விளங்கின.

## 7

**கா**வல் அதிகாரி ஒரு குழந்தையைப்பற்றி சண்டையிட்ட அன்று நிக்லியுடாவ் ஒரு கிராம ஹோட்டலில் தங்கியிருந்தான். அன்று வெகுநேரம் கழித்துத்தான் அவன் படுக்கையை விட்டு எழுந்தான். அடுத்த நகருக்குச் சென்றவுடன் தபாலில் போடுவதற்காக சில கடிதங்களை எழுதிக் கொண்டிருந்தான் வழக்கத்தைவிட அதிகநேரம் கழித்துத்தான் அன்று அங்கிருந்து புறப்பட்டான். கைதிகள் கோஷ்டியை அன்று வழியில் கடந்து செல்ல முடியவில்லை. அடுத்தபடி கைதிகள் தங்கிய இடத்திற்கு அஸ்தமன சமயத்திற்குத்தான் போய்ச் சேர்ந்தான்.

தடித்த ஸ்திரீ ஒருத்தி நடத்திவந்த யாத்திரிகர் விடுதியில் தங்கினான். ஒரு சுத்தமான அறை நன்றாய் அலங்கரிக்கப்பட்டிருந்தது. நிக்லியுடாவ் அந்த அறையில் உட்கார்ந்து தேநீர்

அருந்திவிட்டு கைதிகள் தங்கியிருந்த இடத்திற்குப் போனான். காடுஷாவைப் பார்க்க அதிகாரியிடம் அனுமதி கோரினான். ஒரு வாரமாக அவன் காடுஷாவைப் பார்க்கவேயில்லை. அதிகாரிகள் அடிக்கடி மாறிக்கொண்டிருந்தார்கள். ஒவ்வோரிடத்தில் கைதிகள் தங்கியபோதும் அவளைச் சந்திக்க அவன் அனுமதி கேட்டுப் பார்த்தான். ஆனால் கிடைக்கவில்லை. பெரிய சிறைச்சாலை அதிகாரி ஒருவர் அந்த வழியாகப் போவதாக இருந்தது. அதனால்தான் இவ்வளவு கெடுபிடி. இப்பொழுது அந்த அதிகாரி கைதிகள் கூட்டத்தைப் பார்க்காமலே அந்த வழியாகப் போய்விட்டார், ஆகையால் கடுஷாவைப் பார்க்க தனக்கு அனுமதி கிடைக்குமென்று நிக்லியுடாவ் நினைத்திருந்தான்.

கைதிகள் தங்கியிருந்த இடம் கிராமத்தின் மறுகோடியில் இருந்தது. அங்கு நிக்லியுடாவ் போவதானால் வண்டி அனுப்புவதாக வீட்டுக்காரி சொன்னாள். நிக்லியுடாவுக்கு வழிகாட்ட ஓர் இளைஞன் முன் வந்தான். அவன் தோற்றம், உலகத்தையே தோளில் தாங்கிய ஹெர்க்குலிஸ்போல் இருந்தது.

கனத்த மூடுபனி வானத்தை மூடிக்கொண்டிருந்தது. மூன்றடி தூரத்திற்கு முன்னால் போய்க்கொண்டிருந்த இளைஞனைக் கூடப் பார்க்க முடியவில்லை. ஏதாவது வீட்டு ஜன்னலிலிருந்துவரும் வெளிச்சம் அவன்மீது விழும்பொழுதுதான் அவன் போவது தெரிந்தது. அவனுடைய கனத்த பூட்ஸால் சேற்றை மிதித்துச் செல்லும் சப்தம் கேட்டு நிக்லியுடாவ் வழியைக் கண்டுபிடித்துக் கொண்டான்.

இருவரும் கிராமத்தின் வெளிப்புறத்திற்கு வந்து சேர்ந்தனர். கைதி முகாமின் காவல்காரன் வழக்கம்போல், "யாரங்கே?" என்று அதிகார தோரணையில் கத்தினான். வேலி அருகேகூட அவர்கள் நிற்கக் கூடாதென்றான். ஆனால் நிக்லியுடாவோடு வந்த இளைஞன். இதைக்கண்டு பயந்துவிடவில்லை. "என் அப்பா கோபித்துக் கொள்கிறாய்? உன் எஜமானைக் கூப்பிடு; அவர் வரும்வரை நாங்கள் காத்துக்கொண்டிருக்கிறோம்" என்று சாவதானமாகச் சொன்னான். காவற்காரன் ஒரு பதிலும் சொல்லவில்லை. முகாமுக்கு உள்ளே பார்த்து ஏதோ கத்தினான். வேலிக்குப் பின்னாலிருந்து ஆண்களின் குரல்களும் பெண்களின் குரல்களும் மொத்தமாகக் கேட்டுக் கொண்டிருந்தன. சில நிமிஷங்களுக்குள் ஏதோ கலகலக்கும் சப்தம் கேட்டது. சிறைக்கதவு திறந்தது. ஒரு சார்ஜெண்ட் உள்ளேயிருந்து வந்து விளக்கு வெளிச்சத்தில் நின்றான். காவற்காரனவ்வளவு கடுமையாக இவன் இல்லை. நிக்லியுடாவைப்பற்றித் தெரிந்து கொள்வதில் இவன் அதிக அக்கறை காட்டினான். நிக்லியுடாவ் ஏதாவது சில்லரை கொடுக்கக் கூடுமென்று அவனுக்குத் தோன்றியது. அதை நழுவவிட அவன் இஷ்டப்படவில்லை.

"நீங்கள் யார்? எதற்காக அதிகாரியைப் பார்க்க வேண்டும்?" என்றெல்லாம் நிக்லியுடாவைக் கேட்டான். "நான் விசேஷ வேலையாக வந்திருக்கிறேன். அது நடந்தால் மிக நன்றியுள்ளவனாக இருப்பேன். ஒரு சீட்டு கொடுக்கிறேன்; அதைக்கொண்டு போய் அதிகாரியிடம் கொடுப்பீர்களா?" என்றான் நிக்லியுடாவ். சார்ஜெண்ட் சீட்டை வாங்கிக்கொண்டு போய்விட்டான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் கதவு மறுபடியும் திறந்தது. சில பெண்கள் கூடைகளுடனும், பெட்டிகளுடனும் ஜாடிகளுடனும் வந்தனர். அவர்கள் விசித்திரமான சைபீரிய பாஷையில் உரக்கப் பேசிக்கொண்டு வந்தனர். அவர்களில் ஒருத்தி, நிக்லியுடாவுடன் வந்திருந்த இளைஞனைப் பார்த்தவுடன் சந்தோஷம் தாங்காமல், "அட நீ நாசமாய்ப்போக, நீ இங்கெங்கு வந்தாய்?" என்றாள்.

"இவருக்கு வழி காட்டுவதற்காக வந்தேன். நீ என்ன கொண்டு வந்தாய்?" என்று இளைஞன் பதிலுக்குக் கேட்டான்.

"பால் கொண்டு வந்தேன். நாளை காலை இன்னும் கொண்டு வரவேண்டுமாம்."

"இரவு உன்னை ஒருவரும் அங்கேயே இருக்கச் சொல்லவில்லையா?"

"நீ நாசமாய்ப்போக; புளுகுணி" என்று அவள் சிரித்துக்கொண்டே சொன்னாள். "ஏய், கிராமம்வரை எங்களோடு வருகிறாயா?" என்று இளைஞனைக் கேட்டாள்,

அதற்கு இளைஞன் ஏதோ பதில் சொன்னான். அதைக் கேட்டு அந்தப் பெண்கள் மாத்திரமன்றி காவல்காரனும் சிரித்தான். பிறகு அவன் நிக்லியுடாவ் பக்கம் திரும்பி, "நீங்கள் தனியாகப் போவீர்களா? வழி தவறிவிடாதே?", என்று கேட்டான்.

"நான் கண்டு பிடித்துக் கொண்டு போய் விடுவேன்.

"சர்ச்சைத் தாண்டிச் சென்றவுடன், இரண்டடுக்கு மாடி வீட்டுக்குப் பக்கத்தில் இரண்டாவது வீடு; இந்தாருங்கள், இந்தக் கழியையும் எடுத்துக் கொண்டு போங்கள்" என்று சொல்லி, இளைஞன். தான் கொண்டு வந்த நீண்ட கழியை அவனிடம் கொடுத்தான். சேறு நாலாபக்கமும் தெறிக்க அவன் நடந்து போய் இருட்டில் மறைந்துவிட்டான். பெண்களின் குரலுக்கிடையில் அவன் குரலும், பூட்ஸ் சப்தமும் மூடுபனியை ஊடுருவி வந்து கேட்டன. மறுபடியும் சிறைக்கதவு திறந்தது. சார்ஜெண்ட் வந்தான். அதிகாரியைச் சந்திக்கத் தன்னோடு வரும்படி அவன் நிக்லியுடாவை அழைத்தான்.

# 8

கைதிகள் தங்கும் எல்லா முகாம்களையும்போல இதைச் சுற்றியும் கூரிய கம்புகள் நட்டு வேலி கட்டப்பட்டிருந்தது. இந்த வேலிக்குள் மூன்று ஒற்றை மாடி வீடுகள் இருந்தன. அவற்றில் கொஞ்சம் பெரியதாக இருந்த வீடு கைதிகளுக்கு; மற்றொன்று காவல் வந்த சோல்ஜர்களுக்கு; மற்றொன்று அதிகாரிக்கு, எல்லா வீடுகளின் ஜன்னல் மூலமும் விளக்கு வெளிச்சம் வந்து கொண்டிருந்தது.

முன்புற அறையில் ஒரு சோல்ஜர் அடுப்பை விசிறிக் கொண்டு உட்கார்ந்திருந்தான். அவன் நிக்லியுடாவைக் கண்ட வுடன் உள்ளே சென்று, "அவர் வந்துவிட்டார் எஜமான்" என்றான்.

"சரி, வரச்சொல்" என்று ஒரு கோபக்குரல் கர்ஜித்தது. சோல்ஜர் வெளியே வந்து நிக்லியுடாவை உள்ளே போகச் சொல்லிவிட்டு மறுபடியும் அவசரமாக அடுப்பை விசிறத் தொடங்கினான்.

அதிகாரி இருந்த அறைக்குள் புகை சூழ்ந்திருந்தது. சுருட்டுப் புகையின் நாற்றமும், மட்டமான ஏதோ ஓர் அத்தரின் கடும் வாசனையும் கலந்திருந்தன. அதிகாரி சிவந்த முகத்துடன் ஒரு மேஜைக்குப் பின்னால் உட்கார்ந்திருந்தார். மேஜைமீது அவர் சாப்பிட்டு மிஞ்சிய பொருள்களும், இரண்டு புட்டிகளும் இருந்தன. அவர் நிக்லியுடாவை அலக்ஷியமாகவும் சந்தேகத்துடனும் பார்ப்பது போல் தோன்றியது.

"என்ன வேண்டும்?" என்று நிக்லியுடாவைக் கேட்டார். ஆனால் பதிலை எதிர்பாராமலே. "அடேபெர்னேவ், எங்கேஒழிந்து போனாய்? வென்னீரைக் கொண்டு வா" என்று கத்தினார்.

"இதோ வந்துவிட்டேன் சார்."

"வா, என்றைக்கும் நினைவிருக்கும்படியாக ஒன்று கொடுக்கிறேன்" என்றார் அதிகாரி. அவர் கண்கள் ஜ்வலித்தன.

"இதோ வந்துகொண்டேயிருக்கிறேன்" என்று சொல்லி சோல்ஜர் ஒரு பாத்திரத்தில் வென்னீரைக் கொண்டு வந்தான். அவன் பாத்திரத்தை மேஜைமேல் வைத்துவிட்டு வெளியே போகும் வரையில் தன் கருமையான கண்களால் அவனையே பார்த்துக் கொண்டிருந்தார் அதிகாரி. அவனை எப்படி அறை

யலாமென்று குறி பார்ப்பது போலிருந்தது. அவருடைய கூரிய பார்வை: அதிகாரி தேநீர் தயாரித்து குடித்தார். தன் பெட்டியிலிருந்து சில பிஸ்கட்களை எடுத்து மேஜை மேல் வைத்தார். பிறகு அவர் நிக்லியுடாவை நோக்கி—"நான் உங்களுக்கு என்ன உதவி செய்ய வேண்டும்?" என்றார்.

"நான் ஒரு கைதியைப் பார்க்க அனுமதிக்க வேண்டும்."

"அரசியல் கைதியா? அதற்கு சட்டம் அனுமதி அளிக்கவில்லை."

"ஒரு பெண் கைதி; அவள் அரசியல் கைதியல்ல."

"சரி, உட்காருங்களேன்" என்றார் அதிகாரி.

நிக்லியுடாவ் உட்கார்ந்தான், "அவள் அரசியல் கைதியல்ல; ஆனால் என் வேண்டுகோளின் பேரில், அவள் அரசியல் கைதிகளோடு இருக்க அதிகாரிகள் அனுமதித்திருக்கிறார்கள்."

"ஓ! எனக்குத் தெரியும். அவளைப் பார்க்கலாம். நீங்கள் புகை குடிப்பது உண்டா?" என்று அதிகாரி இடை மறித்துக் கேட்டார். ஸிகரெட் டப்பா ஒன்றை அவர் நிக்லியுடாவ் பக்கம் நகர்த்தினார். தான் தயாரித்த தேநீரை இரு டம்ளர்களில் ஜாக்கிரதையாக ஊற்றி ஒரு டம்ளரை நிக்லியுடாவ் அருகே வைத்தார்.

"வந்தனம் நான் அவளைப் பார்க்க வேண்டும்"

"இப்பொழுது இரவுப் பொழுது அதிகம். இன்னும் நிரம்ப அவகாசம் இருக்கிறது. அவளை உங்களிடம் அழைத்து வரும்படி உத்தர விடுகிறேன்."

"அவள் இருக்கும் இடத்திலேயே அவளைப் போய்ப் பார்க்க முடியாதா? அவளை அழைத்து வருவானேன்?"

"அரசியல் கைதிகள் இருக்கும் இடத்திலா? அது சட்ட விரோதமாயிற்றே!"

"பல முறை என்னை அனுமதித்திருக்கிறார்கள். அரசியல் கைதிகளிடம் ஏதாவது கொடுத்து விடுவேனோ என்ற பயமானால், அதை நான் அவள் மூலமாகவும் அனுப்பலாமல்லவா?"

"முடியாது; அவளைச் சோதனை போடுவோம்"

"என்னையே ஏன் சோதனை போட்டுவிடக் கூடாது?"

"சரி, அது இல்லாமலே பார்த்துக் கொள்வோம்" என்று சொல்லிவிட்டு, சாராயபுட்டியை எடுத்து நிக்லியுடாவின் ட

டம்ளருக்கு நேரே பிடித்தார். "கொஞ்சம் விடட்டுமா? வேண்டாம்? சரி; உங்கள் இஷ்டம். சைபீரியாவில் இருக்கும் பொழுது படித்தவர்களைச் சந்திப்பது எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறது தெரியுமா? எங்கள் வேலை சோகம் நிறைந்தது. நல்ல விஷயங்களை அனுபவித்துப் பழக்கப்பட்டவர்கள் இங்கு வசிப்பது மிகவும் கஷ்டம். காவல் அதிகாரிகள் படிப்பற்ற முரடர்கள் என்று எல்லாரும் நினைத்திருக்கின்றனர்." என்றார் அதிகாரி.

இந்த அதிகாரியின் சிவந்த முகம் அவன் பூசிக்கொண்டிருந்த மட்டமான அத்தர் வாசனை, அவர் மோதிரங்கள், சிரிப்பு எல்லாமாகச் சேர்ந்து நிக்லியுடாவுக்கு அருவருப்பை யூட்டின.

யாரையும் அலக்ஷியமாகப் பேசவோ நடத்தவோ அவன் விரும்பவில்லை. "உங்கள் நிலைமையில் இருப்பவர்கள் கூடக் கஷ்டப்படுகிறவர்களுக்கு உதவி செய்து மன நிம்மதி அடைய முடியும்" என்றான் நிக்லியுடாவ்.

"இவர்களுக்கு என்ன கஷ்டம்! இவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்பது உங்களுக்குத் தெரியாது"

"அவர்கள் தனிப்பிறவிகள் அல்ல. மற்றவர்களைப்போல் தான் அவர்களும். சில நிரபராதிகள் கூட இந்த நிலைமைக்கு வந்து விடுகிறார்கள்."

"வாஸ்தவம் தான். எல்லா விதமானவர்களும் இருக்கிறார்கள். எல்லாம் சாத்யமான போதெல்லாம் இவர்களுடைய கஷ்டத்தைக் குறைக்க முயல்கிறேன். மற்றவர்கள் சட்டத்தைக் கடுமையாக அனுஷ்டிக்கிறார்கள். சுட்டுக் கூடத் தள்ளி விடுவார்கள். ஆனால் நான் அனுதாபம் காட்டுகிறேன்" என்று சொல்லிக் கொண்டே அதிகாரி மற்றொரு டம்ளரில் நிக்லியுடாவுக்காக டீயை ஊற்றினார். உடனே, "நீங்கள் பார்க்க விரும்பும் பெண் யார்?" என்று கேட்டனர்.

"அவள் ஒரு அபாக்கியவதி. ஒரு விபசார விடுதியில் போய்ச்சேர்ந்தாள். அவள் விஷம் வைத்ததாகப் பழி சுமத்தினார்கள். மிகவும் நல்ல பெண்" என்றான் நிக்லியுடாவ்.

"ஆமாம் அப்படித்தான் நடந்து விடுகிறது" என்று சொல்லி எம்மா என்ற ஒரு ஹங்கேரிப் பெண்ணைப் பற்றிப் பேசத் தொடங்கினார் அதிகாரி,

நிக்லியுடாவ் மீண்டும் பழைய சம்பாஷணைக்கே திரும்ப விரும்பினான். "உங்களுடைய ஆதீனத்தால் இருக்கும் பொழுதாவது இவர்களுடைய கஷ்டத்தைக் குறைக்கலாம்.

டான். அதை நிறுத்துங்கள் நாங்கள் செய்யமுடியாது. எங்களைக் கொன்றுவிடுவார்கள்" என்று சொல்லிவிட்டு பயத்துடன் சுற்று முற்றும் பார்த்தான்.

நடந்தது இதுதான். கார்மனோவ் என்பவனுக்கு சுரங்க தண்டனை அளிக்கப்பட்டிருந்தது. அவன் ஜாடையாகவே இருந்த மற்றோர் இளைஞனுக்கு திவாந்தர சிஷை விதித்திருந்தார்கள். கார்மனோவ் என்ற கைதி, அந்த இளைஞனின் பெயரை கார்மனோவ் என்று மாற்றிக்கொள்ளச் செய்து அவனைச் சுரங்கத்திற்கு அனுப்பிவிட்டு, தான் திவாந்திர சிக்ஷை அனுபவிக்க ஏற்பாடு செய்திருந்தான்.

இதைப் பற்றி நிக்லியுடாவுக்குத் தெரியும். முந்தியவாரத்திலேயே ஒரு கைதி இதைப் பற்றி அவனிடம் சொல்லியிருந்தான். தனக்குப் புரிந்துவிட்டதாகவும், தன்னால் இயன்றதைச் செய்வதாகவும் கூறுவதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டினான்.

தன்னோடு பேசிய கைதியை நிக்லியுடாவுக்குத் தெரியும். அவனுடைய செய்கையைக் கண்டு அவன் ஆச்சரியமடைந்தான். கைதிகள் எக்டெரின் பார்க்கில் இருந்தபொழுது இவன் நிக்லியுடாவிடம் வந்து, தன்னுடைய மனைவியையும் தன்னோடு வர அனுமதி வாங்கிக் கொடுக்கும்படி கேட்டான். இவன் ஒரு சாதாரணக் குடியானவன். சுமார் முப்பது வயது இருக்கும். கொலை செய்து கொள்ளை அடிக்க முயன்றதாக இவனுக்குக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருந்தது. இவன் பெயர் மாகார் தேவ்கின். அவன் செய்த குற்றம் மிகவும் விசித்திரமானது. "இந்தக் குற்றத்தை நான் செய்யவில்லை. சாத்தான் தான் செய்தான்" என்றான் மாகார். ஒரு வழிப்போக்கன் அவன் வீட்டுக்கு வந்து ஒரு வண்டியை அமர்த்திக் கொண்டான். இருபத்தாறு மைல்களுக்கப்பால் இருந்த ஒரு கிராமத்திற்கு அவன் போகவேண்டியிருந்தது. அவனைக் கொண்டுபோய் விட்டுவிட்டு வரும்படி மாகாரின் தந்தை சொன்னான். மாகார் வண்டியில் குதிரையைப் பூட்டிவிட்டு வந்திருந்தவனோடு டீ குடிக்க உட்கார்ந்தான். வந்திருந்தவன் டீ குடித்துக் கொண்டிருந்தபொழுது, தான் விவாகம் செய்துகொள்ளப் போவதாகவும், அதற்காக ஐநூறு ரூபிள் வைத்திருப்பதாகவும் சொன்னான். இதைக் கேட்டவுடன் மாகார் வெளியே சென்று ஒரு கோடரியை எடுத்து வண்டியில் வைக்கோலுக்கு அடியில் மறைத்து வைத்தான். "நான் ஏன் கோடரியை எடுத்துக் கொண்டேனென்பது எனக்கே விளங்கவில்லை. 'கோடரியை எடுத்துக்கொள்' என்று சாத்தான் சொன்னான். நான் எடுத்துக்கொண்டேன். நாங்கள் வண்டியில் ஏறிக்கொண்டு புறப்பட்டோம். நாங்கள் கிராமத்திற்கருகே வந்துவிட்டோம். இன்னும் நான்கு மைல்தான் பாக்கி. எனக்கு கோடரியைப் பற்றிய

ஞாபகமே இல்லை. வண்டி மேடு ஏறிக்கொண்டிருந்தது. நான் இறங்கி வண்டிக்குப்பின்னால் நடந்துபோய்க் கொண்டிருந்தேன். 'நீ என்ன செய்யப் போகிறாய்? இன்னும் கொஞ்ச தூரம் போனால் ரோட்டில் ஜனநடமாட்டம் வந்துவிடும். பிறகு ஒன்றும் செய்ய முடியாது. செய்வதானால் இப்பொழுதுதான் சரியான சமயம் என்று சாத்தான் என் காதில் சொல்வது போல் இருந்தது' வைக்கோலைச் சரிப்படுத்துவது போல் குனிந்தேன். கோடரி தானே என் கையில் வந்து நிற்பதுபோல் இருந்தது. 'என்ன செய்யப் போகிறாய்?' என்று வண்டியில் இருந்தவன் கேட்டான். நான் கோடரியை ஓங்கி அவனைத் தாக்கப் போனேன். அதற்குள் அவன் வண்டியிலிருந்து துள்ளிக் குதித்து என் கையைப் பிடித்துக்கொண்டு விட்டான். நான் திமிரவில்லை. என்னைப் பனிக்கட்டி தோய்ந்த தரையில் தள்ளி கைகளை ஒரு துணியால் கட்டினான். என்னை ஒரு வண்டியில் தூக்கிப்போட்டுக் கொண்டு நேராக போலீஸ் ஸ்டேஷனுக்குப் போனான். என்னை கைது செய்து விசாரணைக்குக் கொண்டு வந்தார்கள். நான் நல்லவன் என்பதற்கு கிராம பஞ்சாயத்தார் கூட அத்தாட்சி அளித்தார்கள். வக்கில் வைக்க என்னிடம் பணமில்லை. ஆகையால் எனக்கு நான்கு வருஷக் கடுங்காவல் தண்டனை விதித்தார்கள்' என்று மாகார் தன் கதையைச் சொல்லி முடித்தான். சகோதர கிராமவாசி ஒருவனைக் காப்பாற்ற வேண்டும் என்பதற்காக இவன்தான் ஒருகைதியின் ரகசியத்தை நிக்லியுடாவிடம் சொன்னான். இவன் சொன்னான் என்பது தெரிந்தால் அவர்கள் இவனைக் கொன்று விடுவார்கள்.

## 11

அரசியல் கைதிகள் இரு சிறிய அறைகளில் வைக்கப்பட்டிருந்தனர். ஓர் அறையில் லைமன்லன் கையில் விறகுடன் கணப்புக்கருகே குனிந்துகொண்டிருந்தான். உயர்ந்த புருவத்திற்குப் பின்னால் இருந்த அவனுடைய கண்கள் நிக்லியுடாவை நோக்கின. உடனே அவன் எழுந்திருக்காமலே நிக்லியுடாவிடம் தன் கையை நீட்டி, "நீங்கள் வந்ததைப்பற்றி நான் மிகவும் சந்தோஷிக்கிறேன். உங்களோடு நான் சில விஷயங்கள் பேச விரும்புகிறேன்" என்றான்.

"சரி, அது என்ன விஷயம்?" என்று நிக்லியுடாவ் கேட்டான்.

"பிறகு சொல்கிறேன்" என்று சொல்லிவிட்டு லைமன்லன் கணப்பின் பக்கம் திரும்பினான். நிக்லியுடாவ் அடுத்த அறைக்குள் நுழையப் போகும் சமயத்தில், கடுமையான

குப்பைகளைக் கூட்டி கணப்பின் பக்கம் தள்ளுவதைப் பார்த்தான். அவள் வெள்ளை சட்டை அணிந்துகொண்டிருந்தாள். தலையில் தூம்புபடியாமல் இருப்பதற்காக கைகுட்டையைப் புருவம்வரை தாழ்த்திக் கட்டிக்கொண்டிருந்தாள். அவள் நிக்லியுடாவைப் பார்த்தவுடன் துடப்பத்தைக் கீழே போட்டுவிட்டு கையைச் சட்டையிலேயே துடைத்துக் கொண்டாள்.

“இடத்தைச் சுத்தம் செய்கிருயா?” என்று கேட்டுக்கொண்டே நிக்லியுடாவ் அவள் கையைக் குலுக்கினான்.

“ஆமாம்; என்னுடைய பழைய வேலை” என்று சொல்லிச் சிரித்தாள். “என்ன குப்பைதெரியுமா? நீங்கள் கற்பனை கூடச் செய்ய முடியாது. பெருக்கிப் பெருக்கி மாளவில்லை. அந்தப் போர்வை உலர்ந்து விட்டதா?” என்று ஸைமன்ஸன் பக்கம் திரும்பிக் கேட்டாள்.

“அனேகமாக உலர்ந்து விட்டது” என்று சொல்லிவிட்டு ஸைமன்ஸன் அவளை ஒரு மாதிரியாகப் பார்த்தான். நிக்லியுடாவும் அந்தப் பார்வையைக் கவனித்தான்.

“இதோ வேறு சட்டைகளைக்கொண்டு வருகிறேன்” என்று ஸைமன்ஸனிடம் காடுஷா கூறினாள். பிறகு நிக்லியுடாவ் பக்கம திரும்பி, “நம் ஆட்களெல்லாம் அந்த அறையில் இருக்கிறார்கள்” என்று கூறி முதல் அறையை நிக்லியுடாவுக்குச் சுட்டிக் காட்டிவிட்டு அவள் இரண்டாவது அறைக்குள் பிரவேசித்தாள்.

நிக்லியுடாவ் கதவைத் திறந்துகொண்டு அந்த அறைக்குள் சென்றான். ஒரு சிறிய தகர விளக்கின் மங்கிய ஒளி அந்த அறையில் படர்ந்திருந்தது. தேநீர் தயாரிக்க வென்னீர்கொண்டு வருவதற்காக இருளில் வெளியே சென்றிருந்தனர். ஆனால் அரசியல் கைதிகளில் பெரும்பாலானவர்கள் இந்த அறையில் இருந்தனர். நிக்லியுடாவின் பழைய சிநேகிதையான வேராடுக்கோவாவும் இங்குதான் இருந்தாள். அவள் முன்னைக் காட்டிலும் இளைத்திருந்தாள். அவ்ள் எதிரே ஒரு பத்திரிகை கிடந்தது.

எமிலிராண்ட் ஸோவாவும் அங்கு இருந்தாள். அரசியல் கைதிகளுக்குள் இவள்தான் இனிமையானவளென்று நிக்லியுடாவ் கருதினான். கைதிகளின் வசதிகளைக் கவனிக்கும் வேலை இவளுக்கு. நிக்லியுடாவ் அங்கு போனபொழுது அவள் பாத்திரங்களைக் கழுவிக்கொண்டிருந்தாள். அவனைப் பார்த்தவுடன் தன்னுடைய வசீகரமான புன்முறுவலின் மூலம் அவனை வரவேற்றாள். “நீங்கள் ருஷ்யாவுக்கே திரும்பிப் போய்விட்டீர்களோ என்று நினைத்தோம்” என்றாள்.

இருள்சூழ்ந்த ஒரு மூலையில் மேரி பாவ்லோவ்னா உட்கார்ந்து ஒரு சிறு பெண்ணோடு விளையாடிக் கொண்டிருந்தாள். குழந்தை தன் மெல்லிய குரலில் ஏதோ பேசிக்கொண்டிருந்தது. "நீங்கள் வந்தது நல்லதாகப் போய்விட்டது. எங்களுக்கு ஒரு விருந்தாளி வந்திருக்கிறாள்" என்று கூறி, அந்தச் சிறு பெண்ணை நிக்லியுடாவிடம் காட்டினாள் மேரி பாவ்லோவ்னா. மற்றொரு மூலையில் கிரில்ட்ஸோவ் குளிரால் நடுங்கிக்கொண்டு உட்கார்ந்திருந்தான். நிக்லியுடாவ் அவனருகே போக முயன்றாள். ஆனால் வழியில் மூக்குக் கண்ணாடி அணிந்த ஒருவன் உட்கார்ந்திருந்தான். இவன்தான் பிரசித்தி பெற்ற புரட்சிக்காரன் நோவோட்வொரோவ். நிக்லியுடாவ் அவனை உபசரிக்க விரைந்தான். இத்தனை அரசியல் கைதிகளில் அவன் ஒருவனைத்தான் நிக்லியுடாவுக்குப் பிடிக்காது. அதனால்தான் அவனுடைய செய்கையில் ஒரு பர பரப்புக் காணப்பட்டது. நோவோட்வொரோவின் பளபளக்கும் கண்கள் மூக்குக் கண்ணாடிக்குப் பின்னாலிருந்து நிக்லியுடாவை நோக்கின. அவனுக்குக் கைகொடுத்துக் குலுக்கினான். பிறகு, "பிரயாணம் சௌக்கியமாக இருக்கிறதா?" என்று கிண்டலாகக் கேட்டான்.

நிக்லியுடாவ் அந்தக் கிண்டலைக் கவனிக்காதவன்போல் "ரஸமான பல விஷயங்கள் இருக்கின்றன" என்று சொல்லி விட்டு கிரில்ட்ஸோவ் அருகே சென்றான். நோவோட்வொரோ ரோவின் வார்த்தைகள் அவன் மனத்தை உறுத்தின.

"என்ன, சௌக்கியமா?" என்று கிரில்ட்ஸோவின் குளிர்ந்த கையைப் பற்றி அழுத்தினான்.

"சௌக்யம்தான். குளிர்தான் மிகவும் அதிகமாக இருக் கிறது. குளிர் காய்ந்தால் சௌக்யமாக இருக்கும். அதிருக் கட்டும்; நீங்கள் சௌக்கியமா? ஏன் இத்தனை நாளாக வரவே யில்லை?" என்று கிரில்ட்ஸோவ் கேட்டான்.

"அதிகாரிகள் அனுமதிக்கவில்லை. ரொம்பக் கடுமையாக இருந்தார்கள். இந்த அதிகாரி கொஞ்சம் நல்லவனாக இருக் கிறான்."

"இவனா நல்லவன்? மேரியைக் கேளுங்கள் தெரியும்" என் றான் கிரில்ட்ஸோவ். மேரி பாவ்லோவ்னா, தான் இருந்த இடத்தி லிருந்து கொண்டே அந்தச் சிறு பெண் சம்பந்தமாக அன்று காலை நடந்த சம்பவங்களை விவரித்தாள்.

நாமெல்லாரும் சேர்ந்து கண்டனம் தெரிவிக்க வேண்டு மென்று நினைக்கிறேன்" என்று வோராடுகோவா சொல்லிவிட்டு தன் நிச்சயமற்றப் பார்வையில் ஒவ்வொருவரையும் மாறி மாறிப் பார்த்தாள். மீண்டும் "விளாடிமிர் ஸைமன்ஸன் கண்டித்தான். அது போதாது" என்றாள்.

குப்பைகளைக் கூட்டி கணப்பின் பக்கம் தள்ளுவதைப் பார்த்தான். அவள் வெள்ளை சட்டை அணிந்துகொண்டிருந்தாள். தலையில் தூம்புபடியாமல் இருப்பதற்காக கைகுட்டையைப் புருவம்வரை தாழ்த்திக் கட்டிக்கொண்டிருந்தாள். அவள் நிக்லியுடாவைப் பார்த்தவுடன் துடப்பத்தைக் கீழே போட்டுவிட்டு கையைச் சட்டையிலேயே துடைத்துக் கொண்டாள்.

"இடத்தைச் சுத்தம் செய்கிருயா?" என்று கேட்டுக் கொண்டே நிக்லியுடாவ் அவள் கையைக் குலுக்கினன்.

"ஆமாம்; என்னுடைய பழைய வேலை" என்று சொல்லிச் சிரித்தாள். "என்ன குப்பை தெரியுமா? நீங்கள் கற்பனை கூடச் செய்ய முடியாது. பெருக்கிப் பெருக்கி மாளவில்லை. அந்தப் போர்வை உலர்ந்து விட்டதா?" என்று ஸைமன்ஸன் பக்கம் திரும்பிக் கேட்டாள்.

"அனேகமாக உலர்ந்து விட்டது" என்று சொல்லிவிட்டு ஸைமன்ஸன் அவளை ஒரு மாதிரியாகப் பார்த்தான். நிக்லியுடாவும் அந்தப் பார்வையைக் கவனித்தான்.

"இதோ வேறு சட்டைகளைக்கொண்டு வருகிறேன்" என்று ஸைமன்ஸனிடம் காடுஷா கூறினுள். பிறகு நிக்லியுடாவ் பக்கம் திரும்பி, "நம் ஆட்களெல்லாம் அந்த அறையில் இருக்கிருர்கள்" என்று கூறி முதல் அறையை நிக்லியுடாவுக்குச் சுட்டிக் காட்டிவிட்டு அவள் இரண்டாவது அறைக்குள் பிரவேசித்தாள்.

நிக்லியுடாவ் கதவைத் திறந்துகொண்டு அந்த அறைக்குள் சென்றுன். ஒரு சிறிய தகர விளக்கின் மங்கிய ஒளி அந்த அறையில் படர்ந்திருந்தது. தேநீர் தயாரிக்க வென்னீர்கொண்டு வருவதற்காக இருளில் வெளியே சென்றிருந்தனர். ஆனல் அரசியல் கைதிகளில் பெரும்பாலானவர்கள் இந்த அறையில் இருந்தனர். நிக்லியுடாவின் பழைய சிநேகிதையான வேராடுக்கோவாவும் இங்குதான் இருந்தாள். அவள் முன்னைக் காட்டிலும் இளைத்திருந்தாள். அவள் எதிரே ஒரு பத்திரிகை கிடந்தது.

எமிலிராண்ட் ஸோவாவும் அங்கு இருந்தாள். அரசியல் கைதிகளுக்குள் இவள்தான் இனிமையானவளென்று நிக்லியுடாவ் கருதினன். கைதிகளின் வசதிகளைக் கவனிக்கும் வேலை இவளுக்கு. நிக்லியுடாவ் அங்கு போனபொழுது அவள் பாத்திரங்களைக் கழுவிக்கொண்டிருந்தாள். அவனைப் பார்த்தவுடன் தன்னுடைய வசீகரமான புன்முறுவலின் மூலம் அவனை வரவேற்றுள். "நீங்கள் ரஷ்யாவுக்கே திரும்பிப் போய்விட்டீர்களோ என்று நினைத்தோம்" என்றுள்.

இருள்சூழ்ந்த ஒரு மூலையில் மேரி பாவ்லோவ்னா உட்கார்ந்து ஒரு சிறு பெண்ணோடு விளையாடிக் கொண்டிருந்தாள். குழந்தை தன் மெல்லிய குரலில் ஏதோ பேசிக்கொண்டிருந்தது. "நீங்கள் வந்தது நல்லதாகப் போய்விட்டது. எங்களுக்கு ஒரு விருந்தாளி வந்திருக்கிறாள்" என்று கூறி, அந்தச் சிறு பெண்ணை நிக்லியுடாவிடம் காட்டினாள் மேரி பாவ்லோவ்னா. மற்றொரு மூலையில் கிரில்ட்ஸோவ் குளிரால் நடுங்கிக்கொண்டு உட்கார்ந்திருந்தான். நிக்லியுடாவ் அவனருகே போக முயன்றாள். ஆனால் வழியில் மூக்குக் கண்ணாடி அணிந்த ஒருவன் உட்கார்ந்திருந்தான். இவன்தான் பிரசித்தி பெற்ற புரட்சிக்காரன் நோவோட்வொரோவ். நிக்லியுடாவ் அவனை உபசரிக்க விரைந்தான். இத்தனை அரசியல் கைதிகளில் அவன் ஒருவனைத்தான் நிக்லியுடாவுக்குப் பிடிக்காது. அதனால்தான் அவனுடைய செய்கையில் ஒரு பரபரப்புக் காணப்பட்டது. நோவோட்வொரோவின் பளபளக்கும் கண்கள் மூக்குக் கண்ணாடிக்குப் பின்னாலிருந்து நிக்லியுடாவை நோக்கின. அவனுக்குக் கைகொடுத்துக் குலுக்கினான். பிறகு, "பிரயாணம் சௌக்கியமாக இருக்கிறதா?" என்று கிண்டலாகக் கேட்டான்.

நிக்லியுடாவ் அந்தக் கிண்டலைக் கவனிக்காதவன்போல் "ரஸமான பல விஷயங்கள் இருக்கின்றன" என்று சொல்லி விட்டு கிரில்ட்ஸோவ் அருகே சென்றான். நோவோட்வொரோவின் வார்த்தைகள் அவன் மனத்தை உறுத்தின.

"என்ன, சௌக்கியமா?" என்று கிரில்ட்ஸோவின் குளிர்ந்த கையைப் பற்றி அழுத்தினான்.

"சௌக்யம்தான். குளிர்தான் மிகவும் அதிகமாக இருக்கிறது. குளிர் காய்ந்தால் சௌக்யமாக இருக்கும். அதிருக்கட்டும்; நீங்கள் சௌக்கியமா? ஏன் இத்தனை நாளாக வரவேயில்லை?" என்று கிரில்ட்ஸோவ் கேட்டான்.

"அதிகாரிகள் அனுமதிக்கவில்லை. ரொம்பக் கடுமையாக இருந்தார்கள். இந்த அதிகாரி கொஞ்சம் நல்லவனாக இருக்கிறான்."

"இவனா நல்லவன்? மேரியைக் கேளுங்கள் தெரியும்" என்றான் கிரில்ட்ஸோவ். மேரி பாவ்லோவ்னா, தான் இருந்த இடத்திலிருந்து கொண்டே அந்தச் சிறு பெண் சம்பந்தமாக அன்று காலை நடந்த சம்பவங்களை விவரித்தாள்.

நாமெல்லாரும் சேர்ந்து கண்டனம் தெரிவிக்க வேண்டுமென்று நினைக்கிறேன்" என்று வோராடுகோவா சொல்லிவிட்டு தன் நிச்சயமற்றப் பார்வையில் ஒவ்வொருவரையும் மாறி மாறிப் பார்த்தாள். மீண்டும் "விளாடிமிர் ஸைமன்ஸன் கண்டித்தான். அது போதாது" என்றாள்.

"என்ன கண்டனம் வேண்டுமென்கிருய்?" என்று கிரில்ட்ஸோவ் வெடுக்கென்று கேட்டான். அவளுடைய அடக்கமற்ற சுபாவம் அவனை வெகு காலமாக உறுத்திக் கொண்டுவந்திருக்க வேண்டும்.

பிறகு அவன் நிக்லியுடாவ் பக்கம் திரும்பி, "நீங்கள் காடுஷாவுக்காகக் காத்திருக்கிறீர்களா? அவள் மூச்சு விடாமல் வேலைசெய்து கொண்டிருக்கிருள். இந்த அறையைச் சுத்தம் செய்து முடித்தாள். இப்பொழுது அடுத்த அறையைச் சுத்தம் செய்து கொண்டிருக்கிருள். இந்த ஈக்களைத்தான் ஓட்டவே முடியவில்லை. இவை மனிதனை உயிரோடு தின்றுவிடுகின்றன. மேரி அங்கு என்ன செய்து கொண்டிருக்கிருள்?" என்று கேட்டுக் கொண்டே மேரி பாவ்லோவ்னு இருந்த பக்கம் திரும்பினன்.

"தன் ஸ்வீகாரப் புத்திரியின் தலையை வாரிக்கொண்டிருக்கிருள்" என்று ராண்ட்ஸேவா பதிலளித்தாள்.

"ஆனல் பேனை யெல்லாம் நம்மீது ஏற்றிவிடப் போகிருளே!" என்ருன் கிரில்ட்ஸோவ்.

"இல்லவே இல்லை; நான் ரொம்பவும் ஜாக்கிரதையாக இருக்கிறேன்; இப்பொழுது அவள் சுத்தமாகிவிட்டாள்; இவளைப் பிடித்துக்கொள்; நான் போய் காடுஷாவுக்கு உதவியாக இருக்கிறேன். அவளுடைய போர்வையையும் கொண்டுவந்து கொடுக்கிறேன்" என்று ராண்ட்ஸேவாவிடம் சொன்னுள்.

ராண்ட்ஸேவா, தாயன்புடன் குழந்தையை எடுத்து மார்போடு அணைத்துக் கொண்டாள். பிறகு ஒரு சர்க்கரைக் கட்டியை எடுத்து அதனிடம் கொடுத்தாள்.

மேரி பாவ்லோவ்னு வெளியே சென்றவுடன் இரண்டு பேர் வெந்நீரையும் மற்ற சாமான்களையும் கொண்டு வந்தனர்.

# 12

புதிதாக வந்தவர்களில் ஒருவன் குள்ளமாக ஒல்லியாக இருந்தான். இரண்டு பாத்திரங்களில் கொதிக்கும் வெந்நீர் கொண்டுவந்திருந்தான். ஒரு ரொட்டியைத் துணியில் சுற்றி கைக்கடியில் அடக்கிக் கொண்டிருந்தான்.

"நம்முடைய பிரபு மறுபடியும் தரிசனமளிக்க வந்திருக்கிருர் போலிருக்கிறது" என்று சொல்லிக்கொண்டே ரொட்டியை ராண்ட்ஸேவாவிடம் கொடுத்தான். "நாங்கள் இன்று அற்புதமான சாமான்கள் வாங்கிக்கொண்டு வந்திருக்கிருேம்" என்று சொல்லிக்கொண்டே அவன் தன் தோல் சட்டையைக் கழற்றி, ஒரு கோடியில் உட்கார்ந்திருந்தவர்களின் தலைமீது வீசி எறிந்

தான். "இன்று நமக்கு விருந்துதான்; மார்க்கெல் முட்டையும் பாலும் வாங்கி வந்திருக்கிறான்; ராண்ட்ஸேவா, கம் அறையில் கலையழகை நிரப்பியிருக்கிறாள். இப்பொழுது அவள் தேநீர் தயாரித்துவிடுவாள்" என்று அவளைப் பார்த்து சிரித்துக் கொண்டே கூறினான். அவன் அங்கு இருப்பதே கலகலப்பாக இருந்தது. மற்றொருவன் இதற்கு நேர்விரோதம். அவன் முகத்தில் சதா சோகக்களை தாண்டவமாடியது. குள்ளமாக இருந்தான். அவன் உடல் எலும்புகள் தூக்கிக் கொண்டிருந்தன. அவன் கொண்டுவந்திருந்த இரண்டு ஜாடிப் பாலையும், இரண்டு பெட்டி முட்டையையும் ராண்ட்ஸேவாவின் முன்னால் வைத்தான். அவன் நிக்லியுடாவைப் பார்த்து வணங்கிவிட்டு, அரை மனத்துடன் கைகொடுத்துக் குலுக்கினான்.

இவர்கள் இருவரும் மக்கள் கட்சியைச் சேர்ந்தவர்கள். முதலில் வந்த நபடோவ் ஒரு குடியானவன். இரண்டாவது வந்தவன் மாக்ரெல் கெஸ்ட்ராட் யெவ். இவன் ஒரு மில் தொழிலாளி; இவன் பெரியவனாகும்வரை புரட்சிக் கட்சியில் சேரவில்லை. நபடோவ் பதினெட்டாவது வயதிலேயே சேர்ந்துவிட்டான். அவன் கிராமப் பள்ளிக்கூடத்தை விட்டவுடன் ஹைஸ்கூலில் இடம் கிடைத்தது. அவன் நல்ல புத்திசாலியாகையால் படித்துக் கொண்டே, வேறு ஒருவனுக்குப் பாடமும் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தான். பரிக்ஷையில் தேறியபொழுது அவனுக்குத் தங்கப் பதக்கம் கிடைத்தது. அறியாமையில் ஆழ்ந்து கிடந்த சகோதர மக்களுக்கு கல்வி போதிக்க வேண்டுமென்று அவன் விரும்பியதால் சர்வகலாசாலையில் சேர்ந்து படிக்கவில்லை. ஒரு கிராமத்தில் சர்க்கஸ் குமாஸ்தாவாக இருந்து கொண்டே ஜனங்களின் கூட்டுறவுச் சங்கம் ஒன்றை ஆரம்பித்தான். அதற்காக அதிகாரிகள் அவனைக் கைது செய்து எட்டு மாதம் சிறையில் வைத்திருந்தனர். பிறகு அவன் விடுதலை பெற்றபோதிலும் போலீசார் கண்காணித்து வந்தனர். அவன் பூரணமாக விடுதலையடைந்தபின் மற்றொரு கிராமத்தில் உபாத்தியாயர் வேலையில் அமர்ந்தான். முதல் கிராமத்தில் செய்ததையே அங்கும் செய்தான். மறுபடியும் அதிகாரிகள் அவனைக் கைது செய்து பதினான்கு மாதம் சிறையில் வைத்திருந்தனர். அங்கு அவனுடைய அரசியல் கொள்கைகள் பலப்பட்டனவேயன்றித் தளரவில்லை.

பிறகு அவனைப் பிரஷ்டம் செய்து துரேமுக்கு அனுப்பினர். அங்கிருந்து அவன் தப்பி ஓடிவிட்டான். பின்னர் ஏழு மாதம் சிறையில் இருந்தான். பிறகு அவனை பிரஷ்டம் செய்து ஆர்க்கேஞ்சனுக்கு அனுப்பினர். மறுபடியும் அவன் தப்பி ஓட முயன்றான். அதிகாரிகள் அவனை மறுபடியும் கைது செய்து யாகுட்ஸ்குக்கு பிரஷ்டம் செய்தனர். ஆகையால் அவனுக்கு வயது வந்தபின் வாழ்க்கையில் பாதி நாள் சிறையிலேயே

இருந்துவிட்டான். இந்த அனுபவங்கள் அவனுடைய உணர்ச்சியை ஒடுக்கவில்லை. அதைக் கிளறிவிட்டன என்றுதான் சொல்லவேண்டும். எப்பொழுதும் உற்சாகமாகவும் சுறுசுறுப்பாகவுமே இருந்தான். தான் செய்த காரியங்களுக்காக அவன் வருத்தப்பட்டதேயில்லை. அதிகத்திற்கு ஆசைப்பட்டதில்லை. நிகழ்காலப் பிரச்னைகளுக்கே தன் புத்தி சக்தி எல்லாவற்றையும் உபயோகித்தான். அவன் சுதந்திரமாக இருந்தபொழுது தன் லக்ஷியத்திற்காக உழைத்தான். தொழிலாளர்களை ஒன்று திரட்டி அவர்களுக்கு அறிவைப் புகட்டுவதையே அவன் லக்ஷியமாகக் கொண்டிருந்தான். சிறையில் இருந்தபொழுதும் வெளி உலகத்துடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள உழைப்பான். சாத்தியமானவரை தன் வாழ்க்கையையும், தன் கோஷ்டியாரின் வாழ்க்கையையும் சௌகர்யமாக மாற்றி அமைத்துவிடுவான். எல்லாவற்றிற்கும் மேலாக அவன் பொதுநலப்பிரியன். ஒரு பஞ்சாயத்தின் மெம்பர். பொது நன்மைக்காக ஊண் உறக்கமின்றி இரவு பகலாக உழைப்பான். விவசாயத் துறையிலும் நிபுணன். சுய கட்டுப்பாடு உள்ளவன். அவன் சிறையில் இல்லாத சமயத்தில் தன் கிழத் தாய்க்கு உதவியாக இருப்பான். தன் பால்ய ஸ்னேகிதர்களுடன் இன்னமும் தொடர்பு வைத்துக் கொண்டிருந்தான். சர்க்கார் அவர்களை எப்படி ஏமாற்றுகிறதுது என்பதையும், மக்கள் வாழ்க்கையின் அடிப்படை முறையைப் புரட்சி மாற்றக் கூடாது என்பதும் அவனுடைய கருத்து. பழமை என்ற மகத்தான கட்டிடத்தின் உள் சுவர்களை மாத்திரம் மாற்றி அமைக்க வேண்டுமென்று விரும்பினான்.

மத விஷயத்திலும் ஒரு சாதாரணக் குடியானவரின் அபிப்பிராயமேதான் அவனுக்கு. உலகம் எப்படித் தோன்றியது என்பதைப் பற்றி அவன் கவலைப் படவில்லை. உலகத்தில் சிறந்த வாழ்க்கை நடத்துவது எப்படி என்ற ஒரே பிரச்னைதான் அவன்முன் இருந்தது. மறுமை வாழ்க்கையில் அவனுக்கு நம்பிக்கை இல்லை. தாவரங்களையும் மிருகங்களையும் போல் உலகத்தில் ஒன்றும் மரிப்பதில்லை என்பது அவனுடைய நம்பிக்கை. எரு தானியமாக மாறுகிறது; தானியம் உணவாக மாறுகிறது. வால்புழு தவளையாக மாறுகிறது, கம்பளிப்பூச்சி பட்டாம்பூச்சியாக மாறுகிறது; அதேபோல் மனிதனும் மரிக்காமல் மாறுதலுக்குள்ளாகிறான் என்பது அவன் கருத்து. இதில் அவனுக்கு ஆழ்ந்த நம்பிக்கை இருந்ததால் மரணத்தைக் கண்டு அவன் அஞ்சவில்லை. வேலை செய்வதில் அவனுக்கு அதிகப் பிரியம்.

மாக்ரெல் கோண்ட்ராட்யெவ்வின் விதமே வேறு. தன் பதினைந்தாவது வயதிலேயே அவன் ஒரு தொழிற்சாலையில் வேலைக்கு அமர்ந்தான். குடி சுருட்டு எல்லா வழக்கங்களையும் கைக்கொண்டான். அவனுக்கு முப்பது வயதானபொழுது ஒரு புரட்சிக்காரி அவனுடைய தொழிற்சாலையில் வேலைக்கு வந்தாள்.

அவனுடைய திறமையைக் கண்டு அவனுக்கு ஏராளமான புத்தகங்களையும், துண்டு பிரசுரங்களையும் கொடுத்தாள். அவனுடைய நிலைமையை விவரித்துச் சொல்வாள். நசுக்குவதிலிருந்து தன்னையும் மற்றவர்களையும் விடுவித்துக் கொள்ள முடியுமென்பது வரவர நன்றாக விளங்கியது. தான் சுதந்திரம் அடைவதோடு இந்த கொடுமைக்கெல்லாம் காரணமாக இருப்பவர்களை தண்டிக்க வேண்டும் என்ற ஆர்வமும் ஏற்பட்டது. கல்வியினால் தான் இது சாத்தியம் என்று அவனுக்கு சொல்லப்பட்டது. ஆகையால் கல்வியைத் தேடுவதில் அவன் ஆர்வத்துடன் முனைந்தான். சோஷலிஸ்ட் லக்ஷியம் கிட்டக் கல்வி எப்படி உதவி செய்யும் என்பது அவனுக்கு நன்றாக விளங்கவில்லை. ஆனால் கொடுமைகளை எடுத்துக்காட்டிய கல்வி அந்தக் கொடுமைகளை ஒழிக்கவும் செய்யுமென்று நம்பினான். அதோடுகூட கல்வி மற்றவர்களைக் காட்டிலும் தன்னை உயர்ந்தவனாகச் செய்யும் என்று கருதினான். ஆகையால் குடிப்பது சுருட்டு பிடிப்பது இவற்றையெல்லாம் விட்டு விட்டு, ஓய்வு நேரத்தையெல்லாம் கல்வி கற்பதிலேயே செலவிட்டான்.

புரட்சிக்காரி அவனுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தாள். கல்வியில் அவனுக்கு இருந்த ஆர்வத்தைக் கண்டு ஆச்சர்யம் அடைந்தாள். இரண்டு வருஷத்திற்குள் கணிதத்திலும், சரித்திரத்திலும் நிபுணனாகிவிட்டான். கவிதை இலக்கியம் சோஷலிஸ்டு நூல்கள் ஆகியவற்றிலும் பரிச்சயம் ஏற்பட்டது.

ஆக்ஷேபகரமான புத்தகங்கள் வைத்திருந்ததாக அந்தப் புரட்சிக்காரியும் அவனும் கைது செய்யப்பட்டனர். அவர்கள் பிரஷ்டம் செய்து வொலோக்டாவுக்கு அனுப்பப்பட்டனர். அங்கு தான் நோவோட்வொரோவொடு அவனுக்கு பரிச்சயம் ஏற்பட்டது. புரட்சி நூல்களை இன்னும் அதிகமாகப் படித்தான். அவனுடைய கருத்துக்கள் முன்னைக்காட்டிலும் ஊர்ஜிதமாயின. அவனுடைய தண்டனைக்காலம் முடிந்தபின் ஒரு தொழிற்சாலை வேலை நிறுத்தத்திற்கு அவன் தலைவனானான். இதனால் தொழிற்சாலை அழிந்து அதன் டைரக்டரும் கொலையுண்டான். மாக்ரெல் மறுபடியும் கைதியாகி சைபீரியாவுக்கு அனுப்பட்டான்.

அப்போதைய பொருளாதார முறையில் இருந்ததுபோல் மத விஷயத்திலும் அவனுக்கு எதிர்மறைக் கொள்கைதான். தான் வளர்த்த மதத்தில் இருந்த அபத்தத்தை உணர்ந்தான். மிகவும் கஷ்டப்பட்டு அதிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டான். தானும் தன் மூதாதையரும் ஏமாற்றப்பட்டதற்காக வஞ்சம் தீர்த்துக் கொள்பவன்போல் மத குருக்களையும் மதக் கோட்பாடுகளையும் இழிவாகப் பேசினான்.

மிகவும் சுறுசுறுப்பாக வேலை செய்வான். ஆனால் சிறையிலும், வழியில் தங்குமிடங்களிலும் கிடைத்த அவகாசத்தை

அவன் பெரிதும் விரும்பினான். அந்த நேரத்தை அவன் படிப்பதற்கு உபயோகித்தான். அப்பொழுது அவன் காரல் மார்க்ஸ் புத்தகத்தின் முதல் பாகத்தைப் படித்துக் கொண்டிருந்தான். அப்புத்தகத்தை அவன் பொக்கிஷம்போல் பாவித்தான். நோவோட்வொரோவைத் தவிர மற்றெல்லாரிடமும் அவன் அலக்ஷியமாகவே நடந்து கொண்டான்.

பெண்களைக் கண்டாலே அவனுக்கு மகா வெறுப்பு. உபயோகமான எந்த வேலைக்கும் அவர்கள் இடையூறு என்று அவனுக்குத் தோன்றியது. ஆனால் காடுஷாவிடம் மாத்திரம் அவனுக்கு அனுதாபம். தாழ்ந்த நிலைமையில் உள்ளவர்களை உயர்ந்த நிலையிலிருப்பவர்கள் எப்படி நடத்துகிறார்கள் என்பதற்கு அவளை ஓர் உதாரணமாகக் கருதினான். அதனால்தான் நிக்லியுடாவ் மீதும் அவனுக்கு வெறுப்பு. அவனுடன் அதிகம் பேசுவதே இல்லை.

## 13

தேநீர் தயாரித்தாகி விட்டது. ரொட்டி, ரஸ்க், வேக வைத்த முட்டை, எல்லாவற்றையும் பெஞ்ச்மீது வைத்தார்கள். அந்த பெஞ்ச்தான் அவர்களுடைய சாப்பாட்டு மேஜை. எல்லாரும் அதனருகே நெருங்கி உட்கார்ந்தனர். ராண்ட்ஸேவா ஒரு பெட்டியின்மீது உட்கார்ந்து கோப்பைகளில் தேநீரை ஊற்றினாள். கிரில்ட்ஸோவைத் தவிர மற்றெல்லாரும் அவளைச் சூழ்ந்து கொண்டனர். கிரில்ட்ஸோவ் மாத்திரம் நிக்லியுடாவுடன் பேசிக் கொண்டிருந்தான்.

அவர்கள் கஷ்டப்பட்டு நடந்து வந்து தாங்கள் தங்கியிருந்த இடத்தையும் கஷ்டப்பட்டு சுத்தம் செய்த பின் ஆகாரம் சாப்பிட்டு சூடான டீயையும் குடித்தார்கள். இதனால் அவர்களிடையே உற்சாகம் மேலிட்டது. தாங்கள் கைதிகள் என்பதையே தற்காலிகமாக மறந்திருந்தார்கள்.

அவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொருவரைக் காதலித்தனர். கிராபெட்ஸ் என்ற பெண்ணை நோவோட்வொரோவ் காதலித்தான். முதலில் புரட்சி இயக்கத்தில் இவளுக்குக் கவலை இல்லாமலிருந்தது. ஆனால் கால வெள்ளத்திற்குப் பணிந்தாள். விசாரணைக் காலத்திலும், சிறையிலும் புருஷர்கள் தன்னைக் கண்டு மோகிக்கின்றனர் என்பதில் அவளுக்குப் பரம திருப்தி. இந்தப் பிரயாண காலத்தில் நோவாட்வொரோவ் தன்னிடம் மயங்கியிருக்கிறான் என்பதில் சந்தோஷமடைந்தாள். கிரில்ட்ஸோவுக்கு மேரி பாவ்லோவ்னாமீது காதல். ஆனால் இதை அவன் எப்படி நினைக்கிறான் என்பது அவளுக்குத் தெரியும்.

ஆகையால் தன் காதலை நட்பு என்ற போர்வையில் மறைத்தான். நபடோவுக்கும், ராண்ட்ஸேவாவுக்குமிடையில் ஆழ்ந்த அன்பு. மேரி பாவ்லோவ்னா பரிசுத்த கன்னிகையாக இருந்ததுபோல் ராண்ட்ஸேவாவும் பதிவிரதை.

அவள், பதினாறு வயதில் மாணவியாக இருந்தபொழுது ராண்ட்ஸேவைக் காதலித்தாள். அவன் பீட்டர்ஸ்பர்க் கல்லூரியில் ஒரு மாணவன். அவன் படிப்பை முடிப்பதற்குள்ளேயே அவனை விவாகம் செய்து கொண்டாள். அப்பொழுது அவளுக்கு வயது பத்தொம்பது. அவனுடைய நான்காவது வருஷப் படிப்பில் ஏதோ மாணவர் கிளர்ச்சியில் சம்பந்தப்பட்டான். பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து அவனை வெளியேற்றி விட்டார்கள். பிறகு புரட்சிக்காரனாகி விட்டான். மனிதருள் அவனைத் தலை சிறந்தவனாக மதித்தாள் ராண்ட்ஸேவா. அதனால்தான் அவனைக் காதலித்து மணந்தாள். வாழ்க்கையை அவன் எந்த நோக்குடன் பார்த்தானோ அதே நோக்குடன்தான் அவளும் பார்த்தாள். முதலில் கல்வியே வாழ்க்கையின் லக்ஷ்யமென்று அவன் நினைத்தான். அப்படியே அவளும் கருதினாள். பிறகு அவன் புரட்சிக்காரனானான். அவளும் புரட்சிக்காரியாகி விட்டாள். தன் கணவனின் கருத்துக்கள்தான் இறுதி உண்மை என அவள் மதித்தாள். கணவனின் மனோபாவத்தோடு அவள் ஐக்கியமாகி விட்டாள்.

அவளுடைய கணவனையும் குழந்தையும் விட்டுப் பிரிந்தது அவளுக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது. (குழந்தை அவளுடைய தாயுடன் இருந்தது.) ஆனால் தன் கணவனுக்காக எல்லாவற்றையும் சகித்துக் கொண்டாள். அவளுடைய மனம் எப்பொழுதும் தன் கணவனுடனேயே இருந்தது. வேறு ஒருவரையும் அவளால் காதலிக்க முடியவில்லை. ஆனால் நபடோவின் புனிதமான அன்பு அவள் மனதைத் தொட்டது. இவன் அவளுடைய கணவனின் நண்பன்; அவளைத் தன் சகோதரிபோல் நடத்தினான். ஆனால் அவன் நடந்து கொண்ட விதத்தில் இன்னும் ஏதோ இருப்பது போல் தோன்றியது. இது அவர்கள் இருவருக்குமிடையே பீதியை உண்டாக்கியது.

இந்த கோஷ்டியில் மேரி பாவ்லோவ்னாவும் கொண்ட்ராட்யெவ்வும் தான் காதல் விவகாரங்களில் சிக்கிக் கொள்ளாமலிருந்தனர்.

# 14

தேநீர் குடித்த பின் காடுஷாவைச் சந்திக்கலாமென்று நினைத்து நிக்லியுடாவ் கிரில்ட்ஸோவுடன் பேசிக்கொண்டு உட்கார்ந்திருந்தான். எவ்வளவோ விஷயங்களுக்கிடையில் மாகாரின் குற்றத்தைப் பற்றியும் அவனுடைய கேளிக்கையைப் பற்றியும் கிரில்ட்ஸோவிடம் சொன்னான். கிரில்ட்ஸோவ் தன் பளபளக்கும் கண்களால் நிக்லியுடாவையே கவனமாகப் பார்த்து அவன் சொன்னவற்றைக் கேட்டுக் கொண்டிருந்தான்.

அவன் திடீரென்று குறுக்கிட்டு, "ஆமாம், அவர்கள் மாத்திரம் யார்? அவர்களுக்காகத்தானே நாம் பாடுபடுகிறோம்? இருந்தாலும் அவர்களை நாம் தெரிந்து கொள்வதில்லை; தெரிந்து கொள்ள இஷ்டப்படுவதும் இல்லை. அவர்கள் இன்னும் மோசம் நம்மை வெறுக்கிறார்கள்; விரோதிகளென்றே கருதுகிறார்கள். இது பயங்கரமில்லையா?" என்றான்.

இவர்களுடைய சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்த நோவோட்வொரோவ் குறுக்கிட்டு, "இதில் ஒரு பயங்கரமும் இல்லை; பாமர ஜனங்கள் அதிகாரத்தைத்தான் பூஜிக்கிறார்கள். இப்பொழுது சர்க்காரிடம் அதிகாரம் இருக்கிறது. அதைப் பூஜிக்கிறார்கள்; நம்மை வெறுக்கிறார்கள். நாளையே நம்மிடம் அதிகாரம் வந்துவிட்டால் நம்மைப் பூஜிப்பார்கள்" என்றான்.

இந்த சமயத்தில் வெளியே கைதிகளின் கோஷமும் விலங்குகள் குலுங்கும் சப்தமும் கேட்டன. யாரையோ அடிக்கும் சப்தம் கேட்டது. "கொலை, கொலை—உதவி, உதவி" என்று வேறு யாரோ கத்தினார்கள்.

"பாருங்கள், இந்த மிருகங்களோடு என்ன செய்வது?" என்றான் நோவோட்வொரோவ்.

"அவர்களை மிருகம் என்கிறீர்கள். ஆனால் நிக்லியுடாவ் இப்பொழுதுதான் ஒரு சம்பவத்தைப் பற்றிச் சொன்னார்" என்று கிரில்ட்ஸோவ் வெடுக்கென்றும் பதில் சொல்லிவிட்டு, மாகார் தன் நண்பனைக் காப்பாற்றுவதற்காக எங்ஙனம் தன் உயிரையே பணயம் வைக்கத் துணிந்திருக்கிறான் என்பதை விவரித்தான். "இது மிருகத்தின் காரியமன்று; வீரம்" என்று அவன் கூறி முடித்தான்.

"மூட நம்பிக்கை. இவர்களுடைய உணர்ச்சிகளையும், நோக்கங்களையும் புரிந்து கொள்வது கஷ்டம், நீங்கள் அதைப் பெருந்

தன்மையாக எடுத்துக் கொள்கிறீர்கள். மற்றொரு கையின் பொருளை என்று ஏன் நினைக்கக் கூடாது?" என்று நோவோட்வொரோவ் கேட்டான்.

"நீங்கள் ஏன் எதையும் நல்ல அர்த்தத்தில் எடுத்துக் கொள்வதேயில்லை?" என்று மேரி பாவ்லோவ்னா கேட்டாள்.

"இல்லாத ஒன்றை எப்படிக் கற்பனை செய்து கொள்வது?"

"ஒருவன் பயங்கரமான மரணத்திற்கும் துணிகிறான் என்றால் அதற்கு நல்ல அர்த்தம் இருக்கத்தான் இருக்கிறது."

"நாம் ஏதாவது செய்ய வேண்டுமென்றால் கற்பனைகளுக்கு இடம் கொடுக்காமல் உள்ளத்தை உள்ளபடி நோக்க வேண்டும். இதுதான் நாம் முதலில் செய்யவேண்டிய காரியமென்று நான் நினைக்கிறேன்" என்று ஆரம்பித்தான் நோவோட்வொரோவ். விளக்கருகே புத்தகம் படித்துக் கொண்டிருந்த கொண்ட்ராட்யெவ் இந்த சமயத்தில் புத்தகத்தை மூடி வைத்து விட்டுத் தன் குருவின் பேச்சைக் கவனிக்கத் தொடங்கினான். "பாமரர்களுக்காக நம்மால் முடிந்ததை யெல்லாம் செய்யவேண்டும். திரும்பி அவர்களிடம் ஒன்றையும் எதிர்பார்க்கக் கூடாது. நம் நடவடிக்கைகளுக்கு இலக்காகத்தான் அவர்கள் இருக்க முடியும். நம்முடைய சகஊழியர்களாக இருக்க முடியாது. அவர்களிடம் தற்சமயம் உள்ள மந்த புத்தி நீங்குமவரை இப்படித்தான் இருக்க வேண்டும். எந்த அபிவிருத்திக்காக அவர்களை நாம் தயார் படுத்திக் கொண்டிருக்கிறோமோ அந்த அபிவிருத்தி ஏற்படும்வரை அவர்களிடம் உதவியை எதிர்பார்ப்பது வீண் கனவுதான்" என்று பிரசங்கம் செய்யும் தோரணையில் நோவோட்வொரோவ் கூறி முடித்தான்.

"என்ன அபிவிருத்தி? எதேச்சாதிகாரத்தை எதிர்ப்பதாக நாம் சொல்லிக் கொள்ளுகிறோம். ஆனால் இது மிகக் கேவலமான எதேச்சாதிகார மில்லையா?" என்று கிரில்ட்ஸோவ் கேட்டான்.

"எதேச்சாதிகாரமே யில்லை; ஜனங்கள் செல்ல வேண்டிய பாதை எனக்குத் தெரியும்: அந்தப் பாதையை அவர்களுக்குக் காட்ட என்னால் முடியும் என்றுதான் சொல்கிறேன்" என்று நோவோட்வொரோவ் சாவதானமாகப் பதிலளித்தான்.

"ஆனால் உங்களுடைய பாதைதான் சரியானதென்று உங்களுக்கு எப்படித் தெரியும்? பிரெஞ்சுப் புரட்சியில் இருந்ததும் இதே போன்ற எதேச்சாதிகாரம் தானல்லவா?

"அவர்கள் தவறு செய்ததால் நானும் தவறு செய்வேன் என்று அர்த்தமில்லை. ஏட்டுச் சுரைக்காயில் வாதியின் பிதற்றலுக்கும், சிறந்த பொருளாதாரத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட உண்மைகளுக்கும் வித்தியாசம் உண்டு."

# 16

அடுத்த அறையில் அதிகாரிகளின் குரல் கேட்டது. எல்லாக் கைதிகளும் மௌனமாக இருந்தனர். ஒரு சார்ஜெண்டும் இரு சோல்ஜர்களும் உள்ளே பிரவேசித்தனர். அதிகாரிகள் கைதிகளைப் பார்வையிடும் நேரம் வந்து விட்டது. கைதிகளை சார்ஜெண்ட் எண்ணினார். அவர் நிக்லியுடாவைப் பார்த்தவுடன், அவனை நேசபாவத்துடன் நோக்கி, "பிரபுவே, கைதிகளைப் பார்வை யிட்டானபின் நீங்கள் இங்கு இருக்கக் கூடாது" என்றான்.

இதன் அர்த்தம் என்ன என்பது நிக்லியுடாவுக்குத் தெரியும். உடனே அவனருகே போய் மூன்று ரூபிள் நோட் ஒன்றை அவனிடம் கொடுத்தான்.

"ஐயோ, உங்களோடு என்ன செய்வது? இன்னும் கொஞ்ச நேரம் வேண்டுமானால் இருங்கள்" என்றான் சார்ஜெண்ட். அவன் வெளியே செல்லவிருந்த சமயத்தில் மற்றோர் சார்ஜெண்ட் ஒரு கைதியுடன் உள்ளே பிரவேசித்தான்.

"அந்தப் பெண்ணுக்காகத்தான் வந்திருக்கிறேன்" என்றான் கைதி.

"அப்பாவா வந்திருக்கிறார்?" என்றது ஒரு குழந்தையின் குரல்.

"ஆமாம் அம்மா, நான்தான்" என்று கனிவுடன் கூறினன் கைதி புஜோல்கின்.

மேரிபாவ்லோவ்னு அவனை அனுதாபத்துடன் பார்த்து, "அவள் இங்கு சௌக்கியமாகத்தான் இருக்கிறாள்: எங்களுடனேயே இருக்கட்டும்" என்றாள்.

"இவர்கள் எனக்கு நல்ல நல்ல சட்டை யெல்லாம் தைத்துக் கொடுக்கிறார்கள் அப்பா" என்றது குழந்தை. சட்டை தைத்துக் கொண்டிருந்த ராண்ட்ஸேவாவை அது சுட்டிக் காட்டியது.

"இன்று இரவு நீ எங்களுடனேயே தூங்குகிறாயா?" என்று குழந்தையை ராண்ட்ஸேவா கேட்டாள்.

"ஓ! அப்பாவும் இங்கேயே தூங்கலாமா?" என்று குழந்தை கேட்டது. ராண்ட்ஸேவா சிரித்தாள்.

"அப்பா தூங்கக் கூடாது" என்று சொல்லிவிட்டு, அவள் கைதியின் பக்கம் திரும்பி, "அப்படியானால் இவள் இங்கேயே இருக்கட்டும்" என்றாள்.

"சரி, நீ விட்டு விட்டுப் போகலாம்" என்று முதல் சார்ஜெண்ட் கூறினான். பிறகு இரு சார்ஜெண்ட்களுமாக வெளியே போய்விட்டனர்.

அவர்கள் போனவுடன் நிக்லியுடாவ் புஜோவ்கின் அருகே சென்று, அவன் தோளைத் தட்டிக் கொடுத்து, "கார்மனேவ் மாற விரும்புவது உண்மையா!" என்று கேட்டான். புஜோவ்கின் முகத்தில் திடீரென்று சோகக்களை படர்ந்தது.

"நாங்கள்......ஒன்றும் கேள்விப்படவில்லை" என்று அவன் நிதானமாகச் சொல்லிவிட்டுக் குழந்தையின் பக்கம் திரும்பி, "அக்ஸுட்கா, நீ இங்கேயே சௌக்கியமாக இரு" என்று சொல்லிவிட்டு அவசரமாகப் புறப்பட்டான்.

"அது உண்மைதான் இவனுக்கும் அது தெரியும்: நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று நபடோவ் கேட்டான்.

"அதிகாரிகளிடம் செல்லப் போகிறேன். இரு கைதிகளையும் நான் பார்த்திருக்கிறேன்" என்றான் நிக்லியுடாவ்.

அறையில் எல்லாரும் மௌனமாக இருந்தனர். பழைய விவாதம் மீண்டும் கிளம்பு மென்று அவர்கள் அஞ்சினர். இது வரை பேசாமல் தலையின் கீழ்க் கையை வைத்துப் படுத்திருந்த ஸைமன்ஸன் எழுந்து ஒரு தீர்மானத்துடன் நிக்லியுடாவ் அருகே சென்றான்.

"இனி நான் சொல்வதைக் கொஞ்சம் கேட்கமுடியுமா?" என்று அவன் கேட்டான்.

"நிக்லியுடாவ், "நிச்சயமாக முடியும்" என்று சொல்லிக் கொண்டே எழுந்து அவனுடன் வாசற்படி யருகே சென்றான். காடுஷா ஆத்திரத்துடன் நிமிர்ந்து பார்த்தாள். நிக்லியுடாவின பார்வையை அவள் பார்வை சந்தித்தபொழுது அவள் முகம் சிவப்பேறியது, பிரமிப்படைந்தவள் போல் தலையை ஆட்டினாள்.

"நான் உங்களிடம் எதைப் பற்றிச் சொல்ல வந்தே னென்றால்......" என்று ஸைமன்ஸன் பேச்சை ஆரம்பித்தான். வெளியே கிரிமினல் கைதிகளின் கூச்சல் உரக்கக் கேட்டுக்கொண் டிருந்தது. "உங்களுக்கும் காடுஷாவுக்கு மிடையில் உள்ள உறவு எனக்குத் தெரியும். ஆகையால் இது என் கடமை......" என்று அவன் சொன்னபோது வெளியே இருவர் உரக்கக் கத்தும் சப்தம் கேட்டது. அதனால் ஸைமன்ஸன் தன் பேச்சை நிறுத்த வேண்டியதாயிற்று.

இந்த சமயத்தில் மேரி பாவ்லோவ்னு அங்கு வந்து, "இங்கு மனுஷ்யன் பேச முடியுமா? பக்கத்து அறைக்குப் போங்கள். அங்கு வேராடுக்கோவா தான் இருக்கிருள். அவளுக்கும் தலைவலியாகையால் தூங்கிக் கொண்டிருக்கிருள். நானும் போய்விடுகிறேன். அங்கே போய்ப் பேசுங்கள்" என்ருள்.

"வேண்டாம். இங்கேயே இருப்போம். என்னிடம் ரகசியம் ஒன்றும் இல்லை. உன்னிடம் சொல்லக்கூடாத ரகசியம் நிச்சயமாக ஒன்றும் இல்லை" என்ருன் ஸைமன்ஸன்.

அதற்கு மேல் மேரி பாவ்லோவ்னு ஒன்றும் சொல்லாமல் தன் படுக்கையில் உட்கார்ந்து, அவர்கள் பேசுவதைக் கவனிக்கத் தொடங்கிருள்.

"நான் சொல்ல வந்தது இதுதான்" என்று ஸைமன்ஸன் மறுபடியும் ஆரம்பித்தான். "காடுஷாவுக்கும் உங்களுக்குமிடையில் உள்ள உறவை நான் அறிவேன். ஆகையால் அவளோடு நான் கொண்டுள்ள உறவைப் பற்றி உங்களிடம் சொல்வது என் கடமை என்று நினைக்கிறேன்."

ஸைமன்ஸன் மனம்விட்டுப் பேசுவதையும் அவனுடைய எளிமையையும் கண்டு நிக்லியுடாவ் ஆச்சரியமடைந்தான்.

"அது என்ன?" என்று நிக்லியுடாவ் கேட்டான்.

"காடுஷா"வை நான் விவாகம் செய்துகொள்ள விரும்புகிறேன்."

மேரி பாவ்லோவ்னு ஆச்சரியத்துடன், "இது என்ன விசித்திரம்!" என்ருள்.

"ஆகையால், என் மனைவியாக இருக்கும்படி அவளைக் கேட்கத் தீர்மானித்துவிட்டேன்" என்று ஸைமன்ஸன் தொடர்ந்தான்.

"அதற்கு நான் என்ன செய்யவேண்டும்? அது அவளைப் பொறுத்த விஷயம்" என்ருன் நிக்லியுடாவ்.

"உண்மைதான்; அதனுல் நீங்கள் இல்லாமல் அவள் ஒரு முடிவுக்கும் வரமாட்டாள்."

"ஏன்?"

"உங்களுக்கும் அவளுக்குமிடையில் உள்ள உறவு தீராத வரை அவளால் ஒரு முடிவும் செய்ய முடியாது."

"என்னைப் பொறுத்தவரை ஓர் இறுதியான தீர்மானத்திற்கு வந்துவிட்டேன். என் கடமை என்று நான் நினைப்பதைச் செய்யவும், அவளுடைய கஷ்டத்தைக் குறைக்கவும்

விரும்புகிறேன். ஆனால் எந்த விஷயத்திலும் நான் அவனை நிர்ப்பந்திக்க இஷ்டப்படவில்லை."

"ஆனால் உங்களுடைய தியாகத்தை ஏற்க அவள் இஷ்டப் படவில்லை."

"இது தியாகமில்லையே!"

"இதுதான் அவளுடைய இறுதியான அபிப்பிராயம்."

"அப்படியானால் என்னிடம் சொல்ல வேண்டிய அவசியமே இல்லையே!"

"நான் நினைப்பது போல் நீங்களும் நினைக்கிறீர்கள் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டுமென்று விரும்புகிறேன்."

"என் கடமையைச் செய்யக்கூடாதென்று நானே எப்படி ஒப்புக்கொள்வது. இந்த விஷயத்தில் எனக்குச் சுதந்திரமில்லை ஆனால் அவளுக்கு உண்டு."

ஸைமன்ஸன் மௌனமாக இருந்தான். அவன் சற்று யோசித்துவிட்டு மறுபடியும் சொன்னான்.

"சரி; இதை அவளிடம் சொல்லிவிடுகிறேன். நான் அவளைக் காதலிப்பதாக நீங்கள் நினைத்துவிடக் கூடாது. அதிக கஷ்டங் களுக்கு உள்ளான ஒரு நல்ல மனித ஜென்மம் என்ற முறையிலேயே அவள்மீது அன்பு செலுத்துகிறேன். அவளிடமிருந்து நான் ஒன்றையும் விரும்பவில்லை. அவள் துயரத்தைக் குறைக்க வேண்டு மென்ற ஆவல் தான்—" என்றான்.

அவன் குரலில் ஏற்பட்ட நடுக்கத்தைக் கண்டு நிக்லியுடாவ் ஆச்சரியமடைந்தான்.

"உங்களுடைய உதவியை ஏற்க அவள் விரும்பவில்லை யென்றால் என்னுடைய உதவியையாவது ஏற்கட்டும். அவள் இஷ்டப்பட்டால் அவளை எங்கே சிறையில் வைக்கிறார்களோ அங்கேயே என்னையும் அனுப்பும்படி கேட்கிறேன். அவள் அரு கிலேயே நான் வசிக்கிறேன். அவள் துன்பத்தைக் குறைக்க என்னால் முடியுமென்று நம்புகிறேன்..." என்றான். உணர்ச்சி மிகுதியால் மறுபடியும் பேச்சை நிறுத்தினான்.

"நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது? அவளைக் காப் பாற்றுவதற்கு உன்னைப் போல் ஒருவனை அவள் கண்டுபிடித்த தற்காக நான் மிகவும் சந்தோஷிக்கிறேன்—"

"அதைத்தான் நான் அறிய விரும்பினேன்." அவள் சந்தோஷ மாக இருக்க வேண்டுமென்று விரும்பும் நீங்கள், அவள் என்னை மணப்பது நல்லது என்று நினைக்கிறீர்களா என்பதைத்தான் அறிய விரும்பினேன்."

"ஓ நிச்சயமாக" என்று நிக்லியுடாவ் உறுதியுடன் பதில் அளித்தான்.

"எல்லாம் அவளைத்தான் பொறுத்திருக்கிறது. கஷ்டப்படும் ஒரு ஆத்மாவுக்குச் சாந்தி கிடைக்க வேண்டுமென்பதுதான் என் விருப்பம்" என்று குழந்தை போன்ற பணிவுடன் சொன்னான் ஸைமன்ஸன். எப்பொழுதும் சிடுசிடுப்பாக இருக்கும் அவனிடம் ஒருவரும் இத்தகைய மனோபாவத்தை எதிர் பார்க்கவில்லை.

அவன் எழுந்து வெட்கத்துடன் சிரித்துக் கொண்டே நிக்லியுடாவை முத்தமிட்டான்.

"ஆகையால் அவளிடம் சொல்லி விடுகிறேன்" என்று சொல்லிவிட்டு அங்கிருந்து புறப்பட்டான்.

# 17

"இதைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? ஸைமன்ஸனிடம் நான் இதை எதிர் பார்க்கவேயில்லை" என்று சொல்லி விட்டு மேரி பாவ்லோவ்னா பெருமூச்சு விட்டாள்.

"ஆனால் அவள் — காடுஷா? அவள் என்ன நினைக்கிறாள் என்று தோன்றுகிறது?" என்று நிக்லியுடாவ் கேட்டான்.

"அவளா?" என்று கேட்டுவிட்டு, மிகவும் பொருத்தமான பதில் சொல்ல வேண்டுமென்று மேரி பாவ்லோவ்னா ஒரு கணம் யோசித்தாள். பிறகு, "அவள்தானே? அவளுடைய கடந்த கால வாழ்க்கை -எப்படியிருந்தாலும் அவள் மிகவும் உயர்ந்த குணம் உள்ளவள். நல்ல எண்ணங்கள கொண்டவள். அவள் உங்கள்மீது அன்பு கொண்டிருக்கிறாள். சரியான முறையில் அன்பு செலுத்துகிறாள். உங்களுடைய நன்மைக்காக நீங்கள் தன்னை மணக்கக் கூடாது என்று நினைக்கிறாள். உங்களை மணப்பது, ஏற்கெனவே நடந்தவற்றைக் காட்டிலும். பயங்கரமான வீழ்ச்சியாகும். ஆகையால் இதற்கு அவள் சம்மதிக்கவேமாட்டாள். இருந்தாலும் உங்களுடைய பிரசன்னத்தில் அவள் பரபரப்படைகிறாள்."

"அப்படியானால் நான் என்ன செய்ய? நான் ஒழிந்துபோக வேண்டுமா?"

மேரி பாவ்லோவனா இனிமையாகப் புன்முறுவல் புரிந்து, 'ஆமாம், ஓரளவுக்கு" என்றாள்.

"ஓரளவுக்கு ஒருவன் எப்படி ஒழிந்து போக முடியும்?"

"நான் அர்த்தமில்லாமல் பேசுகிறேன். அவனுடைய காதலின் தன்மையை அவள் அறிந்திருக்கிறாள் என்று நினைக்கிறேன். இந்த விஷயத்திலெல்லாம் ஒரு தீர்ப்புக் கூறுவதற்கு நான் தகுதியற்றவன் என்பது உங்களுக்குத் தெரியும். ஆனால் அவனுடைய காதல் ஒரு புருஷனின் சாதாரண உணர்ச்சிதான் என்று எனக்குத் தோன்றுகிறது. இது தெய்விகக் காதல் என்றும், இது தன் சக்தியை எழுப்பி விடுவதாகவும் அவன் சொல்கிறான். இருந்தாலும் நோவோட்வோரோவுக்கும் கிராபெட்ஸுக்கு மிடையில் இருப்பது போன்ற உணர்ச்சிதான் இவர்களுடைய அன்புக்கும் அடிப்படையாக இருக்கிறதென்று தோன்றுகிறது."

மேரி பாவ்லோவ்னா, விஷயத்தை விட்டுவிட்டு, தனக்குப் பிடித்தக் கருத்துக்களைப் பற்றிப் பேசத் தொடங்கிவிட்டாள்.

"அது சரி, நான் என்ன செய்யலாமென்கிறாய்?" என்று நிக்லியுடாவ் கேட்டான்.

"எல்லாவற்றையும் அவளிடம் சொல்லிவிடுங்கள். அது தான் நல்லது. நான் அவளைக் கூப்பிடுகிறேன். கூப்பிடட்டுமா?" என்றாள் மேரி பாவ்லோவ்னா.

"நீ விரும்பினால் கூப்பிடு."

மேரி பாவ்லோவ்னா வெளியே சென்றாள்.

நிக்லியுடாவ் தனியே இருந்தபொழுது புதிய உணர்ச்சி ஏற்பட்டது. அவன் இருந்த சிறிய அறையில் வோராடுக்கோவா தூங்கிக் கொண்டிருந்தாள். அவள் மிருதுவாக மூச்சு விடுவதையும், இடையிடையே முனகுவதையும் கேட்டுக் கொண்டிருந்தான். நிக்லியுடாவ் தானாக இழுத்துப் போட்டுக் கொண்டிருந்த கடமையிலிருந்து. ஸைமன்ஸன் சொன்ன விஷயம் அவனுக்கு விடுதலையளித்து விட்டது. இருந்தாலும் மற்றொரு வருத்தம் அவனைத் துன்புறுத்தியது. தன் தியாகத்தின் தரத்தை ஸைமன்ஸனின் செய்கை குறைத்துவிட்டதாகத் தோன்றியது. அவளிடம் எந்த விதத்திலும் கட்டுப்படாத ஒருவன் அவளுடைய விதியுடன் தன் விதியையும் பிணைத்துக் கொள்ள விரும்புகிறானென்றால் நிக்லியுடாவின் தியாகம் ஒரு பிரமாதமானதல்ல. அவளுடைய அன்புக்கு அவன் மிகவும் பழக்கப்பட்டுப் போயிருந்தான். மற்றொருவனை அவள் நேசிக்க முடியும் என்பதை அவனால் ஒப்புக் கொள்ள முடியவில்லை.

அதோடு அவன் போட்டிருந்த திட்டங்களெல்லாம் சிதறிப் போய்விடும். அவள் ஸைமன்ஸனை மணந்தால் அங்கு அவன் இருப்பது அனாவசியம். ஆகையால் வேறு திட்டம் போட வேண்டியிருக்கும்.

அவன் தன் உணர்ச்சிகளை ஆராய்வதற்குள் காடுஷா வந்து விட்டாள்.

"மேரி பாவ்லோவ்னு என்னை இங்கு அனுப்பினுள்" என்ருள்.

"ஆமாம் நான் உன்னேடு ஒருவிஷயம் பேசவேண்டும். உட்கார். ஸைமன்ஸன் என்னேடு பேசிக் கொண்டிருந்தான்" என்ருன் நிக்லியுடாவ்.

காடுஷா மடியில் கையை வைத்துக்கொண்டு உட்கார்ந்தாள். ஸைமன்ஸன் என்ற பெயரைக் கேட்டவுடன் அவள் கன்னங்கள் சிவக்கப் பெற்றன.

"அவர் என்ன சொன்னூர்" என்று கேட்டாள்.

"அவன் உன்னை மணக்க விரும்புவதாகச் சொன்னுன்."

அவள் ஒன்றும் பதில் செல்லாமல் பூமியை நோக்கினுள்.

"என் அங்கிகாரம் அல்லது யோசனையைக் கேட்கிருன். அது நீதான் முடிவு செய்யவேண்டிய விஷயமென்று அவனிடம் சொன்னேன்."

"இதற்கெல்லாம் என்ன அர்த்தம்? ஏன்?" என்று முனகினுள் காடுஷா. இருவரும் சிறிதுநேரம் மௌனமாக உட்கார்ந்திருந்தனர்.

"நீதான் தீர்மானிக்கவேண்டும்" என்று மீண்டும் நிக்லியுடாவ் கூறினுன்.

"நான் தீர்மானிப்பதற்கு என்ன இருக்கிறது? எலலாவற்றையும் முன்பே தீர்மானித்தாகிவிட்டது."

"இல்லை, ஸைமன்ஸனுடைய கோரிக்கையை ஏற்பதா என்பதை நீதான் முடிவு செய்யவேண்டும்."

"எப்படிப்பட்ட மனைவியாக நான் இருப்பது? கைதியாகவா? ஸைமன்ஸனையும் நான் ஏன் கெடுக்க வேண்டும்?" என்று முகத்தைச் சுளித்துக்கொண்டு கேட்டாள்.

"ஆனுல் தண்டனை ரத்தாகிவிட்டால்?"

"ஐயோ என்னை விட்டுவிடுங்கள். நான் சொல்வதற்கு ஒன்றுமில்லை" என்று சொல்லிக்கொண்டே எழுந்தாள் காடுஷா.

# 18

காடுஷாவைத் தொடர்ந்து நிக்லியுடாவும், ஆண் கைதிகள் இருக்கும் அறைக்கு வந்தான். அங்கு எல்லாரும் பரபரப் படைந்திருந்தனர். பெட்லின் என்ற புரட்சிக் கைதி எழுதிய ஒரு கடிதம் ஒரு சுவர்மீது இருந்ததாகவும், அதைத் தான் கண்டு பிடித்ததாகவும் நெபடோவ் சொன்னதுதான் அவர்க ளிடையே பரபரப்பை ஏற்படுத்தியிருந்தது. காராவில் அவ னுக்கு கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருந்தது. வெகு காலத்திற்கு முன்பே அவன் அங்கு போய்ச் சேர்ந்திருப்பான் என்று இவர்கள் நினைத்திருந்தனர். ஆனால், குற்றக் கைதிக ளோடு அரசியல் கைதி அவன் ஒருவன் மாத்திரம் சமீபத்தில் தான் அழைத்துச் செல்லப்பட்டானென்பது இப்பொழுதுதான் தெரிந்தது.

"ஆகஸ்ட் 17-ம் தேதியன்று கிரிமினல் கைதிகளோடு என்னை மாத்திரம் தனியாக அனுப்பினார்கள். நெவரோவ் என்னோடு இருந்தான், கஜாணியில் ஒரு பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் அவன் தூக்குப் போட்டுக்கொண்டு விட்டான். நான் சௌக்கிய மாகத்தான் இருக்கிறேன். நல்லன கோருகிறேன்" என்று பெட்லின் கடிதத்தில் எழுதியிருந்தது.

பெட்லின் நிலைமையைப் பற்றியும் நெவரோவின் தற்கொலை யைப் பற்றியும் அனைவரும் பேசிக் கொண்டிருந்தனர். கிரில்ட் ஸோவ் மாத்திரம் மௌனமாக உட்கார்ந்து ஏதோ சிந்துத்துக் கொண்டிருந்தான். அவனுடைய பார்வை ஒரே இடத்தில் பதிந்திருந்தது.

"நெவரோவ் ஒரு கவிஞன்; கனவு காண்பவன். தனிக்கொட் டடியில் இவர்களாலெல்லாம் இருக்க முடியாது? நான் தனிக் கொட்டடியில் இருந்தபொழுது நான் வேலைகளைக் கச்சிதமாக அமைத்துக் கொண்டிருந்தேன். கற்பனை அத்துமீறிப் போக நான் அனுமதிக்கவில்லை" என்றான் நோவோட்வொரோவ்.

அங்கு நிலவிய மந்தத்தைப் போக்க விரும்புபவன்போல நெபடோவ், "எதை வேண்டுமானாலும் தாங்கலாம், என்னைத் தனிக் கொட்டடியில் வைத்தபொழுது எனக்குச் சந்தோஷமாகக் கூட இருந்தது" என்றான்.

கிரில்ட்ஸோவ் மௌனமாக இருப்பதைக் கண்ட மேரி பாவ் லோவ்னா, "நெவரோவை உங்களுக்கு நன்றாகத் தெரியவில்லையா?" என்றாள்.

அவன் திடீரென்று கனைத்துக்கொண்டு பேசத் தொடங்கினான். "நெவோரோவைப் போன்ற மனிதர்கள் அபூர்வம். எவ்வளவு பேர் செத்தாலும் சர்க்காருக்குக் கவலையில்லை, உண்மையில் சிறந்தவர்களெல்லாம் சாக வேண்டும் என்பதுதான் சர்க்காரின் விருப்பம்" என்றான்.

"எல்லாரையும் ஒழித்துவிட முடியாது" என்று நெபடோவ் தன் உற்சாகமான குரலில் கூறினான்.

கிரில்ட்ஸோவ் தன் குரலைச் சற்று உயர்த்தி, "சர்க்காரிடம் அனுதாபம் காட்டினால் நம்மில் ஒருவரும் மிஞ்சி இருக்க முடியாது. ஒரு ஸிகரெட் கொடு" என்றான்.

"ஓ! அனடோவ், அது உங்களுக்கு உடம்புக்கு ஆகாது. புகை குடிக்காதீர்கள்" என்றாள் மேரி பாவ்லோவ்னா.

"என்னைத் தடுக்காதே" என்று கோபமாகச் சொல்லிவிட்டு ஒரு ஸிகரெட்டைப் பற்ற வைத்தான். உடனே அவனுக்கு இருமல் வந்துவிட்டது. "நாம் இப்படியெல்லாம் செய்யக்கூடாது. பேசிக்கொண்டிருக்கக் கூடாது. ஒன்றுபட்டு அவர்களை ஒழித்துவிட வேண்டும்" என்று அவன் மறுபடியும் கூறினான்.

நிக்லியுடாவ் குறுக்கிட்டு, "அவர்களும் மனிதர்கள்தானே?" என்றான்.

"இல்லை. அவர்கள் மனிதர்களல்ல. இப்படியெல்லாம் செய்பவர்கள்...இல்லை...ஒருவித பலூனும் வெடி குண்டுகளும் கண்டுபிடித்திருக்கிறார்களாம். அதில் ஏறிக்கொண்டு மேலே போய், குண்டுகளைப் பொழிந்து அவர்களை அடியோடு அழித்துவிடவேண்டும். ஆமாம். ஏனென்றால்...என்று கிரில்ட்ஸோவ் மேலும் பேசத்தொடங்கினான். ஆனால் அவன் முகம் சிவந்துவிட்டது. இருமல் அதிகமாயிற்று. ரத்தத்தைக் கக்கினான். அனைவரும் பரபரப்படைந்து ஒவ்வொரு சிகிச்சை செய்யத் தொடங்கினார்கள். பிறகு அவனைப் படுக்கையில் படுக்கவிட்டனர். சார்ஜெண்ட் வந்து நிக்லியுடாவுக்காகச் சிறிது நேரமாகக் காத்திருந்தான். நிக்லியுடாவ் விடைபெற்றுக் கொண்டு சார்ஜெண்டோடு வெளியே வந்தான்.

கைதிகள் அமைதியாகத் தூங்கிக் கொண்டிருந்தனர். கிரிமினல் கைதிகள் இருந்த இடத்தைக் காட்டிலும் அரசியல் கைதிகள் இருந்த இடத்திலேயே காற்று சுத்தமாக இருப்பது போல் தோன்றியது. கால்வைக்கும் இடத்திலெல்லாம் கைதிகள் படுத்திருந்தனர். நாற்றமடிக்கும் தொட்டியின் பக்கத்தில் ஒரு சிறுவன், மற்றொரு கைதியின் கால்மீது தலையை வைத்துப் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தான்.

நிக்லியுடாவ் சிறையைவிட்டு வெளியே வந்தபின் குளிர்ந்த காற்றை நிரம்ப உள்ளுக்கு இழுத்தான்.

# 19

வானம் நிர்மலமாகி விட்டது. நக்ஷத்திரங்கள் காய்ந்தன சில இடங்களைத் தவிர மற்ற இடங்களில் சேர் உறைந்துவிட்டது. நிக்லியுடாவ் தான் தங்கியிருந்த இடத்திற்குத் திரும்பிவந்து, ஜன்னலைத் தட்டினான். வேலைக்காரன் வந்து கதவைத் திறந்தான். பின்பக்கத்தில் வேலைக்காரர்களின் குரட்டைச் சப்தமும், முற்றத்தில் குதிரைகள் ஓட்ஸ் தின்னும் சப்தமும் கேட்டது. முன் அறையில் ஒரு சிவப்பு விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அதிலிருந்து வியர்வை நாற்றம் வீசியது. ஒரு மறைவுக்குப் பின்னால் யாரோ உரக்கக் குரட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தனர். நிக்லியுடாவ் உடைகளை மாற்றிக் கொண்டு படுத்தான். அன்று நடந்தவற்றை யெல்லாம் பற்றிச் சிந்தித்துப் பார்த்தான். தொட்டியின் பக்கத்தில் ஒரு சிறுவன் படுத்திருந்த காட்சிதான் எல்லாவற்றையும்விட கோரமாக அவனுக்குத் தோன்றியது.

அன்று மாலை ஸைமன்ஸனுடனும் காடுஷாவுடனும் அவன் நடத்திய சம்பாஷணை எதிர்பாராதது. மிகவும் முக்கியமானது. ஆகையால் அதைப்பற்றி அவன் யோசிக்கவில்லை. அது மிகவும் சிக்கல் நிறைந்த விஷயம். அதைப் பற்றிய எண்ணத்தையே தன் மனதில் தங்கவிடாமல் விரட்டினான். அசுத்தக் காற்றை ஸ்வாசித்துக் கொண்டு படுத்திருக்கும் அந்த அபாக்கியசாலிகளைப் பற்றிய எண்ணம், விசேஷமாக நாற்றமடிக்கும் தொட்டியின் பக்கத்தில் கசியும் தண்ணீரில் படுத்திருந்த சிறுவனின் ஞாபகம் திரும்பத் திரும்ப வந்தது.

"மற்றவர்கள் கவனிக்காத விஷயங்களைக் கவனிக்கும் நான் தான் பைத்தியக்காரனா? அல்லது நான் காணும் விஷயங்களைச் செய்யும் அவர்கள் பைத்தியக்காரர்களா?" என்று தன்னைத் தானே பன்முறை கேட்டுக் கொண்டான். இந்தக் காரியங்களெல்லாம் அவசியம்தான் என்ற நம்பிக்கையோடு இவற்றைச் செய்கிறார்கள். இப்படிச் செய்பவர்கள் பைத்தியக்காரர்கள் என்று நினைக்கக்கூட அவனால் முடியவில்லை.

இந்த மூன்று மாதங்களில் அவன் கண்ட விஷயங்களிலிருந்து அவனுக்குத் தோன்றியது இதுதான்:

சங்கோஜம் உள்ளவர்கள், முன் கோபக்காரர்கள், சிறந்த திறமைசாலிகள், ஆனால் அஜாக்கிரதை யுள்ளவர்கள் இவர்களை அதிகாரிகள் விசாரணையின்மூலமோ உத்திரவின்மூலமோ பொறுக்கி எடுத்தனர். சுதந்திரமாக இருந்தவர்களைக் காட்டிலும்

இவர்கள் எந்தவிதத்திலும் அபாயமானர்களல்ல. இவர்களைச் சிறைகளில் அடைத்தனர்; பிறகு சைபீரியாவுக்கு அனுப்பினர். அங்கு இவர்கள் இயற்கையோடு தொடர்பு இல்லாமல், சோம்பேறி வாழ்க்கை நடத்தும்படி விடப்பட்டார்கள். தர்ம வாழ்க்கை நடத்துவதற்கான வசதி ஒன்றும் இவர்களுக்கு இல்லை.

அனாவசியமான அவமானங்களுக்கெல்லாம் இவர்கள் உள்ளாக்கப்பட்டனர். கை கால்களுக்கு விலங்கிட்டார்கள்; தலையை மொட்டை அடித்தார்கள். வெட்கப்படத் தக்க உடை அணியச் செய்தார்கள். பொதுஜன அபிப்பிராயத்திற்கான மதிப்பு, வெட்கம், மனித கௌரவம் என்ற உணர்ச்சிகள் அவர்களுக்கு மறுக்கப்பட்டன.

சிறையில் எப்பொழுதும் தொத்து நோய் அபாயம் இருந்து வந்தது. யோக்கியர்களும், மிகக் கொடிய காரியங்களைச் செய்யும்படி தூண்டும் நிலையில் அவர்களை வைத்திருந்தனர். கொலைகாரர்கள், விபசாரிகள், அயோக்கியர்கள் முதலியவர்களோடு பழகும்படி நிப்பந்திக்கப்பட்டனர். பெண்களையும் குழந்தைகளையும் அதிகாரிகள் மிருகத்தனமாக நடத்தினர். கைதிகளைச் சவுக்காலும் தடியாலும் அடித்தனர். கணவனையும் மனைவியையும் பிரித்தனர். அந்நியரோடு அவர்கள் கூடிக் குலவ அனுமதிக்கப்பட்டனர். கைதிகளைச் சுட்டும், தூக்கிலிட்டும் கொன்றனர். இவற்றைப் பார்த்தபொழுது, மிருகத்தனங்களை சர்க்கார் சகித்துக் கொள்வதோடு மாத்திரமில்லாது, தங்களுக்குச் சௌகர்யமானபோது அதை அனுமதிக்கவும் செய்கிறது என்று தோன்றியது. ஆகையால் உரிமை இழந்தவர்களும் தரித்திரர்களும் பலாத்காரச் செயல் புரிவது இன்னும் நியாயமென்று தோன்றியது. சிறைகள், துர்ப்பழக்கங்களை மக்களிடையே பரப்புவதற்காகவே ஏற்பட்ட ஸ்தாபனங்களாக விளங்கின.

சிறையில் இருந்தவர்கள், வாழ்க்கையைப் பற்றிய சாதாரண அபிப்பிராயத்தை இழந்துவிட்டனர். லாபம் கிடைத்தால் எந்தக் கொடுமையையும் செய்யலாம் என்ற இறை மனோபாவம் ஏற்பட்டுவிட்டது. பிறருக்கு அனுதாபம் காட்ட வேண்டுமென்றும் மரியாதை செலுத்த வேண்டுமென்றும் மத போதகர்கள் பிரசாரம் செய்தனர். ஆனால் உண்மை வாழ்க்கையில் இவை புறக்கணிக்கப்பட்டுவிட்டன. ஆகையால் தாங்களும் இவற்றைப் பொருட்படுத்த வேண்டியதில்லை என்று கைதிகள் நினைத்தனர். இந்த மாறுதலை டாரன் உள்பட எல்லா கைதிகளிடமும் நிக்லியுடாவ் கவனித்தான். சிறையில் கைதிகளைச் சீர்திருத்துவதற்கு பதிலாக இல்லாத துர்ப்பழக்கங்களெல்லாம் அவர்களுக்குப் படியும்படி செய்யப்பட்டது.

"இப்படியெல்லாம் ஏன் நடக்கிறது?" என்று நிக்லியுடாவ் தன்னைத் தானே கேட்டுக் கொண்டான். ஆனால் பதில் கிடைக்க

வில்லை. ஆனால் எல்லாவற்றிற்கும் மேலாக ஆச்சரியமளித்த விஷயம் என்னவென்றால், இவையெல்லாம் தவறுதலாகவோ, தற்செயலாகவோ, ஒரே ஒரு முறையோ செய்யப்படவில்லை. பல நூற்றாண்டுகளாக இவை இடைவிடாமல் நடந்து வருகின்றன!

நவீன முறையில் சிறைகளைக் கட்டினால் இந்தக் குறைகள் நிவர்த்தியாகிவிடுமென்று அதிகாரிகள் சொன்னார்கள். ஆனால் மின்சார மணிகளும், மின்சார கொலைக் கருவிகளும் அடங்கிய நவீன சிறைகளைப்பற்றி நிக்லியுடாவ் படித்திருக்கிறான். அவனுடைய வெறுப்பு இதனால் அதிகரிக்கத்தான் செய்தது.

கோர்ட்களிலும் சட்டசபைகளிலும் அதிகாரிகள் மக்களின் பணத்தை ஏராளமாக வாங்கிச் சாப்பிட்டுவிட்டு உட்கார்ந்திருந்தனர். தங்களைப்போலவே நோக்கம் படைத்த வேறு அதிகாரிகள் இயற்றிய சட்டப் புத்தகங்களைப் புரட்டுவதுதான் இவர்கள் வேலை. இந்த சட்டங்களை மீறுபவர்களுக்கு தண்டனை விதித்தார்கள். பிறகு அவர்களுக்கு என்ன நேர்கிறது என்பதை இவர்கள் போய்ப் பார்ப்பதில்லை. இன்ஸ்பெக்டர்கள், காவல் அதிகாரிகள், சோல்ஜர்கள் ஆகியவர்களின் தயவில்தான் இவர்கள் நிற்கவேண்டும். இப்படி லக்ஷக்கணக்கானவர்கள் உடலும் உள்ளமும் மடியப் பெற்றார்கள்.

மனிதனை மனிதன் தண்டிக்க முடியும் என்ற அபிப்பிராயம் தான் கைதிகளிடையே பரவியுள்ள இவ்வளவு கொடுமைகளுக்கும் காரணமென்று நிக்லியுடாவுக்குத் தோன்றியது. நரமாமிச பக்ஷணம் செய்யும் மனோபாவம் சேற்றுத் தரையில் உண்டாவதில்லை; மந்திரி சபைகள், கமிட்டிகள், சர்க்கார் இலாக்கக்கள் முதலியவற்றில்தான் உண்டாகிறதென்று கருதினான். சேவகன் முதல் மந்திரிவரை ஒருவரும் சிறையைப்பற்றிக் கவலைப்படவில்லை. தங்கள் பணத்தைப்பற்றி மாத்திரமே அவர்கள் சிந்திப்பதுதான் இந்தக் கஷ்டங்களுக்குக் காரணம்.

"தவறாக அர்த்தம் செய்து கொள்வதால்தான் இவையெல்லாம் நடக்கின்றனவா? அதிகாரிகளுக்கு இதே சம்பளத்தைக் கொடுத்து இந்தக் குற்றங்கள் நடவாமலிருக்கும்படி பார்த்துக் கொள்ள முடியாதா?" என்று யோசித்துக் கொண்டிருந்தான் நிக்லியுடாவ். அதற்குள் ஜாமக் கோழி இரண்டாம் முறை கூவி விட்டது. அவனும் ஆழ்ந்த நித்திரையில் மூழ்கிவிட்டான்.

# 20

மறுநாள் காலை மேரி பாவ்லோவ்னுவிடமிருந்து ஒரு சோல்ஜர் ஒரு கடிதம் கொண்டு வந்திருந்தான். கிரில்ட்ஸோவின் நோய் தாங்கள் நினைத்ததைக் காட்டிலும் கடுமையானதென்று அவள் எழுதியிருந்தாள். "கிரில்ட்ஸோவை இங்கேயே விட்டு வைக்கவும் அவரோடு தங்கியிருக்கவும் அனுமதி கேட்டோம். ஆனால் அனுமதி கிடைக்கவில்லை. ஆகையால் அவரை உடன் அழைத்துச் செல்லுகிறோம். நடக்கக் கூடாதது நடந்துவிடுமோ வென்று அஞ்சுகிறோம். அவரை அடுத்த நகரில் விட்டுச்செல்வதாக இருந்தால் எங்களில் யாராவது ஒருவர் அவருடன் தங்கியிருக்க அனுமதி வாங்கிக்கொடுங்கள். அந்த அனுமதியைப் பெறுவதற்கு விவாகம் செய்துகொள்வது அவசியமென்றாலும் நான் அவரை விவாகம் செய்து கொள்ளத் தயார்" என்று அவள் எழுதியிருந்தாள்.

நிக்லியுடாவ் உடனே ஹோட்டல் காரிக்குப் பணத்தைக் கொடுத்துவிட்டு மூன்று குதிரைகள் பூட்டிய வண்டி ஒன்றை அமர்த்திக்கொண்டு அவசரமாகப் புறப்பட்டான். எவ்வளவு வேகமாக ஓட்டமுடியுமோ அவ்வளவு வேகமாக வண்டியை விடும்படி வண்டிக்காரனிடம் சொன்னான். சிறிது நேரத்திற்குள் கைதிகளின் வண்டிகள் இருந்த இடத்தை அடைந்துவிட்டான். அதிகாரி முன்னால் போய்விட்டான். சோல்ஜர்கள் குடித்துவிட்டு சாலையோரமாக வந்துகொண்டிருந்தார்கள். ஒரு வண்டியில் தலைக்கடியில் ஒரு தலையணையை வைத்துக்கொண்டு வைக்கோலில் படுத்திருந்தான் கிரில்ட்ஸோவ். அவன் பக்கத்தில் மேரிபாவ்லோவ்னு உட்கார்ந்திருந்தாள். நிக்லியுட்ாவ் உடனே தன் வண்டியை நிறுத்தச் சொல்லிவிட்டு இறங்கி அந்த வண்டியருகே சென்றான். ஒரு சோல்ஜர் நிக்லியுடாவைப் பார்த்து கையமர்த்தினான். ஆனால் நிக்லியுடாவ் அதை லக்ஷியம் செய்யவில்லை. அவன் வண்டியைக் கையால் பிடித்துக்கொண்டே கிரில்ட்ஸோவ் அருகில் நடந்தான். கிரில்ட்ஸோவ் ஆட்டுத்தோல் சட்டையும், கம்பளிக் குல்லாயும் அணிந்திருந்தான். அவன் வாய் ஒரு கைகுட்டையினால் கட்டப்பட்டிருந்தது. முன்னைக் காட்டிலும் அவன் வெளுத்து இளைத்துக் காணப்பட்டான். வண்டியின் ஆட்டத்தில் அவன் உடம்பு இப்படியும் அப்படியும் அலண்டது. அவன் பார்வை மாத்திரம் நிக்லியுடாவின்மீது பதிந்திருந்தது. அவன் உடம்பைப் பற்றிக் கேட்டபொழுது அவன் கண்ணை மூடிக்கொண்டு கோபத்துடன் தலையை ஆட்டினான். வண்டியின் அதிர்ச்சியைத் தாங்க அவனுடைய சக்தி முழுமையும் அவசியம் போல் தோன்றியது. வண்டியின் மற்றொரு பக்கத்தில் மேரிபாவ்

லோவ்ஞ உட்கார்திருந்தாள். அவள் அர்த்த புஷ்டியுடன் நிக்லியுடாவை ஒரு முறை பார்த்தாள். கிரில்ட்ஸோவின் நிலைமைபற்றி அவள் கொண்டிருந்த கவலையெல்லாம் அந்தப் பார்வையில் வெளியாயிற்று. உடனே அவள் உற்சாகமாகப் பேசத் தொடங்கி விட்டாள்.

" தன் செய்கையைப்பற்றி அந்த அதிகாரியே வெட்கப்படுகிறுன் போலிருக்கிறது" என்று, வண்டியின் சப்தத்திற்குமேல் குரலை உயர்த்திப் பேசினுள். "புஜோவ்கினின் விலங்கை விலக்கி விட்டான். அவன் பெண்ணை அவனே தான் எடுத்து வருகிறுன். காடுஷாவும் ஸைமன்ஸனும் அவனேடு இருக்கிறுர்கள். வேராவும் அங்குதான் இருக்கிறுர்கள். என் இடத்தில் அவள் இருக்கிறுள்" என்றுள்.

கிரில்ட்ஸோவ் ஏதோ சொன்னுன். ஆனுல் வண்டிச் சப்தத்தில் அது காதில் விழவில்லை. இருமலை அடக்குவதற்காக அவன் முகத்தைச் சுளித்துக்கொண்டான். அவன் சொல்வதைக் கேட்பதற்காக நிக்லியுடாவ் அவன் பக்கம் குனிந்தான். "எனக்கு இப்பொழுது ரொம்பத்தேவலை; ஜலதோஷம்தான் பிடிக்காமலிருக்க வேண்டும்" என்றுன் அவன். நிக்லியுடாவ் அதை அங்கீகரிப்பதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டினுன். மீண்டும் ஒரு முறை அவன் மேரிபாவ்லோவ்ஞ மீது பார்வையைச் செலுத்தினுன்.

கிரில்ட்ஸோவ் கஷ்டப்பட்டுச் சிரித்துக்கொண்டே, "அந்த முப்பொருள் பிரச்னை என்ன ஆயிற்று? விடை கண்டு பிடிப்பது கஷ்டமாக இருக்கிறதா என்ன?" என்றுன். நிக்லியுடாவுக்கு இது விளங்கவில்லை. ஆனுல், "கிரில்ட்ஸோவ் கூறியது சூரியன் சந்திரன் பூமி ஆகிய மூன்று அண்டங்களின் நிலையைப் பொறுத்த ஒரு கணக்கு; நிக்லியுடாவ், காடுஷா ஸைமன்ஸன் ஆகிய மூவருக்குமிடையில் எழுந்துள்ள பிரச்னையை அவன் இப்படி உருவகப் படுத்திச் சொல்லுகிறுன்" என்று மேரிபாவ்லோவ்ஞ விளக்கினுள். அவள் நன்ருக விளக்கினுள் என்பதற்கு அடையாளமாக கிரில்ட்ஸோவ் தலையை ஆட்டினுன்.

" அந்தப் பிரச்னையைத் தீர்ப்பது என்னிடம் இல்லையே?" என்றுன் நிக்லியுடாவ்.

"என் கடிதம் கிடைத்ததா? அதன்படி செய்வீர்களா?" என்று மேரிபாவ்லோவ்ஞ கேட்டாள்.

" நிச்சயமாகச் செய்கிறேன்" என்றுன் நிக்லியுடாவ். ஆனுல், கிரில்ட்ஸோவின் முகத்தில் ஒருவித அதிருப்திக் குறியைக் கண்டான், பிறகு அவன் தன் வண்டிக்குத் திரும்பிச் சென்று ஏறிக் கொண்டான். சாம்பல்நிற உடையுடனும் விலங்குகளுடனும்

போய்க்கொண்டிருந்த கைதிகளின் கூட்டத்தைக் கடந்து போய்க் கொண்டிருந்தான். காடுஷாவின் நீலச் சால்வையையும், வேராடுக் கோவாவின் கருப்புக் கோட்டையும், ஸைமன்ஸனிடம் பின்னல் குல்லாயையும் நிக்லியுடாவ் பார்த்தான். ஸைமன்ஸன் பெண் களோடு ஏதோ காரசாரமாக விவாதித்துக் கொண்டே நடந்தான்.

அவர்கள் நிக்லியுடாவைக் கண்டபொழுது அவனுக்கு வணங்கி மரியாதை செலுத்தினர். அவர்களிடம் சொல்வதற்கு சமாசாரம் ஒன்றும் இல்லாததால் நிக்லியுடாவ் வண்டியை நிறுத்த வில்லை. சீக்கிரம் வண்டி அவர்களை கடந்து போய்விட்டது. ரோடு முன்னைக் காட்டிலும் சமமாக இருந்ததால் வண்டி வேகமாகச் சென்றது.

சிறிது தூரம் காட்டின் வழியாகவும், சிறிது தூரம் வயல் வெளிகளின் வழியாகவும் ரஸ்தா சென்றது. வானம் வெளிவாங்கி சூரியன் பிரகாசிக்கத் தொடங்கிவிட்டது. ஒரு சர்ச்சின் கோபுரமும், தூரத்து வெண் மலைகளும் வெய்யிலில் பிரகாசித்தன. நிக்லியுடா வின் வண்டி ஒரு கிராமத்தை அடைந்தது. தெருக்களில் ஜனங்கள் நின்றிருந்தனர். சமீபத்தில் நகரம் இருக்கிறது என் பதற்கான அறிகுறிகள் அங்கு காணப்பட்டன.

வண்டிக்காரன் குதிரையை ஒரு அடி கொடுத்துத் தட்டி விட் டான். ஓர் ஆறு குறுக்கிட்டது. ஓடத்தின் மீது வண்டியை ஏற்றி அக்கரை சேரவேண்டி யிருந்தது. ஆற்றைக் கடப்பதற்காகப் பல வண்டிகள் அங்கு இருந்தன. ஆனால் நிக்லியுடாவ் அங்கு அதிக நேரம் காக்க வேண்டியில்லை. ஓடம் வந்தது. நிக்லியுடா வின் வண்டியும் மற்றும் சில வண்டிகளும் அதில் ஏறிக்கொண்டன. ஓடக்காரன் ஓடத்தின் கதவை அடைத்து விட்டு ஓடத்தை விட் டான். ஓடத்தில் இடம் பெறுதவர்களின் கோரிக்கைகளை அவன் கவனிக்கவில்லை.

ஓடத்தில் ஓடக்காரனின் பூட்ஸ் சப்தத்தையும், குதிரைகளின் குளம்புச் சப்தத்தையும் தவிர வேறு ஒரு சப்தமும் இல்லை.

# 21

நிக்லியுடாவ் ஓடத்தின் ஒரு ஓரத்தில் நின்று பரந்த ஆற்றைப் பார்த்துக் கொண்டிருந்தான். இரண்டு சித்திரங்கள் தான் அவன் மனத்தின்முன் தோன்றின. ஒன்றில் கிரில்ட்ஸோவ் கோபத்துடன் செத்துக் கொண்டிருந்தான். மற்றொன்றில் காடுஷா ஸைமன்ஸன் பக்கத்தில் வேகமாக நடந்து போய்க் கொண்டிருந்தாள். கிரில்ட்ஸோவ் எதிர்பாராமல் சாகிறான் என்ற எண்ணம் வருத்தத்தை உண்டாக்கியது. காடுஷா, ஸைமன்ஸனைப் போன்ற ஒருவனுடைய காதலைப் பெற்று ஈடேற வழி தேடிக்கொண்டதைப்பற்றி அவனுக்குச் சந்தோஷம் ஏற்பட்டிருக்க வேண்டும். ஆனால் இதைப் பற்றியும் அடக்க முடியாத ஒரு வருத்தம் ஏற்பட்டது.

நகரில் அடிக்கும் ஒரு பெரிய வெண்கல மணியின் நடுங்கும் நாதம் அவர்கள் இருந்த இடத்தை எட்டியது. நிக்லியுடாவின் பக்கத்தில் இருந்த வண்டிக்காரனும் படகில் இருந்த மற்றவர்களும் சிலுவையைக் குறிப்பிட்டு வணங்கினர். ஆனால் ஒரு குள்ளக் கிழவன் மாத்திரம் இதைச் செய்யவில்லை. நிக்லியுடாவ் அவனை முதலில் கவனிக்கவில்லை. அவன் ஒட்டுப்போட்ட சட்டையும் அறுத்துத் தைத்த பூட்ஸும் அணிந்திருந்தான். அவன் முதுகில் ஒரு பையைச் சுமந்து கொண்டிருந்தான்.

"நீ ஏன் பிரார்த்தனை செய்யவில்லை கிழவா? நீ ஞான ஸ்நானம் பெறவில்லையா?" என்று கேட்டான் நிக்லியுடாவின் வண்டிக்காரன்.

"யாரைப் பிரார்த்திப்பது?" என்று கிழவன் அழுத்தந் திருத்தமாகக் கேட்டான்.

"யாரையா? கடவுளைத்தான்."

"அந்தக் கடவுள் எங்கே இருக்கிறார் என்பதைக் கொஞ்சம் காட்டு பார்ப்போம்" என்றான் கிழவன். அவன் பேச்சில் ஓர் உறுதி தொனித்தது. அதை வண்டிக்காரன் உணர்ந்தான். ஆனால் மற்றவர்களின் முன்னால் அவமானப் படாமலிருக்கும் பொருட்டு அவன் இதைக் காட்டிக் கொள்ளவில்லை. "எங்கேயா? ஸ்வர்க்கத்தில் தான் இருக்கிறார்" என்றான்.

"நீ அங்கு போயிருக்கிறாயா?" என்று கிழவன் கேட்டான்.

"நான் போயிருந்தாலும் போகாவிட்டாலும் நாம் கடவுளை வணங்க வேண்டுமென்பது எல்லாருக்கும் தெரியும்."

"கடவுளை ஒருவரும் பார்த்ததில்லை."

"உன்னுடையது என்ன மதம் தாத்தா?" என்று ஒருவன் கேட்டான்.

"ஒரு மதமும் இல்லை. நான் ஒன்றையும் நம்புவதில்லை. என்னைத் தவிர வேறு ஒருவர் மீதும் எனக்கு நம்பிக்கையில்லை" என்றான் கிழவன்.

நிக்லியுடாவும் இந்த சம்பாஷணையில் இறங்கி, "உன்னை மாத்திரம் நீ எப்படி நம்பலாம்? நீயும் தவறு செய்யக்கூடும்" என்றான்.

"என் வாழ்நாளில் நான் தவறு செய்ததேயில்லை" என்று தலையை ஆட்டிக்கொண்டே கிழவன் சொன்னான்.

"அப்படியானால் உலகத்தில் இத்தனை மதங்கள் இருப்பானேன்?" என்று நிக்லியுடாவ் கேட்டான்.

"ஜனங்கள் தங்களை நம்புவதில்லை. மற்றவர்களையே நம்புகிறார்கள். அதனால்தான் இவ்வளவு மதங்கள் இருக்கின்றன. நானும் அப்படித்தான் மற்றவர்களையே நம்பி மூழ்கிப் போனேன். மீள முடியும் என்ற நம்பிக்கையே இல்லாமல் போய்விட்டது. எல்லா மதங்களும் தங்களைத்தான் புகழ்ந்து கொள்கின்றன. அதனால்தான் குருட்டு நாய்களைப் போல அவை அலைகின்றன. பல மதங்கள் இருக்கின்றன. ஆனால் ஜீவன் ஒன்றே. எனக்குள்ளும், உனக்குள்ளும், அவனுக்குள்ளும் உள்ள ஆத்மா ஒன்றுதான். ஆகையால் ஒவ்வொருவரும் தங்களையே நம்பினால் எல்லாரும் ஒற்றுமையாகி விடுவார்கள். ஒவ்வொருவரும் தாங்கள் இருக்கவேண்டியபடி இருந்தால் ஒன்றாகி விடுவார்கள்" என்றான்.

கிழவன் உரக்கப் பேசினான். எத்தனை பேர் முடியுமோ அத்தனை பேர் தன் பேச்சைக் கேட்க வேண்டுமென்ற விருப்பத்தோடு அவன் அடிக்கடி தன்னைச் சுற்றிப் பார்த்துக் கொண்டான்.

"வெகு காலமாக உனக்கு இந்தக் கொள்கைதானா?"

"எனக்கா? ஆமாம்; இருபத்து மூன்று வருஷங்களாக என்னை ஹிம்ஸிக்கிறார்கள்."

"ஹிம்ஸிக்கிறார்களா? எப்படி?"

"கிறிஸ்து பெருமானை ஹிம்ஸித்தது போல என்னையும் ஹிம்ஸிக்கிறார்கள். என்னைப் பிடித்து கோர்ட்டிலும் பாதிரிகளின் முன்னிலையிலும் கொண்டு நிறுத்துகிறார்கள். ஒருமுறை என்னைப் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குக் கூட அனுப்பிவிட்

டார்கள். ஆனால் அவர்களால் என்னை ஒன்றும் செய்ய முடியவில்லை. நான் சுதந்திர புருஷன். 'உன் பெயர் என்ன?' என்று கேட்டார்கள். நான் பெயர் வைத்துக்கொள்வேன் என்று நினைத்தார்கள் போலும். ஆனால் நான் எல்லாவற்றையும் விட்டுவிட்டேன். பெயர் இல்லை, இடம் இல்லை, நாடு இல்லை, ஒன்றுமே இல்லை, நான் நான்தான். 'உன் பெயர் என்ன?' என்று கேட்டார்கள். 'மனிதன்' என்று பதில் அளித்தேன். 'உன் வயது என்ன?' என்றார்கள். 'நான் வயதை எண்ணுவதில்லை; எண்ணவும் முடியாது. நான் எப்பொழுதும் இருந்தேன். எப்பொழுதும் இருப்பேன்' என்றேன். 'உன் பெற்றோர் யார்?' என்று கேட்டார்கள். 'கடவுளும் பூமி தேவியும்தான்' என்று பதில் அளித்தேன். 'மன்னன்? மன்னனை நீ ஒப்புக்கொள்கிறாயா?' என்று கேட்டார்கள். 'ஏன் இல்லை? அவன் அவனுக்கு மன்னன். எனக்கு நான் மன்னன்' என்றேன். 'இவனோடு பேசிப் பயன் என்ன?' என்றார்கள். ஏன்னோடு பேசச் சொல்லி உங்களை வருந்தி அழைக்கவில்லை" என்றேன். உடனே என்னை ஹிம்ஸிக்கத் தொடங்கிவிட்டனர்.

"இப்பொழுது நீ எங்கே போய்க் கொண்டிருக்கிறாய்?" என்றான் நிக்லியுடாவ்.

"கடவுள் எனக்கு எங்கே வழி காட்டுகிறாரோ அங்கே. வேலை கிடைக்கும்பொழுது நான் வேலை செய்கிறேன். கிடைக்காதபொழுது பிச்சை எடுக்கிறேன்" என்றான் கிழவன்.

ஓடம் கரையை நெருங்குவதை நிக்லியுடாவ் கவனித்தான். உடனே பேசுவதை நிறுத்திவிட்டு அருகில் இருந்தவர்களை ஒரு வெற்றிப் பார்வை பார்த்தான்.

நிக்லியுடாவ் தன் பணப்பையை எடுத்து கிழவனிடம் கொஞ்சம் பணம் கொடுக்கக் கையை நீட்டினான்.

"இதையெல்லாம் நான் வாங்கிக் கொள்வதில்லை. ரொட்டியாக இருந்தால் வாங்கிக் கொள்வேன்" என்று சொல்லி மறுத்துவிட்டான்.

"அப்படியானால் என்னை மன்னிக்கவும்" என்று நிக்லியுடாவ் கேட்டுக் கொண்டான்.

"மன்னிப்பதற்கு ஒன்றுமில்லை. நீங்கள் என் மனத்தைப் புண்படுத்திவிடவில்லை. என்னைப் புண்படுத்த ஒருவராலும் முடியாது" என்று சொல்லிக் கொண்டே கிழவன் கீழே கழற்றி வைத்திருந்த பையை எடுத்துத் தோளில் மாட்டிக்கொண்டான்.

இதற்குள் நிக்லியுடாவ் வண்டியைக் கீழே இறக்கி குதிரையையும் பூட்டிவிட்டான் வண்டிக்காரன். ஓடக்காரனுக்கு நிக்லியுடாவ்

கூலி கொடுத்துவிட்டு மீண்டும் வண்டியில் ஏறிக் கொண்டான். "அவனை லக்ஷியம் செய்து நீங்கள் எப்படிப் பேசிக் கொண்டிருந்தீர்கள்? அவன் சுத்தப் பைத்தியக்காரன்" என்றான் வண்டிக்காரன்.

## 22

ஆற்றங் கரையைத் தாண்டியவுடன் வண்டிக்காரன் திரும்பி, "எந்த ஹோட்டலுக்குப் போக வேண்டும்?" என்று கேட்டான்.

"எது நல்ல ஹோட்டல்?"

"சைபீரியன் ஹோட்டல்தான் சிறந்தது. ஆனால் டுக்கோவ் ஹோட்டலும் மோசமில்லை."

"உனக்கு எது இஷ்டமோ அந்த ஹோட்டலுக்கு வண்டியை விடு."

வண்டிக்காரன் மறுபடியும் சரியாக உட்கார்ந்து வண்டியை வேகமாக ஓட்டினான். இந்த நகரமும் மற்ற நகரங்களைப் போலவே தான் இருந்தது. அதேமாதிரி வீடுகள், அதேமாதிரி கோவில், அதேமாதிரி கடைகள்; போலிஸ்காரர்கள் கூட அப்படியேதான். ஆனால் அனேகமாக எல்லா வீடுகளும் மரத்தினால் கட்டப்பட்டிருந்தன. தெருக்களுக்கு காரை போடப்படவில்லை. பெரிய தெருவில் இருந்த ஒரு ஹோட்டலுக்கு முன்னால் வண்டி நின்றது. ஆனால் அங்கு இடம் கிடைக்காததால் வேறொரு ஹோட்டலுக்கு வண்டியை விட்டான்.

இரண்டு மாதங்களுக்குப் பின், வசதிகளையும் சுத்தத்தையும் பொறுத்த வரையில், தனக்கு வழக்கமான சூழ்நிலையில் மீண்டும் நிக்லியுடாவ் இருந்தான். நிக்லியுடாவுக்கு விடப்பட்டிருந்த அறை சர்வ சாதாரணமாகத்தான் இருந்தது. இருந்தாலும், இரண்டு மாதமாக வண்டிகளிலும், கிராமாந்தர ஹோட்டல்களிலும் கைதி முகாம்களிலும் அவஸ்தைப்பட்ட அவனுக்கு இது அதிக வசதியாக இருந்தது. நன்றாகத் தேய்த்துக் குளிப்பது அவனுடைய முதல் வேலை. குளித்துவிட்டு வேறு உடை அணிந்து கொண்டு அந்த ஜில்லாவின் கவர்னரைப் பார்க்கப் புறப்பட்டான். ஹோட்டல்காரன் ஒரு வண்டி கொண்டுவரச் சொன்னான். நல்ல குதிரையாகையால் வண்டி வெகு சீக்கிரம் கவர்னரின் பிரம்மாண்ட வீட்டின் முன்னால் வந்து நின்றது. வீட்டு வாசலில் சில காவற்காரர்களும் ஒரு போலீஸ்காரனும் நின்றிருந்தனர். வாசலிலும் புழக்கடையிலும் தோட்டம் இருந்தது. நிக்லியுடாவ்

தன் விலாசம் அடங்கிய ஒரு கார்டை ஒரு வேலைக்காரன் மூலம் உள்ளே அனுப்பினான். வேலைக்காரன் திரும்பிவந்து நிக்லியுடாவை உள்ளே வருமாறு அழைத்தான்.

அந்த ஜெனரல் தடியன் நிக்லியுடாவ் போனபோது அவன் உடை அணியும் கருப்புப்பட்டு கௌனோடு இருந்தான். அவன் நிக்லியுடாவைக் கண்டவுடன், "இந்த கௌனோடு இருப்பதற்காக மன்னிக்கவும். 'பார்க்க முடியாது' என்று சொல்லி அனுப்பிவிடுவதைவிட இப்படிப் பார்ப்பது மேலில்லையா? எனக்கு உடம்பு சரியாக இல்லை; ஆகையால் எங்கும் வெளியேபோகவில்லை; இந்த வனாந்தரப் பிரதேசத்திற்கு நீங்கள் வந்த காரியமென்ன?" என்றான்.

"ஒரு கைதிகளின் கூட்டத்தோடு நான் வருகிறேன். அவர்களில் ஒரு கைதியோடு எனக்கு நெருங்கிய சம்பந்தம் உண்டு. இந்தக் கைதி விஷயமாகவும் வேறொரு காரியமாகவும் உங்களிடம் வந்தேன்" என்று நிக்லியுடாவ் பதில் அளித்தான்.

ஜெனரல் ஒரு முறை புகையை இழுத்து ஒரு படலத்தை வெளியே விட்டான். ஒருவாய் தேநீர் குடித்தான். சிகரெட்டை சாம்பல் கிண்ணத்திற்குள் போட்டுவிட்டு நிக்லியுடாவ் சொல்வதைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தான்.

இந்த ஜெனரல், ராணுவத்தினருக்குள் பண்பட்ட கோஷ்டியைச் சேர்ந்தவன். தன் தொழிலில் முற்போக்கான அபிப்பிராயங்களை அனுமதிக்கலாம் என்பது அவனுடைய கருத்து. இயற்கையில் அவன் மிகவும் நல்லவன். கெட்டிக்காரன். ஆகையால் இத்தகைய அபிப்பிராயங்களைச் சகிப்பது கஷ்டமாகத் தோன்றியது. இதை மறப்பதற்காகக் குடிப் பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டான். இருபத்தைந்து வருஷ ராணுவ சேவைக்குப்பின் அவன் மதுவிலேயே மூழ்கிப் போய் விட்டான். ஆனால் குடித்து நன்றாகப் பழகிவிட்டதால் சுற்றி விழுவதில்லை; விசேஷப் பிதற்றல் ஒன்றையும் உளறுவதில்லை. எப்பொழுதாவது பிதற்றினாலும் அவனுடைய அந்தஸ்தை முன்னிட்டு அதை ஆழ்ந்த கருத்தாக நினைத்துக் கொள்வார்கள். காலையில் நிக்லியுடாவ் அவனைப் பார்க்கச் சென்றபொழுது மிகவும் வினயமாகவே நடந்து கொண்டான். அவன் குடிகாரன் என்பது மேல் அதிகாரிகளுக்குத் தெரியும். ஆனால் மற்றவர்களைக் காட்டிலும் அவன் படித்திருந்தான். குடிப்பழக்கம் அவனைப் பற்றிக்கொண்டவுடன் அவன் படிப்பு நின்று விட்டது. இருந்தாலும் குடி மயக்கத்தில் கூட அவன் திறமையாக நடந்து கொண்டான். அதனால்தான் இவ்வளவு பொறுப்பான உத்தியோகத்தில் அவனை வைத்திருந்தார்கள்.

தான் சொன்ன கைதி ஒரு பெண் என்றும், அவள் தவறாக தண்டிக்கப்பட்டிருப்பதாகவும் அவள் சார்பாக மன்னருக்கு ஒரு மனு அனுப்பி யிருப்பதாகவும் நிக்லியுடாவ் சொன்னான்.

"சரி, பிறகு?" என்று கேட்டான் ஜெனரல்.

"அவன் கதியைப் பற்றி ஒரு மாதத்திற்குள் இந்த இடத்திற்குத் தகவல் அனுப்புவதாக பீடர்ஸ் பர்க்கில் அதிகாரிகள் வாக்களித்தார்கள்—"

ஜெனரல் வேலைக்காரனை அழைக்க மணியை அடித்தான். அடிக்கடி சிகரெட் புகையை ஊதிக் கொண்டே உரக்க இருமினான்.

"ஆகையால் இந்தக் கைதியின் மனுவுக்கு பதில் கிடைக்கும் வரை அவனை இங்கேயே நிறுத்தி வைக்க வேண்டும்" என்றான் நிக்லியுடாவ்.

அதற்குள் வேலைக்காரன் வந்தான்.

"அன்னுவாஸிலியெவ்னு எழுந்து விட்டாளா என்று விசாரி. இன்னும் கொஞ்சம் டீ கொண்டுவா" என்று சொல்லிவிட்டு ஜெனரல் நிக்லியுடாவின் பக்கம் திரும்பி, "அப்புறம்?" என்று கேட்டான்.

"என்னுடைய மற்றொரு வேண்டுகோள் ஓர் அரசியல் கைதியைப் பற்றியது. அவனும் இந்த கோஷ்டியிலேயே தான் இருக்கிறான்."

"அப்படியா?" என்று தலையை அர்த்த புஷ்டியுடன் ஆட்டிக் கொண்டே கேட்டான் ஜெனரல்.

"அவன் ரொம்பவும் அசௌக்கியமாக இருக்கிறான்—செத்துக்கொண்டே இருக்கிறான் என்று கூடச் சொல்லாம். அவனை அநேகமாக இங்கு ஆஸ்பத்திரியில் விடுவார்கள். ஆகையால் ஒரு பெண் அரசியல் கைதி அவனோடு தங்கியிருக்க அனுமதிக்க வேண்டும்."

"அவள் அவனுக்கு உறவு இல்லையா?"

"இல்லை. ஆனால் அவனோடு தங்கியிருப்பதற்கு அவசியமானால் அவனைக் கல்யாணம் செய்து கொள்ளவும் தயாராக இருக்கிறாள்."

ஜெனரல் தன் பளபளக்கும் கண்களால் நிக்லியுடாவையே அசையாமல் பார்த்துக்கொண்டு புகை குடித்துக் கொண்டிருந்தான். நிக்லியுடாவ் பேசி முடித்தவுடன் ஒரு புத்தகத்தை எடுத்து அவசர அவசரமாகப் பக்கங்களைத் திருப்பி விவாகம் சம்பந்தமான விதிகளைப் பார்த்தான். பிறகு புத்தகத்திலிருந்து பார்வையை உயர்த்தி, "அவளுக்கு என்ன தண்டனை!" என்று கேட்டான்.

"அவளுக்கா? கடுங்காவல் தண்டனை."

"அப்படியானல் அந்த தண்டனை பெற்றவள் விவாகம் செய்து கொள்வதால் நிலைமை மாருது."

"சரி, ஆனல்—"

"மன்னிக்க வேண்டும். சுயோச்சையாக இருக்கும் ஒருவன் அவளை மணந்து கொண்டால்கூட அவள் தண்டனையை அனுப வித்தாக வேண்டும். இப்படிப்பட்ட விஷயங்களில், யாருடைய தண்டனை அதிகக் கடுமையானது? அவனுடையதா, 'அவ ளுடையதா?' என்பதுதான் பிரச்சனை."

"அவர்கள் இரண்டு பேருமே கடுங்காவல் தண்டனைதான் பெற்றிருக்கிருர்கள்."

"அவனுடைய கஷ்டத்தைக் குறைக்க என்ன செய்ய முடியுமோ அதைச் செய்வார்கள். ஆனல் அவள் அவனை மணந் தால்கூட அவனை விட்டுவிட்டுப் போகமாட்டார்கள்—"

இதற்குள் வேலைக்காரன் வந்து, "எஜமானியம்மாள் காப்பி குடித்துக்கொண்டிருக்கிருர்கள்" என்று அறிவித்தான்.

ஜெனரல் "சரி", என்று தலையை ஆட்டிவிட்டு மறுபடியும் பேசத் தொடங்கினன். "எதற்கும் நான் யோசிக்கிறேன். அவர் களுடைய பெயர் என்ன? இப்படி எழுதிக்கொடுங்கள்" என்ருன். அவர்களுடைய பெயர்களை நிக்லியுடாவ் எழுதிக் கொடுத்தான்.

இறந்து கொண்டிருந்த கைதியைச் சந்திக்க நிக்லியுடாவ் அனுமதி கேட்டான்.

"அதுவும் என்னல் சாத்தியமில்லை. உங்களைப்பற்றி நான் சந்தேகப்படவில்லை. அவனிடமும் மற்றவர்களிடமும் நீங்கள் அக்கறை கொண்டிருக்கிறீர்கள். உங்களிடம் பணமும் இருக்கிறது. பணத்தைக் கொண்டு நீங்கள் என்ன வேண்டுமானலும் செய்து விடலாம். 'லஞ்சத்தை ஒழி' என்கிருர்கள். எல்லாரும் லஞ்சம் வாங்கும்பொழுது அதை எப்படி ஒழிப்பது? உத்தியோகஸ்தர் களின் அந்தஸ்து குறையக் குறைய லஞ்சம் வாங்க அதிகத் தயாராக இருக்கிருர்கள். மூவாயிரம் மைல்களுக் கப்பால் இங்கு நடப்பதை எப்படிக் கண்டு பிடிப்பது? அங்கு ஒவ்வொரு அதிகாரியும் ஒவ்வொரு குட்டி சக்ரவர்த்தி—இங்கு நான் இருப் பதைப்போல. நீங்கள் அரசியல் கைதிகளைச் சந்தித்திர்கள் போலிருக்கிறது. பணம் கொடுத்து அனுமதி பெற்றிருப் பீர்கள். இல்லையா?" என்று சிரித்துக்கொண்டே ஜெனரல் கேட்டான்.

"ஆமாம்."

"நீங்கள் அப்படித்தான் செய்ய வேண்டி யிருந்திருக்கும் என்பது எனக்குத் தெரியும். நீங்கள் ஓர் அரசியல் கைதியின்

மீது அநுதாபம் கொண்டு அவனைப் பார்க்க விரும்புகிறீர்கள். இன்ஸ்பெக்டர் அல்லது காவல் சோல்ஜருக்கு ஒரு நாளைக்கு ஒரு ஷில்லிங் சம்பளம்தான் கிடைக்கிறது. அவர்கள் ஒவ்வொருவரையும் ஒவ்வொரு குடும்பம் நம்பியிருக்கிறது. அதனால்தான் வாங்கிக் கொள்கிறார்கள். அவர்களுடைய நிலைமையிலும் உங்களுடைய நிலைமையிலும் நான் இருந்தால் நானும் அப்படித்தான் செய்வேன். ஆனால் என்னுடைய நிலைமையில் சட்டத்தைவிட்டு நான் ஒரு அங்குலம்கூடப் பிசக விரும்பவில்லை. நம்பகமான ஸ்தானத்தில் என்னை நியமித்திருக்கிறார்கள். என்னிடம் ஒப்படைத்திருக்கும் கடமைகளை நான் செய்ய வேண்டும்.—சரி, அந்த விஷயம் முடிந்துவிட்டது. பட்டணத்தில் என்ன நடக்கிறது சொல்லுங்கள்" என்றான் ஜெனரல். நிக்லியுடாவை அவன் பல கேள்விகள் கேட்டான். தனக்குத் தெரிந்தவற்றையும் சொன்னான். விஷயங்களைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆவலும் மேதையும் தனக்கு இருப்பதாகக் காட்டிக்கொள்ள விரும்பினான்.

# 23

நிக்லியுடாவிடம் ஜெனரல் விடை பெற்றுக் கொள்ளும் பொழுது, "நீங்கள் எங்கே தங்கியிருக்கிறீர்கள்? டுக்கோவ் ஹோட்டலிலா? அங்கு மிகவும் கஷ்டமாக இருக்குமே! ஐந்து மணிக்கு இங்கு சாப்பிடலாம். உங்களுக்கு ஆங்கிலம் பேசத் தெரியுமா?" என்று ஜெனரல் கேட்டான்.

"தெரியும்."

"ரொம்ப சரி; ஆங்கிலேய யாத்திரிகர் ஒருவர் வந்திருக்கிறார். போக்கு வரவு விஷயங்களை அவர் ஆராய்ந்துகொண்டிருக்கிறார். சைபீரிய சிறைகளையும் அவர் பார்வையிடுகிறார். இன்று இரவு இங்கு சாப்பிட வருகிறார். ஆகையால் நீங்கள் கட்டாயம் வந்து அவரைச் சந்திக்க வேண்டும். ஐந்து மணிக்கு விருந்து ஆரம்பமாகிறது. நேரம் தவறாமல் இருக்க வேண்டுமென்று என் மனைவி எதிர்பார்க்கிறாள். அந்தப் பெண்ணைப் பற்றியும் நோயாளியைப் பற்றியும் அப்பொழுது நானும் பதில் அளிக்கிறேன். அவர்களில் யாரையாவது விட்டு விட்டுப்போக ஏற்பாடு செய்ய முடியுமென்றுதான் நினைக்கிறேன்" என்றான்.

நிக்லியுடாவ் அங்கிருந்து புறப்பட்டு நேராகத் தபால் ஆபீஸுக்குச் சென்றான். அவன் மனம் உற்சாகமாக இருந்தது.

தபாலாபீஸில் ஜன்னல்களுக்குப் பின்னால் பல உத்தியோகஸ்தர்கள் உட்கார்ந்திருந்தனர். ஒருவன் தலையைச் சற்று சாய்த்துக்கொண்டு பட படவென்று கடிதங்களுக்கு முத்திரை

விட்டுக் கொண்டிருந்தான். நிக்லியுடாவ் தன் பெயரை அறி வித்தவுடன் அவன் விலாசத்திற்கு வந்திருந்த எல்லாவற்றை யும் அவனிடம் கொடுத்து விட்டார்கள். ஏராளமாகக் கடிதங் களும் பணமும் புத்தகங்களும், "ஐரோப்பியத் தூதன்" பத்திரி கையின் கடைசி இதழும் வந்திருந்தன. நிக்லியுடாவ் அவற்றை ஒரு பெஞ்சுக்கு எடுத்து சென்று ஒழுங்கு படுத்தத் தொடங்கி னான். அந்த பெஞ்சில் ஒரு சோல்ஜர் கையில் ஒரு புத்தகத் துடன் உட்கார்ந்திருந்தான். அவற்றில் உயர்ந்த கவரில் ரிஜிஸ் தர் கடிதம் ஒன்று வந்திருந்தது. அதில் பிரகாசமான சிவப்பு அரக்கு ஸீல்கள் பதிக்கப்பட்டிருந்தன. ஸீலை உடைத்துக் கவ ரைப் பிரித்துப் பார்த்தான். ஸெலெனிடமிருந்து ஏதோ சர்க் கார் தஸ்தாவேஜுகள் வந்திருந்தன. ரத்தம் குப்பென்று அவன் முகத்திற்குப் பாய்வதை உணர்ந்தான். காடூஷாவின் மனு வுக்கு அது பதில். பதில் என்னவாக இருக்கும்? மனுவை நிரா கரித்திருக்கமாட்டார்களோ? பொடிப் பொடியான எழுத்தால் கடிதம் எழுதப்பட்டிருந்தது. அதை நிக்லியுடாவ் அவசர அவ சரமாகப் படித்தான். திருப்தியுடன் பெருமூச்சு விட்டான். சாதகமான பதில்தான் கிடைத்திருந்தது.

"நண்பா! நாம் கடைசியாக நடத்திய சம்பாஷணை நம் மனத் தைக் கவர்ந்து விட்டது. காடூஷா விஷயத்தில் நீ சொன்னது சரி. வழக்கை நான் ஜாக்கிரதையாக கவனித்தேன். அவளுக்கு பயங் கரமான அநீதி செய்யப்பட்டுவிட்டது. இதை மாற்றுவதற்கு அப்பீல் கமிட்டியில் என்னால் முடிந்ததைச் செய்தேன். தண்டனை குறைக்கப்பட்டிருக்கிறது. அது சம்பந்தமான தஸ்தாவேஜுகள் நகலை இதோடு வைத்து அனுப்பியிருக்கிறேன். உன் சித்தி காதரின் ஐவனோவ்னா உன் விலாசத்தைக் கொடுத்தாள். காடூ ஷாவைக் கைது செய்த இடத்திற்கு உத்தரவு அனுப்பியிருக் கிறார்கள். அங்கிருந்து சைபீரியாவில் உள்ள பிரதான சர்க்கார் காரியாலயத்திற்குக் கூடிய சீக்கிரம் வருமென்று நம்புகிறேன். இந்த சந்தோஷ சமாசாரத்தை உனக்கு சீக்கிரம் தெரியப்படுத்த வேண்டுமென்பதற்காக இதை எழுதுகிறேன்" என்று ஸெலெனின் எழுதியிருந்தான்.

"காடூஷாவின் கடுங்காவல் தண்டனை, சைபீரியாவில் அரு காமையில் உள்ள இடத்திற்கு பிரவாசமாகக் குறைக்கப்பட்டிருக் கிறது" என்று உத்தரவில் கூறியிருந்தது.

இந்தச் செய்தி நிக்லியுடாவுக்குச் சந்தோஷ மளித்தது. அவன் விரும்பியது நடந்துவிட்டது. இப்பொழுது புதிய சிக் கல்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பது உண்மைதான். அவள் கைதியாக இருந்தபொழுது அவளை விவாகம் செய்து கொள்வதில் அர்த்தமில்லை. இப்பொழுது அவளோடு சேர்ந்து அவன் வாழ்க்கை நடத்துவதை ஒருவரும் தடுக்க முடியாது. ஆனால் ஸைமன்ஸனோடு அவன் கொண்டிருந்த உறவு என்னவது?

# 24

[illegible]

[illegible] பழைய வாழ்க்கை அவன் ஞாபகத்திற்கு வந்தது.

“இப்பொழுது இதை மறந்துவிட வேண்டும்” என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டு காரோட்டியைத் தன் மனத்தைவிட்டு அகற்றினான். “நேரம் வரும்போது பார்த்துக் கொள்கிறேன்” என்று தனக்குள் நினைத்துக்கொண்டு ஜெனரலோடு என்ன பேச வேண்டும் என்பது பற்றி ஆலோசித்தான்.

பெரிய பணக்காரர்களின் வீடுகளுக்கே உரிய முறையில் விருந்து ஆடம்பரமாக நடைபெற்றது. நிக்லியுடாவ் சாதாரண வசதிகளை அனுபவித்துக்கூட அதிக காலம் ஆகிவிட்டது. ஆகையால் இந்த விருந்தை அவன் நன்றாக ரசித்தான்.

ஜெனரலின் மனைவி பெரிய சாங்கிக்காரி. ஆளுக்குத்தக்க படி நடந்து கொண்டாள். தன் குடும்பத்தைச் சேர்ந்தவனை வரவேற்பதுபோல நிக்லியுடாவை அவள் வரவேற்றாள். அசாத்தியமாக முகஸ்துதி செய்தாள். இதைக் கேட்டபொழுது நிக்லியுடாவ் மீண்டும் தன் பெருமைகளை உணர்ந்தான். இது அவனுக்குத் திருப்தியை அளித்தது. அவன் சைபீரியாவுக்கு வந்த தன் மஹத்தான நோக்கம் தனக்குத் தெரியுமென்றும், அவன் ஒரு அசாதாரண மனிதன் என்றும் அவன் சொன்னான். இந்த நாசூக்கான முகஸ்துதிக்கும் ஜெனரலின் விட்டு ஆடம்பரங்களுக்கும் அவன் பலியாகி விடுவான் போலிருந்தது. அவர்கள் பழகிய முறையையும், அங்கு இருந்த சௌகரியங்களையும் பார்த்த

கோளின் பேரில் வீட்டுக்காரி பியானோ வாசிக்கத் தொடங்கினாள். இத்தனை நாளாக அவன் அனுபவிக்காத ஆத்ம திருப்தி மறுபடியும் அவனுக்கு ஏற்பட்டது.

ஜெனரலின் மனைவிக்கு நிக்லியுடாவ் நன்றி செலுத்திவிட்டு புறப்படும் சமயத்தில் அவளுடைய பெண் அங்கு வந்து "என் குழந்தைகளைப்பற்றி கேட்பீர்களே, பார்க்கிறீர்களா?" என்று கேட்டாள். அதற்குள் அவளுடைய தாய் குறுக்கிட்டு, "எல்லாருக்கும் உன் குழந்தையைப் பற்றித்தான் கவலையா?" என்று தன் பெண்ணைப் பார்த்து சிரித்துக் கொண்டே கேட்டாள்.

"இல்லவே யில்லை; நிச்சயமாக எனக்கு பார்க்க வேண்டும் என்ற ஆவல் உண்டு. பார்த்துவிட்டுத்தான் போகப் போகிறேன்" என்று சொல்லிவிட்டு நிக்லியுடாவ அந்தப் பெண்ணோடு கூடவே சென்றான். அந்த இளம் பெண்ணின் தூய அன்பு அவன் மனத்தைத் தொட்டது. சீட்டாடிக் கொண்டிருந்த ஜெனரல் இதைப் பார்த்துவிட்டு, "தன் குழந்தைகளைக் காட்டப் போகிறாள் பாருங்கள்!" என்று சொல்லி உரக்கச் சிரித்தான்.

குழந்தைகள் இருந்த அறைக்கு இருவரும் சென்றார்கள். ஒரு கட்டிலில் இரண்டு வயதுப் பெண் குழந்தை ஒன்று அமைதியாகத் தூங்கிக் கொண்டிருந்தது. குழந்தையின் சின்னஞ் சிறு வாய் சற்றுத் திறந்திருந்தது. அதன் சுருட்டை மயிர் தலையணை மீது புரண்டு கொண்டிருந்தது.

"இவள் தான் காடி" என்று சொல்லிக் கொண்டே தாய் அதன் போர்வையைச் சரிப்படுத்தினாள். குழந்தை தூக்கத்தில் தன் சின்னக் காலை நீட்டியது. "இவள் நன்றாக இல்லை? இரண்டு வயதுதான் ஆகிறது" என்றாள் குழந்தையின் தாய்.

"மிகவும் அழகாக இருக்கிறாள்."

"இவனை வாஸுக் என்று அவனுடைய தாத்தா அழைக்கிறார். இவன் முற்றிலும் வேறுவிதம். அசல் சைபீரியாக்காரனைப் போலவே இல்லையா?"

குழந்தை கவிழ்ந்து படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தது. அதைப் பார்த்துக் கொண்டே, "நல்ல பையன்" என்றான் நிக்லியுடாவ்.

தாய், "ஆமாம்" என்று சொல்லிவிட்டுப் பெருமையோடு புன்முறுவல் பூத்தாள்.

மொட்டையடித்த தலைகளையும் சச்சரவுகளையும், விபசாரச் செயல்களையும், இறந்து கொண்டிருந்த கிரில்ட்ஸோவையும், காடுஷாவையும், அவளுடைய பழைய வாழ்க்கையையும் நிக்லி

யுடாவ் நினைத்துப் பார்த்தான். அவனுக்கு பொருமை ஏற்பட்டது. இங்கு தான் கண்ட புனிதமான அன்புக்கு அவன் ஆசைப்பட்டான்.

குழந்தைகளை நிக்லியுடாவ் வாயாரப் புகழ்ந்தான். அவற்றின் தாயை ஓரளவுக்காவது அவன் திருப்தி செய்தான். பிறகு அவளோடு வெளியே வந்தான். சிறைக்குப் போக ஆங்கிலேயன் காத்துக்கொண்டிருந்தான். இருவரும் விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டனர்.

காலநிலை மாறிவிட்டது. கடுமையாகப் பனி அடித்துக்கொண்டிருந்தது. தரை, மரங்கள், வீடுகள் எல்லாவற்றின் மீதும் பனி படிந்துவிட்டது. இருவரும் இரு தனி வண்டிகளில் ஏறிக்கொண்டு புறப்பட்டனர். விருப்பமில்லாத ஒரு கடமையை நிறைவேற்றப் போவது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. பனிக் கட்டியில் வண்டி நிதானமாகச் சென்றது.

## 25

எங்கும் வெள்ளை வெளேரென்று படிந்திருந்த பனியின் மத்தியில் சிறையின் வழக்கமான இருள் இன்னும் அதிகமாகத் தெரிந்தது. சிறை இன்ஸ்பெக்டர் வந்து அவர்களிடமிருந்த அனுமதிச் சீட்டை வாங்கி மங்கலான விளக்கு வெளிச்சத்தில் படித்துப் பார்த்தான். ஆச்சரியத்தினால் தோளை ஒரு முறை குலுக்கிக்கொண்டான். ஆனால் அந்த உத்தரவுக்குக் கீழ்ப்படிந்து அவர்களைத் தன்னோடு அழைத்துச் சென்றான். இன்ஸ்பெக்டரின் ஆபீஸ் அறைக்குள் சென்றனர். அங்கு அவர்களை உட்காரச் சொல்லிவிட்டு அவர்களுக்கு என்ன வேண்டுமென்று இன்ஸ்பெக்டர் கேட்டான். காடுஷாவை உடனே பார்க்க விரும்புவதாக நிக்லியுடாவ் சொன்னான். அவளை அழைத்து வருமாறு ஒரு ஆளிடம் இன்ஸ்பெக்டர் சொல்லி அனுப்பினான். பிறகு ஆங்கிலேயன் இன்ஸ்பெக்டரைச் சில கேள்விகள் கேட்டான். அவற்றிற்கு இன்ஸ்பெக்டர் பதில் அளித்தான். இவர்களுக்கிடையில் நிக்லியுடாவ் துபாஷியாக இருந்தான். "எத்தனைக் கைதிகள் இருப்பதற்காக இந்தச் சிறை கட்டப்பட்டது? இதில் எத்தனைபேர் இருக்கிறார்கள்? எத்தனை ஆண்கள்? எத்தனை பெண்கள்? எத்தனை குழந்தைகள்? எத்தனை நோயாளிகள்? தீவாந்திர சிக்ஷை பெற்றவர்கள் எத்தனை பேர்? சுரங்க தண்டனை பெற்றவர்கள் எத்தனை பேர்? என்று கேள்விகளை அடுக்கினான் ஆங்கிலேயன். அவற்றின் அர்த்தத்தைப் பற்றிக் கவலைப்படாமல் நிக்லியுடாவும் மொழி பெயர்த்தான். அடுத்தபடி காடுஷாவுடன் நடக்கவிருந்த

அவள் துக்கத்தை அடக்கிக்கொண்டு, "கிரில்ட்ஸோவ் மிகவும் பலவீனமாக இருக்கிறார். சிறை ஆஸ்பத்திரிக்கு அனுப்பி யிருக்கிறார்கள். மேரிபாவ்லோவ்னா ரொம்பவும் கவலைப்படுகிறாள். ஆஸ்பத்திரியில் அவரோடு இருக்க அவளுக்கு அனுமதி கிடைக்க வில்லை" என்றாள்.

நிக்லியுடாவுக்காக ஆங்கிலேயன் காத்திருப்பதை காடுஷா கவனித்து, "நான் போய் வரட்டுமா?" என்றாள்.

"இறுதியாக உத்தரவு கொடுக்க நான் விரும்பவில்லை. மறு படியும் உன்னைச் சந்திக்கிறேன்" என்றான்.

"என்னை மன்னியுங்கள்" என்று தாழ்ந்த குரலில் கூறினாள். அவள் சொன்னது சரியாகக்கூடக் காதில் விழவில்லை.

அவளுடைய பரிதாபப் பார்வையையும், போய் வருகிறேன் என்று சொல்லாமல் 'மன்னியுங்கள்' என்று சொன்னதையும் நிக்லியுடாவ் கவனித்தான். "என்னை நேசிக்கத்தான் செய்கி றாள். ஆனால் என்னோடு வந்து என் வாழ்க்கையைக் கெடுக்கக் கூடாது என்று நினைக்கிறாள். ஸைமன்ஸனோடு தான் சென்று எனக்கு விடுதலை அளிக்க விரும்புகிறாள். தான் நினைத்தபடி செய்வதற்காக அவள் சந்தோஷப்பட்டாள். ஆனால் என்னை விட்டு பிரிவதற்காக வருந்துகிறாள்" என்று அவனுக்குத் தோன்றியது.

காடுஷா அவன் கையைக் குலுக்கிவிட்டு விட்டு வேகமாகப் போய்விட்டாள்.

நிக்லியுடாவ் புறப்படுவதற்குத் தயாராகிவிட்டான். ஆனால் ஆங்கிலேயன் ஏதோ எழுதிக்கொண்டிருந்ததால் அவனைத் தொந் தரவு செய்யவில்லை. சுவற்றின் பக்கத்தில் இருந்த ஒரு ஆசனத் தில் உட்கார்ந்தான். தூக்கமற்ற இரவினாலோ பிரயாணத்தி னாலோ அவனுக்கு அலுப்புத் தட்டவில்லை. வாழ்க்கையே அவ னுக்கு அலுப்பாக இருக்கிறது. பெஞ்சின் பின்புறத்தில் சாய்ந்து கொண்டு கண்ணை மூடிக்கொண்டான். நல்ல தூக்கத்தில் ஆழ்ந்துவிட்டான்.

"சிறைக்குள் வந்து பார்க்கிறீர்களா?" என்று இன்ஸ்பெக்டர் கேட்டான்.

நிக்லியுடாவ் கண் விழித்துப் பார்த்தான். தான் சிறையி லேயே இருப்பதைக் கண்டு ஆச்சரியமடைந்தான்.

ஆங்கிலேயன் சிறைக்குள் சென்று பார்க்கப் புறப்பட்டான். அலுப்புடன் நிக்லியுடாவும் அவனைத் தொடர்ந்து சென்றான்.

# 26

நிக்லியுடாவும் ஆங்கிலேயனும் இன்ஸ்பெக்டரோடு முதல் வார்டில் பிரவேசித்தார்கள். கடுங்காவல் தண்டனைப் பெற்ற கைதிகள் அடைபட்டிருந்தார்கள். ஹாலில் மத்தியில் இருந்த படுக்கைகளில் சுமார் எழுபது கைதிகள் படுத்திருந்தனர். இவர்கள் வந்தவுடன் எல்லாக் கைதிகளும் சட்டென எழுந்து தங்கள் படுக்கைகளின் பக்கத்தில் நின்றனர். கடும் ஜுரத்தோடு இருந்த ஒரு இளைஞனும் முனகிக் கொண்டிருந்த ஒரு கிழவனும் மாத்திரம் எழுந்திருக்கவில்லை.

"இந்த இளைஞன் நீண்ட நாளாக அசௌக்கியமாக இருக்கிறானா?" என்று ஆங்கிலேயன் கேட்டான்.

"இளைஞனுக்கு இன்று காலை முதல் தான் ஜுரம் அடிக்கிறது. ஆனால் கிழவன் வயிற்று வலியினால் அதிக நாளாகக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறான். ஆஸ்பத்திரியில் இடம் இல்லாததால் இவர்களை அனுமதிக்க முடியவில்லை" என்று இன்ஸ்பெக்டர் பதில் அளித்தான். ஆங்கிலேயன் அதை ஏற்காதது போல் தலையை ஆட்டினான். "இவர்களுக்குச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். அதைச் சற்று மொழி பெயர்த்துச் சொல்லுங்கள்" என்று நிக்லியுடாவைக் கேட்டுக்கொண்டான். சைபீரியா சிறைகளைப் பார்வையிடுவதோடு மற்றொரு காரியத்தையும் அவன் செய்து வந்ததாகத் தோன்றியது. மோக்ஷம் அடைவதற்கான வழியையும் அவன் கைதிகளுக்கு உபதேசம் செய்து வந்தான்!

"உங்களையெல்லாம் கிறிஸ்துபிரான் நேசிக்கிறார். உங்களிடம் அனுதாபப் படுகிறார். உங்களுக்காகத்தான் அவர் உயிர் துறந்தார். இதை நம்பினால் உங்களுக்கு கதிமோக்ஷம் கிடைக்கும்" என்றான். கைதிகள் மௌனமாகக் கேட்டனர். அவன் மறுபடியும் தொடர்ந்து, "இந்தப் புத்தகத்தில் எல்லாம் இருக்கிறது. உங்களுக்கு படிக்கத் தெரியுமா?" என்று கேட்டான்.

படிக்கத் தெரிந்தவர்கள் அங்கு இருபது பேர் இருந்தார்கள். பைபிளை அவர்களிடம் கொடுத்தான். முதல் வார்டைப்போலவே தான் இரண்டாவது வார்டும் இருந்தது. இங்கு மூன்று பேர் நோயாக இருந்தனர். ஆங்கிலேயன் முதல் வார்டில் செய்தது போலவே இங்கும் செய்தான். மூன்றாவது வார்டில் நான்கு பேர் அசௌக்கிய முற்றிருந்தனர். "நோயினால் கஷ்டப்படுகிறவர்களையெல்லாம் ஏன் ஒரே இடத்தில் விடவில்லை?" என்று ஆங்கிலேயன் கேட்டான்.

"அவர்களே அதற்கு இஷ்டப்படவில்லை. இது தொத்து நோயல்ல. டாக்டர் வந்து இவர்களைப் பார்த்துக் கொள்கிறார்" என்று இன்ஸ்பெக்டர் பதிலளித்தான்.

"டாக்டர் இங்கு அடியெடுத்து வைத்து இரண்டு வாரம் ஆகிறது" என்று முணுமுணுத்தது ஒரு குரல்.

இன்ஸ்பெக்டர் பதில் ஒன்றும் சொல்லவில்லை. அவர்களை வேறு வார்டுக்கு அழைத்துச் சென்றான். மற்ற வார்டுகளையும் அவர்கள் பார்வையிட்டனர். பசி, குளிர், சோம்பேறித்தனம் முதலியவற்றினால் கஷ்டப்படும் கைதிகளைக் காட்டு மிருகங்களைக் காட்டுவதுபோல் அவர்களுக்குக் காட்டினான் இன்ஸ்பெக்டர். ஆங்கிலேயன் உத்தேசித்த அளவு புத்தகங்களை வினியோகித்த பின் மேற்கொண்டு புத்தகங்கள் கொடுப்பதை நிறுத்திவிட்டான். உபதேசமும் செய்வதில்லை. இன்ஸ்பெக்டர் சொன்னவற்றை சரி சரி என்று கேட்டுக்கொண்டே போனான்.

கனவில் உலாவுவதுபோல் நிக்லியுடாவ் அவனைத் தொடர்ந்து சென்றான். ஆங்கிலேயனோடு போக மறுக்கவும் அவனால் முடிய வில்லை. போகவும் விரும்பவில்லை. அவ்வளவு அலுப்பாக இருந்தது அவனுக்கு.

## 27

அன்று காலை ஆற்றைக் கடக்கும் பொழுது தான் சந்தித்த விசித்திரக் கிழவனை ஒரு வார்டில் பார்த்தபொழுது நிக்லியுடாவ் ஆச்சரிய மடைந்தான். அங்கு வந்தவர்களைக் கிழவன் கடுகடுப்புடன் பார்த்தான். மற்றக் கைதிகளெல்லாம் எழுந்து நின்றும் அவன் மாத்திரம் உட்கார்ந்து கொண்டே யிருந்தான்.

"எழுந்திரு" என்று அவனுக்கு இன்ஸ்பெக்டர் உத்தர விட்டான்.

"தங்கள் வேலைக்காரர்களெல்லாம் தங்களுக்கெதிரே நின்று கொண்டிருக்கிறார்கள். நான் தங்கள் வேலைக்காரனல்ல......" என்று இன்ஸ்பெக்டரின் முகத்திற்கு நேராக தன் விரலால் சுட்டிக் காட்டிக்கொண்டே கிழவன் சொன்னான்.

"என்...ன?" என்று சொல்லி அவனை அணுகினான் இன்ஸ் பெக்டர்.

அதற்குள் நிக்லியுடாவ் குறுக்கிட்டு, "அந்தக் கிழவன் எனக்குத் தெரிந்தவன். அவனை எதற்காகச் சிறையில் அடைத்து வைத்திருக்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"பாஸ்போர்ட் இல்லையென்று போலிசார் அவனை இங்கே அனுப்பி யிருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்களை அனுப்ப வேண்டாமென்று சொல்கிறோம். ஆனால் அவர்கள் கேட்பதில்லை" என்று இன்ஸ்பெக்டர் கோபக் குரலில் பதில் அளித்தான்.

"கிறிஸ்துவுக்கு விரோதமான படைகளில் நீங்களும் ஒருவர் போலிருக்கிறதே?" என்று கிழவன் கேட்டான்.

"இல்லை, நான் சிறையைப் பார்க்க வந்தவன்" என்றான் நிக்லியுடாவ்.

"என்னத்தைப் பார்க்க வந்தீர்கள்? இவ்வளவு ஜனங்களை அவன் கூட்டில் அடைத்து வைத்திருக்கிறான். மனிதன் கஷ்டப் பட்டு உழைத்துச் சாப்பிட வேண்டும். ஆனால் அவன் இவர்களை இங்கே சோம்பேறிகளாக அடைத்துவைத்து பன்றிகளுக்கு தீனி போடுவதுபோல் போடுகிறான். மனிதர்கள் மிருகங்களாகி விடு கிறார்கள்" என்றான் கிழவன்.

"அவன் என்ன சொல்கிறான்?" என்று ஆங்கிலேயன் கேட்டான்.

"இவ்வளவு பேரைச் சிறையில் அடைத்து வைத்திருப்பதற் காக இன்ஸ்பெக்டரை நிந்திக்கிறான்" என்றான் நிச்லியுடாவ்.

"சட்டப்படி நடக்காதவர்களை என்ன செய்வது என்று அவனைக் கேளுங்கள்" என்றான் ஆங்கிலேயன்.

நிக்லியுடாவ் அப்படியே கேட்டான்.

"சட்டமா?" என்று கேட்டுவிட்டுக் கிழவன் உரக்கச் சிரித் தான். "ஜனங்களின் நிலத்தையெல்லாம் இவர்கள் கொள்ளை யடித்தார்கள். இவர்களை எதிர்த்தவர்களை யெல்லாம் கொலை செய்தார்கள். திருடக் கூடாது. கொல்லக் கூடாது என்றெல் லாம் பிறகுதான் சட்டம் எழுதினார்கள். முதலிலேயே இந்த சட்டத்தை எழுதியிருக்க வேண்டும்" என்றான் கிழவன்.

இதை அப்படியே மொழி பெயர்த்துச் சொன்னான் நிக்லியு டாவ். இதைக் கேட்டு ஆங்கிலேயன் சிரித்தான். "அது இருக்கட்டும்; இப்பொழுது குற்றம் செய்பவர்களை எப்படி நடத்த வேண்டுமென்று நினைக்கிறான் கேளுங்கள்" என்றான்.

"கிறிஸ்து பிரானின் கொள்கைக்கு விரோதமானவற்றை யெல்லாம் முதலில் களைந்து எறியுங்கள். பிறகு திருடர்களும் இருக்கமாட்டார்கள் கொள்ளைக்காரர்களும் இருக்கமாட்டார்கள். இதை அவரிடம் சொல்லுங்கள்" என்றான் கிழவன்.

"அவன் பைத்தியம்" என்று சொல்லிக்கொண்டே ஆங்கி லேயன் தோளைக் குலுக்கிக் கொண்டான். மூவரும் அந்த அறையை விட்டுப் புறப்பட்டார்கள்.

"உங்கள் கடமையை ஒழுங்காகச் செய்யுங்கள். மற்றவர்களை அவர்கள் வழியே விட்டுவிடுங்கள். யாரைத் தண்டிப்பது, யாரை மன்னிப்பது என்பது கடவுளுக்குத் தெரியும், உங்கள் எஜமானனாக நீங்கள் இருங்கள். இங்கு ஒருவருக்கும் எஜமானர்கள் வேண்டாம் போங்கள் போங்கள்" என்றான் கிழவன். பிறகு நிக்லியுடாவைப் பார்த்து, "கிறிஸ்துவின் துரோகிகள் மனிதரைப் பூச்சி புழுக்களுக்கு இறையாக்குகிறார்கள். இதைப் பார்த்தது போதாதா? போங்கள் போங்கள்" என்றான்.

பிறகு ஆங்கிலேயன் ஓர் அறையைச் சுட்டிக் காட்டி, "இது என்ன இடம்?" என்று கேட்டான்.

"இது பிண கிடங்கு" என்று இன்ஸ்பெக்டர் அறிவித்தான்.

அதனுள் சென்று பார்க்க விரும்புவதாக ஆங்கிலேயன் சொன்னான். மூவரும் அதனுள் பிரவேசித்தனர். அங்கு மங்கலான ஒரு விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

முதலில் உயரமான ஒருவனின் பிரேதம் கிடத்தப்பட்டிருந்தது. அவன் தலை பாதி மொட்டையடிக்கப்பட்டிருந்தது. அவனுடைய தாடி குட்டையாக இருந்தது. அதன் பக்கத்தில் பூட்ஸோ குல்லாயோ இல்லாத ஒரு கிழவியின் உடல் கிடந்தது. அதன் பக்கத்தில் கரு நீல உடை அணிந்த ஒருவனின் உடல் கிடந்தது. இந்த உடையின் நிறம் நிக்லியுடாவுக்கு வேறு எதையோ ஞாபக மூட்டியது.

அவன் அருகே சென்று பார்த்தான். அவனுடைய கூரிய தாடி, எடுப்பான மூக்கு, விசாலமான வெளுத்த நெற்றி, மெல்லிய சுருண்ட தலை மயிர் எல்லாவற்றையும் நிக்லியுடாவ் பார்த்தான். அவன் கண்களையே நம்ப முடியவில்லை. நேற்று இதே முகத்தில் கோபக் கனல் வீசியது. இன்று அது அமைதியாக, சலனமற்றுக் கிடந்தது. பயங்கரமான ஓர் அழகு அதில் குடிகொண்டிருந்தது. ஆமாம்! அவன் கிரில்ட்ஸோவ்தான்—இல்லை அவனுடைய அடையாளம். "அவன் எதற்காகக் கஷ்டங்களுக்குள்ளானான்? அவன் எதற்காக வாழ்ந்தான்? அதை அறிந்துகொண்டு விட்டானா?" என்று நிக்லியுடாவ் தன்னைத் தானே கேட்டுக் கொண்டான். ஒரு பதிலும கிடைக்கவில்லை. அவனுக்குத் தலை சுற்றியது. ஆங்கிலேயனிடம் விடைகூடப் பெற்றுக் கொள்ளாமல், தன்னை வெளியே அழைத்துச் செல்லும்படி இன்ஸ்பெக்டரைக் கேட்டான். தனியாக ஓரிடத்திற்குப் போய் அன்று மாலை நடந்தவற்றைப் பற்றி யோசிக்க வெண்டுமென்று தோன்றியது. தன் வண்டியில் ஏற்றிக்கொண்டு நேராக ஹோட்டலுக்குப் போனான்.

## 28

நிக்லியுடாவ் படுத்துக் கொள்ளவில்லை. தன் அறையில் குறுக்கும் நெடுக்குமாக உலாவிக் கொண்டிருந்தான். காடுஷா சம்பந்தமாக அவன் மேற்கொண்ட விவகாரம் ஒருவிதமாக முடிவடைந்து விட்டது. அவனை அவள் விரும்பவில்லை. இது அவனுக்கு வருத்தத்தையும் வெட்கத்தையும் அளித்தது. அவனுடைய மற்றொரு வேலை முடியாமலிருந்ததோடு மாத்திரமில்லை. முன் எப்பொழுதையும் காட்டிலும் அதிகமாகத் துன்புறுத்தியது. அதற்காகத் தீவிரமாய் உழைக்க வேண்டுமென்று தோன்றியது. அருமைக் கிரில்ட்ஸோவை பலி கொண்ட கொடுமைகள் வெற்றிகரமாக ஆட்சி செலுத்திக் கொண்டிருந்தன. அவற்றை வெல்ல முடியுமென்றே தோன்றவில்லை. வெல்வதற்கான வழிகூடத் தெரியவில்லை. அலக்ஷிய புத்தியோடு கூடிய அதிகாரிகளின் கையில் சிக்கி நாற்றமடிக்கும் சிறைகளில் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்த பல்லாயிரக் கணக்கான துர்பாக்கியக் கைதிகள் அவன் ஞாபகத்திற்கு வந்தனர். பிரேதங்களுக்கிடையே கிடந்த கிரில்ட்ஸோவின் அழகிய முகத்தை நினைத்துப் பார்த்தான். சுயேச்சையான அந்தக் கிழவனும் அதிகாரிகளை அவன் சபிப்பதும் அதற்காக அவனை எல்லாரும் பைத்தியக்காரன் என்பதும் அவன் ஞாபகத்திற்கு வந்தன. "நான் பைத்தியக்காரனா, அல்லது இந்தக் கொடுமைகளையெல்லாம் செய்துவிட்டு, தாங்கள் மேதாவிகள் என்று நினைத்திருப்பவர்கள் பைத்தியக்காரர்களா?" என்று கேள்வி மீண்டும் புது வேகத்துடன் அவன் மனத்தில் எழுந்தது. இந்தத் தடவை இதற்கு விடை கண்டு பிடித்தாக வேண்டுமென்று தோன்றியது.

குறுக்கும் நெடுக்கும் நடப்பதிலும் சிந்திப்பதிலும் அவனுக்கு அலுப்புத் தட்டியது. சோபாவில் விளக்குக் கருகே உட்கார்ந்தான். ஆங்கிலேயன் ஞாபகார்த்தமாக அவனிடம் கொடுத்த பைபிளைக் கையில் எடுத்தான். "எல்லாப் பிரச்னைகளுக்கும் இதில் பதில் கிடைக்குமென்கிறார்களே, பார்ப்போம்" என்று நினைத்தவாறு புத்தகத்தை ஏதோ ஓரிடத்தில் திறந்தான். மத்தேயு எழுதிய சுவிசேஷத்தில் பதினெட்டாவது அத்தியாம் வந்தது. "ஏசுவின் சீடர்கள் அவரிடம் வந்து, 'கடவுளின் சந்நிதானத்தில் பெரியவன் யார்?' என்று கேட்டனர். அவர் ஒரு குழந்தையை அழைத்து அவர்களிடையே நிறுத்தி, 'நீங்கள் இந்தக் குழந்தையைப் போல் ஆனாலொழிய கடவுளின் சந்நிதானத்திற்குச் செல்ல முடியாது. இந்தக் குழந்தையைப் போல் எவன் எளியவனாக ஆகிறானோ அவன்தான் கடவுளின்

ஜூ்கள் மாஜிஸ்திரேட்டுகள், ஜெயிலர்கள் முதலிய சட்டபூர்வ மான குற்றவாளிகளாலும் குற்றம் அதிகரிக்கத்தான் செய்தது. பிறரை விசாரித்து தண்டிக்கும் சட்டபூர்வமான குற்றவாளிக ளாலும் குற்றம் அதிகரிக்கத்தான் செய்தது. பிறரை விசா ரித்து தண்டிக்கும் சட்ட பூர்வமான குற்றவாளிகள் இருந்தும் சமூகத்தில் அமைதியும் ஒழுங்கும் நிலவும் காரணம் இப்பொழுது நிக்லியுடாவுக்கு நன்ருகத் தெரிந்தது. இவர்களை யும் மீறி ஜனங்கள் ஒருவர்மீது ஒருவர் அன்பு செலுத்தினர்.

இந்தக் கருத்திற்கு ஊர்ஜிதம் கண்டுபிடிப்பதற்காக புத்த கத்தை முதலிலிருந்து படித்தான். மலைமேல் செய்த உபதே சத்தில் அவன் அற்புதமான கருத்துக்களைக் கண்டான். உல கத்தில் அற்புதமான புதிய சமூகத்தைச் சமைக்கக் கூடிய, அனுபவ சாத்தியமான, உன்னத விதிகளை அதில் கண்டான். இவற்றை அமுலுக்குக் கொண்டு வந்தால் உலகமே சொர்க்க மாகிவிடும்.

''கொலை செய்யக்கூடாது. மற்றவர்கள்மீது கோபம் கூடக் கொள்ளக்கூடாது. யாரையும் உபயோகமற்றவனென்று நினைக் கக்கூடாது. யாருடனுவது சண்டையிட்டாலும் பிரார்த்த னைக்கு முன் சமாதானமாகி விடவேண்டும்'' என்று முதல் சட்டம் கூறியது.

''விபசாரம் செய்யக்கூடாது. பெண்களின் அழகை அனு பவிக்க விரும்பக்கூடக்கூடாது. ஒரு பெண்ணேடு சேர்ந்துவிட் டால் அவளுக்கு துரோகம் செய்யக்கூடாது'' என்பது இரண் டாவது சட்டம்.

''பிரதிக்கினையின் மூலம் தன்னைக் கட்டுப்படுத்திக்கொள் ளக் கூடாது'' என்றது மூன்ருவது சட்டம்.

''பழிக்குப்பழி வாங்க நினைக்கக்கூடாது. ஒரு கன்னத்தில் அடித்தால் மறு கன்னத்தையும் காட்ட வேண்டும். தீமையை மன்னித்து, அதைத் தாழ்மையுடன் பொறுத்துக் கொள்ள வேண்டும். யாருக்கும் தன்னுலான உபகாரத்தைச் செய்ய மறுக்கக்கூடாது'' என்றது நான்காவது விதி.

''விரோதிகளின்மீது துவேஷம் கொள்ளக்கூடாது. அவர் களோடு சண்டையிடவும் கூடாது. அவர்களை நேசித்து அவர் களுக்குச் சேவை செய்ய வேண்டும்'' என்று ஐந்தாவது விதி கூறியது.

நிக்லியுடாவ் விளக்கையே உற்று நோக்கிக் கொண்டிருந் தான். அவன் ஹிருதயம் அமைதியாக இருந்தது. மக்களின் தற்போதைய அவல வாழ்க்கையை அவன் நினைத்துப் பார்த் தான். இந்த விதிகளுக்குக் கீழ்ப்படியக் கற்றுக் கொடுத்தால்

வாழ்க்கை எப்படியிருக்கும் என்பதைக் கற்பனை செய்து பார்த்தான். பலநாள் கஷ்டப்பட்டு அலுத்துப்போன பின் இன்பத்தையும் சுதந்திரத்தையும் கண்டது போல் இருந்தது அவனுக்கு.

இரவு முழுவதும் அவன் தூங்கவேயில்லை. பைபிளைப் படித்துக் கொண்டிருந்தான். இதற்கு முன் அதைப் பல முறை படித்திருக்கிறான். பல சொற்களை அவன் கவனிக்காமலே விட்டிருக்கிறான். ஆனால் அவற்றிற்கெல்லாம் இப்பொழுது அவன் புதிய அர்த்தத்தைக் கண்டான். பஞ்சு நீரை இழுத்துக் கொள்வது போல் கருத்துக்களை அவன் கிரகித்துக் கொண்டான். அவன் ஏற்கனவே அறிந்திருந்தவற்றை இவை ஊர்ஜிதம் செய்வதுபோல் இருந்தது. அவற்றில் இப்பொழுது திடநம்பிக்கை ஏற்பட்டது. அதுமாத்திரமில்லை; இந்த விதிகளை அனுஷ்டிப்பது ஒவ்வொருவனுக்கும் கடமை என்று தோன்றியது. வாழ்க்கையின் அர்த்தம் இவற்றில்தான் இருக்கிறதென்பதும், இவற்றை மீறுவதால்தான் தவறுகள் ஏற்படுகின்றனவென்பதும் அவனுக்கு நன்றாக விளங்கின. அந்த உபதேசம் முழுமையும் இதைத் தான் அவனுக்கு எடுத்து காட்டியது. திராக்ஷைத் தோட்டக் கதையில் இவை யெல்லாம் வெகு அழகாகச் சித்தரிக்கப்பட்டிருந்தன.

ஒரு திராக்ஷைத் தோட்டத்தில் வேலை செய்வதற்காக சில வேலைக்காரர்கள் போகிறார்கள். தங்கள் எஜமானனை மறந்து விட்டு, அங்கு இருந்தவையெல்லாம் தங்களுக்காக ஏற்பட்டவை தான் என்றும், அங்கு வாழ்க்கையை அனுபவிப்பதுதான் தங்கள் வேலை என்றும் நினைக்கிறார்கள். தங்கள் எஜமானனைப் பற்றி ஞாபகமூட்டியவர்களை யெல்லாம் கொலை செய்கிறார்கள்.

"இன்பம் அனுபவிப்பதற்காகத்தான் நாம் பிறந்திருப்பதாகவும் நாம் தான் எஜமானர்களென்றும் நினைக்கும் பொழுது நாமும் அப்படித்தானே செய்கிறோம்? இது அபத்தம். யாருடைய விருப்பத்தின் பேரிலோ, ஏதோ ஒரு காரியத்தைச் செய்வதற்காக நாம் இங்கு அனுப்பப்பட்டிருக்கிறோம். நம்முடைய இன்பத்திற்காகத்தான் நாம் வாழ்வதாகக் கற்பனை செய்து கொண்டு விட்டோம். எஜமானன் உத்தரவுப்படி வேலைக்காரன் நடக்காதபொழுது கோளாறு ஏற்படுவது போல் நமக்கும் ஏற்படுகிறது. எஜமானனின் கருத்து இந்த விதிகளில் அடங்கியிருக்கின்றன. மனிதர்கள் இவற்றை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவரும் பொழுது பூலோகத்திலேயே சொர்க்கம் ஸ்தாபிதமாகிவிடும். மனிதன் அடையக்கூடிய மஹத்தான பாக்கியம் இதுதான்.

"முதலில் அவனுடைய சந்நிதானத்தை நாடு; இவை யெல்லாம் தாமாக உன்னை வந்து அடையும்" என்று சொல்லியிருக்

கிறது. ஆனல் நாம முதலில் இவற்றைத் தேடுகிறோம். அத ஞல் அவற்றை அடைவதில் தோல்வியடைகிறோம்.

"ஆகையால் என் வாழ்க்கையில் நான் செய்ய வேண்டிய காரியம் இதோ இருக்கிறது. நான் ஒரு காரியத்தைச் செய்து முடித்ததும் முடிக்காததுமாக மற்றென்று ஆரம்பமாகி விட்டது" என்று நிக்லியுடாவ் நினைத்தான்.

அன்று இரவு அவன் முன் ஒரு புதிய வாழ்க்கை உதய மாயிற்று. அவனுடைய வாழ்க்கையில் புதிய நிலைமை ஏற்பட் டது என்பதனுலல்ல. அந்த இரவுக்குப் பின் அவன் செய்த ஒவ் வொரு காரியத்திற்குமே முற்றிலும் வேருன, புதிய அர்த்தம் இருப்பதாகத் தோன்றியது.

அவனுடைய வாக்கையின் இந்தப் புதிய கட்டம் எப்படி முடியுமோ! அதைக் காலம் தான் நிருபிக்கவேண்டும்!

முற்றிற்று.

<u>நோபிள் பரிசுபெற்ற இத்தாலிய நாவல்</u>

## " தாய் "

ஆசிரியை;
**கிரேஸியா டெலடா**

மொழி பெயர்ப்பு;
**"காதம்பரி"**

(சுருக்கப்படாத அப்பட்டமான மொழிபெயர்ப்பு)

ஒவ்வொரு தேச பாஷையிலும் 'தாய்' என்ற மகுடத்துடன் நாவல்கள் வெளிவந்திருக்கின்றன. ஆனால் அவைகள் எல்லாம் வெறும் பிரசார நாவல்கள் என்று கருதப்பட்டதுடன், இலக்கிய மதிப்புக்குரிய இடம் அளிக்கப் படவில்லை என்பதற்கு ஆசிரியை கிரேஸியை டெலடாவின் தாய் என்ற இந்தநாவல் 1926-ல் நோபின் இலக்கிய பரிசைப் பெற்றிருப்பதே அத்தாட்சியாகும். தான் பெற்ற மகனை, மதகுருவாக, ஏன்? போப் ஆண்டவர் பீடத்தில் அமர்த்திப் பார்க்க வேண்டும் என்ற பெற்ற மனத்தின் ஆசையைத் தவிடு பொடியாகிவிடுகிறது மற்றொரு பெண்மையின் சிற்றின்ப ஆசை; மகனின் மானத்தைக் காப்பாற்றத் தன் உயிரையே அர்ப்பணிக்கும் தாய்மையின் கதை என்றென்றும் நம் நெஞ்சை விட்டு அகலாது.

**காலிகோ பவுண்டு அழகானமுகப்பு விலை ரூ. 3—0—0**

<u>ருஷ்ய நாவல்</u>

## ப லி பீ ட ம்

மூல ஆசிரியர்:
**அலக்ஸாண்டர்குப்ரின்**

மொழிபெயர்ப்பாளர்கள்:
**புதுமைப் பித்தன் &**
**க. நா. சுப்ரமண்யம்**

உலகில் மனிதன் தோன்றியது முதற்கொண்டு காமத்தை விலைபேசி வாங்கும் கயவர்கள் இருந்துதான் வந்திருக்கிறார்கள். காமத்தை விலைக்கு விற்பவர்கள் கயவர்களா? அதை வாங்குபவர்கள் கயவர்களா என்பதில் பிரச்சினை ஏதுமில்லை. இருவரும் கயவர்கள்தாம்.

இது நீதி போதிக்கும் நூல் அல்ல. உள்ளதை உள்ளபடி சொல்லி அதில் வாசகர்களுக்கு அருவருப்பு ஏற்படும்படி எழுதப்பட்ட நாவல் இது. யாமா என்கிற இந்த நூல் தனிப் பெருமை வாய்ந்தது. விபசாரிகளைக் கதாநாயகிகளாக வைத்து எழுதப்பட்ட பல நாவல்கள் இருக்கலாம். ஆனால் சதை வியாபாரத்தையே விஷயமாக வைத்து தாசிக்குப் பதில் தாசித் தொழிலையே கதாநாயகியாக வைத்துஎழுதப்பட்ட இந்த நூலில் ரஷ்யாவில் மட்டுமல்ல உலகத்திலுள்ள பலிபீடங்கள் எல்லாவற்றிற்குமே நிரந்தரமான உருவம் கொடுத்திருக்கிறார் குப்ரின் என்பதுதான் இந்த நூலின் தனிச் சிறப்பு.

**காலிகோ பவுண்டு விலை ரூ. 3.**

ருஷ்ய நாவல்

# அன்ன கரீன

மூல ஆசிரியர்: **லியோடால்ஸ்டாய்,**

மொழிபெயர்ப்பு ஆசிரியர்: **வே. சந்தானம்.**

(சுருக்கப்படாத அப்பட்டமான மொழிபெயர்ப்பு)

டெம்மி அளவில் 900 பக்கங்கள்

காலிகோ பவுண்டு, நாலு வர்ணமுகப்பு

கவுண்ட் லியோ டால்ஸ்டாயின் உலகப் பிரசித்தி பெற்ற அன்னவின் கதை நேர்மையும் உயர்ந்த லட்சியங்களுங்கூட ஒன்றுக்கொன்று முரண்படக்கூடும் என்பதற்கு உதாரணம். யௌவனமும், அழகும், உணர்ச்சியும் நிரம்பப்பெற்ற அன்ன வின் போக்கு எதிர்ப்பும் அன்று, பணிவும் அன்று, வெறும் நேர்மை. அன்னியன் ஒருவனுக்குக் காதலியாகிவிட்டபோது கூட அவள் புருஷனிடமிருந்து தன் உள்ளத்தை மறைக்கவில்லை. அவளை மறந்துவிட்டு அவள் கணவன் சர்க்கார் வேலைகளில் ஊறிப்போயிருந்தான். அவள் அப்படிப்பட்ட உறவிலிருந்து விடுபடவிரும்பினள். ஆனல் அன்னவைக் காதலித்தவனுக்கோ பெண் மனத்தின் தன்மை தெரியாது. அவளுடைய காதல் தன் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்தியது என்று அவன் விபரீத மாக எண்ணிக்கொண்டது தான் அன்னவின் சோக நாட கம். அவளுடைய அன்பும், உள்ளத்தூய்மையும் தாய் இருத யத்தின் இளக்கத்தினல் மாறி 'காதல்' என்ற வார்த்தைக்கு அர்த்தமே இல்லை என்று உணருகின்றனள். அவள், தன் கணவ னிடம் பெற்றெடுத்த பாலகனைத் திருட்டுத்தனமாகச் சென்று பார்த்து மகிழும் சந்தர்ப்பத்தில், அழியாத தாய் உருவமாக மாறுகிருள்.

உயர்ந்த கிளேஸ் காகிதம்

இரண்டாம் பதிப்பு

விலை. 7—8—0

படும் சௌகர்யங்களை யெல்லாம் விளக்கிக் கூறினாள். வேலைக்குப் போவது, அல்லது விபசார விடுதிக்குப் போவது ஆகிய இரண்டில் ஏதாவது ஒன்றை காடுஷா செய்ய வேண்டியிருந்தது. வேலைக்குப் போனால் பல அவமானங்களை அனுபவிக்க வேண்டியிருக்கும். புருஷர்களின் விஷமமான பார்வை துன்புறுத்தும். எப்பொழுதாவது ரகசியமாக விபசாரமும் செய்ய நேரும். விபசாரவிடுதிக்குப் போனால் சட்டம் அனுமதிக்கும் சுலபமான வாழ்க்கை நடத்தலாம். நிரம்பப் பணம் வரும். இந்த வாழ்க்கையே நடத்துவதென்று அவள் தீர்மானித்தாள். இப்படித் தீர்மானிப்பதற்கு முக்கிய காரணம் ஒன்று இருந்தது. "அங்கு போனால் உனக்கு இஷ்டமான எவ்வளவு உயர்ந்த உடையை வேண்டுமானாலும் அவள் வாங்கிக் கொள்ளலாம்" என்று விபசார ஏஜெண்டு அவளிடம் அடிக்கடி சொல்வாள். கருப்புக்கரையும், தாழ்ந்த கழுத்தும் குட்டையான கைகளும் உள்ள மஞ்சள் பட்டுச்சட்டை அணிந்தால் தன் உருவம் எப்படி இருக்கும் என்பதை அவள் கற்பனை செய்து பார்த்தாள். அந்தக் கற்பனை உருவம் அவளை வென்று விட்டது. உடனே அவள் இசைந்தாள். விபசார ஏஜெண்டு அன்று மாலையே ஒரு வண்டியை வரவழைத்து கரோலின் ஆல்பர்ட் டோவ்னா கிடேவா நடத்திவந்த விபசார விடுதிக்கு அவளை அழைத்துச் சென்றாள்.

மனித சட்டங்களுக்கும் தெய்வநீதிக்கும் விரோதமான பாப வாழ்க்கையைக் காடுஷா மாஸ்லோவா அன்று தொடங்கிவிட்டாள். சர்க்கார் சகித்துக்கொண்டு மாத்திரம் இருப்பதோடு நில்லாமல் அனுமதியும் அளித்துள்ள கேவல வாழ்க்கையை, பத்தில் ஒன்பது பெண்களுக்கு பயங்கர வியாதியையும் மரணத்தையும் விளைவிக்கும் கோர வாழ்க்கையை அவள் ஆரம்பித்து விட்டாள்.

இரவில், வெறியாட்டத்திற்குப் பின் பிற்பகல் வரையில் ஆழ்ந்த நித்திரை. மூன்று மணிக்கு மேல் அலுத்துப் போய் எழுந்திருப்பாள். அழுக்குப் பிடித்த படுக்கையில் படுத்தபடியே ஸோடாவையோ காப்பியையோ குடித்துவிட்டு, இராக்கால உடையோடு அறையில் குறுக்கும் நெடுக்குமாக உலாவுவாள். ஜன்னலுக்குப் பின்னாலிருந்து வெளியே ஓர் அர்த்தமற்ற பார்வை. மற்றவர்களோடு வெட்டிப் பேச்சு. முகத்தைக் கழுவிக் கொண்டு பௌடர், வாஸனைகள் முதலியவற்றைப் பூசிக் கொள்வது; தலைக்கு எண்ணெய் தடவி வாரிக்கொள்வது; உடைகளைப் பொறுக்கி எடுப்பது; அதைப் பற்றி வீட்டுக்காரியோடு தர்க்கம்; கண்ணாடியின் முன் நின்று அழகு பார்த்துக் கொள்வது; நல்ல சாப்பாடு; உடம்பில் பெரும்பகுதி வெளியே தெரியும்படி பகட்டான பட்டு உடைகளை அணிவது பிரகாச

மான விளக்குகளால் அலங்கரிக்கப்பட்ட மத்திய ஹாலில் பிரவேசம்; அங்கு பலர் வந்து சேர்வார்கள். சங்கீதம். நாட்டியம் வயதானவர்கள், இளைஞர்கள், நடுத்தர வயதுடையவர்கள். வயதினால் தளர்ந்தவர்கள், பிரம்மச்சாரிகள், விவாகமானவர்கள், வியாபாரிகள், குமாஸ்தாக்கள், ஆர்மீனியர், யூதர், டார்ட்டார், பணக்காரர், ஏழை, நோயாளிகள், ஆரோக்கியமானவர்கள், முரடர்கள், மிருதுவானவர்கள், சோல்ஜர்கள், ஸிவிலியன்கள் மாணவர்கள், பள்ளிப் பிள்ளைகள் முதலிய எல்லா வகுப்பினருடனும், எல்லா வயதினருடனும், எல்லா குணத்தவருடனும் சேர்க்கை; சிரிப்பு, கொம்மாளம், கூச்சல், சங்கீதம் சாராயம், புகையிலை—புகையிலை, சாராயம். அஸ்தமனம் முதல் உதயம் வரை இதேதான். இடையில் ஓய்ச்சல் ஒழிவு இல்லை. பிறகு ஆழ்ந்த தூக்கம். ஒவ்வொரு நாளும், வாரம் முழுவதும் இப்படித்தான். பிறகு வாரக் கடைசியில் போலீஸ் ஸ்டேஷனுக்கு விஜயம். அங்கு சர்க்கார் டாக்டர்களின் சோதனை. சில சமயங்களில் கடுகடுப்போடும் சில சமயங்களில் விளையாட்டாகவும் இந்தப் பெண்களைப் பரிசோதிப்பார்கள். மனித ஜென்மங்களுக்கு மாத்திரமின்றி மிருகங்களுக்கும் கொடுக்கப்பட்டுள்ள லஜ்ஜை என்பதை அடியோடு அழித்து விடுவார்கள். வாரம் முழுவதும் நடத்தி வந்த பாபச் செயல்களை மேலும் தொடர்ந்து நடத்த எழுத்து மூலம் அனுமதி கிடைத்துவிடும். கோடைகாலத்திலும், குளிர்காலத்திலும் வேலைநாட்களிலும் விடுமுறை நாட்களிலும் எல்லா இரவுகளிலும் இதேதான்.

காடுஷா மாஸ்லோவா இப்படி ஏழு வருஷங்களைக் கழித்தாள். இந்த ஏழு வருஷங்களுக்குள் இரண்டொரு முறை அவள் இடம் மாறினாள். ஒரு முறை ஆஸ்பத்திரிக்குப் போயிருந்தாள். அவள் விபசார விடுதியில் புகுந்த எழாவது வருஷத்தில் தான் அவளைக் கைது செய்வதற்குக் காரணமான காரியத்தைச் செய்தாள். அதற்காகத்தான் இப்பொழுது அவள் விசாரணைக்கு அழைத்துச் செல்லப்பட்டாள். மூச்சுத் திணறிப் போகக்கூடிய அசுத்தக் காற்று நிறைந்த சிறையில் திருடர்களோடும் கொலைகாரர்களோடும் மூன்று மாதங்களுக்கு மேல் இருந்துவிட்டு விசாரணைக்காகப் போய்க் கொண்டிருந்தாள்.

## 3

மாஸ்லோவா இரு ஸோல்ஜர்களின் காவலோடு, நீண்ட தூரம் நடந்ததால் அலுத்துப் போய், கோர்ட் கட்டிடத்திற்குப் போய்ச் சேர்ந்தாள். அவளை முதலில் கற்பழித்த டிமித்ரி ஐவனிச் நிக்லியுடாவ் கோமகன் அப்பொழுது தன் படுக்கையை

வாசனை பூசிய அந்தக் கடிதத்தை நிக்லியுடாவ் பிரித்துப் படிக்கத் தொடங்கினான்.

கனத்த சாம்பல் நிறக் காகிதத்தில் கடிதம் எழுதப்பட்டிருந்தது, எழுத்து ஆங்கிலம்போல் இருந்தது.

“ உங்களுடைய ஞாபக சக்தியாக இருக்கும் பொறுப்பை நான் ஏற்றுக்கொண்டிருப்பதால் ஏப்ரல் இருபத்தெட்டாம் தேதியாகிய இன்று, கோர்ட்டுக்கு ஜூரிகளில் ஒருவராக நீங்கள் செல்ல வேண்டும் என்பதையும், உங்களுடைய வழக்கமான மறதியுடன் நேற்று வாக்களித்தபடி சித்திரக் கண்காட்சிக்கு எங்களோடும் கோலோஸோவோடும் நீங்கள் வர முடியாது என்பதையும் உங்களுக்கு ஞாபகமூட்டும் உரிமையை எடுத்துக் கொள்கிறேன். சரியான காலத்திற்கு கோர்ட்டுக்குப் போகவில்லையென்றால் முன்னூறு ரூபிள் அபராதம் கட்ட நேரிடும். நேற்று இரவு நீங்கள் வீட்டுக்குப் போனவுடன் எனக்கு இது ஞாபகத்திற்கு வந்தது. ஆகையால் மறந்துவிடாதீர்கள்—கோர்ச்சாகினா ” என்று கடிதத்தில் வரையப்பட்டிருந்தது.

கடிதத்தின் பின்புறத்தில் ஒரு குறிப்பு எழுதப்பட்டிருந்தது.

“உங்களுடைய இடம் இரவுவரை காலியாகவே விடப்பட்டிருக்கும் என்று அம்மா உங்களுக்கு அறிவிக்கச் சொல்கிறாள். ஆகையால் எவ்வளவு நேரம் ஆனாலும் நீங்கள் வந்தே தீர வேண்டும்” என்று அந்தக் குறிப்பில் எழுதப்பட்டிருந்தது.

நிக்லியுடாவ் முகத்தைச் சுளித்துக் கொண்டான். கோர்ச்சாகினா இரண்டு மாதங்களாகச் செய்து வரும் தந்திரத்தின் தொடர்ச்சியே இந்தக் கடிதம். கண்ணுக்குத் தெரியாத கயிற்றின் மூலம் அவனை மேன்மேலும் கெட்டியாகப் பிணைக்க அவள் முயன்று வந்தாள். முப்பது வயதுக்குமேல் ஆனவர்கள், அபாரக் காதல் இருந்தாலன்றி விவாகம் செய்து கொள்வதற்குத் தயங்குவது ஒருபுறமிருக்க, நிக்லியுடாவ், விவாகம் செய்து கொண்டுவிட வேண்டுமென்று தீர்மானித்தபோதிலும், அது பற்றி உடனடியாக ஒரு முடிவும் செய்யாமலிருந்ததற்குப் போதிய காரணம் இருந்தது. பத்து வருஷங்களுக்கு முன்னால் அவன் மாஸ்லோவாவைக் கெடுத்து சந்தியில் விட்டது இதற்குக் காரணமில்லை. அதை அவன் மறந்துகூடப் போய் விட்டான். விவாகம் செய்து கொள்ளாததற்கு அதை ஒரு காரணமாகவே அவன் நினைக்கமாட்டான். விவாகமான வேறு ஒருத்தியோடு அவனுக்குத் தொடர்பு இருந்ததுதான் இதற்கு உண்மைக் காரணம். அந்தத் தொடர்பு அற்றுப் போய் விட்டதாக அவன் கருதியபோதிலும் அவள் அவ்விதம் நினைக்கவில்லை.

பெண்களிடத்தில் நிக்லியுடாவுக்குச் சங்கோஜம் அதிகம். இந்த சங்கோஜத்தைக் கொண்டே அவனை வென்றுவிட வேண்டுமென்று அந்த ஸ்திரீ விரும்பினாள். விவஸ்தை கெட்ட அவள், ஒரு ஜில்லா அதிகாரியின் மனைவி. அவனை அவள் மேன்மேலும் கவர்ந்து இழுத்தாள். இது நாளுக்கு நாள் அவனுக்கு அதிக வெறுப்பை அளித்தது. உணர்ச்சிக்கு பலியாகிவிட்டதால், தான் குற்றவாளி என்ற உணர்ச்சி நிக்லியுடாவுக்கு ஏற்பட்டது. அவளுடைய சம்மதமில்லாமல் தன்னுடைய தொடர்பை அறுத்துக்கொள்ள அவனுக்கு தைரியமில்லை. அதனால்தான், கோர்ச்சாகின கோமகளை மணக்க வேண்டுமென்று அவன் விரும்பினாலும், அதைப்பற்றி ஒரு தீர்மானம் செய்ய அவனுக்கு தைரியம் வரவில்லை.

மேஜை மீது கிடந்த கடிதங்களில் ஒன்று அந்த ஸ்திரீயின் கணவனிடமிருந்து வந்தது. கையெழுத்தையும் தபால் முத்திரையையும் பார்த்தவுடன் நிக்லியுடாவின் முகம் சிவக்கப் பெற்று, ஏதோ அபாயத்தில் சிக்கிக் கொண்டது போன்ற படபடப்பு ஏற்பட்டது.

ஆனால் அந்தப் படபடப்பு சிந்நேரம் மறைந்து விட்டது. மே மாதக் கடைசியில் பிரத்தியேகக் கூட்டம் ஒன்று நடக்கப் போவதாகவும், பள்ளிக்கூடங்களைப் பற்றியும் ரஸ்தாக்களைப் பற்றியும் நடக்க விருந்த முக்கியமான சம்பாஷணைகளில் நிக்லியுடாவ் கலந்துகொண்டு உதவி புரிய வேண்டும் என்றும்தான் கேட்டிருந்தான். எதிர்க் கட்சியின் எதிர்ப்பு பலமாக இருக்குமென்று தோன்றியதாக அவன் கூறியிருந்தான்.

அவன் ஒரு தீவிரவாதி. மூன்றாவது அலெக்ஸாண்டரின் ஆட்சியின் கீழ், தனக்குக் கிடைத்த ஆதரவைக் கொண்டு பிற்போக்கை எதிர்த்துப் போராடிக் கொண்டிருந்தான். அந்தப் போராட்டத்தில் தன் குடும்பத்திற்கு ஏற்பட்ட துர்ப்பாக்கியத்தைக் கூட அவன் கவனிக்கவில்லை.

அவனோடு தான் கழித்த பயங்கரமான காலங்களெல்லாம் நிக்லியுடாவுக்கு ஞாபகம் வந்தன. ஒரு நாள் அவன் தன்னைக் கண்டுபிடித்து விட்டதாகவும், தன்னை பயமுறுத்துவான் என்றும் நினைத்து துப்பாக்கியால் சுடத் தீர்மானித்துவிட்டான். மற்றொரு நாள் அவள் கிணற்றில் விழுந்து தற்கொலை செய்து கொள்வதாகப் பயமுறுத்திவிட்டு தோட்டத்திற்குள் ஓடினாள். நிக்லியுடாவ் அவளைத் தேடிக் கொண்டு போக வேண்டியிருந்தது. இந்த பயங்கர சம்பவங்களெல்லாம் அவன் ஞாபகத்திற்கு வந்தன.

"சரி, இப்பொழுது நான் போக முடியாது. அவளிடமிருந்து பதில் வரும் வரையில் நான் ஒன்றும் செய்யமுடியாது"

வாசனை பூசிய அந்தக் கடிதத்தை நிக்லியுடாவ் பிரித்துப் படிக்கத் தொடங்கினன்.

கனத்த சாம்பல் நிறக் காகிதத்தில் கடிதம் எழுதப்பட்டிருந்தது. எழுத்து ஆங்கிலம்போல் இருந்தது.

" உங்களுடைய ஞாபக சக்தியாக இருக்கும் பொறுப்பை நான் ஏற்றுக்கொண்டிருப்பதால் ஏப்ரல் இருபத்தெட்டாம் தேதியாகிய இன்று, கோர்ட்டுக்கு ஜூரிகளில் ஒருவராக நீங்கள் செல்ல வேண்டும் என்பதையும், உங்களுடைய வழக்கமான மறதியுடன் நேற்று வாக்களித்தபடி சித்திரக் கண்காட்சிக்கு எங்களோடும் கோஸோலோவோடும் நீங்கள் வர முடியாது என்பதையும் உங்களுக்கு ஞாபகமூட்டும் உரிமையை எடுத்துக் கொள்கிறேன். சரியான காலத்திற்கு கோர்ட்டுக்குப் போகவில்லையென்றால் முன்னூறு ரூபிள் அபராதம் கட்ட நேரிடும். நேற்று இரவு நீங்கள் வீட்டுக்குப் போனவுடன் எனக்கு இது ஞாபகத்திற்கு வந்தது. ஆகையால் மறந்து விடாதீர்கள்—கோர்ச்சாகின ” என்று கடிதத்தில் வரையப் பட்டிருந்தது.

கடிதத்தின் பின் புறத்தில் ஒரு குறிப்பு எழுதப்பட்டிருந்தது.

"உங்களுடைய இடம் இரவுவரை காலியாகவே விடப்பட்டிருக்கும் என்று அம்மா உங்களுக்கு அறிவிக்கச் சொல்கிருள். ஆகையால் எவ்வளவு நேரம் ஆனாலும் நீங்கள் வந்தே தீர வேண்டும்" என்று அந்தக் குறிப்பில் எழுதப்பட்டிருந்தது.

நிக்லியுடாவ் முகத்தைச் சுளித்துக் கொண்டான். கோர்ச்சாகின இரண்டு மாதங்களாகச் செய்து வரும் தந்திரத்தின் தொடர்ச்சியே இந்தக் கடிதம். கண்ணுக்குத் தெரியாத கயிற்றின் மூலம் அவனை மேன்மேலும் கெட்டியாகப் பிணைக்க அவள் முயன்று வந்தாள். முப்பது வயதுக்குமேல் ஆனவர்கள், அபாரக் காதல் இருந்தாலன்றி விவாகம் செய்து கொள்வதற்குத் தயங்குவது ஒருபுறமிருக்க, நிக்லியுடாவ், விவாகம் செய்து கொண்டுவிட வேண்டுமென்று தீர்மானித்தபோதிலும், அது பற்றி உடனடியாக ஒரு முடிவும் செய்யாமலிருந்ததற்குப் போதிய காரணம் இருந்தது. பத்து வருஷங்களுக்கு முன்னால் அவன் மாஸ்லோவாவைக் கெடுத்து சந்தியில் விட்டது இதற்குக் காரணமில்லை. அதை அவன் மறந்துகூடப் போய் விட்டான். விவாகம் செய்து கொள்ளாததற்கு அதை ஒரு காரணமாகவே அவன் நினைக்கமாட்டான். விவாகமான வேறு ஒருத்தியோடு அவனுக்குத் தொடர்பு இருந்ததுதான் இதற்கு உண்மைக் காரணம். அந்தத் தொடர்பு அற்றுப் போய் விட்டதாக அவன் கருதியபோதிலும் அவள் அவ்விதம் நினைக்கவில்லை.

பெண்களிடத்தில் நிக்லியுடாவுக்குச் சங்கோஜம் அதிகம். இந்த சங்கோஜத்தைக் கொண்டே அவனை வென்றுவிட வேண்டு மென்று அந்த ஸ்திரீ விரும்பினாள். விவஸ்தைகெட்ட அவள், ஒரு ஜில்லா அதிகாரியின் மனைவி. அவனை அவள் மேன்மேலும் கவர்ந்து இழுத்தாள். இது நாளுக்கு நாள் அவனுக்கு அதிக வெறுப்பை அளித்தது. உணர்ச்சிக்கு பலியாகி விட்டதால், தான் குற்றவாளி என்ற உணர்ச்சி நிக்லியுடாவுக்கு ஏற்பட்டது. அவளுடைய சம்மதமில்லாமல் தன்னுடைய தொடர்பை அறுத்துக்கொள்ள அவனுக்கு தைரியமில்லை. அதனால்தான், கோர்ச்சாகின கோமகளை மணக்க வேண்டுமென்று அவன் விரும்பினாலும், அதைப்பற்றி ஒரு தீர்மானம் செய்ய அவனுக்கு தைரியம் வரவில்லை.

மேஜை மீது கிடந்த கடிதங்களில் ஒன்று அந்த ஸ்திரீயின் கணவனிட மிருந்து வந்தது. கையெழுத்தையும் தபால் முத்திரையையும் பார்த்தவுடன் நிக்லியுடாவின் முகம் சிவக்கப் பெற்று, ஏதோ அபாயத்தில் சிக்கிக் கொண்டது போன்ற படபடப்பு ஏற்பட்டது.

ஆனால் அந்தப் படபடப்பு சிந்தூரம் மறைந்து விட்டது. மே மாதக் கடைசியில் பிரத்தியேகக் கூட்டம் ஒன்று நடக்கப் போவதாகவும், பள்ளிக்கூடங்களைப் பற்றியும் ரஸ்தாக்களைப் பற்றியும் நடக்க விருந்த முக்கியமான சம்பாஷணைகளில் நிக்லியுடாவ் கலந்துகொண்டு உதவி புரிய வேண்டும் என்றும்தான் கேட்டிருந்தான். எதிர்க் கட்சியின் எதிர்ப்பு பலமாக இருக்குமென்று தோன்றியதாக அவன் கூறி யிருந்தான்.

அவன் ஒரு தீவிரவாதி. மூன்றாவது அலெக்ஸாண்டரின் ஆட்சியின் கீழ், தனக்குக் கிடைத்த ஆதரவைக் கொண்டு பிற்போக்கை எதிர்த்துப் போராடிக் கொண்டிருந்தான். அந்தப் போராட்டத்தில் தன் குடும்பத்திற்கு ஏற்பட்ட துர்ப்பாக்கியத்தைக் கூட அவன் கவனிக்கவில்லை.

அவனோடு தான் கழித்த பயங்கரமான காலங்களெல்லாம் நிக்லியுடாவுக்கு ஞாபகம் வந்தன. ஒரு நாள் அவன் தன்னைக் கண்டுபிடித்து விட்டதாகவும், தன்னை பயமுறுத்துவான் என்றும் நினைத்து துப்பாக்கியால் சுடத் தீர்மானித்துவிட்டான். மற்றொரு நாள் அவள் கிணற்றில் விழுந்து தற்கொலை செய்து கொள்வதாகப் பய முறுத்திவிட்டு தோட்டத்திற்குள் ஓடினாள். நிக்லியுடாவ் அவளைத் தேடிக்கொண்டு போக வேண்டியிருந்தது, இந்த பயங்கர சம்பவங்களெல்லாம் அவன் ஞாபகத்திறகு வந்தன.

"சரி, இப்பொழுது நான் போக முடியாது. அவளிடமிருந்து பதில் வரும் வரையில் நான் ஒன்றும் செய்யமுடியாது"

விசாரித்தால் அவர்கள் ஒருவேளை விடுதலை செய்யப்பட்டு விடுவார்கள் என்பதுதான் இதற்கு உண்மையான காரணம். ஆகையால் பிரதம நீதிபதியோடு ஒரு ஏற்பாடு செய்து கொண்டு, அடுத்த செஷனில், பெரும்பாலும் குடியானவர்கள் ஜூரிகளாக வரக் கூடிய ஒரு சிறிய நகரில் இந்த வழக்கை விசாரணைக்குக் கொண்டுவர விரும்பினான். அப்பொழுது எதிரிகள் தண்டிக்கப் படுவதற்கான சந்தர்ப்பம் அதிகம் இருக்கும்.

முற்றத்தில் பரபரப்பு அதிகரித்தது. அந்தப் பெரிய மனிதர் வர்ணித்த வழக்கு சிவில் கோர்ட்டில் நடந்து கொண்டிருந்தது.

விசாரணையில் ஒரு இடைவேளை ஏற்பட்டது. சொத்தை இழக்கப் போகும் கிழவி கோர்ட்டுக்குள்ளிருந்து வெளியே வந்தாள். அந்தச் சொத்தைப் பெறக் கொஞ்சமும் உரிமை இல்லாத தன் கட்சிக்காரனுக்கு அது சேரும்படி செய்ய, மேதாவி வக்கில் வழி கண்டு பிடித்திருந்தான். நீதிபதிகளுக்கு இது நன்ருகத் தெரியும். வக்கீலும் அவனுடைய கட்சிக்காரனும், அவர்களைக் காட்டிலும் நன்ருக இதை அறிந்திருந்தார்கள். இருந்தாலும் கிழவியின் சொத்தை வாங்கி சட்ட நிபுணனை அந்தக் கட்சிக்காரனிடம் கொடுப்பதைத் தவிர வேறு வழியில்லாத சூழ்ச்சி ஒன்றை அவர்கள் கண்டுபிடித்திருந்தார்கள்.

அந்தக் கிழவி பருமனுக இருந்தாள். குல்லாயில் ஏராளமாகப் பூ அணிந்திருந்தாள். உயர்ந்த முறையில் உடைகள் அணிந்திருந்தாள். அவள் வெளியே வந்து நின்றுகொண்டு தன் வக்கிலைப் பார்த்து, "இதற்கெல்லாம் என்ன அர்த்தம்?" என்று திரும்பத் திரும்பக் கேட்டுக்கொண்டிருந்தாள்.

வக்கில், அவள் குல்லாயில் இருந்த பூவைப்பார்த்துக் கொண்டிருந்தார். அவள் சொன்னதைக் கவனிக்கவேயில்லை. அவருக்கு வேறு ஏதோ ஞாபகம்.

அந்தக் கிழவியைத் தொடர்ந்து அந்தப் பெரிய வக்கில் வெளியே வந்தான். அவனுடைய கட்சிக்காரன் அவனுக்குப் பதினயிரம் ரூபிள் கொடுப்பதாக வாக்களித்திருந்தான். அந்தக் கட்சிக்காரனுக்கு கிழவியிடமிருந்து ஒரு லக்ஷம் ரூபிளுக்கு அதிகமாகக் கிடைக்க விருந்தது. அந்த வக்கீல் வேகமாக நடந்தான். அவன் முகத்தில் திருப்தி தாண்டவாடியது. எல்லாருடைய கண்களும் அவன் பக்கமே திரும்பியிருந்தன. "மரியாதையாக நடந்து கொள்ள வேண்டிய அவசியமில்லை" என்று அவனுடைய தோற்றமே கூறுவதுபோல் இருந்தது.

# 7

கடைசியாக மாத்யூ நிகிடிச்சும் வந்துவிட்டார். கோர்ட் சேவகன் ஜூரிகளின் அறைக்குள் வந்தான். இவன் ரொம்பவும் யோக்கியன். கலாசாலைப் படிப்புகூடப் படித்திருக்கிறான். ஆனால் குடிப்பழக்கத்தினால் எந்த வேலையிலும் அதிகநாள் நீடித்ததில்லை. அவனுடைய மனைவியை ஆதரித்த ஒரு சீமாட்டி அவனுக்கு இந்த வேலையைத் தேடிக் கொடுத்தாள். இதில் அவன் இவ்வளவு காலம் இருந்ததுபற்றி அவனுக்கே அளவு கடந்த மகிழ்ச்சி.

"ஐயா, எல்லாரும் வந்திருக்கிறீர்களா?" என்று கேட்டுக் கொண்டே. மூக்குக் கண்ணாடியை மாட்டிக்கொண்டு சுற்றி வளைத்துப் பார்த்தான்.

"எல்லாரும் வந்து விட்டோமென்று நினைக்கிறேன்" என்றான் வியாபாரி.

சேவகன் தன் சட்டைப் பையிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்து. ஜூரிகளில் ஒவ்வொருவருடைய பெயராகப் படித்தான். ஒவ்வொருவரும் தாம் வந்திருப்பதை அறிவித்தனர்.

தெமித்ரி நிக்கியுடாவ் கோர்மகனின் பெயரைப் படித்தவுடன், "நான்தான்" என்றான் நிக்கியுடாவ். சேவகன் மூக்குக் கண்ணாடிக்கு மேல்புறத்தினால் அவனைப் பார்த்துவிட்டு. அவனுக்குப் பிரத்யேகமாக வணங்கி மரியாதை செலுத்தினான்.

பிறகு மற்றவர்களின் பெயர்களையும் படித்தான் சேவகன். இரண்டுபேரைத் தவிர மற்றெல்லாரும் வந்திருந்தார்கள்.

"கனவான்களே, தயைசெய்து கோர்ட்டுக்கு வாருங்கள்" என்று அழைத்து, கோர்ட் வாசற்படியைச் சுட்டிக் காட்டினான் சேவகன்.

அனைவரும் வாசற்படியை நோக்கிச் சென்று, உள்ளே செல்ல ஒருவருக்கொருவர் வழிவிட்டனர். எல்லாரும் கோர்ட்டுக்குள் பிரவேசித்து விட்டனர்.

பெரிய ஹாலில் கோர்ட் அமைந்திருந்தது. ஹாலின் ஒரு கோடியில் மேடையின்மீது ஒரு பெரிய மேஜை போடப்பட்டிருந்தது. அதை பச்சைத்துணி மூடியிருந்தது. மேஜைக்குப் பின்னால் மூன்று நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. அவற்றில் இருந்த உயர்ந்த சாய்மணைகளில் சித்திர வேலைகள் செய்திருந்தன. இவற்றிற்குப் பின்னால் சுவற்றில் மன்னரின் பெரிய படம் ஒன்று மாட்டப்பட்டிருந்தது. வலது பக்கத்தில், தலையில்

முள் முடியுடன் சிலுவையில் அறையப்பட்ட ஏசுநாதரின் படம் மாட்டியிருந்தது. மேடைக்கு வலதுபுறத்தில் ஜூரிகளின் ஆஸனங்கள் அமைக்கப்பட் டிருந்தன.

ஜூரிகள் வந்தவுடன் கோர்ட் சேவகன் முன்னால் வந்து, அங்கு இருந்தவர்களை பயமுறுத்துபவன்போல, "கோர்ட்டார் வருகின்றனர்" என்று உரத்த குரலில் அறிவித்தான்.

எல்லாரும் எழுந்து நின்றனர். நீதிபதிகள் மேடையின் மீது ஏறினர். பிரதம நீதிபதி, தம் கட்டு மஸ்தான சரீரத்துடனும் கிருதாக்களுடனும் முதலில் வந்தார். அழுது வடியும் முகபாவத்தோடு கூடிய நீதிபதி பின்னால் வந்தார். வீட்டில் ஏற்பட்ட தகராறினால் இவர் முகத்தில் ஏற்பட்ட சோகக்களை இப்பொழுது இன்னமும் அதிகமாகி விட்டது. எப்பொழுதும் தாமதித்து வரும் மாத்யூ நிகிடிச் மூன்றாவதாக வந்தார். இவர் தாடி வைத்திருந்தார். கருணை ததும்பும் வட்டமான கண்கள் உடையவர். இவருக்கு வயிற்றுக் கோளாறு. டாக்டர் யோசனையின் பேரில் அன்று தான் அவர் ஒரு புதிய சிகிச்சை ஆரம்பித்திருந்தார். அதனால் தான் மற்ற தினங்களைக் காட்டிலும் அன்று அவருக்கு அதிக நேரம் ஆகிவிட்டது. தாமே ஏதாவது கேள்வியைக் கேட்டுக்கொண்டு, விசித்திரமான முறைகளின் மூலம் அவற்றிற்கு பதில் கண்டு பிடிக்கும் வழக்கத்தினால் ஏற்படும் சிந்தனைக் களை அவர் முகத்தில் படர்ந்திருந்தது. "புதிய சிகிச்சை வயிற்றுக் கோளாற்றைக் குணப்படுத்துமா?" என்று இப்பொழுது அவர் தம்மைத்தாமே கேட்டுக் கொண்டார். "வாசற்படியிலிருந்து நாற்காலி வரையில் வைக்கும் அடிகளின் எண்ணிக்கை மூன்றால் வகுபட்டால் வயிற்று நோய் குணமாகி விடும்" என்று தீர்மானித்துக் கொண்டார். அவர் இருபத்தாறு அடி எடுத்து வைத்தார். ஆனால் நாற்காலி அருகே மற்றோர் அடி எடுத்து வைத்து இருபத்தேழாக்கினார்.

சரிகைப் பூவேலை செய்த காலர்களோடு கூடிய நீதிபதிகளின் தோற்றம் கம்பீரமாக இருந்தது. இதை அவர்களே உணர்ந்தனர் போலும். தங்கள் தோற்றத்திலேயே மயங்கியவர்கள் போல அவசர அவசரமாக ஆஸனத்தில் அமர்ந்தனர். மேஜையின் மீது இங்கி புட்டிகள், பேனாக்கள், சீவிய பென்ஸில்கள் முதலியவை தயாராக் வைக்கப்பட்டிருந்தன.

நீதிபதிகளோடு பப்ளிக் பிராஸிக்யூடரும், ஒரு கைக்கு அடியில் கட்டுகளை அடக்கிக் கொண்டு, மற்றொரு கையை வீசிக்கொண்டே வந்தார். அவசரமாகத் தன் ஆஸனத்திற்குச் சென்று அமர்ந்து, கோர்ட் நடவடிக்கைகள் ஆரம்பமாவதற்குள் தயாராக இருக்கும் நோக்கத்தோடு, ஒரு க்ஷண நேரத்தைக்கூட வீணாக்காமல் காகிதக் கட்டுகளைக் கவனிப்பதில்

ஈடுபட்டார். சிறிது காலமாகத்தான் இவர் பப்ளிக் பிராஸிக்யூட்ராக இருக்கிருர். இதற்கு முன்னல் நான்கு வழக்குகளைத்தான் சர்க்கார் தரப்பில் நடத்தி யிருக்கிருர், இவர் ஆர்வம் நிறைந்தவர். தொழிலில் வெற்றி பெற விரும்பினர். தாம் நடத்தும் ஒவ்வொரு வழக்கிலும் எதிரிகள் தண்டனை பெறுவது அவசியம் என்பது அவர் நினைப்பு. விஷ வழக்கைப்பற்றிய தகவல்கள் அவருக்கு ஸ்தூலமாகத் தெரியும். தம் வாதத்திற்கு வேண்டிய திட்டத்தைக்கூட வகுத்து விட்டார். இருந்தாலும் இன்னும் சில தகவல்கள் தெரிய வேண்டியிருந்தது. இவற்றைப் பரபரப்புடன் குறித்துக் கொள்ளத் தொடங்கினர்.

மேடைக்கு எதிர்ப்புறத்தில் இருந்த தன் ஆஸனத்தில் குமர்ஸ்த்தா உட்கார்ந்து, தனக்கு வேண்டிய தஸ்தாவேஜிகளைத் தயாராக வைத்துக் கொண்டு, தணிக்கை அதிகாரிகளால் தடை செய்யப்பட்டிருந்த ஒரு பத்திரிகைக் கட்டுரையைப் படிப்பதில் ஈடுபட்டான். தன்னைப் போலவே கருத்துடைய தாடிக்கார நீதிபதியுடன் இந்தக் கட்டுரைபற்றிப் பேச வேண்டு மென்ற ஆவல் அவனுக்கு. ஆனல் அதற்கு முன்னல் ஒரு முறை கட்டுரையை அவன் படித்து விட விரும்பினன்.

## 8

பிரதம நீதிபதி சில தஸ்தாவேஜிகளைப் பார்த்துவிட்டு, குமாஸ்தாவையும் கோர்ட் சேவகனையும் சில கேள்விகள் கேட்டு, சாதகமான பதில் பெற்றபின் எதிரிகளை உள்ளே அழைத்துவர உத்தரவிட்டார்.

ஒரு கதவைத் திறந்து கொண்டு உருவிய வாளுடன் இரு போலீசார் உள்ளே பிரவேசித்தனர். அவர்களைத் தொடர்ந்து கைதிகள், சிவந்த தலைமயிரோடு கூடிய ஒருவனும் இரு ஸ்திரிகளும் பிரவேசித்தனர். ஆண் கைதி, தன்னுடைய அளவைக் காட்டிலும் பெரிய சட்டையை அணிந்திருந்தான். சட்டையின் கைகள் அவனுடைய கைகளை மறைத்து விடாதபடி தடுக்க கை கட்டை விரலை அகலப்பிரித்துக் கொண்டிருந்தான். அவன் நீதிபதிகளைப் பாராமல் பெஞ்சியையே வெறித்துப் பார்த்துக் கொண்டு, அதன் ஒரு கோடிக்குப்போய் ஜாக்கிரதையாக உட்கார்ந்தான். பிறகு பிரதம நீதிபதியின் மீது பார்வையை நிறுத்தி, ஏதோ முணு முணுப்பதுபோல் தாடையை அசைத்தான். அவனுக்குப் பின்னல் வந்த ஸ்திரியும் சிறைச் சாலை உடையே அணிந்திருந்தாள். அவள் தலையில் சிறைக்

முள் முடியுடன் சிலுவையில் அறையப்பட்ட ஏசுநாதரின் படம் மாட்டியிருந்தது. மேடைக்கு வலதுபுறத்தில் ஜூரிகளின் ஆஸனங்கள் அமைக்கப்பட்டிருந்தன.

ஜூரிகள் வந்தவுடன் கோர்ட் சேவகன் முன்னால் வந்து, அங்கு இருந்தவர்களை பயமுறுத்துபவன்போல, "கோர்ட்டார் வருகின்றனர்" என்று உரத்த குரலில் அறிவித்தான்.

எல்லாரும் எழுந்து நின்றனர். நீதிபதிகள் மேடையின் மீது ஏறினர். பிரதம நீதிபதி, தம் கட்டு மஸ்தான சரீரத்துடனும் கிருதாக்களுடனும் முதலில் வந்தார். அழுது வடியும் முகபாவத்தோடு கூடிய நீதிபதி பின்னால் வந்தார். வீட்டில் ஏற்பட்ட தகராறினால் இவர் முகத்தில் ஏற்பட்ட சோகக்களை இப்பொழுது இன்னமும் அதிகமாகிவிட்டது. எப்பொழுதும் தாமதித்து வரும் மாத்யூ நிகிடிச் மூன்றாவதாக வந்தார். இவர் தாடி வைத்திருந்தார். கருணை ததும்பும் வட்டமான கண்கள் உடையவர். இவருக்கு வயிற்றுக் கோளாறு. டாக்டர் யோசனையின் பேரில் அன்று தான் அவர் ஒரு புதிய சிகிச்சை ஆரம்பித்திருந்தார். அதனால் தான் மற்ற தினங்களைக் காட்டிலும் அன்று அவருக்கு அதிக நேரம் ஆகிவிட்டது. தாமே ஏதாவது கேள்வியைக் கேட்டுக்கொண்டு, விசித்திரமான முறைகளின் மூலம் அவற்றிற்கு பதில் கண்டு பிடிக்கும் வழக்கத்தினால் ஏற்படும் சிந்தனைக்களை அவர் முகத்தில் படர்ந்திருந்தது. "புதிய சிகிச்சை வயிற்றுக் கோளாற்றைக் குணப்படுத்துமா?" என்று இப்பொழுது அவர் தம்மைத்தாமே கேட்டுக்கொண்டார். "வாசற்படியிலிருந்து நாற்காலி வரையில் வைக்கும் அடிகளின் எண்ணிக்கை மூன்றால் வகுபட்டால் வயிற்று நோய் குணமாகி விடும்" என்று தீர்மானித்துக் கொண்டார். அவர் இருபத்தாறு அடி எடுத்து வைத்தார். ஆனால் நாற்காலி அருகே மற்றோர் அடி எடுத்து வைத்து இருபத்தேழாக்கினார்.

சரிகைப் பூவேலை செய்த காலர்களோடு கூடிய நீதிபதிகளின் தோற்றம் கம்பீரமாக இருந்தது. இதை அவர்களே உணர்ந்தனர் போலும். தங்கள் தோற்றத்திலேயே மயங்கியவர்கள் போல அவசர அவசரமாக ஆஸனத்தில் அமர்ந்தனர். மேஜையின் மீது இங்கி புட்டிகள், பேனாக்கள், சீவிய பென்ஸில்கள் முதலியவை தயாராக வைக்கப்பட்டிருந்தன.

நீதிபதிகளோடு பப்ளிக் பிராஸிக்யூடரும், ஒரு கைக்கு அடியில் கட்டுகளை அடக்கிக் கொண்டு, மற்றொரு கையை வீசிக்கொண்டே வந்தார். அவசரமாகத் தன் ஆஸனத்திற்குச் சென்று அமர்ந்து, கோர்ட் நடவடிக்கைகள் ஆரம்பமாவதற்குள் தயாராக இருக்கும் நோக்கத்தோடு, ஒரு க்ஷண நேரத்தைக்கூட வீணாக்காமல் காகிதக் கட்டுகளைக் கவனிப்பதில்

ஈடுபட்டார். சிறிது காலமாகத்தான் இவர் பப்ளிக் பிராஸிக் யூட்ராக இருக்கிறார். இதற்கு முன்னால் நான்கு வழக்குகளைத் தான் சர்க்கார் தரப்பில் நடத்தி யிருக்கிறார், இவர் ஆர்வம் நிறைந்தவர். தொழிலில் வெற்றி பெற விரும்பினார். தாம் நடத்தும் ஒவ்வொரு வழக்கிலும் எதிரிகள் தண்டனை பெறுவது அவசியம் என்பது அவர் நினைப்பு. விஷ வழக்கைப்பற்றிய தகவல்கள் அவருக்கு ஸ்தூலமாகத் தெரியும். தம் வாதத்திற்கு வேண்டிய திட்டத்தைக்கூட வகுத்து விட்டார். இருந்தாலும் இன்னும் சில தகவல்கள் தெரிய வேண்டியிருந்தது. இவற்றைப் பரபரப்புடன் குறித்துக் கொள்ளத் தொடங்கினார்.

மேடைக்கு எதிர்ப்புறத்தில் இருந்த தன் ஆஸனத்தில் குமாஸ்த்தா உட்கார்ந்து, தனக்கு வேண்டிய தஸ்தாவேஜிகளைத் தயாராக வைத்துக் கொண்டு, தணிக்கை அதிகாரிகளால் தடை செய்யப்பட்டிருந்த ஒரு பத்திரிகைக் கட்டுரையைப் படிப்பதில் ஈடுபட்டான். தன்னைப் போலவே கருத்துடைய தாடிக்கார நீதிபதியுடன் இந்தக் கட்டுரைபற்றிப் பேச வேண்டு மென்ற ஆவல் அவனுக்கு. ஆனால் அதற்கு முன்னால் ஒரு முறை கட்டுரையை அவன் படித்து விட விரும்பினான்.

## 8

பிரதம நீதிபதி சில தஸ்தாவேஜிகளைப் பார்த்துவிட்டு, குமாஸ்தாவையும் கோர்ட் சேவகனையும் சில கேள்விகள் கேட்டு, சாதகமான பதில் பெற்றபின் எதிரிகளை உள்ளே அழைத்துவர உத்தரவிட்டார்.

ஒரு கதவைத் திறந்து கொண்டு உருவிய வாளுடன் இரு போலீசார் உள்ளே பிரவேசித்தனர். அவர்களைத் தொடர்ந்து கைதிகள், சிவந்த தலைமயிரோடு கூடிய ஒருவனும் இரு ஸ்திரீகளும் பிரவேசித்தனர். ஆண் கைதி, தன்னுடைய அளவைக் காட்டிலும் பெரிய சட்டையை அணிந்திருந்தான். சட்டையின் கைகள் அவனுடைய கைகளை மறைத்து விடாதபடி தடுக்க கை கட்டை விரலை அகலப்பிரித்துக் கொண்டிருந்தான். அவன் நீதிபதிகளைப் பாராமல் பெஞ்சியையே வெறித்துப் பார்த்துக் கொண்டு, அதன் ஒரு கோடிக்குப்போய் ஜாக்கிரதையாக உட்கார்ந்தான். பிறகு பிரதம நீதிபதியின் மீது பார்வையை நிறுத்தி, ஏதோ முணு முணுப்பதுபோல் தாடையை அசைத்தான். அவனுக்குப் பின்னால் வந்த ஸ்திரீயும் சிறைச் சாலை உடையே அணிந்திருந்தாள். அவள் தலையில் சிறைக்

"விசாரிக்கப்பட்டதில்லை, ஏனென்றால் நாங்கள் முன்பு—"

"அப்படி யென்றால் இதற்கு முன் நீ விசாரிக்கப்பட்டதில்லையா?"

"கடவுள் கிருபையால் இல்லை."

"குற்றச்சாட்டின் நகல் உனக்குக் கிடைத்ததா?"

"கிடைத்தது."

"உட்கார்."

பிறகு பிரதம நீதிபதி அடுத்த கைதியை நோக்கி, "புபோமியா ஐவனோவா புகோவா" என்று கூப்பிட்டார்.

ஆனால் புகோவாவுக்கு முன்னால் ஸைமன் நின்று கொண்டே யிருந்தான்.

"கார்ட்டின்கின், உட்கார்."

கார்ட்டின்கின் நின்றுகொண்டே யிருந்தான்.

"கார்ட்டின்கின், உட்கார்."

ஆனால் கோர்ட் சேவகன் வந்து, "உட்கார், உட்கார்" என்று அதிகார தோரணையுடன் அடங்கிய குரலில் கூறிய பிறகுதான் அவன் உட்கார்ந்தான். அவன் எவ்வளவு வேகமாக எழுந்தானோ அவ்வளவு வேகமாக உட்கார்ந்தான். தன் உடையை இழுத்துப் போர்த்திக் கொண்டு உட்கார்ந்து மறுபடியும் தன் உதடுகளை சப்தமின்றி அசைக்கத் தொடங்கி விட்டான்.

"உன் பெயர்?" என்று கைதியை நிமிர்ந்து பார்க்காமலே, அலுப்புடன் பெருமூச்சு விட்டுக் கொண்டு கேட்டார் பிரதம நீதிபதி. தம்முன் மேஜைமீது கிடந்த ஒரு காகிதத்தை அவர் பார்த்துக் கொண்டிருந்தார். இந்த வேலைகளெல்லாம் அவருக்கு ரொம்பவும் பழக்கமானவை. ஆகையால் சீக்கிரம் முடிப்பதற்காக இரண்டு வேலைகளை ஒரே சமயத்தில் கவனித்தார்.

போகோவாவுக்கு வயது நாற்பத்து மூன்று. கோலோம்னு நகரைச் சேர்ந்தவள். அவளும் மாரிடானியா ஹோட்டலில் தான் வேலை செய்து கொண்டிருந்தாள்.

"நான் இதற்கு முன்னால் விசாரிக்கப்பட்டதில்லை. குற்றச்சாட்டின் நகல் கிடைத்தது" என்று தைரியமாகப் பதில் அளித்தாள் அவள்.

கடைசிக் கேள்விக்கு அவள் பதிலளித்து விட்டு, "உட்கார்" என்று நீதிபதி கூறும் வரை காத்திருக்கவில்லை, தானுகவே உட்கார்ந்து விட்டாள்.

"உன் பெயர்?" என்று மூன்ருவது கைதியைப் பார்த்துக் கேட்டார், பெண்களைக் கண்டு மோகிக்கும் பிரதம நீதிபதி. மாஸ்லோவா உட்கார்ந்து கொண்டே யிருப்பதைக் கண்டு, "எழுந்திருக்க வேண்டும்" என்ருர் நாஸூக்கான, மிருதுவான குரலில்.

மாஸ்லோவா சட்டென எழுந்து மார்பு அகல, புன்முறுவல் பூக்கும் தன் கருவிழிகளில் ஒரு அலாதியான துணிச்சல் பாவத்துடன் பிரதம நீதிபதியை நோக்கிஞள்.

"உன் பெயர் என்ன?"

"லுபோவ்" என்று சட்டென பதிலளித்தாள் அவள்.

நிக்லியுடாவ் மூக்குக் கண்ணுடியை அணிந்து, கைதிகள் விசாரிக்கப்படுகையில் அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் பார்வையை வேறு பக்கம் திருப்பாமல், "இல்லை இருக்க முடியாது. லுபோவ்! அதெப்படி இருக்க முடியும்?" என்று, அவள் பதிலைக் கேட்டபின், தன்னைத் தானே கேட்டுக் கொண்டான் அவன்.

பிரதம நீதிபதி வேறு ஏதோ ஒரு கேள்வி கேட்கப்போகும் சமயத்தில் மூக்குக் கண்ணுடி யணிந்திருந்த நீதிபதி கோபமாக எதையோ முணுமுணுத்தார். பிரதம நீதிபதி தலையை அசைத்துவிட்டு, மீண்டும் கைதியின் பக்கம் திரும்பினுர்.

"இதென்ன? உன் பெயர் 'லுபோவ்' என்று இங்கு எழுதப் பட்டு இல்லையே?"

கைதி மௌனமாக இருந்தாள்.

"உன்னுடைய உண்மையான பெயர் தெரிய வேண்டும்."

"உனக்கு நாமகரணம் செய்தபோது வைத்த பெயர் என்ன?" என்று, கோபத்தோடு வந்திருந்த நீதிபதி கேட்டார்.

"முன்பு என்னை 'காதரிஞ' என்று அழைத்தார்கள்."

"இல்லை, இருக்கமுடியாது" என்று நிக்லியுடாவ் தனக்குத் தானே சொல்லிக் கொண்டான். இருந்தாலும் அவள் யார் என்பதை அவன் நிச்சயமாக அறிந்து கொண்டு விட்டான்.

"விசாரிக்கப்பட்டதில்லை, ஏனென்றால் நாங்கள் முன்பு—"

"அப்படி யென்றால் இதற்கு முன் நீ விசாரிக்கப்பட்டதில்லையா?"

"கடவுள் கிருபையால் இல்லை."

"குற்றச்சாட்டின் நகல் உனக்குக் கிடைத்ததா?"

"கிடைத்தது."

"உட்கார்."

பிறகு பிரதம நீதிபதி அடுத்த கைதியை நோக்கி, "யுபேமியா ஐவனோவா புகோவா" என்று கூப்பிட்டார்.

ஆனால் புகோவாவுக்கு முன்னால் ஸைமன் நின்று கொண்டே யிருந்தான்.

"கார்ட்டின்கின், உட்கார்."

காட்டின்கின் நின்றுகொண்டே யிருந்தான்.

"கார்ட்டின்கின், உட்கார்."

ஆனால் கோர்ட் சேவகன் வந்து, "உட்கார், உட்கார்" என்று அதிகார தோரணையுடன் அடங்கிய குரலில் கூறிய பிறகுதான் அவன் உட்கார்ந்தான். அவன் எவ்வளவு வேகமாக எழுந்தானோ அவ்வளவு வேகமாக உட்கார்ந்தான். தன் உடையை இழுத்துப் போர்த்திக் கொண்டு உட்கார்ந்து மறுபடியும் தன் உதடுகளை சப்தமின்றி அசைக்கத் தொடங்கி விட்டான்.

"உன் பெயர்?" என்று கைதியை நிமிர்ந்து பார்க்காமலே, அலுப்புடன் பெருமூச்சு விட்டுக் கொண்டு கேட்டார் பிரதம நீதிபதி. தம்முன் மேஜைமீது கிடந்த ஒரு காகிதத்தை அவர் பார்த்துக் கொண்டிருந்தார். இந்த வேலைகளெல்லாம் அவருக்கு ரொம்பவும் பழக்கமானவை. ஆகையால் சீக்கிரம் முடிப்பதற்காக இரண்டு வேலைகளை ஒரே சமயத்தில் கவனித்தார்.

போகோவாவுக்கு வயது நாற்பத்து மூன்று. கோலோம்னா நகரைச் சேர்ந்தவள். அவளும் மாரிடானியா ஹோட்டலில் தான் வேலை செய்து கொண்டிருந்தாள்.

"நான் இதற்கு முன்னால் விசாரிக்கப்பட்டதில்லை. குற்றச்சாட்டின் நகல் கிடைத்தது" என்று தைரியமாகப் பதில் அளித்தாள் அவள்.

கடைசிக் கேள்விக்கு அவள் பதிலளித்து விட்டு, "உட்கார்" என்று நீதிபதி கூறும் வரை காத்திருக்கவில்லை, தானாகவே உட்கார்ந்து விட்டாள்.

"உன் பெயர்?" என்று மூன்ருவது கைதியைப் பார்த்துக் கேட்டார், பெண்களைக் கண்டு மோகிக்கும் பிரதம நீதிபதி. மாஸ்லோவா உட்கார்ந்து கொண்டேயிருப்பதைக் கண்டு, "எழுந்திருக்க வேண்டும்" என்ருர் நாஸூக்கான, மிருதுவான குரலில்.

மாஸ்லோவா சட்டென எழுந்து மார்பு அகல, புன்முறுவல் பூக்கும் தன் கருவிழிகளில் ஒரு அலாதியான துணிச்சல் பாவத்துடன் பிரதம நிதிபதியை நோக்கினுள்.

"உன் பெயர் என்ன?"

"லுபோவ்" என்று சட்டென பதிலளித்தாள் அவள்.

நிக்லியூடர்வ் மூக்குக் கண்ணுடியை அணிந்து, கைதிகள் விசாரிக்கப்படுகையில் அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் பார்வையை வேறு பக்கம் திருப்பாமல், "இல்லை இருக்க முடியாது. லுபோவ்! அதெப்படி இருக்க முடியும்?" என்று, அவள் பதிலைக் கேட்டபின், தன்னைத் தானே கேட்டுக் கொண்டான் அவன்.

பிரதம நீதிபதி வேறு ஏதோ ஒரு கேள்வி கேட்கப்போகும் சமயத்தில் மூக்குக் கண்ணுடி யணிந்திருந்த நீதிபதி கோபமாக எதையோ முணுமுணுத்தார். பிரதம நீதிபதி தலையை அசைத்துவிட்டு, மீண்டும் கைதியின் பக்கம் திரும்பினுர்.

"இதென்ன? உன் பெயர் 'லுபோவ்' என்று இங்கு எழுதப் பட்டு இல்லையே?"

கைதி மௌனமாக இருந்தாள்.

"உன்னுடைய உண்மையான பெயர் தெரிய வேண்டும்."

"உனக்கு நாமகரணம் செய்தபோது வைத்த பெயர் என்ன?" என்று, கோபத்தோடு வந்திருந்த நீதிபதி கேட்டார்.

"முன்பு என்னை 'காதரிஞு' என்று அழைத்தார்கள்."

"இல்லை, இருக்கமுடியாது" என்று நிக்லியுடாவ் தனக்குத் தானே சொல்லிக் கொண்டான். இருந்தாலும் அவள் யார் என்பதை அவன் நிச்சயமாக அறிந்து கொண்டு விட்டான்.

பொறுப்பு ஏற்கும்பொழுது அடையும் ஆனந்தத்தை, நிக்லியுடாவ் அந்த வருஷக் கோடை விடுமுறையில், தன் அத்தைகளின் கிராமத்தில் அடைந்தான். ஸ்பென்ஸரின் சமூக தத்துவத்தைப் படித்தான், நில பாத்தியதை பற்றிய அவருடைய கருத்துக்கள் அவனுக்கு மிகவும் பிடித்திருந்தன. அவனுடைய தந்தை பெரிய பணக்காரரல்ல. ஆனால் அவனுடைய தாய்க்கு ஸ்ரீதனமாகப் பதினாயிரம் ஏகரா நிலம் கிடைத்தது. அதற்கு அவன்தான் வாரிசு. அவ்வளவு நிலத்தில் ஒருவனுக்குச் சொந்த பாத்யதை இருப்பதில் உள்ள கொடுமையையும் அதர்மத்தையும் அப்பொழுது அவன் உணர்ந்தான். மனச்சாட்சியின் தூண்டுதலை முன்னிட்டு தியாகம் செய்வதில் ஆத்மானந்தம் அடைகிறவர்களில் அவனும் ஒருவனாகையால், சொத்துக்களின் உரிமையைத் தான் வைத்துக் கொள்ளாமல் தனக்குக் கிடைக்கும் நிலங்களைக் குடியானவர்களுக்கு பிரித்துக் கொடுத்துவிட அவன் தீர்மானித்தான். இந்தப் பிரச்னையைப் பற்றித் தான் அவன் கட்டுரை எழுதிக்கொண்டிருந்தான்.

தன் அத்தையின் கிராமத்தில் அவன் தங்கியிருந்த பொழுது அதிகாலை மூன்று மணிக்கே—சூரிய உதயத்திற்கு முன்னாலேயே எழுந்து பனியில் மலையடிவாரத்தில் உள்ள ஆற்றுக்குப் போய்க் குளிப்பான். புல் நுனிகளிலும் பூவிதழ்களிலும் படிந்திருக்கும் பனித்துளிகள் மறைவதற்கு முன் வீடு திரும்புவான். சில சமயங்களில் காபியைக் குடித்துவிட்டு, தன் கட்டுரைக்கு வேண்டிய புத்தகங்களை ஆராய்வான். ஆனால் பெரும்பாலும் எழுதுவதற்கும் படிப்பதற்கும் பதிலாக மறுபடியும் வீட்டைவிட்டுப் புறப்பட்டு நிலங்களிலும் காடுகளிலும் சுற்றுவான். சாப்பாட்டுக்கு முன்னால் தோட்டத்தின் ஒரு பக்கத்தில் படுத்துத் தூங்குவான். சாப்பாட்டு வேளையில் தன் அத்தைகளைக் குஷிப்படுத்துவான். பிறகு குதிரை சவாரி செய்யவோ அல்லது ஆற்றுக்குச் சென்று நீந்தவோ செய்வான். மாலையில் படிப்பான், அல்லது ஏதாகிலும் விளையாடுவான்.

இராக்காலங்களில்—விசேஷமாக நிலாக்காலங்களில் அவனுக்குத் தூக்கம் பிடிக்காது. வாழ்க்கையின் இன்பலாகிரி அவனிடம் நிறைந்திருக்கும். தன் கருத்துக்களோடும் கனவுகளோடும் தோட்டத்தில் சுற்றித் திரிவான். சில சமயங்களில் உதயமாகும் வரையில் கூடச் சுற்றிக்கொண்டிருப்பான்.

அத்தை வீட்டில் ஒரு மாதம் அமைதியாகவும் ஆனந்தமாகவும் கழிந்தது. அவர்கள் வீட்டில் வேலை செய்துகொண்டிருந்த காடுஷாவைக் கவனிக்கவில்லை. தன் தாயின் பாதுகாப்பில் வளர்ந்த அவன் பத்தொன்பதாவது வயதிலும் பரி

சுத்தமாகவே இருந்தான். அவன் கனவில் ஒரு ஸ்திரீ தோன்றுவாளாகில் அவள் அவனுடைய மனைவி என்ற முறையிலேயே தோன்றுவாள். அவன் கருத்துப்படி, அவன் மணக்க முடியாத மற்றெல்லா ஸ்திரீகளும் சாதாரண மனிதப் பிறவிகளாகவே அவனுக்குத் தோன்றினார்கள்.

ஆனால் அஸென்ஷன் தினப் பண்டிகையன்று அடுத்த வீட்டுக்காரியும் அவளுடைய இரு பெண்களும் ஒரு பள்ளிக்கூடச் சிறுவனும், அவர்களோடு தங்கியிருந்த ஒரு இளம்குடியானவச் சைத்திரிகனும் அவனுடைய அத்தை வீட்டுக்கு வந்தார்கள்.

டீ குடித்தபின் வீட்டுக்கு எதிரே இருந்த புல்வெளியில் அவர்கள் விளையாடப் போனார்கள். காடுஷாவும் அவர்களுடன் சேர்ந்துகொண்டாள். அவனை நிக்லியுடாவ் பிடித்துவிட்டான். அவள் அவனோடு சேர்ந்து விளையாட வேண்டியதாயிற்று. அது வரை காடுஷாவின் பார்வை அவனுக்குப் பிடித்திருந்தது. ஆனால் அவளோடு வேறு நெருங்கிய உறவு பற்றி அவன் சிந்தித்ததில்லை.

"அந்த இரண்டு பேரும் தவறி விழுந்தாலொழிய அவர்களைப் பிடிக்கவே முடியாது" என்றான் இளம் சைத்திரிகன். அப்பொழுது பிடிக்க வேண்டுவது அவனுடைய முறை. பலம் நிறைந்த கால்களோடு கூடிய அவன், வெகு வேகமாக ஓடுவான்.

"நீயா!... ..எங்களையா பிடிக்க முடியவில்லை?" என்றாள் காடுஷா.

"ஒன்று, இரண்டு, மூன்று," சைத்திரிகன் கையைத்தட்டினான். காடுஷா சிரிப்பை அடக்க முடியாமல், அவனிடம் பிடிபடாமல் அவனுடைய இடதுபுறமாக ஓடினாள். அவன் திரும்பிப் பார்த்தபொழுது, சைத்திரிகன் அவளைத் துறத்திக்கொண்டு ஓடுவதைக் கண்டான். அவள் அதி வேகமாக முன்னால் ஓடிக்கொண்டிருந்தாள். அங்கு லைலாக் பூஞ்செடிப் புதர் ஒன்று இருந்தது. அந்த புதருக்குப் பின்னால் வந்து தன்னுடன் சேர்ந்துகொள்ளும்படி நிக்லியுடாவுக்கு காடுஷா தன் தலையை ஆட்டிச் சமிக்ஞை செய்தாள். அவர்கள் மறுபடியும் கைகோர்த்துக் கொண்டு விட்டால் துரத்துபவன் அவர்களைப் பிடிக்கக்கூடாது என்பது அந்த விளையாட்டின் விதி. அவளுடைய சமிக்ஞையை அவன் புரிந்துகொண்டு புதருக்குப் பின்னால் ஓடினான். அங்கு செடி மண்டிய பள்ளம் இருந்தது அவனுக்குத் தெரியாது. அதில் அவன் விழுந்து கையில் காயம்பட்டது. ஆனால் உடனே அவன் சிரித்துக்கொண்டு எழுந்துவிட்டான், காடுஷா தன் கருவிழிகள் பளபளக்க,

பொறுப்பு ஏற்கும்பொழுது அடையும் ஆனந்தத்தை, நிக்லியுடாவ் அந்த வருஷக் கோடை விடுமுறையில், தன் அத்தைகளின் கிராமத்தில் அடைந்தான். ஸ்பென்ஸரின் சமூக தத்துவத்தைப் படித்தான். நிலபாத்தியதை பற்றிய அவருடைய கருத்துக்கள் அவனுக்கு மிகவும் பிடித்திருந்தன. அவனுடைய தந்தை பெரிய பணக்காரரல்ல. ஆனால் அவனுடைய தாயக்கு ஸ்ரீதனமாகப் பதினாயிரம் ஏகரா நிலம் கிடைத்தது. அதற்கு அவன்தான வாரிசு. அவ்வளவு நிலத்தில் ஒருவனுக்குச் சொந்த பாத்யதை இருப்பதில் உள்ள கொடுமையையும் அதர்மத்தையும் அப்பொழுது அவன் உணர்ந்தான். மனச்சாட்சியின தூண்டுதலை முன்னிட்டு தியாகம் செய்வதில் ஆத்மானந்தம் அடைகிறவர்களில் அவனும் ஒருவனாகையால், சொத்துக்களின் உரிமையைத் தான் வைத்துக் கொள்ளாமல் தனக்குக் கிடைக்கும் நிலங்களைக் குடியானவர்களுக்கு பிரித்துக் கொடுத்துவிட அவன் தீர்மானித்தான். இந்தப் பிரச்னையைப் பற்றித் தான் அவன் கட்டுரை எழுதிக்கொண்டிருந்தான்.

தன் அத்தையின் கிராமத்தில் அவன் தங்கியிருந்த பொழுது அதிகாலை மூன்று மணிக்கே—சூரிய உதயத்திற்கு முன்னாலேயே எழுந்து பனியில் மலையடிவாரத்தில் உள்ள ஆற்றுக்குப் போய்க் குளிப்பான். புல் நுனிகளிலும் பூவிதழ்களிலும் படிந்திருக்கும் பனித்துளிகள் மறைவதற்கு முன் வீடு திரும்புவான். சில சமயங்களில் காபியைக் குடித்துவிட்டு, தன் கட்டுரைக்கு வேண்டிய புத்தகங்களை ஆராய்வான். ஆனால் பெரும்பாலும் எழுதுவதற்கும் படிப்பதற்கும் பதிலாக மறுபடியும் வீட்டைவிட்டுப் புறப்பட்டு நிலங்களிலும் காடுகளிலும் சுற்றுவான். சாப்பாட்டுக்கு முன்னால் தோட்டத்தின் ஒரு பக்கத்தில் படுத்துத் தூங்குவான். சாப்பாட்டு வேளையில் தன் அத்தைகளைக் குஷிப்படுத்துவான். பிறகு குதிரை சவாரி செய்யவோ அல்லது ஆற்றுக்குச் சென்று நீந்தவோ செய்வான். மாலையில் படிப்பான், அல்லது ஏதாகிலும் விளையாடுவான்.

இராக்காலங்களில்—விசேஷமாக நிலாக்காலங்களில் அவனுக்குத் தூக்கம் பிடிக்காது. வாழ்க்கையின் இன்பலாகிரி அவனிடம் நிறைந்திருக்கும். தன் கருத்துக்களோடும் கனவுகளோடும் தோட்டத்தில் சுற்றித் திரிவான். சில சமயங்களில் உதயமாகும் வரையில் கூடச் சுற்றிக்கொண்டிருப்பான்.

அத்தை வீட்டில் ஒரு மாதம் அமைதியாகவும் ஆனந்தமாகவும் கழிந்தது. அவர்கள் வீட்டில் வேலை செய்துகொண்டிருந்த காடுஷாவைக் கவனிக்கவில்லை. தன் தாயின் பாதுகாப்பில் வளர்ந்த அவன் பத்தொன்பதாவது வயதிலும் பரி

சுத்தமாகவே இருந்தான். அவன் கனவில் ஒரு ஸ்திரீ தோன்றுவாளாகில் அவள் அவனுடைய மனைவி என்ற முறையிலேயே தோன்றுவாள். அவன் கருத்துப்படி, அவன் மணக்க முடியாத மற்றெல்லா ஸ்திரீகளும் சாதாரண மனிதப் பிறவிகளாகவே அவனுக்குத் தோன்றினார்கள்.

ஆனால் அஸென்ஷன் தினப் பண்டிகையன்று அடுத்த வீட்டுக்காரியும் அவளுடைய இரு பெண்களும் ஒரு பள்ளிக்கூடச் சிறுவனும், அவர்களோடு தங்கியிருந்த ஒரு இளம் குடியானவச் சைத்திரிகனும் அவனுடைய அத்தை வீட்டுக்கு வந்தார்கள்.

டீ குடித்தபின் வீட்டுக்கு எதிரே இருந்த புல்வெளியில் அவர்கள் விளையாடப் போனார்கள். காடூஷாவும் அவர்களுடன் சேர்ந்துகொண்டாள். அவளை நிக்லியுடாவ் பிடித்துவிட்டான். அவன் அவளோடு சேர்ந்து விளையாட வேண்டியதாயிற்று. அதுவரை காடூஷாவின் பார்வை அவனுக்குப் பிடித்திருந்தது. ஆனால் அவளோடு வேறு நெருங்கிய உறவு பற்றி அவன் சிந்தித்ததில்லை.

“அந்த இரண்டு பேரும் தவறி விழுந்தாலொழிய அவர்களைப் பிடிக்கவே முடியாது” என்றான் இளம் சைத்திரிகன். அப்பொழுது பிடிக்க வேண்டுவது அவனுடைய முறை. பலம் நிறைந்த கால்களோடு கூடிய அவன், வெகு வேகமாக ஓடுவான்.

“நீயா!... ..எங்களையா பிடிக்க முடியவில்லை?” என்றாள் காடூஷா.

“ஒன்று, இரண்டு, மூன்று,” சைத்திரிகன் கையைத் தட்டினான். காடூஷா சிரிப்பை அடக்க முடியாமல், அவனிடம் பிடிபடாமல் அவனுடைய இடதுபுறமாக ஓடினாள். அவன் திரும்பிப் பார்த்தபொழுது, சைத்திரிகன் அவளைத் துரத்திக் கொண்டு ஓடுவதைக் கண்டான். அவள் அதி வேகமாக முன்னால் ஓடிக்கொண்டிருந்தாள். அங்கு லைலாக் பூஞ்செடிப் புதர் ஒன்று இருந்தது. அந்த புதருக்குப் பின்னால் வந்து தன்னுடன் சேர்ந்துகொள்ளும்படி நிக்லியுடாவுக்கு காடூஷா தன் தலையை ஆட்டிச் சமிக்ஞை செய்தாள். அவர்கள் மறுபடியும் கைகோர்த்துக் கொண்டு விட்டால் துரத்துபவன் அவர்களைப் பிடிக்கக்கூடாது என்பது அந்த விளையாட்டின் விதி. அவளுடைய சமிக்ஞையை அவன் புரிந்துகொண்டு புதருக்குப் பின்னால் ஓடினான். அங்கு செடி மண்டிய பள்ளம் இருந்தது அவனுக்குத் தெரியாது. அதில் அவன் விழுந்து கையில் காயம்பட்டது. ஆனால் உடனே அவன் சிரித்துக்கொண்டு எழுந்துவிட்டான். காடூஷா தன் கருவிழிகள் பளபளக்க,

முகம் சந்தோஷத்தினால் ஒளிவீச, அவனை நோக்கிப் பறந்து வந்தாள். அவர்கள் கைகோர்த்துக் கொண்டனர்.

“அடிபட்டு விட்டதா?” என்று, காடுஷா தன் தலையைக் கோதிவிட்டுக் கொண்டே மேல் மூச்சு வாங்கக் கேட்டாள். அதரங்களில் இனிய புன்னகையோடு அவனை நிமிர்ந்து பார்த்தான் நிக்லியுடாவ்.

“அங்கு பள்ளம் இருந்தது தெரியாது” என்று அவளுடைய கையைப் பிடித்தபடி, அவனும் புன்சிரிப்புடனேயே கூறினன். அவள் அவன் அருகே வந்தாள். அவனும் தன்னை அறியாமல் அவள் பக்கம் சாய்ந்தான். அவள் பின்னடையவில்லை. அவன் அவளுடைய கையை அழுத்திப் பிடித்துக் கொண்டு அவளுடைய இதழ்களில் முத்தமிட்டான்.

உடனே அவள் தன் கையை விடுவித்துக் கொண்டு ஓடி விட்டாள்.

மலர்கள் உதிர்ந்துகொண்டிருந்த லைலாக் கிளை ஒன்றை அவள் ஒடித்து, உஷ்ணம் ஏறிய தன் முகத்தை அதனால் வீசிக்கொண்டாள். பிறகு தலையைத் திருப்பி அவனைப் பார்த்துக் கொண்டே, கைகளை வீசி, எதிர்ப்பக்கம் நடந்து சென்று மற்றவர்களோடு சேர்ந்துகொண்டாள்.

இதற்குப் பிறகு, அன்பினால் பிணைக்கப்பட்ட ஓர் இளைஞனுக்கும் பெண்ணுக்கு மிடையில் இருக்கக்கூடிய விசித்திரமான உறவு நிக்லியுடாவுக்கும் காடுஷாவுக்கு மிடையில் ஏற்பட்டது.

நிக்லியுடாவின் அறைக்குள் காடுஷா வந்தாலும், அல்லது அவளுடைய வெள்ளை உடையை எங்காவது அவன் கண்டு விட்டாலும், சூரியன் உதயமானவுடன், பிரபஞ்ச மெல்லாம் ஆனந்தஸாகரத்தில் ஆழ்வது போல அவனுடைய கண்களில் ஒளிவீசும்: அவளுக்கும் அப்படித்தான். காடுஷாவின் தோற்றம் மாத்திரம் அவனை அப்படிச் செய்யவில்லை. காடுஷா இருக்கிறாள் என்ற எண்ணமே (அவளுக்கு நிக்லியுடாவ் இருக்கிறான் என்ற எண்ணமே) இந்த உணர்ச்சிகளைத் தூண்டியது.

அவன் தாயிடமிருந்து அவனுக்கு வருத்தம் அளிக்கக் கூடிய கடிதம் வந்தாலும், கட்டுரையை எழுத முடியாமல் இருந்தாலும், இளைஞர்களுக்கு வழக்கமாக ஏற்படும் காரணமற்ற சோக உணர்ச்சி தோன்றினாலும் காடுஷாவை நினைத்துக் கொள்ள வேண்டுவது, அல்லது அவளைப் பார்க்க வேண்டுவது தான் பாக்கி. எல்லாம் பறந்துபோய்விடும்.

காடுஷாவுக்கு வீட்டில் அதிக வேலை இருந்தது. ஆனால் படிப்பதற்கும் சிறிது அவகாசம் கிடைக்கும்படி செய்து கொண்டாள். அவன் படித்த டால்ஸ்டாவ்ஸ்கியின் கதைகளையும், டர்கெனேவின் கதைகளையும் அவளுக்குக் கொடுப்பான். ரேழியிலோ, தாழ்வாரத்திலோ, வாசலிலோ அவர்கள் சந்திக்கும்பொழுதெல்லாம் அவர்கள் பேசிக்கொள்வார்கள். சில சமயங்களில் அத்தையின் கிழ வேலைக்காரி மாட்ரேனா பாவ்லோவ்னாவின் அறையிலும் அவர்கள் சந்தித்துப் பேசிக்கொள்வது வழக்கம். மாட்ரேனா பாவ்லோவ்னாவின் முன் பேசும் விஷயங்கள் ரொம்பவும் ஸ்வாரஸ்யமாக இருக்கும். அவர்கள் தனியாக இருக்கும் பொழுது நிலைமை இன்னும் மோசம். அவர்களுடைய வாய் பேசுவதைக் காட்டிலும் இன்னும் முக்கியமான வேறு ஏதோ ஒரு விஷயத்தைப் பற்றி அவர்களுடைய கண்கள் பேசத் தொடங்கும். அவர்களைச் சீக்கிரம் பிரிந்துபோகும்படி செய்யும் ஏதோ ஒரு பயங்கரத்தை அவர்கள் காண்பார்கள்.

நிக்லியுடாவ் தன் அத்தை வீட்டில் தங்கி யிருந்தவரை அவனுக்கும் காடுஷாவுக்கு மிடையில் இதே உறவு நீடித்தது. அத்தைகள் இதைக் கவனித்து பயந்துவிட்டார்கள். நிக்லியுடாவின் தாயாரான ஹெலனா ஐவனோவ்னா கோமகளுக்கு இதைப்பற்றிக் கடிதம்கூட எழுதினர். காடுஷாவோடு அவன் முறையற்ற உறவுகொண்டு விடுவானோ என்று அவனுடைய அத்தை, மேரி ஐவனோவ்னா அஞ்சினாள். ஆனால் அவளுடைய பயத்திற்கு ஆதாரமில்லை. காடுஷாவின்மீது நிக்லியுடாவ் பரிசுத்தமான முறையில் அன்பு செலுத்தினான். அவனுடைய நன்மையும் அவளுடைய நன்மையும் இதில்தான் இருந்தன. அவளுடைய உடல்மீது உரிமை செலுத்த வேண்டுமென்ற ஆவல் அவனுக்கு இல்லை. அந்த எண்ணமே அவனுக்கு நடுக்கத்தை ஏற்படுத்தியது. "மிகவும் கண்டிப்பான ஸ்வபாவம் உடைய அவன், காடுஷாவைக் காதலித்து, அவளுடைய பிறப்பையும் அந்தஸ்த்தையும் லக்ஷியம் செய்யாமல் அவளையே மணக்கவேண்டுமென்று பிடிவாதம் செய்தால் என்ன செய்வது?" என்று அவனுடைய மற்றொரு அத்தையான ஸோபியா ஐவனோவ்னா பயந்தாள். முதல் அத்தையின் பயத்தைக் காட்டிலும் இவளுடைய சந்தேகத்திற்கு அதிக ஆதாரம் இருந்தது.

காடுஷா மீது நிக்லியுடாவ் கொண்டிருந்த காதலை அவன் அப்பொழுது அறிந்திருந்தால், காடுஷாபோன்ற கீழான அந்தஸ்த்தில் உள்ள ஒரு பெண்ணின் வாழ்க்கையோடு அவன் தன்னுடைய வாழ்க்கையைப் பிணைத்துக் கொள்ளக்கூடாதென்று அவனிடம் யாராவது சொல்லியிருந்தாலும், அவன் தன்னுடைய வழக்கமான கண்டிப்பு சுபாவத்தினால், தான் காதலிக்கும் பெண் யாராக இருந்தபோதிலும் அவளையே மணப்பதென்று தீர்மானித்து விட்டிருப்பான். ஆனால் அவன்

ஆபாசப் பேச்சுக்கள் பேசி, பிரெஞ்சு நாடகங்களைப் பார்த்து விட்டுவந்து, அங்குதான் கேட்டவற்றைக் குஷியாகத் திருப்பிச் சொன்னபொழுது அவனைக் கண்டு அனைவரும் பெருமைப்பட்டுக்கொண்டதோடு அவனை உற்சாகப்படுத்தவும் செய்தனர். அவன் பழைய கோட் அணிந்து, சாராயம் குடிக்காமல் செலவைக் குறைக்க முயன்றபொழுது அவனுடைய நடத்தையை விசித்திரமாக நினைத்தார்கள். அவன் வேஷம் போடுவதாகக் கருதினார்கள். வேட்டையாடுவதிலோ, தன்னுடைய அறையை அலங்கரிப்பதிலோ, அவன் ஏராளமான தொகையைச் செலவிட்டபொழுது அனைவரும் அவனைப் பாராட்டி, அவனுடைய கலையை அபிவிருத்தி செய்ய விலையுயர்ந்த பொருள்களைப் பரிசாக அளித்தனர். அவன் பரிசுத்தமாக இருந்தபொழுது அவனுடைய ஆரோக்கியத்தைப் பற்றி அவனுடைய நண்பர்கள் கவலைப்பட்டார்கள். ஆனால் அவன் ஒரு பிரெஞ்சு ஸ்திரீயுடன் நட்புக்கொண்டிருப்பதாக அறிந்தபொழுது அவனுடைய தாயார் கூடக் கவலைப்படவில்லை. இதற்கு மாறாகத் தன் மகன் 'உண்மை' மனிதனாக ஆனது பற்றிச் சந்தோஷித்தாள். அவனுக்கு வயதுவந்து, அவனுக்குக் கிடைத்த அவனுடைய தந்தையின் நிலங்களை விவசாயிகளுக்குப் பகிர்ந்து கொடுத்தபொழுது அவனுடைய தாயாரும் குடும்பத்தினரும் பிரமித்தனர். அவனுடைய உறவினர்கள் அவனைக் கேலிசெய்ய இது ஒரு காரணமாயிற்று. குடியானவர்கள் இந்த நிலங்களைப் பெற்றதால் பணக்காரர்களாகிவிடவில்லையென்றும், இன்னும் ஏழைகளாகி விட்டதாகவும், வேலை செய்வதையே அவர்கள் விட்டுவிட்டதாகவும் அவனிடம் பலர் சதா சொல்லிக்கொண்டிருந்தார்கள். ஆனால் அவன் தன்னுடைய ஆடம்பரமான நண்பர்களுடன் சேர்ந்துகொண்டு சூதாட்டத்தில் ஏராளமாகப் பணம் செலவிட்டபொழுது அவனுடைய தாய் வருத்தப்படாமல், தன் மூலதனத்திலிருந்து பணம் எடுத்துக் கொடுத்தாள். சிறு வயதில் தக்க நண்பர்களுடன் சேர்ந்துகொண்டு இவ்விதம் நடப்பது சரியே என்றும், அவசியமென்றும் கூட அவள் நினைத்தாள். நெக்லியுடாவ் கடுமையாகப் போராடினான். அவன் தன்னைத்தான் நம்பியிருந்தபொழுது, நல்லவை என்று நினைத்தவற்றையெல்லாம் தீயவை என்றும், தீயவை என்று நினைத்தவற்றையெல்லாம் நல்லவை என்றும் அவனைச் சுற்றி இருந்தவர்கள் கருதினார்கள். ஆனால் போராட்டம் மிகவும் கடுமையாக இருந்தது. கடைசியில் நெக்லியுடாவ் விட்டுக்கொடுத்து விட்டான். அவன் தன்னைத்தானே நம்புவதை விட்டுவிட்டு பிறர் மீது நம்பிக்கை வைத்தான். முதலில் அவனுக்கு இது பிடிக்கவில்லை. ஆனால் போகப்போகச் சரியாகிவிட்டது. அந்த சமயத்தில் அவன் புகை குடிக்கவும் மதுபானம் செய்யவும் கற்றுக்கொண்டான்.

அதனால் அவனுடைய அதிருப்தி மறைந்து அதிக நிம்மதி கூட ஏற்பட்டது!

நிக்லியுடாவ் தயக்கமின்றி இந்தப் புதிய வாழ்க்கையை நடத்தினான். இதைத் தடுத்துக் கூறிய அந்தராத்மாவை அடைக்கிவிட்டான். அவன் பீடர்ஸ்பர்க்குக்குச்சென்றபொழுது இது ஆரம்பமாயிற்று. அவன் ராணுவத்தில் சேர்ந்த பின் உச்சநிலையை அடைந்தது.

ராணுவ வாழ்க்கையே மனிதர்களைக் கெடுத்து விடுகிறது. அது அவர்களைச் சோம்பேறிகளாக்கி விடுகிறது, அவர்களை அது மனிதனின் கடமைகளை மறக்கச் செய்து வெறும் சம்பிரதாயக் கடமைகளை அனுஷ்டிக்குமாறு செய்துவிடுகிறது. ஒரு புறம் அது மற்றவர்கள் மீது பூரண அதிகாரம் அளித்த போதிலும், மேல் அதிகாரிகளுக்கு அவர்களை அடிமைகளாக்கி விடுகிறது.

கௌரவம், ராணுவ உடை, கொடி, பலாத்காரமும் கொலையும் செய்ய அளிக்கப்பட்டுள்ள அதிகாரம் முதலியவற்றினால் ஏற்படும் நிலைகளோடு, பணத்தினாலும் பெரிய இடத்துப் பழக்கத்தினாலும் ஏற்படும் நிலையும் சேர்ந்துகொள்கிறது. இதனால் பெரும் சுயநல மனப்பான்மை வந்துவிடுகிறது. நிக்லியுடாவ் ராணுவத்தில் சேர்ந்தவுடனேயே அவனைச் சுயநல ஆசை தாக்கியது. தன்னுடைய சகாக்களைப் போலவே வாழ்க்கை நடத்தத் தொடங்கினான். அழகாக உடையணிந்து குதிரைமீது ஏறிக்கொண்டு பயிற்சிக்குச் செல்வதைத் தவிர அவனுக்கு வேறு வேலையே இல்லை. அந்த உடைகளைக் கூட மற்றவர்கள் பிரஷ்ஷினால் துடைத்து வைத்துவிடுவார்கள். ஆயுதங்களையும் பிறர் சுத்தமாகத் துடைத்து அவனிடம் கொடுத்து விடுவார்கள். அவன் சவாரிசெய்யும் குதிரையையும் வேறு யாராவது போஷித்து விடுவார்கள். பயிற்சி நடக்கும் இடத்தில் தன்னைப் போன்ற மற்றவர்களோடு அவனும் வாளைச் சுழற்ற வேண்டும். இதை மற்றவர்களுக்குக் கற்பிக்க வேண்டும். அவனுக்கு வேறு வேலையே இல்லை. சிறியவர்களும் பெரியவர்களும் மன்னனும் மற்றவர்களும் இதற்காக அவனைப் பாராட்டியதோடு நில்லாமல் அவனுக்கு நன்றி செலுத்தவும் செய்தார்கள்.

பெரிய ஹோட்டலில் சாப்பிடுவதிலும் குடிப்பதிலும் எங்கிருந்தோ வந்த பணத்தை வாரி இரைப்பது, இதைக் காட்டிலும் முக்கியமென்று கருதப்பட்டது. இதற்கு மேல் நாடகக் கொட்டகைகள், விளையாட்டு, பெண்கள்—மறுபடியும் குதிரை சவாரி, வாள்வீச்சு, குதிப்பு, மறுபடியும் பணத்தைச் செலவிடுவது, சாராயம், சீட்டாட்டம், பெண்கள்.

அவனைக் கேள்வி கேட்பதுபோல் அவள் பார்த்தாள். அவன் வெட்கமடைந்தான். அவளுடைய தாயார் அழைத்திருந்தால், தான் சந்தோஷத்துடன் பார்க்க விரும்புவதாகச் சொன்னான்.

வீட்டு எஜமானியாகிய சோபியா வாஸிலிவெவ்னு படுக்கையை விட்டு எழுந்திருப்பதில்லை. இப்படி எட்டு வருஷங்கள் ஆகிவிட்டன. வீட்டுக்கு யாராவது விருந்தினர் வந்தால் அவள் ஆடம்பரமான ஆடைகளை அணிந்து, சுற்றிலும் புஷ்பங்களையும், தந்தம் வெள்ளி முதலிய விலை உயர்ந்த பொருள்களையும் அறையை அலங்கரித்து வைத்துக் கொண்டு படுத்திருப்பாள். அவள் எங்கும் வெளியில் போவதேயில்லை. ரொம்பவும் நெருங்கிய நண்பர்களைத்தான் தன் அறையில் வரவேற்பாள்.

''நீங்கள் வந்தால் அம்மாவுக்கு ரொம்பவும் சந்தோஷமாக இருக்கும். நீங்கள் அங்கு புகை கூடக் குடிக்கலாம்'' என்ருள் மிஸ்ஸி.

மிஸ்ஸிக்கு விவாகம் செய்து கொள்ள வேண்டுமென்ற ஆவல். அதற்கு அவன் தக்க வரன். அவளுக்கும் அவனை மிகவும் பிடித்திருந்தது. ஆகையால் அவன் தனக்குச் சொந்தமானவன் என்று (தான் அவனுக்குச் சொந்தமானவள் என்று அல்ல) நினைத்து நினைத்து அவனுக்குப் பழகிய போயிருந்தது. அதே மனோபாவத்துடன் தான் இப்பொழுதும் பேசினாள்.

தாயாரின் அறைக்குப் போகும் வழியில் அவள் சற்று நின்று, ''ஏதோ விசேஷம் நடந்திருப்பதாகத் தோன்றுகிறது. அது என்னவென்று சொல்லுங்கள்'' என்ருள்.

அவன் உண்மையைக் கூற விரும்பி, ''ஆமாம்; விசேஷம் நடந்துதான் இருக்கிறது. மிகப் பெரிய சம்பவம்'' என்ருன்.

''அப்படியானுல் அது என்ன? அதைச் சொல்ல முடியாதா?'' என்ருள்.

''இப்பொழுது சொல்ல முடியாது. தயவு செய்து அதைப் பற்றிக் கேட்காதே. அதை தீர்க்கமாக ஆலோசிக்கக் கூட எனக்கு அவகாசம் கிடைக்கவில்லை'' எனருன் நிக்லியுடாவ்.

''ஆனுல் அதைச் சொல்ல மாட்டீர்களா?'' என்று அவள் முகத்தைச் சுளித்துக் கொண்டே கேட்டாள்.

"இல்லை, சொல்ல முடியாது" என்று அவன் பதில் அளித்துவிட்டான்.

அருவருப்பான சிந்தனைகளை உதறித் தள்ளுவதுபோல் அவன் தன் தலையை ஒருமுறை குலுக்கிக்கொண்டு "சரி, வாருங்கள்" என்று சொல்லிவிட்டு வேகமாக முன்னால் நடந்தான்.

துக்கத்தை அடக்குவதற்காக அவள் வாயை இறுக மூடிக் கொண்டிருந்ததாக அவனுக்குத் தோன்றியது. அவள் மனத்தைப் புண்படுத்தியதற்காக அவன் வெட்கமடைந்தான். ஆனால் கொஞ்சம் விட்டுக்கொடுத்திருந்தாலும் விபரீதம் நடந்திருக்கும் என்பது அவனுக்குத் தெரியும். அது அவனோடு அவளைப் பிணைத்துவிடும் என்பதையும் அறிந்திருந்தான். இன்று அந்த பயம் இன்னும் அதிகமாக இருந்தது. அவன் மௌனமாக அவளைப் பின் தொடர்ந்து, அவளுடைய தாயின் அறையை நோக்கி நடந்தான்.

## 27

**ஸோ**பியா வாஸிலியெவ்னு ஆடம்பரமான தன் போஜனத்தை முடித்துக்கொண்டாள். அவள் எப்பொழுதும் தனியாகச் சாப்பிடுவது வழக்கம். அவளுடைய ஸோபாவுக்குப் பக்கத்தில் ஒரு மேஜைமீது காபி தயாராக வைத்திருந்தது. அவள் புகை குடித்துக்கொண் டிருந்தாள். அவள் ஒல்லியான உயர்ந்த தோற்றமும், கரும் கூந்தலும், அகன்ற கருவிழிகளும், நீண்ட பற்களும் உள்ளவள். இன்னும் இளம் பெண்போல் நடந்தாள்.

குடும்ப டாக்டரோடு அவள் கொண்டிருந்த நேசத்தைப் பற்றி ஊரெல்லாம் பேசிக்கொண்டார்கள். நிக்லியுடாவுக்கு இது சிறிது காலமாகவே தெரியும். அந்த டாக்டர் பளபளக்கும் தாடியும் தானுமாக அவளுடைய ஸோபாவின் பக்கத்தில் உட்கார்ந்திருந்ததைப் பார்த்தபொழுது அவர்களைப் பற்றிய வதந்திகள் ஞாபகம் வந்ததோடு அருவருப்பும் ஏற்பட்டது. அவள் பக்கத்தில் கோலோஸோவ் காபியை ஆற்றிக்கொண்டு உட்கார்ந்திருந்தான். மேஜையின்மீது ஒரு கண்ணாடி டம்ளர் நிறைய சாராயம் வைத்திருந்தது. மிஸ்ஸி நிக்லியுடாவோடு உள்ளே பிரவேசித்தாள். ஆனால் அங்கு அதிகநேரம் நிற்கவில்லை.

"அம்மாவுக்கு அலுக்கும்வரை இங்கு இருந்துவிட்டுப் பிறகு நான் இருக்கும் இடத்திற்கு வாருங்கள்" என்று அவள்

சிலுவையை முத்தமிட்டனர். நெருங்குவதற்காக அவர்கள் ஒருவரை ஒருவர் முணுமுணுத்துத் திட்டிக்கொண்டனர். பாதிரியார் சிறை இன்ஸ்பெக்டருடன் பேசிக்கொண்டே தம் கையையும், சிலுவையையும் கைதிகள் முத்தமிடுவதற்குக் காட்டிக்கொண்டிருந்தார். வழுக்கி விழுந்துவிட்ட கைதிகளின் உஜ்ஜீவனத்திற்காக ஏற்பட்டதொழுகை இவ்விதம் முடிந்தது.

# 40

ஏசுவின் பெயரைப் பாதிரியார் பன்முறை திருப்பித் திருப்பி உச்சரித்துப் புகழ்பாடினார். ஆனால் அங்கு நடந்தவற்றை அதே ஏசு எதிர்க்கிறார் என்பதை சிறை இன்ஸ்பெக்டர் முதல் காடுஷாவரை அங்கு கூடியிருந்தவர்களில் ஒருவரும் அறியவில்லை. "ஒரு மனிதன் மற்றொரு மனிதனை எஜமானே என்று அழைப்பதையும், கோயிலில் பிரார்த்தனை செய்வதையும் ஏசுநாதர் தடுத்திருக்கிறார் என்பதும், ஒவ்வொருவரும் ஏகாந்தமாக இருந்துப் பிரார்த்தனை நடத்த வேண்டும் என்பதும் அவர்களுக்குத் தெரியாது.கோயில் கட்டுவதை ஏசுநாதர் தடுத்திருக்கிறார். கோயில்களை அழிக்கவே தாம் வந்திருப்பதாக அவர் கூறியிருக்கிறார். கோயிலில் பிரார்த்தனை செய்வதற்கு பதில் சத்தியமாகவும், மனப்பூர்வமாகவும் பிரார்த்தனை செய்யவேண்டுமென்று சொல்லியிருக்கிறார். பிறரைப் பற்றித் தீர்ப்புக் கூறுவது. அவர்களைச் சிறையில் தள்ளுவது. மனிதர்களைத் தூக்கிலிடுவது முதலியவற்றை அவர் எதிர்க்கிறார். எந்தவிதமான பலாத்காரமும் கூடாதென்று அவர் உத்திரவுசெய்திருக்கிறார்; எல்லா அடிமைகளுக்கும் சுதந்திரம் அளிக்கவே தாம் வந்ததாக அவர் கூறினார்", என்பதெல்லாம் அவர்களுக்குத் தெரியாது.

கிறிஸ்துபிரானின் பெயரால் செய்யப்படும் இந்தச் சடங்குகளெல்லாம் அவரைப் பரிகஸிப்பதற்கு ஒப்பாகும் என்பதை அவர்கள் உணர்ந்ததாகத் தெரியவில்லை. இங்கு நடைபெற்ற இதே சடங்குகளைக் கண்டித்ததற்காக ஏசுநாதர் சிலுவையில் அறையப்பட்டார். தாங்கள் முத்தமிட்ட சிலுவை ஏசுநாதர் மரிப்பதற்குக் காரணமாக இருந்த தூக்குமரத்தின் சின்னம் என்பதை அங்கு ஒருவரும் உணரவில்லை. கடவுளின் மாமிசத்தைத் தின்று ரத்தத்தைக் குடிப்பதாகக் கற்பனைசெய்து கொள்ளும் பாதிரிமார் சிறுவர்களைக் கெடுத்து அவர்கள் சந்தோஷமடையாதபடி தடுக்கும் குற்றத்திற்கு ஆளாகினர்கள் என்பதை ஒருவரும் உணரவில்லை.

மனச்சாட்சியின் குத்தல் இல்லாமல் பாதிரியார் இதையெல்லாம் செய்தார். சிறு வயது முதலே அவர் இப்படிப் பயிற்சி பெற்றிருக்கிறார். ரொட்டி மாமிசமாக மாறி விட்டதாகவோ, சில வார்த்தைகளைத் திருப்பித் திருப்பிச் சொல்வதால் ஆத்மாவுக்கு உபயோகம் உண்டென்றோ, கடவுளின் ஒரு பகுதியைத் தாம் உட்கொண்டதாகவோ அவர் உண்மையில் நம்பவில்லை. ஒருவரும் இவற்றை நம்ப முடியாது. ஆனால் இதைச் செய்து தான் ஆக வேண்டுமென்று அவர் நினைத்தார். தம் குடும்பத்தைக் காப்பாற்றிக் கொள்ளவும், குழந்தைகளைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பவும் போதிய பணம் இதிலிருந்து வந்ததால் அவருடைய நம்பிக்கை இன்னும் பலப்பட்டது. சின்ன சாமியாருக்கு இந்த நம்பிக்கை இன்னும் பலமாக இருந்தது. ஏனென்றால் மதத்தின் அடிப்படைத் தத்துவத்தை அவர் மறந்து விட்டார். தொழுகை பிரார்த்தனை எல்லாவற்றிற்கும் பணம் உண்டு என்பதை அவர் அறிந்திருந்தார். உண்மைக் கிறிஸ்தவர்கள் இவற்றிற் கெல்லாம் தாராளமாகப் பணம் கொடுத்தார்கள். ஆகையால், "கருணை புரிய வேண்டும் கருணை புரிய வேண்டும்." என்று அவர் கூறிய வார்த்தைகளெல்லாம் மனப்பூர்வமாக வந்தவையே. பிறகு, உருளைக்கிழங்கு முதலியவற்றை விற்பவர்களின் குரலில் எவ்வளவு உறுதி தொனிக்கிறதோ அவ்வளவு இவர் மந்திரம் ஓதும்பொழுது இவருடைய குரலிலும் தொனித்தது. கோவிலுக்குச் சென்ற சிறை இன்ஸ்பெக்டருக்கோ மற்றவர்களுக்கோ இவையெல்லாம் புரியவில்லை. இருந்தாலும் மன்னரே நம்பியதால் தாங்களும் நம்ப வேண்டும் என்பது அவர்களுடைய கருத்து. தங்கள் கொடுஞ் செயல்களுக்கு இந்த நம்பிக்கை ஆதரவாக இருப்பதாக அவர்களுக்குத் தோன்றியது. இது இல்லாமலிருந்தால் தங்கள் அதிகாரத்தை உபயோகித்து இவ்வளவு கொடுஞ் செயல்கள் புரிவது அவர்களுக்கு அசாத்தியமாகி விட்டிருக்கும். சிறை இன்ஸ்பெக்டர் இயற்கையிலேயே மிகவும் நல்ல மனுஷ்யன். இந்த நம்பிக்கை இல்லாமலிருந்தால் இப்பொழுதும் செய்யும் செய்கைகளோடு உயிர் வாழ மாட்டார். அதனால் தான் அவர் பக்தியோடு பணிந்தார். தேவர்களைப்பற்றிப் பாடிய பொழுது மனங்கசிய முயன்றார்.

இந்த வாழ்க்கையிலும் மறு உலகத்திலும் சுகபோகங்களைக் கொடுக்கக் கூடிய ஏதோ ஒரு விசித்திர சக்தி அங்கு இருந்த சிலையிலும் மெழுத வத்தி ஸ்டாண்டிலும் பளபளக்கும் கிண்ணங்களிலும் தட்டுகளிலும் இருப்பதாக கைதிகள் நினைத்திருந்தனர். இந்தமதத்தை தழுவுபவர்கள் எவ்வளவு ஏமாற்றுக்குஉள்ளாகிறார்கள என்பதை அறிந்து தங்கள மனத்திற்குள்ளேயே சிரித்துக்கொண்டவர்கள் ஒரு சிலர் தான். பெரும்பாலானவர்கள் பிராத்தனைகளின் மூலம் முயற்சி செய்தும் தாங்கள் கோரியவற்றைப் பெற வில்லை. (அவர்களுடைய பிராத்

சிலுவையை முத்தமிட்டனர். நெருங்குவதற்காக அவர்கள் ஒருவரை ஒருவர் முணுமுணுத்துத் திட்டிக்கொண்டனர். பாதிரியார் சிறை இன்ஸ்பெகடருடன் பேசிக்கொண்டே தம் கையையும், சிலுவையையும் கைதிகள் முத்தமிடுவதற்குக் காட்டிக்கொண்டிருந்தார். வழுக்கி விழுந்துவிட்ட கைதிகளின் உஜ்ஜீவனத்திற்காக ஏற்பட்டதொழுகை இவ்விதம் முடிந்தது.

## 40

ஏசுவின் பெயரைப் பாதிரியார் பன்முறை திருப்பித் திருப்பி உச்சரித்துப் புகழ்பாடினுர். ஆனுல் அங்கு நடந்தவற்றை அதே ஏசு எதிர்க்கிறுர் என்பதை சிறை இன்ஸ்பெக்டர் முதல் காடுஷாவரை அங்கு கூடியிருந்தவர்களில் ஒருவரும் அறியவில்லை. "ஒரு மனிதன் மற்ரெருரு மனிதனை எஜமானே என்று அழைப்பதையும், கோயிலில் பிரார்த்தனை செய்வதையும் ஏசுநாதர் தடுத்திருக்கிறுர் என்பதும், ஒவ்வொருவரும் ஏகாந்தமாக இருந்துப் பிரார்த்தனை நடத்த வேண்டும் என்பதும் அவர்களுக்குத் தெரியாது. கோயில் கட்டுவதை ஏசுநாதர் தடுத்திருக்கிறுர். கோயில்களை அழிக்கவே தாம் வந்திருப்பதாக அவர் கூறியிருக்கிறுர். கோயிலில் பிரார்த்தனை செய்வதற்கு பதில் சத்தியமாகவும், மனப்பூர்வமாகவும் பிரார்த்தனை செய்யவேண்டுமென்று சொல்லியிருக்கிறுர். பிறரைப் பற்றித் தீர்ப்புக் கூறுவது. அவர்களைச் சிறையில் தள்ளுவது. மனிதர்களைத் தூக்கிலிடுவது முதலியவற்றை அவர் எதிர்க்கிறுர். எந்தவிதமான பலாத்காரமும் கூடாதென்று அவர் உத்திரவுசெய்திருக்கிறுர்; எல்லா அடிமைகளுக்கும் சுதந்திரம் அளிக்கவே தாம் வந்ததாக அவர் கூறினுர்", என்பதெல்லாம் அவர்களுக்குத் தெரியாது.

கிறிஸ்துபிரானின் பெயரால் செய்யப்படும் இந்தச் சடங்குகளெல்லாம் அவரைப் பரிகஸிப்பதற்கு ஒப்பாகும் என்பதை அவர்கள் உணர்ந்ததாகத் தெரியவில்லை. இங்கு நடைபெற்ற இதே சடங்குகளைக் கண்டித்ததற்காக ஏசுநாதர் சிலுவையில் அறையப்பட்டார். தாங்கள் முத்தமிட்ட சிலுவை ஏசுநாதர் மரிப்பதற்குக் காரணமாக இருந்த தூக்குமரத்தின் சின்னம் என்பதை அங்கு ஒருவரும் உணரவில்லை. கடவுளின் மாமிசத்தைத் தின்று ரத்தத்தைக் குடிப்பதாகக் கற்பனைசெய்து கொள்ளும் பாதிரிமார் சிறுவர்களைக் கெடுத்து அவர்கள் சந்தோஷமடையாதபடி தடுக்கும் குற்றத்திற்கு ஆளாகிறுர்கள் என்பதை ஒருவரும் உணரவில்லை.

மனச்சாட்சியின் குத்தல் இல்லாமல் பாதிரியார் இதையெல்லாம் செய்தார். சிறு வயது முதலே அவர் இப்படிப் பயிற்சி பெற்றிருக்கிறார். ரொட்டி மாமிசமாக மாறி விட்டதாகவோ, சில வார்த்தைகளைத் திருப்பித் திருப்பிச் சொல்வதால் ஆத்மாவுக்கு உபயோகம் உண்டென்றோ, கடவுளின் ஒரு பகுதியைத் தாம் உட்கொண்டதாகவோ அவர் உண்மையில் நம்பவில்லை. ஒருவரும் இவற்றை நம்ப முடியாது. ஆனால் இதைச் செய்து தான் ஆக வேண்டுமென்று அவர் நினைத்தார். தம் குடும்பத்தைக் காப்பாற்றிக் கொள்ளவும், குழந்தைகளைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பவும் போதிய பணம் இதிலிருந்து வந்ததால் அவருடைய நம்பிக்கை இன்னும் பலப்பட்டது. சின்ன சாமியாருக்கு இந்த நம்பிக்கை இன்னும் பலமாக இருந்தது. ஏனென்றால் மதத்தின் அடிப்படைத் தத்துவத்தை அவர் மறந்து விட்டார். தொழுகை பிரார்த்தனை எல்லாவற்றிற்கும் பணம் உண்டு என்பதை அவர் அறிந்திருந்தார். உண்மைக் கிறிஸ்தவர்கள் இவற்றிற்கெல்லாம் தாராளமாகப் பணம் கொடுத்தார்கள். ஆகையால், "கருணை புரிய வேண்டும் கருணை புரிய வேண்டும்." என்று அவர் கூறிய வார்த்தைகளெல்லாம் மனப்பூர்வமாக வந்தவையே. விறகு, உருளைக்கிழங்கு முதலியவற்றை விற்பவர்களின் குரலில் எவ்வளவு உறுதி தொனிக்கிறதோ அவ்வளவு இவர் மந்திரம் ஓதும்பொழுது இவருடைய குரலிலும் தொனித்தது. கோவிலுக்குச் சென்ற சிறை இன்ஸ்பெக்டருக்கோ மற்றவர்களுக்கோ இவை யெல்லாம் புரிய வில்லை. இருந்தாலும் மன்னரே நம்பியதால் தாங்களும் நம்ப வேண்டும் என்பது அவர்களுடைய கருத்து. தங்கள் கொடுஞ் செயல்களுக்கு இந்த நம்பிக்கை ஆதரவாக இருப்பதாக அவர்களுக்குத் தோன்றியது. இது இல்லாமலிருந்தால் தங்கள் அதிகாரத்தை உபயோகித்து இவ்வளவு கொடுஞ் செயல்கள் புரிவது அவர்களுக்கு அசாத்தியமாகி விட்டிருக்கும். சிறை இன்ஸ்பெக்டர் இயற்கையிலேயே மிகவும் நல்ல மனுஷ்யன். இந்த நம்பிக்கை இல்லாமலிருந்தால் இப்பொழுதும் செய்யும் செய்கைகளோடு உயிர் வாழ மாட்டார். அதனால் தான் அவர் பக்தியோடு பணிந்தார். தேவர்களைப்பற்றிப் பாடிய பொழுது மனங்கசிய முயன்றார்.

இந்த வாழ்க்கையிலும் மறு உலகத்திலும் சுகபோகங்களைக் கொடுக்கக் கூடிய ஏதோ ஒரு விசித்திர சக்தி அங்கு இருந்த சிலையிலும் மெழுகு வத்தி ஸ்டாண்டிலும் பளபளக்கும் கிண்ணங்களிலும் தட்டுகளிலும் இருப்பதாக கைதிகள் நினைத்திருந்தனர். இந்தமதத்தை தழுவுபவர்கள்எவ்வளவுஏமாற்றுக்குஉள்ளாகிறார்கள் என்பதை அறிந்து தங்கள் மனத்திற்குள்ளேயே சிரித்துக்கொண்டவர்கள் ஒரு சிலர் தான். பெரும்பாலானவர்கள் பிரார்த்தனைகளின் மூலம் முயற்சி செய்தும் தாங்கள் கோரியவற்றைப் பெற வில்லை. (அவர்களுடைய பிரார்த்

"நடந்து போனவற்றையெல்லாம் நினைவு மூட்டிக்கொள்வதில் பயன் என்ன?" என்று வறண்ட குரலில் கேட்டாள் காடுஷா.

"தவறைத் திருத்திக்கொள்வதற்காக அவற்றை ஞாபகப் படுத்திக் கொண்டுதானே ஆகவேண்டும்? என் பாவத்திற்குப் பிராயச்சித்தம் செய்துகொள்வதற்காக அவற்றை மீண்டும் நினைப்பூட்டிக் கொள்கிறேன் காடுஷா" என்றான். "உன்னை நான் விவாகம் செய்துகொள்ள விரும்புகிறேன்" என்று சொல்ல வாயெடுத்தான். அதற்குள் அவன் பார்வை அவளுடைய கண்களின் மீது விழுந்தது. பயங்கரமான ஏதோ ஒன்றை அவளுடைய கண்களில் கண்டான். அதற்கு மேல் அவனால் பேச முடியவில்லை.

இந்த சமயத்தில், கைதிகளைப் பார்க்க வந்திருந்தவர்கள் வெளியே செல்லத் தொடங்கினார்கள். இன்ஸ்பெக்டர் அவனிடம் வந்து, "நேரமாகிவிட்டது" என்றார்.

"நான் போய் வருகிறேன். நான் சொல்ல வேண்டியது இன்னும் ரொம்ப இருக்கிறது. ஆனால் எல்லாவற்றையும் இப்பொழுது சொல்வது சாத்தியமில்லை. நான் உன்னை மறுபடியும் சந்திக்கிறேன்" என்று சொல்லிவிட்டு கையை நீட்டினான்.

சீக்கிரம் விடுபட்டால் போதும் என்ற உணர்ச்சியோடு காடுஷா சட்டென்று எழுந்தாள். "நீங்கள் எல்லாவற்றையும் சொல்லியாகி விட்டது என்று நினைத்தேன்" என்றாள் அவள். கையை அவள் பற்றினாளே தவிர அன்புடன் அழுத்திக் குலுக்கவில்லை.

"இல்லை; உன்னோடு இன்னும் நிதானமாகப் பேசக்கூடிய இடத்தில் உன்னை மறுபடியும் சந்திக்கிறேன். நான் சொல்ல வேண்டியதை அப்பொழுது உன்னிடம் சொல்கிறேன். நான் சொல்ல வேண்டிய முக்கியமான விஷயம் ஒன்று இருக்கிறது" என்றான் நிக்லியுடாவ்.

"சரி அப்படியானால் வாருங்கள்" என்று சொல்லிவிட்டு, தான் திருப்தி செய்ய விரும்புபவர்களைப் பார்த்துச் சிரிப்பது போல் சிரித்தாள் காடுஷா.

"நீ எனக்கு சகோதரியைக் காட்டிலும் மேலானவள்" என்றான் நிக்லியுடாவ்.

"இது விசித்திரமாக இருக்கிறதே" என்று சொல்லித் தலையை ஆட்டிவிட்டு அவள் சும்மா வலைக்குப் பின்னால் போய் விட்டாள்.

"நாடுஷா என்னைப் பார்த்தவுடன், அவளுக்குச் சேவைசெய்ய வேண்டுமென்ற என் விருப்பத்தை அறிந்தவுடன் அவள் சந்தோஷப்படுவாள். மீண்டும் பழைய காடுஷாவாகிவிடுவாள்" என்று, அவளைச் சந்திப்பதற்கு முன்னால் நினைத்திருந்தான் நிக்லியுடாவ். ஆனால் இவள் பழைய காடுஷாவாக இல்லாததைக் கண்டு அதிர்ச்சியடைந்தான்.

காடுஷா தன் விபசார வாழ்க்கையைப்பற்றி வெட்கப்படாததைக் கண்டு அவன் ஆச்சரியமடைந்தான். தன் வாழ்க்கையைப்பற்றி அவள் பெருமைப்பட்டாள். ஆனால் வேறு விதமாக இருக்க முடியாது. ஒவ்வொருவரும் தங்கள் தொழில் உயர்ந்ததென்றுதான் நினைக்கவேண்டியிருக்கிறது. ஒருவர் எந்த நிலைமையில் இருந்தாலும் தங்கள் தொழில் முக்கியமானதென்றும் நல்லதென்றும் தோன்றும் முறையில் தான் மற்றவர்களுடைய வாழ்க்கையைப் பற்றியும் அபிப்பிராயம் ஏற்படுத்திக் கொள்வார்கள்.

ஒரு திருடனோ கொலைகாரனோ உளவாளியோ அல்லது ஒரு விபசாரியோ தன் தொழில் கேவலமானது என்பதை உணர்ந்து வெட்கப்படுவதாகக் கருதப்படுகிறது. ஆனால் உண்மை இதற்கு மாறாக இருக்கிறது. விதிவசத்தினாலும் பாபச் செயல்களினாலும் கேவலமான நிலையை அடைந்துவிட்டவர்கள், தங்களுடைய நிலைமை நல்லதெனத் தோன்றும் முறையிலேயே அபிப்பிராயத்தை உருவாக்கிக் கொள்கிறார்கள். இந்தக் கருத்து மாறாமலிருக்கும் பொருட்டு தங்களைப் போன்ற அபிப்பிராயம் உள்ளவர்களுடன் மாத்திரமே பழகுகிறார்கள். திருடர்களும் கொலைகாரர்களும் விபசாரிகளும் தங்கள் செய்கையைப் பற்றிப் பெருமைப்படும்பொழுது நமக்கு ஆச்சரியமாக இருக்கிறது. அவர்களுடைய கோஷ்டி சிறியதாக இருப்பதாலும், நாம் அந்த கோஷ்டிக்கு வெளியே இருப்பதாலும்தான் நமக்கு இப்படி ஆச்சரியம் ஏற்படுகிறது. பணக்காரர்கள் கொள்ளையடித்துச் சம்பாதித்த தங்கள் பணத்தைப் பற்றியும், சேனாதிபதிகள், கொலையினால் கிடைத்த தங்கள் வெற்றிகளைப் பற்றியும், உயர்ந்த பதவியில் இருப்பவர்கள் தங்கள் பலாத்கார அதிகாரத்தைப் பற்றியும் பெருமை அடித்துக் கொள்ளும்பொழுதும் நாம் இப்படியே ஆச்சரியப்பட முடியாதா? ஆனால் அப்படிச் செய்வதில்லை. ஏனென்றால் இந்தக் கூட்டம் பெரியது. நாமே அந்த கோஷ்டியைச் சேர்ந்தவர்களாக இருக்கிறோம்.

காடுஷாவும் இப்படித்தான் வாழ்க்கையைப் பற்றிய தன் கருத்துக்களை உருவாக்கிக் கொண்டாள். அவள் தீவாந்திர

"நடந்து போனவற்றை யெல்லாம் நினைவு மூட்டிக்கொள்வதில் பயன் என்ன?" என்று வறண்ட குரலில் கேட்டாள் காடுஷா.

"தவறைத் திருத்திக் கொள்வதற்காக அவற்றை ஞாபகப் படுத்திக் கொண்டுதானே ஆகவேண்டும்? என் பாவத்திற்குப் பிராயச்சித்தம் செய்துகொள்வதற்காக அவற்றை மீண்டும் நினைப்பூட்டிக் கொள்கிறேன் காடுஷா" என்றான். "உன்னை நான் விவாகம் செய்துகொள்ள விரும்புகிறேன்" என்று சொல்ல வாயெடுத்தான். அதற்குள் அவன் பார்வை அவளுடைய கண்களின் மீது விழுந்தது. பயங்கரமான ஏதோ ஒன்றை அவளுடைய கண்களில் கண்டான். அதற்கு மேல் அவனால் பேச முடியவில்லை.

இந்த சமயத்தில், கைதிகளைப் பார்க்க வந்திருந்தவர்கள் வெளியே செல்லத் தொடங்கினார்கள். இன்ஸ்பெக்டர் அவனிடம் வந்து, "நேரமாகிவிட்டது" என்றார்.

"நான் போய் வருகிறேன். நான் சொல்ல வேண்டியது இன்னும் ரொம்ப இருக்கிறது. ஆனால் எல்லாவற்றையும் இப்பொழுது சொல்வது சாத்தியமில்லை. நான் உன்னை மறுபடியும் சந்திக்கிறேன்" என்று சொல்லிவிட்டு கையை நீட்டினான்.

சீக்கிரம் விடுபட்டால் போதும் என்ற உணர்ச்சியோடு காடுஷா சட்டென்று எழுந்தாள். "நீங்கள் எல்லாவற்றையும் சொல்லியாகி விட்டது என்று நினைத்தேன்" என்றாள் அவள். கையை அவள் பற்றினாளே தவிர அன்புடன் அழுத்திக் குலுக்கவில்லை.

"இல்லை; உன்னோடு இன்னும் நிதானமாகப் பேசக்கூடிய இடத்தில் உன்னை மறுபடியும் சந்திக்கிறேன். நான் சொல்ல வேண்டியதை அப்பொழுது உன்னிடம் சொல்கிறேன். நான் சொல்ல வேண்டிய முக்கியமான விஷயம் ஒன்று இருக்கிறது" என்றான் நிக்லியுடாவ்.

"சரி அப்படியானால் வாருங்கள்" என்று சொல்லிவிட்டு, தான் திருப்தி செய்ய விரும்புபவர்களைப் பார்த்துச் சிரிப்பது போல் சிரித்தாள் காடுஷா.

"நீ எனக்கு சகோதரியைக் காட்டிலும் மேலானவள்" என்றான் நிக்லியுடாவ்.

"இது விசித்திரமாக இருக்கிறதே" என்று சொல்லித் தலையை ஆட்டிவிட்டு அவள் கம்பி வலைக்குப் பின்னால் போய் விட்டாள்.

"காடுஷா என்னைப் பார்த்தவுடன், அவளுக்குச் சேவைசெய்ய வேண்டுமென்ற என் விருப்பத்தை அறிந்தவுடன் அவள் சந்தோஷப்படுவாள். மீண்டும் பழைய காடுஷாவாகிவிடுவாள்" என்று, அவளைச் சந்திப்பதற்கு முன்னால் நினைத்திருந்தான் நிக்லியுடாவ். ஆனால் இவள் பழைய காடுஷாவாக இல்லாததைக் கண்டு அதிர்ச்சியடைந்தான்.

காடுஷா தன் விபசார வாழ்க்கையைப்பற்றி வெட்கப்படாததைக் கண்டு அவன் ஆச்சரியமடைந்தான். தன் வாழ்க்கையைப்பற்றி அவள் பெருமைப்பட்டாள். ஆனால் வேறு விதமாக இருக்க முடியாது. ஒவ்வொருவரும் தங்கள் தொழில் உயர்ந்ததென்றுதான் நினைக்கவேண்டியிருக்கிறது. ஒருவர் எந்த நிலைமையில் இருந்தாலும் தங்கள் தொழில் முக்கியமானதென்றும் நல்லதென்றும் தோன்றும் முறையில் தான் மற்றவர்களுடைய வாழ்க்கையைப் பற்றியும் அபிப்பிராயம் ஏற்படுத்திக் கொள்வார்கள்.

ஒரு திருடனோ கொலைகாரனோ உளவாளியோ அல்லது ஒரு விபசாரியோ தன் தொழில் கேவலமானது என்பதை உணர்ந்து வெட்கப்படுவதாகக் கருதப்படுகிறது. ஆனால் உண்மை இதற்கு மாறாக இருக்கிறது. விதிவசத்தினாலும் பாபச் செயல்களினாலும் கேவலமான நிலையை அடைந்துவிட்டவர்கள், தங்களுடைய நிலைமை நல்லதெனத் தோன்றும் முறையிலேயே அபிப்பிராயத்தை உருவாக்கிக் கொள்கிறார்கள். இந்தக் கருத்து மாறாமலிருக்கும் பொருட்டு தங்களைப் போன்ற அபிப்பிராயம் உள்ளவர்களுடன் மாத்திரமே பழகுகிறார்கள். திருடர்களும் கொலைகாரர்களும் விபசாரிகளும் தங்கள் செய்கையைப் பற்றிப் பெருமைப்படும்பொழுது நமக்கு ஆச்சரியமாக இருக்கிறது. அவர்களுடைய கோஷ்டி சிறியதாக இருப்பதாலும், நாம் அந்த கோஷ்டிக்கு வெளியே இருப்பதாலும்தான் நமக்கு இப்படி ஆச்சரியம் ஏற்படுகிறது. பணக்காரர்கள் கொள்ளையடித்துச் சம்பாதித்த தங்கள் பணத்தைப் பற்றியும், சேனாதிபதிகள், கொலையினால் கிடைத்த தங்கள் வெற்றிகளைப் பற்றியும், உயர்ந்த பதவியில் இருப்பவர்கள் தங்கள் பலாத்கார அதிகாரத்தைப் பற்றியும் பெருமை அடித்துக் கொள்ளும்பொழுதும் நாம் இப்படியே ஆச்சரியப்பட முடியாதா? ஆனால் அப்படிச் செய்வதில்லை. ஏனென்றால் இந்தக் கூட்டம் பெரியது. நாமே அந்த கோஷ்டியைச் சேர்ந்தவர்களாக இருக்கிறோம்.

காடுஷாவும் இப்படித்தான் வாழ்க்கையைப் பற்றிய தன் கருத்துக்களை உருவாக்கிக் கொண்டாள். அவள் தீவாந்திர

மடைந்தான். அக்ரபெனு பெட்ரோவ்னுவுக்கும் மற்ற வேலைக்காரர்களுக்கும் தேகப் பயிற்சி அளிப்பதுதான் இந்தச் சாமான்களின் உபயோகமாக அவனுக்குத் தோன்றியது.

"காடுஷாவின் வழக்கு ஒருவிதமாக முடியும்வரை நான் வாழ்க்கை முறையை மாற்றிக் கொள்வதில் பயனில்லை. அவள் விடுதலை அடைந்தாலும், அல்லது தண்டனை பெற்று நாட்டை விட்டுச் செல்லும் பொழுது நானும் அவளுடன் சென்றலும் வாழ்க்கை தானுக மாறிவிடும்" என்று நினைத்தான் நிக்லியுடாவ.

குறிப்பிட்ட தினத்தன்று வக்கில் பானரின் வீட்டுக்குச் சென்றான் நிக்லியுடாவ. வக்கிலின் வீடு ஆடம்பரமாக அலங்கரிக்கப் பட்டிருந்தது. உழைக்காமல் சம்பாதித்த பணம் ஏராளமாக இருக்கிறது என்பதை இந்த அலங்காரங்கள் எடுத்துக் காட்டின. கட்சிக்காரர்கள் காத்திருக்கும் அறையில், சிலர் கவலை தோய்ந்து வெளிறிய முகங்களுடன் உட்கார்ந்திருந்தனர். குஷியாகப் பொழுதைக் கழிப்பதற்கான பத்திரிகைகள் மேஜைமீது கிடந்தன. நிக்லியுடாவ் வந்தவுடனேயே அவனை வக்கில் குமாஸ்தா அடையாளம் கண்டு பிடித்துக் கொண்டு அவனுடைய வருகையை உடனே வக்கிலுக்கு அறிவிப்பதாகச் சொன்னுன். குமாஸ்தா கதவருகில் செல்வதற்குள் வக்கில் அறையின் கதவு தானுகத் திறந்து கொண்டது. உள்ளே யிருந்து பலத்த கூச்சல் கேட்டது. நடுத்தர வயதுடைய தடித்த வியாபாரி ஒருவனும் வக்கில் பானரினும் அந்த அறையில் இருந்தனர். லாபம் கிடைக்கக் கூடிய, ஆனல் அயோக்கியத் தனமான ஒரு காரியத்தைச் செய்து முடித்த களை அவர்கள் முகத்தில் காணப்பட்டது.

"உங்களுடைய தவறுதலினுல் தான் இப்படி நடந்தது. தெரியுமா!" என்றுர் பானரின்.

"நம்முடைய பாபம் இல்லாமலிருந்திருந்தால் நாமெல்லாம் ஸ்வர்க்கத்தில் இருப்போம்" என்றுன் வியாபாரி.

"ஆமாம், ஆமாம், அதுதான் நம் எல்லோர்க்குமே தெரியுமே" என்றுர் வக்கில். உடனே அவர் நிக்லியுடாவைப் பார்த்து விட்டு, "ஓ! நிக்லியுடாவ் பிரபுவா, வாருங்கள்;" என்று வரவேற்றுர். அவர் வியாபாரியை மற்று மொருமுறை பார்த்துத் தலையை ஆட்டி விட்டு தமுடைய அறைக்கு நிக்லியுடாவை அழைத்துச் சென்றுர்.

அப்பொழுது தான் அவர் முடித்த வியாபாரத்தினுல் ஏற்பட்ட சந்தோஷம் வக்கில் முகத்தில் தாண்டவ மாடியது.

பொங்கி வந்த சந்தோஷத்தை அவர் அடக்கிக் கொள்ள முயன்ருர். "புகை குடித்தீர்களா?" என்று கேட்டார் நிக்லியுடாவை.

"வந்தனம், நான் காடுஷா கேஸ் விஷயமாகக் கேட்க வந்தேன்" என்முன் நிக்லியுடாவ்.

வக்கீல் தம் பிரதாபங்களைச் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்து விட்டு காடுஷா கேஸ் விஷயத்தை அலசி எடுத்து "வழக்கை பிரதம நீதிபதி ஜூரிகளுக்கு எடுத்துச் சொல்லும் பொழுது ஏற்பட்ட தவறினல் தான் காடுஷா தண்டனை பெற்ருள்" என்ருர் வக்கீல்

"பிரதம நீதிபதி ஏன் அப்படிச் செய்ய வில்லை?" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"எனக்கும் தான் அது தெரியவில்லை" என்று சொல்லி விட்டுச் சிரித்தார் வக்கீல்.

"இந்தத் தவறை மேல் கோர்ட் திருத்துமா?"

"அதெல்லாம், அந்த சமயத்தில் பிரதம நீதிபதியாக யார் வருகிருர்கள் என்பதைப்பொறுத்திருக்கிறது" என்றுசொல்லி விட்டு மீண்டும் சட்ட நுணுக்கங்களை ஆராய்ந்து கூறினுர் வக்கீல். "உண்மையை மறைக்காமல் சொல்வதென்ருல், வெற்றி கிடைப்பது சந்தேகம் தான். அது யார் யார் நீதிபதிகளாக வருகிருர்கள் என்பதைத்தான் பொறுத்திருக்கிறது. அங்கு உங்களுக்கு ஏதாவது செல்வாக்கு இருந்தால் முயன்று பார்க்கலாம்" என்று கூறி முடித்தார் வக்கீல்.

"எனக்கு சிலரைத் தெரியும்"

"அப்படியானுல் நீங்கள் சீக்கிரம் முயற்சி செய்ய வேண்டும் இல்லையானுல் அவர்கள் ஏஜாவில் போய் விடுவார்கள். திரும்பி வர மூன்று மாதம் பிடிக்கும். வழக்கு தோற்று விட்டால் மன்னரிடம் அப்பீல் செய்யலாம். அதிலும் திரை மறைவாகச் செய்ய வேண்டிய வேலைகள் சில இருக்கின்றன. அதிலும் நான் உங்களுக்குச்சேவை செய்யத்தயார் — அதாவது பெடிஷன் எழுதுவது முதலியவற்றில்; திரை மறைவில் அல்ல."

"மிகவும் வந்தனம்; உங்களுக்கு எவ்வளவுபணம் கொடுக்க வேண்டும்?"

"என்னுடைய குமாஸ்தா உங்களிடம் பெடிஷனைக் கொடுத்து விட்டு இதையும் சொல்வார்."

"மற்ருெரு விஷயம். கைதியைச் சந்திக்க கோர்ட் அதிகாரியிட மிருந்து ஓர் அனுமதிச் சீட்டு வாங்கினேன். கைதி

"உனக்கு நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"நான் ஒரு உபாத்தியாயினி. நான் கலாசாலையில் படிக்க வேண்டும் அதற்குப் பணம் இல்லை. 'பணக்காரர்கள் காடிகளைக் கொள்கிறார்கள். ஏழைகளுக்குச் சாராயம் வாங்கிக் கொடுக்கிறார்கள். அவர்கள் இப்படிப்பட்ட கெட்ட காரியங்களையெல்லாம் செய்யும்பொழுது நல்ல வழியில் பணத்தைச் செலவிடக் கூடாதா" என்று நான் நினைத்ததுண்டு. எனக்கு எண்பது ரூபிள் போதும். ஆனால் அதைக் கொடுக்க நீங்கள் விரும்பவில்லையென்றாலும் பாதகமில்லை" என்றாள் அந்தப் பெண்.

"எனக்கு இந்த சந்தர்ப்பம் அளித்ததற்காக நான் நன்றி செலுத்துகிறேன். இப்பொழுதே போய்ப் பணம் கொண்டு வருகிறேன்" என்று பதிலளித்தான். நிக்லியுடாவ். அவனுடைய நண்பர்கள் கேலிசெய்ததையும் பொருட்படுத்தாமல் அவன் பணப்பையிலிருந்து பணத்தை எடுத்துக்கொண்டு போய் அவளிடம் கொடுத்தான். இவற்றையெல்லாம் இப்பொழுது நினைத்துப் பார்க்க சந்தோஷமாக இருந்தது. கவலையோ பயமோ இல்லாமல் சந்தோஷமாக அவன் கழித்த காலம் ஞாபகத்திற்கு வந்தது. ஆனால் இப்பொழுது! அட தெய்வமே! எவ்வளவு கவலை! எவ்வளவு கஷ்டம்!

வெராடுகோவா புரட்சிக்காரியாகிவிட்டாள் போலும்! அதற்காகத்தான் அவள் சிறையில் அடைக்கப்பட்டிருந்தாள். அவளைப் பார்க்க வேண்டும். காடுஷாவைப்பற்றி யோசனை கூறுவதாக அவள் சொல்லியிருப்பதால் அவளைக் கட்டாயம் பார்த்தாக வேண்டும்.

# 50

மறுநாள் அதிகாலையிலேயே நிக்லியுடாவ் எழுந்துவிட்டான். முதல் நாள் செய்தவற்றை நினைத்துப் பார்த்தான். ஒருவித பயம் அவனைக் கவ்வியது. ஆனால் அந்த பயத்தையும் மீறி தான் மேற்கொண்ட வேலையைச் செய்து முடிப்பதென்று முன்னைக்காட்டிலும் அதிக உறுதியுடன் தீர்மானித்துக் கொண்டான்.

கடமை உணர்ச்சி அவனை உந்தியது. காடுஷா, அவள் சொன்ன மென்ஷோவ் அவளுடைய பிள்ளைடுக்கோவா ஆகியவர்களைச் சிறையில் சந்திப்பதற்கு அனுமதி பெறுவதற்காக அவன் மாஸ்லென்னிகோவைச் சந்திக்கப் புறப்பட்டான்.

மாஸ்லென்னிகோவை நிக்லியுடாவுக்கு வெகுநாளாகத் தெரியும். அப்பொழுது மாஸ்லென்னிகோவ் ராணுவத்தில் பொக்கிஷதாராக இருந்தான். மிகவும் நல்லவன். ராணுவத்தையும் ராஜகுடும்பத்தையும் தவிர வேறு ஒன்றைப் பற்றியும் அவனுக்குத் தெரியாது. தெரிந்து கொள்ளவும் அவன் இஷ்டப்படவில்லை. இப்பொழுது ராணுவத்திலிருந்து மாறி சிவில் அதிகாரியாக அவனை நிக்லியுடாவ் பார்த்தான். ஒரு பெரிய பணக்காரப் பெண்ணை அவன் மணந்துகொண்டிருந்தான். அவளுடைய உபத்திரவத்தினால்தான் அவன் இந்த உத்தியோகத்திற்கு மாறினான். நிக்லியுடாவ் அவர்களை முன்பு ஒருமுறை பார்க்கப்போயிருந்தான். ஆனால் அவர்கள் வாழ்க்கை ரஸமற்றுக் காணப்பட்டதால், மறுபடியும் அங்கு போக நிக்லியுடாவ் விரும்பவில்லை.

நிக்லியுடாவைக் கண்டவுடன் மாஸ்லென்னிகோவின் முகம் சந்தோஷத்தால் பூரித்தது. நடை உடை பாவனைகளிலும் தோற்றத்திலும் அவனும் கிட்டத்தட்ட நிக்லியுடாவைப் போலவேதான் இருந்தான்.

"ஹல்லோ! வாப்பா, கவர்னர் ஊரில் இல்லை என்பது உனக்கே தெரிந்திருக்கும். இப்பொழுது நான் சர்க்காரின் தலைவன். என் மனைவியைப் பார்க்கப் போகலாம் வா. நான் உன்னோடு பத்து நிமிஷம் இருக்க முடியும். பிறகு கூட்டத்திற்கு போகவேண்டும்" என்றான். அவனால் தன்னுடைய பெருமையை அடக்கிக்கொள்ள முடியவில்லை.

"நான் ஒரு வேலையாக வந்திருக்கிறேன்" என்றான் நிக்லியுடாவ்.

"என்ன வேலை?" என்று மாஸ்லென்னிகோவ் பரபரப்புடன் கேட்டான். ஜாக்கிரதையான கடு கடுப்பும் அவனுடைய குரலில் தொனித்தது.

"எனக்கு வேண்டிய ஒருத்தி சிறையில் இருக்கிறாள். அவளைத் தனியாகச் சந்தித்துப் பேச வேண்டும். அதற்கு உன்னிடம் அனுமதி வாங்கவேண்டுமென்கிறார்கள்" என்றான் நிக்லியுடாவ்.

"உனக்காக நான் என்ன வேண்டுமானாலும் செய்யத் தயார். ஆனால் என்னுடையது ஒருநாள் கூத்துத்தான் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்" என்றான் மாஸ்லென்னிகோவ்.

"அப்படியானால் அவளை நான் பார்ப்பதற்கு வேண்டிய அனுமதிச் சீட்டைக் கொடுப்பாயல்லவா?"

"அந்தக் கைதி பெண்ணா?"

"ஆமாம்"

"அவள் எதற்காகச் சிறைக்குப் போனாள்?"

"விஷம் கொடுத்ததாக வழக்கு. ஆனால் உண்மையில் அவள் நிரபராதி."

"ரொம்பவும் சரி. அதுதான் உங்கள் ஜூரி விசாரணையின் லக்ஷணம். அது வேறுவிதமாக இருக்கமுடியாது. இதை நீ ஒப்புக்கொள்ளமாட்டாய் என்பது எனக்குத் தெரியும். ஆனால் அதுதான் என்னுடைய தீர்மானமான அபிப்பிராயம்" என்றான் மாஸ்லென்னிகோவ். ஒரு வருஷமாக அவன் படித்த ஓர் உபயோகமற்ற கன்ஸர்வேடிவ் பத்திரிகையிலிருந்து அவன் பெற்ற அபிப்பிராயம் அது.

"நீ தீவிரவாதியா இல்லையா என்பது எனக்குத் தெரியும்" என்று மாஸ்லென்னிகோவ் மீண்டும் கூறினான்.

"நான் தீவிரவாதியா இல்லையா என்பது எனக்குத் தெரியாது" என்று நிக்லியுடாவ் சிரித்துக்கொண்டே பதிலளித்தான். ஜனங்கள் அவனை ஓர் அரசியல் கட்சியோடு, அதிலும் ஒரு தீவிர அரசியல் கட்சியோடு சேர்த்துச் சொல்வது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. "ஒருவனைப் பற்றித் தீர்ப்புக் கூறுவதற்கு முன்னால் அவனுடைய வாதத்தையும் கேட்க வேண்டும். தண்டனை பெறுவதற்கு முன்னால் எல்லாரும் சமம். யாரையும் அடிக்கவோ துன்புறுத்தவோ கூடாது, சட்டபூர்வமாக விசாரிக்கப் படுவதற்கு முன்னால், நிச்சயமாக ஒருவரும் துன்புறுத்தப்படக் கூடாது" என்பதுதான் நிக்லியுடாவின் கருத்து. இதற்காகத்தான் அவனைத் தீவிரவாதி என்கிறார்கள்.

"நான் தீவிரவாதியா இல்லையா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் பழைய முறையைக் காட்டிலும் ஜூரி முறை மேல் என்பது மாத்திரம் தெரியும்"

"எந்த வக்கீலை நியமித்திருக்கிறாய்?"

"பானரினை"

"பானரினையா?" என்று ஆச்சரியத்தோடு கேட்டான் மாஸ்லென்னிகோவ். சிறிது காலத்திற்கு முன் ஒரு விசாரணையில் அவனைப் பானரின் அரைமணி நேரத்திற்கு மேல் குறுக்கு விசாரணை செய்து, மரியாதையாக மட்டம் தட்டியது அவனுக்கு ஞாபகம் வந்தது. "அவனை வைக்காதே. அவன் துஷ்டன்" என்றான் மாஸ்லென்னிகோவ்.

நிக்லியுடாவ் அவனுக்கு பதில் அளிக்காமல், "இன்னொரு வேண்டுகோள். எனக்கு வெகு காலமாகத் தெரிந்த ஓர் உபாத்

டியாமினி சிறையில் இருக்கிறாள், அவளையும் நான் சந்திக்க அனுமதிக்க வேண்டும்'' என்று கேட்டான்.

''அவள் அரசியல் கைதியா?''

''ஆமாம், அப்படித்தான் கேள்விப் பட்டேன்.''

''அரசியல் கைதிகளைச் சந்திப்பதற்கு அவர்களுடைய உறவினர்களுக்கு மாத்திரம் தான் அனுமதி கொடுப்பது வழக்கம். இருந்தாலும் உனக்கு ஒரு பகிரங்க உத்தரவு கொடுக்கிறேன். அதை நீ துஷ்பிரயோகம் செய்ய மாட்டாய் என்பது எனக்குத் தெரியும். அந்தக் கைதியின் பெயர் என்ன? டுகோவாவா? அழகாக இருப்பாளா?''

''குரூபி தான்.''

மாஸ்லென்னிகோவ் ஒரு காகிதத்தை எடுத்து, ''காடுஷா என்ற கைதியையும், வைத்திய உதவி செய்யும் டுக்கோவா என்ற கைதியையும் இதைக்கொண்டு வரும் தெமித்ரி ஐவனோவிச் நெக்லியுடாவ் கோமகன், சிறை ஆபீஸில் சந்தித்துப்பேச அனுமதிக்கவும்'' என்று எழுதினான்.

''இனி, நாங்கள் அங்கு எப்படி ஒழுங்கை நிலை நாட்டுகிறோம் என்பதைக் காண்பாய். தீவிர சிக்ஷை பெற்ற கைதிகளிடையே ஒழுங்கைப் பாதுகாப்பதென்பது மஹா கஷ்டம். ஆனால் நான் கடுமையாக கவனித்து வருகிறேன். எனக்கு இந்த வேலை மிகவும் பிடித்திருக்கிறது. சில தினங்களுக்கு முன்னால் சிறையில் ஒரு சிறிய சம்பவம் நடந்தது. மற்றவர்களாக இருந்தால் இதைப் பிரமாதப்படுத்தி, பலர் கஷ்டப்படும்படி செய்து விட்டிருப்பார்கள். ஆனால் நாங்கள் எல்லாவற்றையும் சாதாரணமாக அடக்கி விட்டோம். ஒரு புறம் அன்புடனும், மற்றொரு புறம் கண்டிப்பாகவும் நாங்கள் நடந்து கொள்ள வேண்டி யிருக்கிறது'' என்றான் மாஸ்லென்னிகோவ்.

''அது எனக்குத்தெரியாது. நான் இரண்டுமுறை அங்கே போனேன். ஆனால் இரண்டு முறையும் வருத்தமாகத்தான் இருந்தது.''

''பாஸெக் சீமாட்டியை நீ அறிமுகம் செய்து கொள்ள வேண்டும். இந்தத் துறையில் அவள் பேருபகாரம் செய்கிறாள். அவளுடைய முயற்சியினாலும் என் முயற்சியினாலும் நிலைமை பெரிதும் மாறி யிருக்கிறது. பழைய பயங்கரங்களெல்லாம் இப்பொழுது நடப்பதில்லை. உண்மையிலேயே சிறை இப்பொழுது சௌகரியமாக இருக்கிறது. நீயே பாரேன்.

"ஆமாம்"

"அவள் எதற்காகச் சிறைக்குப் போனாள்?"

"விஷம் கொடுத்ததாக வழக்கு. ஆனால் உண்மையில் அவள் நிரபராதி."

"ரொம்பவும் சரி. அதுதான் உங்கள் ஜூரி விசாரணையின் லக்ஷணம். அது வேறுவிதமாக இருக்கமுடியாது. இதை நீ ஒப்புக்கொள்ளமாட்டாய் என்பது எனக்குத் தெரியும். ஆனால் அதுதான் என்னுடைய தீர்மானமான அபிப்பிராயம்" என்றான் மாஸ்லென்னிகோவ். ஒரு வருஷமாக அவன் படித்த ஓர் உபயோகமற்ற கன்ஸர்வெடிவ் பத்திரிகையிலிருந்து அவன் பெற்ற அபிப்பிராயம் அது.

"நீ தீவிரவாதியா இல்லையா என்பது எனக்குத் தெரியும்" என்று மாஸ்லென்னிகோவ் மீண்டும் கூறினான்.

"நான் தீவிரவாதியா இல்லையா என்பது எனக்குத் தெரியாது" என்று நிக்லியுடாவ் சிரித்துக்கொண்டே பதிலளித்தான். ஜனங்கள் அவனை ஓர் அரசியல் கட்சியோடு, அதிலும் ஒரு தீவிர அரசியல் கட்சியோடு சேர்த்துச் சொல்வது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. "ஒருவனைப் பற்றித் தீர்ப்புக் கூறுவதற்கு முன்னால் அவனுடைய வாதத்தையும் கேட்கவேண்டும். தண்டனை பெறுவதற்கு முன்னால் எல்லாரும் சமம். யாரையும் அடிக்கவோ துன்புறுத்தவோ கூடாது, சட்டபூர்வமாக விசாரிக்கப் படுவதற்கு முன்னால் நிச்சயமாக ஒருவரும் துன்புறுத்தப்படக் கூடாது" என்பதுதான் நிக்லியுடாவின் கருத்து. இதற்காகத்தான் அவனைத் தீவிரவாதி என்கிறார்கள்.

"நான் தீவிரவாதியா இல்லையா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் பழைய முறையைக் காட்டிலும் ஜூரி முறை மேல் என்பது மாத்திரம் தெரியும்"

"எந்த வக்கீலை நியமித்திருக்கிறாய்?"

"பானரினை"

"பானரினையா?" என்று ஆச்சரியத்தோடு கேட்டான் மாஸ்லென்னிகோவ். சிறிது காலத்திற்கு முன் ஒரு விசாரணையில் அவனைப் பானரின் அரைமணி நேரத்திற்கு மேல் குறுக்கு விசாரணை செய்து, மரியாதையாக மட்டம் தட்டியது அவனுக்கு ஞாபகம் வந்தது. "அவனை வைக்காதே. அவன் துஷ்டன்" என்றான் மாஸ்லென்னிகோவ்.

நிக்லியுடாவ் அவனுக்கு பதில் அளிக்காமல், "இன்னொரு வேண்டுகோள். எனக்கு வெகு காலமாகத் தெரிந்த ஓர் உபாத்

தியாயினி சிறையில் இருக்கிருள், அவளேயும் நான் சந்திக்க அனுமதிக்க வேண்டும்'' என்று கேட்டான்.

''அவள் அரசியில் கைதியா?''

''ஆமாம், அப்படித்தான் கேள்விப் பட்டேன்.''

''அரசியல் கைதிகளேச் சந்திப்பதற்கு அவர்களுடைய உறவினர்களுக்கு மாத்திரம் தான் அனுமதி கொடுப்பது வழக்கம். இருந்தாலும் உனக்கு ஒரு பகிரங்க உத்தரவு கொடுக்கிறேன். அதை நீ துஷ்பிரயோகம் செய்ய மாட்டாய் என்பது எனக்குத் தெரியும். அந்தக் கைதியின் பெயர் என்ன? டுகோவாவா? அழகாக இருப்பாளா?''

''குரூபி தான்.''

மாஸ்லென்னிகோவ் ஒரு காகிதத்தை எடுத்து, ''காடுஷா என்ற கைதியையும், வைத்திய உதவி செய்யும் டுக்கோவாவையும் இதைக்கொண்டு வரும் தெமித்ரி ஐவனேவிச் நிக்லியுடாவ் கோமகன், சிறை ஆபீஸில் சந்தித்துப்பேச அனுமதிக்கவும்'' என்று எழுதினன்.

''இனி, நாங்கள் அங்கு எப்படி ஒழுங்கை நிலை நாட்டுகிறோம் என்பதைக் காண்பாய். தீவாந்திர சிக்ஷை பெற்ற கைதிகளிடையே ஒழுங்கைப் பாது காப்பதென்பது மஹா கஷ்டம். ஆனல் நான் கடுமையாக கவனித்து வருகிறேன். எனக்கு இந்த வேலே மிகவும் பிடித்திருக்கிறது. சில தினங்களுக்கு முன்னல் சிறையில் ஒரு சிறிய சம்பவம் நடந்தது. மற்றவர்களாக இருந்தால் இதைப் பிரமாதப்படுத்தி, பலர் கஷ்டப்படும்படி செய்து விட்டிருப்பார்கள். ஆனல் நாங்கள் எல்லாவற்றையும் சாதாரணமாக அடக்கி விட்டோம். ஒரு புறம் அன்புடனும், மற்றொரு புறம் கண்டிப்பாகவும் நாங்கள் நடந்து கொள்ள வேண்டி யிருக்கிறது'' என்றுன் மாஸ்லென்னிகோவ்.

''அது எனக்குத்தெரியாது. நான் இரண்டுமுறை அங்கே போனேன். ஆனல் இரண்டு முறையும் வருத்தமாகத்தான் இருந்தது.''

''பாஸெக் சீமாட்டியை நீ அறிமுகம் செய்து கொள்ள வேண்டும். இந்தத் துறையில் அவள் பேருபகாரம் செய்கிருள். அவளுடைய முயற்சியினுலும் என் முயற்சியினுலும் நிலைமை பெரிதும் மாறி யிருக்கிறது. பழைய பயங்கரங்களெல்லாம் இப்பொழுது நடப்பதில்லை. உண்மையிலேயே சிறை இப்பொழுது சௌகரியமாக இருக்கிறது. நீயே பாரேன்.

பானரினைப்பற்றி விவரமாக ஒன்றும் தெரியாது. என்னுடைய அந்தஸ்தினால் அவனுடன் நான் நெருங்கிப் பழக முடியாமல் இருக்கிறது. ஆனால் அவன் கெட்டவன் என்பது மாத்திரம் நிச்சயம். கோர்ட்டில் அவன் என்ன வெல்லாமோ பேசுவான்.''

நிக்லியுடாவ் அவனுக்கு வந்தனம் செலுத்தி விட்டு, அவன் கொடுத்த காகிதத்தை வாங்கிக் கொண்டான். அவன் பேச்சை மேற்கொண்டு கேட்க விரும்பாமல் புறப்பட்டான். தன் மனைவியைச் சந்தித்து விட்டுப்போகும்படி மாஸ்லென்னிகோவ் எவ்வளவோ வற்புறுத்தியும் நிக்லியுடாவ் மறுத்து விட்டான். ''வியாழக்கிழமை யன்று அவள் நண்பர்களை வரவேற்பது வழக்கம். நீ அன்று வருவதாகச் சொல்லிவிடுகிறேன்'' என்றான் மாஸ்லென்னிகோவ்.

# 51

மாஸ்லென்னிகோவின் வீட்டிலிருந்து நேராக சிறை இன்ஸ்பெக்டர் வீட்டிற்குச் சென்றான் நிக்லியுடாவ். முன் போலவே அங்கு ஒரு மட்டமான பியானோவின் ஒலிகேட்டுக் கொண்டிருந்தது. ஆனால் இன்று வாசித்தது வேறு பாட்டு நிக்லியுடாவை வேலைக்காரன் உள்ளே அழைத்துச் சென்று வரவேற்பு அறையில் இருக்கச் சொன்னான். வழக்கம்போல முகத்தில் அலுப்புக்களையுடன் இன்ஸ்பெக்டரும் அங்கு வந்து சேர்ந்தார்.

''என்ன விசேஷம்?'' என்று கேட்டார் இன்ஸ்பெக்டர்.

''காடுஷா என்ற கைதியைப் பார்க்க வேண்டும். கவர்னரிடமிருந்து உத்தரவுகூட வாங்கிக் கொண்டு வந்திருக்கிறேன்'' என்றான் நிக்லியுடாவ். பியானோவின் சத்தத்தில் அவன் சொன்னது சரியாக இன்ஸ்பெக்டருக்குக் காதில் விழாததால் இன்ஸ்பெக்டர் எழுந்து போய் பியானோ வாசிப்பதை நிறுத்தச் சொல்லி விட்டு வந்தார்.

''நான் காடுஷாவைப் பார்க்க வேண்டும்'' என்றான் நிக்லியுடாவ் மறுபடியும்.

''காடுஷாவையா? அவளை இன்று பார்க்க முடியாது.''

''ஏன்?''

''எல்லாம் உங்களாலேயேதான், நீங்கள் அவளுக்குப் பணம் கொடுக்க வேண்டுமென்றால் என்னிடம் கொடுங்கள்.

நேற்று பணம் கொடுத்தீர்கள் போலிருக்கிறது. அதற்குச் சாராயம் வாங்கிக் குடித்துவிட்டு ஆர்பாட்டம் செய்தாள். அவளைத் தனிக் கொட்டடியில் கூடப் போட்டுப் பூட்ட வேண்டியிருந்தது. தயை செய்து பணம் கொடுக்காதீர்கள்.''

முதல் நாள் நடந்தவை நிக்லியுடாவுக்கு நன்ருக ஞாபகம் வந்தன. மீண்டும் அவனை பீதி பற்றிக் கொண்டது.

''டுக்கோவா என்ற அரசியல் கைதியைப் பார்க்கலாமா?'' என்று கேட்டான் நிக்லியுடாவ்.

''பேஷாய்ப் பார்க்கலாம்.'' என்று சொல்லிவிட்டு அவனை அழைத்துக் கொண்டு சிறைக்கு வந்தார் இன்ஸ்பெக்டர். அவர்கள் வந்தவுடன் சிறைக் கதவு திறந்தது. இரு ஜெயிலர்கள் தங்கள் கையைக் குல்லாய் அருகே உயர்த்தி இன்ஸ்பெக்டருக்கு வந்தனம் செய்தனர்.

''நீங்கள் யாரைப் பார்க்க வேண்டும?''

''டுக்கோவாவை.''

''ஓ! அவள் மாடியில் இருக்கிருள். அவளைப் பார்க்க வேண்டுமாளுல் நீங்கள் சிறிது நேரம் காத்திருக்க வேண்டும்.''

''அதற்குள் மென்ஷோவையும் அவளுடைய தாயாரையும் பார்க்லாமா?''

''பேஷாய்ப் பார்க்கலாம். இருபத்தோராவது அறையில் இருக்கிருர்கள். அவர்களை அழைத்து வரச் சொல்லுகிறேன்.''

''அவர்களுடைய அரையிலேயே அவர்களைப்பார்க்க முடியாதா?''

''கைதிகளைச் சந்திப்பதற்காக ஏற்பட்ட அறை இன்னும் செளகரியமாக இருக்கும்.''

''இல்லை, கைதிகள் இருக்கும் இடத்தையே நான் அதிகம் விரும்புகிறேன். அது ரஸமாக இருக்கிறது.

''ஓ! நீங்கள் ரஸிக்கக் கூடிய விஷயம் கூட இங்கு இருக்கிறதா?''

இந்த சமயத்தில் உதவி இன்ஸ்பெக்டர் அங்கு பிரவேசித்தார்.

விட்டார்களென்று குற்றம் சாட்டப்பட்டது. உண்மையில் ஹோட்டலுக்கு அவன் தீ வைக்கவில்லை. அந்த சமயத்தில் அவன் ஒரு நண்பன் வீட்டுக்குப் போயிருந்தான்.

“நீ தீ வைக்கவில்லை என்பது உண்மையா?” என்று கேட்டான் நிக்லியுடாவ்.

“அப்படிச் செய்யவேண்டுமென்று நான் நினைக்கக்கூட இல்லை. என் விரோதியே தான் இதைச் செய்திருக்க வேண்டும். சமீபத்தில்தான் அவன் ஹோட்டலை இன்ஷ்யூர் செய்ததாகக் கேள்விப்பட்டேன். அம்மாவும் நானும் ஹோட்டலுக்குத் தீ வைத்ததாகவும் நாங்கள் அவனை பயமுறுத்தியதாகவும் சொன்னார்கள். நான் ஒருமுறை அவனிடம் போனேன்என்பது உண்மைதான். ஆனால் நான் தீவைக்கவில்லை. ஹோட்டல்காரனே தன் ஹோட்டலுக்கு நெருப்பு வைத்துவிட்டு, எங்கள் மீது பழிசுமத்தி விட்டான். இது நடந்தபொழுது நான் அங்கே இல்லை.”

“இதெல்லாம் உண்மைதானா?”

“கடவுள் சாட்சியாக உண்மை. தயை செய்யுங்கள். காரணமில்லாமல் நான் இங்கு செத்துக் கொண்டிருக்கிறேன்” என்று சொல்லிவிட்டு மென்ஷோவ் கீழே விழுந்து நமஸ்கரித்தான், அவன் கண்களில் நீர் தாரை தாரையாக வழிந்தோடியது.

“நாம் போகலாமா?” என்று கேட்டான் சின்ன இன்ஸ்பெக்டர்.

“போகலாம்...சரி, நீ தைரியமாக இரு. முடிந்ததையெல்லாம் செய்வோம்” என்று மென்ஷோவுக்கு நிக்லியுடாவ் தைரியம் கூறிவிட்டுப் புறப்பட்டான். மென்ஷோவ் கதவருகே நின்றான். ஜெயிலர் அவனை உள்ளே தள்ளிக் கதவைப் பூட்டினான், பிறகு அவன் சிறை துவாரத்தின் வழியாகப் பார்த்துக் கொண்டு நின்றான்.

## 53

நிக்லியுடாவ் சிறைத் தாழ்வாரத்தைக் கடந்து வந்து கொண்டிருந்தபொழுது மஞ்சள் உடை அணிந்து நின்றிருந்த கைதிகள் அவனை ஆவலுடன் பார்த்தனர். நிக்லியுடாவுக்கு அவர்கள்மீது அனுதாபமும் அதிகாரிகள் அவர்களை நடத்திய விதத்தில் ஆத்திரமும் ஏற்பட்டது. இவற்றையெல்லாம் அமைதியாகப் பார்ப்பது பற்றி அவனுக்கு வெட்கமாகவும்

இருந்தது. ஏன் இந்த வெட்கம் என்பது அவனுக்கே விளங்க வில்லை.

அவன் காலடிச் சத்தத்தைக் கேட்டுப் பல கைதிகள் ஓடி வந்து அவன் வழியை மறித்துக் கொண்டு நின்று பணிந்தனர் "பிரபுவே, உங்களை என்னவென்று அழைப்பதென்றே எங்களுக்குத் தெரியவில்லை. எங்கள் விஷயத்தையும் கொஞ்சம் கவனியுங்கள்" என்று அவர்கள் கெஞ்சினர்.

"நான் அதிகாரியில்லை. எனக்கு இதெல்லாம் பற்றி ஒன்றும் தெரியாது."

"எப்படியிருந்தாலும் நீங்கள் வெளியிலிருந்து வருகிறீர்கள். தக்க அதிகாரியிடம் சொல்லி ஏற்பாடு செய்யுங்களேன்" என்ற ஒரு கோபக் குரல் கேட்டது.

"மனித ஜென்மங்கள் என்ற முறையில் எங்கள் மீது தயை வையுங்கள். ஒரு காரணமும் இல்லாமல் இங்கு இரண்டு மாத மாகத் தவித்துக் கொண்டிருக்கிறோம்" என்றான் மற்றொருவன்.

"ஏன்?" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"ஏன் என்பது எங்களுக்கே தெரியவில்லை. ஆனால் இரண்டு மாதமாக இங்கு அடைப்பட்டுக் கிடக்கிறோம்".

"ஆமாம், அது உண்மைதான். ஒரு தற்செயலான சம்பவத்தினால் அப்படி நடந்திருக்கிறது. பாஸ்போர்ட் இல்லாமல் இங்கு வந்ததற்காக இவர்கள் கைது செய்யப்பட்டார்கள். இவர்களுடைய சொந்த மாகாணத்திற்கு இவர்களை முன்பே அனுப்பியிருக்க வேண்டும். ஆனால் அங்கு சிறை தீப்பற்றி எரிந்து விட்டதாம். ஆகையால் அவர்களை இங்கேயே வைத்திருக்கும்படி அவர்களுடைய மாகாண சர்க்கார் உத்திரவு அனுப்பியிருக்கிறது. மற்ற மாகாணங்களைச் சேர்ந்தவர்களையெல்லாம் அனுப்பி விட்டு இவர்களை மாத்திரம் இங்கு வைத்துக் கொண்டிருக்கிறோம்" என்றார் சின்ன இன்ஸ்பெக்டர்.

"இதற்காகவா இவர்கள் சிறையில் இருக்கிறார்கள்? வேறு காரணம் இல்லையா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் நிக்லியுடாவ்.

அவனையும் இன்ஸ்பெக்டரையும் சுமார் நாற்பது பேர் சூழ்ந்து கொண்டு ஒரே சமயத்தில் பேசத் தொடங்கினார்கள். சின்ன இன்ஸ்பெக்டர் அவர்களைத் தடுத்து, "யாராவது ஒருவர் பேசுங்கள்" என்றார்.

# புத்துயிர்

## இரண்டாம் பாகம்

## 1

காடுஷாவின் வழக்கு இரண்டு வாரத்தில் மேல் கோர்ட்டில் விசாரணைக்கு வரவிருந்தது. மேல் கோர்ட்டில் அப்பீல் தோற்றுப்போனால் வக்கில் சொன்னபடி மன்னரிடம் அப்பீல் செய்ய நிக்லியுடாவ் விரும்பினான். அப்பீல் விசாரணை சமயத்தில் அவன் பீடர்ஸ்பர்க்கில் இருக்க திட்டம் போட்டிருந்தான். அப்பீல் தோற்றுவிட்டால் காடுஷாவும் அவளுடைய கோஷ்டியைச் சேர்ந்த கைதிகளும் ஜுன் மாத ஆரம்பத்தில் சைபீரியாவுக்குச் செல்ல வேண்டியிருக்கும். காடுஷா சைபீரியா செல்ல நேர்ந்தால் அவளோடு தானும் போவதென்று நிக்லியுடாவ் தீர்மானித்திருந்தான். அதற்கு முன்னால் அவனுடைய ஜமீன் விஷயங்களை ஒழுங்குபடுத்த வேண்டியிருந்தது. ஆகையால் அருகாமையில் இருந்த குஸ்மின்ஸ்கி ஜமீனுக்கு முதலில் போனான். அவனுடைய வருமானத்தில் பெரும்பகுதி இந்த ஜில்லாவிலிருந்துதான் வந்தது.

நிக்லியுடாவின் இளமைப் பருவமெல்லாம் இந்த ஜமீனில் தான் கழிந்திருக்கிறது. அங்கு குடியானவர்களுக்கும் ஜமீன் தாருக்குமிடையில் உள்ள உறவு அவனுக்கு நன்றாகத் தெரியும். குடியானவர்கள் ஜமீன்தாரை நம்பித்தான் பிழைத்து வந்தார்கள். நிக்லியுடாவ் கலாசாலை மாணவனாக இருந்த பொழுது ஹென்றி ஜார்ஜின் உபதேசத்தில் நம்பிக்கை கொண்டிருந்தான். அதை அவனே பிரசாரம் செய்யவும் செய்து வந்தான். இந்தக் கொள்கையின்படி தன் தந்தையிடமிருந்து பிதிரார்ஜிதமாக வந்த சொத்தை குடியானவர்களுக்கே பகிர்ந்து தானம் செய்துவிட்டான். அவன் ராணுவத்திலிருந்து திரும்பி வந்தபின் வருஷத்தில் இருபதாயிரம் ரூபிள் வீதம் செலவழித்தான். அவனுடைய பழைய கொள்கைகள் அப்பொழுது மறந்து போயிருந்தன என்பது உண்மையே. தனக்குத் தன் தாய் அனுமதித்திருந்த பணம் எங்கிருந்து வருகிறது என்பதைப் பற்றி அவன் சிந்திப்பதையே விட்டுவிட்டான். பிறகு அவன் தாய் இறந்துவிட்டாள். சொத்து அவனைச் சேர்ந்தது. ஜமீன்களை அவனே நிர்வகிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஆகையால் சொந்த சொத்து விஷயத்தில் தன்னுடைய நிலைமை என்ன என்ற பிரச்னை மீண்டும் எழுந்தது. ஒரு மாதத்திற்கு முன்பாக இருந்தால், தற்போதைய முறையை

மாற்றத் தனக்குச் சக்தியில்லை என்று அவன் சொல்லியிருப்பான். ஜமீனைத் தான் நிர்வகிக்கவில்லை என்று கூறித் தட்டிக் கழித்திருப்பான்; மனச்சாட்சியை எப்படியாவது திருப்தி செய்துவிட்டு, ஜமீனுக்கு அப்பால் வெகு தூரத்தில் இருந்து கொண்டு, அதிலிருந்து வரும் பணத்தை மாத்திரம் உபயோகித்துக் கொண்டிருப்பான். ஆனால் இப்பொழுது, இந்த நிலைமையை நீடிக்கவிடக்கூடாதென்று தீர்மானித்துக் கொண்டிருந்தான். கோர்ட்டுச் செலவுகளுக்குப் பணம் வேண்டும். இந்த விவகாரங்களைக் கவனிக்க சமூகத்தில் ஓர் அந்தஸ்து வேண்டும். சைபீரியாவுக்குப் போவதாக இருந்தால் அதற்கு வேறு பணம் வேண்டும். இவ்வளவும் இருந்தும் அவன் இவ்விதம் முடிவு செய்துவிட்டான். நிலங்களைக் குறைந்த வாரத்திற்கு விட நிக்லியுடாவ் தீர்மானித்தான். ஜமீன்தாரை எதிர்பாராமலே அவர்கள் நிலங்களைப் பயிரிடலாம்.

நடுப்பகலில் நிக்லியுடாவ் குஸ்மின்ஸ்கிக்கு வந்து சேர்ந்தான். எல்லா வழியிலும் தன் வாழ்க்கையை எளிமையாக்க நிக்லியுடாவ் தீர்மானித்துக் கொண்டிருந்ததால், தன் வருகையைப் பற்றி அவன் தந்தி அனுப்பவில்லை. ஸ்டேஷனிலிருந்து ஒரு வண்டியை அமர்த்திக் கொண்டு ஊருக்குச் சென்றான். போகும்வழியில் வண்டிக்காரனோடு பேசிக்கொண்டே போனான். தன் எஜமானனை அழைத்துச் செல்கிறோம் என்பது வண்டிக்காரனுக்குத் தெரியாது. தான் யார் என்பதை நிக்லியுடாவ் வேண்டுமென்றேதான் சொல்லவில்லை. குஸ்மின்ஸ்கியில் உள்ள கங்காணியைப் பற்றி வண்டிக்காரன் பேசிக்கொண்டே போனான். அந்த ஜெர்மன் கங்காணி தாராளமாகப் பணம் செலவிடுவதாகவும், அவனே ஒரு ஜமீனை வாங்கிவிட்டதாகவும், சொன்னான். ஜமீனை கண்காணி நிர்வகித்த முறையை அவன் ஒருபொருட்டாக நினைக்கவில்லை. ஆகையால் வண்டிக்காரன் சொன்னவை அவனுக்குப் பிடிக்கவில்லை.

கால நிலை அவனுக்கு அதிக இன்பமளித்தது. கருமேகங்கள் அடிக்கடி சூரியனை மறைத்தன. நிலங்களில் குடியானவர்கள் களை பறித்துக் கொண்டிருந்தார்கள். வானம்பாடிகள் பாடிக்கொண்டே பறந்து சென்றன. பசும் புல் தரையில் ஆடு மாடுகளும் குதிரைகளும் மேய்ந்துகொண்டிருந்தன. ஆனால் இவற்றிற்கிடையில் ஏதோ ஒன்று அவனுக்கு அதிருப்தியையும் அளித்தது. அது என்னவென்று அவன் யோசித்தான். கங்காணி ஜமீனை நிர்வகித்த முறை பற்றி வண்டிக்காரன் கூறிய விவரம்தான் அது. அவன் ஜமீனுக்குப் போய் வேலையைத் தொடங்கியவுடன் இந்த அதிருப்தி மறைந்து விட்டது.

கணக்குப் புத்தகங்களை நிக்லியுடாவ் சோதித்தான். விவசாயிகளுக்கு நிலம் குறைவாக இருப்பதாலும், அந்த நிலங்க

யிருந்த ரஷ்யக் குடியானவர்கள் அவனுடைய உத்திரவுப்படியே அவர்களைக் கொன்று குவித்தனர். இதற்காகத்தான் அவனுக்கு இந்தப் பதக்கம் கிடைத்தது. பிறகு போலந்தில் இருந்தான். அங்கும் ரஷ்யக் குடியானவர்கள் பல குற்றங்களைச் செய்யக் காரணமாக இருந்தான். இதற்காக இன்னும் பல மரியாதைகளும் பதக்கங்களும் கிடைத்தன. இன்னும் எங்கெல்லாமோ வேலை பார்த்தான். இப்பொழுது அவன் சக்தியை இழந்து கிழவனாகி விட்டபடியால் இந்த உத்தியோகத்தில் இருக்கிறான். இதனால் அவனுக்கு வருமானமும் அந்தஸ்த்தும் உயர்ந்திருக்கின்றன. மேலிடத்திலிருந்து வரும் உத்திரவுகளை இவன் மிகக்கடுமையாக அமல் நடத்தினான். அரசியல் கைதிகளை—அவர்கள் ஆண்களாயினும் சரி, பெண்களாயினும் சரி—அவர்களைத் தனிக் கொட்டடிகளில் அடைத்து வைப்பதுதான் இவன் வேலை. சிறையில் அடைப்பட்ட பத்து வருஷத்திற்குள் அவர்களில் பாதிப்பேராவது மடிந்தே போகும்படி அவன் பார்த்துக் கொள்ள வேண்டும். சிலர் க்ஷயரோகத்தினால் உயிர் விடுவார்கள்; சிலருக்குப் பைத்தியம் பிடித்து விடும். மற்றும் சிலர் பட்டினி கிடந்தோ, ரத்தக்குழாயை வெட்டிக் கொண்டோ, தூக்குப் போட்டுக் கொண்டோ தற்கொலை செய்து கொள்வார்கள்.

அந்தக்கிழ அதிகாரிக்கு இவை யெல்லாம் தெரியாமலில்லை. அவன் கண்ணெதிரில் தான் எல்லாம் நடந்தன. ஆனால் இடி, வெள்ளங்களினால் ஏற்படும் விபத்துக்களுக்கும் இந்த சம்பவங்களுக்கு மிடையில் எவ்வித வித்தியாசமும் இருப்பதாக அவனுக்குத் தோன்றவில்லை. மன்னரின் உத்தரவுகளை அமல் நடத்துவதன் பலன்தான் இவை யெல்லாம். ஆகையால் இவற்றைப்பற்றிக் கவலைப்படுவதில் பயனில்லை. இவற்றைப்பற்றி நினைப்பது, கடமையைச் செய்யத் தவறுவதற்கு ஒப்பாகுமென்று அவனுக்குத் தோன்றியது. ஒரு வாரத்திற்கு ஒரு முறை அவன் சிறையைச் சுற்றிப் பார்ப்பான். அது அவனுடைய கடமை. ஏதாவது குறை இருக்கிறதா வென்று கைதிகளைக் கேட்பான். அவர்கள் பலவிதமான குறைகளைச்சொல்லுவார்கள். எல்லாவற்றையும் மௌனமாகக் கேட்டுக் கொள்வான். அவை சிறை விதிகளை மீறியவை என்பதால் ஒன்றையும் நிறைவேற்ற மாட்டான்.

நிக்லியுடாவ் அவனைப் பார்க்கச் சென்ற பொழுது இரண்டு மணி ஆகி விட்டது. நிக்லியுடாவ் உள்ளே பிரவேசித்தவுடன், "உங்கள் வருகைக்காகச் சந்தோஷிக்கிறேன்" என்று கூறி ஒரு நாற்காலியைக் காட்டி அதில் உட்காரச் சொன்னான் அதிகாரி. பிறகு, "நீங்கள் பீடர்ஸ் பர்க்கில் வெகு நாளாக இருக்கிறீர்களா?" என்று கேட்டான்.

"இல்லை; இப்பொழுது தான் வந்திருக்கிறேன்.

"உங்கள் தாயார் சௌக்கியமா?"

"என் தாயார் இறந்து விட்டாளே!"

"ஓ! மன்னிக்கவும் உங்களைச் சந்தித்திருப்பதாக என் பிள்ளை சொன்னான்."

இந்த ஜெனரல் செய்த வேலையையே தான் அவனுடைய பிள்ளையும் செய்து வருகிறான். அவன் ராணுவக் கலாசாலையில் தேறிய பின் விசாரணை ஆபிஸில் இருந்து வருகிறான். தன் வேலைகளைப்பற்றி அவனுக்கு அசாத்தியப்பெருமை. சர்க்கார் உளவாளிகளை நிர்வகிப்பது அவன் வேலை.

"உங்கள் அப்பாவும் நானும் ஒன்றாக வேலை செய்திருக்கிறோம். நாங்கள் நெருங்கிய நண்பர்கள். நீங்கள் ராணுவத்தில் தான் இருக்கிறீர்களா?"

"இல்லை"

இந்த பதிலை விரும்பாதவன் போல ஜெனரல் தன் தலையை குனிந்து கொண்டான்.

"உங்களிடம் ஒரு உதவி கோருவதற்காக வந்தேன்"! என்று தான் வந்த விஷயத்தைப் பற்றிப் பேசத் தொடங்கினான் நிக்லியுடாவ்.

"மிகவும் சந்தோஷம். என்ன விஷயம்?"

"கர்கெவிச் என்ற ஒருவன் கோட்டையில் கைதியாக் இருக்கிறான். அவனுடைய தாய் அவனைச் சந்திக்க அனுமதி கொடுக்க வேண்டும். அல்லது அவன் படிப்பதற்காவது சில புத்தகங்களை அனுமதிக்க வேண்டும்."

இதைக் கேட்ட ஜெனரல் திருப்தியோ அதிருப்தியோ தெரிவிக்கவில்லை. அவன் கண்களை மூடிக்கொண்டு ஏதோ ஆலோசிப்பவன் போல் நடித்தான், உண்மையில் அவன் கவனத்திற்குக் கொஞ்சம் ஓய்வு கொடுத்திருந்தானே தவிர ஒன்றைப் பற்றியும் யோசிக்கவில்லை. இப்படிச் சிறிது நேரம் சென்ற பின், "இதோ பாருங்கள். இது என் அதிகாரத்தில் உள்ள விஷயமன்று. பேட்டிகள் சம்பந்தமாக மன்னர் பிறப்பித்துள்ள உத்தரவு ஒன்று இருக்கிறது. அதன்படி தான் எல்லாம் நடக்கும். சிறையிலேயே, அவசியமான புத்தகங்கள் அடங்கிய புத்தகசாலை ஒன்று இருக்கிறது. அனுமதிக்கப்

யிருந்த ரஷ்யக் குடியானவர்கள் அவனுடைய உத்திரவுப்படியே அவர்களைக் கொன்று குவித்தனர். இதற்காகத்தான் அவனுக்கு இந்தப் பதக்கம் கிடைத்தது. பிறகு போலந்தில் இருந்தான். அங்கும் ரஷ்யக் குடியானவர்கள் பல குற்றங்களைச் செய்யக் காரணமாக இருந்தான். இதற்காக இன்னும் பல மரியாதைகளும் பதக்கங்களும் கிடைத்தன. இன்னும் எங்கெல்லாமோ வேலை பார்த்தான். இப்பொழுது அவன் சக்தியை இழந்து கிழவனாகி விட்டபடியால் இந்த உத்தியோகத்தில் இருக்கிறான். இதனால் அவனுக்கு வருமானமும் அந்தஸ்தும உயர்ந்திருக்கின்றன. மேலிடத்திலிருந்து வரும் உத்திரவுகளை இவன் மிகக்கடுமையாக அமல் நடத்தினான். அரசியல் கைதிகளை—அவர்கள் ஆண்களாயினும் சரி, பெண்களாயினும் சரி—அவர்களைத் தனிக் கொட்டடிகளில் அடைத்து வைப்பதுதான் இவன் வேலை. சிறையில் அடைப்பட்ட பத்து வருஷத்திற்குள் அவர்களில் பாதிப்பேராவது மடிந்தே போகும்படி அவன பார்த்துக் கொள்ள வேண்டும். சிலர் க்ஷயரோகத்தினால் உயிர் விடுவார்கள்; சிலருக்குப் பையத்தியம் பிடித்து விடும். மற்றும் சிலர் பட்டினி கிடந்தோ, ரத்தக்குழாயை வெட்டிக் கொண்டோ, தூக்குப் போட்டுக் கொண்டோ தற்கொலை செய்து கொள்வார்கள்.

அந்தக்கிழ அதிகாரிக்கு இவை யெல்லாம் தெரியாமலில்லை. அவன் கண்ணெதிரில் தான் எல்லாம் நடந்தன. ஆனால் இடி, வெள்ளங்களினால் ஏற்படும் விபத்துக்களுக்கும் இந்த சம்பவங்களுக்கு மிடையில் எவ்வித வித்தியாசமும் இருப்பதாக அவனுக்குத் தோன்றவில்லை. மன்னரின் உத்தரவுகளை அமல் நடத்துவதன் பலன்தான் இவை யெல்லாம். ஆகையால் இவற்றைப்பற்றிக் கவலைப்படுவதில் பயனில்லை. இவற்றைப்பற்றி நினைப்பது, கடமையைச் செய்யத் தவறுவதற்கு ஒப்பாகுமென்று அவனுக்குத் தோன்றியது. ஒரு வாரத்திற்கு ஒரு முறை அவன சிறையைச் சுற்றிப் பார்ப்பான். அது அவனுடைய கடமை. ஏதாவது குறை இருக்கிறதா வென்று கைதிகளைக் கேட்பான். அவர்கள் பலவிதமான குறைகளைச்சொல்லுவார்கள். எல்லாவற்றையும் மௌனமாகக் கேட்டுக்கொள்வான். அவை சிறை விதிகளை மீறியவை என்பதால் ஒன்றையும் நிறை வேற்ற மாட்டான்.

நிக்லியுடாவ் அவனைப் பார்க்கச் சென்ற பொழுது இரண்டு மணி ஆகி விட்டது. நிக்லியுடாவ் உள்ளே பிரவேசித்தவுடன், "உங்கள வருகைக்காகச் சந்தோஷிக்கிறேன்" என்று கூறி ஒரு நாற்காலியைக் காட்டி அதில் உட்காரச் சொன்னான் அதிகாரி. பிறகு, "நீங்கள் பீடர்ஸ் பர்க்கில் வெகு நாளாக இருக்கிறீர்களா?" என்று கேட்டான்.

"இல்லை; இப்பொழுது தான் வந்திருக்கிறேன்.

"உங்கள் தாயார் சௌக்கியமா?"

"என் தாயார் இறந்து விட்டாளே!"

"ஓ! மன்னிக்கவும் உங்களைச் சந்தித்திருப்பதாக என் பிள்ளை சொன்னான்."

இந்த ஜெனரல் செய்த வேலையையே தான் அவனுடைய பிள்ளையும் செய்து வருகிறான். அவன் ராணுவக் கலாசாலையில் தேறிய பின் விசாரணை ஆபீஸில் இருந்து வருகிறான். தன் வேலைகளைப்பற்றி அவனுக்கு அசாத்தியப்பெருமை. சர்க்கார் உளவாளிகளை நிர்வகிப்பது அவன் வேலை.

"உங்கள் அப்பாவும் நானும் ஒன்றாக வேலை செய்திருக்கிறோம். நாங்கள் நெருங்கிய நண்பர்கள். நீங்கள் ராணுவத்தில் தான் இருக்கிறீர்களா?"

"இல்லை"

இந்த பதிலை விரும்பாதவன் போல ஜெனரல் தன் தலையை குனிந்து கொண்டான்.

"உங்களிடம் ஒரு உதவி கோருவதற்காக வந்தேன்'! என்று தான் வந்த விஷயத்தைப் பற்றிப் பேசத் தொடங்கினான் நிக்லியுடாவ்.

"மிகவும் சந்தோஷம். என்ன விஷயம்?"

"தர்கெவிச் என்ற ஒருவன் கோட்டையில் கைதியாக் இருக்கிறான். அவனுடைய தாய் அவனைச் சந்திக்க அனுமதி கொடுக்க வேண்டும். அல்லது அவன் படிப்பதற்காவது சில புத்தகங்களை அனுமதிக்க வேண்டும்."

இதைக் கேட்ட ஜெனரல் திருப்தியோ அதிருப்தியோ தெரிவிக்கவில்லை. அவன் கண்களை மூடிக்கொண்டு ஏதோ ஆலோசிப்பவன் போல் நடித்தான், உண்மையில் அவன் கவனத்திற்குக் கொஞ்சம் ஓய்வு கொடுத்திருந்தானே தவிர ஒன்றைப் பற்றியும் யோசிக்கவில்லை. இப்படிச் சிறிது நேரம் சென்றபின், "இதோ பாருங்கள். இது என் அதிகாரத்தில் உள்ள விஷயமன்று. பேட்டிகள் சம்பந்தமாக மன்னர் பிறப்பித்துள்ள உத்தரவு ஒன்று இருக்கிறது. அதன்படி தான் எல்லாம் நடக்கும். சிறையிலேயே, அவசியமான புத்தகங்கள் அடங்கிய புத்தகசாலை ஒன்று இருக்கிறது. அனுமதிக்கப்

வேலைகளைக் கவனிப்பவர் யார்? சர்க்காருக்கு உதவிசெய்யாமல் தற்போதைய முறைகளை மாத்திரம் குறை கூறுகிறோம்'' என்றான் ஜெனரல்.

நிக்லியுடாவ் நீண்ட பெருமூச்சுடன் குனிந்து வணங்கினான். பிறகு ஜெனராலின் கையைக் குலுக்கிவிட்டு அறையை விட்டு வெளியேறினான். அவனுடைய வண்டி வாசற்படியைக் கடந்து சென்றது. வண்டிக்காரன் நிக்லியுடாவின் பக்கம் திரும்பி, "இங்கு மிகவும் மந்தமாக இருக்கிறது. உங்களுக்காகக் காத்திராமல் வண்டியை ஓட்டிக்கொண்டு போய் விடவேண்டுமென்று கூட நான் நினைத்தேன்'' என்றான்.

நிக்லியுடாவும் அதை ஆமோதித்தான். "மந்தமாகத்தான் இருக்கிறது'' என்று கூறி ஒரு நீண்ட பெருமூச்சுவிட்டான். வானத்தில் மிதந்த வெண் மேகங்களையும், நேவா ஆற்றில் படகுகள் எழுப்பிய ஜொலிக்கும் சிற்றலைகளையும் கண்டு அவன் மனச் சாந்தி பெற்றான்.

# 20

மறுநாள் காடுஷாவின் வழக்கு செனேட்டில் விசாரணைக்கு வரவிருந்தது. பிரம்மாண்டமான செனேட் காரியாலயத்தின் வாசலில் நிக்லியுடாவும் வக்கீலும் சந்தித்தனர். இருவரும் படியேறி முதல் மாடிக்குச் சென்றனர். எங்கெந்த வழியாகச் செல்லவேண்டுமென்பதெல்லாம் வக்கீலுக்கு நன்றாகத் தெரிந்திருந்தது. வக்கீல் பானரினுக்குத் தெரிந்த மற்றொரு வக்கீல் அங்கு வந்திருந்தார். அவருடன் பானரின் தீவிரமாக எதைப்பற்றியோ பேசத்தொடங்கிவிட்டார். அங்கு வந்திருந்தவர்களையெல்லாம் நிக்லியுடாவ் தன் கண்களால் ஆராய்ந்துகொண்டிருந்தான்,

அன்று மான நஷ்ட வழக்கு ஒன்று விசாரணைக்கு வரவிருந்தது. ஆகையால் செனேட்டுக்கு வந்திருந்த பொதுஜனங்களின் எண்ணிக்கை கொஞ்சம் அதிகமாகவே இருந்தது. இவர்களில் பத்திரிகை உலகத்தைச் சேர்ந்தவர்கள் தான் அதிகமாக இருந்தனர்.

விசாரணை நடந்த அறைக்குள் நிக்லியுடாவும் மற்றவர்களும் சென்று தங்கள் ஸ்தானங்களில் அமர்ந்தனர். இந்த இடம் கிரிமினல் கோர்ட் அவ்வளவு பெரியதாக இல்லை, இங்கு இருந்த சாமான்களும் அவ்வளவு ஆடம்பரமாக இல்லை. மேஜையைச் சுற்றிலும் பச்சைத் துணிக்கு பதிலாக ஜரிகைக் கரைபோட்ட சிவப்பு வெல்வெட் கட்டப்பட்டிருந்தது. நீதிக்

கண்ணுடி, மன்னரின் படம், சேவையின் சின்னம் முதலியவை எல்லா நீதிஸ்தலங்களிலும் இருப்பதுபோலவே இருந்தன.

"நீதிபதிகள் வருகிறுர்கள்" என்று வழக்கம்போல் கோர்ட் சேவகன் அறிவித்தான். எல்லாரும் எழுந்து நின்றனர். நீதிபதிகள் தங்களுக்கென ஏற்பட்ட உடைகளுடன் வந்து தங்கள் ஸ்தானங்களில் அமர்ந்தனர். நீதிபதிகள் நால்வர். அவர்களில் நிகிடினின்முகம் குடுக்கைபோல் இருந்தது. உல்ப் உதடுகளை இறுக்கி மூடிக்கொண்டு, ஏதோ தஸ்தாவேஜுகளைப் புரட்டிக்கொண்டிருந்தார். ஸ்கோவோரோட்னிகோவ் பருமனுக இருந்தார்; பே சன்யாசிபோல் தோன்றிஞர்.

நீதிபதிகளோடு கூடவே பிரதம காரியதரிசியும் சர்க்கார் வக்கிலும் பிரவேசித்தனர். சர்க்கார் வக்கில் ஒரு இளைஞன். நல்ல கருப்பு. அவனை நிக்லியுடாவ் உடனே அடையாளம் கண்டுபிடித்துவிட்டான். மாணவனுக இருந்தபொழுது நிக்லியுடாவின் உயிர்த்தோழனுக இருந்தவன் அவன்.

நிக்லியுடாவ் வக்கில் பக்கம் திரும்பி. "சர்க்கார் வக்கில் செலெனின்று?" என்று கேட்டான்.

"ஆமாம், ஏன்?" என்றுர் வக்கில்.

"எனக்கு அவனை நன்ருகத் தெரியும். மிகவும் நல்லவன்."

"கெட்டிக்கார வக்கில்."

"எந்த விஷயத்திலும் மனச்சாட்சிப்படி நடப்பான்" என்றுன் நிக்லியுடாவ். அவனுக்கும் தனக்குமிடையில் இருந்த நட்பும் அவனுடைய நல்ல சுபாவங்களும் அவனுக்கு ஞாபகம் வந்தன.

விசாரணை ஆரம்பமாகி விட்டது. அதன் விவரங்களைக் கவனித்துக் கொண்டிருந்த பானரின், "ஆமாம், அதிக நேரம் ஆகிவிட்டது" என்றுர்.

இந்த வழக்கில் ஜில்லா கோர்ட் தீர்ப்பை அப்பீல் கோர்ட் ஊர்ஜிதம் செய்திருக்கிறது. அந்தத் தீர்ப்பை எதிர்த்து இங்கு அப்பீல் செய்யப்பட்டிருந்தது. என்ன நடக்கிறது என்பதைக் கவனித்து அறிய முயன்றுன் நிக்லியுடாவ். வழக்கின் முக்கிய விஷயத்தைப் பற்றி ஒரு சர்ச்சையுமில்லை. ஏதோ சிறிய விஷயங்களைப் பற்றித்தான் ஆராய்ந்து கொண்டிருந்தார்கள்.

வழக்கு இதுதான்:

னுன். அதை ஷுஸ்டோவாவின் தாயார் எழுதியிருந்தாள். தன் பெண் விடுதலையாகி விட்டதால் நெக்லியுடாவுக்கு நன்றி செலுத்த அவள் வந்திருந்தாளாம். தன் வீட்டுக்கு ஒரு முறை விஜயம் செய்யும்படி அவனைக் கேட்டுக் கொண்டிருந்தாள். "உபசார வார்த்தைகள் சொல்லி உங்களை அலுப்படையச் செய்ய மாட்டோம். உங்களைப் பார்த்தால் சந்தோஷமாக இருக்கும். நாளை காலை வர சௌகர்யப்படுமா?" என்று அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தது.

போகாட்ரியெவ்விடமிருந்து ஒரு கடிதம் வந்திருந்தது. மத சீர்திருத்தக்காரர்கள் (பைபிள் படித்து விவாதித்ததற்காகக் கைதியானவர்கள்) மனுவைத் தாமே நேரில் மன்னரிடம் கொடுப்பதாக அவர் குறிப்பிட்டிருந்தார். ஆனுல் சம்பந்தப்பட்ட அதிகாரியை அதற்கு முன்னுல் பார்ப்பது நல்லதென்று நெக்லியுடாவுக்குத் தோன்றியது.

சென்ற சில தினங்களில் அவன் பெற்ற அனுபவங்களுக்குப் பின் பீடர்ஸ்பர்க்கில் எந்தக் காரியமும் நடக்கும் என்ற நம்பிக்கை போய்விட்டது. மாஸ்கோவில் அவன் போட்ட திட்டங்களெல்லாம் இளைஞனின் கனவுகளைப்போலாகிவிட்டன. இருந்தாலும் தான் நினைத்தபடி செய்வது கடமையென்று தோன்றியது. மறுநாள் போகாட்ரியெவ்வைக் கேட்டுக் கொண்டு, சம்பந்தப்பட்ட அதிகாரியைச் சந்திக்கத் தீர்மானித்தான்.

அவர்களுடைய மனுவை எடுத்துப் பார்க்கத் தொடங்கினுன் நெக்லியுடாவ். உடனே ஒரு வேலைக்காரன் வந்து அவனுடைய சிற்றன்னை கூப்பிடுவதாக அறிவித்தான். நெக்லியுடாவ் காகிதங்களை அப்படியே வைத்துவிட்டுத் தன் சிற்றன்னை இருந்த இடத்திற்குப் போனுன். அங்கு மேரியட்டும் வந்திருந்தாள். அதை அறிந்தவுடன் அவன் முகத்தில் சிரிப்பை வரவழைத்துக்கொள்ள விரும்பினுன்.

அவன் பிரவேசித்தபொழுது அவனுடைய சிற்றன்னை சிரித்துக்கொண்டிருந்தாள். [illegible] பற்றித்தான் அவர்களும் பேசிக்கொண்டிருந்திருக்க வேண்டும். அவர்கள் சிரித்த மாதிரியிலிருந்து இது தெரிந்தது.

"சௌக்கியமா?" என்று மேரியட்டைக் கேட்டுவிட்டு நெக்லியுடாவ் உட்கார்ந்தான். அவனுடைய [illegible] மனத்திற்குள்ளேயே அவளைச் சபித்திருந்தான். உடனே அவன் கருத்தை உணர்ந்த மேரியட் தன் முகபாவத்தை மாற்றிக்கொண்டு விட்டாள். ஏதோ ஒரு கவலையைத் தேடி அலைபவளைப்போல் முகத்தை வைத்துக்கொண்டாள். அவள்

# 24

கோர்ட்டிலிருந்து புறப்பட்ட நிக்லியுடாவும் வக்கீலும் கூடவே சென்றனர். வக்கீல் வண்டியைப்பின்னால் கொண்டு வரச் சொல்லி விட்டு நிக்லியுடாவுடன் பேசிக்கொண்டே வந்தார். பெரிய சர்க்கார் உத்தியோகஸ்தர் ஒருவர் செய்த ஆபாஸமான குற்றத்தைப்பற்றிச் சொன்னார். காமென்ஸ்கி கொலைக்கு அடுத்தபடி இதைப்பற்றித்தான் பீடர்ஸ்பர்க் எங்கும் வம்பளப்பு. நீதிபதிகள் கூடத் தனியாக விவாதம் நடத்திக் கொண்டிருந்த பொழுது இதைப்பற்றித் தான் பேசினர். அந்தக் குற்றம் எப்படி வெளியாயிற்று என்பதை வக்கீல் விவரித்தார். அந்தக் குற்றம் செய்பவனைச் சட்டப்படி சுரங்கத்திற்கு அனுப்ப வேண்டும். ஆனால் இந்த அதிகாரியை சைபீரியாவில் ஒருநகருக்கு கவர்னராக நியமித்து விட்டார்களாம். இந்த சம்பவத்தின் ஆபாசங்களை யெல்லாம் சொல்லி முடித்தார். அடுத்த படியாக, ஒரு ஞாபகச் சின்னம் கட்டுவதற்காக வசூலான ஏராளமான பணத்தைப் பெரிய மனிதர்கள் சாப்பிட்டு விட்ட விவரத்தை உற்சாகத்துடன் கூறினார். பங்கு மார்க்கெட்டில் ஒரு ஸ்திரீ லக்ஷக் கணக்கில் பணம் சம்பாதித்தது, ஒருவன் தன் மனைவியை மற்றொருவனுக்கு விற்க ஒப்புக்கொண்டது இவைபோன்ற பல விஷயங்களைப்பற்றி வக்கீல் பேசினார். அதிகாரிகள் குற்றம் செய்து விட்டு, உன்னத ஸ்தானங்களுக்கு வந்து விடுவதைப்பற்றிச் சொன்னார். அவருக்குத் தெரிந்திருந்த இத்தகைய சம்பவங்களுக்கு எல்லையில்லை போல் தோன்றியது. தாம் பணம் சம்பாதித்த முறை நியாயமானதே என்பதை எடுத்துக் காட்டுவதற்காகத்தான் இவற்றை யெல்லாம் சொன்னார். அவர் கடைசியாக ஒரு பெரிய மோசடியைப் பற்றி விவரிக்கத் தொடங்கினார். அதை முடிக்கு முன் நிக்லியுடாவ் ஒரு வண்டியை அமர்த்திக் கொண்டு புறப்பட்டு விட்டான்.

அப்பீல் தோற்றதால் அவன் மனம் வருத்தத்தில் ஆழ்ந்திருந்தது. அவளுடைய விதியோடு தன்னைப் பிணைத்துக் கொள்ள வேண்டுமென்ற அவனுடைய விருப்பம் ஈடேறுவது இனிக்கஷ்டமாகி விட்டது. வக்கீல் விவரித்துக் கொண்டு வந்த அக்கிரமங்கள் அவனுடைய சோகத்தை அதிகப்படுத்தின. ஸெலெனின் பார்த்த அன்பற்ற பார்வை அவன் மனக்கண் முன் அடிக்கடி தோன்றியது. இதனால் அவனுடைய வருத்தம் இன்னும் அதிகரித்தது.

அவன் வீட்டுக்குத் திரும்பியவுடன் காவற்காரன் அவனிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தான். யாரோ ஒரு ஸ்திரீ வந்து அதை எழுதிக் கொடுத்து விட்டுப் போனதாகச் சொன்

ளுன். அதை ஷுஸ்டோவாவின் தாயார் எழுதியிருந்தாள். தன் பெண் விடுதலையாகி விட்டதால் நிக்லியுடாவுக்கு நன்றி செலுத்த அவள் வந்திருந்தாளாம். தன் வீட்டுக்கு ஒரு முறை விஜயம் செய்யும்படி அவனைக் கேட்டுக் கொண்டிருந்தாள். "உபசார வார்த்தைகள் சொல்லி உங்களை அலுப்படையச் செய்ய மாட்டோம். உங்களைப் பார்த்தால் சந்தோஷமாக இருக்கும். நாளை காலை வர சௌகர்யப்படுமா?" என்று அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தது,

போகாட்ரி யெவ்விடமிருந்து ஒரு கடிதம் வந்திருந்தது. மத சீர்திருத்தக்காரர்கள் (பைபிள் படித்து விவாதித்ததற்காகக் கைதியானவர்கள்) மனுவைத் தாமே நேரில் மன்னரிடம் கொடுப்பதாக அவர் குறிப்பிட்டிருந்தார். ஆனால் சம்பந்தப்பட்ட அதிகாரியை அதற்கு முன்னால் பார்ப்பது நல்லதென்று நிக்லியுடாவுக்குத் தோன்றியது.

சென்ற சில தினங்களில் அவன் பெற்ற அனுபவங்களுக்குப்பின் பீடர்ஸ்பர்க்கில் எந்தக் காரியமும் நடக்கும் என்ற நம்பிக்கை போய்விட்டது. மாஸ்கோவில் அவன் போட்ட திட்டங்களெல்லாம் இளைஞனின் கனவுகளைப்போலாகிவிட்டன. இருந்தாலும் தான் நினைத்தபடி செய்வது கடமையென்று தோன்றியது. மறுநாள் போகாட்ரியெவ்வைக் கேட்டுக் கொண்டு, சம்பந்தப்பட்ட அதிகாரியைச் சந்திக்கத் தீர்மானித்தான்.

அவர்களுடைய மனுவை எடுத்துப் பார்க்கத் தொடங்கினான் நிக்லியுடாவ். உடனே ஒரு வேலைக்காரன் வந்து அவனுடைய சிற்றன்னை கூப்பிடுவதாக அறிவித்தான். நிக்லியுடாவ் காகிதங்களை அப்படியே வைத்துவிட்டு தன் சிற்றன்னை இருந்த இடத்திற்குப் போனான். அங்கு மேரியட்டும் வந்திருந்தாள். அதை அறிந்தவுடன் அவன் முகத்தில் சிரிப்பை வரவழைத்துக்கொள்ள விரும்பினான்.

அவன் பிரவேசித்தபொழுது. அவனுடைய சிற்றன்னை சிரித்துக்கொண்டிருந்தாள். சைபீரியா கவர்னரைப் பற்றித்தான் அவர்களும் பேசிக்கொண்டிருந்திருக்க வேண்டும். அவர்கள் சிரித்த மாதிரியிலிருந்து இது தெரிந்தது.

"சௌக்கியமா?" என்று மேரியட்டைக் கேட்டுவிட்டு நிக்லியுடாவ் உட்கார்ந்தான். அவளுடைய எக்களிப்புக்காக மனத்திற்குள்ளேயே; அவளைச் சபிக்கவிருந்தான். உடனே அவன் கருத்தை உணர்ந்த மேரியட் தன் முகபாவத்தை மாற்றிக்கொண்டு விட்டாள். ஏதோ ஒரு லக்ஷியத்தைத் தேடி அலைபவள்போல் முகத்தை வைத்துக்கொண்டாள். அவள்

"கடவுள் கிருபை இருந்தால் கிராமத்தில் குணமடைவாள். அவள் தந்தை இருக்கும் இடத்திற்கு அனுப்பிவிட்லாமென்று பார்க்கிறோம்'' என்றாள் தாய்.

"நீங்கள் இல்லையென்றால் அவள் சிறையிலேயே இறந்து போயிருப்பாள் அவளைக் காப்பாற்றியதற்காக நன்றிசெலுத்துகிறேன், ஆனால் நான் உங்களைப் பார்க்க விரும்பியது வேறு காரியத்திற்காக. இந்தக் கடிதத்தை டுக்கோவாவிடம் சேர்த்து விட வேண்டும். கவரை ஒட்டவில்லை. படித்துப் பாருங்கள். கொடுக்கலாமென்று தோன்றினால் கொடுங்கள். இல்லையானால் கிழித்து எறிந்து விடுங்கள். அதில் ஆக்ஷேபகரமான விஷயம் ஒன்றும் இல்லை'' என்றாள் சித்தி.

நிக்லியுடாவ் அதை வாங்கிக் கொண்டான். அவ்விதமே சேர்த்துவிடுவதாக வாக்களித்தான். அதைப் படித்துப்பாராமலே ஒட்டிவிட்டான்.

## 27

இனி மத சீர்திருத்தக்காரர்களின் வழக்கு ஒன்றுதான் பாக்கி, அதற்காகத்தான் நிக்லியுடாவ் பீடர்ஸ்பர்க்கில் இருந்தான். தன்னுடைய பழைய நண்பனான பொகாட்ரியெவ்மூலம்' அவர்களுடைய மனுவை மன்னரிடம் சமர்ப்பிக்க விரும்பினான். காலையில் அவன் பொகாட்ரியெவ் வீட்டுக்கு வந்தான். அப்பொழுது தான் அவன் சாப்பிட்டுக்கொண்டிருந்தான். பொகாட்ரியெவ் அதிக உயரம் இல்லாவிட்டாலும் நல்ல பலசாலி. யோக்கியன். தாராள மனப்பான்மையுள்ளவனும் கூட! மன்னரிடம் அவனுக்கு அதிக விசுவாஸம். பெரிய வட்டாரங்களில் எவ்விதத் தவறையும் அவன் காணவில்லை. யாரையும், அல்லது எந்தப் புதிய திட்டத்தையும் கண்டிக்கமாட்டான். அவை பற்றிப் பேசாமலே இருந்துவிடுவான். இல்லையானால் உரத்த குரலில் தன் கருத்தை வெளியிடுவான். அதேபோன்ற உரத்த குரலில் சிரிப்பான்.

அவன் நிக்லியுடாவைக் கண்டவுடன், "வா, வா, சாப்பிட உட்கார், நான் உன்னைப்பற்றித்தான் நினைத்திருந்தேன். மனுவைக் கொடுத்து விடுகிறேன். முதலில் நீ டோபோரோவைப் பார்ப்பது நல்லதென்று தோன்றுகிறது'' என்றான்'

டோபோரோவ் என்ற பெயரைக் கேட்டவுடன் நிக்லியுடாவுக்கு முகம் சுண்டிவிட்டது.

"எல்லாம் அவரிடம்தான் இருக்கிறது. அவரிடம் ஆலோசனையாவது கேட்பார்கள். அவரே கூட உன் விருப்பத்தை நிறைவேற்றிவிட முடியும்."

"நீ சொன்னால் நான் போகிறேன்."

"சரி, அது இருக்கட்டும். உனக்கு பீடர்ஸபர்க் பிடித்திருக்கிறதா?" என்று உரத்த குரலில் கேட்டான் பொகாட்ரியெவ்.

"மயக்கம் வருகிறது?" என்றான் நிக்லியுடாவ்.

"மயக்கமா?" என்று போகாட்ரியெவ் திருப்பிக் கேட்டுவிட்டு உரக்கச் சிரித்தான், "ஏன்? ஒரு காரியமும் நடக்கவில்லையா? இந்த மனுவை அவரிடம் கொடு. அவர் ஒன்றும் செய்யயாவிட்டால், நானே நாளை மனுவைக் கொடுத்து விடுகிறேன்" என்று தன் வழக்கமான பெருந்தொண்டையில் கூறிவிட்டு எழுந்தான். "நேரமாகிவிட்டது. நான் போக வேண்டும்" என்று சொல்லிக்கொண்டே வாளைத் தன் இடுப்பில் கட்டிக்கொண்டான்.

"நானும் போகவேண்டும்" என்று நிக்லியுடாவ் அவன் கையைக் குலுக்கினான். நல்ல காரியம் நடக்கும்பொழுது ஏற்படும் சந்தோஷம் அவன் மனத்தில் ஏற்பட்டது.

டோபோரோவைப் பார்ப்பதால் ஒரு பலனும் கிடைக்காதென்று தோன்றியது. இருந்தாலும் பொகாட்ரியெவ் கூறியதால் நிக்லியுடாவ் அவனை பார்க்கப்போனான்.

மந்தபுத்தியும் அயோக்கியத்தனமும் உள்ளவர்கள்தான் டோபோரோவின் வேலையைச் செய்ய முடியும். சர்ச்சை கடவுளே ஸ்தாபித்ததாக அது பிரகடனம் செய்து கொண்டிருக்கிறது. அத்தகைய சர்ச்சை, எந்த முறையை அனுஷடித்தாயினும் காப்பாற்றுவது டோபோரோவின் வேலை. இதற்காக அவன் பலாத்காரத்தைக் கூட உபயோகிக்கலாம். இதில் உள்ள அபத்தத்தை அவன் அறிய இஷ்டப்படவில்லை. மனிதனுக்கு மனிதன் வித்தியாசமில்லை என்பது மதத்தின் அடிப்படைத் தத்துவம். ஆனால் இது அவனுக்கு மாத்திரம் பொருந்தாது. சாதாரண மக்கள் வேறாகவும், தான் வேறாகவும் தான் அவன் கருதினான். உண்மையில் அவனுக்கு ஒன்றிலுமே நம்பிக்கை இல்லை. இது அவனுக்கு சௌகரியமாகவும் சந்தோஷமாகவும் இருந்தது. ஆனால் "மக்களுக்கும் இதே மனப்பான்மை வந்துவிட்டால் என்ன செய்வது?" என்ற பயம் உள்ளூற உண்டு. ஆகையால் அவர்களை இதிலிருந்து "காப்பாற்று"வதைத் தன் புனிதமான கடமையாகக் கொண்டான். "அடிமைகளாக இருப்பதைத்தான் மக்கள் விரும்பு

"கடவுள் சித்தப்படி இருந்தால் சொர்க்கத்தில் நுழைவாள். அவள் அங்கே இருக்கும் இடத்திற்கு அனுப்பிவிடலாமென்று பார்க்கிறேன்" என்றாள் தாய்.

"நீங்கள் இல்லையென்றால் அவள் சைபீரியாவில் இறந்து போயிருப்பாள். அவளைக் காப்பாற்றியதற்காக நன்றி செலுத்துகிறேன். ஆனால் நான் உங்களைப் பார்க்க விரும்பியது வேறு காரியத்திற்காக. இந்தக் கடிதத்தைத் தேவாலயத்திடம் சேர்த்து விட வேண்டும். கவரை ஒட்டவில்லை. படித்துப் பாருங்கள். கொடுக்கலாமென்று நீ தான் நினைத்தால் கொடுங்கள். இல்லையானல் கிழித்து எறிந்து விடுங்கள். அதில் ஆட்சேபகரமான விஷயம் ஒன்றும் இல்லை" என்றாள் சித்தி.

நெக்லியுடாவ் அதை வாங்கிக் கொண்டான். அவ்விதமே சேர்த்துவிடுவதாக வாக்களித்தான். அதைப் படித்துப்பாராமலே ஒட்டிவிட்டான்.

## 27

இனி மத சீர்திருத்தக்காரர்களின் வழக்கு ஒன்றுதான் பாக்கி, அதற்காகத்தான் நெக்லியுடாவ் பீடர்ஸ்பர்க்கில் இருந்தான். தன்னுடைய பழைய நண்பனை பொகாட்ரியெவ்மூலம்' அவர்களுடைய மனுவை மன்னரிடம் சமர்ப்பிக்க விரும்பினன். காலையில் அவன் பொகாட்ரியெவ் வீட்டுக்கு வந்தான். அப்பொழுது தான் அவன் சாப்பிட்டுக்கொண்டிருந்தான். பொகாட்ரியெவ் அதிக உயரம் இல்லாவிட்டாலும் நல்ல பலசாலி. யோக்கியன். தாராள மனப்பான்மையுள்ளவனும் கூட! மன்னரிடம் அவனுக்கு அதிக விசுவாஸம். பெரிய வட்டாரங்களில் எவ்விதத் தவறையும் அவன் காணவில்லை. யாரையும், அல்லது எந்தப் புதிய திட்டத்தையும் கண்டிக்கமாட்டான். அவை பற்றிப் பேசாமலே இருந்துவிடுவான். இல்லையானல் உரத்த குரலில் தன் கருத்தை வெளியிடுவான். அதேபோன்ற உரத்த குரலில் சிரிப்பான்.

அவன் நெக்லியுடாவைக் கண்டவுடன், "வா, வா, சாப்பிட உட்கார், நான் உன்னைப்பற்றித்தான் நினைத்திருந்தேன். மனுவைக் கொடுத்து விடுகிறேன். முதலில் நீ டோபோரோவைப் பார்ப்பது நல்லதென்று தோன்றுகிறது" என்றான்.

டோபோரோவ் என்ற பெயரைக் கேட்டவுடன் நெக்லியுடாவுக்கு முகம் சுண்டிவிட்டது.

"எல்லாம் அவரிடந்தான் இருக்கிறது. அவரிடம் ஆலோசனையைத்தான் கேட்பார்கள். அவரே கூட உன் விருப்பத்தை நிறைவேற்றிவிட முடியும்."

"நீ சொன்னால் நான் போகிறேன்."

"சரி, அது இருக்கட்டும். உனக்குப் பீதியைக் கொடுத்திருக்கிறதா?" என்று உரத்த குரலில் கேட்டான் பொகாட்ரியேவ்.

"மயக்கம் வருகிறது!" என்றான் நிக்லியுடாவ்.

"மயக்கமா?" என்று பொகாட்ரியேவ் திருப்பிக் கேட்டுவிட்டு உரக்கச் சிரித்தான், "ஏன்? ஒரு காரியமும் நடக்கவில்லையா? இந்த மனுவை அவரிடம் கொடு. அவர் ஒன்றும் செய்யாவிட்டால், நாளை நானே மனுவைக் கொடுத்து விடுகிறேன்" என்று தன் வழக்கமான பெருந்தோரணையில் கூறிவிட்டு எழுந்தான். "நேரமாகிவிட்டது. நான் போக வேண்டும்" என்று சொல்லிக்கொண்டே வாளைத் தன் இடுப்பில் கட்டிக்கொண்டான்.

"நானும் போகவேண்டும்" என்று நிக்லியுடாவ் அவன் கையைக் குலுக்கினான். நல்ல காரியம் நடக்கும்பொழுது ஏற்படும் சந்தோஷம் அவன் மனத்தில் ஏற்பட்டது.

டோபோரோவைப் பார்ப்பதால் ஒரு பலனும் கிடைக்காதென்று தோன்றியது. இருந்தாலும் பொகாட்ரியேவ் கூறியதால் நிக்லியுடாவ் அவனை பார்க்கப்போனான்.

மந்தபுத்தியும் அயோக்யத்தனமும் உள்ளவர்கள்தான் டோபோரோவின் வேலையைச் செய்ய முடியும். சர்ச்சை கடவுளே ஸ்தாபித்ததாக அது பிரகடனம் செய்து கொண்டிருக்கிறது. அத்தகைய சர்ச்சை, எந்த முறையை அனுஷ்டித்தாயினும் காப்பாற்றுவது டோபோரோவின் வேலை. இதற்காக அவன் பலாத்காரத்தைக் கூட உபயோகிக்கலாம். இதில் உள்ள அபத்தத்தை அவன் அறிய இஷ்டப்படவில்லை. மனிதனுக்கு மனிதன் வித்தியாசமில்லை என்பது மதத்தின் அடிப்படைத் தத்துவம். ஆனால் இது அவனுக்கு மாத்திரம் பொருந்தாது. சாதாரண மக்கள் வேறாகவும், தான் வேறாகவும் தான் அவன் கருதினான். உண்மையில் அவனுக்கு ஒன்றிலுமே நம்பிக்கை இல்லை. இது அவனுக்கு சௌகரியமாகவும் சந்தோஷமாகவும் இருந்தது. ஆனால் "மக்களுக்கும் இதே மனப்பான்மை வந்துவிட்டால் என்ன செய்வது?" என்ற பயம் உள்ளூற உண்டு. ஆகையால் அவர்களை இதிலிருந்து "காப்பாற்று"வதைத் தன் புனிதமான கடமையாகக் கொண்டான். "அடிமைகளாக இருப்பதைத்தான் மக்கள் விரும்பு,

றவர்கள் இந்த கோஷ்டியைச் சேர்ந்தவர்கள்தான். இவர்களுடைய வாழ்க்கை நிலைதான் இவர்களுடைய செய்கைக்குக் காரணமென்று தோன்றியது. நிக்லியுடாவ் சந்தித்த பெரும்பாலான திருடர்களும் கொலைகாரர்களும் இந்த கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் தான்.

"இவர்களைப்போலவே நடக்கும் மற்றவர்கள் சுதந்திரமாக இருக்கின்றனர்; இவர்களைப் பற்றித் தீர்ப்புக் கூறக் கூட வந்துவிடுகின்றனர். அப்படியிருக்க இவர்கள் மாத்திரம் சிறையில் அடைபட்டுத் தவிப்பானேன்?" என்பதை ஆராய்வது அவனுடைய நான்காவது வேலையாக இருந்தது. புத்தகங்களைப் படித்து இந்தக் கேள்விக்கு பதில் கண்டு பிடிக்க முயன்றான். குற்றம் சம்பந்தமாக ஆயிரக் கணக்கான வேறு கேள்விகளுக்கு விஞ்ஞானம் பதில் அளித்தது ஆனால் அவனுடைய கேள்விக்கு மாத்திரம் பதில் அளிக்க வில்லை,

அவன் கேட்டது சாதாரண கேள்விதான். "சிலர் மற்றும் சிலரைச் சிறையில் அடைக்கிறார்கள். தேசப்பிரஷ்டம் செய்கிறார்கள். சவுக்கால் அடிக்கிறார்கள். கொலை செய்கிறார்கள். ஆனால் இந்த தண்டனைகளைப் பெறுகிறவர்களைக் காட்டிலும் வாதிப்பவர்கள் எந்தவிதத்திலும் உயர்ந்தவர்களல்லர். அப்படியிருந்தும் இவர்கள் என் இந்தக் கொடுமைகளைச் செய்கிறார்கள்? அப்படிச் செய்ய இவர்களுக்கு என்ன உரிமை?" என்பதுதான் அந்தக் கேள்வி. இதற்கு பதிலாக மற்றும் சில கேள்விகள் எழுந்தன. மனிதர்களுக்கு சுயேச்சையான அபிப்பிராயங்கள் உண்டா? இல்லையா? தலையை அளந்து குற்றம் செய்யும் மனப்பான்மையைக் கண்டுபிடிக்க முடியுமா? முடியாதா? குற்றத்திற்கும் பரம்பரைக்கும் என்ன சம்பந்தம்? அயோக்கியத்தனம் பரம்பரையாக வருமா? பைத்தியம் என்பது என்ன? ஆத்திரம் என்பது என்ன? பருவநிலை, உணவு, அறியாமை முதலியவை குற்றத்தை எப்படி பாதிக்கின்றன? சமூகம் என்பது என்ன? அதன் கடமைகள் என்ன? இத்தகைய கேள்விகள் எழுந்தன,

இவற்றைப்பற்றி ஆலோசித்த பொழுது நிக்லியுடாவுக்கு ஒரு சம்பவம் ஞாபகம் வந்தது. ஒரு சமயம் ஒரு சிறுவன் பள்ளிக்கூடத்திலிருந்து வந்து கொண்டிருந்தான். அவனைப் பார்த்து, "உனக்கு எழுத்துக் கூட்டத் தெரியுமா?", என்று நிக்லியுடாவ் கேட்டான், "ஓ! தெரியும்" என்று சிறுவன் பதில் அளித்தான், "கால்" என்ற வார்த்தைக்கு எழுத்துக் கூட்டு பார்ப்போம்" என்றான் நிக்லியுடாவ். "நாயின்காலா, அல்லது வேறு ஏதாவது மிருகத்தின் காலா?' என்று சிறுவன் கேட்டான்.

நிக்லியுடாவின் கேள்விக்கு விஞ்ஞானப் புத்தகங்கள் அளித்த பதில்கள் இப்படித்தான் இருந்தன. அவற்றில் ரஸமான விஷயங்கள் பல இருந்தன, "ஒரு சிலர் என்ன உரிமையைக் கொண்டு மற்றவர்களைத் தண்டிக்கிறார்கள்!" என்ற கேள்விக்கு மாத்திரம் பதில் இல்லை. பதில் பின்னர் கிடைக்குமென்று நம்பினான், தானாக அவனுக்குக் கிடைத்த பதிலை அவன் நம்பத் தயாராக இல்லை.

# 31

ஜூலை ஐந்தாம் தேதியன்று காடுஷா சைபீரியாவுக்கு புறப்பட விருந்தாள். அன்றே தானும் புறப்பட நிக்லியுடாவும் ஏற்பாடு செய்தான்.

அவனைப் பார்ப்பதற்காக முதல் நாளன்று அவனுடைய அக்காளும் அவளுடைய கணவனும் வந்தனர். அவள் பெயர் நடாலி இவானோவ்னா ரோகோஷின்காயா. நிக்லியுடாவ் சிறுவனாக இருந்தபொழுது அவன்மீது அவளுக்கு அசாத்தியப் பிரியம்.

பின்னர் நிக்லியுடாவ் ராணுவ சேவையில் ஈடுபட்டதாலும் அவள் விவாகம் செய்து கொண்டு கணவனோடு போய்விட்டதாலும் அவர்கள் பிரிந்துவிட்டனர். தார்மிக மேன்மை, சேவை முதலியவற்றின் அர்த்தமே அவளுடைய கணவனுக்குத் தெரியாது. அவனுக்கு கியாதியும் இல்லை, பணமும் இல்லை. ஆனால் சமயத்திற்குத் தகுந்தபடி வேஷம் போட்டு முன்னுக்கு வந்தவன்.

தன் அக்காள் புருஷன் ரோகோஷின்ஸ்கியைக் கண்டாலே நிக்லியுடாவுக்குப் பிடிக்காது. ரோகோஷின்ஸ்கியின் அற்பத்தனம் மாத்திரம் இதற்குக் காரணமில்லை, அவற்றையெல்லாம் சகித்துக்கொண்டு நடாலி அவனைக் காதலித்தாள். அவனுக்காகத் தன்னிடம் இருந்த நல்ல குணங்களைக்கூட அவள் பலியிட்டுவிட்டாள். நிக்லியுடாவின் வெறுப்புக்கு முக்கிய காரணம் இதுதான். தன் சகோதரி அவனுடைய மனைவி என்பதை நினைப்பதற்கே வெறுப்பாக இருக்கும். அவர்களுடைய குழந்தைகள்மீது கூட அவனுக்கு அருவை. அவளுக்கு மற்றொரு குழந்தை பிறக்கப் போகிறது என்பதை அறிந்தான். இதனால் அவனுக்கு வருத்தம்தான் ஏற்பட்டது.

அவர்கள் குழந்தைகளை அழைத்துவரவில்லை. மாஸ்கோவில் ஒரு பெரிய ஹோட்டலில் வந்து இறங்கியிருந்தனர். நடாலி தன் தம்பியைத் தேடிக்கொண்டு சென்றாள். அந்த சம

"விவாகம் செய்து கொள்வதுதான் சிறந்த வழி என்று தோன்றுகிறது. அதோடு நான் உபயோகமாக இருக்கக் கூடிய ஓர் உலகத்திற்கு அது வழி காட்டுகிறது."

"உனக்கு சந்தோஷம் கிடைக்காது."

"என் சந்தோஷம் முக்கியமில்லை."

"அது சரி, அவளுக்கு ஹிருதயம் இருந்தால், அவளும் சந்தோஷப்படமாட்டாள—இதை விரும்பக்கூட மாட்டாள்."

"அவள் விரும்பவில்லைதான்"

"எனக்குத் தெரியும்; ஆனால் வாழ்க்கைக்கு..."

"ஆமாம்—வாழ்க்கைக்கு?"

"வேண்டியது வேறு ஒன்று."

"நாம் சரியான காரியத்தைச் செய்ய வேண்டும். அது ஒன்று தான் வாழ்க்கைக்கு வேண்டியது" என்று கூறிவிட்டு அவள் முகத்தைப் பார்த்தான் நிக்லியுடாவ். அவள் முகம் களித்திருந்தது.

"எனக்கு விளங்கவில்லை" என்று கூறிப் பெருமூச்சு விட்டாள் அவள்."

"இவள் எப்படி இவ்வளவு மாறிவிட்டாள்?" என்று தன் மனத்துள் நினைத்துக்கொண்டான் நிக்லியுடாவ். விவாகத்திற்கு முன் அவளுடைய மனோபாவம் எப்படியிருந்தது என்பதை நினைத்துப் பார்த்தான். சிறுவயது ஞாபகங்கள் வந்தன. உடனே அவள் மீது ஒருவித இரக்கம் ஏற்பட்டது. இந்த சமயத்தில் ரோகோஷின்ஸ்கி வந்தான். அவன் கர்வத்துடன் தலை நிமிர்ந்து வந்த மாதிரியும், அவன் வழுக்கைத் தலையும் நிக்லியுடாவுக்கு வெறுப்பூட்டின. "சௌக்கியமா?" என்று ரோகோஷின்ஸ்கி கேட்டான். வார்த்தைகளை வேண்டுமென்றே அழுத்தி உச்சரித்தான். நிக்லியுடாவுடன் கைகுலுக்கிவிட்டு, ஈஸிசேரில் நிதானமாக உட்கார்ந்தான். "உங்களுடைய பேச்சுக்கு நான் இடைஞ்சலாக இல்லையே?" என்று கேட்டான்.

"என் விஷயங்களை நான் ஒருவரிடமும் மறைப்பதில்லை" என்றான் நிக்லியுடாவ்.

"அவன் செய்துள்ள யோசனைகளைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறோம், ஒரு கப் டீ குடிக்கிறீர்களா?" என்றாள் நடாலி.

"வேண்டாம், அது என்ன யோசனை?" என்றான் ரோகோஷின்ஸ்கி.

"ஒரு பெண்ணுக்கு நான் அநியாயம் இழைத்து விட்டதாக நினைக்கிறேன். அவள் தண்டனை பெற்று சைபீரியாவுக்குப் போகிருள். நானும் அவளோடு போக விரும்புகிறேன்."

"இன்னும் சில விஷயங்களைக் கூடக் கேள்விப்பட்டேன்'

"ஆமாம்; அவள் விரும்பினுல் அவளை மணக்கவும் தீர்மானித்திருக்கிறேன்."

"உன் கருத்து எனக்கு விளங்கவில்லை. கொஞ்சம் புரியும்படி சொல்வாயா?"

"என் கருத்து இதுதான். இந்த ஸ்திரீ......அவள் கெடுவதற்கு முதல் காரணம்......" கருத்தை வெளியிடுவதற்கு சரியான வார்த்தை கிடைக்காமல் திணறினுன் நிக்லியுடாவ். தன் மீதே அவனுக்கு ஆத்திரம் வந்தது. "குற்றம் செய்தவன் நான்; தண்டனை அனுபவிப்பவள் அவள். என் கருத்து இது தான்" என்ருன்.

"அவள் தண்டனை பெற்ருளென்ருல் நிரபராதியல்ல என்றுதான் அர்த்தம்."

"அவள் முற்றிலும் நிரபராதிதான்" என்று சொல்லி விட்டு எல்லா சம்பவங்களையும் நிக்லியுடாவ் விவரித்தான்,

"ஆமாம். பிரதம நீதிபதியும் ஜூரிகளும் அஜாக்கிரதையாக இருந்ததால் ஏற்பட்ட தவறுதான் இது. இதைத்திருத்த செனேட்தான் இருக்கிறதே!"

"செனேட்டும் தள்ளிவிட்டது"

"அப்படியானுல் அப்பீலுக்குப் போதிய காரணம் இல்லை என்று ஆகிறது. வழக்கின் தாரதம்யங்களில் செனேட் தலையிடாது. உண்மையில் தவறு ஏற்பட்டிருந்தால் மன்னருக்கு மனு செய்ய வேண்டும்" என்ருன் ரோகோஷின்ஸ்கி. "கோர்ட் உற்பத்தி செய்யும் பொருள்தான் சத்தியம்" என்பது அவன் கருத்து.

"அதையும் செய்திருக்கிறேன். ஆனுல் வெற்றி கிடைக்குமென்று தோன்றவில்லை. அவர்கள் தங்கள் இலாகாவைக் கேட்பார்கள்; இலாகா செனேட்டைக் கேட்கும், செனேட் தன் தீர்மானத்தைத் திருப்பிக் கூறும்; வழக்கம்போல் நிரபராதிகள் தண்டனையை அனுபவிப்பார்கள்"

"இலாகா செனேட்டைக் கேட்காது. கோர்ட்டிலிருந்து தஸ்தா வேஜிகளை அனுப்பும்படி கேட்கும். அவற்றைப பரிசீலனை செய்யும். தவறு வெளியானுல் தக்கபடி தீர்ப்புக் கூறும். இதைத் தவிர, நிரபராதிகள் தண்டனை அனுபவிப்பதேயில்லை. இருந்தாலும் ஏதோ சில அசாதாரணமான சந்

தர்ப்பங்களில் தான் தண்டனைக்குள்ளாகிறார்கள். குற்றவாளிக்குத்தான் தண்டனை கிடைக்கிறது" என்று சொல்லிவிட்டு ரோகோஷின்ஸ்கி ஒரு அசட்டுச் சிரிப்புச் சிரித்தான்.

"கைதிகளில் பெரும்பாலானவர்கள் நிரபராதிகள் தான் என்பது எனக்குத் தெரியும்" என்று நிக்லியுடாவ் அழுத்தந் திருத்தமாகச் சொன்னான்.

"நிரபராதிகள் என்றால் எந்த அர்த்தத்தில்?"

"நிரபராதி என்பதற்கு என்ன அர்த்தமோ அதே அர்த்தத்தில்தான்.

"சரி, சட்ட விவகாரங்களில் தவறுகள் ஏற்பட்டிருக்கின்றன. ஏற்படத்தான் செய்யும். மனிதர் ஏற்படுத்திய ஸ்தாபனங்களில் தவறே இல்லாமல் இருக்க முடியாது" என்று ஒப்புக் கொண்டான் ரோகோஷின்ஸ்கி.

"தாங்கள் வாழும் சமூகம் சரியென்று நினைக்கும் காரியங்களைச் செய்ததற்காகப் பலர் தண்டனை பெறுகிறார்கள்."

"மன்னிக்கவும்; திருடுவது தவறென்பது ஒவ்வொரு திருடனுக்கும் தெரியும்" என்று அமைதியாகச் சொன்னான் ரோகோஷின்ஸ்கி. அவன் முகத்தில் தோன்றிய துவேஷச் சிரிப்பு நிக்லியுடாவின் மனத்தை உறுத்தியது.

"இல்லை; அவர்களுக்குத் தெரியாது. 'திருடாதே' என்று அவர்களிடம் சொல்கிறோம். ஆனால் தொழிற்சாலை முதலாளி குறைந்த கூலி கொடுக்கிறான். அதன் மூலம் தொழிலாளியின் வேலையை முதலாளி திருடுகிறான். சர்க்கார் வரி போட்டு, தன் ஊழியர்கள் மூலம் நிரந்தரமாகத் திருடிக்கொண்டேயிருக்கிறது. இதையெல்லாம் அவர்கள் அறிந்திருக்கிறார்கள்."

"இது அராஜகம்" என்று தன் மைத்துனன் பேச்சை விளக்கினான் ரோகோஷின்ஸ்கி;

"அது என்னவென்று நான் சொல்லவில்லை. என்ன நடக்கிறது என்பதைத்தான் சொல்கிறேன்" என்று தொடர்ந்தான் நிக்லியுடாவ்: "சர்க்கார் கொள்ளையடிக்கிறது என்பது அவர்களுக்குத் தெரியும்: மிராசுதார்களாகிய நாம் கொள்ளையடிக்கிறோம் என்பது அவர்களுக்குத் தெரியும்; அவர்களுக்குச் சொந்தமாக இருக்க வேண்டிய நிலங்களை நாம் அபகரித்துக் கொண்டு விட்டோம். அந்த நிலத்தில் அவன் சுள்ளி பொறுக்கினால் நாம் அவனுக்குத் திருடன் என்று பெயர் வைத்துச் சிறையில் தள்ளுகிறோம். ஆனால் தான் திருடன் அல்லவென்பது அவனுக்குத் தெரியும். தன்னிடத்திலிருந்து நிலத்தை அபகரித்தவர்கள்தான் திருடர்கள் என்

பதை அவன் அறிவான். கொள்ளையடித்ததைத் திருப்பிக் கொடுக்க வேண்டும். அவன் குடும்பத்திற்கு நாம் செய்ய வேண்டிய கடமை அது."

"இது எனக்குப் புரியவில்லை; புரிந்தாலும் ஒப்புக் கொள்ள முடியாது. நிலம் யாருடைய சொத்தாகவாவது தான் இருக்க வேண்டும். நீ அதைப் பங்கிட்டுக் கொடுத்தால்—" என்று தொடங்கினான் ரோகோஷின்ஸ்கி. நிக்லியுடாவ் சோஷலிஸ்ட்டு: "நிலங்களைச் சமமாகப் பிரித்துக் கொடுக்க வேண்டுமென்று சோஷலிஸம் கூறுகிறது; அப்படிச் செய்வது முட்டாள் தனம்" என்ற மனோபாவத்துடன் பேசினான் அவன். "நிலங்களைச் சமமாகப் பகிர்ந்து கொடுத்தால் திறமைசாலிகளிடம் அது போய்ச்சிக்கிவிடும்" என்றான் மீண்டும்.

"நிலத்தைச் சமமாகப் பங்கிட்டுக் கொடுக்க வேண்டுமென்று ஒருவரும் கூறவில்லை. அது ஒருவருடைய சொந்தச் சொத்தாகவும் இருக்கக் கூடாது. வாங்கி விற்கக் கூடிய பொருளாக அது இருக்கக் கூடாது என்றுதான் சொல்கிறேன்" என்றான் நிக்லியுடாவ்.

"சொத்தாசை மனிதனின் உடன் பிறந்த குணம். அது இல்லையென்றால் பயிரிட வேண்டுமென்ற ஆவலே இல்லாமற் போய்விடும். அந்த ஆசையை ஒழித்து விட்டால் காட்டு மிராண்டித்தனம் வந்துவிடும்."

"நிலம் ஒருவருக்கும் சொந்தமில்லையென்றால் தான் அது காம்பாக இல்லாமல் இருக்கும். இப்பொழுது நிலங்களைப் பயிரிட மிராசுதார்களுக்கும் சக்தியில்லை; பயிரிட சக்தியுள்ளவர்களுக்கும் நிலத்தைவிட மறுக்கிறார்கள்."

"நிக்லியுடாவ், நீ சொல்வது சுத்தப் பைத்தியக்காரத்தனம். நம் காலத்தில் நிலபாத்தியதையை ஒழிப்பது சாத்தியமா? இதைப் பிரத்தியக்ஷமாகச் செய்வதற்கு முன்னால் இதை பற்றி தீர்க்காலோசனை செய்வது நல்லதென்று தோன்றுகிறது" என்றான் ரோகோஷின்ஸ்கி. அவன் முகம் வெளுத்து விட்ட . குரல் நடுங்கியது.

"என் சொந்த விஷயத்தைப் பற்றிச் சொல்கிறீர்களா?" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"ஆமாம்; ஒரு விசேஷ நிலைமையில் உள்ள நாம், நம்முடைய பொறுப்பை உணரவேண்டும். நாம் எந்த நிலைமையில் பிறந்தோமோ அந்த நிலைமையைப் பாதுகாக்க வேண்டும். நம் முன்னோர்களிடமிருந்து பெற்றவற்றை நம் சந்ததியாருக்காகப் பாதுகாத்து வைக்க வேண்டும்."

காரணம் அதுதான். ஜடப் பொருள்களிடம் அன்பு காட்டாமல் நடந்துகொள்ளலாம். ஆனால் மனிதர்களிடம் அப்படி முடியாது. தேனீக்களோடு ஜாக்கிரதையாகப் பழக வேண்டாமா? அவற்றிடம் அஜாக்கிரதையாக இருந்தால் பழகுகிறவனுக்கு ஆபத்துத்தான். மனிதர்களிடமும் அப்படித்தான். பரஸ்பர அன்புதான் வாழ்க்கையின் அடிப்படைச் சட்டம். ஒருவனை நிர்ப்பந்தித்து வேலை வாங்கலாம் நிர்பந்தத்தின் மூலம் அவனுடைய அன்பைப் பெறமுடியாது. மனத்தில் அன்பு பிறக்கவில்லையென்றால் பேசாமல் உட்கார்ந்திரு. ஜடப் பொருள்களில் கவனத்தைச் செலுத்து. ஆனால் மனிதர்களுடன் மாத்திரம் பழகாதே. நடாலியின் கணவனோடு நேற்று நான் அன்பு இல்லாமல் பேசினேன். அப்படிச் செய்யக் கூடாது. அப்படிச் செய்தால் அதனால் வரும் துன்பத்திற்கு அளவே இல்லை. என் வாழ்க்கைமுழுமையும் இது நிரூபிக்கிறது. ஆமாம். ஆமாம். இதுதான் உண்மை'' என்று சொல்லிக் கொண்டான் நிக்லியுடாவ். உஷ்ணம் தணிந்ததால் ஒருவித புத்துணர்ச்சி ஏற்பட்டது. அதோடு, நீண்டகாலமாக அவனை வாட்டிக்கொண்டிருந்த ஒரு பிரச்னைக்கு நிச்சயமான பதில் கிடைத்துவிட்டது.

## 41

நிக்லியுடாவ் ஏறியிருந்த பெட்டியில் பாதி இடங்களில் தான் பிரயாணிகள் இருந்தனர். தொழிலாளர்கள், கூலிக்காரர்கள் வியாபாரிகள், ஒரு இளம் பெண், ஒரு கிழவி, ஒரு சோல்ஜர், இவ்வாறு பலதரப்பட்டவர்கள் இருந்தனர். அனைவரும் அமைதியாக உட்கார்ந்திருந்தனர். சிலர் சூரியகாந்தி விதையை உரித்துத் தின்று கொண்டிருந்தனர். சிலர் புகை குடித்துக் கொண்டிருந்தனர் சிலர் பேசிக் கொண்டிருந்தனர்.

டாரஸ் சந்தோஷமாகக் காணப்பட்டான். ஒரு தோட்டக்காரனுடன் அவன் உற்சாகமாகப் பேசிக் கொண்டிருந்தான்.

நிக்லியுடாவுக்குப் பக்கத்தில் நரைத்த தாடியுடன் கூடிய கிழவன் ஒருவன் உட்கார்ந்திருந்தான். குடியான உடை அணிந்த ஒரு பெண்ணோடு அவன் பேசிக்கொண்டிருந்தான். அவள் பக்கத்தில் ஏழு வயதுப் பெண் ஒருத்தி சூரியகாந்தி விதையை உரித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

குடியானப் பெண் பட்டணத்திற்கு வந்து தன் கணவனைப் பார்த்து விட்டுப் போகிறாள். தன் கணவன் தன்னை எப்படி வரவேற்றான் என்பதை அவள் கிழவனிடம் விவரித்துக்கொண்டிருந்தாள். "உற்சவத்தின்போது போயிருந்தேன். மறுபடியும் இப்பொழுது போனேன். கடவுள் சித்தமிருந்தால் மறுபடியும் கிறிஸ்துமஸின்போது போவேன்'' என்றாள் அவள்.

கிழவன் நிக்லியுடாவைப் பார்த்துக் கொண்டே, "அப்படி அடிக்கடி போய்ப் பார்த்துவிட்டு வருவதுதான் நல்லது. இல்லையானல் பட்டணத்தில் இளைஞர்கள் கெட்டுப்போவார்கள்" என்ருன்.

"ஓ! என் புருஷன் அப்படிப்பட்டவரல்ல. அவருக்கு அப்படிப்பட்ட கெட்ட பெயரே கிடையாது. சம்பாதிப்பதையெல்லாம் வீட்டுக்கு அனுப்பிவிடுவார்.

"அவ்வளவு நல்லவனுக இருப்பது விசேஷம்தான். அப்படிப்பட்ட கெட்ட பெயர்கள் ஒன்றும் அவனுக்குக் கிடையாதா?" என்று கேட்டான் கிழவன். வண்டியின் மற்ரெரு கோடியில் இருந்த தம்பதிகளின்மீது விழுந்தது அவனுடைய பார்வை. அவர்கள் மில் தொழிலாளர்களென்று தோன்றியது. புருஷன் ஒரு புட்டியை எடுத்து சாராயத்தைக் குடித்துக் கொண்டிருந்தான். மனைவி அவனையே கண் கொட்டாமல் பார்த்திருந்தாள் சாராய புட்டி இருந்த பை அவள் கையில் இருந்தது.

"என் புருஷன் குடிப்பதும் இல்லை, சுருட்டுப் பிடிப்பதும் இல்லை" என்று குடியானப் பெண் கிழவனிடம் கூறிஞள். தன் கணவனின் பெருமையைப் பற்றிப் பேசுவதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது பற்றி அவள் சந்தோஷப்பட்டாள்.

"அவரைப் போன்றவர்கள் உலகத்தில் அபூர்வம்." என்று சொல்லிவிட்டு, நிக்லியுடாவின் பக்கம் திரும்பி, "அப்படிப்பட்டவர் அவர்" என்ருள் அந்தப் பெண்.

"வேறு என்ன வேணும்?" என்ருன் கிழவன். குடித்துக் கொண்டிருந்தவன் புட்டியைத் தன் மனைவியிடம் கொடுத்தான் அவள் சிரித்துக் கொண்டே அதை வாங்கிக் குடித்தாள். கிழவனும் நிக்லியுடாவும் தங்களைப் பார்ப்பதை அவன் கவனித்தான். "என்ன ஐயா பார்க்கிறீர்கள்? நாங்கள் எப்படி உழைக்கிருேம் என்பதை ஒருவரும் பார்ப்பதில்லை; குடிப்பதை மாத்திரம் கவனிக்கிருர்கள். நான் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த பணம்; நானும் குடிக்கிறேன் மனைவிக்கும் கொடுக்கிறேன்" என்ருன் அவன்.

"சரி, சரி" என்ருன் நிக்லியுடாவ் அவனுக்கு வேறு ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை.

மில் தொழிலாளியும் அவன் மனைவியும் சிறிதுநேரம் குஷியாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். பிறகு அவன் தன் மனைவியின் மடியில் தலையைவைத்துப்படுத்துத்தூங்கிவிட்டான். நிக்லியுடாவின் அருகே இருந்த கிழவன் தன் கதையையெல்லாம் சொன்னுன். அதைக் கேட்ட பின் நிக்லியுடாவ் எழுந்து டாரஸ் அருகே வந்தான். "வாருங்கள்; இந்த மூட்டையை அப்படி

ளுடைய மூட்டைகள் இங்கும் அங்கும் இடித்துத் தடுத்தன. அதற்குள் ஒரு கார்டு வந்து, "எங்கே போகிறீர்கள்? பிசாசுகளே, உட்காருங்கள்" என்று அதட்டினார். "இது ஒரு புதிய உலகம்" என்று, அங்கு உட்கார்ந்திருந்த ஒரு ஸ்திரீ சொல்லி சிரித்தாள்.

அவர்கள் பெரிய அபாயத்திலிருந்து விடுப்பட்டது போன்ற சந்தோஷத்துடன் மூட்டைகளை இறக்கி பெஞ்சுகளுக் கடியில் தள்ளினார்கள்.

டாரஸோடு பேசுவதற்காக இவ்வளவு நேரம் அவன் அருகே உட்கார்ந்திருந்த தோட்டக்காரன் தன்னுடைய பழைய இடத்திற்குப் போய்விட்டான். ஆகையால் டாரஸுக்கு எதிரே இரண்டு இடங்கள் காலியாக இருந்தன. அவன் பக்கத்திலும் ஒருவர் உட்காரக்கூடிய இடம் இருந்தது. அந்த மூன்று இடங்களில் மூன்று தொழிலாளர்கள் உட்கார்ந்தனர். நிக்லியுடாவ் வந்தவுடன் அவனுக்கு இடம் விடுவதற்காக அவர்கள் எழுந்தனர். ஆனல் நிக்லியுட்ரவ் அவர்களை அப்படியே இருக்கச் சொல்லிவிட்டு ஒரு பெஞ்சியின் கைமீது உட்கார்ந்துகொண்டான்.

நிக்லியுடாவின் இந்தச் செய்கையைக் கண்டு சுமார் ஐம்பது வயதான ஒருவன் ஆச்சரியத்துடனும் பயத்துடனும் மற்ரெரு இளைஞனைப் பார்த்தான். பெரிய மனிதர்களிடம் இவர்கள் திட்டுக் கேட்டுத்தான் வழக்கம். நிக்லியுடாவ் இப்படி நடந்துகொண்டது அவர்களுக்குக் கலவரமூட்டியது. பிறகு இதனல் ஏதாவது கெடுதல் ஏற்படுமோ என்று கூட பயந்தார்கள்.

ஆனல் டாரஸுடன் நிக்லியுடாவ் சகஜமாகப் பேசுவதைக் கண்ட பிறகுதான் அவர்களுக்கு நம்பிக்கை ஏற்பட்டது. ஒரு இளைஞனை இறங்கி மூட்டைமீது உட்காரச் சொல்லிவிட்டு அந்த இடத்தில் உட்காரும்படி நிக்லியுடாவை வற்புறுத்தினர்கள். நிக்லியுடாவின் எதிரே உட்கார்ந்திருந்த கிழவன். அவன் மீது பட்டுவிடக் கூடாது என்பதற்காக சுருட்டி மடக்கிக் கொண்டு ஒடுங்கி உட்கார்ந்தான். ஆனல் நிக்லியுடாவுடனும் டாரஸுடனும் தாராளமாகப் பேசத்தொடங்கிய பின் அவனுடைய கூச்சம் மறைந்து விட்டது. தான் சொல்வதை நிக்லியுடாவ் கேட்க வேண்டும் என்பதற்காக அவனைத் தொட்டுக்கூடப் பேசத் தொடங்கி விட்டான். தன்னுடைய கஷ்ட சுகங்களையெல்லாம் அவன் மனம் விட்டுச் சொன்னன். "ஆனல் நான் பாபி. களைத்திருந்த சமயங்களில் மதுபானம் செய்திருக்கிறேன்" என்று கூறிவிட்டுக் குற்றவாளி போல் சிரித்தான். ஒரு பிரயாணி வழியில் இறந்துவிட்டதாகவும், மற்ருெருவன் அசௌக்கிய முற்றிருப்பதாகவும் கூறினன். அவன் சொன்ன பிரயாணி வண்டியின் ஒரு மூலை

யில் உட்கார்ந்திருந்தான். நிக்லியுடாவ் அவனைப் போய்ப் பார்த்து விட்டு, அவனுக்குக் கொய்னு வாங்கிக் கொடுக்கும்படி சொன்னான். கிழவனுக்கு இது தெரியாததால் ஒரு துண்டுக் காகிதத்தில் "கொய்னு" என்று எழுதிக் கொடுத்தான். அதற்கு வேண்டிய பணத்தையும் கொடுப்பதாக நிக்லியுடாவ் கூறினான். ஆனால் கிழவன் வாங்கிக் கொள்ள மறுத்து விட்டான்.

"நான் எவ்வளவோ இடங்களைச் சுற்றிப் பார்த்திருக்கிறேன். ஆனால் இவரைப் போன்ற ஒரு பெரிய மனிதரைப் பார்த்ததில்லை. பெரிய மனிதர்களில் நல்லவர்கள்கூட இருக்கிறார்கள்" என்று டாரஸிடம் கூறினான் கிழவன்.

தன்னைச் சுற்றி உட்கார்ந்திருந்தவர்களின் ஓய்ந்துபோன தேகத்தையும், முரட்டு உடையையும் நிக்லியுடாவ் கண்டான். பாட்டாளி வாழ்க்கையின் இன்ப துன்பங்கள் தன்னைச் சூழ்ந்து நிற்பது போல் அவனுக்குத் தோன்றியது. "ஆமாம் இது முற்றிலும் வேறான ஒரு புதிய உலகம் தான்" என்று நிக்லியுடாவ் தனக்குள் கூறிக்கொண்டான். ஒரு புதிய உலகத்தைக் கண்டு பிடிக்கும் தேச சஞ்சாரிக்கு ஏற்படும் சந்தோஷம் அவனுக்கும் ஏற்பட்டது.

அப்படிச் செய்வதில் பேரானந்தம் கிடைக்கும் என்பது நிச்சயம்' என்றான்.

நிக்லியுடாவ எப்பொழுது நிறுத்தப் போகிறான் என்று காத்திருந்து, உடனே தான் ஆரம்பித்த கதையைச் சொல்லத் தொடங்கினார் அதிகாரி.

"இது எனக்குப் பிடிக்கவில்லை. ஒரு காலத்தில் நான் முற்றிலும் வேறு மாதிரியாக இருந்தேன் என்பதை ஒப்புக் கொள்கிறேன் ஆனால் இப்பொழுது பெண்களுடன் எனக்கு அத்தகைய தொடர்பே பிடிப்பதில்லை." என்று நிக்லியுடாவ் சொல்லி விட்டான்.

அந்த அதிகாரி நிக்லியுடாவைப் பார்த்த பார்வையில் பயம் கலந்திருந்தது. "இன்னும கொஞ்சம் டீ குடிக்கிறீர்களா?" என்று நிக்லியுடாவைக் கேட்டார்.

"வேண்டாம் : வந்தனம்."

"பெர்னேவ் இவரை வளகுலோவிடம் அழைத்துக் கொண்டுபோ. அரசியல் கைதிகளின் தனி அறைக்கு இவரை அழைத்துக் கொண்டு போகச் சொல்" என்றார் அதிகாரி.

## 9

**தா**ழ் வாரத்தின் வழியாக வேலைக்காரனுடன் நிக்லியுடாவ் சென்றான். விளக்குகள் மங்கலான ஒளியை வீசிக்கொண்டிருந்தன. கைதிகளின் பேச்சுக் கூச்சலும், சிரிப்பும் கலந்து வந்து கொண்டிருந்தன. இந்த சப்தங்களும் சிறையின் நாற்றமும் சேர்ந்துவழக்கம்போல் நிக்லியுடாவுக்குதலைசுற்றச்செய்தன. நிக்லியுடாவ் உள்ளே சென்றவுடன் நாற்ற மடிக்கும் ஒரு பெரிய தொட்டி அவன் கண்ணில் பட்டது. அதன் மீது ஒரு பெண் உட்கார்ந்திருந்தாள். அவள் எதிரே மொட்டைத் தலையோடு ஒருவன் நின்று கொண்டிருந்தான். அவன் நிக்லியுடாவைக் கண்டவுடன் கண்ணைச் சிமிட்டி விட்டு, "ராஜாவே வந்தால்கூட ஒன்றும் செய்ய முடியாது" என்றான். அவள் சட்டென்று வெட்கத்துடன் தன் கௌனை இழுத்து விட்டுக் கொண்டாள்.

இந்த முகாமில் சாதாரணமாக நூறு கைதிகள்தான் இருக்கலாம். ஆனால் இப்பொழுது நாநூறு கைதிகள் வந்திருந்தனர். ஆகையால் எல்லாரும் அறைகளுக்குள்ளேயே தங்க முடியவில்லை. தாழ்வாரங்களிலும் வழிகளிலும் அடைபட்டுக் கிடந்தனர். டாரஸ் தேநீர் தயாரிப்பதற்காக வென்னீர் கொண்டுவந்து கொண்டிருந்தான். நிக்லியுடாவை அவன் அன்புடன் வரவேற்

ருன். அவன் மூக்கிலும் கண்ணுக்கடியிலும் சிராய்ப்புக் காயம் ஏற்பட்டிருந்தது.

"என்ன நடந்தது?" என்று நிக்லியுடாவ் கேட்டான்.

"ஏதோ நடந்தது" என்று சொல்லிவிட்டு டாரஸ் சிரித்தான்.

"எப்பொழுது பார்த்தாலும் இவர்களுக்குள் சண்டை தான்" என்று காவல்கார சோல்ஜர் கூறினுன்.

டாரஸோடு வந்த ஒரு கைதி குறுக்கிட்டு, "எல்லாம் பெண்களுக்காகத்தான் குருட்டு பெட்காவோடு இவன் சண்டை போட்டான்" என்ருன்.

"தியோடோஸியா எப்படி இருக்கிருள்?"

"செளக்கியமாகத்தான் இருக்கிருள். அவளுக்கு தேநீர் தயாரிப்பதற்காகத்தான் வெந்நீர் கொண்டுபோகிறேன்" என்று சொல்லிவிட்டு டாரஸ் ஓர் அறைக்குள் பிரவேசித்தான். அந்த அறைக்குள் நிக்லியுடாவ் எட்டிப் பார்த்தான். ஆண்களும் பெண்களும் அதில் அடைப்பட்டுக் கிடந்தனர்.

சிறையில் கைதிகளின் கேவலமான நிலைமையை அவன் பல முறை பார்த்திருக்கிருன். அவர்களுடைய நிலைமையில் யாரும் வேறுவிதமாக இருக்க முடியாதென்பது அவனுக்குத் தெரியும் இருந்தாலும் அவனுக்கு சகிக்கமுடியாத ஓர் உணர்ச்சி ஏற்பட்டது. தான் ஏதோ குற்றம் செய்துவிட்டது போல் அவனுக்குத் தோன்றியது. இந்த உணர்ச்சியை அவனுல் அடக்க முடியவில்லை.

அவன் முன்னுல் சென்றவுடன், பின்னுலிருந்த கைதிகள் ஏதோ ஆபாசமாகப் பேசிக் கொல்லென்று சிரித்தனர்.

# 10

அரசியல் கைதிகள் இருந்த அறைக்கு அருகே சென்றவுடன் நிக்லியுடாவை விட்டுவிட்டு காவல்காரன் போய்விட்டான் சிறிது நேரத்தில் திரும்பி வருவதாகச் சொல்லிவிட்டுப் போனுன். உடனே விலங்கோடு கூடிய ஒரு கைதி நிக்லியுடாவ் அருகே வந்து, ரகசியமாகப் பேசத் தொடங்கினுன். "இந்த விஷயத்தைக் கவனியுங்கள். அவர்கள் அந்த இளைஞனை முட்டாளாக அடித்துவிட்டார்கள். அவனுக்கு போதை ஏற்றிவிட்டார்கள். இன்று அதிகாரிகள் பார்வையிட வந்தபொழுது அவன் தன் பெயரைக்கூட கார்மனேவ் என்று மாற்றிச் சொல்லிவிட்

அப்படிச் செய்வதில் பேரானந்தம் கிடைக்கும் என்பது நிச்சயம்' என்றான்.

நெக்லியுடாவ் எப்பொழுது நிறுத்தப் போகிறான் என்று காத்திருந்து, உடனே தான் ஆரம்பித்த கதையைச் சொல்லத் தொடங்கினார் அதிகாரி.

"இது எனக்குப் பிடிக்கவில்லை. ஒரு காலத்தில் நான் முற்றிலும் வேறு மாதிரியாக இருந்தேன் என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஆனால் இப்பொழுது பெண்களுடன் எனக்கு அத்தகைய தொடர்பே பிடிப்பதில்லை." என்று நெக்லியுடாவ் சொல்லி விட்டான்.

அந்த அதிகாரி நெக்லியுடாவைப் பார்த்த பார்வையில் பயம் கலந்திருந்தது. "இன்னும் கொஞ்சம் டீ குடிக்கிறீர்களா?" என்று நெக்லியுடாவைக் கேட்டார்.

"வேண்டாம்; வந்தனம்."

"பெர்னோவ் இவரை வகுலோவிடம் அழைத்துக் கொண்டுபோ. அரசியல் கைதிகளின் தனி அறைக்கு இவரை அழைத்துக் கொண்டு போகச் சொல்" என்றார் அதிகாரி.

## 9

தாழ்வாரத்தின் வழியாக வேலைக்காரனுடன் நெக்லியுடாவ் சென்றான். விளக்குகள் மங்கலான ஒளியை வீசிக்கொண்டிருந்தன. கைதிகளின் பேச்சுக் கூச்சலும், சிரிப்பும் கலந்து வந்து கொண்டிருந்தன. இந்த சப்தங்களும் சிறையின் நாற்றமும் சேர்ந்து வழக்கம்போல் நெக்லியுடாவுக்கு தலைசுற்றச்செய்தன. நெக்லியுடாவ் உள்ளே சென்றவுடன் நாற்றமடிக்கும் ஒரு பெரிய தொட்டி அவன் கண்ணில் பட்டது. அதன் மீது ஒரு பெண் உட்கார்ந்திருந்தாள். அவள் எதிரே மொட்டைத் தலையோடு ஒருவன் நின்று கொண்டிருந்தான். அவன் நெக்லியுடாவைக் கண்டவுடன் கண்ணைச் சிமிட்டி விட்டு, "ஜாரே வந்தால்கூட ஒன்றும் செய்ய முடியாது" என்றான். அவள் சட்டென்று வெட்கத்துடன் தன் கௌனை இழுத்து விட்டுக் கொண்டாள்.

இந்த பகுதியில் சாதாரணமாக நூறு கைதிகள்தான் இருக்கலாம். ஆனால் இப்பொழுது நானூறு கைதிகள் வந்திருந்தனர். ஆகையால் எல்லோரும் [illegible] அறைகளுக்குள்ளேயே தங்க முடியவில்லை. நடைபாதைகளிலும் வழிகளிலும் அடைபட்டுக் கிடந்தனர். [illegible] அதிகாரி [illegible] கொண்டுவந்து கொண்டிருந்தான். நெக்லியுடாவை அவன் [illegible]

ருன். அவன் மூக்கிலும் கண்ணுக்கடியிலும் சிராய்ப்புக் காயம் ஏற்பட்டிருந்தது.

"என்ன நடந்தது?" என்று நிக்லியுடாவ் கேட்டான்.

"ஏதோ நடந்தது" என்று சொல்லிவிட்டு டாரஸ் சிரித்தான்.

"எப்பொழுது பார்த்தாலும் இவர்களுக்குள் சண்டை தான்" என்று காவல்கார சோல்ஜர் கூறினுன்.

டாரஸோடு வந்த ஒரு கைதி குறுக்கிட்டு, "எல்லாம் பெண்களுக்காகத்தான் குருட்டு பெட்காவோடு இவன் சண்டை போட்டான்" என்ருன்.

"தியோடோஸியா எப்படி இருக்கிருள்?"

"சௌக்கியமாகத்தான் இருக்கிருள். அவளுக்கு தேநீர் தயாரிப்பதற்காகத்தான் வெந்நீர் கொண்டுபோகிறேன்" என்று சொல்லிவிட்டு டாரஸ் ஓர் அறைக்குள் பிரவேசித்தான். அந்த அறைக்குள் நிக்லியுடாவ் எட்டிப் பார்த்தான். ஆண்களும் பெண்களும் அதில் அடைப்பட்டுக் கிடந்தனர்.

சிறையில் கைதிகளின் கேவலமான நிலைமையை அவன் பல முறை பார்த்திருக்கிருன். அவர்களுடைய நிலைமையில் யாரும் வேறுவிதமாக இருக்க முடியாதென்பது அவனுக்குத் தெரியும் இருந்தாலும் அவனுக்கு சகிக்கமுடியாத ஓர் உணர்ச்சி ஏற்பட்டது. தான் ஏதோ குற்றம் செய்துவிட்டது போல் அவனுக்குத் தோன்றியது. இந்த உணர்ச்சியை அவனுல் அடக்க முடியவில்லை.

அவன் முன்னுல் சென்றவுடன, பின்னுலிருந்த கைதிகள் ஏதோ ஆபாசமாகப் பேசிக் கொள்ளென்று சிரித்தனர்.

# 10

அரசியல் கைதிகள் இருந்த அறைக்கு அருகே சென்றவுடன் நிக்லியுடாவை விட்டுவிட்டு காவல்காரன் போய்விட்டான். சிறிது நேரத்தில் திரும்பி வருவதாகச் சொல்லிவிட்டுப் போனான். உடனே விலங்கிடப்படாத ஒரு கைதி நிக்லியுடாவை அருகே வந்து, ரகசியமாகப் பேசத் தொடங்கினான். "இந்த விஷயத்தைக் கவனியுங்கள். அவர்கள் அந்த இளைஞனை முட்டாளாக அடித்துவிட்டார்கள். அவனுக்குப் போதை ஏற்றிவிட்டார்கள். இன்று அதிகாரிகள் பார்வையிட வந்தபொழுது அவனை தான் போதைக்குக் காரணமானவன் என்று புகார் சொல்லிவிட்

நோவோட்வோரோவின் குரல் ஒன்றுதான் அந்த அறையில் கேட்டது. ஒரு கண நேரம் நிசப்தம் ஏற்பட்டபொழுது "இவர்கள் எப்பொழுதும் இப்படித்தான் தர்க்கம் செய்கிறார்கள்" என்றாள் மேரிபாவ்லோவ்னு.

"நீ என்ன நினைக்கிறாய்?" என்று நிக்லியுடாவ் கேட்டான்.

"கிரில்ட்ஸோவ் சொல்வதுதான் சரி யென்று தோன்று கிறது. நம்முடைய அபிப்பிராயத்தை ஜனங்கள் மீது திணிக்கக் கூடாது" என்றாள்.

"நீ என்ன நினைக்கிறாய் காடூஷா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டு விட்டு அவளுடைய பதிலை ஆவலுடன் எதிர் பார்த்தான். அபத்தமாக ஏதாவது சொல்லி விடுவாளோ என்று அவன் பயந்தான்.

"சாதாரண ஜனங்களுக்கு அநியாயம் செய்யப் படுவதாக எனக்குத் தோன்றுகிறது. பெரிய அநியாயம்" என்றாள் காடூஷா. அவள் முகம் சிவந்து விட்டது.

"அதான் சரி காடூஷா. ரொம்ப சரி" என்று கத்தினான் நபடோவ். "ஜனங்கள் மிகவும் ஆக்கிரமாக நடத்தப்படு கிறார்கள். அப்படி செய்யக் கூடாது. அதுதான் நம்முடைய வேலை" என்றான்.

"புரட்சியின் நோக்கத்தைப்பற்றி விசித்திரமான அபிப் பிராயம்?" என்று முணு முணுத்துக் கொண்டே நோவோட்வோ ரோவ் ஒரு பக்கமாக உட்கார்ந்து புகை குடிக்கத் தொடங்கினான்.

"அவரோடு என்றால் பேச முடியாது" என்று கிரில்ட்ஸோவ் ரகசியமாகச் சொன்னான்.

"அதுதான் நல்லது" என்று நிக்லியுடாவ் பதில் அளித் தான்.

# 15

எல்லாப் புரட்சிக்காரர்களும் நோவோட்வோரோவைப் பற்றிப் பிரமாதமான அபிப்பிராயம் கொண்டிருந்தனர். அவன் அதிகம் படித்தவனென்றும், பெரிய மேதாவி என்றும் கருதி னார்கள். ஆனால் அவனை சர்வ சாதாரணமாகத்தான் நிக்லியுடாவ் மதித்தான்.

இவன் ஸைமன்ஸனுக்கு நேர் விரோதமான ரகத்தைச் சேர்ந்தவன். ஸைமன்ஸன் ஆண்மையுள்ளவன். தங்கள் சிந்தனை யின் முடிவுப்படி காரியம் செய்பவர்களின் கோஷ்டியைச் சேர்ந்தவன். தங்களுடைய சிந்தனையின் முடிவுதான் இவர்

களுடைய செய்கையை நிர்ணயிக்கும். ஆனால் நோவோட்வொ ரோவ் பெண்மை குணத்தைச் சேர்ந்தவன். இந்த கோஷ்டியினர் உணர்ச்சியினால் நிர்ணயிக்கப்படும் லக்ஷியங்களை அடைய முயற்சிப் பவர்கள். உணர்ச்சியின் தூண்டுதலால் செய்யும் காரியங்களை நியாயமென்று நிரூபிப்பார்கள்.

நோவோட்வொரோவின் புரட்சி மனப்பான்மைக்கு ஆதிக்க ஆசைதான் காரணமென்று நிக்லியுடாவுக்குத் தோன்றியது. பள்ளிக்கூடத்திலும் கலாசாலையிலும் மற்றவர்களைக் காட்டிலும் சிறந்து விளங்கினான். அதனால் அங்கு அவனுக்குத் திருப்தி ஏற்பட்டது. ஆனால் படிப்பு முடிந்தது. பிறகு வேறு வழியில் மற்றவர்களைக் காட்டிலும் தான் சிறந்தவனாக இருக்க வேண்டு மென்று விரும்பினான். ஆகையால் தீவிர வாதத்திலிருந்து புரட்சி வாதியாகி விட்டான்.

சந்தேகப்படுவதற்கும் தாமதிப்பதற்கும் அவசியமான நுட்ப மான உணர்ச்சிகள் அவனுக்கு இல்லை. அவனுடைய குறுகிய ஒருதலைப் பட்சமான மனப்பான்மையினால் எல்லாம் சுலபமாகவே தோன்றின. தவறு நேருமோ என்ற சந்தேகம் அவனுக்கு ஏற்பட்டதேயில்லை. அவனுடைய அகங்காரத்தை அறிவென்று பலர் தவறாக நினைத்தனர். பெரும்பாலானவர்கள் அதற்குப் பணிந்தனர். ஆகையால் புரட்சிக்காரர்களின் வட்டாரத்தில் அவனுக்கும் பெரும் வெற்றி கிடைத்தது.

அவனுடைய தோழர்கள் அவனிடம் மரியாதை செலுத்தி னார்களே தவிர அவனை நேசிக்கவில்லை. அவனுக்கும் ஒருவர் மீதும் அன்பு இல்லை. பிரபலஸ்தர்கள் தனக்குப் போட்டியாக வந்திருப்பதாகவே அவனுக்குத் தோன்றியது. மற்றவர்கள் தன் திறமை வெளியாவதற்கு இடையூறாக இல்லாமலிருக்கும் பொருட்டு அவர்களுடைய மனோசக்தியைச் சிதற அடித்துவிட அவன் விரும்பினான். தன்முன் பணிந்தவர்களிடந்தான் அவன் சரிவர நடந்து கொண்டான். பெண்கள் இயக்கத்தை அவன் கொள்கையளவில் தான் ஆதரித்தான். ஆனால் எல்லாப் பெண் களும் மூடங்கள் என்று அவன் உள்ளூர நினைத்தான். அவன் காதலித்த பெண்கள் மாத்திரம் விதிவிலக்கு என்று கருதினான்.

சுயேச்சையாகச் சேர்வதன் மூலம் ஆண் பெண் உறவுப் பிரச்னையும் தீர்த்து விட்டதாக அவன் நினைத்தான். அவனுக்குப் பெயரளவில் ஒரு மனைவியும், உண்மையில் ஒரு மனைவியும் உண்டு. தங்களுக்கிடையில் உண்மைக் காதல் இல்லை என்ற முடிவுக்கு அவன் வந்தவுடன் அவர்களை விட்டுப் பிரிந்து விட்டான். இப் பொழுது கிராபெட்ஸ்டன் சுயேச்சையான தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள வேண்டுமென்று விரும்பினான். நிக்லியுடாவ் மடையன் என்பது அவனுடைய அபிப்பிராயம். நிக்லியுடாவுக்கும் அவன் மீது ஏற்பட்ட வெறுப்பைப் போக்கிக்கொள்ள முடியவில்லை.

போய்க்கொண்டிருந்த கைதிகளின் கூட்டத்தைக் கடந்து போய்க் கொண்டிருந்தான். காடுஷாவின் நீலச் சால்வையையும், வேராடுக் கோவாவின் கருப்புக் கோட்டையும், ஸைமன்ஸனிடம் பின்னல் குல்லாயையும் நிக்லியுடாவ் பார்த்தான். ஸைமன்ஸன் பெண் களோடு ஏதோ காரசாரமாக விவாதித்துக் கொண்டே நடந்தான்.

அவர்கள் நிக்லியுடாவைக் கண்டபொழுது அவனுக்கு வணங்கி மரியாதை செலுத்தினர். அவர்களிடம் சொல்வதற்கு சமாசாரம் ஒன்றும் இல்லாததால் நிக்லியுடாவ் வண்டியை நிறுத்த வில்லை. சீக்கிரம் வண்டி அவர்களை கடந்து போய்விட்டது. ரோடு முன்னைக் காட்டிலும் சமமாக இருந்ததால் வண்டி வேகமாகச் சென்றது.

சிறிது தூரம் காட்டின் வழியாகவும், சிறிது தூரம் வயல் வெளிகளின் வழியாகவும் ரஸ்தா சென்றது. வானம் வெளிவாங்கி சூரியன் பிரகாசிக்கத் தொடங்கிவிட்டது. ஒரு சர்ச்சின் கோபுரமும், தூரத்து வெண் மலைகளும் வெய்யிலில் பிரகாசித்தன. நிக்லியுடா வின் வண்டி ஒரு கிராமத்தை அடைந்தது. தெருக்களில் ஜனங்கள் நின்றிருந்தனர். சமீபத்தில் நகரம் இருக்கிறது என் பதற்கான அறிகுறிகள் அங்கு காணப்பட்டன.

வண்டிக்காரன் குதிரையை ஒரு அடி கொடுத்துத் தட்டி விட் டான். ஓர் ஆறு குறுக்கிட்டது. ஓடத்தின் மீது வண்டியை ஏற்றி அக்கரை சேரவேண்டியிருந்தது. ஆற்றைக் கடப்பதற்காகப் பல வண்டிகள் அங்கு இருந்தன. ஆனால் நிக்லியுடாவ் அங்கு அதிக நேரம் காக்க வேண்டியில்லை. ஓடம் வந்தது. நிக்லியுடா வின் வண்டியும் மற்றும் சில வண்டிகளும் அதில் ஏறிக்கொண்டன. ஓடக்காரன் ஓடத்தின் கதவை அடைத்து விட்டு ஓடத்தை விட் டான். ஓடத்தில் இடம் பெறுதவர்களின் கோரிக்கைகளை அவன் கவனிக்கவில்லை.

ஓடத்தில் ஓடக்காரனின் பூட்ஸ் சப்தத்தையும், குதிரைகளின் குளம்புச் சப்தத்தையும் தவிர வேறு ஒரு சப்தமும் இல்லை.

# 21

நிக்லியுடாவ் ஓடத்தின் ஒரு ஓரத்தில் நின்று பரந்த ஆற்றைப் பார்த்துக் கொண்டிருந்தான். இரண்டு சித்திரங்கள் தான் அவன் மனத்தின்முன் தோன்றின. ஒன்றில் கிரில்ட்ஸோவ் கோபத்துடன் செத்துக் கொண்டிருந்தான். மற்றொன்றில் காடுஷா ஸைமன்ஸன் பக்கத்தில் வேகமாக நடந்து போய்க் கொண்டிருந்தாள். கிரில்ட்ஸோவ் எதிர்பாராமல் சாகிறான் என்ற எண்ணம் வருத்தத்தை உண்டாக்கியது. காடுஷா, ஸைமன்ஸனைப் போன்ற ஒருவனுடைய காதலைப் பெற்று ஈடேற வழி தேடிக்கொண்டதைப்பற்றி அவனுக்குச் சந்தோஷம் ஏற்பட்டிருக்க வேண்டும். ஆனால் இதைப் பற்றியும் அடக்க முடியாத ஒரு வருத்தம் ஏற்பட்டது.

நகரில் அடிக்கும் ஒரு பெரிய வெண்கல மணியின் நடுங்கும் நாதம் அவர்கள் இருந்த இடத்தை எட்டியது. நிக்லியுடாவின் பக்கத்தில் இருந்த வண்டிக்காரகவும் படகில் இருந்த மற்றவர்களும் சிலுவையைக் குறிப்பிட்டு வணங்கினர். ஆனால் ஒரு குள்ளக் கிழவன் மாத்திரம் இதைச் செய்யவில்லை. நிக்லியுடாவ் அவனை முதலில் கவனிக்கவில்லை. அவன் ஒட்டுப்போட்ட சட்டையும் அறுத்துத் தைத்த பூட்ஸும் அணிந்திருந்தான். அவன் முதுகில் ஒரு பையைச் சுமந்து கொண்டிருந்தான்.

"நீ ஏன் பிரார்த்தனை செய்யவில்லை கிழவா? நீ ஞானஸ்நானம் பெறவில்லையா?" என்று கேட்டான் நிக்லியுடாவின் வண்டிக்காரன்.

"யாரைப் பிரார்த்திப்பது?" என்று கிழவன் அழுத்தந்திருத்தமாகக் கேட்டான்.

"யாரையா? கடவுளைத்தான்."

"அந்தக் கடவுள் எங்கே இருக்கிறார் என்பதைக் கொஞ்சம் காட்டு பார்ப்போம்" என்றான் கிழவன். அவன் பேச்சில் ஓர் உறுதி தொனித்தது. அதை வண்டிக்காரன் உணர்ந்தான். ஆனால் மற்றவர்களின் முன்னால் அவமானப் படாமலிருக்கும் பொருட்டு அவன் இதைக் காட்டிக் கொள்ளவில்லை. "எங்கேயா? ஸ்வர்க்கத்தில்தான் இருக்கிறார்" என்றான்.

"நீ அங்கு போயிருக்கிறாயா?" என்று கிழவன் கேட்டான்.

"நான் போயிருந்தாலும் போகாவிட்டாலும் நாம் கடவுளை வணங்க வேண்டுமென்பது எல்லாருக்கும் தெரியும்."

"கடவுளை ஒருவரும் பார்த்ததில்லை."

"உன்னுடையது என்ன மதம் தாத்தா?" என்று ஒருவன் கேட்டான்.

"ஒரு மதமும் இல்லை. நான் ஒன்றையும் நம்புவதில்லை. என்னைத் தவிர வேறு ஒருவர் மீதும் எனக்கு நம்பிக்கையில்லை" என்றான் கிழவன்.

நிக்லியுடாவும் இந்த சம்பாஷணையில் இறங்கி, "உன்னை மாத்திரம் நீ எப்படி நம்பலாம்? நீயும் தவறு செய்யக்கூடும்" என்றான்.

"என் வாழ்நாளில் நான் தவறு செய்ததேயில்லை" என்று தலையை ஆட்டிக்கொண்டே கிழவன் சொன்னான்.

"அப்படியானால் உலகத்தில் இத்தனை மதங்கள் இருப்பானேன்?" என்று நிக்லியுடாவ் கேட்டான்.

"ஜனங்கள் தங்களை நம்புவதில்லை. மற்றவர்களையே நம்புகிறார்கள். அதனால்தான் இவ்வளவு மதங்கள் இருக்கின்றன. நானும் அப்படித்தான் மற்றவர்களையே நம்பி மூழ்கிப் போனேன். மீள முடியும் என்ற நம்பிக்கையே இல்லாமல் போய்விட்டது. எல்லா மதங்களும் தங்களைத்தான் புகழ்ந்து கொள்கின்றன. அதனால்தான் குருட்டு நாய்களைப் போல அவை அலைகின்றன. பல மதங்கள் இருக்கின்றன. ஆனால் ஜீவன் ஒன்றே. எனக்குள்ளும், உனக்குள்ளும், அவனுக்குள்ளும் உள்ள ஆத்மா ஒன்றுதான். ஆகையால் ஒவ்வொருவரும் தங்களையே நம்பினால் எல்லோரும் ஒற்றுமையாகி விடுவார்கள். ஒவ்வொருவரும் தாங்கள் இருக்கவேண்டியபடி இருந்தால் ஒன்றாகி விடுவார்கள்" என்றான்.

கிழவன் உரக்கப் பேசினான். எத்தனை பேர் முடியுமோ அத்தனை பேர் தன் பேச்சைக் கேட்க வேண்டுமென்ற விருப்பத்தோடு அவன் அடிக்கடி தன்னைச் சுற்றிப் பார்த்துக் கொண்டான்.

"வெகு காலமாக உனக்கு இந்தக் கொள்கைதானா?"

"எனக்கா? ஆமாம்; இருபத்து மூன்று வருஷங்களாக என்னை ஹிம்ஸிக்கிறார்கள்."

"ஹிம்ஸிக்கிறார்களா? எப்படி?"

"கிறிஸ்து பெருமானை ஹிம்ஸித்தது போல என்னையும் ஹிம்ஸிக்கிறார்கள். என்னைப் பிடித்து கோர்ட்டிலும் பாதிரிகளின் முன்னிலையிலும் கொண்டு நிறுத்துகிறார்கள். ஒருமுறை என்னைப் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குக் கூட அனுப்பிவிட்

டார்கள். ஆனால் அவர்களால் என்னை ஒன்றும் செய்ய முடியவில்லை. நான் சுதந்திர புருஷன். 'உன் பெயர் என்ன?' என்று கேட்டார்கள். நான் பெயர் வைத்துக்கொள்வேன் என்று நினைத்தார்கள் போலும். ஆனால் நான் எல்லாவற்றையும் விட்டுவிட்டேன். பெயர் இல்லை, இடம் இல்லை, நாடு இல்லை, ஒன்றுமே இல்லை, நான் நான்தான். 'உன் பெயர் என்ன?' என்று கேட்டார்கள். 'மனிதன்' என்று பதில் அளித்தேன். 'உன் வயது என்ன?' என்றார்கள். 'நான் வயதை எண்ணுவதில்லை; எண்ணவும் முடியாது. நான் எப்பொழுதும் இருந்தேன், எப்பொழுதும் இருப்பேன்' என்றேன். 'உன் பெற்றோர் யார்?' என்று கேட்டார்கள். 'கடவுளும் பூமி தேவியும்தான்' என்று பதில் அளித்தேன். 'மன்னன்? மன்னனை நீ ஒப்புக்கொள்கிறாயா?' என்று கேட்டார்கள். 'ஏன் இல்லை? அவன் அவனுக்கு மன்னன். எனக்கு நான் மன்னன்' என்றேன். 'இவரோடு பேசிப் பயன் என்ன?' என்றார்கள். 'என்னோடு பேசச் சொல்லி உங்களை வருந்தி அழைக்கவில்லை'' என்றேன். உடனே என்னை ஹிம்ஸிக்கத் தொடங்கிவிட்டனர்.

"இப்பொழுது நீ எங்கே போய்க் கொண்டிருக்கிறாய்?" என்றான் நிக்லியுடாவ்.

"கடவுள் எனக்கு எங்கே வழி காட்டுகிறாரோ அங்கே. வேலை கிடைக்கும்பொழுது நான் வேலை செய்கிறேன். கிடைக்காதபொழுது பிச்சை எடுக்கிறேன்" என்றான் கிழவன்.

ஓடம் கரையை நெருங்குவதை நிக்லியுடாவ் கவனித்தான். உடனே பேசுவதை நிறுத்திவிட்டு அருகில் இருந்தவர்களை ஒரு வெற்றிப் பார்வை பார்த்தான்.

நிக்லியுடாவ் தன் பணப்பையை எடுத்து கிழவனிடம் கொஞ்சம் பணம் கொடுக்கக் கையை நீட்டினான்.

"இதையெல்லாம் நான் வாங்கிக் கொள்வதில்லை. ரொட்டியாக இருந்தால் வாங்கிக் கொள்வேன்" என்று சொல்லி மறுத்துவிட்டான்.

"அப்படியானால் என்னை மன்னிக்கவும்" என்று நிக்லியுடாவ் கேட்டுக் கொண்டான்.

"மன்னிப்பதற்கு ஒன்றுமில்லை. நீங்கள் என் மனத்தைப் புண்படுத்திவிடவில்லை. என்னைப் புண்படுத்த ஒருவராலும் முடியாது" என்று சொல்லிக் கொண்டே கிழவன் கீழே கழற்றி வைத்திருந்த பையை எடுத்துத் தோளில் மாட்டிக்கொண்டான்.

இதற்குள் நிக்லியுடாவ் வண்டியைக் கீழே இறக்கி குதிரையையும் பூட்டிவிட்டான் வண்டிக்காரன். ஓடக்காரனுக்கு நிக்லியுடாவ்

நேற்று அவள் பேசியதற்கு என்ன அர்த்தம்? ஸைமன்ஸனை அவள் மணப்பது நல்லதா கெட்டதா? இந்தக் கேள்விகளுக்கெல்லாம் பதில் கண்டுபிடிக்க அவனால் முடியவில்லை. இவற்றைப் பற்றிச் சிந்திப்பதையே நிறுத்திவிட்டான். "போகப் போக எல்லாம் தாமாகச் சரிப்பட்டுவிடும். அவற்றைப் பற்றி இப்பொழுது சிந்திக்கக் கூடாது. எவ்வளவு சிக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் இந்த சந்தோஷ சமாசாரத்தை அவளுக்குச் சொல்லி, அவளை விடுதலை செய்வதற்கான வழியைத் தேட வேண்டும்" என்று நினைத்தான். தனக்குக் கிடைத்த உத்திரவின் நகலே போதுமென்று அவன் நினைத்தான். ஆகையால் தபாலாபீசிலிருந்து நேராக சிறைக்கு வண்டியைவிடச் சொன்னான்.

சிறைக்குள் செல்ல கவர்னரிடம் அனுமதி கிடைக்காவிட்டாலும் சின்ன உத்தியோகஸ்தர்களிடம் அதைப் பெறுவது கஷ்டமில்லை. இதை அனுபவத்தில் அவன் அறிந்திருந்தான். இப்பொழுது காடுஷாவைச் சந்தித்து இந்த சந்தோஷ சமாசாரத்தை அவளிடம் சொல்லிவிட வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டிருந்தான். முடிந்தால் அவளை விடுதலை செய்து அழைத்து வந்துவிடவும் விரும்பினான். அப்படியே கிரில்ட்ஸோவையும் மேரி பாவ்லோவ்னாவையும் பார்த்து ஜெனரல் சொன்னவற்றை அறிவிக்க நினைத்தான்.

சிறை இன்ஸ்பெக்டர் ஆஜானுபாகுவாக இருந்தான். நிக்லியுடாவிடம் மிகவும் கண்டிப்பாக நடந்து கொண்டான். மேல் அதிகாரியிடமிருந்து அனுமதி இல்லாமல் நிக்லியுடாவைச் சிறைக்குள் அனுமதிக்க மறுத்துவிட்டான். மன்னர் காரியாலயத்திலிருந்து வந்த உத்திரவின் நகல் கூடப் பயன்படவில்லை. நிக்லியுடாவைக் கண்டு அவன் அலக்ஷியமாகச் சிரித்துவிட்டு, தனக்கு நேர் மேலேயுள்ள அதிகாரியிடமிருந்து உத்திரவு வந்தால்தான் காடுஷாவை விட முடியுமென்று சொல்லிவிட்டான். காடுஷாவின் தண்டனை குறைந்திருக்கிறது என்பதை அவளுக்கு அறிவிப்பதாகவும், உத்திரவு வந்தபின் ஒரு நிமிஷம்கூட அவளைச் சிறையில் நிறுத்தி வைக்கவில்லை என்றும் மாத்திரம் சொன்னான். கிரில்ட்ஸோவைப் பற்றி அவன் எதுவும் சொல்ல மறுத்துவிட்டான். அந்தப் பெயரோடு ஒரு கைதி இருக்கிறானா இல்லையா என்பதைக் கூடச் சொல்லவில்லை. நிக்லியுடாவ் தன் வண்டியில் ஏறிக்கொண்டு ஹோட்டலுக்குத் திரும்பினான்.

சிறையில் டைபஸ் ஜுரம் பரவியிருந்தது. அதனால்தான் இன்ஸ்பெக்டர் அவ்வளவு கண்டிப்பாக நடந்து கொண்டான். சிறையில் கொள்ளக் கூடியவர்களைப் போல் இருமடங்கு கைதிகளை அதில் அடைத்து வந்திருந்ததால் இந்த நோய் பரவிவிட்டது. "நோயினால் ரொம்பப் பேர் செத்துப போகிறார்கள். ஒரு நாளைக்கு இருபது பேருக்கு மேல் கொண்டுபோய் புதைக்கிறார்கள்" என்றான் வண்டிக்காரன்.

# 24

சிறையில் நிக்லியுடாவின் முயற்சி தோற்ற போதிலும் அவன் உற்சாகமாகவே இருந்தான். காடுஷாவை விடுதலை செய்யும் உத்திரவு வந்துவிட்டதா என்று பார்க்க கவர்னர் ஆபீஸுக்குச் சென்றான். உத்திரவு வரவில்லை. உடனே ஹோட்டலுக்குத் திரும்பி அதைப்பற்றி ஸெலெனினுக்கும் வக்கிலுக்கும் எழுதினான். கடிதங்களை எழுதி முடித்துவிட்டு கடியாரத்தைப் பார்த்தான். ஜெனரல் வீட்டில் விருந்துக்குப் போக வேண்டிய நேரமாகி விட்டது.

போகும்பொழுது மறுபடியும் பழைய சிந்தனைகள் அவன் மனத்தில் தோன்றின. "தண்டனை குறைந்த செய்தியை காடுஷா எப்படி வரவேற்பாள்? அவள் எங்கே வசிக்க வேண்டியிருக்கும்? அவளோடு நான் எப்படி வசிக்க வேண்டும்? ஸைமன்ஸன் விஷயம் என்ன? அவளோடு அவன் உறவு எப்படி இருக்கும்?" என்றெல்லாம் யோசித்தான். அவளிடம் ஏற்பட்டிருந்த மாறுதலை நினைத்துப் பார்த்தான். இதிலிருந்து அவளுடைய பழைய வாழ்க்கை அவன் ஞாபகத்திற்கு வந்தது.

"இப்பொழுது இதை மறந்துவிட வேண்டும்" என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டு காடுஷாவைத் தன் மனத்தைவிட்டு அகற்றினான். "நேரம் வரும்போது பார்த்துக் கொள்கிறேன்" என்று தனக்குள் நினைத்துக்கொண்டு ஜெனரலோடு என்ன பேச வேண்டும் என்பது பற்றி ஆலோசித்தான்.

பெரிய பணக்காரர்களின் வீடுகளுக்கே உரிய முறையில் விருந்து ஆடம்பரமாக நடைபெற்றது. நிக்லியுடாவ் சாதாரண வசதிகளை அனுபவித்துக்கூட அதிக காலம் ஆகிவிட்டது. ஆகையால் இந்த விருந்தை அவன் நன்றாக ரஸித்தான்.

ஜெனரலின் மனைவி பெரிய ராங்கிக்காரி. ஆளுக்குத்தக்கபடி நடந்து கொண்டாள். தன் குடும்பத்தை சேர்ந்தவனை வரவேற்பதுபோல நிக்லியுடாவை அவள் வரவேற்றாள். அசாத்தியமாக முகஸ்துதி செய்தாள். இதைக் கேட்டபொழுது நிக்லியுடாவ் மீண்டும் தன் பெருமைகளை உணர்ந்தான். இது அவனுக்குத் திருப்தியை அளித்தது. அவன் சைபீரியாவுக்கு வந்த தன் மஹத்தான நோக்கம் தனக்குத் தெரியுமென்றும், அவன் ஒரு அசாதரண மனிதன் என்றும் அவள் சொன்னாள். இந்த நாசூக்கான முகஸ்துதிக்கும் ஜெனரலின் வீட்டு ஆடம்பரங்களுக்கும் அவன் பலியாகி விடுவான் போலிருந்தது. அவர்கள் பழகிய முறையையும், அங்கு இருந்த சௌகரியங்களையும் பார்த்த

பொழுது. சென்ற மாதங்களில்தான் அனுபவித்தவை கனவு போல இருந்தன. அந்தக் கனவிலிருந்து விழித்துக்கொண்டது போல் அவன் உணர்ந்தான்.

விருந்துக்கு ஜெனரலின் பெண், அவளுடைய கணவன். ஜெனரலின் காரியதரிசி ஆகியவர்களோடு ஓர் ஆங்கிலேயன். தங்கச் சுரங்கத்தில் சம்பந்தமுள்ள ஒரு வியாபாரி, சைபீரிய நகரம் ஒன்றின் கவர்னர் முதலியவர்களும் வந்திருந்தனர். இவர்களெல்லாம் நிக்லியுடாவுக்கு ரஸமாகத் தோன்றினார்கள்.

ஆங்கிலேயனுக்கு பிரெஞ்சு நன்றாகப் பேச வரவில்லை. ஆனால் தன் சொந்த பாஷையில் நல்ல பாண்டித்தியம் இருந்தது. உலக அனுபவம் நிரம்ப உள்ளவன். அமெரிக்கா, இந்தியா, ஜப்பான், சைபீரியா முதலிய நாடுகளைப்பற்றி ரஸமாக விஷயங்களை அவன் சொன்னான்.

இளம் வியாபாரி முற்போக்கான ஐரோப்பியக் கருத்துக்கள் உள்ளவன். அவன் ஒரு புத்தகசாலை வைத்திருந்தான். நிக்லியுடாவுக்கு இவனைப் பெரிதும் பிடித்திருந்தது.

இங்கு வந்திருந்த சைபீரிய நகரின் கவர்னரைப் பற்றித்தான் பீடர்ஸ்பர்க்கில் ஒவ்வொருவரும் பேசிக்கொண்டிருந்தனர். ஒரு முக்கியமான சர்க்கார் இலாகாவின் டைரக்டராக இருந்தவன் தடியாக இருந்தான். இனிமையாகப் புன்முறுவல் புரிந்தான். விரல்களில் மோதிரம் அணிந்திருந்தான். ஜெனரலுக்கு இந்த கவர்னரை மிகவும் பிடித்திருந்தது. லஞ்சம் வாங்குபவர்களுக்கு மத்தியில் இருந்தும் அவன் லஞ்சம் வாங்குவதில்லை. அவன் நல்ல பாடகனாகையால் வீட்டுக்காரி அவனைப் பெரிதும் விரும்பினாள். நிக்லியுடாவ் நல்ல மனோநிலையில் இருந்தான். ஆகையால் அவனைப்பற்றி எல்லாம் அறிந்திருந்தும் அவனை வெறுக்கவில்லை.

ஜெனரலின் குமாஸ்தா எப்பொழுதும் உதவி செய்யத் தயாராக இருந்தான். அவனுடைய நல்ல சுபாவம் நிக்லியுடாவின் மனதைக் கவர்ந்தது. ஆனால் அந்த இளம் தம்பதிகள்—ஜெனரலின் பெண்ணும் அவள் கணவனும்தான் நிக்லியுடாவுக்கு அதிகம் பிடித்திருந்தது. அந்தப் பெண் கள்ளம் கபடமற்றவள். தன் இரு குழந்தைகளின் மீதும்தான் அவளுக்கு சதா கவனம். அவளுடைய கணவன் முற்போக்கான அபிப்பிராயம் உள்ளவன். அவனைக் காதலித்து விவாகம் செய்து கொண்டாள். அவனை மணப்பதற்காக அவள் தந்தையுடன் கடுமையாகப் போராடினாள். அவன் சர்க்கார் உத்தியோகத்தில் இருந்தான் நல்ல அறிவாளி. பூர்வ குடிகளைப் பற்றிய புள்ளி விவரங்களைச் சேகரித்துக் கொண்டிருந்தான். அவர்களிடம் அதிக அன்பு செலுத்தினான். அவர்கள் அழிந்து போகாமல் பாதுகாக்க முயன்றான்.

ஜெனரல் ஆப்த நண்பனைப் போல நிக்லியுடாவை வரவேற்ருன். வோட்கா குடிக்க விருந்தினர் அனைவரையும் வரவேற்ருன். "நேற்று காலை இங்கிருந்துபோன பின் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?" என்று நிக்லியுடாவைக் கேட்டான். தான் தபாலாபீசுக்குப் போனதாகவும், காடுஷாவின் தண்டனையைக் குறைத்திருப்பதாகத் தகவல் கிடைத்திருக்கிற தென்றும் சொன்னன்.

விருந்தில் தன் காரியங்களைப் பற்றி நிக்லியுடாவ் பேசியது ஜெனரலுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. முகத்தைச் சுளித்துக் கொண்டு ஒன்றும் பேசாமல் இருந்துவிட்டான்.

"ஒரு கோப்பை வோட்கா குடிக்கிறீர்களா?" என்று ஆங்கிலேயனைப் பார்த்துக் கேட்டான் நிக்லியுடாவ். ஒரு கிண்ணம் குடித்துவிட்டு கோவிலைப் பார்க்க விரும்புவதாகச் சொன்னன். அங்கு உள்ள பெரிய சிறையையும் பார்க்க விரும்புவதாகச் சொன்னன்.

ஜெனரல் நிக்லியுடாவின் பக்கம் திரும்பி, "இப்பொழுது நல்லதாகப் போய்விட்டது. நீங்கள் இருவரும் சேர்ந்துபோகலாம்" என்று சொல்லிவிட்டு தன் காரியதரிசியை நோக்கி, இவர்களுக்கு ஒரு பாஸ் கொடு என்ருன்.

"நீங்கள் எப்பொழுது சிறைக்குப் போய்ப் பார்க்க விரும்புகிறீர்கள்?" என்று நிக்லியுடாவ் கேட்டான்.

"சாயங்காலத்திலேயே பார்க்கவேண்டுமென்பது என் விருப்பம். அப்பொழுதுதான் உள்ளத்தை உள்ளபடியே பார்க்க முடியும்" என்ருன் ஆங்கிலேயன்.

"ஓ! உள்ள அழகை அப்படியே பார்க்க விரும்புகிருர். பேஷாய்ச் செய்யட்டும். நான் மேல் அதிகாரிகளுக்கு எழுதிப் பார்த்தேன். அவர்கள் கேட்கவில்லை. வெளிநாட்டுப் பத்திரிகைகளில பார்த்தாவது தெரிந்து கொள்ளட்டும்" என்று சிரித்துக் கொண்டே ஜெனரல் சொன்னன்.

வீட்டு எஜமானிக்கும் ஆங்கிலேயேனுக்கும் மத்தியில் நிக்லியுடாவ் உட்கார்ந்தான். அவனுக்கு எதிரே ஜெனரலின் பெண் உட்கார்ந்தாள். அவள் பக்கத்தில் மாஜி டைரக்டர் உட்கார்ந்தான். சாப்பாட்டு வேளைச் சம்பாஷணை ஒரு விஷயத்திலிருந்து மற்ருெரு விஷயத்திற்குத் தாவியது. இவை ஒன்றும் நிக்லியுடாவுக்குப் பிடிக்கவில்லை. ஆனல் விருந்து முடிந்தபின் நிக்லியுடாவ், ஆங்கிலேயன், வீட்டு எஜமானி ஆகியமூவரும் கிளாட்ஸ்டனைப் பற்றி ஒரு ரஸமான விவாதத்தைத் தொடங்கினர்கள். நல்ல சாப்பாடு சாப்பிட்டு, நல்ல சாராயம் குடித்த பின் ஈஸி சேரில் சாய்ந்துகொண்டு காப்பியை ருசிபார்ப்பது நிக்லியுடாவுக்கு ஆனந்தமாக இருந்தது. ஆங்கிலேயனின் வேண்டு

சந்நிதானத்தில் பெரியவன் என்றார்" என்று அதில் எழுதியிருந்தது.

"ஆமாம், உண்மைதான்" என்று அவன் தனக்குத்தானே சொல்லிக் கொண்டான். எளிமையில்தான் சாந்தியும் வாழ்க்கையின் ஆனந்தமும் இருக்கின்றது என்பது அவனுக்கு ஞாபகம் வந்தது.

"இத்தகைய ஒரு குழந்தையை என் பெயரால் வரவேற்பவன் என்னையே வரவேற்கிறான். ஆனால் இத்தகைய குழந்தைக்குத் துன்பம் செய்பவன் கழுத்தில் கல்லைக் கட்டிக்கொண்டு கடலில் விழ்வது நல்லது" என்று புத்தகத்தில் எழுதியிருந்தது.

"இது எதற்காக? 'வரவேற்பவன்' என்றால்? எங்குவரவேற்பது? 'என் பெயரால்' என்பதற்கு அர்த்தம் என்ன? கழுத்தில் கல்லைக் கட்டிக்கொள்வானேன்? கடல் எதற்கு?" என்று நிக்லியுடாவ் தன்னைத் தானே கேட்டுக் கொண்டான். அவை விளங்கவில்லை. அவன் மேலே மேலே படித்தான். "இதென்ன இப்படி ஒன்றுக்கொன்று தொடர்பு இல்லாமல் இருக்கிறதே! இருந்தாலும் இதில் ஏதோ நல்லது இருப்பது போல் தோன்றுகிறது" என்று நினைத்தான். இன்னும் படித்தான்.

"இழந்ததை மீட்பதற்காகத்தான் ஏசு பிறந்தார். நீ என்ன நினைக்கிறாய்? ஒருவனிடம் நூறு ஆடுகள் இருப்பதாக வைத்துக் கொள். அவற்றில் ஒரு ஆடு காணாமல் போய்விட்டால் அவன் தொண்ணூற்றொன்பது ஆடுகளையும் விட்டுவிட்டு அந்த ஒரு ஆட்டைத் தேடிக்கொண்டு போகிறான். அதைக் கண்டுபிடித்து விட்டால் அவன் அடையும் சந்தோஷத்திற்கு அளவு இல்லை. மற்ற ஆடுகள் போகாமல் இருந்ததைப் பற்றிக் கூட அவன் அவ்வளவு சந்தோஷப்படுவதில்லை. அதேபோல் இவர்களில் ஒருவரும் மடியவேண்டுமென்று கர்த்தர் விரும்புவதில்லை" என்று புத்தகம் கூறியது.

"ஆமாம், இவர்கள் மடிய வேண்டுமென்பது கடவுள் சித்தமில்லைதான். இங்கு இவர்கள் ஆயிரக்கணக்கில் மாள்கிறார்கள். இவர்களை மீட்பதற்கே வழியில்லை" என்று நினைத்துக் கொண்டே மேலும் படித்தான்.

"பிறகு பீடர் வந்து, 'என் சகோதரன் எத்தனை முறை செய்யும் குற்றங்களை நான் பொறுத்துக்கொள்வது? ஏழுமுறை பொறுத்துக் கொள்ளலாமா?' என்று கேட்டார். 'ஏழுமுறை மாத்திரமில்லை. ஏழைப்போல் எழுபதுமடங்கானாலும் பொறுத்துக் கொள்ள வேண்டும்" என்று ஏசுநாதர் பதில் அளித்தார்.

"ஒரு எஜமானனுக்கு ஒரு வேலைக்காரன் கடன் கொடுக்க வேண்டியிருந்தது. அவன் தன்னையும், தன் மனைவியையும்,

குழந்தைகளையும் தன்னுடைய எல்லா சொத்துக்களையும் விற்றுக் கடனைக் கொடுக்க வேண்டுமென்று எஜமானன் கட்டளையிட்டான். வேலைக்காரன் அவன் காலில் விழுந்து, 'எஜமானே கொஞ்சம் பொறுத்துக் கொள்ளுங்கள். உங்கள் கடனைத் திருப்பிக் கொடுத்துவிடுகிறேன்' என்றான். எஜமானன் மனம் இளகி அவன் கடனைத் தள்ளிவிட்டான். அந்த வேலைக்காரன் வெளியே சென்றான். அவனுடைய சகா ஒருவன் அவனுக்கு நூறு பென்ஸ் கடன் கொடுக்க வேண்டியிருந்தது. அதைக் கொடுக்கும்படி அவனை நிர்ப்பந்தம் செய்தான். கடனைக் கொடுக்கச் சொல்லி அவனைச் சிறையில் அடைத்தான். மற்ற வேலைக்காரர்கள் இதைத் தங்கள் எஜமானனிடம் சொன்னார்கள். எஜமான் அவனை அழைத்து 'அட துஷ்டா, நான் உன்மேல் கருணை வைத்து உன் கடனைத் தள்ளவில்லையா? அதே போல் உன் கடன்காரனிடமும் நீ கருணை காட்ட வேண்டாமா?' என்று கேட்டான்" என்று புத்தகத்தில் வரைந்திருந்தது.

"இதுதானா?" என்று நிக்லியுடாவ் உரக்கக் கேட்டான். 'ஆமாம், இதுதான்" என்று அவனுடைய அந்தராத்மா பதில் அளித்தது.

"கடவுளின் முன் தாங்கள் குற்றவாளிகள் என்பதை அனைவரும் ஒப்புக்கொள்ள வேண்டும். ஆகையால் மற்றவர்களைத் தண்டிக்கவோ சீர்திருத்தம் செய்யவோ முடியாது. தாங்களே கொடியவர்களாக இருந்து கொண்டு மற்றவர்களின் கொடுமையைச் சீர்திருத்த ஜனங்கள் முயல்வதுதான் தான் கண்ட பயங்கரங்களுக்குக் காரணம். அயோக்கியர்கள், மற்ற அயோக்கியர்களைத் திருத்தப் பார்க்கிறார்கள். இவற்றையெல்லாம் நிவர்த்திக்க ஒருவழிதான் உண்டு. பீடருக்கு ஏசு சொன்னது போல எத்தனை தடவை தவறு செய்தாலும் மன்னித்துவிடவேண்டும். குற்றம் செய்யாதவர்கள் ஒருவரும் இல்லை. ஆகையால் தண்டிக்கக் கூடியவர்கள் அல்லது சீர்திருத்தக் கூடியவர்களும் ஒருவரும் இல்லை" என்பது நிக்லியுடாவுக்கு நன்றாகத் தெரிந்தது.

"ஆனால் இது இவ்வளவு சுலபமில்லை" என்று அவனுக்குத் தோன்றியது. இதுதான் பிரத்தியக்ஷ நிவாரணமாக அவனுக்குத் தோன்றியது. 'அக்கிரமம் செய்கிறவர்களை என்ன செய்வது? தண்டிக்காமலே விட்டுவிடுவதா?' என்ற கேள்வி அவனைத் துன்புறுத்தவில்லை. தண்டனையினால் குற்றம் குறைந்தாலும் அல்லது குற்றவாளி சீர்திருந்தினாலும் பரவாயில்லை. ஆனால் நடப்பதென்னவோ இதற்கு நேர் விரோதமானதுதான். ஆகையால் உபயோகமற்ற, அயோக்கியத்தனமான, கொடும் செயல்களை நிறுத்துவதுதான் அனுபவ சாத்தியமான வழியென்று அவனுக்குப்பட்டது. பல நூற்றாண்டுகள் வரை குற்றவாளிகளின் தலையை வாங்கி வந்தார்கள். அதனால் குற்றம் நின்றுவிட்டதா? தண்டனை பெறும் குற்றவாளிகளாலும், ஜட்

பொழுது, சென்ற மாதங்களில்தான் அனுபவித்தவை கனவு போல இருந்தன. அந்தக் கனவிலிருந்து விழித்துக்கொண்டது போல் அவன் உணர்ந்தான்.

விருந்துக்கு ஜெனரலின் பெண், அவளுடைய கணவன். ஜெனரலின் காரியதரிசி ஆகியவர்களோடு ஒர் ஆங்கிலேயன். தங்கச் சுரங்கத்தில் சம்பந்தமுள்ள ஒரு வியாபாரி, சைபீரிய நகரம் ஒன்றின் கவர்னர் முதலியவர்களும் வந்திருந்தனர். இவர்களெல்லாம் நிக்லியுடாவுக்கு ரஸமாகத் தோன்றினர்கள்.

ஆங்கிலேயனுக்கு பிரெஞ்சு நன்ருகப் பேச வரவில்லை. ஆனல் தன் சொந்த பாஷையில் நல்ல பாண்டித்தியம் இருந்தது. உலக அனுபவம் நிரம்ப உள்ளவன். அமெரிக்கா, இந்தியா, ஜப்பான், சைபீரியா முதலிய நாடுகளைப்பற்றி ரஸமாக விஷயங்களை அவன் சொன்னன்.

இளம் வியாபாரி முற்போக்கான ஐரோப்பியக் கருத்துக்கள் உள்ளவன். அவன் ஒரு புத்தகசாலை வைத்திருந்தான். நிக்லியுடாவுக்கு இவனைப் பெரிதும் பிடித்திருந்தது.

இங்கு வந்திருந்த சைபீரிய நகரின் கவர்னரைப் பற்றித்தான் பீடர்ஸ்பர்க்கில் ஒவ்வொருவரும் பேசிக்கொண்டிருந்தனர். ஒரு முக்கியமான சர்க்கார் இலாகாவின் டைரக்டராக இருந்தவன் தடியாக இருந்தான். இனிமையாகப் புன்முருவல் புரிந்தான். விரல்களில் மோதிரம் அணிந்திருந்தான். ஜெனரலுக்கு இந்த கவர்னரை மிகவும் பிடித்திருந்தது. லஞ்சம் வாங்குபவர்களுக்கு மத்தியில் இருந்தும் அவன் லஞ்சம் வாங்குவதில்லை. அவன் நல்ல பாடகனுகையால் வீட்டுக்காரி அவனைப் பெரிதும் விரும்பினுள். நிக்லியுடாவ் நல்ல மனேநிலையில் இருந்தான். ஆகையால் அவனைப்பற்றி எல்லாம் அறிந்திருந்தும் அவனை வெறுக்கவில்லை.

ஜெனரலின் குமாஸ்தா எப்பொழுதும் உதவி செய்யத் தயாராக இருந்தான். அவனுடைய நல்ல சுபாவம் நிக்லியுடாவின் மனதைக் கவர்ந்தது. ஆனல் அந்த இளம் தம்பதிகள்—ஜெனரலின் பெண்ணும் அவள் கணவனும்தான் நிக்லியுடாவுக்கு அதிகம் பிடித்திருந்தது. அந்தப் பெண் கள்ளம் கபடமற்றவள். தன் இரு குழந்தைகளின் மீதும்தான் அவளுக்கு சதா கவனம். அவளுடைய கணவன் முற்போக்கான அபிப்பிராயம் உள்ளவன். அவனைக் காதலித்து விவாகம் செய்து கொண்டாள். அவனை மணப்பதற்காக அவள் தந்தையுடன் கடுமையாகப் போராடினுள். அவன் சர்க்கார் உத்தியோகத்தில் இருந்தான் நல்ல அறிவாளி. பூர்வ குடிகளைப் பற்றிய புள்ளி விவரங்களைச் சேகரித்துக் கொண்டிருந்தான். அவர்களிடம் அதிக அன்பு செலுத்தினன். அவர்கள் அழிந்து போகாமல் பாதுகாக்க முயன்ருன்.

ஜெனரல் ஆப்த நண்பனைப் போல நிக்லியுடாவை வரவேற்றான். வோட்கா குடிக்க விருந்தினர் அனைவரையும் வரவேற்றான். "நேற்று காலை இங்கிருந்துபோன பின் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?" என்று நிக்லியுடாவைக் கேட்டான். தான் தபாலாபீசுக்குப் போனதாகவும், காடுஷாவின் தண்டனையைக் குறைத்திருப்பதாகத் தகவல் கிடைத்திருக்கிறதென்றும் சொன்னான்.

விருந்தில் தன் காரியங்களைப் பற்றி நிக்லியுடாவ் பேசியது ஜெனராலுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. முகத்தைச் சுளித்துக் கொண்டு ஒன்றும் பேசாமல் இருந்துவிட்டான்.

"ஒரு கோப்பை வோட்கா குடிக்கிறீர்களா?" என்று ஆங்கிலேயனைப் பார்த்துக் கேட்டான் நிக்லியுடாவ். ஒரு கிண்ணம் குடித்துவிட்டு கோவிலைப் பார்க்க விரும்புவதாகச் சொன்னான். அங்கு உள்ள பெரிய சிறையையும் பார்க்க விரும்புவதாகச் சொன்னான்.

ஜெனரல் நிக்லியுடாவின் பக்கம் திரும்பி, "இப்பொழுது நல்லதாகப் போய்விட்டது. நீங்கள் இருவரும் சேர்ந்துபோகலாம்" என்று சொல்லிவிட்டு தன் காரியதரிசியை நோக்கி, இவர்களுக்கு ஒரு பாஸ் கொடு என்றான்.

"நீங்கள் எப்பொழுது சிறைக்குப் போய்ப் பார்க்க விரும்புகிறீர்கள்?" என்று நிக்லியுடாவ் கேட்டான்.

"சாயங்காலத்திலேயே பார்க்கவேண்டுமென்பது என் விருப்பம். அப்பொழுதுதான் உள்ளத்தை உள்ளபடியே பார்க்க முடியும்" என்றான் ஆங்கிலேயன்.

"ஓ! உள்ள அழகை அப்படியே பார்க்க விரும்புகிறார். பேஷாய்ச் செய்யட்டும். நான் மேல் அதிகாரிகளுக்கு எழுதிப் பார்த்தேன். அவர்கள் கேட்கவில்லை. வெளிநாட்டுப் பத்திரிகைகளில் பார்த்தாவது தெரிந்து கொள்ளட்டும்" என்று சிரித்துக் கொண்டே ஜெனரல் சொன்னான்.

வீட்டு எஜமானிக்கும் ஆங்கிலேயனுக்கும் மத்தியில் நிக்லியுடாவ் உட்கார்ந்தான். அவனுக்கு எதிரே ஜெனரலின் பெண் உட்கார்ந்தாள். அவள் பக்கத்தில் மாஜி டைரக்டர் உட்கார்ந்தான். சாப்பாட்டு வேளைச் சம்பாஷணை ஒரு விஷயத்திலிருந்து மற்றொரு விஷயத்திற்குத் தாவியது. இவை ஒன்றும் நிக்லியுடாவுக்குப் பிடிக்கவில்லை. ஆனால் விருந்து முடிந்தபின் நிக்லியுடாவ், ஆங்கிலேயன், வீட்டு எஜமானி ஆகியமூவரும் கிளாட்ஸ்டனைப் பற்றி ஒரு ரஸமான விவாதத்தைத் தொடங்கினார்கள். நல்ல சாப்பாடு சாப்பிட்டு, நல்ல சாராயம் குடித்த பின் ஈஸி சேரில் சாய்ந்துகொண்டு காப்பியை ருசிபார்ப்பது நிக்லியுடாவுக்கு ஆனந்தமாக இருந்தது. ஆங்கிலேயனின் வேண்டு

வளவு நேரம் இருந்தேன் என்பது எனக்கு நினைவில்லை'' என்ருள்.

வியாபாரியின் அறையிலிருந்து ''கைதி, வெளியேறிய பிறகு, அந்த ஹோட்டலில் வேறு எந்த இடத்திற்காவது சென்ருளா ?''

மாஸ்லோவா சிறிது யோசித்தாள். '' போனேன், வியாபாரியின் அறையை அடுத்தாற்போல் உள்ள காலி அறைக்குப் போனேன் '' என்ருள்.

'' ஏன் அங்கு போனுய் ?'' என்று சர்க்கார் வக்கீல் தன்னை மறந்து அவளை நோக்கிக் கேட்டார்.

''சிறிது ஓய்வு எடுத்துக்கொண்டு வண்டி வரும்வரை காத்திருப்பதற்காகப் போனேன்.''

''கைதியோடு ஸைமனும் அந்த அறையிலிருந்தாரு ? இல்லையா ?''

'' அவன் வந்தான் ''

'' அவன் ஏன் வந்தான் ?''

'' வியாபாரியின் பிராந்தி கொஞ்சம் பாக்கி இருந்தது. அதை அவன் தீர்த்துவிட்டான். ''

'' ஓ ! தீர்த்துவிட்டானு ? அவனேடு கைதி ஏதாவது பேசினுளா ? அப்படியானுல் எதைப்பற்றிப் பேசினுள் ?

மாஸ்லோவா ஆத்திரமடைந்து முகம் சிவக்கப் பெற்று, '' நான் ஒன்றைப் பற்றியும் பேசவில்லை. அவ்வளவுதான் எனக்குத் தெரியும். உங்களுக்கு இஷ்டமானதைச் செய்து கொள்ளுங்கள் நான் குற்றவாளியல்ல. அவ்வளவுதான்'' என்ருள்.

'' நான் மேலே கேட்க ஒன்றுமில்லை'' என்று சர்க்கார் வக்கீல் கூறிவிட்டு தன் தோளை விசித்திரமாகக் குலுக்கிக் கொண்டார். கைதி காலி அறையில் ஸைமனேடு தனியாக இருந்ததாக அவர் எழுதிக்கொண்டார். சிறிது நிசப்தம் நிலவியது.

''அதற்கு மேல் நீ ஒன்றும் சொல்ல விரும்பவில்லையா?'' என்ருர் பிரதம நீதிபதி.

''நான் எல்லாவற்றையும் சொல்லியாகிவிட்டது'' என்று கூறிவிட்டு மாஸ்லோவா பெருமூச்சு விட்டுக் கொண்டே உட்கார்ந்தாள்.

பிறகு பிரதம நீதிபதி எதையோ குறித்துக் கொண்டார். தமக்கு இடது பக்கத்தில் இருந்த நீதிபதி ஏதோ முணு முணுத் ததைக் கேட்டுவிட்டு, கோர்ட் நடவடிக்கைகளைப் பத்து நிமிஷம் ஒத்திவைத்தார். மற்றொரு நீதிபதிக்குச் சிறிது வயிற்று வலி யென்றும், ஆகையால் மாஸேஜ் எடுத்துக்கொள்ள அவர் விரும்புவதாகவும் பிரதம நீதிபதியிடம் அறிவித்தார். ஆகையால்தான் நடவடிக்கைகளை பிரதம பீதிபதி ஒத்திவைத் தார்.

நீதிபதிகள் எழுந்தவுடன், ஜூரிகள், வக்கீல்கள் முதலிய வர்களும் எழுந்து பல திசைகளை நோக்கி நடந்தனர்.

நிக்லியுடாவ் ஜூரிகளின் அறைக்குள் சென்று ஒரு ஜன்னல் அருகே உட்கார்ந்தான்.

## 12

"ஆமாம், இவள் காடுஷாதான்!"

நிக்லியுடாவின் சிந்தனைகள் ஓடின. அவளைத் தான் கெடுத்த சம்பவங்களை நினைத்துப் பார்த்துக் கொண்டிருந் தான்:

காடுஷாவை நிக்லியுடாவ் முதல் முறை சந்தித்தபொழுது அவன் மாணவன். கலாசாலையில் மூன்றாவது வருஷமாகப் படித்துக் கொண்டிருந்தான். கோடை விடுமுறை சமயத்தில் தன் அத்தைகளோடு அவன் தங்கியிருந்த பொழுது நிலவரி யைப் பற்றி ஒரு கட்டுரை எழுதிக்கொண்டிருந்தான். அதற்கு முன்னால் கோடை விடுமுறை காலங்களில் அவன், மாஸ்கோ வுக்கு அருகே உள்ள தன் தாயின் கிராமத்திற்குச் சென்று தாயோடும் தங்கைகளோடும் விடுமுறையைக் கழிப்பது வழக் கம். ஆனால் அந்தவருஷம் அவனுடைய தங்கைக்குக் கல்யாண மாகிவிட்டது. தாய் வெளி நாட்டுக்குப் போயிருந்தாள். அவன் கட்டுரையை எழுதி முடிக்கவேண்டியிருந்ததால் தன் அத்தை வீட்டுக்குச் செல்லத் தீர்மானித்தான். அந்தக் கிரா மம் அமைதியாக இருந்தது. அவனுடைய கவனத்தை இழுக் கக்கூடிய ஒன்றும் அங்கு இல்லை. அவனுடைய அத்தை களுக்குத் தங்களுடைய மருமானும் வாரிசுமான அவன்மீது அசாத்திய வாஞ்சை. பழைய முறையில் வாழ்க்கை நடத்தும் அவர்கள்மீது அவனுக்கும் அதிகப் பிரியம்.

வாழ்க்கையின் அழகுகள் அனைத்தையும், பிறர் உதவி இன்றி ஒருவன் தனக்குத்தானே முதல் முறை அறிந்து

போகும்வரை அவனுடைய அத்தைகள் தங்களுடைய சந்தேகத்தை அவனிடம் சொல்லவில்லை. காடுஷாமீது தான் கொண்டிருந்த காதலை அவனும் உணரவில்லை. அவள்மீது தான் கொண்டிருந்த அன்பு, வாழ்க்கை ஆனந்தத்தின் ஒரு சாதாரண கூறே என்றும், அவளும் அதைத் தன்னோடு பகிர்ந்து கொண்டாளென்றும் தான் அவன் நினைத்தான். அவன் ஊருக்குப் புறப்படும்பொழுது காடுஷாவும், அவளுடைய க்ருவிழிகளில் நீர் தளும்ப அத்தைகளின் பக்கத்தில் நின்றிருந்தாள். அப்பொழுது, மிகவும் அழகான, மதிப்பு உயர்ந்த. மீண்டும் கிடைக்கமுடியாத ஏதோ ஒன்றை விட்டுவிட்டுப் போகிறோம் என்ற உணர்ச்சிதான் அவனுக்கு ஏற்பட்டது. அவனுக்கு வருத்தம் மேலிட்டது.

"போய்வருகிறேன் காடுஷா. நீ செய்த உதவிகளுக்கெல்லாம் என் நன்றி" என்று சொல்லிக்கொண்டே அவன் வண்டியில் ஏறினான்.

"போய் வாருங்கள் தெமித்துரி ஐவனிச்," என்று தன் கண்ணீரை அடக்கிக்கொண்டு சொல்லிவிட்டு அவள் ஹாலுக்குள் சென்று தனிமையில் தன் துக்கம் தீர அழுது தீர்த்தாள்.

## 13

பிறகு இரண்டு வருஷம் வரை காடுஷாவை நிக்லியுடாவ் பார்க்கவேயில்லை. பிறகு அவளைச் சந்தித்தபொழுது பெரிய அதிகாரியின் பதவிக்கு அவன் உயர்த்தப் பட்டிருந்தான். தன்னுடைய படையில் போய்ச்சேரப் போகும்பொழுது, தன் அத்தைகளின் வீட்டில் சில தினங்கள் தங்கிவிட்டுப் போகவேண்டும் என்பதற்காக அங்கு வந்தான். மூன்று வருஷங்களுக்கு முன்னால் கோடை விடுமுறைக்காக அவன் வந்திருந்தபோது இருந்ததற்கும் இப்பொழுது இருந்ததற்கும் அதிக வித்தியாசம் இருந்தது. அப்பொழுது சுயநலமற்ற பரம யோக்கியமான இளைஞனாக அவன் இருந்தான். எந்த உயர்ந்த லக்ஷியத்திற்காகவும் தன்னையே தியாகம் செய்ய அவன் தயாராக இருந்தான். இப்பொழுது அவன் குணம்கெட்டு, பழுத்த சுயநலமி யாகிவிட்டிருந்தான். தன்னுடைய சுகத்தைத்தான் அவன் இப்பொழுது முக்கியமாகக் கருதினான். அப்பொழுது கடவுள் சிருஷ்டித்த உலகம் ஒரு புதிராக இருந்தது. அதை விடுவிக்க அவன் உற்சாகத்துடனும் சந்தோஷத்துடனும் முயன்றான். இப்பொழுது வாழ்க்கையில் எல்லாம் சர்வ சாதாரணமாகவும் பட்ட வர்த்தனமாகவும் காணப்பட்டன. அப்பொழுது இயற்கையுடனும், அவனுக்கு முன்வசித்த தத்துவ

ஞானிகள்; கவிகள் முதலியவர்களுடனும் ஐக்கியமாகி விடுவது அவசியமென்று தோன்றியது. நண்பர்களுடன் கூடிக்குலாவுவதுதான் முக்கியமென இப்பொழுது தோன்றியது. பெண்கள் ஒரு புதிராகவும், சௌந்தர்ய தேவதைகளாகவும் அப்பொழுது தோன்றினார்கள். இன்பம் அனுபவிப்பதற்கு ஒரு சிறந்த கருவியாகவே அவர்கள் இப்பொழுது தோன்றினர். அப்பொழுது பணத்திற்கு அதிக அவசியமில்லை. அவனுடைய தாயார் அவனுக்கு அனுப்பிய தொகையில் மூன்றில் ஒரு பாகத்திற்குக் கூட அவனுக்குச் செலவு இல்லை. அவனுடைய தந்தையிடமிருந்து பிதிரார்ஜிதமாக வந்த சொத்தை நிராகரித்து அதைக் குடியானவர்களுக்குக் கொடுப்பது சாத்தியமாக இருந்தது. ஆனல் இப்பொழுது மாதாமாதம் அவனுக்குக் கொடுக்கப்பட்ட ஆயிரத்து ஐநூறு ரூபிள்கள் அவனுக்குப் போதவில்லை. இது பற்றித் தன் தாயாருடன் அவன் சண்டை கூடப் போட்டுவிட்டான்.

அப்பொழுது அவன் 'நான்' என்று கூறிக்கொண்டது அவனுடைய ஆத்மாவைக் குறிப்பிட்டது. இப்பொழுது 'நான்' என்று அவன் சொல்லிக்கொண்டது அவனுள் அடங்கியிருந்த மிருக சுபாவத்தைக் குறிப்பிட்டது.

இப்பொழுது அவன் தன்னை நம்பாமல் மற்றவர்களை நம்பத் தொடங்கியதால் தான் அவனிடம் இந்த விபரீத மாறுதல்கள் ஏற்பட்டன. தன்னைத்தானே நம்பி வாழ்வது அவனுக்குக் கஷ்டமாக இருந்ததால் தான் அவன் இப்படிச் செய்தான். ஒருவன் தன்னைத்தானே நம்பியிருப்பதென்றால் எப்பொழுதும சுலபமான வழியையே தேடும் தன்னுடைய மிருக சுபாவத்தின் அஹங்காரத்தைத் திருப்திப்படுத்தாமல் அதற்கு விரோதமாக முடிவுசெய்ய வேண்டியிருக்கிறது. பிறரை நம்புவதென்றால் தான் தீர்மானிக்க வேண்டுவது ஒன்றுமில்லை. எல்லா விஷயங்களைப் பற்றியும் ஏற்கனவே பிறர் முடிவு செய்து வைத்திருக்கின்றனர். எல்லா முடிவும் தன்னுடைய மிருக சுபாவத்திற்குச் சாதகமாக,ஆத்மாவுக்கு விரோதமாகவே இருக்கின்றன. இதோடு நிற்கவில்லை. ஒருவன் தன்னைத்தான் நம்பியிருப்பதென்றால் தன்னைச் சுற்றியுள்ளவர்களின் கண்டனத்திற்கு ஆளாக வேண்டியிருக்கிறது. காற்றையே நம்பியிருந்தால் அவர்களுடைய ஆதரவு கிடைக்கிறது. கடவுள். சத்தியம், செல்வம், வறுமை, முதலிய வாழ்க்கையின் முக்கிய பிரச்னைகளைப் பற்றி அவன் சிந்தித்த பொழுதும், பேசியபொழுதும் அவையெல்லாம் அசந்தர்ப்பமானவை என்றும் கேவலமானவை என்றும் கூட அவனைச் சுற்றி இருந்தவர்கள் நினைத்தார்கள். அவனை ஒரு வேதாந்தி என்று அன்பாகப் பரிகாஸம் செய்வது வழக்கம். அவன் நாவல்களைப் படித்து,

துப் போயிருந்தன. பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்னால் இளங் காடுஷாவோடு அவன் மறைந்து விளையாடிய லைலாக் புதர் பூத்துக் குலுங்கியது. முன்பு அவனுடைய அத்தை நட்ட லார்ச் செடி பெரிய மரமாக வளர்ந்திருந்தது. அருகில் நதி வழக்கம்போல் ஒலித்துக்கொண்டு ஓடியது.

நிக்லியுடாவ் அங்கு சென்றவுடன், சிரித்த முகத்தோடு கூடிய குமாஸ்தா அவனை வரவேற்றான். வண்டிக்காரன் பணம் வாங்கிக்கொண்டு, மணியை ஒரு முறை அடித்துவிட்டு வண்டியை ஓட்டினான். மீண்டும் நிசப்தம் நிலவியது. குடியானச் சிறுமி ஒருத்தி ஜன்னலைக் கடந்து ஓடினாள் ஆணி அடித்த பூட்ஸ் சப்திக்க ஒருவன் அந்தப் பக்கமாக நடந்து போனான்.

நிக்லியுடாவ் ஜன்னல் அருகே உட்கார்ந்தான். அவன் முகத்தின் வியர்வையில் பட்டு நனைந்திருந்த அவன் தலைமயிரோடும், மேஜைமீது இருந்த காகிதங்களுடனும் விளையாடிக் கொண்டே இளங்காற்று வீசியது. ஆற்றில் பெண்கள் துணி துவைக்கும் சப்தம் காற்றில் மிதந்து வந்தது. பல வருஷங்களுக்கு முன்னால், கள்ளங்கபடமற்ற அவனுடைய இளம் பருவத்தில் கேட்ட இதே ஒலிகளும், வீசிய இதே இளங்காற்றும் அவனுக்கு ஞாபகம் வந்தன. பழைய இளமையே திரும்பி வந்தது போல் தோன்றியது. ஆனால் இது சாத்தியமில்லை என்ற நினைவு கனவுபோல் வந்தவுடன் அவனுக்கு ஏற்பட்ட வருத்தம் பயங்கரமாக இருந்தது,

"நீங்கள் எப்பொழுது சாப்பிடுவது வழக்கம்?" என்று புன்சிரிப்போடு கேட்டான் குமாஸ்தா.

"நீ இஷ்டப்படுகிறபோது! எனக்குப் பசியில்லை. முதலில் ஒரு முறை கிராமத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு வருகிறேன்" என்று நிக்லியுடாவ் பதிலளித்தான்.

"வீட்டுக்குள் வந்து பாருங்களேன். எல்லாம் ஒழுங்காகத் தான் இருக்கின்றன."

"இப்பொழுது வேண்டாம். பிறகு வருகிறேன். இங்கு மாட்ரேனா ஹரினா என்ற ஸ்திரீ (காடுஷாவின் அத்தை) யாராவது இருக்கிறாளா? அதை முதலில் சொல்."

"இருக்கிறாள். ஊர்க்கோடியில் ரகசியமாக ஒரு சாராயக் கடை வைத்து நடத்திக் கொண்டிருக்கிறாள். அதற்காக அவளைத் திட்டிப்பார்த்தேன். பலனில்லை. அதிகாரிகளிடம் புகார் செய்யவும் முடியவில்லை. பேரனும் பேத்தியுமாக மிகவும் பரிதாபமான நிலைமையில் இருக்கிறாள்" என்று பழைய புன்சிரிப்போடு சொன்னான் இளைஞன்.

"நான் அவளைப் பார்க்க வேண்டும். அவள் எங்கே இருக்கிறாள்?"

" ஊர்க்கோடியில் இருக்கிருள். இட்து பக்கத்தில் கடைசியிலிருந்து மூன்ருவது வீடு. நான் அழைத்துக் கொண்டு போகிறேன்."

"வேண்டாம். நான் கண்டு பிடித்துக்கொள்கிறேன். குடியானவர்களின் கூட்டம் ஒன்றைக் கூட்டு. நிலம் சம்பந்தமாக அவர்களுடன் நான் பேச விரும்புகிறேன் என்று சொல்" என்று பதிலளித்தான் நிக்லியுடாவ். குஸ்மின்ஸ்கியில் ஒப்பந்தம் செய்துகொண்டது போல இங்கும் செய்துகொள்ள நினைத்தான். முடிந்தால் அன்று மாலையே ஒரு ஏற்பாடு செய்துவிட விரும்பினன்.

## 4

நிக்லியுடாவ் தெருவில் இறங்கியவுடன், முன்பு சென்ற சிறுமி ஒரு கோழியைத் தன் வயிற்ருேடு அணைத்துக்கொண்டு வேகமாக வந்துகொண்டிருந்தாள். அவள் எஜமான் அருகில் வந்தவுடன் நின்று வணங்கினுள். நிக்லியுடாவ் மேலே சென்ற பிறகுதான் அவள் வீட்டைநோக்கிச் செல்லத் தொடங்கினுள். பிறகு அவன் கிணற்றருகே சென்றபொழுது தண்ணீர் கொண்டுபோய்க் கொண்டிருந்த ஒரு கிழவி தண்ணீர்ப் பாத்திரத்தை நிதானமாகக் கீழே வைத்துவிட்டு வணங்கினுள்.

, கிணற்றைத் தாண்டி,குடியானவர்கள் வசிக்கும் பிரதேசத்திற்குள் பிரவேசித்தான் நிக்லியுடாவ்; பத்துமணிதான் ஆகியிருந்தபோதிலும் வெயில் கடுமையாக இருந்தது, நடுநடுவே மேகங்கள் சூரியனை மறைத்தன. ஆங்காங்கு குவிக்கப்பட்டிருந்த எருவின் நாற்றம் லேசாக வீசிக்கொண்டிருந்தது. இருந்தாலும் அது வெறுக்கத்தக்க துர்நாற்றமாக இல்லை. உயர்ந்த முறையில் உடை அணிந்து தங்கள் தெருவழியே வந்த கனவானை குடியானவர்கள் உற்றுக் கவனித்தனர். வீட்டுக்குத் திரும்பிக்கொண்டிருந்த குடியானவர்கள் தங்கள் குல்லாய்களை அகற்றி அவனுக்கு மரியாதை செலுத்தினர். பெண்கள் ,தங்கள் தங்கள் குடிசைகளுக்கு வெளியே வந்து நின்று ஏதோ பேசிக்கொண்டிருந்தனர்.

நிக்லியுடாவ் நான்காவது வாசற்படியைத் தாண்டும் பொழுது குறுக்கே ஒரு வண்டி வந்ததால் அவன் நடை தடைபட்டது. வண்டியில் சவாரி போகவேண்டும் என்ற ஆசையுடன் ஆறுவயதுச் சிறுவன் ஒருவன் வண்டியைத் தொடர்ந்து வந்தான். குதிரையை ஓட்டிக்கொண்டு வந்த ஒரு கிழவன் நிக்லியுடாவைக் கண்டு வணங்கிவிட்டு, "எங்கள் எஜமானி அம்மாளின் மருமான் அல்லவா நீங்கள் ?" என்று கேட்டான்.

துப் போயிருந்தன. பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்னால் இளங் காடுஷாவோடு அவன் மறைந்து விளையாடிய லைலாக் புதர் பூத்துக் குலுங்கியது. முன்பு அவனுடைய அத்தை நட்ட லார்ச் செடி பெரிய மரமாக வளர்ந்திருந்தது. அருகில் நதி வழக்கம்போல் ஒலித்துக்கொண்டு ஓடியது.

நிக்லியுடாவ் அங்கு சென்றவுடன், சிரித்த முகத்தோடு கூடிய குமாஸ்தா அவனை வரவேற்றான். வண்டிக்காரன் பணம் வாங்கிக்கொண்டு, மணியை ஒரு முறை அடித்துவிட்டு வண்டியை ஓட்டினான். மீண்டும் நிசப்தம் நிலவியது. குடியானச் சிறுமி ஒருத்தி ஜன்னலைக் கடந்து ஓடினாள் ஆணி அடித்த பூட்ஸ் சப்திக்க ஒருவன் அந்தப் பக்கமாக நடந்து போனான்.

நிக்லியுடாவ் ஜன்னல் அருகே உட்கார்ந்தான். அவன் முகத்தின் வியர்வையில் பட்டு நனைந்திருந்த அவன் தலைமயிரோடும், மேஜைமீது இருந்த காகிதங்களுடனும் விளையாடிக்கொண்டே இளங்காற்று வீசியது. ஆற்றில் பெண்கள் துணி துவைக்கும் சப்தம் காற்றில் மிதந்து வந்தது. பல வருஷங்களுக்கு முன்னால், கள்ளங்கபடமற்ற அவனுடைய இளம் பருவத்தில் கேட்ட இதே ஒலிகளும், வீசிய இதே இளங்காற்றும் அவனுக்கு ஞாபகம் வந்தன. பழைய இளமையே திரும்பி வந்தது போல் தோன்றியது. ஆனால் இது சாத்தியமில்லை என்ற நினைவு கனவுபோல் வந்தவுடன் அவனுக்கு ஏற்பட்ட வருத்தம் பயங்கரமாக இருந்தது,

"நீங்கள் எப்பொழுது சாப்பிடுவது வழக்கம்?" என்று புன்சிரிப்போடு கேட்டான் குமாஸ்தா.

"நீ இஷ்டப்படுகிறபோது! எனக்குப் பசியில்லை. முதலில் ஒரு முறை கிராமத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு வருகிறேன்" என்று நிக்லியுடாவ் பதிலளித்தான்.

"வீட்டுக்குள் வந்து பாருங்களேன். எல்லாம் ஒழுங்காகத் தான் இருக்கின்றன."

"இப்பொழுது வேண்டாம். பிறகு வருகிறேன். இங்கு மாட்ரேனா ஹரினா என்ற ஸ்திரீ (காடுஷாவின் அத்தை) யாராவது இருக்கிறாளா? அதை முதலில் சொல்."

"இருக்கிறாள். ஊர்க்கோடியில் ரகசியமாக ஒரு சாராயக் கடை வைத்து நடத்திக் கொண்டிருக்கிறாள். அதற்காக அவளைத் திட்டிப்பார்த்தேன். பலனில்லை. அதிகாரிகளிடம் புகார் செய்யவும் முடியவில்லை. போனும் பேத்தியுமாக மிகவும் பரிதாபமான நிலைமையில் இருக்கிறாள்" என்று பழைய புன்சிரிபபோடு சொன்னான் இளைஞன்.

"நான் அவளைப் பார்க்க வேண்டும். அவள் எங்கே இருக்கிறாள்?"

" ஊர்க்கோடியில் இருக்கிருள். இட்து பக்கத்தில் கடைசியிலிருந்து மூன்ருவது வீடு. நான் அழைத்துக் கொண்டு போகிறேன்."

"வேண்டாம். நான் கண்டு பிடித்துக்கொள்கிறேன். குடியானவர்களின் கூட்டம் ஒன்றைக் கூட்டு. நிலம் சம்பந்த மாக அவர்களுடன் நான் பேச விரும்புகிறேன் என்று சொல்" என்று பதிலளித்தான் நிக்லியுடாவ். குஸ்மின்ஸ்கியில் ஒப்பந்தம் செய்துகொண்டது போல இங்கும் செய்துகொள்ள நினைத்தான். முடிந்தால் அன்று மாலையே ஒரு ஏற்பாடு செய்துவிட விரும்பினான்.

# 4

நிக்லியுடாவ் தெருவில் இறங்கியவுடன், முன்பு சென்ற சிறுமி ஒரு கோழியைத் தன் வயிற்ருேடு அணைத்துக்கொண்டு வேகமாக வந்துகொண்டிருந்தாள். அவள் எஜமான் அருகில் வந்தவுடன் நின்று வணங்கினாள். நிக்லியுடாவ் மேலே சென்ற பிறகுதான் அவள் வீட்டைநோக்கிச் செல்லத் தொடங்கி னாள். பிறகு அவன் கிணற்றருகே சென்றபொழுது தண்ணீர் கொண்டுபோய்க் கொண்டிருந்த ஒரு கிழவி தண்ணீர்ப் பாத் திரத்தை நிதானமாகக் கீழே வைத்துவிட்டு வணங்கினாள்.

கிணற்றைத் தாண்டி, குடியானவர்கள் வசிக்கும் பிரதேசத் திற்குள் பிரவேசித்தான் நிக்லியுடாவ்; பத்துமணிதான் ஆகி யிருந்தபோதிலும் வெயில் கடுமையாக இருந்தது, நடுநடுவே மேகங்கள் சூரியனை மறைத்தன. ஆங்காங்கு குவிக்கப்பட் டிருந்த எருவின் நாற்றம் லேசாக வீசிக்கொண்டிருந்தது. இருந்தாலும் அது வெறுக்கத்தக்க துர்நாற்றமாக இல்லை. உயர்ந்த முறையில் உடை அணிந்து தங்கள் தெருவழியே வந்த கனவானை குடியானவர்கள் உற்றுக் கவனித்தனர். வீட்டுக்குத் திரும்பிக்கொண்டிருந்த குடியானவர்கள் தங்கள் குல்லாய்களை அகற்றி அவனுக்கு மரியாதை செலுத்தினர். பெண்கள் தங்கள் தங்கள் குடிசைகளுக்கு வெளியே வந்து நின்று ஏதோ பேசிக்கொண்டிருந்தனர்.

நிக்லியுடாவ் நான்காவது வாசற்படியைத் தாண்டும் பொழுது குறுக்கே ஒரு வண்டி வந்ததால் அவன் நடை தடை பட்டது. வண்டியில் சவாரி போகவேண்டும் என்ற ஆசை யுடன் ஆறுவயதுச் சிறுவன் ஒருவன் வண்டியைத் தொடர்ந்து வந்தான். குதிரையை ஓட்டிக்கொண்டு வந்த ஒரு கிழவன் நிக்லியுடாவைக் கண்டு வணங்கிவிட்டு, "எங்கள் எஜமானி அம்மாளின் மருமான் அல்லவா நீங்கள்?" என்று கேட்டான்.

சந்திப்பைப் பற்றி எதிர்பாராத ஒருவித வேதனை தோன்றியது. ஒரு வாக்கியத்தைப் பாதி மொழி பெயர்த்துச் சொல்லிக் கொண்டிருந்த பொழுது, காடுஷாவின் காலடிச் சப்தம் கேட்டது. கதவைத் திறந்துகொண்டு ஒரு ஜெயிலர் உள்ளே பிரவேசித்தான். அவனைத் தொடர்ந்து காடுஷாவும் வந்தாள். வழக்கம்போல் சிறைச் சட்டையணிந்து தலையில் ஒரு வெள்ளைக் கை குட்டையைக் கட்டிக்கொண்டு பூமியை நோக்கியவாறு வந்தாள்.

அவள் உள்ளே பிரவேசித்த பொழுது, "நான் வாழ விரும்புகிறேன். குழந்தை குட்டிகளுடன் கூடிய குடும்ப வாழ்க்கை வாழ வேண்டும்" என்ற எண்ணம் நிக்லியுடாவின் மனத்தில் உதித்தது.

அவள் வந்தவுடன் அவன் எழுந்து இரண்டடி முன்னால் சென்று அவளை வரவேற்றான். அவள் முகத்தில் வெறுப்பு நிறைந்திருந்ததாக அவனுக்குத் தோன்றியது. முதலில் அவனைத் திட்டியபொழுது |அவன் தோற்றம் எப்படியிருந்ததோ அப்படியே இப்பொழுதும் இருந்தது. அவள் முகம் வெளுத்துப் போய்விட்டது. சட்டையின் ஒரு மூலையைப் பிடித்து முறுக்கிக் கொண்டிருந்தாள். ஒருமுறை நிமிர்ந்து பார்த்துவிட்டு மறுபடியும் தன் பார்வையைத் தாழ்த்திக் கொண்டாள்.

"உன் தண்டனை குறைந்திருக்கிறது. அது தெரியுமா உனக்கு?" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"தெரியும். ஜெயிலர் சொன்னான்."

"உத்தரவு வந்தவுடன் உன்னை விடுதலை செய்து விடுவார்கள். எங்கு குடியேறுவது என்பதைப் பற்றிப் பிறகு யோசிக்கலாம்."

அவன் பேசிக்கொண்டிருக்கும் பொழுது காடுஷா பரபரப்புடன் இடைமறித்து, "நான் யோசிப்பதற்கு என்ன இருக்கிறது? விளாடிமிர் ஸைமன்ஸன் எங்கு இருக்கிறாரோ அங்குதான் நானும் இருக்கப் போகிறேன்" என்றாள்.

"நிஜமாகவா?"

"நீங்களே பாருங்கள் நிக்லியுடாவ். அவரோடு நான் வசிக்க வேண்டுமென்கிறார்—இல்லை. அவர் அருகில் நான் இருக்க வேண்டுமென்கிறார். நான் வேறு எதை எதிர்பார்க்க முடியும்? இதைக் காட்டிலும் பெரிய இன்பம் எனக்கு எங்கே கிடைக்கப் போகிறது?"

நிக்லியுடாவ் யோசித்தான். "ஒன்று இவள் ஸைமன்ஸனிடம் மோகித்துவிட்டிருக்க வேண்டும். அல்லது, என்னையே காதலித்து, நான் கஷ்டப்படக் கூடாது என்பதற்காக என்

தியாகத்தை ஏற்க மறுக்க வேண்டும்" என்று நினைத்தான். அவன் முகத்திற்கு ரத்தம் பாய்வது அவனுக்கே தெரிந்தது.

"நீ அவனைக் காதலிக்கிறாயா? என்று கேட்டான்.

"காதலாவது மண்ணுவது? நான் அதையெல்லாம் விட்டு விட்டேன். ஸைமன்ஸன் ஓர் அசாதாரணமான மனுஷ்யன்."

"ஆமாம். மிகவும் நல்லவன்தான். நான் நினைக்கிறேன்."

ஆனால் அவன் அதிகமாக ஏதாவது சொல்லிவிடப் போகிறானே என்பதற்காக மறுபடியும் குறுக்கிட்டு, "இல்லை நிக்லியுடாவ். உங்கள் விருப்பப்படி நான் நடக்காததற்காக மன்னிக்கவும். நீங்களும் வாழவேண்டும்" என்று சொல்லிவிட்டு தன் ஆழ்ந்த கண்களால் அவனை நோக்கினாள்.

சில மாதங்களுக்கு முன்னால் அவன் தனக்குத்தானே என்ன சொல்லிக்கொண்டானோ அதையே இப்பொழுது அவள் சொன்னாள். ஆனால், இப்பொழுது அவன் அப்படி நினைக்கவில்லை. எல்லாவற்றையும் இழக்க அவனுக்கு வருத்தமாக இருந்தது.

"இதை நான் எதிர்பார்க்கவில்லை" என்றான்.

"நீங்கள் ஏன் இங்கு அவஸ்தைப்பட வேண்டும்? ஏற்கெனவே நீங்கள் அதிகக் கஷ்டப்பட்டு விட்டீர்கள்" என்று சிரித்துக் கொண்டே சொன்னாள்.

"எனக்குக் கஷ்டம் ஒன்றும் இல்லை. முடிந்தால் கடைசி வரை உனக்குச் சேவை செய்ய விரும்புகிறேன்."

"எங்களுக்கு ஒன்றும் வேண்டாம். எனக்காக நீங்கள் எவ்வளவோ உபகாரம் செய்திருக்கிறீர்கள். நீங்கள் இல்லையென்றால்..." என்றாள். அவள் குரல் நடுங்கியது. அதற்குமேல் அவளால் பேச முடியவில்லை.

"எப்படியிருந்தாலும் நீ எனக்கு நன்றி செலுத்துவதற்கு ஒன்றும் இல்லை" என்றான் நிக்லியுடாவ்.

"இதை யெல்லாம் நினைத்துப் பார்த்துப் பயன் என்ன? எல்லாவற்றையும் கடவுள் பார்த்துக் கொள்வார்" என்றாள் காடுஷா. அவள் கண்களில் நீர் நிறைந்து பள பளத்தது.

"நீ எவ்வளவு நல்லபெண்!" என்றான்.

"நானா? நல்லவளா?" என்று கண்ணீரோடு கேட்டாள். அவள் முகத்தில் பரிதாபச் சிரிப்பு படர்ந்தது.

"புறப்படுவோமா?" என்று ஆங்கிலேயன் கேட்டான்.

"இதோ வந்து விட்டேன்" என்று சொல்லிவிட்டு கிரில்ட்ஸோவைப் பற்றி காடுஷாவிடம் கேட்டான்.

சந்திப்பைப் பற்றி எதிர்பாராத ஒருவித வேதனை தோன்றியது. ஒரு வாக்கியத்தைப் பாதி மொழி பெயர்த்துச் சொல்லிக் கொண்டிருந்த பொழுது, காடுஷாவின் காலடிச் சப்தம் கேட்டது. கதவைத் திறந்துகொண்டு ஒரு ஜெயிலர் உள்ளே பிரவேசித்தான். அவனைத் தொடர்ந்து காடுஷாவும் வந்தாள். வழக்கம்போல் சிறைச் சட்டையணிந்து தலையில் ஒரு வெள்ளைக் கை குட்டையைக் கட்டிக்கொண்டு பூமியை நோக்கியவாறு வந்தாள்.

அவள் உள்ளே பிரவேசித்த பொழுது, "நான் வாழ விரும்புகிறேன். குழந்தை குட்டிகளுடன் கூடிய குடும்ப வாழ்க்கை வாழ வேண்டும்" என்ற எண்ணம் நிக்லியுடாவின் மனத்தில் உதித்தது.

அவள் வந்தவுடன் அவன் எழுந்து இரண்டடி முன்னால் சென்று அவளை வரவேற்றான். அவள் முகத்தில் வெறுப்பு நிறைந்திருந்ததாக அவனுக்குத் தோன்றியது. முதலில் அவளைத் திட்டியபொழுது அவள் தோற்றம் எப்படியிருந்ததோ அப்படியே இப்பொழுதும் இருந்தது. அவள் முகம் வெளுத்துப் போய்விட்டது. சட்டையின் ஒரு மூலையைப் பிடித்து முறுக்கிக் கொண்டிருந்தாள். ஒருமுறை நிமிர்ந்து பார்த்துவிட்டு மறுபடியும் தன் பார்வையைத் தாழ்த்திக் கொண்டாள்.

"உன் தண்டனை குறைந்திருக்கிறது. அது தெரியுமா உனக்கு?" என்று கேட்டான் நிக்லியுடாவ்.

"தெரியும். ஜெயிலர் சொன்னான்."

"உத்தரவு வந்தவுடன் உன்னை விடுதலை செய்து விடுவார்கள். எங்கு குடியேறுவது என்பதைப் பற்றிப் பிறகு யோசிக்கலாம்."

அவன் பேசிக்கொண்டிருக்கும் பொழுது காடுஷா பரபரப்புடன் இடைமறித்து, "நான் யோசிப்பதற்கு என்ன இருக்கிறது? விளாடிமிர் ஸைமன்ஸன் எங்கு இருக்கிறாரோ அங்குதான் நானும் இருக்கப் போகிறேன்" என்றாள்.

"நிஜமாகவா?"

"நீங்களே பாருங்கள் நிக்லியுடாவ். அவரோடு நான் வசிக்க வேண்டுமென்கிறார்—இல்லை. அவர் அருகில் நான் இருக்க வேண்டுமென்கிறார். நான் வேறு எதை எதிர்பார்க்க முடியும்? இதைக் காட்டிலும் பெரிய இன்பம் எனக்கு எங்கே கிடைக்கப் போகிறது?"

நிக்லியுடாவ் யோசித்தான். "ஒன்று இவள் ஸைமன்ஸனிடம் மோகித்துவிட்டிருக்க வேண்டும். அல்லது, என்னையே காதலித்து, நான் கஷ்டப்படக் கூடாது என்பதற்காக என்

தியாகத்தை ஏற்க மறுக்க வேண்டும்" என்று நினைத்தான். அவன் முகத்திற்கு ரத்தம் பாய்வது அவனுக்கே தெரிந்தது.

"நீ அவனைக் காதலிக்கிருயா? என்று கேட்டான்.

"காதலாவது மண்ணுவது? நான் அதையெல்லாம் விட்டு விட்டேன். ஸைமன்ஸன் ஓர் அசாதாரணமான மனுஷ்யன்."

"ஆமாம். மிகவும் நல்லவன்தான். நான் நினைக்கிறேன்."

ஆனால் அவன் அதிகமாக ஏதாவது சொல்லிவிடப் போகிருனே என்பதற்காக மறுபடியும் குறுக்கிட்டு, "இல்லை நிக்லியுடாவ். உங்கள் விருப்பப்படி நான் நடக்காததற்காக மன்னிக்கவும். நீங்களும் வாழவேண்டும்" என்று சொல்லிவிட்டு தன் ஆழ்ந்த கண்களால் அவனை நோக்கினாள்.

சில மாதங்களுக்கு முன்னால் அவன் தனக்குத்தானே என்ன சொல்லிக்கொண்டானே அதையே இப்பொழுது அவள் சொன்னாள். ஆனால், இப்பொழுது அவன் அப்படி நினைக்க வில்லை. எல்லாவற்றையும் இழக்க அவனுக்கு வருத்தமாக இருந்தது.

"இதை நான் எதிர்பார்க்கவில்லை" என்ருன்.

"நீங்கள் ஏன் இங்கு அவஸ்தைப்பட வேண்டும்? ஏற்கெனவே நீங்கள் அதிகக் கஷ்டப்பட்டு விட்டீர்கள்" என்று சிரித்துக் கொண்டே சொன்னாள்.

"எனக்குக் கஷ்டம் ஒன்றும் இல்லை. முடிந்தால் கடைசி வரை உனக்குச் சேவை செய்ய விரும்புகிறேன்."

"எங்களுக்கு ஒன்றும் வேண்டாம். எனக்காக நீங்கள் எவ்வளவோ உபகாரம் செய்திருக்கிறீர்கள். நீங்கள் இல்லையென்ருல்..." என்ருள். அவள் குரல் நடுங்கியது. அதற்குமேல் அவளால் பேச முடியவில்லை.

"எப்படியிருந்தாலும் நீ எனக்கு நன்றி செலுத்துவதற்கு ஒன்றும் இல்லை" என்ருன் நிக்லியுடாவ்.

"இதை யெல்லாம் நினைத்துப் பார்த்துப் பயன் என்ன? எல்லாவற்றையும் கடவுள் பார்த்துக் கொள்வார்" என்ருள் காடுஷா. அவள் கண்களில் நீர் நிறைந்து பளபளத்தது.

"நீ எவ்வளவு நல்லபெண்!" என்ருன்.

"நானு? நல்லவளா?" என்று கண்ணீரோடு கேட்டாள். அவள் முகத்தில் பரிதாபச் சிரிப்பு படர்ந்தது.

"புறப்படுவோமா?" என்று ஆங்கிலேயன் கேட்டான்.

"இதோ வந்து விட்டேன்" என்று சொல்லிவிட்டு கிரில்ட் ஸோவைப் பற்றி காடுஷாவிடம் கேட்டான்.